# KAUTALYA'S ARTHASASTRA

A TAMIL TRANSLATION WITH NOTES

PART I




ANNAMALAI UNIVERSITY

1955

# KAUTALYA'S ARTHASASTRA

## A TAMIL TRANSLATION WITH NOTES

**PART I**

BY

Mahamahopadhyaya,
Pandithamani, M. KATHIRESA CHETTIAR

AND

Siromani, Vidwan, P. S. RAMANUJACHARI
*Department of Tamil Research, Annamalai University*

WITH A FOREWORD

BY

Diwan Bahadur T. M. NARAYANASWAMI PILLAI, M.A., B.L., M.L.C.,
*Vice-Chancellor, Annamalai University.*




ANNAMALAI UNIVERSITY

1955

# கௌடலீயம் பொருணூல்

தமிழ் மொழிபெயர்ப்பு

( விளக்கவுரையுடன் கூடியது )

முதற் பகுதி

மொழிபெயர்ப்பாசிரியர்கள் :

மகாமகோபாத்தியாய, பண்டிதமணி, முதுபெரும்புலவர்
மு. கதிரேசச்செட்டியாரவர்கள்
1—3 அதிகரணங்கள்.

சிரோமணி, வித்துவான், பி. ஸ்ரீ. இராமாநுஜாசாரி
4—15 அதிகரணங்கள்.




அண்ணமலைப் பல்கலைக்கழகத்தாரால்
வெளியிடப்பட்டது.

1955

# உள்ளுறை

பக்கம்

1. அணிந்துரை ... ... i—iii

திவான்பகதூர். டி. எம். நாராயணசாமி
பிள்ளையவர்கள் எம்.ஏ., பி.எல்., எம்.எல்.ஸி.,
துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

2. முகவுரை ... ... i—iv

பேராசிரியர், வித்துவான், கோ. சுப்பிரமணிய
பிள்ளையவர்கள் M.A., B.L.

3. முன்னுரை ... ... i—xxv

(T. கணபதி சாஸ்திரியார் எழுதிய முதனூல்
முன்னுரையின் தமிழ் மொழிபெயர்ப்பு)

4. பதிப்புரை ... ... xxvi—xxxvi

சிரோமணி, வித்துவான்,
பி. ஸ்ரீ. இராமானுஜாசாரியாரவர்கள்.

5. பொருளடக்கம் ... ... xxxvii—xLiv

6. நூல் ... ... 1—1230

7. அரும்பதம் குறியிட்டுச் சொற்களின் அகராதி. 1231—1236

8. பிழையும், திருத்தமும் ... ... 1237—1238

# அணிந்துரை

**T. M. நாராயணசாமி பிள்ளையவர்கள், M.A., B.L., M.L.C.**
துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

பண்டைய நாகரிகத்தின் நம்து பாரதநாட்டின் பழைமைவாய்ந்த நூல்களுள் கௌடலியர் இயற்றிய அர்த்தசாஸ்திரம் என்னும் வடமொழிப் பனுவல் தனிச் சிறப்புடையதொரு நூலாகும். அர்த்த சாஸ்திரத்தின் ஆசிரியரைப்பற்றியும் அவர் அந்நூலை இயற்றிய காலத்தைப்பற்றியும் ஆராய்ச்சியாளருள்ளும் சரித்திர ஆசிரியருள்ளும் அபிப்பிராய பேதங்கள் உள்ளன. நாம் இப்போது அவற்றை ஆராயத் தேவை இல்லை. எனினும் இந்நூல் மிகப் பழைமையான தொரு நூல் என்பதிலோ அல்லது இதன் ஆசிரியர் கசடறக் கற்றுக் கலைகளில் வல்லதொரு கவின்பெறு மேதை என்பதிலோ யாருக்கும் ஐயம் நிகழாது என்பதுமட்டும் உறுதி. அர்த்தசாஸ்திரத்தில் இடை யிடையே வெளியிடப்பட்டுள்ள அபிப்பிராயங்கள் பல அனைவரது அங்கீகாரத்துக்கும் பாத்திரமில்லாமல் இருக்கலாம். ஆனால் இக் காரணம்பற்றி மட்டும் இந்நூலின் சிறப்பும் உயர்வும் சிறிதும் குறைந்துவிடா என்பதில் ஐயமில்லை. இந் நூலாசிரியரின் காலத்தை யும் அவரது காலத்தின் கலை முதலியவற்றின் வளர்ச்சி நிலையையும் அடிப்படையாகக்கொண்டு இந் நூலை ஆராய்ந்து மதிப்பிடுவதே அறிவுடையோரின் கடமையாகும்.

சுமார் 2400 வருஷங்களுக்கு முன்பே இந்த அரசியல் ஞானத்தை யும், சமூகப் பொருளாதார அறிவையும் அற்புதமானதொரு வழியில் இவர் எடுத்துரைத்திருக்கிறார். Politics, Political Philosophy, Economics, State Craft, Diplomacy என்று ஆங்கிலத்தில் சொல்லக் கூடிய அரசியல் நூல், அரசியல் தத்துவம், பொருளாதார நூல், இராஜதந்திரம், பிறநாட்டுடன் உறவாடுதல் என்னுமித் துறைகளில் அரிய பெரிய விஷயங்களைப் புதிதாக ஆழ்ந்த கருத்துடன் இந்நூல் எடுத்துக் காட்டியிருக்கிறது. நந்தர்களை முறியடித்தும் சீர்குலைந் திருந்த மகதநாட்டை ஒருமைப்படுத்திச் சந்திரகுப்தனைச் சிங்காத னத்திலேற்றிவைத்தும் மௌரிய சாம்ராஜ்யத்திற்கே காரணகர்த்தா வாக இருந்தவர் இக் கௌடலியராவர். அந்த மௌரிய சாம்ராஜ்ய

மானது இந்திய சரித்திரத்திலேயே ஒரு தனிச்சிறப்புப் பெற்றிருந்தது. அந்த சாம்ராஜ்ய காலத்தில்தான் இந்தியக் கலைகளும், இந்திய நாகரிகங்களும் உன்னதமான நிலையை அடைந்திருந்தன. அந்த உன்னதமான நிலைக்கெல்லாம் வித்திட்டவர் இக் கௌடலியரே ஆவார். சரித்திரப் போக்கில் பார்த்தால் இவருடைய நூல் இந்திய வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் சிறந்ததொரு நூலாகவும் விளங்குகிறது.

இத்தகையதொரு இணையற்ற நூலைத்தமிழ் நாட்டவரும் படித்துணர இதை மொழிபெயர்த்தல் மிகவும் வேண்டப்படுவதொன்றே. காலஞ்சென்ற மகாமகோபாத்யாய பண்டிதமணி கதிரேசச் செட்டியார் அவர்கள் இப் பணியை ஆற்றத் தாமே முன்வந்தார்கள். பண்டிதமணியவர்கள் தமிழ், வடமொழி எனும் இரு மொழிகளிலும் பாண்டித்தியம் பெற்ற விற்பன்னராக விளங்கியவர். கல்வி, கேள்வி, அறிவு முதலிய செல்வத்தைப்பெற்று மாசறு காட்சியின் மாண்புடையவராகத் திகழ்ந்த அப் பெரியார் ஆராய்ச்சித்திறனும் அளவின்றிப் பெற்றிருந்தார். வெகு நாட்களுக்கு முன்பே வடமொழி நூல்களாகிய **சுக்கிர நீதியையும் மிருச்சகடிகத்தையும்** தமிழாக்கித் தந்து தம் புகழ் நிறுவிய அப்பெரியார் அர்த்தசாஸ்திரத்தையும் மொழிபெயர்க்க முன்வந்ததுகண்டு நாம் அதை வரவேற்றோம். ஆனால் அவர்களது முழுத்தொண்டினையும் தமிழ்த்தாய் அடைந்து மகிழ இயலாமல்போய்விட்டது. கௌடலீயத்தின் முதல் மூன்று அதிகரணங்களே அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டன. அதற்கு மேல் அவரது உடல் நலக் குறைவால் அப்பணி தடைப்பட்டது.

பின்னர், அவர்களுடனேயே அவருக்கு உதவியாயிருந்த இச் சர்வகலாசாலை ஆசிரியர் ஸம்ஸ்கிருத சிரோமணி, தமிழ் வித்துவான், P. S. இராமானுஜாசாரி அவர்கள், பண்டிதமணியவர்கள் போக்கிலேயே நான்காம் அதிகரணம்முதல் எஞ்சிய அதிகரணங்களையும் மொழிபெயர்த்துப் பூர்த்தி செய்து இந்த முழு நூலையும் வெளிவரும்படி உலகத்திற்கு உதவி செய்திருக்கிறார். இராமானுஜாசாரியாரவர்கள் வடமொழியையும், தமிழையும் நன்கு பயின்றவர்; நல்ல குணம் வாய்ந்தவர்; இடையறாது உழைப்பவர்; தக்கவரால் வழிகாட்டப் பெற்றவர். இவரது மொழிபெயர்ப்பு, பண்டிதமணியவர்களது மொழிபெயர்ப்பின் பண்புடையது என்பதை இந் நூலைப் படித்தவர் உணர்வது ஒருதலை. இவருக்கு உதவியாயிருந்தவர் குணத்திலும், படிப்பிலும், உழைப்பிலும் குன்றென உயர்ந்த வித்துவான் க. வெள்ளைவாரணனார் ஆவர்.

காலஞ்சென்ற பண்டிதமணி, இராமானுஜாசாரியார், வெள்ளை வாரணன் என்ற இம்மூவர்க்கும் பொதுமக்களின் நன்றி உரியதாகுக. ஆட்சிநூல் துறையில் மூன்று நூல்களை உலகில் முக்கியமாகச் சொல்லலாம். அவையாவன :— ஸம்ஸ்கிருதத்தில் அர்த்த சாஸ்திரம், தமிழில் திருக்குறள் (இறைமாட்சி முதலிய துறைகள்), இத்தாலிய மொழியில் Machiavalli-யின் Prince என்பவையாம். சில பாகங்களில் Prince-க்கும் இந்தக் கௌடலியரின் அர்த்த சாஸ்திரத்துக்கும் ஒற்றுமை இருக்கிறது. குறளுக்கும் அர்த்த சாஸ்திரத்துக்கும் இடையே ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் இருக்கின்றன. இந்த ஒற்றுமைகளை ஆங்காங்கு பண்டிதமணி அவர்களும், ஆச்சாரியார் அவர்களும் எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள். இப்பாகம் நமக்கு நன்றாகப் பயன் தரும் என்பதில் சந்தேகமில்லை. அரசன் எப்படிக் குடிகளைக் காக்க வேண்டும் என்று சொல்லியிருப்பது வியக்கத்தக்கதொன்றாம். தற்காலத்தில் ஒரு Welfare State-க்குள்ள கடமைகளையெல்லாம் அக்காலத்திலேயே அரசனுக்குரியனவாக, விளக்கமாக விரித்துரைத்திருக்கின்றார் கௌடலியர். முதல் நூல் ஆசிரியருக்கும் மொழிபெயர்ப்பு ஆசிரியர்களுக்கும் நமது நன்றி உரியதாகுக. தமிழ் நாட்டு அறிஞர் இந்நூலைப் படித்துப் பயன் துய்ப்பாராக!

அண்ணாமலைநகர்<br>*7—10—1955*

**T. M. நாராயணசாமி பிள்ளை.**

# முகவுரை

(பேராசிரியர், வித்துவான் கோ. சுப்பிரமணிய பிள்ளை, M A., B.L., *தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.*)

"பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை" என்பது திருவள்ளுவர் காலத்திற்கு முன்னரே தமிழ்நாட்டில் வழங்கிவரும் பழமொழியாகும். இப்பழமொழி, நாட்டினை ஆட்சிபுரியும் வேந்தனுக்கும் அவன் ஆணை வழி நடக்கும் குடிமக்களுக்கும் பொதுவாக உரியது. இப்பழமொழிப் பொருளை நன்குணர்ந்த தமிழ்மக்கள், தாங்களும் தங்களைக் காக்கும் கடமைபூண்ட அரசாங்கமும் பொருளை மேன்மேலும் பெற்றுச் சிறத்தற்குரிய வழிதுறைகளை இடைவிடாது ஆராய்ந்து அரசியல் ஆணைக்கு அடங்கியிருந்து மக்கள் அறநெறி தவறாது பொருளீட்டும் நெறி முறையினை விளக்கி நூல் இயற்றியுள்ளார்கள். இங்ஙனம் இயற்றப்பெற்ற நூலைப் பொருள்புரிநூல் என்ற பெயராற் பெருங் கதையாசிரியர் பாராட்டிப் போற்றியுள்ளார். இவ்வாறு பொரு ளீட்டும் வழிதுறைகளைக் குறித்துத் தமிழ்முன்னோர் ஆராய்ந்து இயற்றிய பொருள்நூல் இடைக்காலத்தில் அழிந்துபோனாலுங்கூட, மக்கள் அறத்தினாற் பொருளீட்டி அப்பொருளால் இன்பம் நுகர்தற் குரிய வாழ்க்கைமுறையினை அறிவுறுத்தும் முப்பாலாகிய திருக் குறள் நம் தமிழ்முன்னோரது பொருள்புரிநூற் புலமையை உலகத் தார்க்கு விளங்க அறிவுறுத்துவதாக அமைந்துள்ளமை மகிழ்ச்சிக் குரியதாம்.

அரசாங்கத்துக்குப் பொருள்வரும் வழிதுறைகளை மேலும் மேலும் உண்டாக்கலும், அவ்வழிகளால் வந்த பொருள்களை யெல் லாம் ஒருசேரத் தொகுத்தலும், தொகுத்த பொருள்களைப் பிறர் கொள்ளாமற் போற்றிக் காத்தலும், அங்ஙனம் காத்த பொருள் களைத் தன் நாட்டுமக்களுக்குப் பயன்படும் வண்ணம் அறம் பொருள் இன்பங்களின் பொருட்டுச் செலவு செய்தலும் வல்லவனே அரச னாவான் எனத் திருவள்ளுவர் விளக்கியுள்ளார். ஆகவே, அறத்தின் வழியாற் பொருளையீட்டி, அப்பொருளைக்கொண்டு மக்கள் எல்லோ ரும் இன்புற்று வாழ்தற்குரிய நெறிமுறைகளை அரசியல் ஆணை யோடு தொடர்புபடுத்தி அறிவுறுத்தும் நூலாகப் பண்டைநாளிற் பொருள்புரிநூல் இயற்றப் பெற்றிருந்தமை நன்கு புலனாகின்றது.

தமிழ்நாட்டுப் பொருள்நூல் அமைப்பினை உணர்ந்து கொள்ளு தற்கு இப்பொழுது கிடைத்துள்ள சங்க இலக்கியங்களும் திருக்குற ளும் ஓரளவே துணைசெய்வன. இந்நிலையில் வடநாட்டு மக்களிடையே வழங்கிய பொருள்நூற் பொருளை யுணர்ந்து கொண்டால் அக்

காலத்தில் வடநாட்டில் அமைந்த ஆட்சிமுறையினையும் சமூக அமைப்பினையும் ஒருவாறு உய்த்துணர்ந்துகொள்ளுதற்கு வசதியாகும் என்ற நோக்கத்தினாலும் வடநாட்டில் வழங்கிய அரசியல் அமைப்புக்கும், நம் தமிழ்வேந்தர் அரசியலமைப்புக்கும் இடையே அமைந்த ஒற்றுமைவேற்றுமைகளை உணர்தற்கு வடமொழியில் அமைந்த பொருள்நூற் பயிற்சி ஓரளவு துணை செய்வதாகும் என்ற கருத்தினாலும் வடமொழியிற் சிறப்புடையதாகப் போற்றப் பெற்று வரும் கௌடலீய அர்த்தசாஸ்திரத்தை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் தமிழ்மொழிவாயிலாக மொழிபெயர்த்து வெளியிடத் துணிந்தார்கள். கடைச் சங்க நாளில் வாழ்ந்த தமிழ் மக்கள் வடமொழியாளர் இயற்றிய அர்த்த சாஸ்திரங்களையும் நன்கு பயின்று அந்நூல்களிலே காணப்படும் ஒற்றுமைவேற்றுமைகளைத் தம் நாட்டு மக்களுக்கு அறிவுறுத்தி வந்தார்கள். தேவர், கள்ளுண்ணாதவர். அவரது வாழ்க்கைமுறையையொட்டிப் பொருள் நூல் செய்தவர் தேவகுருவாகிய வியாழன். அசுரர், கள்ளுண்போர். அவரது வாழ்க்கை முறையையொட்டிப் பொருள் நூலியற்றியவர் அசுரகுருவாகிய வெள்ளி. இச்செய்தியினை,

> "நறவினை வரைந்தோர்க்கும் வரையார்க்கும் அவையெடுத்து
> அறவினை யின்புறூஉம் அந்தணர் இருவரும்
> திறம்வேறு செய்தியின் நூல்நெறி"

எனவரும் மருதக்கலி 35-ஆம் பாடற் பகுதியால் நன்குணரலாம்.

இவ்விருவர் செய்த பொருள் நூல்களையும் இவர்க்குப் பின் வந்த ஆசிரியர்கள்கொண்ட கொள்கைகளையும் பகுத்து ஆராய்ந்து பொருள் நூல் இயற்றியவர் சந்திரகுப்தன் ஆட்சிக் காலத்து அவனுக்கு அமைச்சராய் அரசியல் நுட்பத்திற் சிறந்து விளங்கிய சாணக்கியராகிய கௌடலீயர் ஆவர். அவரால் இயற்றப்பெற்ற பொருள் நூல் கௌடலீயம் என்னும் பெயருடையதாகும். இந்நூல் வடமொழியில் எழுதப்பட்டிருப்பினும் தமிழ் நாட்டுடன் மிகவும் நெருங்கிய தொடர்புடையதென ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இதன் பிரதி தமிழ் நாட்டில் தான் கிடைத்தது. இதனைத் தமிழில் மொழி பெயர்த்தற்கு எண்ணிய நம் பல்கலைக் கழகத்தார் இதனை மொழி பெயர்க்குந் திறமுடையார் செந்தமிழிலும் வடமொழியிலும் சிறந்த புலமைப் பெருஞ் செல்வராய்த் திகழும் மகாமகோபாத்தியாய பண்டிதமணி முதுபெரும் புலவர் திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்களே யெனத் தெளிந்து, இம் மொழிபெயர்ப்புப் பணியை அவர்கள்பால்

ஒப்படைத்தார்கள். நம் பண்டிதமணியவர்கள் சுக்கிரநீதி வடமொழி நூலையும் மிருச்ச கடிகம் எனும் பெயருடைய வடமொழி நாடகத்தையும் செவ்விய தமிழ் நடையில் சுவைபெற மொழிபெயர்த்து வெளியிட்ட மொழிபெயர்ப்பினைக் கற்று மகிழ்ந்த தமிழ் மக்கள் அவர்களால் மொழி பெயர்க்கப் பெற்ற கௌடலீயமாகிய பொருள் நூலையும் விரும்பிப் பயில்வார்கள் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

இந்நூலின் மொழிபெயர்ப்புப் பணியினை நம் பண்டிதமணியவர்கள், வித்துவான் திரு P.V. சோமசுந்தரம், சிரோமணி திரு. S. இராசகோபால சாஸ்திரி என்னுமிருவரையும் உதவியாளராகக் கொண்டு 1942-ஆம் ஆண்டில் தொடங்கி நிகழ்த்தி வந்தார்கள். 1944-ஜூலை மாதத்தில் திரு. S. இராசகோபால சாஸ்திரி விலகிக்கொண்டமையால், வடமொழி உதவியாளராக வித்துவான், சிரோமணி திரு. P. S. இராமாநுஜாச்சாரி நியமிக்கப்பெற்றார். தமிழ் உதவியாளராக இருந்த வித்துவான் திரு. P. V. சோமசுந்தரம் அவர்களும் 1945-ல் தம் சொந்த அலுவல் கருதி விலகிக்கொண்டார். இந்நிலையில், வடமொழி உதவியாளரான திரு. P. S. இராமாநுஜாச்சாரியை மட்டும் துணையாகக்கொண்டு கௌடலீயத்தின் முதற் பகுதியையும் இரண்டாம் பகுதியிற் சில அத்தியாயங்களையும் பண்டிதமணியவர்கள் தெளிவும் இனிமையும் அமைந்த தமிழ்நடையில் மொழிபெயர்த்து உதவினார்கள். இந்நூலில் மூன்று அதிகரணங்களை மட்டும் மொழிபெயர்த்து முடித்த நிலையில், பண்டித மணியவர்கள் உடல்நலங் குன்றியமை காரணமாக, 1946 ஆகஸ்டில் பல்கலைக் கழகத்திலிருந்து ஓய்வுபெற வேண்டியது அவசியமாயிற்று. அவ்வாறு ஓய்வு பெறும்போது, தம்முடன் கூடவிருந்து மொழிபெயர்ப்புப் பணியில் உதவி வந்த P. S. இராமாநுஜாச்சாரியிடம் எஞ்சிய அதிகரணங்களை மொழிபெயர்க்கும் பணியை ஒப்படைக்கலாம் என்று பல்கலைக் கழகத்தாருக்குத் தெரிவித்திருந்தபடியால் பல்கலைக் கழகத்தாரும் அதற்கு உடன்பட்டனர். எனவே, நான்காம் அதிகரணம் முதல் இந்நூல் முடியவுள்ள எஞ்சிய 12 அதிகரணங்களை மொழிபெயர்த்தவர் நம் பண்டிதமணியவர்களுடன் உடனிருந்து இம்மொழிபெயர்ப்புத் துறையில் பழக்கம் பெற்றிருந்த திரு. P. S. இராமாநுஜாச்சாரியவர்களாவர். திரு. பண்டிதமணியவர்களின் மொழிபெயர்ப்பினை அடியொற்றியே இந்நூலின் மற்ற அதிகரணங்களும் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. இந்நூலில் அதிகரணம் பிரகரணம் அத்தியாயம் என்ற பகுதிகளின் பெயர்களாக அமைந்துள்ள குறியீட்டுச் சொற்கள் யாவும் திரு. பண்டிதமணியவர்களால்

அமைத்துக்கொள்ளப்பட்டனவாதலின் இந்நூலின் பிற்பகுதியும் அவர்கள் மொழிபெயர்ப்பென்றே சொல்லத்தக்க வகையில் அமைந்துள்ளமை மகிழ்ச்சிக்குரிய தொன்றும்.

P. S. இராமாநுஜாச்சாரியால் மொழிபெயர்க்கப்பட்ட 12 அதிகரணங்களையும், அவற்றிற்குரிய விளக்கவுரைப் பகுதிகளையும் தொடக்கம் முதல் முடிவுவரை படித்துப் பார்த்துத் தமிழ் நடையைச் சீர்மை செய்து, வேண்டிய திருத்தங்களை ஏற்ற முறையில் அமைத்துத்தந்து, விளக்கவுரைப் பகுதியில் திருக்குறள் முதலிய பழந்தமிழ் நூல்களிலுள்ள ஒப்புமைப் பகுதியைச் சேர்த்துக் கொடுத்து அவ்வத்தியாயங்களின் மொழி பெயர்ப்புப் பகுதியையும் விளக்கவுரைப் பகுதியையும் திகழுற அமைத்துதவியவர் வித்துவான் திரு. க. வெள்ளைவாரணனுவார்.

கோ. சுப்பிரமணிய பிள்ளை.

# “கௌடலீயம்” என்னும் பொருள்நூலின் முதற் பகுதியின் *முன்னுரை

கௌடலீயம் என்ற பொருணூலை நன்கு ஆராய்ந்து புதுக்கி மிகவும் தகுதியான முறையில் சிறந்த வனப்புறச் செய்து யாவரும் எளிதில் உணரும் வண்ணம் நெடுங்காலம் தன்னிடத்து வைத்து ஒழுங்கு செய்தமைத்தமையால் இவ் “வநந்தசயன” வடமொழிநூல் வெளியீட்டுநிலையம் திருவருட்பாங்கால் வளர்ச்சியடைந்து வருகின்றது.

## பொருணூலாராய்ச்சியின் இன்றியமையாமை

மைசூர் நகரத்திலுள்ள நூல் நிலையத்தில் சாமா சாஸ்திரி யென்பார் சோதகராகவிருக்கும்பொழுது அங்குள்ள கையெழுத்துப்படியொன்றை ஆதாரமாகக் கொண்டு 1909-ஆம் ஆண்டில் கௌடலீயம் என்ற நூல் வெளியிடப்பட்டது. இவ்வரிய நூல் இதற்கு முன் வெளிவராததொன்றெனக் கருதி அவாவுடன் ஆராய்ந்தறியுங்கால் பாடங்களிற் பல வழுக்கள் காணப்பட்டன. மேலும் முதல் வாக்கியங்களிற் சேரத்தக்க சொற்களை பின் வாக்கியங்களின் சேர்த்தலும், பின் சேர்த்தற்குரியவற்றை முன் சேர்த்தலும் ஆகிய இவை போன்ற பல குற்றங்கள் காணப்பட்டன. இந்நூல் பதவாக்கியங்கள் குற்றமற்ற நிலையில் சீர்பெற அமைந்திருப்பினும் பொருட்சிறப்பாற் பெருமுயற்சி படைத்த புலவனாலும் அறிதற்கரியது; எனிற் குறையிருப்பிற் கூறுவதென்னை? இப்பொருணூலின் பல படிகளைச் சேகரித்து மூலத்தை ஒழுங்குபெற ஆராய்ந்து வெளியிட்டாலன்றி இந் நீதிநூலின் உண்மையுருவம் நன்கு புலப்படாதென்று எனக்கு ஓரெண்ணம் தோன்றியது.

## புதிய படிகளைத் தொகுத்தல்

பின்னர் இந்நூலின் படிகளைப் பெரிதும் முயன்று தேடிய எனக்கு இந்நாட்டைச் சார்ந்த திருப்பாப்பூரிலுள்ள துறவிகளின் மடத்தில் பழமையிற் சிறந்தனவும் உயர்ந்தனவுமாகிய பலவகை நூல்களைக் கொண்டு திகழும் நூல் நிலையத்தினின்றும் மலையாள எழுத்தில் தெளிவுற வரையப்பட்டு முழுதும் அடங்கிய ஓலைப்படிகள் கிடைத்தன. அவற்றுள் ஒன்று முந்நூறு நானூறு ஆண்டுகட்கு முற்பட்டதாகவும் முறிந்த பழைய ஏடுகள் உள்ளதாகவும் காணப்

---

* இது, முதனூலில் T. கணபதி சாஸ்திரியாரால் எழுதப்பட்ட முன்னுரையின் தமிழ் மொழி பெயர்ப்பாகும்.

பட்டது. அது "அ" என்ற பெயருள்ளது. மற்றது சற்றேறக் குறைய நூறாண்டுகளை யடுத்து எழுதப்பட்டதாகவும் உறுதியான ஏடுகளுடன் கூடியதாகவும் காணப்பட்டது. அது "ஆ" என்னும் பெயருடையது. சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தில் இரண்டு படிகள் கிடைத்தன; அவற்றுள் ஒன்று இந் நாட்டைச் சார்ந்த இடப்பள்ளி யரண்மனையிலுள்ள மலையாள எழுத்தில் வரையப்பட்ட ஏட்டுப்படியிலிருந்து பெரும்பாலும் பிழை யற முற்றும் வரையப்பட்டது. அது "இ" என்னும் பெயருடையது. மற்றது தெலுங்கெழுத்துப் புத்தகத்தினின்றும் அவ்வெழுத் தாலேயே படி யெடுக்கப்பட்டது; பிழை நிரம்பியது. 'கண்டக சோதனுதிகரணம் ஏழாம் பிரகரணம்முதலுள்ளது. அது "ஈ" என்னும் பெயருடையது. இந்த "இ, ஈ" என்னும் புத்தகங்களி னின்றும் எல்லாப் பாட பேதங்களும் தனித்தனியே எடுத்துக்காட்டப் பட்டிருக்கின்றன. கொச்சி சமஸ்தானத்தின் நூல் நிலையத்தில் ஐந்தாவதாக ஒரு படி கிடைத்தது. முதற் புத்தகத்திற்கு முற்பட்ட தாகவும் எழுத்து உருவம் அளவு முதலியன ஒத்ததாகவும் ஒருவர் கையால் எழுதப்பட்டதாகவும் பெரும்பாலும் முறிந்த ஏடுகளே நிறைந்ததாகவும் எடுத்துப் பிரித்துப் பார்ப்பதற்கும் தகுதியற்ற தாகவும் இருந்தமையின் அதனை விடுக்க நேர்ந்தது.

## உரையுடன் வெளியிட வேண்டியதன் இன்றியமையாமை

இத்தகைய பல படிகளைக் கொண்டு ஆராயப் புகுந்தபோது மைசூர் நூல் நிலையத்தின் பரிசோதகரொருவர் இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார் என்னும் செய்தியை யான் கேள்வியுற்றேன். அம் மொழிபெயர்ப்பு என் முயற்சிக்குச் சிறிது உதவியாக அமையுமென்று கருதி அதனை வரவழைத்தேன். அதன் முகவுரையில் "இது மூலத்திற்குச் சரியான மொழி பெயர்ப்பன்று" என அம்மொழி பெயர்ப்பாளரே கூறியுள்ளார். புத்தகத்தின் மூல பாடங்களிலும் வரையப்பட்ட பல ஐயக் குறிகள் காணப் பட்டன. ஐயக் குறிப்பில்லாத பலவிடங்களில் பொருள் நன்கு விளக்கப்படாமையும் வேறுபாடுங் காணப்பட்டன. உதாரண மாக அவற்றுள் ஒன்றை ஈண்டெடுத்துக் கூறுவேன், முதலதி கரணம் ஏழாம் அத்தியாயத்தில் "மர்யாதாம் ஸ்தாபயேத்—ஆசார் யாந் அமாத்தியாந்வா" என்ற வாக்கியம் காணப்படுகிறது. இதனுல் அரசியல் அறம் பல கூறி அவற்றுள் மிகச் சிறந்த நல்லறமொன்று இங்குக் கூறப்படுகின்றது. அஃதாவது:—பிறர் வயப்படாத பெரியா

ரொருவர் தீய வழியிற் செல்லும் அரசனைத் தடுத்து நல்வழிப்படுத்து வாராயின் அவரை அரசன் தனக்குரிய நியாமகராகக் கொள்ளல் வேண்டும் என்பது. இவ்விடத்தில் அரசன் உலகை அடக்கியாளும் பெருந்திறலமைந்தவனாயினும் தன்னை அடக்கி நல்வழிப்படுத்தும் பெரியாரை நியாமகராகக் கொள்ளல்வேண்டும் என்னும் இவ்வாழ்ந்த உட்கருத்து நூலாசிரியரால் வெளிப்பட்டுள்ளது. ஆங்கில மொழி பெயர்ப்பாளர் இவ்வரிய பொருளுங் கூறவில்லை. "ஆசாரியர்களை யும் அமைச்சர்களையும் பூசித்தல் வேண்டும்" என மாறுபடவும் கூறி யுள்ளார். இப்பொருள் எச்சொல்லால் எவ்வுரையினாற் கொள்ளப் பட்டதென யான் அறிகிலேன். "மர்யாதா" என்ற சொற்குக் கன்னடம் தமிழ் தெலுங்கு முதலிய மொழிகளின் வழக்கிற்கிணங்க பகுமானம் எனப் பொருள் கொண்டு வடமொழியினும் இவ்வாறு உரை செய்யின் மொழி பெயர்ப்பினையே தக்க சான்றாகக் கொள்ளும் பல மாணவரும் "மர்யாதா" என்ற சொற்பொருளை உணராதவ ராகவும், நூலாசிரியரின் உட்கருத்தின் பெருமை விளங்காதவராக வும் ஆவர். இத்தகைய வழுக்கள் இதிற் பல காணலாம். கௌட லியமெனும் இப்பொருணூலின் மூல ஆராய்ச்சிமட்டும் போதாதென் றும் முற்கூறியபடி மொழிபெயர்ப்பாலமைந்த பொருளுணர்ச்சியி னின்றும் உண்மைப் பொருள் புலனாகவேண்டும் என்றும் கருதியே சிறந்த உரையுடன் வெளியிடல் வேண்டுமென்றெண்ணினேன்.

## பழய உரைப்பகுதிகள் கிடைத்தமை

இப்பொருணூலின் உரைநூல் எங்ஙனம் கிடைக்குமெனத் தேடுங்கால் ஸ்ரீ பட்டஸ்வாமியால் இயற்றப்பட்டதும் ஆழ்ந்த கருத் தமைந்ததும் இரண்டாம் அதிகரணம் எட்டாம் அத்தியாய முதல் அவ்வதிகரண முடிவு வரையுள்ளதுமாகிய "பிரதி பத பஞ்சிகை" என்னும் உரைநூலொன்று சென்னை நூல்நிலையத்தினின்றும் கிடைத்தது. இரண்டாவது மாதவயஜ்வா என்பவரால் இயற்றப் பெற்றதும் நய சந்திரிகை எனப் பெயரியதும் ஏழாம் அதிகரணம் ஏழாம் அத்தியாய முதல் பன்னிரண்டாம் அதிகரணம் நான்காம் அத்தியாயத்திற் சில பாகம் வரையுள்ளதுமான ஒருரை நூல் கிடைத் தது. இவ்விரண்டு உரைகளும் கேரளதேயத்திற் கிடைத்த பனை யோலைப் படியினின்றும் எழுதப்பட்டன. வேறு படிகளைக்கொண்டும் திருத்தவியலாத வழுக்கள் மிகுதியாகக் காணப்பட்டன. இவ் வுரைப் புத்தகங்களில் மூலபாடங்களும் மிகுதியான பாகம் சிதைந் தனவாகக் காணப்பட்டன. இந்நிலையில் வேறு புத்தகமும் கிடைப் பது அரிதெனக்கருதித் தேடாதொழிந்து தலையிடைகடையிலா இவ்

வுரை நூலை வெளியிடுதல் பயன்பெறுதெனக் கருதி அவற்றை விடுத்தேன். பெருமுயற்சி செய்து அவற்றை ஆராய்ந்ததில் அவ்வம் மூல பாடப்பொருள்களை அறிதற்கு அவை உதவியாக இருந்தன. மேலும் இந்நகரத்துள்ள அரசாங்க நூல் நிலையத்தில் இருநூறு மூந்நூறாண்டுகட்கு முற்பட்டதும் பட்டஸ்வாமியாரின் உரையினைப் பின்பற்றியதுமாகிய மலையாள மொழியில் இயற்றப்பட்ட ஒருரை நூற்படி ஏழாமதிகரணம் வரை கிடைத்தது. இப் படிக்கு நேரான படி சென்னை நூனிலையத்தும் உள்ளது இது பல பாகங்களில் பிழையமைந்தும் சில வாக்கியங்கள் இல்லாமலும் ஐந்தாறத்தியாயங்கள் இல்லாமலும் இருப்பினும் மூலப்பொருளை அறியவும் மூலத்தை உறுதி செய்யவும் உதவியது. இவ்வளவிலேனும் பொருள்களை அறிதற்குக் கருவி கிடைத்தமை இறைவன் திருவருள் ஆகும். இப் பெரும் பொருணூலில் வழக்கறிந்த பெரியார் மாட்டுத் தெளியற்பாலனவாய பொருள் பலவுள; இத்தகைய கருவிகளை யான் எய்தாதிருப்பின் சிற்சில இடங்களில் எனது அறியாமை நிலைபெற்றிருக்கும்.

## புத்துரை வரைந்தமை

இவ்விதம் பல மூல புத்தகங்களும் உரைகளும் கிடைத்தமையின் நீண்டகாலப் பெருமுயற்சியால் இப் பொருணூலின் உண்மைப் பொருளை உணர்ந்தேன். அறிய விரும்புவார் பொருட்டு வெளியிட வேண்டிய இதனைப் பழமையான உரைகளின் வாக்கியங்கள் சில இல்லாத இடங்களில் அவ்வாக்கியங்களைப் பின்பற்றிய என் சொந்த வாக்கியங்களைச் சேர்த்து உரையெழுதி முடித்தேன். இத்தகைய நன்முயற்சி இனிது முடிவடைதற்கு ஸ்ரீபத்மநாபஸ்வாமி கருணைக்கு நிகரான எனது புரவலரும் வஞ்சி நாட்டரசருமான ஸ்ரீ மூலராம வர்ம மஹாராஜா அவர்களது கருணையே முதற் காரணமாக நிகழ்ந்தமையால் அன்னார் திருநாமமே இப் பேருரைக்குத் தக்கதெனக் கருதி "ஸ்ரீ மூலம்" என உரைக்குப் பெயரிட்டேன். ஸ்ரீ மூலம் என்பது செல்வத்திற்குக் காரணம் என்னும் பொருளினதாம். நம் அரசர் மூல நாளிற் பிறந்தமையால் அந்த ஸ்ரீ மூலம் என்னும் பெயரால் உலகத்தில் விளங்குகின்றார். அத்தகைய இவ்வுரையோடு இப் பொருணூலை இப்பொழுது அச்சிடத் தொடங்குகின்றேன்.

## புதிய பதிப்பின் சிறப்பியல்.

இந்நூலை நன்கு திருத்தி யமைத்த பிறகு இதன் உருவம் புத்துருவமாகவே தோன்றியது. இதிற் பல படிகளைக் கொண்டு பாட

பேதங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. மைசூர் புத்தகத்திற் காணப் படாத பல சிறந்த பாடங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அதிற்கண்ட பல பிழைகள் விலக்கப்பட்டன. சில படிகளிற் காணப்பட்ட பொருணயமுள்ள பாடபேதங்களும் உரையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இத்தகைய முழு வரலாறும் படிப்பவர்க்குப் புலனாகுமென எண்ணியே இவண் விரிக்கவில்லை.

## பகுதிகளின் பாகுபாடு

இப்பொருணூல் பெருநூலாதலின் மூன்று பாகங்களாக வெளியிடல் நலமெனக் கருதி முதற்பாகம் வெளியிடப்பட்டது. மற்றிருபாகமும் நிரலே கூடிய விரைவில் வெளிவரும். பதினைந்து அதிகரணங்களடங்கிய இந்நூலின் முதற்பகுதியில் இரண்டு அதிகரணங்கள் உள்ளன. இரண்டாம் பகுதியில் ஆறு அதிகரணங்களும் மூன்றாம் பகுதியில் ஏழு அதிகரணங்களும் அடக்கி அமைக்கப் படும். அவற்றுள் முதலாவதான வைநயிகாதிகரணத்தில் இருபத்தொரு அத்தியாயங்கள் உள்ளன. இரண்டாவதான அத்தியக்ஷப்ரசாரம் என்னும் அதிகரணத்தில் முப்பத்தாறத்தியாயங்கள் உள்ளன. இவற்றின் அமைந்த பொருள்களின் விளக்கம் பிரகரணப் பொருளடக்கத்திற் காணலாம்.

## கௌடல்யர் முதலிய பெயர்கள்

பெருமைசால் இந்நூலாசிரியர்க்குக் கௌடல்யர், சாணக்கியர், விஷ்ணுகுப்தர் என இம்மூன்று திருப்பெயர்களும் விளங்குகின்றன. இவர் குடலர் எனும் முனிவர்குலத் துதித்தலின் அம்மரபு தோன்றக் "கௌடல்யர் எனவும், சணகமென்னும் நாட்டிற் பிறந்தமையால் இடந்தோன்றச் சாணக்கியர் எனவும் பிரசித்தராயினர். விஷ்ணுகுப்தர் என்பது விஷ்ணுவினாற் காக்கப்பட்டவர் என்னும் பொருளில் விஷ்ணுபக்தராகிய அவர் தந்தையாரால் நாமகரண ஸம்ஸ்காரத்தால் இட்ட பெயராகும். ஆதலினன்றே காமந்தகனும் தனது நீதிசாரசயமங்கலத்தில் "ஸம்ஸ்காரத்தால் விஷ்ணுகுப்தர் என்றும் மரபினாற் கௌடல்யர் என்றும் இடத்தாற் சாணக்கியர் என்றும் பெயர் வாய்ந்ததாகக் கூறியுள்ளார். "கௌடில்யர்" என இடையில் இகரமுள்ள பெயர் பிழை. "ஷ்யஞ்" என்ற விகுதிக்குப் பகுதியான குடிலசப்தம் கோத்திரார்த்தமாகிய மரபு தோற்றும் இருடிவாசகமாகவும், வஞ்சகன் என்ற பொருளிலும் நிகண்டுகளில் ஓரிடத்தும் காணப்படவில்லை. இகரமற்ற குடல

சப்தமோ கோத்திரப்பிரவர்த்தக இருடிவாசகமாக நாநார்த்தார் ணவ சம்க்ஷேபம் என்ற நிகண்டிற் கேசவ ஸ்வாமி கூறியுள் ளாராதலின் "ஷ்யஞ்" என்னும் விகுதிக்குப் பகுதியான குடலர் எனும் பதத்தின் தொடர்பு இலக்கண அமைதியிற் கௌடல்யர் என்று விளங்குகின்றது. ஆதலாற் கிடைத்துள்ள எல்லா மூலப் பகுதிகளிலும் உரைப்பகுதிகளிலும் வேறு மொழிகளிலுள்ள பொழிப்புரைகளிலும் கௌடல்ய என்ற இகரமற்ற பெயரே காணப் படுகின்றது. "கௌடில்ய" என்னும் பெயர் யாண்டும் காணப்பட வில்லை. அறியாமையாலமைந்த கௌடில்யர் என்ற பிழையான பாடமே நமது முதற்பகுதியில் நாற்பது பக்கங்கள் வரை கவன மின்மையாற் சேர்ந்தது. மேல் கௌடலீயம் என்ற திருத்தம் அமைக்கப்பெற்றுளது.

## சாணக்கியரின் காலம்

"மகத நாட்டிற் குசுமபுரம் என்பது தலைநகரம். அந்நகரை நவநந்தர்கள் ஆண்டுவந்தனர். அவர்கள் ஒருபொழுது அங்கு வந்த சாணக்கியரை அவமதித்தனராதலின் மிக்க் சினமடைந்த சாணக்கி யர் அவ்வரசர்களை அடியோடு களைந்து அவர்களுடைய அரியணையில் சந்திரகுப்தனை அமர்த்தினர்" என்னும் இவ்வரலாறு மிகவும் பிரசித்த மாக வுள்ளது. சந்திரகுப்தன்காலத்தவரான இவர் காலமும் கி. மு. நான்காம் நூற்றாண்டு ஆதலே வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இவருக்குப் பிந்தியவரான காமந்தகன் முதலியோ ரும் இவரையும் இவரது பொருணூலையும் விதந்தெடுத்துக் கூறியுள் ளார். ஆயின் ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரியார் மாணவருள் ஒருவ ரான சுரேச்சுவராசாரியார் என்ற விச்சுவரூபர் தாம் யாக்ஞ்யவல்கிய ஸ்மிருதிக்கு எழுதிய "பாலக்கிரீடை உரை நூலில்" (அநந்தசயந வட மொழிநூல் வெளியீடு) பொருணூலைப்பற்றிக் குறிப்பிடுமிடத் துச் சாணக்கியரையாதல் இவரது பொருள்நூலையாதல் குறிப் பிட்டுக் கூறவில்லை. அவ்வளவில் இப்பொருணூல் அவர்க்கு முற்காலத்தில் இல்லை என்றுதல் அல்லது இவரால் அறியப் படாதவர் கௌடல்யர் என்றுதல் எண்ணுவதற்கில்லை; ஏனெ னில் அவர் அறிந்திருப்பினும் கூறாது விடுத்தமை முறையே என அவரது உரைநூல் முன்னுரையில் எடுத்துக் காட்டி யுள்ளேன். அவை வருமாறு:—"பாலக்கிரீடை யென்னும் நூல் மிகப் பழமையானதென்பதற்கும் அந்நூல் தனக்கு முந்திய நூல் களைப் பெரிதும் போற்றுந் தன்மையதென்பதற்கும் அந்நூலிலேயே அகச்சான்றுகள் உள்ளன. அந்நூல் கி. பி. ஆண்டிலுள்ள ஒரு நூலை

யாதல் ஒரு நூலாசிரியரையாதல் கூறவில்லை. ஆனால் கி. மு. ஆண்டிலுள்ள வேதங்களும், ஸ்மிருதிகளும் ஸ்மிருதி கர்த்தர்களும் அவர்களை ஒத்தவர்களும் அதன்கட் கூறப்பட்டனர். பொருணூலைக் கூறுமிடத்து கௌடலியத்தைக் கூறாது இதற்கு முதனூலாய பார்கற்பத்தியம் வைசாலாக்கம் என்னும் இவைகளைக் கூறியுள்ளார். எவ்வாறெனில் யாக்ஞ்யவல்கிய ஸ்மிருதியின் ஆசாராத்தியாயத்தில் 307—323-ஆம் சுலோகங்களின் உரையில் பார்கற்பத்தியத்தின் வசனங்களையும் 328-ஆம் சுலோகத்தின் உரையில் விசாலாக்கப் பொருணூலின் வசனங்களையும் காட்டியுள்ளார். பிறநூல்கள்ால் எளிதிற் புலனாகும் என நூலாசிரியர் கூறாது விடுத்தனவும் பிரகரணங்களுக்கேற்ப எடுத்துக் கூறவேண்டுவனவுமாகிய பொருள்களை முதனூலாசிரியர்களால் அறியப்பட்டனவும் காலத்தால் முற்பட்டனவும் ஒத்த காலத்தனவுமாகிய நூல்களையே சான்றாகக் கொண்டு விளக்குவது உரையாசிரியரின் இயல்பாதலின் . இவ்விச்சுவரூபாசாரியரும் பார்கற்பத்தியமும் வைசாலாக்கமும் யாக்ஞ்யவல்கியரால் அறியப்பட்டனவெனக் கருதித் தன் உரை நூலில் அவ்விரண்டையும் குறிப்பிட்டார்; கௌடலீயத்தை அவர்க்குப் பிற்காலத்ததென்றும் அவரால் அறியப்படாததென்றும் கருதிக் குறிக்காது விடுத்தார். கௌடலியர் யாக்ஞ்யவல்கியருக்குப் பிற்காலத்தவரென்பதிற் சிறிதும் ஐயமில்லை. ஏனெனில் இப்பொருணூலின் அறுபத்து நான்காம் அத்தியாயத்தில் வணிகனுக்கும் அரசர்குலப் பெண்ணுக்கும் பிறந்தவன் மாகதன், அரசற்கும் பார்ப்பனப் பெண்ணிற்கும் பிறந்தவன் சூதன்'' எனப் பிரதிலோமர்களைக் கூறுமிடத்து விளக்கியும், பிருது சக்கரவர்த்தியின் வேள்விச்சாலையிற் பிறந்தவர்களான சூதமுனிவரும் அவ்வரசனைப் புகழும் மாகதனும் இவர்களாகார் எனவும் இவர்கள் அந்தணரினும் அரசரினும் சிறந்தவர் எனவும் கூறியுள்ளார். இஃதுண்மையே; இவ்வாறே விஷ்ணுபுராணம் முதலம்சம் பதின்மூன்றாம் அத்தியாயத்தினும் பிருதுசக்கரவர்த்தியின் வேள்வியிற் சூதர் பிறந்தவர் என்பதும், விஷ்ணு அம்சம் உள்ளவர் என்பதும், அந்தணர் என்பதும் வெளியாகின்றன. அக்கினிபுராணம் முதலத்தியாயத்தினும் கூர்மபுராணம் முதலத்தியாயத்தினும் இச்செய்திகள் கூறப்பட்டுள்ளன. கௌடலியர் அவர்கள் வரலாற்றையும் புராணப் பிரசங்க வன்மையையும் நன்குணர்ந்தவராவார். ஆதலின் சூதருக்கு இவர் மிகவும் பிற்பட்டவராவர். அன்றேற் சூதர் கூறும் புராணங்களின் பழமையென்ற பெருமையே மாறுபடும். இதனை ஆராய்ந்த துணையானே சாணக்கியரினும் சூதர் முற்பட்டவர் என்றது போல சூதருடன் ஒருசாலைமாணவரான வைசம்பாயனர் மாணவரான யாக்ஞ்யவல்கியரும் முற்பட்டவர் என்பது போதரும்.

மேலும் யாக்ஞ்யவல்கியஸ்மிருதியின் இரண்டாம் அத்தியாயத்தின் கண்ணுள்ள சுலோகங்களும் தருமத்தீயம் என்ற அதிகரணத்தின் வாக்கியங்களும் சொல்லானும் பொருளானும் தொடரானும் ஒத்திருத்தலின் சாணக்கியர் முற்கூறியுள்ள மிருதியைப் பெரிதும் பின்பற்றியவர் என்பது நன்கு போதரும். ஆதலின் ஸ்மிருதியின் உரையாசிரியரை நிகர்த்தவர் கௌடலியர் என்பது புலனும்.

## கௌடலியர் இயற்றிய வேறு நூல்கள்.

அரிய பெரிய பல பொருள்களைத் தன்னுட் கொண்டு இப் பொருணூல் மிளிர்வதால் இதன் ஆசிரியர் பல்கலை வல்லுநராகவும் சிறந்த அறிஞராகவும் காணப்படுகிருர். ஆதலின் இவரியற்றிய வேறு சில நூல்களும் இருத்தல் வேண்டும் என்றும் புலப்படுகின்றது. பட்டஸ்வாமியார் தமது உரையில் அத்தியக்ஷாதிகரணம் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் "சுல்பதாது சாத்திர ரஸ,' என்ற பதத்திற்கு உரை விரிக்குங்கால் தாதுகௌடலீயம் என்று குறிப்பதாலும் வராகமிகிரர் என்ற சோதிட பண்டிதர் தாமியற்றிய சோதிடப் பிருகத் சங்கிதையில் "ஆசார்ய விஷ்ணு குப்தராற் கூறப்பட்டது" என்று இவரது கூற்றை மேற்கோளாக எடுத்தாண்டிருப்பதாலும், காமசூத்திர சயமங்கலையில் மிலேச்ச விகற்பங்களை விரித்துரைக்குங்கால் "இவ்வாறே கௌடலீயத்தில்" என்று ஒரு சுலோகத்தை எடுத்துக் காட்டியிருப்பதாலும் சாணக்கியரின் அறிவின் பெருமையும், பிற நூல்களும் இயற்றியுள்ளார் என்பதும் நன்கு போதரும். இந்நூலில் ஆரிடப் பிரயோகங்கள் பலவுள. அவைகளை அடுத்த பகுதியிற் காணலாம்.

கௌடலியரால் எடுத்தாளப்பட்ட முதலாசிரியர் ஆவார் :—

1. மாநவா:—மநுவும் அவர் வழியினரும்.
2. பார்ஹஸ்பத்தியா:—பிருகற்பதியும் அவர் வழியினரும்.
3. ஔசநஸா:—சுக்கிரனும் அவர் வழியினரும்.
4. பாரத்துவாஜா:—துரோணுசாரியர்.
5. விசாலாக்ஷா:—இன்னுரென விளங்கவில்லை.
6. பராசர:—இவர் பிரசித்தர்.
7. பிசுந:—நாரதர்.
8. கௌணபதந்த:—வீட்டுமர்.
9. வாத வியாதி:—உத்தவர்.
10. பாகு தந்தீபுத்ர :—இந்திரன்.

பொருணூல் வல்லுநராகிய இப் பதின்மருள் விசாலாக்ஷர் என்பாரொருவரே இன்னுரெனப் புலப்படவில்லை. எனினும் விச்சுவரூபர் குறித்தமை முன் காட்டப்பட்டது.

## நூற்பெருமை

அறத்தகையாளனும் வினைசெயல்வல்லானும் மடியிலாதவனும் பிறரிழைக்கும் தீமைக்குத் தக மாறிழைக்கும் திறலாளனும் சிறந்த அறிஞனுமான ஒருவன் தனது குடும்பத்தைக் காப்பதுபோல அரசனும் அடையப்பெறுததொன்றை அடைதலானும் அடைந்த தொன்றைக் காத்தலானும் ஆக்கம் காவல் எனும் இரண்டையு மெய்தித் தன்னுட்டிலுள்ள குடும்பங்களனைத்தையும் காக்கத்தக்க கருவிகளைப் பொதுவாகவும் சிறப்பாகவும் இந்நூல் கூறுகின்றது. குடிகளிடமிருந்து இறைவாங்கும் முறைகளையும், ஈட்டிய பொருளைச் செலவு செய்யவேண்டிய நெறிகளையும் கூறியுள்ளார். அதிகாரிகள் அமைச்சர்கள் அரசனை அடுத்தவர் என்னுமிவர்களால் குடிகளுக்குத் தீங்கு நேராமை, குடிகளும் அரசியலும் மாறுபடாமை என்னு மிவற்றிற்குரிய நெறிகளும், குற்றங்கண்டவிடத்துத் தக ஒறுக்கு முறையால் ஒறுத்தலும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. அரசற் கின்றியமையாததும் நன்மை தீமைகளை நாடியறிதற்கு தக்க கருவியும் ஆராய்ந்தறியும் திறன் மிகப்பொருந்தியதும் அரசனின் உயிர்நிலையுமாகிய ஒற்றின் அமைப்பும் கூறப்பட்டுள்ளது. மிக விரிப்பானேன்? அரசன் தன்னகரை நன்கு காப்பதுடன் பகைவரின் தலை நகரை முற்றுதற்குரிய சிறந்த பல முறைகளும் பொதுவாகவும் நடு நிலையாகவும் நுணுக்கமாகவும் கூறப்பட்டுள்ளன. பொருணூல்கள் அனைத்தினும் இஃதொன்றே சிறப்புற்று விளங்குவதெனக் கூறலாம். முன்னோர்களின் அரசியல் இந்நூனெறியைக் கடைப்பிடித்தே நிகழ்ந்தமையின் சீருஞ் சிறப்பும் எய்தியதென இப்பொருணூலால் அநுமானம் செய்கின்றோம்.

---

## இரண்டாம் பகுதியின்

## முன்னுரை

---

இவ்விரண்டாம் பகுதியில் ஐந்து அதிகரணங்கள் சேர்க்கப் பட்டுள்ளன. இதனை வெளியிடவிருக்கும்பொழுது பஞ்சாப் மாகாணத்தைச் சார்ந்த லாகூரினின்றும் வெளிவந்ததும் ஜெர்மன் தேயத்தவரான பண்டித ஜாலி என்பாரால் தொகுக்கப்பட்டது மான புதியதோர் கௌடலீயப் பொருணூலின் பதிப்பினைக் கண் டேன். இதிற் கண்ட பாட பேதங்களையும், மைசூர் புத்தகத்தி லுள்ளனவும், நமது புத்தகத்திலுள்ளனவுமாகிய பாடபேதங்க ளுடன் சேர்த்து ஒன்றற்கொன்று மாறுபட்ட பொருள்களையும் மூன்றும் பகுதியின் இறுதியிற்றெரிவிப்போம். லாகூர்ப் புத்தகத்தின் முன்னுரையில் இப்பொருணூலைப்பற்றிய பல செய்திகள் விரிக்கப் பட்டுள்ளன. அவற்றுள் சாலியினுடையவும் பிறருடையவுமாகிய மேற்கோளற்ற சில அபிப்பிராயங்களை மீண்டு எடுத்துக் கூறுவோம்.

இந்நூலின் முதலத்தியாயத்து இறுதிக் கண்ணுள்ள சுலோகத் தானும், இரண்டாம் அதிகரணம் பத்தாம் பிரகரணத்தினிறுதிச் சுலோகத்தானும், இந்நூலின் முடிவிலுள்ள இரண்டு சுலோகங் களானும், இந்நூலின் அமைந்த பல வாக்கியங்களைப் பிற நூலாசிரி யர் கௌடலீய கௌடலியர் என்னும் பெயர்க்குறிப்புடன் தக்க சான்றாக எடுத்தாண்டிருத்தலானும், இந்நூலாசிரியர் சந்திர குப்தனைத் தழுவிய விஷ்ணுகுப்தர் எனப் பெயரிய சாணக்கியரே என்னும் உலகின் கொள்கை பொருத்தமே.

இதில் மாறுபட்டவர்கள் இரண்டு மூன்று பேர்களாவர். ஒரு வர் ஆஸ்டிரியா தேசத்தவரான பண்டித. விண்டரனிட்ஸன். மற்ற வர் ஜெர்மன் தேயத்தவரான ஜாலி என்பார். பிறிதொருவர் ஆங்கி லேய பண்டிதரான கீத் என்பார். இம்மூவரும் சந்திரகுப்தனது காலத்தில் சாணக்கியர் என்ற பொருணூலாசிரியர் ஒருவரும் இருந்த தில்லை எனக் கருதுகின்றனர். அதற்குச் சான்றுகள் பின்வருமாறு :-

1. சந்திரகுப்தனது சாம்ராச்சியம் தன்னால் நிலை நாட்டப் பட்டது என்றும் அவர்க்குத் தலைநகர் பாடலிபுத்திரம் என்றும் தனது நூலில் ஓரிடத்தும் கூறப்படவில்லை.

2. சிற்றரசியலே அன்றிப் பேரரசியல் கூறப்படவில்லை.

3. சந்திரகுப்தனைப் புகழ்ந்து பேசும் மேகாஸ்தனீசன் என்னும் யவனன், தானியற்றிய நூலில் இத்தகைய பெருமைவாய்ந்த கௌடலியரைப் பெயரளவினும் குறிப்பிட்டு உரையாமையின் சந்திர குப்தனது காலத்தில் இவர் இல்லை.

4. இந்நூலிற் பலவிடத்தும் கௌடலியர் என்னும் பெயர் குறிக்கப் படுகின்றதாகலின் இவர் இந்நூலாசிரியரினும் வேறுபட்டவர். மேலும் யோகவிருத்தம் ஆறும் அத்தியாயத்தில் "கௌடலியர் இங்ஙனம் கூறுவர்" என்று பூர்வபக்க வாக்கியமாக அமைத்துச் சித்தாந்த வாக்கியமாகப் பாரத்துவாச வாக்கியத்தைக் கூறியிருப்பதாலும் இவர் அக்காலத்தவரில்லை யென்பது புலனும்.

5. கௌடிலியர் என்ற சொல் 'குடில' என்றதன் அடியாக வந்து இழிபொருளைத் தோற்றுவதால் தமது நூலில் இத்தகைய பெயரைத் தன் பெயராகக் குறிப்பிட மாட்டாராகலின் இவர் இந் நூலாசிரியரல்லர் என்பது வெளிப்படை என்பன.

இவை யாவும் பயனற்ற கூற்றென்பது, எனது எண்ணம். மேற்கூறிய ஒவ்வொன்றிற்கும் மறுப்புப் பின்வருமாறு :—

1. நூலிடையில் "சந்திரகுப்த ராச்சியம் நிலை நாட்டப்பட்டது" என எடுத்துக்காட்டாகத் தம்மைத் தெரிவிக்கு முகத்தானும் கூறலாம்; பொதுவான அரசியன் முறைகளைக் கூறுமிந்நூலில் ,சரித்திரப் பிரசித்தரான அரசர்களுடைய ஒழுக்கங்களை உதாரணமாக எடுத்துக் காட்டுவது பொருத்தமேயன்றி, இதனை வெளியிடல் தற்புகழ்ச்சியாகும்; "என்னால் நந்த ராச்சியம் நாசம் செய்யப்பட்டது" என்று நூல் முடிவிற் கூறப்பட்டிருத்தலால் தன் பெருஞ் செயல் கூறப்பட்டதுடன் சந்திரகுப்தனது பேரரசியலும் வெளியிடப்பட்டதாகும். இம்மட்டிற் பாடலீபுத்திரத்தின் குறிப்பும் வெளியிடப்பட்டதேயாம். நூல் நடுவில் இயைபு அமையாமையின் பாடலீபுத்திரன் பெயர் குறிக்கப்படவில்லை. "மகதம், மதுரை" முதலிய குறிப்புக்களோவெனின் அவைகள் பஞ்சு பட்டு முதலிய பொருள் விளையும் நிலமாதலின் கருவூலத்தியை திருமணி ஆய்தல் எனும் பிரகரணத்தில் விளைநிலப் பகுதியிற் கூறப்பட்டுள்ளன. பாடலீபுத்திரத்தில் அத்தகைய பொருள்விளைவின்மையின் கூறப்படவில்லை.

2. இதிற் கூறப்பட்ட அரசியல்முறைகள் யாவும் சிற்றரசியல் பேரரசியல் இவைகளுக்குரியனவேயாம். "அறுவகைக் குணங்கள்" என்னும் அதிகரணத்தில், பதினைந்து, பதினாறும் அத்தியாயங்களில் சக்கரவர்த்தியினிடம் சிற்றரசர் நடக்கவேண்டிய முறையும், சிற்றரசர்களிடத்தில் சக்கரவர்த்திகள் நடக்கவேண்டிய முறையும் நன்கு கூறப்பட்டுள்ளன. ஆதலின் பேரரசியலும் முறைகளும் கூறப்பட்டனவேயாம்.

3. மேகாஸ்த நீசனல் எழுதப்பட்ட நூல் இல்லாதன புகுத்தியும் இருப்பன விடுத்தும் பலவழுக்கள் நிறைந்தும் உள்ளது. அத்தகையார் தம்மால் கூறப்படாத தொன்றில் மேற்கோளாசிரியராக அமைவதெங்ஙனம்? அன்றியும் அவர் கௌடலியரை அறிந்தவராயினும் கூருது விடுத்தமை பொருத்தமே. கௌடலியர் இறந்த பல ஆண்டுகளுக்குப் பின்னர் சந்திரகுப்தனது ஆணை தனதுரிமை பற்றி வேரூன்றிச் சிறந்து விளங்கும்பொழுதும் குடிகளும் சாணக்கியரின் பெருமையைப் படிப்படியாக மறந்து வரும்பொழுதும் இம் மேகாஸ்த நீஸ் சந்திரகுப்தனை அடைந்தவர். இங்கிலையில் சந்திரகுப்தனது பெருமையில் வியப்படைந்தவரும் பிற நாட்டினின்றும் வந்தவரும் முன் செய்தியறியும் விருப்பற்றவருமாகிய இவர் மக்களின் வாயிலாகக் கௌடலியரின் சிற்சில திறமையைக் கேட்டும் அதனை உய்த்துணரும் ஆவலற்றவராயினர். ஆதலிற்றமது நூலில் இவரைப் பற்றி யெழுதவில்லை. சந்திரகுப்தனையே புகழ்ந்து பேசும் இயல்புடைய இவர் சாணக்கியரைப்பற்றிய உலகவாதம் குறைந்தமையின் அறியாமலுமிருக்கலாம். மேகாஸ்தநீஸர் தமது நூலிற் கௌடலியரைப்பற்றிக் கூருமைக்கு இத்தகைய பலகாரணங்கள் அறியக்கிடக்குமளவில் பலவாண்டுகளாக உலகம் புகழும் கீர்த்தியுள்ளவரும் விஷ்ணுபுராணம் வாயுபுராணம் முதலியவற்ருல் வருணிக்கப்பட்ட பெருமை படைத்தவருமாகிய கௌடலியர் சந்திரகுப்தன் காலத்தில் இருக்கப் பெருதவர் எனக் கூற யாவர் முற்படுவர்? அங்ஙனமே கூறும் ஜாலி என்பாரும் பொருளுண்மை அறியாமை, அவமதித்தல் காரணமான மேகாஸ்தநீசன் மௌனமும் பரதகண்ட முன்செய்தி நிர்ணய விஷயத்தில் தக்க சான்ருகும் என்றும், பாரததேசத்தவர்களால் கையாளப்பட்டனவும் பொருத்தமான பொருள் மலிந்தனவுமாகிய புராணங்கள் என்ற பண்டைநூல்களின் உண்மையையும் கெடுக்கின்றது என்றும் கூறியுள்ளார்.

4. முதலிற் பிறர் மதத்தைக் கூறிப் பிறகு தக்க மேற்கோளுடன் அம்மதத்தைக் கண்டனம் செய்யுமுகத்தால் சித்தாந்தமாகத் தம் மதத்தைக்கூறுதலும், தமது மதத்தை முதலிற் கூறிப் பிறர்மதத்தை அநுவாதம் செய்து கண்டிப்பதும் நூலாசிரியர் வழக்காதலின், இந் நூலாசிரியரானும் இவ்விருமுறைகளுள் இரண்டாவதான முறையே கையாளப்பட்டது. "கௌடலியர் இங்ஙனம் கூறுவர்" என்னும் இடனெல்லாம் கௌடலியர் என்ற நான் கூறுகிறேன் என்றே பொருள் கூறவேண்டும். "நான் கூறுகிறேன்" என்னும் சொல் செருக்கிக் கூறுவதாக அமையும் என்றும் "கோணர்த்தீயர் கூறுவர்" என்றபடி முன்னைய ஆசிரியர் கொள்கையும் இஃதென்றும் கருதியே இங்ஙனம் கூறினர் என்க. காலத்தில் முற்பட்ட பாரத்துவாசர் அவரினும் பிற்காலத்தவரான கௌடலியரைக் கண்டித்தல்

பொருந்தாமையானும் பிற்காலத்தவரான இவர் முற்காலத்தவரான பாரத்துவாசராதியரைக் கண்டித்தல் இயையும் ஆகலானும் கௌடலியர் சந்திரகுப்தன்காலத்தவர் என்பதும் இந்நூலாசிரியர் என்பதும் இனிது விளங்கும்.

5. கௌடிலியர் என்ற பெயரளவில் இழிபொருள் தோன்றினும் இதுவும் 'குத்ஸா' என்ற இழிபொருட் பகுதியினடியாகப் பிறந்த கௌத்ஸர் என்ற பதம்போலச் சிறந்த பதமென்றே உபந்நியாசகர் அரங்கசாமி ஆசாரியரால் சமாதானம் கூறப்பட்டுள்ளது.

உண்மையில் ஆராயுமிடத்து, கௌடிலியர் என்று இடையில் இகரம் அமைந்த சொல் முன்னோர்களால் எடுத்தாளப்படாமையின் அது எழுதியவரும் படிப்பவருமாகிய இருசாராருடைய குற்றமான வழக்கென்றே கொள்ளல் வேண்டும். பழய படிகளிலும் அவற்றின் உரைகளிலும் காமந்தக நீதிசாரவுரை செயமங்கலத்திலும் கௌடலியர் என்றே காணப்படுவதால் கௌடில்யர் என்னும் சொல் பிழையேயாமென விளங்கும். இதுபற்றி முதற்பகுதியில் விரித்துக் கூறியுள்ளதைக் காண்க. இதனாற் சாணக்கியர் சந்திரகுப்தனது காலத்தவர் அல்லர் என்பதும் இவரால் இப்பொருணூல் இயற்றப்பட்டதில்லையென்பதும் புறக்கணிக்கப்பட்டனவாமாதலின் சந்திரகுப்தனுடனிருந்த இவரால் இயற்றப்பட்ட இந்நூலின் காலமும் கி.மு. நான்காம் நூற்றாண்டென்பது பெறப்பட்டது.

இப்பொருணூல் அங்ஙனம் பழமையென்பதிற் சிற்சில குற்றங் கணிகழுமெனச் சாலி முதலியோர் கூறும் கூற்றுக்கும் இதனடியில் மறுப்புக் கூறுவாம் :—

சுச்சுருத சங்கிதையாதிய நூல்களினும் இப்பொருணூலில் தாது இரதவாதங்கள் மிகைபடக் கூறியிருத்தலின் அவை மலிந்து கிடந்த காலத்தில் இந்நூலுண்டாதல் வேண்டும் எனும் ஊகத்தினால் அவை சுருங்கியிருந்த காலத்தவரான சுச்சுருதராதியரினும் இவர் பிற்பட்டவர் என்றும் கி.மு. முதல் நூற்றாண்டிலுள்ள சுச்சுருத சங்கிதையாதிய நூல்களுக்கும் இந்நூல் பிற்பட்டதென்றும் விண்டரனிட்சன் கூறுகின்றார். இதுவும் பொருத்தமற்றதேயாம்.

சுச்சுருதராதியரினும் தாது இரதவாதங்கள் இப்பொருணூலில் மிகைபடக் கூறியிருத்தலொன்றைக் காரணமாகக் கொண்டு அவர் காலத்துச் சுருங்கியிருந்த இவை இந்நூலாசிரியர்காலத்து விரிவெய்தின எனக்கூறுவது பொருத்தமின்று. ஏனெனில் எப்பொழுதும் ஒரு நிலையிலுள்ள இவைகளை சுச்சுருதர் சுருக்கியும் சாணக்கியர்

விளக்கியும் உள்ளார் எனக் கூற இடனுளது. சுச்சுருதாதிய நூல்களோ வைத்திய சாத்திரங்கள். அவற்றிற்கு வேண்டிய அளவில் இவை கூறப்பட்டிருக்கலாம். அரசியலை முக்கியமாகக் கொண்ட இப்பொருணூலில் பொன் வெள்ளி உண்டாக்கல், பகைவரை வேறல் இவற்றிற்குரிய ஓஷதிகளைச் சேகரித்தற்குரிய கருவியாக மிகைபடக் கூறலும் பொருத்தமே. "தாது கௌடலீயம்" என்னும் நூலில் மிக விரிவாகக் கூறப்பட்ட இவற்றை அவ்வப்பிரகரணங்கட்கேற்பக் கூறியிருத்தலை மேற்கொண்டு இவ்வாசிரியரது காலத்தை அநுமானித்தல் பொருந்தாது.

2. யாக்ஞ்ய வல்கிய ஸ்மிருதி கி.பி. மூன்றும் நூற்றுண்டிலுண்டானது. இதனை இப்பொருணூல் பெரிதும் தழுவி இருத்தலின் இதற்குப் பிந்தியது என சாலி கூறுவர்—இவ்வுரையும் பயனற்றது. இவ்வறநூல் கி.பி. மூன்றும் நூற்றுண்டில் உண்டானதென்பதற்குச் சிறிதும் ஆதாரம் கிடையாது. பொருணூல் கி. மு. நான்காம் நூற்றுண்டில் உண்டானது என்று நன்கு புலப்படுவதால் இந்நூற்கும் முதனூலாய அவ்வற நூல் இதனினும் பழைமையதென்றும் பாணிநீய வியாகரணத்தில் "கர்காதிப்யோ யஞ்" என்ற சூத்திரத்தில் கர்க்காதிகணத்தில் யக்ஞ வல்க என்ற பதத்தைக் கூறி அதனடியாகப் பிறந்த யாக்ஞ்ய வல்கிய என்ற சொல்லுக்கு யக்ஞய வல்கருடைய மரபிற் பிறந்தவர் என்ற பொருளை உணர்த்துவதால் இவரும் இவரது நூலும் பாணிநிமுனிவர்க்கும் முன்னரே இருத்தல்வேண்டும் என்பது போதரும்.

3. திருஷ்டுப் சந்தத்திலும் வாக்ய முறையிலும் இந்நூல் பழமையானது என்று புலப்படவில்லை என்று கீத் என்பார் கூறுகின்றூர்—அதுவும் நியாயமில்லை. ஏனெனில் திருஷ்டுப் சந்தத்தை மேற்கோடல் பழமைபற்றி விரோதமாகுமா? அல்லது இச்சந்தத்தில் நான்கு பாதங்களும் ஓரிலக்கண முறையில் அமைந்தமை அதற்கு விரோதமாகுமா?

வேதங்களிலன்றிப் பிறவிடங்களில் சந்த வேறுபாடு அமைத்தல், ஆக்கியோன் கருத்திற்கிணங்கப் பொதுவாகவின் திருஷ்டுப் சந்தத்தைப் பற்றுதல் பழமை குறித்து விரோதமாகாது. நான்கடிகளிலும் ஓரிலக்கண அமைப்பும், அங்ஙனம் அமையாமையும் ஆசிரியரின் விருப்பிற்கியைய நிகழ்வனவும்வரையறையற்றனவும்,மேற்கோளற்றனவுமாம் வாக்கிய முறை யமைப்பில் பழமையதென்பது கீத் என்னும் பெரியாருக்குப் புலனாகவில்லை. அவ் வமைப்புமுறையில் இது

மகாபாரதியமாதிய பெரு நூல்களினும் பழமைப்பதென்பது எனக்குப் புலனுகின்றது. இதன் துணிபு அறிஞர் வயத்தது.

“இந்நூலிற் காணப்படும் பிரகரணங்கள் அனைத்தையும் பல அறிஞர் புனைந்துளார் என்றும், பின்னை ஒருவர் ஒன்றுபடத் தொகுத்துளார் என்றும்'' ஒரு சாரார் கூறுவர். அங்ஙனம் கூறுவதும் பயனிலதாகும். “இவ்வாசிரியர் பெரிய வமிசத்திற் பிறந்தவர். நான்கு வேதங்களையும் நன்கு கற்றுணர்ந்தவர். ஆபிசாரமென்ற வச்சிரத்தினுல் நந்தராசன் என்ற மலையைத் தகர்த்தவர். சிறந்த மந்திரசக்தியுள்ளவர். பொருணூற் கடலில் நீதி யென்னும் அமுதம் எடுத்தவர்'' எனக் காமந்தக நீதிநூலில் பிரபலமான பொருள்களை நன்குணர்ந்தவர் என்று வியந்து கூறியிருத்தலின் பல பிரகரணங்களைத் தொகுத்து இவரே இந்நூலியற்றியவர் எனப் புலப்படுகின்றது.

காமந்தகர் கி. மு. முதல் நூற்றுண்டில் இருந்தமையால் சாணக்கியரைப்பற்றி நம்மினும் நன்குணர்ந்தவராவார். மேலும் இவர் கி. மு. முதல் நூற்றுண்டில் இருந்தவர் என்பதில் ஐயமிருப்பினும் ஏழாம் நூற்றுண்டிலிருந்த பவபூதியினும் முற்பட்டவர் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. ஆதலிற் பவபூதி யென்பார், தாமியற்றிய மாலதீமாதவம் என்னும் நாடகத்தில் நீதிசார நூலாசிரியனுகிய காமந்தகனை மூலமாகக்கொண்டு நீதிப்பிரயோகத்திற்றிறலமைந்த காமந்தகி எனப் பெயரமைத்துப் “பரிவிராசிகை'' என்னும் பெண்ணைப் பாத்திரமாகக் கோடல் மிகப் பொருத்தமே.

இங்ஙனமாக அமைந்த காமந்தகி என்னும் சொல், பிரசித்தமான காமந்தகனை மூலமாகக் கொண்டதன்ருகலின் பொருளற்றது'' என சாலி கூறுகிருர். மாலதீமாதவத்தில் அத்தகைய பொருளற்ற கூற்று ஒன்றேனும் இலது. “மாலதீ, மாதவன்'' என்ற சொற்கள் சிருங்கார ரசத்தைப் பெருக்கும் பொருளின் பெயராய்த் தலைவன் தலைவியரைக் குறித்தன. அகோரகண்டன், கபாலகுண்டலையென்ற சொற்கள், சண்டீ தேவியின் பூசனையாற்றும் தன்மையை வெளியிடுகின்றன. புத்தரட்சிதையென்னும் சொல் புத்தமதச் சேர்க்கையையும் புத்த முனிவர்க்கு மாணவியாம் தன்மையையும் உணர்த்துமாகலின் காமந்தகியெனுஞ் சொல்லும் காரணம்பற்றி வந்தமையின் காரணப் பெயராதலன்றி இடுகுறியாகாது என்ற இவை முதலியன அறிஞர்களால் உய்த்துணரக் கிடக்கின்றன. பல பொருள்களை உணர்ந்த கௌடலியரை உலகமறியும். பல பொருள்களைக் கண்டுணர்ந்த இவர் ஒருவரே உலகில் ஒப்பற்றவர் என்பதிற் பொருமை

கொள்ளலாகாது. உலகிற் சிறந்த அறிவாற்றலாதிய நற்குணங்கள் நிரம்பப்பெற்ருன் ஒருவன் முற்றும் உணர்ந்த முன்னவனை ஒக்கு மெனின் அவனைப் பல் பொருளறிந்தவன் எனக் கூற வேண்டுவ தென்னை: இதனுல் மகாபாரதம் முதலிய நூல்களில் பிரசித்தரான பெரியோர்களுடைய வாக்கியங்களைப் பூர்வபக்கமாகவும் கௌடலி யரின் வாக்கியங்களைச் சித்தாந்தமாகவும் அமைத்து யாரோ ஒரு பண்டிதரால் இப்பொருணூல் இயற்றப்பட்டதென்ற சாலி கூற்று விலக்கப்பட்டது, காமந்தகன் முதலியோரின் பேருரைகள் இதற்குச் சான்ருக விளங்குகின்றன. மேலும் இந்நூலில் மேற்கோளாகக் எடுத்தாளப்பட்ட நூல்களும் பாரத்துவாசாதியர்களாலியற்றப்பட வில்லை என்றே சாலியின் கருத்து வெளியாகின்றது. அது முற்றிலும் தவறு. ஏனெனில் விச்சுவரூபாசாரியராலியற்றப்பட்ட யாக்ஞ்ய வல்கிய ஸ்மிருதியின் உரையில் பார்கற்பத்திய வசனங்களையும், வைசா லாக்க வசனங்களையும் மேற்கோளாகவும் உதாரணமாகவும் எடுத்துக் காட்டப் பட்டமையின் விச்சுவரூபருடைய காலத்தில் இவை இருந்து, பிறகு இறந்திருக்கவேண்டுமென ஊகிக்க இடனுளது. இது போன்றே இவைகளோடு ஒருங்கு கூறப்பட்ட பரத்துவாசருடைய பொருணூலும் இருந்து, பின் இறந்திருக்கவேண்டுமென ஊகிக்க இடனுண்டு.

இவ்விதம் பல ஊகங்களை முக்கியமாகக் கொண்ட சாலி முதலி யோரின் கருத்துக்களும் வழுக்களும் ஆராயப்பட்டன. இனி இதனி லும் ஆராயவேண்டுவதில்லையென்றே கருதுகிருேம். ஆயினும் பிறர் அறிவினுக்கெட்டாததான சாலியின் விசேடித்த பொருளறியும் ஊகத்தை மாத்திரம் சிறிது ஆராய்ந்து இதனை முடிப்போம்.

“இப்பொருணூலுக்குச் “சமாநதந்திரம்” என்ற ஒரு பெயருண் டென்று யாம் இதுவரை அறிந்திலோம்” என்று சாலி கூறுகிருர்; மனு ஸ்மிருதியின் மேதாதிதீய பாடியத்தின் ஏழாம் அத்தியாயத்தின் 191-ஆம் சுலோக உரையில் சமானதந்திரத்தாற் கூறப்பட்டதென்று தொடங்கிக் கௌடலீயம் பத்தாம் அதிகரணம் ஐந்தாம் அத்தியாயம் “மானுஷம் கர்மலோகம் பாலயதி” என்ற சுலோகமும், 205-ஆம் சுலோகத்தில் “இவ்விதமே சமாநதந்திரத்திலும்” என்று கூறி ஆரும் அதிகரணம் இரண்டாம் அத்தியாயம் “தெய்வம் மானுஷம் ஹி கர்மலோகம் யாபயதி” என்ற வாக்கியமும் காணப்படுகின்றன. இக்காரணம் பற்றி இப்பொருணூலுக்கும் சமாநதந்திரம் என்னும் பிறிதொரு பெயருண்டென்றும் அது காண்டற்கு மிக அரிய தென்றும் சாலி கருதுகிருர். இஃது ஆராய்ந்தறியாத விஷயமாம்.

"சமாநதந்திரம்" என்ற சொல் பண்புத்தொகையால் ஒற்றுமையாகிய சாத்திரமென்று பொருளமையுமாகலின் பிறநூல்களினும் இப்பதம் வழங்கு மிடங்களில் இப்பிரகரணத்திற்கு ஒப்பான வேறு சாத்திரங் களிலும் கூறப்பட்டுள்ளது என்றே பொருள் கொள்ளல் வேண்டும். இம் மனுஸ்மிருதிக்கு ஒற்றுமையான சாத்திரம் இவ்விடத்தில் கௌடலீயமே. மற்றைய விடங்களில் அவ்வப் பிரகரணங்களுக் கேற்ப மற்றச் சாத்திரங்களாகும். மேலும் சமாநதந்திரம் என்னும் சொல் மேதாதிபாடியத்திதியல் மாத்திரமேயன்றி சமான தந்திர சித்த என்ற நியாய சூத்திரங்களிலும் காணப்படுகின்றது. இங்ஙனமே பிறசாத்திர உரை நூல்களினும் இச் சொல் வழங்கப் படும். ஆகலின் கௌடலீயம் பொருணூலுக்குச் சமான தந்திரம் என்ற பெயர் இல்லை என்பது புலனும்.

மேலும் ஒற்றுமைச் சாத்திரங்களிற் பலவிதமாகவும் கூறுவ துண்டு. "சமாநம், பூர்வேண சமாநம், பிராக்வத், பூர்வவத், ஏதேந வ்யாக்கியாதம்" என்று பலவிதமாகக் கூறுவது சாத்திரமரபாதலின். இப்பொருணூலுக்கு சமாநதந்திரம் என்னும் பெயரில்லை என்றும் இது சந்திரகுப்தனது மந்திரியான கௌடலியராலேயே இயற்றப் பட்டதென்றும் தெள்ளிதின் விளங்கும்.

---

# கௌடலீயம் மூன்றும் பகுதியின்

## முன்னுரை

இம்மூன்றும் பகுதியுடன் இப்பொருணூல் முடிவெய்தும். மைசூர்ப் புத்தகத்தினின்றும் லாகூர்ப் புத்தகத்தினின்றும் விலக்கப் பட்டனவும் பொருள் ஒத்தனவுமாகிய பாடபேதங்களை இப்பகுதி யின் முடிவில் முதற்கூறுகவும், உரைநூலாற் பொருள் தெரிய வேண்டிய பல சொற்களை இரண்டாங் கூறுகவும், கி. மு. நான்காம் நூற்றுண்டிலமைந்த ஆருஷப் பிரயோகங்களை மூன்றுங் கூறுகவும் அமைத்துள்ளேன். ஔபநிஷதம் என்ற அதிகரணம், வஞ்சித்தல் என்ற பிரகரணத்தை வியப்புண்டாக்கல், மருந்துமந்திரப்பிரயோகம் என இரண்டு பிரகரணங்களாகப் பிரித்து அவற்றுள், முதற் பிரகரணத்தில் ஒரு மாதம் உண்ணுமைக்கு அநுகூலமாவனவும் பசிப் பிணியை நீக்குதற்குரியனவுமாகிய யோகங்களும் இரண்டாம் அத்தியாயத்தில் இருளில் உருவமறியும் உபாயமும் நிழல் அமையா மற் செல்லுதற்குரிய உபாயமும் ஆகிய ஐந்து யோகங்களும் பறவை விலங்கு முதலியவைகளின் மறைவும் ஆகிய வியப்பை உண்டு பண்ணத்தக்க பல யோகங்களும் கூறப்பட்டுள்ளன. அவைகள் பயனுடையவாதல் அநுட்டானத்தாற் காணத்தக்கது. அநுட்டான மோ வைத்திய முறைகள் மந்திரப் பிரயோகங்கள் ஆகிய இவற்றின் உண்மையறிவைப்பற்றி நிகழ்வதாம். அவ்வுண்மை அறிவும் அநுட் டானத்திற் சிறந்த ஆசிரியர்களின் உபதேசவயத்ததாகும். ஆதலின் இதன் பயன்பெற விரும்புவோரனைவரும் அத்தகைய ஆசிரியர் உப தேசமொன்றையே நாடவேண்டும் என்பது புலனும். "மழை விரும்புவார் "காரீரீ" என்ற வேள்வியை வேட்டல் வேண்டும் என்ற சுருதி வாக்கியத்தில் உரையாசிரியர் எங்ஙனம் பொருள் கூறுமளவில் முயன்றனரோ அங்ஙனமேயன்றி அதன் பயன் எய்துமளவில் யாம் உரியமல்லேம். இதனைக் கருதியே இப்பிரகரணத்தின் இறுதி யில் "இவற்றிற்கு இயன்றவரை பொருள் கூறியுள்ளேம்; பயன் பெறும் முறை அவ்வம்மரபு பற்றியதாகும் என வரைந்தோம்.

பொறியடக்கம் என்னும் பிரகரணத்தில் இராவணனும் துரி யோதனனும் உதாரணமாக எடுத்துக்காட்டப்பட்டனர். புருடவி தனம் என்னும் பிரகரணத்தில் சூதாடுவோரைக் குறிக்குமிடத்துத் துரியோதனனும் சயச்சேனனும் குறிப்பிடப்பட்டனர். அவரால் தோல்வியடைந்த நளனும் தருமபுத்திரனும் குறிக்கப்பட்டுள்ளார்.

ஆதலின் மகாபாரதத்தைக் கௌடலியர் மேற்கோளாகக் கொண்டவர் என்பது விளங்கும். பொறியடக்கத்திற் கூறப்பட்ட தம்போற்பவன், கார்த்த வீரியார்ச்சுனன், வாதாபி, விருஷ்ணி இவர்களின் சரிதங்கள் மகாபாரதத்திலடங்கின வென்பது வெளிப்படை. ஆயின் தாண்டக்கியன், கராளன் இவர்கள் வரலாறு யாண்டுளது என்பது புலனாகவில்லை. இங்ஙனமே ஐந்தாம் அதிகரணம் ஒழுக்கவரையறை என்னும் பிரகரணத்தில் குறிக்கப்பட்ட காத்தியாயனர், கணிங்கர் முதலியவர்களின் வரலாறு எனக்குக் கிடைத்த உரையின் வாயிலாக அறிந்து கூறப்பட்டது. இவ் வரலாறு எந்த முதனூலில் உள்ளதென்று அறியக்கூடவில்லை.

முதற் பகுதியின் முகவுரையில் முதலாசிரியரின் பெயர்க் குறிப்பில் அரசிளங்குமரரைக் காத்தல் எனும் பிரகரணத்தில் குறிக்கப்பட்ட ஆம்பீயர் என்னும் பெயர் எழுதுவோன் தவற்றினால் விடப்பட்டது. அதனால் உரையினும் வெளியாகவில்லை. அப்பொருளை ஈண்டு எடுத்து விளக்குவாம். அம்ப :— நீர் ; அதன் புதல்வன் என்னும் பொருள் தரும் இலக்கண அமைதியில் ஆம்பி :— அதாவது நீருருவமான கங்கையின் புதல்வன் பீஷ்மர் என்றும், அவரது வழியினர் ஆம்பீயர் என்றும் அறிதல் வேண்டும். "கௌணபதந்தர்" என்றே குறிக்காது இங்ஙனம் குறித்தமை அவர்களின் மதவேறுபாட்டையும் ஒருவித சித்திரத்தையும் குறித்தற்காம் எனக்கொள்க.

பாகுதந்தீ புத்திரன் — இந்திரன், பிசுநன் — நாரதன், வாதவியாதி — உத்தவர், என உரைப் புத்தகங்களில் இருந்தவாறு குறிப்பிட்டிருப்பினும் பொருட்பொருத்தமும் அமைந்துள்ளன. பகுதந்தன் —யானைக்கு இயற்கையாக அமைந்துள்ள இரண்டு தந்தங்களையன்றி நான்கு தந்தங்களை உடைமையால் இப்பெயர் ஐராவதத்தைக் குறிக்கும். அதனைச் சார்ந்தவள் என்ற இலக்கண முறையால்—உடைமை, உடையான் சம்பந்தம்பற்றி "பாகு தந்தீ" என்பது அதிதியைக் குறிக்கும். அன்னவள் புதல்வன் எனவே இந்திரன் எனப் பொருள் பெறும்.

பிசுநன்—நாரதன் ; இயற்கையிற் கலகஞ்செய்ய ஆர்வமுள்ளவனாக விருத்தலின் இப்பெயர் உலகறிந்ததே ; வாதவியாதி—உத்தவர் வாயு சம்பந்தமான பிணியுடையராகலின் இப்பெயர் அமைந்தது. இதுபற்றியே மகாகவியும் சிசுபாலவதம் இரண்டாம் சருக்கத்தில் இவரைப் பவன வியாதி என்று கூறிப் போந்தனர்.

கௌடலியர் இப்பொருணூலில் துரோணர் முதலியோரின் பெயரைக் குறிப்பதால் அவர்கள் பொருணூலியற்றியுள்ளார் என்பது போதரும். இச்செய்தி இரண்டாம் பகுதியின் முன்னுரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. துரோணர் முதலியோர் அரசியன் முறையிற் பெரிதும் பயின்றவரும் மிகவும் பெருந்திறலமைந்தவருமாகலின் அவராற் சில நூல்கள் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பதும் அந்நூல்கள் கௌடலியர் காலத்தில் இருந்து, பிறகு இறந்துபட்டன என்பதும் ஊகித்துணரக் கிடக்கின்றன. இங்ஙனமே பாணினி காலத்திருந்த கார்க்கிய வியாகரணம் பின்னர் இறந்ததும் இதனை யொக்கும். கௌடலியராற் பெரிதும் எடுத்தாளப்பட்ட பார்கற்பத்தியம் வைசாலாக்கம் என்ற நூல்கள் யாக்ஞ்யவல்கிய ஸ்மிருதியின் உரையாசிரியரான விச்சுவரூபர் காலத்தில் இருந்தனவென்று முதற்பகுதியின் முன்னுரையிற் கூறினோம். அங்ஙனமே அவர்களுடன் எடுத்தாளப்பட்ட துரோணர் முதலியோர் நூல்களும் இருந்தனவென்றே அநுமானித்தல் வேண்டும்.

இரண்டாம் பகுதியின் முன்னுரையில் லாகூர்ப்புத்தகத்தின் பரிசோதகரான விண்டரனிட்ஸன் கூறிய சிலவற்றை ஆராய்ந்தோம். இனி கல்கத்தா 'ரிவ்யூ' பத்திரிகையில் வெளிவந்ததும் கௌடலியப் பொருணூல் பற்றியதுமாகிய அவரது விரிவுரையிற் கண்ட சில குற்றங்களை ஈண்டு ஆராய்வாம்.

அவர் ஆராய்தற்கு நிலைபெறாத சில யுத்திகளைக் கொண்டு பொருளை நிலைநாட்டப் பெரிதும் முயன்று கூறுகின்றனர். அவற்றுள் மூன்று செய்திகளே பதிலிறுக்கத்தக்கன எனக் கருதுகிறோம். ஒன்று கௌடலியர் சந்திரகுப்தனது காலத்தவரில்லை என்பதை மேகாஸ்தநீஸர் உடன்படாமை கொண்டு கூறுகின்றார். இரண்டு—அரிய பலவேறு நுணுகிய பொருள்களை ஒரே நூலாசிரியர் உணர்ந்திருப்பது அரிது எனக் கூறுகிறார். மூன்று—இப்பொருணூலிற் குற்றங்கள் பல அமைந்துள்ளன என்றும் வெளியிடுகின்றனர். முதலிரண்டு செய்திகளுக்கும் இரண்டாம் பகுதியின் முன்னுரையில் சாணக்கியர், சந்திரகுப்தன் மந்திரியென்றும் அவரே இப்பொருணூலியற்றியுள்ளார் என்றும் பல் பொருளுணரும் பேராற்றல் படைத்தவர் என்றும் கூறி மறுத்தோம். கௌடலியருக்கும் மேகாஸ்தநீசருக்கும் உள்ள வேறுபாடுகளைப் பற்றிப் பேசுவதும் முறையில்லை. கௌடலியர் விதிவிலக்குகளை மாத்திரம் எடுத்துக்காட்ட முன்வந்தவர். மேகாஸ்தநீசர் பிறநாட்டிலிருந்து வழிப்போக்காக வந்தவர் நேரிற்கண்ட விரும்பத்தக்கது, வெறுக்கத் தக்கது நடு

நிலையிலிருக்கத் தக்கது என்னும் இவைகளில் முறையே புகழ்தல், இகழ்தல், வாளாவிருத்தல் என்ற இம் முறையை அநுட்டிப்பவராதலின் முற்றிலும் வேறுபட்ட இவர்களைக் குறித்து எவ்வகையானும் பேசுதல் தக்கதன்று.

மூன்றாவது ஆராயப்படுகின்றது :—இப்பொருணூலில் ஒற்றரை அமைத்தல் முதலியவைகளால் பகைவரான சிற்றரசர்கள் அமைச்சர்கள் தன் மைந்தர்கள் இவர்களை வஞ்சித்தல் அடக்குதல் கொலை முதலியனவும் சில வமயங்களில் மக்களிடமிருந்து பொருள் கோடற்குரிய பல வுபாயங்களும், யோகவிருத்தமென்னும் அதிகரணத்து ஐந்து ஆறும் அத்தியாயங்களில் மந்திரிகள் அரசனை வயப்படுத்தும் உபாயமும், அரசன் யாரினும் வல்லானாக விருக்கப் பல வுபாயங்களும் கூறப்பட்டுள்ளன. இவை மிகவும் தீய செயல்கள் ஆகுமென்றும் இப்பொருணூலியற்றும் பெருந்தகையாளர்க்கு இஃதறநெறி ஆகாதென்றும் விண்டரனிட்ஸன் கருதுகின்றார்.

புத்த முனிவரேனும் பொருணூலியற்ற முற்படுவாராயின் பகைவரை வெல்லும் இத்தகை உபாயங்களை விலக்கமுடியாமையால் வெளிப்படுத்தும் இயல்பினராவார். சிறந்த நற்குணமுள்ளவனும் வலியற்றவனும் உதவியற்றவனும் ஆகிய அரசன் மிக்க வலியுள்ள அரசனால் கலக்கமுறும்பொழுது அவன் தனது அரசுரிமையைக் காவல் புரிதற்கு உபாயத்தைத் தேடல் வேண்டும். அத்தருணம் அவன் ஆசிரியர் “உனதரசைப் பகைவரிடம் கொடுத்து நீ வானப்பிரத்தன், சந்நியாசி இவர்களின் நெறியினை மேற்கொண்டொழுகலாம்” என்று உபதேசிப்பது நியாயமாகுமா? இங்ஙனம் கூறுவது பொருந்தாதாகலின் எவ்வாற்றானும் அறநெறி வழுவினும் சரீரத்தையும் நாட்டையும் காத்தல் வேண்டும் என்று இத்தகைய உபாயங்களைக் கூறவேண்டும். அங்ஙனம் கூறின் அவ்வுபாயங்களால் அரசாட்சியை நிலை நாட்டிக் கொண்டு கிணறு தோண்டுகிறவன் அதிலிருந்து ஊறும் நீரினால் தன்மேலுள்ள சேற்றைக் கழுவுவது போல செங்கோல் செலுத்தும் புண்ணியத்தால் வஞ்சனை செய்த பாவம் போம் என்று உபதேசிக்கும் ஆசிரியர்க்கு அறநெறித்தவறென்பது உண்டாகுமா? ஆதலின் தீயவழிச் செல்வோரைக் கெட்டவுபாயத்தால் அடக்க வேண்டும் என்று முன்னோர்கள் கூறியுள்ளார்கள். இத் தீய வுபாயங்களைத் தீநெறிச் செல்வோரிடத்தன்றி நல்லோரிடத்து உபயோகிக்கலாகாதென்று இந்நூலாசிரியர் கருதுகிறார்.

மிக்க பொருட் சேர்க்கையால் நடைபெறவிருக்கும் அரசியல் அஃதில்லாவிடில் பாழ்படும். அத்தகைய தீங்கு நேராவண்ணம் காத்தற்கு அப்பொருள் இன்றியமையாததாகும். பொருளீட்டுதற் குரிய வழிகள் பலவற்றுள் குடிகளின் மனம் வருந்தாவண்ணம் அவரிடமிருந்து பொருளீட்டுதல் வேண்டும் என்றும் பொருட் செலவு மிகைபடச் செய்யவேண்டிய அமயம் நேரில் அவர்கள் மனம் வாடாமல் மறைவான சில உபாயங்களால் பொருளீட்டல் வேண்டும் என்றும் கூறினர். அம்மட்டில் கௌடலியரின் அறநிலை மாறிய தென்னை ? அங்ஙனம் ஈட்டப்பட்ட பொருளால் அரசியல், இனிது நடைபெறும். அதனல் புண்ணியம் மேன்மையுறும். ஆதலின், வஞ் சனை செய்த பெரும் பாவமும் அறவே ஒழியும்.

" அரசரார்வார் பிறரை வஞ்சித்தல் என்னும் கல்வியைக் கற்ப வர் " என ஆன்றோர் கூறுவர் என்று கவிதிலகரான காளிதாசரும் சாகுந்தலத்தில் கூறியதும் ஈண்டு உணரற்பாலது.

மந்திரிகள் அரசர்களை வயப்படுத்தும் உபாயமும் அரசனது ஆற்றலைத் தம்வயப்படுத்தும் உபாயமும் கூறப்பட்டிருக்கின்றன என விண்டரனிட்சன் கூறுகிருர். அது முற்றிலும் முரண்பட்டது. அவ்வதிகரணத்தின் ஐந்தாம் அத்தியாயத்தில் ஒரு தொழிலில் நியமனம் செய்யப்பட்டவர் அத்தொழிலினை ஒழுங்குபெறச் செய்தல் வேண்டும் என்றும், அரசற்குச் சில தீங்குகள் நேரும் சமயத்தில் அவைகளை அவர்கள் எவ்வாற்ருனும் விலக்க முற்படல்வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளன. ஆரும் அத்தியாயத்தில் " தந்தையை யிழந்த அரசிளங் குமரனைக் கொன்று, அவனது அரசை அமைச்சன் கைப்பற்றவேண்டும் என்ற பாரத்துவாசமதத்தைப் பல யுக்திகளால் மறுத்துத் தந்தையின் இடத்து மகனை அமைத்து முடிசூட்டி அவனுக் குரிய நன்மைகளையே அமைச்சர் எவ்வாற்ருனும் செய்து வரல் வேண்டும் என்று விளக்கப்பட்டுள்ளது.

இவ் வத்தியாயங்களின் பொருள் இங்ஙனம் நன்கு புலனுகவும் விண்டரனிட்சனுக்கு மாறுபட்ட பொருள் எங்ஙனம் கிடைத்ததோ அறிகிலோம்.

ஆதலின் மறச் செயல்களை இப்பொருனூல் தெரிவிக்கின்றமை நீங்கியதுடன் அரசியன்முறை அநுட்டித்தலாகிய அறப் பொருளு ணர்த்தும் தன்மையும் பெறப்பட்டது. எனவே இப் பொருள்நூல் அறநூலையும் ஒக்கும் என்பது புலனும். உலகாயத நூலும் இப் பொருனூலும் ஒக்கும் என்று முன்னவர் கூறியுள்ளார். உலகாயதம்

என்ற சொற்கு நாத்திகம் என்ற பொருள் அவர் கருத்திற்கு இயையுமாயின் அக் கூற்று இதனாற் புறக்கணிக்கப்பட்டதாம். ஆன்வீக்ஷகீ என்றதிலடங்கிய தர்க்க சாஸ்திரம் என்ற பொருள் இச் சொற்கு அவர் கொண்டதாயின் அது எல்லாச் சாத்திரங்கட்கும் உதவியாயிருத்தலின் இப்பொருணூலுக்கும் பொருந்தும்.

மேற்கூறிய ஐயங்கட்கு விடையளித்தற்கே இந்நூலிறுதியில் இப்பொருணூல் அறம் பொருளின்பங்களை நடைபெறச் செய்கின்றது; காக்கின்றது என்று கூறப்பட்டுள்ள சுலோகத்தின் உரையில் யான் வரைந்தவை இங்குணர்தற்பாலன.

ஒற்றரை அமைத்தன் முதலியவற்றால் பலவிதமான பிற வஞ்சனைகளைச் செய்தல், இரகசியக் கொலைகள், பிறர்க்குத் தீங்கிழைத்தன் முதலிய கூறும் இந்நூல் யாங்ஙனம் அறமுணர்த்திக் காக்கும் நூலாகும்? எனப் பூருவபக்கம் எடுத்துக்கொண்டு இதற்குச் சித்தாந்த முகமாக குடிகளைக் காத்தல் அரசர்க்குரிய கடமை. அதனை அரசன் அறநெறியினின்று பகைவரை வெல்லும் விருப்புள்ளவனாகக் காத்தல் வேண்டும். சிற்றரசர் அறத்தாறு செல்பவர் எனினும் இராகத் துவேஷாதிகளால் உண்டாகும் பொறாமை பொருளாசை இவை வயப்பட்டுப் பல தீய உபாயங்களால் அவ்வரசனைக் கோற முயல்கின்றனர். இங்ஙனம் நிகழ்வது அரசியன்னெறிக்கியல்பாகலின், ஓர் அரசன் ஏனையோராற் றுன்புறுத்தப்படாதவனாகவும், பிறரைத் துன்புறுத்தாதவனாகவும் பிறர்களாற் செய்யப்பட்ட தீங்குகளை விலக்கிக் கொள்ளாதவனாகவும் இருப்பது யாங்ஙனம் அமையும்? பிறர் செய்யும் கொடுமைகளை விலக்காவிடின் தனது அரசு நிலைப்பது அரிதன்றோ! ஆதலின் பிறர் செய்வினைகளைக் களைதற் பொருட்டே அரசன் இவ்வுபாயங்களை அறிதல் வேண்டும் என்றும், அதன் மூலம் நாடு நலமெய்த அறம் செழித்தோங்கும் என்றும், இப்பொருணூல் இயற்றப்பட்டிருப்பதால் "இந்நூல் அறம் பொருள் இன்பம் இவற்றைக் காக்கும்" எனக் கூறினர் என்க.

எக்காரியம் செய்யினும் அதனை எண்ணித்துணியும் ஒருவன் யாவற்றினும் சிறந்த பொருள்களை உணர்த்தும் இப்பொருணூலை உணர்தற்கும் அதன் வழி ஒழுகுவதற்கும் இயலாத நிலையில் யானியற்றுவேன் என்று கருதவும் முற்படான். இந்நிலையில் இப்பொருணூல் பொருளறிவும் அவ்வழி ஒழுக்கமும் அற்ற ஒரு பண்டிதரால் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்று விண்டரனிட்ஸன் எவ்வாறு கூறினரோ அறியோம்! இந்நூலிற் பல பொருள்களைத் திரட்டிக்

கூறியிருத்தலின் அங்ஙனம் கூறுவது பண்டிதர்க்கே அமையுமன்றி அரசியனடத்துவோர்க் கமையாது என்றும் கூறுகின்ஞர். நூல்களிற் பல பொருள்களைத் திரட்டியமைத்தல் அவற்றின்படி ஒழுகாமைக்குக் காரணமாயின் பிரமசூத்திரம், மீமாஞ்சை வியாகரணம் இவைகளை முறையே இயற்றிய வியாசர், சைமினி, பாணிநி இவர்களும் தாமியற்றியவாறு ஒழுக்கமில்லாதவர் என்றே கொள்ள நேரும். மேலும் சீர்பெற அரசியற்றும் தன்மையும், சொல்லணிதுலங்க நூலியற்றுந் தன்மையும் முரணுன குணங்களாகா வென்பதும், இவ்விரண்டும் ஓரிடத்தமையும் என்பதும் இவராற் கருதப்படவில்லை.

மற்ருெரு செய்தி ஈண்டுக் குறித்தற்பாலது. "இப்பொருணூலிற் பல்வகைப் பொருள்களின் பெயர்களும் பற்பல நாடுகளின் பெயர்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவை யாவும் சந்திரகுப்தனது காலத்தில் இப்பரதகண்டத்தில் இருந்தனவாக அறியக்கூடவில்லை என வரைந்து இதனை இப்பொருணூல் சாணக்கியரால் இயற்றப்படவில்லை என்பதற்குச் சான்ருகக் காட்டி ஒரு பண்டிதர் எனக்கு ஒரு முடங்கல் விடுத்தார்; அதனை ஈண்டுச் சிறிது ஆராய்வாம்.

இந்நூலிற் காணப்படும் பல பொருட் பெயரும் பல நாடுகளின் பெயரும் சந்திரகுப்தன் காலத்திலிருந்த பரத கண்டத்து மக்களால் அறியப் படாதவை என இவர் எங்ஙனம் அறிந்தார். காட்சியளவையாலறிந்தோம் எனக் கூற இயலாது; அவ்வளவையை நிகர்த்த ஆப்தவாக்கியத்திஞலாவது, அல்லது முதலாசிரியன் உரைகளாலாவது எழுதியிருப்பரோ எனின் அங்ஙனம் கூற ஒரு சிறிதும் இடனில்லை. ஒன்றை மற்ருென்ருகக் கருதும் மதியினது இயல்புபற்றி நிகழும் ஊகத்திஞல் இங்ஙனம் கூறலாமெனின் ஊகமும் மிக வலிய அளவைகளை முரணு திருப்பிற் கொள்ளத் தக்கது. இன்றேற்றள்ளத் தக்கது. கொள்ளத்தக்க அவ்வூகந்தானும், அதனை விலக்கத்தக்க பிற ஊகந்தோன்று மளவேயன்றித் தனித்து நிலைத்ததாகாது. இந்நூலின் முதலிடைகளிலும் சந்திரகுப்தன் அரசியலை நிலைநாட்டியவரும் விஷ்ணுகுப்தன் சாணக்கியன் எனப் பெயர் வாய்ந்தவரும் ஆகிய கௌடலியரே இப்பொருணூலியற்றியுள்ளார் என்பதும் தெள்ளிதின் விளக்கப்பட்டது. ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் இருந்தமையின் நம்மினும் இப்பொருணூலுக்கு நெருங்கிய காலத்தவரும் இதிலமைந்த பொருள்களையெல்லாம் முற்றும் உணர்ந்தவருமாகிய காமந்தகரும் தமது நீதிசாரத்தில் இவரையும் இவரது நூலையும் மிகைபடப் புகழ்ந்துள்ளார்.

இந்நூலிற் கௌடலியர்பெயர் அமைந்திருப்பதும் காமந்தகன் புகழ்ந்திருப்பதுமாகிய இவ்விரண்டும் கண்கூடாக விளங்குகின்றன, இவ்வளவைகளை ஆராய்தற்கு நிலைக்காத நம் ஊகம் புறக்கணிக்கும் எனக் கூறுவது,

"அலைகதிர் ஞாயிற்றை இருளும் அடக்கும்"

என்பதை ஒக்குமென்பதே எனது துணிபு. ஆகலின் இவ்விரண்டு அளவைகளானும் முற்கூறியுள்ள பூருவ பக்கங்கள் யாவும் தள்ளத் தக்கன. இந்நூலிற் கண்ட பொருளும் நாடுகளின் பெயர்களும் சந்திரகுப்தன் காலத்திலிருந்த இப் பரதகண்டத்து உதித்தவர்களால் அறியப்பட்டனவென்பதும் கௌடலியரால் இந்நூல் இயற்றப்பட்டதென்பதும் இனிது புலனும்.

# பதிப்புரை

---

வித்துவான், சிரோமணி, P. S. இராமாநுஜாச்சாரி,
தமிழாராய்ச்சித்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

'கௌடலீயம் பொருணூல்' என்னும் இம்மொழிபெயர்ப்பு நூலுக்கு முதனூலாக உள்ளது 'கௌடலீய அர்த்த சாஸ்திரம்' என்ற வடமொழி நூலாகும். இந்நூல், அதிகரணம் பிரகரணம் அத்தியாயம் என்ற மூவகைப் பிரிவினைத் தன்னுட் கொண்டதாகத் திகழ்கின்றது. அதிகாரமெனத் தமிழில் கூறப்படுவதுபோல், அதிகரணம் என்ற இவ் வடமொழிப் பெயரும், பல உட்பிரிவுகளைத் தன்னகத்தேகொண்ட ஒரு பெரும் பிரிவினை உணர்த்துவதாகும். இந்நூலில் நூற்றெண்பது சூத்திரங்கள் உள்ளன. இச்சூத்திரங்களைப் பாடிய (பாஷ்ய) முறையில் விரித்து விளக்கும் ஒவ்வொரு சூத்திரப் பொருளே ஒவ்வொரு பிரகரணப் பொருளாக அமைந்துள்ளது. ஒரு பிரகரணத்தின் பகுதியையோ அன்றி, பல பிரகரணங்களின் தொகுதியையோ விரிவாக விளக்கிக்கூறும் பகுதியை அத்தியாயம் என வழங்குவர் முதனூலாசிரியர். சூத்திரமெனப்படும் பிரகரணங்கள் நூற்றெண்பதை விளக்கிக்கூறுவதாக நூற்றைம்பது அத்தியாயங்கள் இந்நூலில் அமையப் பெற்றுள்ளன. பிரகரணம் எனப்படும் ஒரு சூத்திரத்தின் பாடியமாகவுள்ள பொருள் பல கூறுபாடுகளைத் தன்னகத்தே கொண்டிருப்பின், அப்பொருளை அக் கூறுபாடுகளுக் கேற்ற முறையில் பல அத்தியாயங்களால் விளக்கிக் கூறுகின்றார். அதே நிலையில் பல பிரகரணங்களிற் கூறப்படும் பொருள்கள் தம்முள் நெருங்கிய தொடர்புடையவாயின், அப்பொருள்களை ஒரே அத்தியாயத்தாலும் சிலவிடங்களில் கூறுகிறார். ஆகவே நூற்றெண்பது சூத்திரங்களுக்குப் பாடியமாக அமைந்துள்ள (நூற்றெண்பது பிரகரணங்களைத் தன்பாற் கொண்ட) நூற்றைம்பது அத்தியாயங்களாம் உட்பிரிவினையுடைய பதினைந்து அதிகரணங்களாகிற பெரும் பிரிவினைக் கொண்டது இம் முதனூலாகும்.

மேற்கூறப்பட்ட பதினைந்து அதிகரணங்களின் பெயர்களையும், அவ்வதிகரணங்களில் விளக்கப்படும் பிரகரணங்களின் பெயர்களையும் தொகுத்துக் கூறுவதாக இந்நூலின் முதல் அத்தியாயம் அமைந்துளது. எனவே, நூல் நுதலிய பொருளனைத்தையும் தொகுத்து

விளக்கிக் கூறும் பதிகமாக இவ்வத்தியாயம் கூறப்பட்டிருக்கிறது எனப் பகர்தல் ஏற்புடையதாகும்.

ஒன்று முதல் ஐந்து வரையிலுள்ள ஐந்து அதிகரணங்களை ஒரு பகுதியாகவும், ஆறு முதல் பதின்மூன்று வரையிலுள்ள எட்டு அதிகரணங்களை ஒரு பகுதியாகவும், பதினான்காம் அதிகரணத்தை ஒருபகுதியாகவும் பதினைந்தாம் அதிகரணத்தை ஒரு பகுதியாகவும் கொள்ளும் இம்முறையால் மேற்கூறிய பதினைந்து அதிகரணங்களை யும் நான்கு கூறுகப் பிரிக்கலாம். இந்நான்கனுள் முதற்பகுதியாய் அமைந்த ஐந்து அதிகரணங்களில், 'பயிற்சி பகர்தல்' என்ற அதிகரணம் முதலாவதாகும். கல்விகற்றலைப்பற்றிக் கூறுதல் என்பது இதன்பொருள். காவற்சாகாடுகைத்தற்றொழிலை மேற் கொண்ட அரசன், கல்வியறிவு உலகியலறிவு முதலியவற்றைப் பெற்றவனுதல் வேண்டும். இன்றேல் உற்ருர் உறவினருடன் அவன் அழிவெய்தி, நாட்டு மக்களையும் கேடுறச் செய்வான். இதுபற்றியே திருவள்ளுவரும் இறை மாட்சியை அடுத்து, 'கல்வி' என்ற அதி கரத்தையமைத்து, அரசனுக்குக் கல்விப் பயிற்சியின் இன்றியமையா மையை வற்புறுத்தியுள்ளார். இவ்வதிகரணத்தில், அரசன் பயில வேண்டிய கல்வி வகைகள் அவற்றின் இயல்புகள், அக்கல்வியிற் சிறந்தோரைத் துணையாகக் கோடல், கேள்வியறிவு முதலியவற்றின் சிறப்பு, வருணச்சிரம தருமங்கள், அத்தருமங்களின் வழீஇயினரைத் தண்ட முதலியவற்றல் ஒறுத்து நன்னெறியுய்த்தல், பொறியடக்கத் தை மேற்கோளாத தாண்டக்கியன், இராவணன், துரியோதனன் முதலியவர்களை எடுத்துக்காட்டு முகமாக, பொறியடக்கத்தை அறிவின் பயனுக மேற்கொள்ளுதலை வற்புறுத்துதல், குடிமக்களின் தூய்மை தூய்மையின்மைகளை ஒற்றர்வாயிலாகத் தெளிந்து கொள்ளுதல், அமைச்சர் முதலியோருடன் செயன் முறைகளைப் பற்றிச் சூழ்ந்தறியும் முறை, நாளைப் பல கூருக்கி, ஒவ்வொரு கூற்றிலும் அரசன் செய்யவேண்டிய கடமைகள், மனைவி மக்கள் முதலியோரால் தனக்கு நேரும் கேடுகளைப் போக்கிக்கொள்ளுதற் குரிய விதிமுறை, உணவுப்பொருளில் நஞ்சு கலக்கப்பெற்றிருத்தலைக் கண்டுகொள்ளுதற்குரிய நெறிகள், முதலிய செய்திகள் விளக்கப்படு கின்றன. இவ்வதிகரணம் 18 பிரகரணங்களை விரித்துரைக்கும் 20 அத்தியாயங்களைத் தன்பாற் கொண்டுள்ளது. இந்நூலின் முதலத்தியாயம் அதிகரணப் பிரகரணங்களின் பெயர்க்குறிப்பாக அமைந்துளதால் அதைச் சேர்த்து 21 அத்தியாயங்களுடன் முதலதி கரணம் முடிவுறுகிறது.

முதலதிகரணத்திற் கூறிய கல்வி கேள்வி முதலியவற்றைப் பெற்றுத் திகழும் அரசன், தன்னாட்டுக்கு வேண்டிய காரியங்களை, அவ்வத் தொழிற்றலைவர்மூலமாகவே நடத்தவேண்டியவனாகலின், அரசியல்வினைபுரியும் தலைமையதிகாரிகளாக யார் யார் நியமிக்கப் பெற வேண்டியவர் என்பதையும், அவர்களுடைய செயன்முறைகள் எவை என்பதையும் விளக்குதற்குத் தொழிற்றலைவர்செயன்முறை என்ற அதிகரணம் இரண்டாவதாக அமைந்துள்ளது.

நாட்டையமைக்குமுறை, உழவர் உழவுத்தொழில்களைக் கண் காணித்தற்குரிய விதிகள், மனைவிமக்களைப் போற்றாதவர்க்குரிய தண்ட வகைகள், துறவு பூணுதற்குரியாரை விளக்குதல், நாட்டை விட்டு வெளியேற்றுதற்குரியாரைக் களைந்து நாட்டினைக் காக்கும் முறை, வேளாண்மைத் தொழிற்குப் பயன்படாத நிலங்களைப் பல் வேறு வகையிற் பயன்படுத்தல், நாட்டிற்கு வேண்டிய அரண்வகை கள், இராசவீதி முதலியவற்றின் அமைப்பு அகலம் முதலியன, நகரத்தெய்வம், கொற்றவை, திருமால் முதலிய தெய்வங்களின் திருக்கோயில்களின் அமைப்புமுறை, சுடலை முதலியன அமைய வேண்டிய இடம், உணவுப் பொருளைச் சேமித்துவைத்துப் பயன் படுத்தல், நாட்டின் வருவாய் செலவுகளைச் சீர்செய்தல், அரசியல் வினையாளர் முதலியோரையாளுதற்றிறன், முத்து பவழம் முதலியன தோன்றுமிடம், அவற்றின் உயர்வு தாழ்வுகளைக் காணும் வழி, ஆகரத்தொழிலைப் போற்றுமுறை, நால்வகைப் படைகளில் குதிரை யானை முதலியவற்றிற்குரிய உணவுவகை அளவு முதலியன. படைத் தலைவர்களின் தொழின்முறை என்பனவாதிய செய்திகள் 38 பிர கரணங்களை விரிக்கும் 36 அத்தியாயங்களால் இவ்வதிகரணத்தில் கூறப்படுகின்றன.

கல்வித்துறைக் கண்காணிப்பு, அரசியலுறுப்புக்கள் முதலிய வற்றையுடைய அரசன் குடிமக்களைத் தீய நெறியினின்றும் விலக்கி நன்னெறியிலுய்த்தலைச் செய்யவேண்டிய கடப்பாடுடையனாகலின், 'அறநிலையாட்சி' என்ற அதிகரணம் மூன்றாவதாக அமைந்துள்ளது. அறநிலை = தத்தமக்குரிய அறத்தின் வழி நிற்றல். ஆட்சியாவது, அங்ஙனம் அந்நெறியில் நின்று, உலகியல் வழக்குகளைத் தீர்க்கும் அரசியலதிகாரிகளின் ஆளுதற்றன்மையாம். எற்று நடத்தற்குரிய வழக்குகள், ஏற்றற்குத் தகுதியற்றவை, வழக்குக்கு அடிப்படையாக வுள்ள எண்வகை மணம் தாயபாகம் முதலியவற்றினியல்புகள், பணியாளர் அடிமை முதலியவரை நடத்தவேண்டிய முறை, முறை பிறழ்ந்தார்க்குரிய தண்டவகைகள் முதலியன 19 பிரகரணங்களைக்

கொண்ட 20 அத்தியாயங்களால் இம்மூன்றும் அதிகரணம் விளக்குகிறது.

'சிறுபகை களைதல்' என்பது நான்காவது அதிகரணமாகும். இதனை 'கண்டகசோதனம்' என முதனூல் கூறும். கண்டகம் என்பது 'முள்' என்றும் சோதனம் என்பது அதனை ஆய்ந்து நீக்கித் தூய்மை செய்தல் என்றும் பொருள்படும். நம் உடற் பகுதியில் முள் தைத்துவிடின், களையப்படாத அம்முள் நாளடைவில் உடலை ஊறு படுத்துவதுபோன்று, நாட்டிலுள்ள தச்சர் முதலிய சிற்பிகளாலும், அரசியலதிகாரிகளாலும் குடிமக்களுக்கு நேரும் இடரினைக்களையாது விடின், நாட்டிற்கே கேடு நேர்ந்து, அரசியலறம் சிதைந்தழியுமாகலின், அத்தீங்குகளையகற்றுதற்குரிய விதிமுறைகளை விளக்குதற்கு இவ்வதிகரணம் தொடங்கப்படுகிறது. கொல்லர், தட்டார், வணிகர், அரசியலதிகாரி முதலியவர்களால் குடிமக்களுக்கு நேரும் தீங்குகள், அவற்றைக் களைதற்குரிய உபாயம், தீ, வறுமை முதலிய தெய்வத்தாலான பேரச்சங்களின் வகைகள், அவற்றைத் தடுக்குமுறை, கள்வரைக் கண்டுபிடித்தற்குரிய உபாய வகைகள், நஞ்சு, கொலை, தூக்கிடுதல் முதலியனகாரணமாக விரைவிலிறந்தாரைப் பற்றிய ஆராய்ச்சி முதலிய செய்திகள் 13 பிரகரணங்களையுடைய 13 அத்தியாயங்களால் இந்நான்காவது அதிகரணத்திற் கூறப்படுகின்றன.

அரசனுக்கும் நாட்டுமக்களுக்கும் இடர்விளைக்கும் உட்பகைவராயுள்ள சிற்றரசர் அரசியலதிகாரிகள் முதலியவரை, ஒற்றரைக் கொண்டு உணர்ந்த அரசன், அவர்களை வஞ்சக முறையால் மறைந்து ஒறுத்தடக்குவது என்னும் பொருள்பயக்கும் 'வஞ்சித்தொறுத்தல்' என்பது ஐந்தாவது அதிகரணமாகும்.

பொருளைக்கொண்டே நீக்குதற்குரிய துன்பத்தை அரசன் எய்தினனாக, அவனுக்குப் பொருள்நிலை குறைந்தநிலையில் குடிமக்களுக்கு எவ்வகையினும் வெறுப்பு நேராத முறையில் அவர்களிடமிருந்து பொருளையீட்டுதற்குரிய வியக்கத்தக்க பலவகை உபாயங்கள், நற்குண நற்செயல்களையுடைய அமைச்சர் முதலிய துணைவரைப் போற்றும் முறை, அவ்வமைச்சர் முதலியோர் அரசரிடம் மேற்கொள்ளவேண்டிய ஒழுங்குகள், ஏதேனுமொரு காரணம்பற்றி அமைச்சர் முதலியோர்க்கு அரசுரிமை வந்தெய்தின், அதை அரசன் மகனுக்கே உரியதாக்கல் என்ற தனித்தலைமையரசு முதலிய பொருள்கள், இவ்வதிகரணத்தில் தெள்ளிதிற் புலப்படுத்தப்படுகின்றன.

மேற்கூறியவாறு முதற்கூறாக அமைந்த இவ்வைந்து அதிகரணங்களால், அரசன் தன்னாட்டின் ஏமநலங்களைச் சூழ்ந்தறிந்து கையாள்

வேண்டிய விதிமுறைகள் அறிவுறுத்தப்படுகின்றன. எனவே, தன்னாட்டில் எவ்வகையான இடையூறுமின்றிக் குடிமக்கள் அனைவரும் இன்புற்று வாழ்தற்கு இன்றியமையாதனவாகவுள்ள ஒழுகலாறுகளைத் தெளிவுபடுத்தும் பகுதி, ஐந்து அதிகரணங்களையுடையது. இவ்வொழுகலாற்றினைத் 'தந்திரம்' என்பர் வடநூலார்.

தன்னாட்டிற்கு இன்றியமையாதனவாக வேண்டப்படும் செயன்முறைகளை முறைப்படச் செய்துமுடித்த அரசன், தன் அரசாட்சியை மேலும் மேலும் விரிவுபடுத்திக் கொள்ளுதற்குரிய விதிமுறைகளைக் கையாளுதல் இயல்பாக வேண்டப்படுதலின், மண்டலயோனி என்ற ஆறும் அதிகரணம் முதல் 13-ஆம் அதிகரணம் ஈறாக உள்ளதும் இரண்டாம் பகுதியாக மேற்கூறப்பட்டதுமான எட்டு அதிகரணங்களால், பகைநாடுகோடற்குரிய விதிமுறைகள் விரித்துரைக்கப்படுகின்றன. இவ்விதிமுறை 'ஆவாபம்' என்று வழங்கப்படும்.

வெற்றிவிரும்பும் அரசன், பகைவர், நடுவன், அயலான் என்ற நால்வகை உறுப்புக்களின் தொகுதி, மண்டலம் எனப்படும். இது சந்தி விக்கிரகம் முதலிய அறுவகைக் குணங்களுக்கு மூலகாரணமாயிருத்தலின் மண்டலயோனி எனப்பட்டது. அரசு, அமைச்சு முதலிய எழுவகை அங்கங்களுக்குள தாம் நிறைவு இத்தன்மைத்து, பகைவரைக் களைதற்குரிய காலம் இடம் முதலியன இவ்வை என்பவற்றை மண்டலயோனி என்ற ஆறும் அதிகரணம் இரண்டு பிரகரணங்களைக் கொண்ட இரண்டு அத்தியாயங்களால் விளக்குவதாகும்.

பகைவரைத் தன்வயப்படுத்திக்கொள்ள விரும்பும் அரசன், அவர்களின் ஆற்றல் முதலியவற்றிற்கேற்ப, சந்தி விக்கிரகம் முதலிய அறுவகைக் குணங்களில் ஒன்றையோ, இரண்டு முதலியவற்றையோ, ஏற்றல் வேண்டும் என்பதைக் கூறும்பொருட்டு அறுவகைக் குணங்கள் என்ற ஏழாம் அதிகரணம் அடுத்து வைக்கப்படுகிறது. இதில், பகைகளைதற்குரிய உபாயங்களான சந்தி முதலியவற்றிற்குள தாம் ஏற்றத்தாழ்வுகள், அவ்வுபாயங்களை யேற்றற்குரிய காலம் முதலியன, மேற்சேறற்குரியார் பலராயவிடத்து, மேற்சேறற்குரிய விதிமுறை, முதலியன கூறப்படுகின்றன.

'விதனம் விளம்பல்' என்பது எட்டாவது அதிகரணமாகும். விதனங்கள் துன்பந்தருவன. இவற்றின் இயல்பு, இருப்பிடம் முதலியவற்றைப் பற்றிக் கூறுதல் என்பது இதன் பொருள். பகைவனது விதனத்தில் மேற்சேறல், பகைவனுக்கும் தனக்கும் ஒரே காலத்தில் விதனமிருப்பின், அவ்விதனங்களின் வன்மை மென்மைகளை

யாராய்தல், இவ்வாராய்ச்சியில், பல்வேறு முன்னையாசிரியரின் கொள்கைகளைக் கூறி மறுத்து, நூலாசிரியர் தம் கொள்கையைக் கூறுதல், வேட்டம், கடுஞ்சொல் முதலிய எழுவகை விதனங்களால் உண்டாம் குற்றங்கள், அவற்றின் சிறுமை பெருமைகள், நெருப்பு, நீர், வறுமை முதலியவற்றால் நேரும் துன்பங்களின் காரணங்கள், வகைகள், அவற்றைத்தடுத்தற்குரிய உபாயங்கள், அரசன் அமைச்சர் முதலியோர், பல்வேறுவகைப்படைகள் இவற்றுக்குளதாம் விதனங்களின் இயல்பு, நீக்குமுறை முதலிய செய்திகள் இவ்வதிகரணத்தில் புலப்படுத்தப்படுகின்றன.

பகைவனுடன் போர் செய்ய முயலும் அரசன், போர் குறித்துச் செல்லுமுன் ஆராய்ந்து செய்யவேண்டிய செயன்முறைகளைப் பற்றிக் கூறுவதான 'போர்ச்செலவு மேற்கொள்வோன் செயல்' என்ற அதிகரணம் ஒன்பதாவதாகும்.

போர்ச்செலவு வகைகள், போர் வகைக்கேற்ற பருவங்களின் வரையறை, போர் குறித்துச் செல்லுமுன் தன்னாட்டின் பகுதிகளிற் காவலமைக்கும் முறை, படைகளை யியக்கும் நெறி, படைகளின் முயற்சி, எதிர்ப்படை வகுத்தலைப்பற்றிய விதிகள், போர்க்காலத்தில் உண்டாம் இடர்கள், அவற்றைக் களையும் முறை, முதலியவை இதில் 12 பிரகரணங்களைக் கொண்ட ஏழு அத்தியாயங்களால் கூறப்படுகின்றன.

போர் குறித்துப் புறப்படவேண்டிய நிலையிலுள்ள அரசன், போருக்கு முன்னும் பின்னும் மேற்கொள்ளவேண்டிய செயன்முறைகளைப் போர்நிகழ்ச்சி என்ற பத்தாவது அதிகரணம் விளக்குவதாகும்.

பகைப்படையை நோக்கிச் செல்லும்போது, நீரற்ற பாலைவனம் முதலிய கடும்வழிச்செலவு முதலியவற்றால் தன் படைக்குண்டாம் துன்பங்களைப் போக்கிக் காத்தல், பாசறை யமைக்கும் முறை, படைகளின் தன்மைக்கேற்ற போர்க்களவியல்புகள், போர் அணிவகுப்பு என்பவற்றின் வகைகள், பகைப்படையைத் தாக்குமுறை என்பவை இந்த அதிகரணத்தில் உரைக்கப்படுகின்றன.

குழூஉச்செயல் என்பது பதினோராவது அதிக்ரணமாகும். அம்பு, வாள் முதலிய படைக்கருவிகளைத் தம்மிடத்தே வைத்துக்கொண்டு, ஒன்றுகூடி அரசற்கு அடங்காது ஒழுகுவோரது கூட்டம், குழூஉ எனப்படும். அரசன், ஒறுத்தல் வேறுபடுத்தல் முதலிய உபாயங்களை மேற்கொண்டு, அக்குழூவினரால் நேரும் பல்வேறு இடர்களைப்

போக்கும் நெறிகள் இதில் புலனாகின்றன. இது 2 பிரகரணங்களை விளக்கும் ஒரு அத்தியாயத்தைத் தன்பாற் கொண்டுள்ளது.

அடுத்தது 'ஆற்றலிலான் செயல்' என்ற அதிகரணமாகும். ஆற்றல், படை முதலியவற்றால் தன்னினும் மிக்கான் ஒரு அரசன், தன்னுடன் சந்தியை விரும்பாதபோது, குறைந்த ஆற்றலுள்ள அரசன் மேற்கொள்ளவேண்டிய செயன்முறைகள் என்பது இதன் பொருள்.

தலையிடை கடையாய தூதுவரின் இயல்பு முதலியன, சந்தி செய்தற்குரிய விதிகள், அறிவுரை முதலியவற்றால் பகைவரைத் தன் வயப்படுத்தல், தீ, நஞ்சு முதலியவற்றைக்கொண்டு பகைவரைத் துன்புறுத்தும் முறைகள், பகைவருக்கு உணவுப்பொருள் முதலியவை கிட்டாதபடி தடை செய்தல் முதலியன இதில் 9 பிரகரணங்களையுடைய 5 அத்தியாயங்களால் விரித்துணர்த்தப்படுகின்றன.

பகைவருடைய அரணை அடைதற்குரிய உபாயங்கள் என்னும் பொருளதான 'பகையரண் எய்தும் வழி' என்ற அதிகரணம் பதின்மூன்றாவதாகும்.

அச்சுறுத்தல் முதலிய உபாயங்களை மேற்கொண்டு, பகையரணின்கண் உள்ளாரைத் தன்வயப்படுத்தற்குரிய வஞ்சக முறைகள், பகைவரை வெளியேற்றுதற்குரிய உபாயங்கள், பகைநாட்டினருக்குத் தன்பாலுளதாம் ஐயுறவு முதலியவற்றை நீக்கி நம்பிக்கையூட்டுதற்குரிய நெறிவகைகள் முதலியவற்றை இவ்வதிகரணம் விளக்கிக் கூறுவதாகும்.

இதுகாறும், தன்னாட்டைக் காத்தல், பகைநாடு கோடல் என்ற இரு பயனையடியொற்றி, மேற்கொள்ளவேண்டிய செயன்முறைகள் தனித்தனியே விளக்கப்பட்டன. இனி, அவ்விரண்டுக்கும் பொதுவாக வேண்டப்படும் செயன்முறைகளை, 'மறைவுச் செயல்' என்ற 14-ஆம் அதிகரணம் விளக்கிக் கூறும். இவ்வதிகரணம் மூன்றாம் பகுதியாக மேற் கூறப்பட்டது. பகைவரையழித்தற்குரிய மருந்து மந்திரம் முதலியவற்றைப் பகைவர் அறியாவாறு மறைவாக உபயோகித்தல் என்பது இதன் பொருள். பக்கத்திற்கு ஒருமுறை புசித்தல், திங்களுக்கொருமுறை புசித்தல், உருவமாறுபாடு, குட்டம் முதலிய தொத்துநோய்வகைகளை யுண்டாக்குதல், உண்டான அவற்றை யகற்றுதல், இருளிலும் பொருளைக் காண்டல், பிறர்க்கு உருவம் தோன்றாவாறு இயங்குதல், காவலர் முதலியோரை உறங்கச்

செய்தல் முதலிய பலவகைச் செயல்களுக்குரிய மருந்துவகைகளையும், மந்திரவகைகளையும் இவ்வதிகரணம் விளக்கிக் கூறுகின்றது.

இனி, இப்பதினான்கு அதிகரணங்களால் கூறப்படும் பொருட்டொகுதியினை இனிது விளங்கிக்கொள்ளுதற்கு இன்றியமையாதனவாக வேண்டப்படும் முப்பத்திரண்டு உத்திகளை, இலக்கணங்களாலும் உதாரணங்களாலும் விளக்கிக் கூறும் நான்காம் பகுதியாகப் பதினைந்தாம் அதிகரணம் அமைந்துள்ளது. இவ்வாற்றான் நூற்பொருளமைதி ஒருவாறு கூறப்பட்டது.

தமிழ்மொழியினைச் சிறப்புற்று விளங்கச் செய்யும் நூல்களை முதனூல், வழிநூல் என்ற இரு கூறாகப் பகுப்பர். இவ்விரண்டனுள் வழிநூல் என்பது, தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்த்ததர்ப்பட யாத்தல் என்று நால்வகைப்படும். இந்நான்கனுள் இறுதியிற் கூறப்பட்ட மொழிபெயர்த்ததர்ப்பட யாத்தல் என்பது பிறமொழியிலுள்ள பொருட்டொகுதியினை அவை கிடந்தவாற்றானே தமிழ்மொழியால் விளக்கிக் கூறுவதாகும். மொழிபெயர்த்தல் என்ற பெயரே, பொருட்பிறழ்ச்சி சிறிதேனும் ஏற்கற்பாலதன்று என்பதைப் புலப்படுத்தும். தமிழ்மொழியின் ஆக்கத்தில் நோக்கங்கொண்ட முன்னையாசிரியர், அதற்கு வேற்றுமொழிப் பொருளைத் தமிழில் மொழி பெயர்த்துரைத்தலையும்' ஒன்றாக எண்ணி, அதனை வழிநூல்களின் வகையுட்படுத்திக் கூறுவாராயின், தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு இம்மொழிபெயர்ப்பின் இன்றியமையாமை தெள்ளிதிற் புலனும். இச் சிறப்புப் பற்றியன்றே, மேனாட்டவர் தந்தம் மொழிகளுக்கு வளர்ச்சியைக் கருதி, திருக்குறள், சாகுந்தலம் முதலிய பிறமொழி நூல்களைத் தம் மொழிகளில் மொழிபெயர்த்துள்ளார்கள் !

இக்கருத்தை யடியொற்றியே, தமிழ்மொழி வளர்ச்சியிற் கருத்துக்கொண்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார், இப்பொருள் நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடக் கருதி, நம் பண்டிதமணியிடம் இப்பொறுப்பை ஒப்படைத்தனர். பண்டிதமணியவர்கள் இப்பணியை மேற்கொண்ட காலத்தில், அவர்களுக்கு உதவியாளனாய் யான் நியமனம் பெறுதற்குரிய முயற்சியைச் செய்து, இப்பணியில் ஈடுபடும் பேற்றினைப் பெறுதற்கு உறுதுணையாயிருந்தவர், தத்துவப் பேராசிரியர் கல்வித்துறைத் தலைவர் திருவாளர் R. இராமாநுஜாச்சாரியார் அவர்களும் தமிழ்ப்பேராசிரியர் பண்டித வித்துவான் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களும், வடமொழி விரிவுரையாளர், K. ஸ்ரீநிவாஸாச்சாரியார் அவர்களும் ஆவர்.

அன்னாரின் பேருதவிக்கு யாண்டும் யான் கடமைப்பட்டுள்ளேன். பண்டிதமணியவர்கள் முதல் மூன்று அதிகரணங்களின் மொழி பெயர்ப்பு முற்றிய நிலையில், உடல்நலக் குறைவினால் விலகிக் கொள்ளுங்கால் எழுதிய குறிப்பின்படி, இந்நூலின் எஞ்சிய பகுதிகளையும் மொழி பெயர்க்கும் பணியைப் பல்கலைக் கழகத்தார் எனக்கு அளித்தனர். பண்டிதமணியவர்களின் மொழி பெயர்ப்பு முறையைத் தழுவியே, என்னாலும் நான்காம் அதிகரணம் முதல் பதினைந்தாம் அதிகரணம் முடியவுள்ள, எஞ்சிய நூற்பகுதி மொழிபெயர்த்து விளக்கவுரையுடன் எழுதி முடிக்கப்பட்டது. முதனூலில் திரு. T. கணபதி சாஸ்திரியாரால் எழுதப்பட்ட முன்னுரையின் தமிழ் மொழி பெயர்ப்பு, இந்நூலைப் படிப்பவர்களுக்குப் பயன்படுமென்று கருதி, இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளது.

அரும்பதம் குறியீட்டுச் சொற்கள் முதலியவற்றின் அகராதியில் குறிப்பிட்ட சொற்கள், இந்நூலில் பல இடங்களில் பயின்று வந்திருப்பினும், அவற்றைப் பற்றிய விளக்கம் முதன் முதலாக வந்துள்ள பக்கத்தின் எண் மட்டுமே காட்டப்பட்டிருக்கின்றது.

பொருளை யுணர்த்தும் முறையில் ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு தனிச் சிறப்புண்டு. அச்சிறப்பியல்புடன் கூடிய மொழியிலுள்ள பொருட்டொகுதியினைப் பிறழ்ச்சியின்றி நேரான மொழி பெயர்ப்பு வகையில் பிறிதொரு மொழியால் புலப்படுத்துவதென்பது எளிதன்று. இம் மொழிபெயர்ப்பு, மேற்கூறிய முறையில் முதனூலுடன் சிறிதளவும் பிறழ்ச்சியின்றி நெருங்கிய தொடர்பு பெற்று விளங்குவதாகும். எனவே நேர் மொழி பெயர்ப்பால் பலவிடங்களில் எளிய முறையில் பொருட்டுணிவு புலனாவதரிதாயிருக்கக்கூடும். ஆதலின் விளக்கவுரை மூலத்தில் ஆங்காங்கு எண்களிட்டு, அவ்வெண் முறையே கீழ்க்குறிப்பில், சொற்பொருள் விரிப்பனவாகவும், தொடர்ப்பொருள் விரிப்பனவாகவும், இயைபு விளக்குவனவாகவும், திரண்ட கருத்தைத் தெரிவிப்பனவாகவும், பிற விளக்கங்களாகவும் அமைந்துள்ளது. இம் முதனூலின் முகவுரையில்—"இந்நூல் பதவாக்கியங்கள் குற்றமற்ற நிலையில் சீர்பெற அமைந்திருப்பினும் பொருட் சிறப்பால் பெருமுயற்சி படைத்த புலவராலும் அறிதற்கரியது" என்ற கருத்து உணர்த்தப்பட்டிருக்கின்றது. பொருளறிவைப்பற்றி இக் கருத்து எழுவதாயின், அப்பொருளை யுணர்ந்து சிறிதும் பிறழ்ச்சியின்றி வேறொரு மொழியில் இனிது புலப்படுமாறு உணர்த்துவதில் உண்டாம் இடர்ப்பாடு கூறவேண்டாவாயிற்று. நேர் மொழிபெயர்ப்பால் விளங்காத கருத்தை இனிது விளக்குதற்கெழுந்த மேற்கூறிய

கீழ்க்குறிப்புப் பகுதியில், மூலத்துடன் ஒத்த கருத்துள்ள திருக்குறள் முதலிய தமிழ்நூற் பகுதிகளும் எடுத்துக்காட்டாக இடம் பெற்றிருக்கின்றன. மூலத்திலுள்ள சில குறியீட்டுச் சொற்களை மொழிபெயர்க்குங்கால் ஒரு சொற்குப் பல சொற்றொடர்களைக் கையாள நேரிடக் கூடிய சில இடங்களில் அம் மூலச்சொற்களே இம் மொழிபெயர்ப்பிலும் அமைந்துள. அச் சொற்களின் விளக்கங்கள் விளக்கவுரைப் பகுதியால் புலப்படுத்தப்பட்டிருக்கின்றன. குறியீட்டுச்சொற்களுக்கு மாறுபாடு நேராமற் காத்தற்கும், பொருள்மயக்கத்தைத் தடுத்தற்கும் இம்முறை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. மொழிபெயர்க்குங்கால், ஆங்கில மொழிபெயர்ப்பு, வடமொழி யுரை இவற்றை ஒப்பு நோக்கி நூலாசிரியர் கருத்துக்கேற்புடைய பொருள்கள் ஆராய்ந்து மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இம்முதனூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு மூலத்துக்கு நேரான மொழிபெயர்ப்பன்று என்பதை அந் நூல் முகவுரையிலிருந்தே காணலாம். நேராக மொழிபெயர்த்தலை மேற்கொண்டதால், வடமொழிக்கே சிறப்பாகவுள்ள சில சொன்னடையைக் கொண்ட பகுதியைத் தமிழ் மரபிற்கேற்ற நடையில் மொழிபெயர்க்கக் கூடாத இடங்களில் (   ) இக்குறியீட்டினுள் ஏற்ற சொற்களைச் சேர்த்து முடிவுகாட்டிக் கருத்தை விளக்கியிருத்தல் காணலாம். மேற்குறிப்பிட்ட குறியீட்டினுள் உள்ள சொற்களுக்குரிய சொல் முதனூலில் இல்லை யென்பதை இக்குறியீடு புலப்படுத்துவதாகும்.

இம் மொழிபெயர்ப்புவேலையை யான் மேற்கொண்ட காலத்துத் தமிழாராய்ச்சித் துறைப் பேராசிரியராயிருந்து என்னை ஊக்கிய பேரறிஞர் திரு. அ. சிதம்பரநாதச் செட்டியாரவர்களுக்கும், இப்பால், இந்நூல் இனிது நிறைவேறுதற்கு ஆவன செய்தும், முகவுரை உதவியும் சிறப்பித்த, தமிழாராய்ச்சித் துறைப் பேராசிரியர் திருவாளர் வித்துவான் கோ. சுப்பிரமணிய பிள்ளை, M.A., B.L., அவர்களுக்கும், எனக்கு இன்னோரன்ன தமிழ்ப் பணியை உதவி ஆதரித்து வரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாருக்கும், என்னுடைய உளமார்ந்த நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மேலும், இந்நூலில் யான் மொழிபெயர்த்த மூலத்தையும் விளக்கவுரையையும் அவ்வப்போது சலிப்பின்றிப் படித்துத் திருத்தியும், ஏற்ற இடங்களில் திருக்குறள் முதலிய நூல்களிலிருந்து ஒப்புமைப்பகுதிகளும் விளக்கங்களும் எழுதியளித்தும், அச்சிடுங்கால் உடனிருந்து ஒப்புநோக்குதல் முதலியன புரிந்தும் உதவிய

தமிழாராய்சித்துறை விரிவுரையாளர் வித்துவான் திரு. க. வெள்ளை வாரணனார் அவர்களுக்கு யான் என்றும் கடப்பாடுடையேன்.

இந்திய நாட்டின் பண்டையரசியலமைப்பினை அறிதற்குக் கருவியாகிய இப்பொருள்நூலின் மொழிபெயர்ப்பினை யேற்று ஆதரிக்குமுகத்தால், இதுபோன்று வடமொழியிலுள்ள சிறந்த பல நூல்கள் தமிழில் வெளிவருதற்குத் தமிழன்பர் தக்கவாறு ஊக்குவிப்பர் என நம்புகின்றேன்.

**P. S. இராமாநுஜாச்சாரி.**

# பொருளடக்கம்


| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | பக்கம் |
|---|---|---|---|
| | | **முதலதிகரணம்—பயிற்சி பகர்தல்** | ...2 —127 |
| 1 | — | அதிகரணப் பிரகரணங்களின் பெயர்க்குறிப்பு | ... 2 |
| 2 | 1 | வித்தை விளம்பல்—ஆன்வீட்சிகியின் இயல்பு | ... 22 |
| 3 | ,, | ,, திரையீயின் இயல்பு | ... 26 |
| 4 | ,, | ,, வார்த்தை தண்ட நீதிகளின் இயல்பு | ... 33 |
| 5 | 2 | பெரியோரிணக்கம் | ... 37 |
| 6 | 3 | பொறியடக்கம்—குற்றங்கடிதல் | ... 41 |
| 7 | ,, | ,, அதனையுடைய அரசனியல்பு | ... 44 |
| 8 | 4 | அமைச்சரை யமைத்தல் | ... 48 |
| 9 | 5 | மந்திரிபுரோகிதரை யமைத்தல் | ... 52 |
| 10 | 6 | உபதைகளால் அமைச்சர் முதலியோரின் மனவியல்பு ஆராய்தல் | ... 56 |
| 11 | 7 | ஒற்றரை யமைத்தல் | ... 61 |
| 12 | 8 | ஒற்றுடல் | ... 66 |
| 13 | 9 | தன்னாட்டு நல்லவர்தீயவர் குழூஉக்களைக் காத்தல் | ... 74 |
| 14 | 10 | பகைவர்நாட்டு நல்லவர் தீயவர் குழூஉக்களைத் தன்வயப்படுத்தல் | ... 78 |
| 15 | 11 | மந்திராதிகாரம் | ... 83 |
| 16 | 12 | தூதுவிடுத்தல் | ... 92 |
| 17 | 13 | காவலன்புதல்வர்காப்பு | ... 98 |
| 18 | 14, 15 | விலக்கப்படும் மக்கள் வேந்தன் பாலொழுகல், விலக்கப்படும் மக்கள்பால் வேந்தன் ஒழுகல் | ... 105 |
| 19 | 16 | அரசனது செயன்முறை | ... 109 |
| 20 | 17 | அரண்மனை யமைத்தல் | ... 114 |
| 21 | 18 | தற்காப்பு | ... 121 |

| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | பக்கம் |
|---|---|---|---|
| | | **2-ஆம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை** | ...128–403 |
| 22 | 1 | நாடு அமைத்தல் ... | 128 |
| 23 | 2 | உழவிலா நிலத்தைப் பயனுற அமைத்தல் ... | 137 |
| 24 | 3 | அரண் அமைத்தல் ... | 140 |
| 25 | 4 | அரணுள் அமைத்தல் ... | 149 |
| 26 | 5 | பொருட்பண்டாரம் புரப்போன் செய்தி ... | 155 |
| 27 | 6 | இறைப்பொருள் தொகுப்போன் ஏற்கும் பொருள்நெறி ... | 161 |
| 28 | 7 | பொருட்கணக் கெழுதுவோர்ப் பொருந்ததிகாரம் ... | 170 |
| 29 | 8 | வினைவலார் கவர்பொருள் மீட்டுக் கொணர்வித்தல் ... | 180 |
| 30 | 9 | தலைமைவினையாளர் தகைமை யாராய்தல் ... | 190 |
| 31 | 10 | முடங்கல் விதிமுறை ... | 197 |
| 32 | 11 | கருவூலத்தியை திருமணி ஆய்தல் ... | 208 |
| 33 | 12 | ஆகரத் தொழில்நிலை ... | 226 |
| 34 | 13 | அக்கசாலையிற் பொற்றொழிற்றலைவன் ... | 238 |
| 35 | 14 | அங்காடித்தெருவில் பொன் வினைஞன் செயல் ... | 249 |
| 36 | 15 | உணவுப் பொருள்நிலையத் தலைவன் ... | 260 |
| 37 | 16 | விலைப்படுபண்டத் தலைவன் ... | 271 |
| 38 | 17 | குப்பியத் தலைவன் ... | 276 |
| 39 | 18 | படைக்கல நிலையத் தலைவன் ... | 280 |
| 40 | 19 | துலைமுதலளவையின் நிலை யாராய்தல் ... | 286 |
| 41 | 20 | நிலம்பொழுதளவை ... | 293 |
| 42 | 21 | உல்குபொருள் தலைவன் ... | 300 |
| 43 | ,, | ,, உல்கு வரையறை ... | 307 |
| 44 | 22 | இழைநெய்தற் றொழிற்றலைவன் ... | 311 |
| 45 | 23 | உழவுத் தொழிற் றலைவன் ... | 315 |
| 46 | 24 | கள்வினைத் தலைவன் ... | 323 |
| 47 | 25 | இறைச்சித் தொழிற் றலைவுன் ... | 331 |

| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | பக்கம் |
|---|---|---|---|
| 48 | 26 | வரைவின்மகளிரை நடத்தும் தலைவன் ... | 335 |
| 49 | 27 | மரக்கலத் தலைவன் ... | 342 |
| 50 | 28 | ஆனினத் தலைவன் ... | 349 |
| 51 | 29 | குதிரைத் தலைவன் ... | 358 |
| 52 | 30 | யானைத் தலைவன் ... | 368 |
| 53 | ,, | ,, யானைப் பயிற்சி ... | 373 |
| 54 | 31-33 | தேர்த்தலைவன், காலாட்படைத் தலைவன், படைத் தலைவன் தொழின் முறை ... | 379 |
| 55 | 34, 35 | இலச்சினைத் தலைவன், புன்னிலத் தலைவன் ... | 383 |
| 56 | 36, 37 | நாட்டு வருவாய்த் தலைவன் செயல், இன்னிலை வாணிகத் தவக்குறியினராக ஒற்றரை யமைத்தல் ... | 386 |
| 57 | 38 | நகரத்தலைவன் செயல் ... | 393 |
|  |  | **3-ஆம் அதிகரணம்—அறநிலையாட்சி** | **...404-568** |
| 58 | 1, 2 | வழக்கியல் நிறுத்தல், வழக்குரை வரைதல் ... | 404 |
| 59 | 3 | மணவியல்—மண அறம், சீதன விதி, பின் மணப்பொருள் ... | 421 |
| 60 | ,, | ,, பணிசெயல், குடியோம்பப் பணித்தல், கொடுமை, வெறுப்பு, விலக்கியன மேற்கோடல், உதவியைத் தடுத்தல் ... | 435 |
| 61 | ,, | ,, வெளியேறுதல், பின்தொடர்தல், சிலநாட் பிரிவு, பலநாட் பிரிவு ... | 444 |
| 62 | 4 | தாயபாகம்—தாயமுறை ... | 453 |
| 63 | ,, | ,, பகுதிக்கூறு ... | 461 |
| 64 | ,, | ,, புதல்வர் வகை ... | 468 |
| 65 | 5 | நிலவழக்கு—மனை நிலம் ... | 475 |
| 66 | ,, | ,, நிலவிலை ... | 481 |
| 67 | 5, 6 | ,, புன்னில வயல்வழித் தடை, கட்டுப்பாடு கடவாமை ... | 490 |

| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|---|
| 68 | 7 | கடன் கோடல் | ... | 499 |
| 69 | 8 | அடைக்கலப் பொருளியல் | ... | 510 |
| 70 | 9 | அடிமைப் பணியாளர் இயல்பு | ... | 521 |
| 71 | 10 | கூடித் தொழில் புரிதல் | ... | 529 |
| 72 | 11 | விற்றுக்கொண்டு மாறுபடல் | ... | 536 |
| 73 | 12–14 | நல்கியதை நல்காமை, உரிமையில்லாதவன் விற்றல், உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபு | ... | 540 |
| 74 | 15 | வன்செய்கை | ... | 548 |
| 75 | 16 | வன்சொல் | ... | 551 |
| 76 | 17 | தண்டக்கொடுமை | ... | 555 |
| 77 | 18, 19 | சூது புள் விலங்கு விளையாட்டு, ஒழிபு | ... | 562 |
| | | **4-ஆம் அதிகரணம்—சிறுபகை களைதல்** | ... | **569–659** |
| 78 | 1 | காருகரால் தீங்கு நேராமற் காத்தல் | ... | 569 |
| 79 | 2 | வணிகர்களால் தீங்கு நேராமற் காத்தல் | ... | 581 |
| 80 | 3 | தெய்விகப்பேரச்ச மாற்றம் | ... | 588 |
| 81 | 4 | ஏமாற்றிப் பிழைப்பவரால் தீங்கு நேராமற் காத்தல் | ... | 595 |
| 82 | 5 | சித்தவுருவினரால் வஞ்சகரை வெளிப்படுத்தல் | ... | 600 |
| 83 | 6 | ஐயுறலுருச் செயல்களாற் கள்வரைப் பிடித்தல் | ... | 605 |
| 84 | 7 | விரைவிலிறந்தானை ஆராய்தல் | ... | 613 |
| 85 | 8 | சொற் செயல்களால் வினுதல் | ... | 619 |
| 86 | 9 | அதிகாரிகளால் தீங்கு நேராமற் காத்தல் | .. | 627 |
| 87 | 10 | உறுப்பொன்று களைதற்கொத்த பொருட்டண்டம் | ... | 635 |
| 88 | 11 | சுத்த சித்திர தண்டவிதி | ... | 640 |
| 89 | 12 | கன்னியைத் துன்புறுத்தல் | ... | 645 |
| 90 | 13 | நெறி கடத்தற் றண்டம் | ... | 652 |

| அத்தி யாயம் | பிரகர ணம் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|---|
| | | **5-ஆம் அதிகாணம்—வஞ்சித்தொறுத்தல்** | | ...660–717 |
| 91 | 1 | மறைவிலெறுத்தல் | ... | 660 |
| 92 | 2 | பொன் முதலியவற்றை மிகுதியாகக் கோடல் | ... | 673 |
| 93 | 3 | துணைவரைப் புரத்தல் | ... | 686 |
| 94 | 4 | அமைச்சர் முதலியோர் இயல்பு | ... | 695 |
| 95 | 5 | ஒழுக்க வரையறை | ... | 702 |
| 96 | 6, 7 | அரசியற் புத்தமைப்பு, தனித் தலைமையரசு | ... | 709 |
| | | **6-ஆம் அதிகாணம்—மண்டலயோனி** | | ...718–734 |
| 97 | 1 | அங்கங்களின் நிறைவு | ... | 718 |
| 98 | 2 | வினை செயல் பயனுகர் கருவி | ... | 726 |
| | | **7-ஆம் அதிகாணம்—அறுவகைக் குணங்கள்** | | ...735–905 |
| 99 | 1, 2 | அறுகுண வரையறை, குறைவொப்பு மிகுதிகளின் துணிபு | ... | 735 |
| 100 | 3 | வலியதைப் பற்றியொழுகல் | ... | 745 |
| 101 | 4, 5 | குறைவொப்பு மிகுதியாம் வலிநிலைகளுட் குணநலம் பற்றல், இழிந்தோன் சந்திகளை ஏற்றல் | ... | 751 |
| 102 | 6–10 | பொருதிருத்தல், நட்புக்கொண்டிருத்தல், பொருது மேற்சேறல், நட்புக்கொண்டு மேற்சேறல், கூடி மேற்சேறல் | ... | 760 |
| 103 | 11–13 | கலக்கமுடையானும் தீங்குபுரிபவனுமாகிய பகைவரிருவருள் மேற்சேறற்குரியானைத் துணிதல், பிரகிருதிகளின் குறை பொருணசை வெறுப்புக் காரணம், கூடித் தொடர்ந்து செல்வோரை ஆராய்தல் | ... | 769 |

| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|---|
| 104 | 14, 15 | சந்தி செய்துகொண்டோர் பிரிந்து சேறல், வரையறை யுடையது வரையறை யில்லது பிரிந்தவனைப் பற்றியது என்னும் சந்திகள் | ... | 780 |
| 105 | 16 | பிரித்தலைக் காரணமாக உடைய சந்தி விக்கிரகங்கள் | ... | 792 |
| 106 | 17, 18 | மேற்சேறற்குரியான் செயல், அருளுதற்குரிய நண்பர்கள் | ... | 802 |
| 107 | 19 | நட்பு பொருள் நிலம் செயல்களாலாம் சந்திகள்— நட்புச்சந்தி, பொருட்சந்தி | ... | 811 |
| 108 | ,, | ,, நிலச்சந்தி | ... | 822 |
| 109 | ,, | ,, முடிவுறுத சந்தி | ... | 829 |
| 110 | ,, | ,, செயற்சந்தி | ... | 838 |
| 111 | 20 | பக்கத்துறையும் பகைவன் செயல் | ... | 845 |
| 112 | 21 | குறைந்த ஆற்றல்களின் நிறைவு | ... | 856 |
| 113 | 22, 23 | வலியவனோடு பொருது மறைந்து கோடற்குரிய காரணங்கள், படைவலியால் தாழ்த்தப்பட்டோன் செயல் | ... | 864 |
| 114 | 24 | படைவலியாற் பகைவனைத் தன்பாற்படுத்துவோன் செயல் | ... | 873 |
| 115 | 25, 26 | சந்திகன்மம், சந்தியின் விடுதலை | ... | 881 |
| 116 | 27–29 | நடுவன்பால் ஒழுகல், நொதுமலன் பால் ஒழுகல், மண்டலசரிதம் | ... | 894 |


## 8-ஆம் அதிகரணம்—விதனம் விளம்பல் ...906–962


| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|---|
| 117 | 1 | பகுதிகளின் விதனக்குழு | ... | 906 |
| 118 | 2 | அரசற்கும் அரசியற்குமுரிய விதனவாராய்ச்சி | ... | 919 |
| 119 | 3 | புருட விதனக்குழு | ... | 926 |
| 120 | 4–6 | துன்பக்குழு, தடைக்குழு, பொருள் கொடாமைக்குரிய காரணக்குழு | ... | 938 |
| 121 | 7, 8 | படை விதனக்குழு, நட்டோர் விதனக்குழு | ... | 952 |

| அத்தி யாயம் | பிரகர ணம் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|---|
| | | **9-ஆம் அதிகாரணம்—போர்ச்செலவு மேற்கொள்வோன் செயல்** | | 963-1045 |
| 122 | 1, 2 | ஆற்றல் இடம் காலங்களின் வன்மை மென்மை யறிதல், மேற்சேறற் குரிய காலங்கள் | ... | 963 |
| 123 | 3-5 | படை செலுத்தற்குரிய காலங்கள், சந்நாக குணங்கள், எதிர்ப்படை யின் செயல் | ... | 974 |
| 124 | 6, 7 | பின்னர் நிகழும் கொடுஞ்செயல்களை ஆராய்தல், அகப்புறப் பகுதி களின் சினமடக்கல் | ... | 986 |
| 125 | 8 | குறைவழிவூதியங்களின் ஆராய்ச்சி | ... | 998 |
| 126 | 9 | அகப்புற இடர்கள் | ... | 1006 |
| 127 | 10 | வெறுக்கத்தக்கவரும் பகைவரும் விளைக்கும் இடர்கள் | ... | 1014 |
| 128 | 11, 12 | பொருளழிவையங்களோடு அமைந்த இடர்கள், அவற்றைக் களையும் உபாய விகற்பங்களால் உண்டாம் சித்திகள் | ... | 1028 |
| | | **10-ஆம் அதிகாரணம்—போர்நிகழ்ச்சி** | | 1046-1098 |
| 129 | 1 | பாசறை யமைத்தல் | ... | 1046 |
| 130 | 2, 3 | பாசறைநோக்கிச் சேறல், படைவித ணம் கடும்வழிச் செல்லுங்காலம் இவற்றினின்றும் படைகளைக் காத்தல் | ... | 1050 |
| 131 | 4-6 | வஞ்சகப் போர்வகைகள், தன் படை களை ஊக்கமுறுத்தல், தன் படைக் குப் பகைப்படையினும் விழுமிய அமைப்பு | ... | 1057 |
| 132 | 7, 8 | போர்க்களவியல்பு, யானை குதிரை தேர் காலாட்களின் செயல்கள் | ... | 1069 |
| 133 | 9-11 | பக்க கக்க நடுவிடங்களில் படையள விற்குத் தக வகுப்புக்களைப் பிரித் தமைத்தல், வன்படை மென்படை களைப் பிரித்தமைத்தல், யானை குதிரை தேர் காலாட்படைகளின் போர் வகைகள் | ... | 1077 |
| 134 | 12, 13 | தண்டம் போகம் மண்டலம் அசங் கதம் என்னும் படைவகுப்பமைத் தல், அவற்றுள் எதிர்ப்படை வகுப்பமைத்தல் | ... | 1090 |

| அத்தியாயம் | பிரகரணம் | பொருள் | பக்கம் |
|---|---|---|---|
| | | **11-ஆம் அதிகாரணம்—சூழூஉச் செயல்** | 1099–1110 |
| 135 | 1, 2 | வேறுபடுத்தலை மேற்கோடல், மறைவிற் கோறல் ... | 1099 |
| | | **12-ஆம் அதிகாரணம்—ஆற்றலிலான்செயல்** | 1111-1144 |
| 136 | 1 | தூதுவன் செயல் ... | 1111 |
| 137 | 2 | அறிவுப்போர் ... | 1117 |
| 138 | 3, 4 | படைத்தலைவர் கொலை, மண்டலத்தை ஊக்குதல் ... | 1124 |
| 139 | 5, 6 | படைக்கலம் நெருப்பு நஞ்சு இவற்றை மறைவிற் பிரயோகித்தல், கூலம் முதலிய சுமப்போர் நட்புப்படை புல் விறகு கொணர்வோர் இவர்களைக் கோறல் ... | 1129 |
| 140 | 7—9 | கபடோபாயத்தால் அழித்தல், தண்டத்தால் அழித்தல், தனியனும் வேறல் ... | 1135 |
| | | **13-ஆம் அதிகாரணம்—பகையரண் எய்தும் வழி** | 1145-1187 |
| 141 | 1 | வேறுபடுத்தல் ... | 1145 |
| 142 | 2 | உபாயத்தால் வெளிப்படுத்தல் ... | 1151 |
| 143 | 3 | ஒற்றர்களை நிலைப்படுத்தல் ... | 1160 |
| 144 | 4, 5 | சூழ இருக்கச்செய்தல், இடுக்கட்படுத்தல் ... | 1171 |
| 145 | 6 | எய்திய அரணை இனிதின் அடக்கல் ... | 1183 |
| | | **14-ஆம் அதிகாரணம்—மறைவுச்செயல்** | 1188-1222 |
| 146 | 1 | பகைக்கொலைப் பிரயோகம் ... | 1188 |
| 147 | 2 | வஞ்சித்தல்—வஞ்சித்தலில் வியப்புண்டாக்கல் ... | 1198 |
| 148 | ,, | ,, வஞ்சித்தலில் மருந்து மந்திரப்பிரயோகம் ... | 1207 |
| 149 | 3 | தன் படைக்குண்டாம் இடர்களுக்கு மறுதலை ... | 1220 |
| | | **15-ஆம் அதிகாரணம்—தந்திரயுக்தி** | 1223-1230 |
| 150 | 1 | தந்திர யுக்திகள் ... | 1223 |

உ

கணபதி துணை

# கௌடலீயம்—பொருணூல்

## ஆசிரியர்வணக்கம்

[1]வெள்ளி வியாழன் விரைமல ரடியிணை
யுள்ளுற வேத்துதும் உலகில்
தெள்ளிதிற் [2]பொருணூல் திகழ்தரற் பொருட்டே.

## முதல் அத்தியாயம் :—அரசியல்

நிலத்தைக் கொள்ளுதல், அதனைக் காத்தல் என்னும் இவை குறித்து [3] முன்னையாசிரியர்களால் எத்துணைப் பொருள்நூல்கள் கூறப்பட்டனவோ அவற்றைப் [4] பெரும்பாலும் திரட்டி

---

### முதல் அத்தியாயக் குறிப்புரை.

1. வெள்ளியும் வியாழனும் பொருள்நூலாக்கிய ஆசிரியர்களுள் தலைவராவர். இவ்விருவராலும் முறையே ஔசநசம், பார்கற்பத்தியம் என்னும் நூல்கள் இயற்றப்பட்டனவாம்; இவற்றுள் ஔசநசம் என்பதன் சுருக்கமே சுக்கிரநீதியாகும்; உசநஸ்-சுக்கிரன். "வெள்ளியும் பொன்னும் என்பார் விதிமுறை" [கம்பர்-யுத்த-திருமுடி-செ-39] என்று கம்பர் குறித்தனவும் இந்நூல்களையேயாம்.

2. பொருள், மக்கள்வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அஃது ஈண்டுத் தனக்காதாரமாகவுள்ள நிலத்தைக் குறிப்பதாகும். நிலம் மக்களை யுடைத்து; அதனைக் கொள்ளுதல் காத்தற்குரிய வழிகளைக் கூறும் நூல்கள் பொருள்நூல்களாகும்.

3. முன்னையாசிரியர்கள்-வெள்ளி, வியாழன் முதலியோர்.

4. பெரும்பாலும் என்றமையால் சிறுபான்மை சிற்சில இடங்களில் இவ்வாசிரியர் தங்கொள்கைகளையும் வெளிப்படுத்தியுள்ளார் என்பது புலனும்.

இப்பொருள் நூல் [6]ஒன்று செய்யப்படுகின்றது.

---

[7]அதிகரணப் பிரகரணங்களின் பெயர்க்குறிப்பு வருமாறு :—

## முதல் அதிகரணம்

### * பயிற்சிபகர்தல்

1. வித்தை விளம்பல். 2. பெரியோரிணக்கம். 3. பொறி

---

5. சுட்டு, முன்னரே அறிவின் அமைந்துகிடந்தமையை உணர்த்தும்.

6. இதனால் இவ்வொரு நூலை ஆராயுமளவில் முன்னை ஆசிரியர்களின் கொள்கைகளெல்லாம் எளிதிற் புலனாகும் என்பதை உணர்த்துமுகத்தான் இந்நூற்கு முதனூல்கள் உண்டென்பதும், அம்முதனூல்களான் எய்தப் பெறாத சில பொருள்களும் இதன்கண் அறியப்படும் என்பதும் போதரும்.

7. இனி அப்பொருள் நூலின் அதிகரணப் பிரகரணங்களைப் பற்றிய இப்பெயர்க்குறிப்பு முறையே சுருக்கிக் கூறப்படும். ஓரினப் பொருளை விதந்து கூறுவது பிரகரணம் எனவும், ஒன்று முதல் பல பிரகரணங்களை உடையது அதிகரணம் எனவும் கொள்க. இந்நூல் பதினைந்து அதிகரணங்களாகவும், நூற்றெண்பது பிரகரணங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள், முதலில் அவற்றின் பொருள், பெயர், முறை, அளவு என்னும் இவற்றான் மாணாக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டுப் பெயர்க்குறிப்புக் கூறப்படுகின்றது. இந்நூற்கணுள்ள பதினைந்து அதிகரணங்களுள் ஒன்று முதல் ஐந்து அதிகரணங்கள் தொண்ணூற்றைந்து சூத்திரங்களை உடையன வாய்த் தந்திரம் என்னும் பொருள்பற்றினவாம். ஆறுமுதல் பதின்மூன்று வரையுள்ள எட்டு அதிகரணங்கள் எண்பத்தொருசூத்திரங்களையுடையன வாய் ஆவாபம் என்னும் பொருள்பற்றினவாம். தந்திரம்—தன்னாடு நலம் பெறுதற்குரிய செயல். ஆவாபம்—பகைநாடு கோடற்குரிய உபாயம். பதினான்காம் அதிகரணம் மூன்று சூத்திரங்களையுடையது; தந்திரம், ஆவாபம் என்னும் இவற்றிற்கு மிகவும் துணை நிற்பது. பதினைந்தாம் அதி கரணம் ஒரு சூத்திரத்தையுடையது; இந்நூலில் எடுத்தாளப்படும் முப்பத் திரண்டு தந்திரவுத்திகளுக்கும் இலக்கணமும் உதாரணமும் காட்டி விளக் குவது. அரசன் தந்திரத்துக்கும், ஆவாபத்துக்கும் அதிகாரியாவான்.

* பயிற்சி என்பது வித்தைமுதலியவற்றைக் கற்றல்; அதனைக் கூறுதலின், இது 'பயிற்சிபகர்தல்' என்னும் பெயர்த்தாயிற்று.

1. பயிற்சி பகர்தல் என்னும் முதல் அதிகரணத்துள் அடங்கிய பிரகரணங்களைக் கூறத் தொடங்குகின்றார். பிரகரணத்தின் பெயர்களாகிய வித்தை விளம்பல் முதலிய இவையெல்லாம் சூத்திரங்களாகவே கொள்ளப்

யடக்கம். 4. அமைச்சரை அமைத்தல். 5. மந்திரி புரோகிதரை அமைத்தல். 6. உபதைகளால் அமைச்சர்முதலியோரின் மன வியல்பு ஆராய்தல். 7. ஒற்றரை அமைத்தல். 8. ஒற்ருடல். 9. தன்னுட்டு நல்லவர்தீயவர் குழூஉக்களைக் காத்தல். 10. பகைவர்நாட்டு நல்லவர்தீயவர் குழூஉக்களைத் தன்

---

படும். "சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைச் செவ்வனுடியிற் செறித்தினிது விளக்கித் திட்பநுட்பம்" சிறந்திருத்தலின் "வித்தை விளம்பல்" என்னுமிது சூத்திரமேயாகும். இதன் பொருளையே பின்னர் மூன்று அத்தியாயங்களால் இவ்வாசிரியர் மிக முயன்று விரித்துரைப்பர். ஆதலின் அவ்விரிவுரையே இதற்கு அகலவுரையாம் நிலையில் அமைந்துளது. இங்ஙனமே "பெரியோரிணக்கம்" முதலியனவும் சூத்திரங்களாம். மற்றைய அதிகரணங்களிற் கூறப்பட்டவற்றிற்கும் இஃதொக்கும். இது கருதியன்றே இந்நூலின் இறுதியில் "விஷ்ணுகுப்தன் தானே சூத்திரமும் பாடியமும் இயற்றினன்" என்று கூறியது பொருத்தமாதல் அறிக. அதிகரண இயைபு பிரகரண இயைபு முதலியன அவ்வவ்வதிகரணப் பிரகரணங்களின் தொடக்கத்தில் கூறப்படும். கல்வியறிவும் உலகியல் அறிவும் இல்லாத அரசன் தன்னுட்டைக் காத்தற்குத் தகுதியற்றவனுவான். ஆதலின் கல்விப்பயிற்சியின் இன்றியமையாமை நோக்கி முதலில் "வித்தைவிளம்பல்" என்னும் பிரகரணம் கூறப்பட்டது.

5. மந்திரி—அமைச்சர்தலைவன்.

6. உபதை—மறைவிற் செய்யும் சோதனை.

7—8 ஒற்றர்-அரசற்கு வேண்டும் செய்திகளை மறைவிற் சென்று அறிந்து கூறுவோர். அன்னுரை அமைச்சருடன் கூடிய அரசன் கட்டளையிடுதலும், அரசன் தனியே கட்டளையிடுதலும் ஆகிய வேறுபாடு பற்றி, முறையே இரண்டு பிரகரணங்களாகக் கூறினர்.

9. நல்லவர்—பகைவரால் வேறுபடுக்கத்தகாதவர்; அரசன்பால் அன்புள்ளவர். தீயவர்—பகைவரால் வேறுபடுக்கத்தக்கவர்; வெகுளி, பொருளுசை முதலிய குற்றம் உடையார். இவர்களைக் காத்தலாவது :— நல்லோரைப் பட்டம், பரிசு முதலியன உதவி மேன்மேலும் சிறப்பித்துப் பகைவரான் வேறுபடுக்கப்படாத நிலையில் வைத்தலும், தீயோரை அவர்பாலுள்ள வெகுளி முதலிய குற்றங்களை உபாயத்தான் விலக்கிப் பகைவர் சூழ்ச்சிவயப்படாதிருக்கச் செய்தலுமாம்.

10. நல்லவர் தீயவர்களினியல்பு மேற்கூறப்பட்டது. அவர்களைத் தன் வயப்படுத்தலாவது :—அன்னுர்க்கு ஏற்றபெற்றி சூழ்ச்சிமேற்கொண்டு பகையரசனின் வேறுபடுத்துத் தன்வயப்படுத்தல்.

வயப்படுத்தல். 11. மந்திராதிகாரம். 12. தூதுவிடுத்தல். 13. காவலன் புதல்வர் காப்பு. 14. விலக்கப்படும் மக்கள் வேந்தன்பாலொழுகல். 15. விலக்கப்படும் மக்கள்பால் வேந்தன் ஒழுகல். 16. அரசனது செயன்முறை. 17. அரண்மனை அமைத்தல். 18. தற்காப்பு.

---

## 2-ஆம் அதிகாரணம்

### *தொழிற்றலைவர் செயன்முறை

1. நாடமைத்தல். 2. உழவிலாநிலத்தைப் பயனுற

---

11. மந்திரம்—அரசன் தான் செய்யக்கருதும் காரியத் தொடக்கத்தில் அது நிறைவேறுதற்குரிய வழிகளை ஆராய்தல். தன்னாடு காத்தலும் பிறர் நாடுகோடலும் அரசற்குரிய தொழில். அது மந்திரத்தைப்பற்றி நிகழ்வதாம். மந்திரம்—சூழ்ச்சி.

13. "காவலன் புதல்வர் காப்பு" என்பதற்கு அரசன் தன் மக்களால் தனக்குக் கேடு வராமல் காத்துக்கோடல் எனவும், பகைவரால் வேறு படுக்கப்படாமல் தன் மக்களைக் காத்தல் எனவும் பொருள்கொள்ளலாம். முன்னையது சிறந்தது.

14. அரசன் தன் புதல்வர் பலர் அரசுரிமைக்குத் தக்காராக அவருள் ஒருவனை அமைத்துழி மற்றையோர் அவ்வுரிமையினின்றும் விலக்கப்பட்டவராவார். அங்ஙனம் விலக்கப்பட்டார் அரசனிடத்து ஒழுகவேண்டும் முறையைக் குறிப்பதாகும்.

18. தற்காப்பாவது :—அரசன் பகைவர்முதலியோரால் தனக்குக் கேடுநேராவண்ணம் தன்னைக் காத்துக்கோடல்.

### 2-ஆம் அதி. குறிப்புரை.

* தொழிற்றலைவர்—அரசியல்வினைபுரியும் தலைமை அதிகாரிகள்.

2. உழவிலாநிலமாவது :—வேளாண்டொழிற்குத் தகுதியற்ற காடு, மலை, பள்ளம் முதலியன.

அமைத்தல். 3. அரணமைத்தல். 4. அரணுள் அமைத்தல். 5. பொருட்பண்டாரம் புரப்போன் செய்தி. 6. இறைப்பொருள் தொகுப்போன் ஏற்கும் பொருணெறி. 7. பொருட்கணக்கெழுது வோர்ப் பொருந்ததிகாரம். 8. வினைவலார் கவர்பொருள் மீட்டுக் கொணர்வித்தல். 9. தலைமைவினையாளர் தகைமையாராய்தல். 10. முடங்கல் விதிமுறை. 11. கருவூலத்தியை திருமணியாய்தல். 12. ஆகரத்தொழினிலை. 13. அக்கசாலையிற் பொற்றொழிற் றலைவன். 14. அங்காடித் தெருவிற் பொன்வினைஞன் செயல்.

---

3. அரண்—கடல், மலை, நிலம், காடு முதலிய இயற்கை அரண்களும், மதில், அகழி முதலிய செயற்கை அரண்களுமாம்.

4. அரணுள் அமைத்தல்—அரசவீதி, அரண்மனை முதலியன அமைத்தல்.

5. பண்டாரம்—கருவூலம், களஞ்சியம் முதலியன.

6. இறைப்பொருள்—அரசற்கு மற்றையரசர்களாலும் குடிமக்களாலும் அரசிறையாக இறுக்கப்படும் பொருள். கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாய சுங்கம் முதலியனவுமாம்.

7. பொருட்கணக்கெழுதுவோர்—பொருட்கணக்கெழுதும் இடத்திலிருந்து கணக்கு வரைவோர்.

8. கொணர்வித்தல்—அரசன் தன்பாற் கொண்டுவரச்செய்தல்.

10. முடங்கல்—அரசன் வேற்றுநாட்டு மன்னர்க்கும் தன் வினைஞர்க்கும் அறிவிக்கவேண்டிய செய்திகள் எழுதப்படும் ஓலை முதலியன.

11. கருவூலத்திற் சேர்க்கத்தக்க அழகிய மணி முதலியவற்றின் நன்றுதீது ஆராய்தல்.

12. ஆகரம்—தங்கம், வெள்ளி, மணி முதலியவைகளின் பிறப்பிடம்.

13. அக்கசாலை—பொன், வெள்ளி முதலிய உலோகத்தொழில் செய்யும் இடம். பொற்றொழில்—பொன், வெள்ளி முதலியவற்றால் அணிகலன் முதலியன இயற்றும் தொழில். முதனூலில் "அத்தியக்ஷன்," என்பது "தலைவன்" என மொழிபெயர்க்கப்பட்டது. "அத்தியக்ஷன்"—ஒவ்வொரு தொழிற் றலைமையிடத்தும் இருந்து மேற்பார்ப்போன்; தலைமையதிகாரி. தலைவன் என்பது இலக்கணையால் அவன் செயலையுணர்த்தும். இவ்வதிகரணத்திற் பின் வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

14. அங்காடி—கடை. பொன்வினைஞன்—பொற்பணி முதலியன செய்விப்போன்.

**15.** உணவுப்பொருள்நிலையத் தலைவன். **16.** விலைப்படுபண்டத் தலைவன். **17.** குப்பியத் தலைவன். **18.** படைக்கலநிலையத் தலைவன். **19.** துலைமுதலளவையின் நிலையாராய்தல். **20.** நிலம் பொழுதளவை. **21.** உல்குபொருட் டலைவன். **22.** இழைநெய் தற்றொழிற்றலைவன். **23.** உழவுத்தொழிற் றலைவன். **24.** கள் வினைத் தலைவன். **25.** இறைச்சித் தொழிற் றலைவன். **26.** வரைவின்மகளிரை நடத்துந் தலைவன். **27.** மரக்கலத் தலைவன். **28.** ஆனினத் தலைவன். **29.** குதிரைத் தலைவன். **30.** யானைத் தலைவன். **31.** தேர்த் தலைவன். **32.** காலாட்படைத் தலைவன். **33.** படைத் தலைவன் றொழின்முறை. **34.** இலச்சினைத் தலைவன். **35.** புன்னிலத் தலைவன். **36.** நாட்டு வருவாய்த் தலைவன் செயல். **37.** இன்னிலை வாணிகத் தவக்குறியினராக ஒற்றரை யமைத்தல். **38.** நகரத் தலைவன் செயல்.

---

15. உணவுப்பொருள்—நெல் முதலிய தானியங்களும் எண்ணெய், உப்பு முதலியனவுமாம்.

17. குப்பியம்—அகக்காழன, புறக்காழனவாகிய மரம் புற்களும், செடி கொடிகளும், பொன் வெள்ளி யல்லாத செம்பு, ஈயம், இரும்பு முதலிய உலோகங்களுமாம்.

19. துலைமுதலளவை—நிறுத்தலளவை, முகத்தலளவை முதலிய அளவுகருவிகள். நிலை—ஏற்றத்தாழ்வின்மை.

20. நில அளவை—காவத முதலியன. கால அளவை—விநாடி முதலியன.

21. உல்குபொருள்—அரசற்குக் கொடுக்கப்படும் சுங்கப்பொருள்.

24. கள்வினை—கள் வடித்தல் விற்றலாகிய தொழில்கள்.

34. பத்திர முதலியவற்றில் அரசன் பெயர், உருவம் முதலிய அடையாளங்களைப் பதிப்பிக்கும் தொழிற்சாலைத் தலைவன்.

35. புன்னிலம்—பசு முதலியன மேய்தற்குரிய புல், நீர் முதலியவைகளையுடைய நிலம்.

37. குறியினரென்பதை இன்னிலை முதலியவற்றோடும் ஒட்டுக. இன்னிலை—இல்லறநிலை. நாட்டு நிகழ்ச்சிகளை மறைவிலறிந்து கூறுதற்கு ஒற்றர்களை இல்லறத்தான் முதலியோர் வேடம் புனைவித்து விடுதல்.

## 3-ஆம் அதிகாணம்

### * அறநிலையாட்சி

1. வழக்கிய னிறுத்தல். 2. வழக்குரை வரைதல். 3. மணவியல். 4. தாயபாகம். 5. நில வழக்கு. 6. கட்டுப்பாடு கடவாமை. 7. கடன் கோடல். 8. அடைக்கலப் பொருளியல். 9. அடிமைப்பணியாளர் இயல்பு. 10. கூடித் தொழில்புரிதல். 11. விற்றுக்கொண்டு மாறுபடல். 12. நல்கியதை நல்காமை. 13. உரிமையில்லாதவன் விற்றல். 14. உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபு. 15. வன்செய்கை. 16. வன்சொல்.

---

### 3-ஆம் அதி. குறிப்புரை.

* அறநிலையாட்சி—அறநூல்களை ஆராய்ந்து அந்நெறியில் நின்று உலகியல்வழக்குகளைத் தீர்க்கும் அதிகாரிகளின் ஆளுதற்றன்மை.

4. தாயம்—தந்தை முதலியோர்க் குரியதாய் மைந்தர் முதலியோரால் கூறிட்டுக் கொள்ளத்தக்க பொருள்.

6. கட்டுப்பாடு—ஒருவன் இதனை யான் செய்வேனென்று துணிதலையும், பலர் கூடி இஃதிவ்வாற் செய்யத்தக்கதென்று துணிதலையும் பற்றி நிகழ்வதாம்.

9. அடிமையாளரியல்பு, பணியாளரியல்பு எனக் கொள்க. அடிமையாளர்—பிறர்வயப்பட்டுப் பணிசெய்பவர்.

10. வணிகராதல், பிறராதல் பலர்கூடி வாணிக முதலிய கூட்டுத் தொழில்புரிதல்.

11. விற்றுக்கொண்டு மாறுபடல், விற்று மாறுபடல், கொண்டு மாறுபடல் என இயையும். விற்று மாறுபடல்—விலை பெற்று அதற்குரிய பொருளைக் கொடுக்க மறுத்தல். கொண்டு மாறுபடல்—விலை கொடுத்து அதற்குரிய பொருளை யேற்றுக்கொள்ள மறுத்தல்.

12. நல்கியது—அற முதலியன குறித்துக் கொடுப்பதாக உறுதி கூறப்பட்ட பொருள்,

17. தண்டக் கொடுமை. 18. சூது புள் விலங்கு விளையாட்டு. 19. ஒழிபு.

---

## 4-ஆம் அதிகரணம்

### * சிறுபகைகளைதல்

1. காருகரால் தீங்குநேராமற் காத்தல். 2. வணிகர்களால் தீங்கு நேராமற் காத்தல். 3. தெய்விகப் பேரச்ச மாற்றம். 4. ஏமாற்றிப் பிழைப்பவரால் தீங்கு நேராமற் காத்தல். 5. சித்த

---

17. தண்டக்கொடுமை—தடி முதலிய கருவிகளாலும் கையாலும் ஊறுபடப்புடைத்தல்.

18. புள் விலங்கு—கோழி, யாடு முதலியன.

19. ஒழிபு—இவ்வத்தியாயத்திற் கூறப்படாத வழக்குநிலை சில வற்றைக் கூறும் பிரகரணம்.

### 4-ஆம் அதி. குறிப்புரை.

* அரசன் தன் நாட்டினுள்ளும் அரணுள்ளும் காருகர் முதலிய உட்பகையால் நேருந் தீங்குகளைப் பரிகரித்தல்.

1. காருகர்—தச்சர், கொல்லர், தட்டார் முதலிய சிற்பத்தொழிலாளர். இவர்களால் தம் நாட்டினர்க்குத் தீங்கு வாராதபடி காத்தல்.

2. வாணிகர்களால் நேரும் தீங்கு—நிறுத்தலளவை முதலியவற்றால் கொள்வது மிகைபடலும், கொடுப்பது குறைபடலுமாம்.

3. தெய்விகப்பேரச்சம்—நீர், நெருப்பு, வறுமை முதலியவற்றால் உண்டாம் பயம்; மாற்றம்—அதற்கு எதிர்ச்செயல்.

4. ஏமாற்றம்—வஞ்சித்தல்; கைக்கூலி முதலியவை பெறுதல். கைக்கூலியை இக்காலத்தார் “இலஞ்சம்” என்ப.

5. சித்தவுருவினர்–மழித்தல், நீட்டல் முதலிய தவவேடமுடையோர். துயில்வித்தல், மறைதல் முதலியவற்றைச் செய்யும் மந்திரங்களாற் கள்வர் முதலியோரை வெளிப்படுத்தல்,

உருவினரால் வஞ்சகரை வெளிப்படுத்தல். 6. ஐயுறலுருச் செயல்களாற் கள்வரைப் பிடித்தல். 7. விரைவில் இறந்தானை ஆராய்தல். 8. சொற்செயல்களால் வினுதல். 9. அதிகாரிகளால் தீங்கு நேராமற் காத்தல். 10. உறுப்பொன்று களைதற்கொத்த பொருட்டண்டம். 11. சுத்த சித்திர தண்டவிதி. 12. கன்னியைத் துன்புறுத்தல். 13. நெறிகடத்தல்.

---

6. ஐயுறல்—தன்னைக் குறித்துப் பிறர்பால் நிகழ்வதும், பிறரைக் குறித்துத் தன்பால் நிகழ்வதும் என இருதிறப்படும். உரு—களவுசெய்யப் பட்ட பொருளோடு காணப்படுவது. செயல்—கன்னமிடல் முதலியன.

7. நோய் முதலியனவின்றி அகாலத்தில் விரைவில் உயிர் நீங்கினானைப் பற்றி, இவன் தற்கொலையால் மாண்டானோ? அல்லது பிறராற் கொல்லப் பட்டானோ? எனச் சோதித்தல்.

8. சொற்களான் வினுதல், செயல்களான் வினுதல் என இயையும். கள்வனொருவனை, இன்சொற்கூறியாதல், அடித்தொறுத்தாதல் உண்மை வெளிப்படச்செய்தல்.

9. அதிகாரிகள் — தலைமைவினையாளரும் அவர்க்குட்பட்ட வினையாளரும் ஆவர். தீங்கு—குடிகளைத் துன்புறுத்தல், பொருள்கவர்தல் முதலியன.

10. களவு முதலிய தீச்செயல் செய்தாற்குக் கால் கை முதலியவற்றுள் ஒன்றைக் களைதலாக விதிக்கப்படும் தண்டத்தை விலக்கி அதற்குத் தகப் பொருள் இறுக்கச்செய்தல்.

11. சுத்தம், சித்திரம் எனத் தண்டவிதி இருவகைப்படும்: சுத்த தண்டம்—துன்பம் நிகழாவாறு கொல்லுதல். சித்திரதண்டம் — சித்திர வதை; ஊறுபடுத்திக் கொல்லுதல்.

12. கன்னி — பெதும்பைப்பருவத்தவள். துன்புறுத்தல்—வலிந்து புணர்தல் முதலியன. இதற்குரிய தண்டவிதி இதன்கட் கூறப்படும்.

13. நெறிகடத்தல் — உண்ணத் தகாதவற்றை உண்டல், சேரத் தகாதவளோடு சேர்தல் முதலியன. இதற்குரிய தண்டம் இதன்கட் கூறப் படும்.

## 5-ஆம் அதிகாரணம்

### * வஞ்சித்தொறுத்தல்

1. மறைவின் ஒறுத்தல். 2. பொன் முதலியவற்றை மிகுதி யாகக்கோடல். 3. துணைவரைப் புரத்தல். 4. அமைச்சர் முதலியோர் இயல்பு. 5. ஒழுக்கவரையறை. 6. அரசியற் புத்தமைப்பு. 7. தனித் தலைமையரசு.

---

## 6-ஆம் அதிகாரணம்

### * மண்டலயோனி

1. அங்கங்களின் நிறைவு. 2. வினைசெயல் பயனுகர்கருவி.

---

### 5-ஆம் அதி. குறிப்புரை.

* வஞ்சிது ஒறுத்தல் — சிற்றரசர்கள், அதிகாரிகள் குடிமக்கள் இவர்களுள் அரசற்கும், நாட்டுக்கும் இடர்விளைக்கும் உட்பகைவராக வுள்ளவர்களை ஒற்றராலுணர்ந்து அரசன் கட்டளையிட அதனையேற்று மறைவாக அவர்களை ஒறுத்தடக்குதல்.

1. பிறர் அறியாவாறு ஒறுத்தல்.

2. மிகுதி—முன் ஏற்பட்ட அளவின் அதிகம். அரசனுக்குப் பொருணிலை குறையுங்கால் அளவின்மிகக் கொள்ளுதலை யுணர்த்துவது.

3. துணைவராவார்—அரசற்கு அறிவுநூல், வினை என்பவற்றில் துணைநின்றுதவுவோர்.

4. அமைச்சர் முதலியோர் அரசனிடத்து எவ்வாறொழுகல்வேண்டும் என்பதை உணர்த்துவது.

6. எக்காரணத்தினாலாவது ஓரரசன் அரசியற்குதவானாக, அவன் புதல்வனுக்கு முடிசூட்டி முன்னை அரசியலைப் புதுப்பித்தமைத்தல்.

7. தனித்தலைமை—பொதுவறப் புரக்கும் உரிமை.

### 6-ஆம் அதி. குறிப்புரை.

* மண்டலமாவது—வெற்றியை விரும்புவோன், பகைவன், நடுவன், அயலான் என்னும் நால்வகை உறுப்புக்களையுடையது. யோனி—பொருள். பின்வரும் "அறுவகைக்குணம்" என்னும் அதிகரணத்திற்கு இது பொருளாகும் என்பதாம்.

1. அங்கங்கள்—அரசியற்குரிய உறுப்புக்கள். அவை—அரசு, அமைச்சு, நட்பு, பொருள், நாடு, அரண், படை என்னும் ஏழுமாம்.

2. வினைசெயற்கருவி, பயனுகர்கருவியென இவையும். வினையாவது— தனக்குரியவும், பிறர்க்குரியவும் என இருவகைப்படும். தனக்குரியன— அரணமைத்தல் முதலியன, பிறர்க்குரியன—சந்தி, விக்கிரகம் முதலியன,

## 7-ஆம் அதிகரணம்

### * அறுவகைக்குணங்கள்

1. அறுகுண வரையறை. 2. குறைவொப்புமிகுதிகளின் துணிபு. 3. வலியதைப்பற்றி யொழுகல். 4. குறைவொப்பு மிகுதியாம் வலிநிலைகளுட் குணநலம்பற்றல். 5. இழிந்தோன் சந்திகளை யேற்றல். 6. பொருதிருத்தல். 7. நட்புக்கொண் டிருத்தல். 8. பொருது மேற்சேறல். 9. நட்புக்கொண்டு

---

### 7-ஆம் அதி. குறிப்புரை.

* அறுவகைக்குணங்கள்—சந்தி, விக்கிரகம், யானம், ஆதனம், சமாச்சிரயம், துவைதீபாவம் என்பன. இவற்றை முறையே நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், கூட்டல், பிரித்தல் என்று கூறுவர் பரிமேலழகர் (திருக்குறள் 425 உரை).

1. அறுகுணம்—சந்தி விக்கிரகம் முதலியன.

2. குறைவு ஒப்பு மிகுதிகள்—பொருள் படைகளைப் பற்றியவை.

3. வலியதைப்பற்றி யொழுகலாவது—முற்கூறிய அறுவகைக்குணங்களையும் இவ்விரண்டாகக்கொண்டு ஒத்தவலியுடைய இரண்டனுள் தனக்கு நலந்தரும் ஆற்றலுடையதை மேற்கோடல்.

4. பகைவன்வலியினும், தன்வலி குறைதல், ஒத்தல், மிகுதல் என்னும் இவற்றுள் எத்தகையதெனச் சீர்தூக்கிப்பார்த்து மிக்கதைப்பற்றி யொழுகல்.

5. வலிகுறைந்தானொருவன் வலிமிக்க அரசற்குப் பொருள், படை, நிலங்களைக் கொடுத்துச் சந்திசெய்வித்துக்கோடல் நன்றென்பது.

6. இருத்தல்–அறுவகைக்குணங்களுள் ஒன்று. பொருதிருத்தலாவது–பகைவனோடு போருளுற்றித் தன்னுட்டின்கண் இருத்தல்.

7. நட்புக்கொண்டிருத்தலாவது–போர்ச்செலவு வலியற்றிருக்குங்கால் பகைவனோடு சந்திசெய்துகொண்டிருத்தல். சந்தி—நட்பாக்கல்.

8. பொருது மேற்சேறல்—பின்றொடர்ந்த பகைவரோடு பொருது, தன்னோடெதிர்த்த பகைவனைநோக்கிச் செல்லுதல். மேற்சேறலை யானமென்ப.

9. நட்புக்கொண்டு மேற்சேறலாவது — ஒரு பகைவனைக்குறித்துச் செல்லுங்கால் தன்னைப் பின்றொடரும் மற்றொரு பகைவனோடு சந்திசெய்துகொண்டு மேற்சேறல்.

மேற்சேறல். 10. கூடி மேற்சேறல். 11. கலக்கமுடையானும் தீங்குபுரிபவனுமாகிய பகைவர் இருவருள் மேற்சேறற்குரியானைத் துணிதல். 12. பிரகிருதிகளின் குறை பொருணசை வெறுப்புக் காரணம். 13. கூடித் தொடர்ந்துசெல்வோரை ஆராய்தல். 14. சந்திசெய்துகொண்டோர் பிரிந்துசேறல். 15. வரையறையுடையது, வரையறையில்லது, பிரிந்தவனைப்பற்றியது என்னும் சந்திகள். 16. பிரித்தலைக் காரணமாகவுடைய சந்தி விக்கிரகங்கள். 17. மேற்சேறற்குரியான் செயல். 18. அருளுதற்குரிய நண்பர்கள்.

---

10. கூடி மேற்சேறலாவது—தன்னிற் குறை வொப்பு மிகுதியான் வன்மைவாய்ந்த துணைவர் பலருங்கூடிப் பகைமேற் செல்லுதல்.

11. இருதிறத்துப் பகைவருட் சேறற்குரியான் :—பல பகைவரையும் விதனங்களையும் உடையான். தீங்குபுரிபவன்—நாடோறும் தனக்கு இடர் விளைப்பவன். இவ்விருவருள் யாரைநோக்கிப் போர்செய்யப் புறப்படல் வேண்டுமென்பதை ஆராய்ந்து துணிதலைக் கூறுவது.

12. பிரகிருதிகள்—புரோஹிதன் அமைச்சன் முதலியோர். அவர்கள் பால் குறைமுதலியன உண்டாதற்குரிய காரணங்களைக் கூறுவது.

13. கூடித் தொடர்ந்துசெல்வோர் — வெற்றிகுறித்துச் செல்லும் பேரரசனைப் பிரியாது பின்றொடர்ந்து கூடிச்செல்லும் சிற்றரசர்கள்.

14. பகைவிருவர் ஒருவரையொருவர் சந்திசெய்துகொண்டபின் இருவரும் மற்றொருபகைவனை வேறல்கருதித் தனித்தனியே வெவ்வேறு திக்குகளை நோக்கிப் போதல்.

15. காலம், இடம், காரியம் எனும் இவற்றால் வரையறைசெய்யப்பட்டு நிகழ்வது வரையறையுடையதெனவும், அதற்கு மறுதலையாயது வரையறையில்லதெனவும், எக்காரணத்தாலேனும் தன்னில் நீங்கினானோடு சந்திசெய்துகொள்வது பிரிந்தவனைப்பற்றியதெனவும் கொள்க.

16. பிரித்தலை (துவைதீபாவத்தை)க் காரணமாகக்கொண்டு நிகழும் சந்திவிக்கிரகங்களின் இயல்பைக் கூறுவது.

17. மேற்சேறற்குரியவன் — தன்னைக்குறித்து வரும் பகைவனை எதிர்த்து மேற்செல்பவன். அவன் தன்னைப் பின்தொடர்ந்து கூடிவரும் துணைவர்பால் நடந்துகொள்ளவேண்டியதும், அத்துணைவர் அவன்பால் நடந்துகொள்ளவேண்டியதுமாகிய ஒழுங்குகள்.

18. ஓரரசன் தன்னுட்டை அடுத்த நாட்டிற்கு அடுத்துள்ள நாட்டு நண்பருள் யார்க்கு உதவிபுரிந்து அருளவேண்டுமென்பது இதன்கட் கூறப்படும்.

*19.* நட்பு, பொருள், நிலம் செயல்களாலாம் சந்திகள். *20.* பக்கத் துறையும் பகைவன்செயல். *21.* குறைந்த ஆற்றல்களின் நிறைவு. *22.* வலியவனோடு பொருது மறைந்துகோடற்குரிய காரணங்கள். *23.* படைவலியால் தாழ்த்தப்பட்டோன் செயல். *24.* படைவலி யாற் பகைவனைத் தன்பாற்படுத்துவோன் செயல். *25.* சந்தி கன்மம். *26.* சந்தியின் விடுதலை. *27.* நடுவன்பால் ஒழுகல். *28.* நொதுமலன்பால் ஒழுகல். *29.* மண்டல்சரிதம்.

---

*19.* ஒருவனோடொருவன் செய்துகொள்ளும் சந்திக்கு நட்புமுதலியன காரணமாகுமென்பது.

*20.* ஓர் அரசன் போர்குறித்துச் சென்றிருக்குங்கால் அடுத்திருக்கும் பகைவன் அவ்வரசனது நிலப்பகுதியைக் கவர்தல் இதன்கட் கூறப்படும்.

*21.* ஆற்றல்களாவன—அறிவு ஆண்மை பெருமை என்னும் இவை. இவற்றை முறையே மந்திரசக்தி, உற்சாகசக்தி, பிரபுசக்தி யென்ப முதனூலார்.

*22.* வலியவன்—ஆற்றன்மிக்க பகைவன். மறைந்துகோடல்—தன் அரண்புகுதல்.

*23.* பகைவன் படைவன்மையால் தாழ்த்தப்பட்ட அரசன், வெற்றி விருப்பால் அப்பகைவனைக் குறித்துச் செய்யவேண்டியன கூறுவது.

*24.* தன் படைவன்மையாற் பகைவனைவென்று தன்பாற் கொணர் வித்தோன் செயற்பாலன கூறுவது.

*25.* சந்திகன்மம்—சூளுறவு முதலியவற்றால் நட்பை உறுதிப்படுத்தலைப் பற்றிக் கூறுவது.

*26.* சந்திநிமித்தம் அது செய்யப்பட்டான்பால் உறுதிப்பொருட்டு வைக்கப்பட்ட தன் புதல்வன் முதலியோரை விடுவித்தற்குரியன கூறுவது. சந்தி—ஈண்டு உபசாரத்தால் அது குறித்து வைக்கப்பட்ட புதல்வன் முதலியோரை உணர்த்தும்.

*27.* நடுவனை "மத்தியமன்" என்று முதனூல் கூறும். இவன் தனக்கும் பகைவற்கும் அனுகூலப் பிரதிகூல நிலையில் நடுநிற்போன். இவன்பால் அரசன் ஒழுகுதலைக் கூறுவது.

*28.* நொதுமலனை "உதாசீனன்" என்று முதனூல் கூறும் இவன் தன்னிடத்தும் பகைவனிடத்தும் விருப்புவெறுப்பற்றிருப்போன். இவன் பால் அரசன் ஒழுகுதலைக் கூறுவது.

*29.* மண்டலம் — ஈண்டுப்பகைவரையும் நட்டோரையும் குறிப்ப தாகும். அவர்பால் அரசன் ஒழுகுவதைக் கூறுவது.

## 8-ஆம் அதிகரணம்

### * விதனம்விளம்பல்

1. பகுதிகளின் விதனக்குழு. 2. அரசற்கும் அரசியற்குமுரிய விதனவாராய்ச்சி. 3. புருடவிதனக்குழு. 4. துன்பக்குழு. 5. தடைக்குழு. 6. பொருள்கொடாமைக்குரிய காரணக்குழு. 7. படைவிதனக்குழு. 8. நட்டோர்விதனக்குழு.

---

### 8-ஆம் அதி. குறிப்புரை.

* விதனம்—துன்பந்தருஞ்செயல்; அது பலவகைப்படும். அவ்வகைகளை அவ்வப் பிரகரண விளக்கங்களிற் காண்க.

1. பகுதிகள்—அமைச்சர் புரோஹிதர் முதலிய பிரகிருதிகள்.

2. அரசியல்—ஈண்டு அதற்குரிய அங்கங்களை உணர்த்தும். அங்கங்கள் அமைச்சு முதலியன. விதனங்களின் பெருமை சிறுமைகளும், களைய வேண்டும் உபாயமும் கூறுவது.

3. புருடற்குரிய விதனங்களாவன—"வேட்டம் கடுஞ்சொல் மிகு தண்டம் சூது பொருளீட்டங் கட்காமமோ டேழு" மாம். இவை விருப்பு வெறுப்புக்களால் உண்டாவன.

4. துன்பங்கள்—தெய்வத்தானும் மக்களானும் உண்டாவன. அவற்றின் எண், இயல், பெருமை, சிறுமை முதலியவற்றைக் கூறுவது.

5. தடையாவது—அமைச்சர் முதலிய அதிகாரிகளின் தீயசெயல்களால் அரசனுடைய காரியங்கட்கு இடையூறு விளைதல். அதற்குரிய காரணங்களைக் கூறுவது.

6. பொருள்—ஈண்டு அரசற்கு இறுக்கவேண்டிய இறைப்பொருள் முதலியன.

7. படை—யானை குதிரை தேர் காலாள் என்னும் நால்வகையுறுப்பினதாய மூலப்படை, துணைப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, பகைப்படை என அறுவகைத்தாம். அதற்கு நேரும் விதனங்கள் பெருமைப்படுத்தாமை முதல் முப்பத்துமூன்றுவகைப்படுமென்று கூறுவது.

8. நட்டோர்—அரசனுடைய நண்பர்கள்.

## 9-ஆம் அதிகாரணம்

### * போர்ச்செலவு மேற்கொள்வோன் செயல்

1. ஆற்றல் இடம் காலங்களின் வன்மை மென்மை அறிதல். 2. மேற்சேறற்குரிய காலங்கள். 3. படைசெலுத்துதற்குரிய காலங்கள். 4. சந்நாக குணங்கள். 5. எதிர்ப்படையின் செயல். 6. பின்னர் நிகழும் கொடுஞ்செயல்களை ஆராய்தல். 7. அகப் புறப் பகுதிகளின் சினமடக்கல். 8. குறைவழிவூதியங்களின்

---

### 9-ஆம் அதி. குறிப்புரை.

* போர்குறித்துச் செல்லமுயலும் அரசன் அச்செலவிற்குமுன்னரே ஆராய்ந்து செயற்பாலன இன்னவென்பதைக் கூறுவதாம்.

1. ஆற்றல் — மந்திரசக்தி முதலியன. வன்மை மென்மையறிதல், பகைமேற் சேறற்பொருட்டு.

3. மூலப்படை முதலிய படைகளுள் இன்ன படையை இன்ன காலத்திற் செலுத்தல்வேண்டுமென்பதைக் கூறுவது.

4. சந்நாகம்—கவசமுதலிய போர்க்கருவிகளை மேற்கோடல்; ஈண்டுப் போர்ச்செயற்குரிய படைகளின் முயற்சியைக் குறிப்பதாகும். குணங்கள்—சிறப்புமுறைகள்.

5. எதிர்ப்படை —'பகைப்படைகளோடுபொருது அழிக்கும் ஆற்றலுடைய படைகள்.

6. ஒருவன் போர்ச்செலவுடையனுக அவற்குப் பக்கத்துறையும் பகைவர் இழைக்கும் தீங்குகளைப்பற்றிய ஆராய்ச்சி, இதன்கட் கூறப்படும்.

7. அகப்பகுதிகள் புறப்பகுதிகள் என இயையும்; அகப்பகுதிகள்—அமைச்சர் புரோகிதர் முதலியோர். புறப்பகுதிகள்—நாட்டின் எல்லையைக் காப்போர் முதலிய அதிகாரிகள். அவர்களுடைய சினம் அடக்கற்கு வேண்டுவன செய்தலைக் கூறுவது.

8. போர்குறித்துச் செல்லும் அரசன் அதனால், தன் ஊர்திகளுக்கும், போர்வீரர்களுக்கும் நேரும் குறையையும், தானியம், பொன் முதலிய பொருட்செலவையும் அப்போர்ச் செலவால் ஏற்படும் ஊதியத்தையும் சீர்தூக்கி ஆராய்தல்வேண்டுமென்பதைக் கூறுவது. அழிவு—பொருட்செலவு,

ஆராய்ச்சி. 9. அகப்புற இடர்கள். 10. வெறுக்கத்தக்கவரும், பகைவரும் விளைக்கும் இடர்கள். 11. பொருளழிவையங்களோடமைந்த இடர்கள். 12. அவற்றைக் களையும் உபாய விகற்பங்களால் உண்டாம் சித்திகள்.

---

## 10-ஆம் அதிகாணம்

### * போர்நிகழ்ச்சி

1. பாசறையமைத்தல். 2. பாசறைநோக்கிச் சேறல். 3. படைவிதனம், கடுவழிச்செல்லுங்காலம் இவற்றினின்றும்

---

9. அகவிடர், புறவிடர் எனவியையும். இடர்—ஆபத்து. அகவிடர் அமைச்சர் புரோகிதர் முதலியோரால் விளைவது. புறவிடர் — எல்லை காவலர் முதலியோரால் விளைவது. அவற்றின் இயல்புகளையும், அவற்றைக் களைதலையும் கூறுவது.

10. வெறுக்கத்தக்கவர்—அரசர்க்கு இடர்விளைப்பவராய் நாட்டினும் நகரினும் உள்ளவர். பகைவர்—இயற்கைப் பகைவருஞ் செயற்கைப் பகைவருமாவர்.

11. பொருள்—ஈண்டுப் பொன் நிலம் நட்பு உடல் முதலியன. அழிவு—இவற்றின் கேடு. ஐயம்—இவற்றின் அழிவைப்பற்றி நிகழ்வது.

12. அவற்றை-முன் (9—10—11-ஆம்) பிரகரணங்களிற் கூறப்பட்ட இடர்களை. உபாயம்—சாமம்முதலியன. விகற்பம்—உபாயங்களைப் பிரயோகிக்கும் வேறுபாடு. சித்திகள்—எதிர்ச்செயல்கள்.

### 10-ஆம் அதி. குறிப்புரை.

* போரைப்பற்றிய செய்திகளைக் கூறுவது.

1. பாசறை—பகைமேற்சென்ற படை தங்குமிடம்.

2. சேறல்—நலந்தரும் காலம் இடம் முதலியன நோக்கிப் போர் குறித்துப் புறப்படல்.

3. படைவிதனம்—பெருமைப்படுத்தாமை முதலியவற்றால் உண்டாம் துன்பங்கள். கடுவழி—நீரற்ற பாலைவனம் முதலியன. பகைப்படையை நோக்கிச் செல்லுங்கால் தன் படைக்கு இவற்றால் நேரும் துன்பங்களைப் போக்கிக் காத்தலைக் கூறுவது,

படைகளைக் காத்தல். 4. வஞ்சகப் போர்வகைகள். 5. தன் படைகளை ஊக்கமுறுத்தல். 6. தன் படைக்குப் பகைப்படையினும் விழுமிய அமைப்பு. 7. போர்க்கள இயல்பு. 8. யானை குதிரை தேர் காலாட்களின் செயல்கள். 9. பக்க கக்க நடுவிடங்களிற் படையளவிற்குத்தக வகுப்புக்களைப் பிரித்தமைத்தல். 10. வன்படை மென்படைகளைப் பிரித்தமைத்தல். 11. யானை குதிரை தேர் காலாட்களின் போர்வகைகள். 12. தண்டம் போகம் மண்டலம் அசங்கதம் என்னும் படைவகுப்பமைத்தல். 13. அவற்றுள் எதிர்ப்படை வகுப்பமைத்தல்.

---

4. வஞ்சகப்போர் — பகைவன்படைகளுக்குப் படைவிதனம், கடுவழிச்செல்லுங்காலம் முதலியன நேர்ந்திருக்கும் அமயத்தையுணர்ந்து அவற்றோடுபொருது அழித்தல்.

5. ஊக்கமுறுத்தலாவது—வீரச்செயல் முதலியவற்றைப் பாராட்டிப் போரில் உற்சாகமுறச்செய்தல்.

6. விழுமிய அமைப்பாவது—பகைவர் படைவகுப்பினும் சிறப்பத் தன் படைகளை வகுத்தமைத்தல்.

7. போர்க்களம் வெளியிக்க ஒத்தநிலமாகவும், இறுகியதாகவும் இருத்தல்வேண்டுமென்பது.

9. பக்கம்—படைவகுப்பின் முன்புறத்து வெளிமருங்குகள். கக்கம்—அதன் பின்புறத்து உண்மருங்குகள். நடு—இவற்றின் நடு. வகுப்பு—படைவகுப்பு; வியூகம்.

10. வன்படை—தந்தை முதலிய குலவழிவந்த ஆற்றல் மிக்கது. மென்படை—அங்ஙனமல்லாதது ; அச்சமுடையதுமாம்.

12. இவை வியூகவகைகளாகும். இவற்றின் இலக்கணமும் பிறவும் இப்பிரகரணவிரியிற் காண்க.

13. அவற்றுள்–தண்டம் முதலிய படைவகுப்புக்களுள். எதிர்ப்படை வகுப்பமைத்தலாவது—இன்ன வியூகத்திற்கு இன்ன வியூகம் எதிராகும் எனக் கண்டு அமைத்தல்.

## 11-ஆம் அதிகாணம்

### * குழூஉச்செயல்

1. வேறுபடுத்தலே மேற்கோடல். 2. மறைவிற்கோறல்.

---

## 12-ஆம் அதிகாணம்

### * ஆற்றலிலான்செயல்

1. தூதுவன்செயல் 2. அறிவுப்போர். 3. படைத்தலைவர் கொலை. 4. மண்டலத்தை ஊக்குதல். 5. படைக்கலம், நெருப்பு, நஞ்சு இவற்றை மறைவிற் பிரயோகித்தல். 6. சூலம் முதலிய சுமப்போர், நட்புப்படை, புல் விறகு கொணர்வோர் இவர்களைக்கோறல்.

---

### 11-ஆம் அதி. குறிப்புரை.

* குழூஉ—ஈண்டு அம்பு வாள் முதலிய படைகளையுடையராய்த் தம்மிற்கூடி அரசற்கு அடங்காமல் ஒழுகுவோர்கூட்டம். செயல்—அக்குழுவைக்குறித்து அரசன் மேற்கொள்ளும் காரியம்.

1. வேறுபடுத்தல்—பேதோபாயம் ; கூட்டத்தைப் பிரித்தற்குரியது.

### 12-ஆம் அதி. குறிப்புரை.

* பேராற்றலுடையான் சந்தியை விரும்பாதபொழுது சிறிதும் ஆற்றலிலாத அரசன் செயற்பாலன கூறுவது.

1. தூதராவார்—சந்தி விக்கிரகங்கட்கு வேற்றுவேந்தரிடைச் செல்வோர் ; தான் வகுத்துக்கூறுவானும், கூறியதுகூறுவானும், ஓலை கொடுத்துநிற்பானும் என மூவகைப்பட்டு, தலை இடை கடையாக எண்ணப்படுவர்.

2. அறிவினால் நிகழும் போராவது—" காமம் வெகுளி முதலிய குற்றங்களின் வயப்படும் பல அரசர்கள் அழிவெய்தினர் ", என்பது முதலிய எடுத்துக்காட்டுக்களால் பகைவரை வஞ்சித்தல்.

4. மண்டலம்—நட்டோர் முதலிய குழு. ஊக்குதல்—தற்காப்பின் நிமித்தம் போர்ச்செயலிற் புகுவித்தல்.

5. படைக்கலம்—அம்பு வாள் முதலிய ஆயுதங்கள்.

6. இங்குக் கூறப்பட்டோர் பகைவரைச் சார்ந்தோர். போர் நிகழுங்காற் பகைவர்க்குத் துணைபுரியவரும் இவர்களை அறிந்து அழித்தல்வேண்டுமென்பது.

7. கபடோபாயத்தால் அழித்தல். 8. தண்டத்தால் அழித்தல். 9. தனியனாய் வேறல்.

---

## 13-ஆம் அதிகாரணம்

### * பகையரண் எய்தும்வழி

1. வேறுபடுத்தல். 2. உபாயத்தால் வெளிப்படுத்தல். 3. ஒற்றர்களை இருத்தல். 4. சூழ இருக்கச்செய்தல். 5. இடுக்கட்படுத்தல். 6. எய்திய அரணை யினிதினடக்கல்.

---

7. கபடோபாயம்-பகைவன் தேவாலயப் பிரவேசம் முதலிய செய்யுங்கால் அவன்மேற் பொறிகளாற் கல்வீழ்த்தல், சுவர்வீழ்த்தல் முதலியன.

8. தண்டம்—துன்புறுத்தல், கோறல், பொருணனிகோடல் முதலியன.

9. ஓரரசன் துணையின்றித் தன்பகைவனை வெல்லுதல்.

### 13-ஆம் அதி. குறிப்புரை.

* பகைவருடைய அரணை அடையும் உபாயத்தைக் கூறுவது.

2. உபாயம்—ஈண்டுக் கபடோபாயம்; அதனால் பகைவரை அவர்தம் அரணினின்றும் வெளிப்படுத்தலைக் கூறுவது.

3. இருத்தல்—ஈண்டுப் பகைவர்நாட்டில் இருக்கச்செய்தலாம்.

4. பகைவரரணைச் சூழ்ந்திருக்கும்படி தன் படைகளையமைத்தல்.

5. இடுக்கட்படுத்தலாவது — பகைவரரணைக் கைப்பற்றுமுகமாக அவர்க்கு இடுக்கண்விளைத்தல். எப்பொழுது எவ்வாற்றால் அரண்கோடல் வேண்டுமென்பதைக் கூறுவது.

6. அரண்—பகைவரது; அஃது அதன்கண் உள்ளாரை யுணர்த்தும். அவரை இனிதினடக்கலாவது—"முன்னில்லாத அரசனிவன் எவ்வாறு ஆட்சிபுரிவானோ?" என்று தன்னைப்பற்றி அவர் கொள்ளும் சங்கையை ஒழித்து நம்பிக்கையுறச்செய்தல்,

## 14-ஆம் அதிகாரணம்

### * மறைவுச்செயல்

*1.* பகைக்கொலைப் பிரயோகம். *2.* வஞ்சித்தல். *3.* தன் படைக்கு உண்டாகும் இடர்களுக்கு மறுதலை.

---

## 15-ஆம் அதிகாரணம்

### * தந்திரவுத்தி

*1.* தந்திரவுத்திகள்.

இந்நூல் பதினைந்து அதிகரணங்களாகவும், நூற்றைம்பது அத்தியாயங்களாகவும், நூற்றெண்பது பிரகரணங்களாகவும் வகுக்கப்பட்டுள்ளது. ஆறாயிரம் கிரந்தங்களை உடைத்து. முப்பத்திரண்டு எழுத்துக்கள் கொண்டது ஒரு கிரந்தமாகும்.

---

### 14-ஆம் அதி. குறிப்புரை.

* மறைவுச்செயல் பகைவரை அழித்தற்குரிய மந்திரம், மருந்து இவைகளை மறைவாக உபயோகித்தலைப்பற்றிக் கூறுவது.

*1.* பகைக்கொலைப் பிரயோகமாவது—பகைவரைக் கொல்லுதற்கு மருந்து முதலியன உபயோகித்தல்.

*2.* வஞ்சித்தல்—மருந்து மந்திரப் பிரயோகங்களால் பகைவர்க்கு விகாரரூபம், பசியின்மை முதலியவற்றை உண்டாக்குதல். இப்பிரகரணத்தை 'வியப்புண்டாக்கல்' 'மருந்து மந்திரப்பிரயோகம்', என இரண்டாக வகுத்துக்கூறுவர்.

*3.* இடர்—பகைவரால் பிரயோகிக்கப்படும் நச்சுநீர் முதலியவற்றால் விளையும் தீங்கு. மறுதலை—அத்தீங்கை ஒழித்தற்குரிய எதிர்ச்செயல்.

### 15-ஆம் அதி. குறிப்புரை.

* தந்திரம்—நூல்; ஈண்டு இந்நூலையுணர்த்தும். உத்தி— உரைசெய்தற்கு உதவியாம் யுக்திகள்.

*1.* தந்திரம் என்பது ஈண்டு இப் பொருணூலை உணர்த்தும். உத்திகள் அதிகரணம், விதானம் முதலாக முப்பத்திரண்டுவகைப்படும். இவற்றை இப்பிரகரணம் விளக்கிக்கூறும்,

சுலோகம்

* மெல்லிய அறிவுடையவர்களால் அறியத்தக்கதும், சொற் பொருளுண்மைகளால் துணியப்பட்டதும் ஆகிய இப் பொரு ணூல் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தலாகிய அழகு பொருந்தக் கௌடலியனாற் செய்யப்பட்டது.

கௌடலீயம் என்னும் பொருணூலில்
"பயிற்சிபகர்தல்" (விநயாதிகாரிகம்) என்னும் முதலதிகரணத்தில்
"அரசியல்" என்னும் முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

* மென்மை — ஈண்டு ஆராய்ச்சியுழைப்பின் சுருக்கத்தைப் புலப் படுத்தும்.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## முதற் பிரகரணம்—[1]வித்தைவிளம்பல்—ஆன்வீட்சிகீயின் இயல்பு

### இரண்டாம் அத்தியாயம்

**[2] ஆன்வீட்சிகி, [3] திரையீ, [4] வார்த்தை, [5] தண்டநீதி என்னும் இவை வித்தைகளாம்.**

---

[1] இனி நிறுத்தமுறையானே அதிகரணப் பிரகரணங்கள் விரித்துக் கூறப்படும். அவற்றுள் முதலதிகரணத்தின் முதற்பிரகரணம் இரண்டு முதல் நான்குவரையுள்ள மூன்று அத்தியாயங்களால் விளக்கப்படும். கல்வியறிவும் உலகியலறிவும் இல்லாத அரசன் தன் நாட்டைக் காத்தற்குத் தகுதியற்றவனுவான்; ஆதலின், கல்விப்பயிற்சியின் இன்றியமையாமை நோக்கி முதலில் " வித்தைவிளம்பல் " என்னும் இப்பிரகரணம் கூறப்படுகின்றது. இங்ஙனமே அரசனுக்குக் கல்வியின் இன்றியமையாமை கருதித் திருக்குறட் பொருட்பாலில் இறைமாட்சி யென்னும் முதல் அத்தியாயத்தை அடுத்துக் கல்வியென்னும் அதிகாரம் வைக்கப்பட்டமை அறிக.

[2] பொருளுண்மையை ஆராய்தற்குரிய ஏதுக்களை எடுத்துக்கூறும் தருக்கநூல் முதலியன ஆன்வீட்சிகீயாகும்.

[3] இருக்கு, எசுர், சாமவேதங்களாகிய மூன்றன்குழு திரையீ எனப்படும். நான்காவதாகிய அதர்வவேதம் உயிர்களுக்குக் கேடுசூழும் ஆபிசார வேள்விமுதலியவற்றை யுணர்த்தலால் மற்றை மூன்றுவேதங்களினின்றும் வேறுபட்டதாகும். இதுகருதியே, " இருக்கும் எசுரும் சாமமும் இவை தலையாய ஓத்து. இவை வேள்விமுதலியவற்றை விதித்தலின் இலக்கணமுமாய் வியாகரணத்தான் ஆராயப்படுதலின் இலக்கியமுமாயின. அதர்வமும் ஆறங்கமும் தருமநூலும் இடையாய ஓத்து. அதர்வம் வேள்வி முதலிய ஒழுக்கங் கூறுது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமே அன்றிக் கேடுஞ் சூழும் மந்திரங்களும் பயிறலின் அவற்றேடு கூறப்படாதாயிற்று " என்பர் நச்சினார்க்கினியர் (தொல்காப்பியம் புறத்திணையியல் 20-ஆம் சூத்திரவுரை). இருக்கு முதலிய மூன்றும் ஒவ்வொரு—வேள்விவினைக்கும் ஒருங்குகூடியே சாதகமாதலின் அவற்றின் குழூஉ திரையீ என்னும் பெயருடையதாயிற்று.

[4] உழவு, பசுக்காவல், வாணிகம் இம்மூன்றும் வார்த்தை எனப்படும். " வாரிபெருக்கி " என்னும் திருக்குறளில் (—512 உரை) வாரியென்பதைப் பொருள்வருவாயில்கள் எனப் பொருள்கொண்டு " வாயில்களாவன மேல் இறைமாட்சியுள் 'இயற்றலும்' என்புழி உரைத்தனவும் உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் வார்த்தையுமாம் " என்று பரிமேலழகர் கூறியிருத்தல் அறிக.

[5] தண்டநீதி—அரசநீதி. தண்டமென்பது செங்கோலையுணர்த்தும். திருக்குறள் செங்கோன்மை என்னும் அதிகாரத்தின் அவதாரிகையில், " அஃதாவது அரசனுற் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை

[6] ஆன்வீட்சிகீ என்பது திரையீயின் ஒரு கூருக அடங்குமாதலின் அதனை ஒழித்துத் திரையீ, வார்த்தை, தண்டநீதி என்னும் மூன்றும் வித்தைகளென்பர் [7] மானவர்.

திரையீ யென்பது [8] பழியை மறைக்கும் அவ்வளவிற் பயனுடையதென [9] உலகியலுணர்ந்தோர் கூறுவராதலின் அதனையும் ஒழித்து வார்த்தையும், தண்டநீதியுமே வித்தைகளாகுமென்ப [10] பார்கற்பத்தியர். தண்டநீதியுள் வித்தைகள் எல்லாவற்றின் [11] பயனும் அடங்கிக்கிடத்தலின் அஃதொன்றே வித்தையாகு

---

ஒருபாற்கோடாது செவ்விய கோல்போறலிற் செங்கோலெனப்பட்டது. வடநூலாரும் தண்டம் என்ருர்." என்பது பரிமேலழகர் உரை.

[6] ஆன்வீட்சிகீ யென்பது—திரையீயென்னும் வேதங்களைப் பின்பற்றி நிகழும் இயல்பானும், அவ்வேதப்பொருளாராய்ச்சிவடிவமாக இருத்தலானும் அத்திரையீயின்கூருக அடங்குமன்றித் தனியே ஒரு வித்தையாகாதென்பது மானவர் கொள்கை. வேதங்களைப் பின்பற்றிநிகழும் ஆன்வீட்சிகீயின் கூறுகள்—சாங்கியம், யோகம், தருக்கம் என்னும் நூல்களாகும். மற்றவை(வேதப்பொருளாராய்ச்சிவடிவமாகவுள்ள ஆன்வீட்சிகீயின்கூறுகள்) பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சைகளாகும். இதுகருதியே காமந்தகரும் "நான்குவேதங்களும், ஆறு அங்கங்களும், மீமாஞ்சைகளும், தருக்கநூல்களும், தருமசாத்திரங்களும், புராணங்களுமாகிய இவையெல்லாம் திரையீ எனப்படும் என்று கூறுவர்.

[7] மானவர்—மனுவின்வழி வந்தோர்.

[8] வேதங்களை உடன்படாதவனை நாத்திகனென்று கூறுப. அங்ஙனம் கூறுதலான் உண்டாம் பழியை வரவொட்டாமல் மறைக்கும் அவ்வளவிற்கே திரையீ பயன்படுவதென்பதும், அதனல் விளையும் பயன் மிகச் சிறிதென்பதும், ஆதலின் திரையீ தனியாக வித்தைகளுள் ஒன்றென வைத்தெண்ணத் தக்கதன்றென்பதும், இவ்வேதுக்களால் திரையீ விலக்கப்படவே அதனுள் அடங்கிய ஆன்வீட்சிகீயும் விலக்கப்பட்டதாகும் என்பதும் பார்கற்பத்தியர் கொள்கைகளாம்.

[9] உலகியலுணர்ந்தோர்—வார்த்தை தண்டநீதி என்னும் இவற்றை மேற்கொண்டு உலகியற்கடமைகளை உணர்ந்தோர்.

[10] பார்கற்பத்தியர் — பிருகற்பதியின்வழி வந்தோர்; பிருகற்பதி—வியாழன்.

[11] இக்கருத்து, "ஆன்வீட்சிகீ, திரையீ, வார்த்தை என்னும் இவற்றின் நிலைபேற்றிற்கும் பயனுக்கும் கருவியாவது தண்டம்" என்னும் இவ்வாசிரியர்கூற்ருனும் வலியுறுவதாகும். (அதி—1, பிர–1, அத் 4.)

மென்பர்[12] ஔசநசர்.

அவ்வித்தைகள் எல்லாவற்றானும் அறனும், பொருளும் அறியப்படும்; ஆதலின், அவற்றிற்கு [13] அத்தன்மையுளதெனக் கொண்டு வித்தைகள்[14] நான்கே என்பர் கௌடலியர்.

[15] சாங்கியம், யோகம், உலகாயதம் இம்மூன்றும் ஆன்வீட்சிகீ

---

[12] ஔசநசர் — சுக்கிராசாரியரின்வழி வந்தோர்; உசநஸ்—சுக்கிரன்.

[13] அத்தன்மை—வித்தையாந்தன்மை; அவ் வித்தைகளுக்குப் பொது வியல்பு, சிறப்பியல்பு என இருதன்மைகள் உள. அவற்றுள் பொதுவியல்பு அறம் பொருள்களை அறிதற்குக் கருவியாந்தன்மை; இஃதெல்லாவித்தை களுக்கும் ஒக்கும். சிறப்பியல்பாவது—ஒன்றற்கொன்று வேறுபாடாந் தன்மை; அஃது அவ்வித்தைகளைத் தனித்தனியே யெடுத்துக் கூறுமுகமாக விளக்கப்படும்.

[14] ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது; மூன்று முதலாகக் கொள் வோர் கொள்கைகள் பொருந்தாவென்பதாம்.

[15] சாங்கியம் — பிரகிருதி புருடன் முதலிய பொருள்களின் இயல்பு களை விரித்து விளக்குவது. இதன் ஆசிரியர் கபிலராவர். யோகம்—இயமம் நியமம் முதலியவற்றை விளக்குவது. இதன்ஆசிரியர் மகேச்சுரர்(பதஞ்சலி) ஆவர். உலகாயதம்-சார்வாகமதம் இதன்ஆசிரியர் பிருகற்பதியாவார். இவற் றுள் சாங்கியமதக் கொள்கைகளை "சுவை ஒளி யூறோசை நாற்றமென் றைந்தின்—வகைதெரிவான் கட்டே உலகு" (குறள் 28) என்னும் திருக் குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையானும், மணிமேகலை, சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதையானும் (அடி—206—240,) சிவஞானபோத அவையடக்கச்செய்யுளுக்குச் சிவஞானமுனிவர் எழுதிய மாபாடியத்தானும், யோகமதக் கொள்கைகளை சிவஞானபோதம் அவை யடக்கத்து மாபாடியத்தாலும், தொல்காப்பியம் பொருளதிகாரத்துப் புறத் திணையியல் 20ஆம் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையானும், எடுத்துக் காட்டிய உரைச்சூத்திரங்களானும், உலகாயதமதக்கொள்கைகளை சிவஞானபோதம் அவையடக்க மாபாடியத்தானும், மணிமேகலை சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட காதையானும், 'எள்ளாமை வேண்டுவான்' என்னும் (281) திருக்குறளுக்கு "வீட்டினை இகழ்தலாவது— காட்சியே அளவையாவதென்றும், நிலம் நீர் தீ வளி எனப் பூதம் நான்கே என்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றிப் பிரிவான் மாய்வதாய உடம்பின்கண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப்போல வெளிப்பட்டழியுமென்றும், இறந்த உயிர் பின் பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவனாற் செய்யப்படுவன என்றும் சொல்லும் உலோகாயதம் முதலிய மயக்கநூல்களைத் தெளிந்து அவற்றிற்கேற்ப ஒழுகுதல்" என்று பரிமேலழகர் எழுதிய விசேடவுரையானும் விளக்கமாக அறியலாம்.

எனப்படும். [16] திரையீயில் தருமமும் அதருமமும், வார்த்தையில் அர்த்தமும், அநர்த்தமும், தண்டநீதியில் நயமும் அபநயமும், விளக்கப்படும். திரையீ முதலியவற்றின் வன்மை மென்மைகளை ஏதுக்களால் துணியும் ஆன்வீட்சிகீ, உலகத்து மக்களுக்கு இன்பத் துன்பங்களிற் புத்தியைக் [17] கலங்காமல் நிலைப்படுத்தியும், [18] அறிவு சொல் செயல்களில் திறனளித்தும் உபகரிப்பதாம்.

## சுலோகம்

ஆன்வீட்சிகீ, வித்தைகள் எல்லாவற்றிற்கும் [19]விளக்காகவும், கன்மங்கள் எல்லாவற்றிற்கும் உதவியாகவும், அறங்களெல்லா வற்றிற்கும் என்றும் பற்றுக்கோடாகவும் எண்ணப்படுவதாம்.

முதலதிகரணம் முதற் பிரகரணத்தில்
"ஆன்வீட்சிகீயின் இயல்பு" என்னும் இரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[16] இத்தொடக்கம் ஆன்வீட்சிகீயினுல் விளையும் பயனினின்றும் திரையீ முதலியவற்றின் பயன்கள் வேறுபட்டனவாம் என்பதை விளக்கு தற்கு எழுந்தது. திரையீ முதலியவற்றில் தருமாதருமம் முதலிய பயன்கள் தலைமைபற்றிக் கூறப்பட்டனவாதலின் ஒன்றன்பயன் மற்றொன்றில் ஓரோவிடங்களிற் சிறிதுசிறிது கூறப்படினும் முரணின்று என்பதாம். தருமம்—ஈண்டு ஓதல் வேட்டல் முதலியன. அதருமம்—புலாலுண்ணல் முதலியன. அர்த்தம்—உரியகாலத்தில் இட்ட வித்தினுல் விளையும் பயன் முதலியன. அநர்த்தம்—அஃதல்லாதது. நயம்—தனக்கு நலம்விளைக்கும் வலியவனோடு செய்துகொள்ளும் சந்தி முதலியன. அபநயம்—தனக்குக் கேடுவிளைக்கும் வலியவனோடு பகைகோடல் முதலியன.

[17] கலங்காமல் நிலைப் படுத்தலாவது—இன்பத்தில் இறுமாத்தலும் துன்பத்தில் ஈடழிதலுமின்றி ஒருநிலையாக்கல்.

" இன்பத்தி விறுமாந்து தோழேக்கி ஈன்றமத
துன்பத்தி லழுந்துவார் தொல்லுலகி லறியாதார் ".
" மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கும் உள்ளத் துரவோனே ".

என்பன ஈண்டுக் கருதத்தக்கன.

[18] அறிவு முதலிய இம்மூன்றும் முறையே மனம் மொழி மெய்களைப் பற்றி நிகழ்வனவாம்.

[19] ஆராய்தற்குக் கருவியாதல்பற்றி விளக்கெனவும், கன்மத் தொடக்கமுதற் பயனெய்துங்காறும் அதன் செயன்முறைகளின் பல்வகை வேறுபாடுகளை உணர்த்துவதால் உதவியாகுமெனவும், வைதிக இலௌகி கங்களாகிய அறங்கள் எல்லாவற்றையும் துணிதற்குக் கருவியாதல்பற்றிப் பற்றுக்கோடு எனவும் கூறப்பட்டது.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## முதற் பிரகாரணம்—வித்தைவிளம்பல்—[1] திரையீயின் இயல்பு

## மூன்றும் அத்தியாயம்

இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களும் திரையீ என்று கூறப்படும். அதர்வவேதமும் [2] இதிகாசவேதமும் வேதங்களாம். [3] சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, சோதிடம் என்னும் இவை வேதாங்கங்களாம்.

இத் திரையீயாற் கூறப்படும் அறம், நால்வகைவருணங்களையும் ஆச்சிரமங்களையும் அவ்வவற்றிற்குரிய அறங்களில் நிலைப்படுத்தலால் அவற்றிற்கு உபகாரமாக உள்ளது.

வருணதருமங்களாவன :—அந்தணர்க்கு, ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும் இவ்வாறுமாம். அரசர்க்கு, ஓதல் வேட்டல் ஈதல் படைக்கலம்பயிறல் உயிர்களைக் காத்தல் என்னும் இவ்வைந்துமாம். வணிகர்க்கு, ஓதல் வேட்டல்

---

மூன்றும் அத்தியாயக் குறிப்புரை

[1] திரையீயின் இயல்பை இரண்டாம் அத்தியாயத்தின் 3-ஆம் குறிப்பிற் காண்க.

[2] இதிகாசவேதம்—மகாபாரதம் முதலியன. இவற்றை வேதங்கள் என்று கூறலாமாயினும், திரையீ என்னுஞ் சொல்லாற் குறிப்பிடலாகாது என்பது கருத்து.

[3] சிட்சை—எழுத்தை உச்சரிக்கும் முறையைக் கூறுவது. கற்பம்—வேள்வியியற்றும் முறையை உணர்த்தும் போதாயனீயம் முதலியனவாம். வியாகரணம் உலகியற்சொல்லையும் வைதிகச்சொல்லையும் உடன் ஆராயும் ஐந்திரம் பாணிநீயம் முதலியன. நிருத்தம்—வைதிகச்சொல்லை ஆராய்வது ; யாற்கர் என்னும் ஆசிரியராற் செய்யப்பட்டது. சந்தசு—செய்யுளிலக்கணம் ; பைங்கலம் முதலியன. சோதிடம்—சூரியன் முதலிய கோள்களின் சாரங்களை விளக்குவது. இவ்வாறும் வேதபுருடனுக்குச் சிறந்த உறுப்புக்களாம். கற்பம் கைகளும், சந்தசு கால்களும், நிருத்தம் காதுகளும், சிட்சை நாசியும், சோதிடம் கண்களும், வியாகரணம் முகமுமாம் என்ப. இதனை,

> " கற்பம் கை சந்தங் கா லெண்கண்
> டெற்ற நிருத்தஞ் செவி சிக்கை மூக்
> குற்ற வியாகரண முகம் பெற்றுச்
> சார்பிற் றோன்று வாரண வேதம் "(மணிமேகலை 27-100-103)

என்பதனானும் உணர்க.

ஈதல் உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் இவ்வாறுமாம். சூத்திரர்க்கு, இருபிறப்பாளர்மூவர்க்கும் பணிபுரிதல், உழவு, பசுக் காவல், வாணிகம், [4] காருகன்மம், [5] குசீலவகன்மம் என்னும் இவையாம்.

---

[4] காருகன்மம்—சிற்பத்தொழில் முதலியன.

[5] குசீலவகன்மம் — ஆடல் பாடல் முதலியன; குசீலவர்கள் — கூத் தாடுவோர். வருணதருமங்களாக ஈண்டுக் கூறப்பட்டவற்றுள் தொல் காப்பிய முதலிய தமிழ்நூல்களிற் சில வேறுபாடுகள் உள்ளன.

"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"

என்பது தொல்காப்பியம். (தொல்–பொருள்–புறத்திணையியல் சூத்திரம் 20)

ஈண்டு உரையாளர் எல்லோரும் அந்தணர்க்குக் கூறிய அறுதொழில் களில் வேறுபட்டிலர். பதிற்றுப்பத்து என்னும் நூலில் "ஓதல் வேட்டல் அவை பிறர்ச்செய்தல், ஈதல் ஏற்றல் என்று ஆறு புரிந்தொழுகும் அந்தணர்" என்று கூறப்பட்டிருத்தலும் காண்க. இனி, 'ஐவகைமரபின் அரசர்பக்கம்' என்பதற்கு நச்சினார்க்கினியர் "ஓதல் வேட்டல் ஈதல் காத்தல் தண்டஞ்செய்தல் என்னும் ஐவகை என்பர்". இளம்பூரணர் "ஓதல் வேட்டல் ஈதல் படைவழங்கல் குடியோம்பல் என்னும் ஐவகை என்பர்". இவற்றுள் இளம்பூரணர் கொள்கை இந்நூற்கருத்தோடு ஒத்திருத்தல் காண்க. "இருமூன்று மரபின் ஏனோர்பக்கம்" என்பது வணிகரும் வேளாளரும் ஒத்த அறுவகைத் தொழில்களையுடையவர் என் பதைக் குறிக்கும். அங்ஙனமாகவும், நச்சினார்க்கினியர் "ஓதல் வேட்டல் ஈதல் உழவு நிரையோம்பல் வாணிகம் என்னும் இவ்வறு தொழிலும் வாணி கர்க்கு உரியன என்றும், வேதம் ஒழிந்தன ஓதலும் ஈதலும் உழவும் நிரை யோம்பலும் வாணிகமும் வழிபாடுமாகிய அறுவகைத்தொழிலும் வேளாண் மாந்தர்க்குரியன என்றும் வேறுபடுத்துக் கூறுவாராயினர். தொல்காப்பிய மூலத்தில் வேறுபாடு தோன்றுவகை கூறப்பட்டிருக்க இங்ஙனம் இவர் கூறியது வடநூல் நான்காம் வருணத்தவராகிய சூத்திரர்க்கு வகுத்த அறு தொழில்களையே தமிழ்நிலத்து வேளாளர்க்கும் உரியனவாகக் கருதினமை யாம். தமிழ்நிலத்து வேளாளர் வடநூலிற் கூறப்பட்ட சூத்திரர் ஆகார் என்பது தமிழ்நூல்களிற் கண்ட முடிபாம். இதனை நன்குணர்ந்த பேரா சிரியர் ஓதல் வேட்டல் ஈதல் இம்மூன்றும் நால்வகைவருணத்தார்க்கும் ஒத்த சிறப்பின எனவும், வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் உழவும் நிரைகாத்தலும் வாணிகமும் ஒத்த சிறப்பின எனவும் கூறி இம் மூன்றனுள்

ஆச்சிரமதருமங்களாவன :—இல்லறத்தானுக்குரியவை; [6]தன் வருணவொழுக்கத்தை மேற்கோடல், ஒத்தகுலத்தில் வேறுபட்ட கோத்திரத்தில் மணஞ்செய்துகோடல், [7]இருதுகாலத்தில் மனைவியோடு கூடல், தென்புலத்தார் தெய்வம் விருந்து பணியாளர்

---

வாணிகம் வணிகர்க்குப் பெருவரவிற்றெனவும், உழவு வேளாண்மாந்தர்க்குப் பெருவரவிற்றெனவும் கூறி வேறுபாடும் காட்டினர் (தொல்-பொருள்-மரபி-80ஆம் சூத்திரவுரை). இஃதே தமிழ்நிலத்தார்க்குப் பொருந்தியதாகும். இக்கௌடலீயநூலிற் கூறப்பட்ட சூத்திரர் ஏனைய மூவர்க்கும் பணிபுரிதல் குசீலவகன்மம் ஆகிய இவ்விழிதொழில்களையுடையோர் என்று கூறப்பட்டிருத்தலால் தமிழ்நிலத்து வேளாண்மாந்தரொடு இச்சூத்திரரை ஒத்தவராகக் கருதுதல் தவறுடைத்தென்பது விளக்கமாம்.

[6] தன் வருணவொழுக்கமாவது—வருணதருமத்திற் கூறப்பட்ட அந்தணர் முதலியோர்க்குரிய ஒழுக்கம். இதன் பயனை "தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவாதொழுக அறம் வளரும், அறம் வளரப் பாவம் தேயும், பாவம் தேய அறியாமை நீங்கும், என்பன் முதலியவாகப் பரிமேலழகர் (திருக்குறள் 21 உரை) கூறியவாற்றான் அறிக. ஈண்டு நிலை—ஆச்சிரமம்.

[7] மகளிர் இருதுவாகி நீராடியபின் பன்னிரண்டு நாட்களும் இருது காலம் என்ப. இதனைப்பற்றிய கொள்கைவேறுபாடுகளைப் பின்வரும் தமிழ்நூல் உரைகளால் அறிக. தொல்காப்பியத்தில் (பொருளதிகாரம். கற்பியல் 46-ஆம் சூத்திரம்) "பூப்பின் புறப்பா டீராறு நாளும், நீத்தகன் றுறையார் என்மனார்-புலவர்" எனவும், இறையனார்களவியலில் (43-ஆம் சூத்திரம்) "பூப்பின் புறப்பா டீரறுநாளும், நீத்தகன் றுறைதல் அறத்தாறன்றே" எனவும் கூறப்பட்டுள்ளன. ஈண்டு நச்சினார்க்கினியர், "பூப்புத்தோன்றி மூன்றுநாளும் கூட்டமின்றிப் பின்னர்ப் பன்னிரண்டுநாளும் கூடியுறைப" எனவும், "பூப்பின் முன்னாறுநாளும் பின்னாறுநாளும் என்றும், பூப்புத்தோன்றிய நாள்முதலாகப் பன்னிரண்டு நாளும் என்றும், உரைப்பாரும் உளர்" எனவும் கூறியுள்ளார். களவியல் உரையாசிரியர் "பூப்புப் புறப்பட்ட முந்நாளும் சொற்கேட்கும்வழி உறைவானாவது; உறைந்த பின்னை ஒன்பதுநாளும் கூடியுறைவானாவது" எனவும், "பூப்புப்புறப்பட்ட முந்நாளும் உள்ளிட்ட பன்னிருநாளும் என்பது துணிபு" என்றார்க்கு, முந்நாளும் கூடி உறையப்படும் குற்றம் என்னோ? எனின், பூப்புப்புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றிலழியும்; இரண்டாநாள் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாநாள் நின்ற கரு குறுவாழ்க்கைத்தாம்; வாழினும் திருவின்றாம். அதனாற் கூறப்படாதென்பது" எனவும் கூறினர்.

**என்னும் இவர்பொருட்டு வேண்டுவன கொடுத்தல், [8] எஞ்சியது உண்டல் என்னும் இவையாம்.**

**[9] பிரமசாரிக்குரியன—வேதமோதல், [10] அங்கிவினை, [11] நீராடல், ஐயமேற்றல், [12] விரதம், [13] உயிருள்ளவரை ஆசிரியன்பக்கல் இருத்**

---

[8] ஈண்டு,

> "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
> கைம்புலத்தா றோம்பல் தலை". (43)

என்னும் திருக்குறள் நினைக்கத்தக்கது. இங்கே ஒக்கல் என்பது சுற்றத்தாரைக் குறிக்கும். இந்நூலில் அந்நிலையில் 'பணியாளர்' என்று கூறப்பட்டுள்ளது. பணியாளர்க்குக் கொடுத்தல் பணிசெய்தற்பயன் கருதியதாகலின் ஒக்கலே இன்னிலையறத்திற்கு ஏற்புடைத்தாதல் அறிக. 'எஞ்சியதுண்டல்' என்பதனால் 'தான்' என்பது பெறப்படும். அஃது அறமாதல் "எல்லா அறங்களும் தான் உளனாய் நின்று செய்யவேண்டு தலின் தன்னையோம்பலும் அறனாயிற்று" என்னும் பரிமேலழகர் உரையால் தெளிக. எஞ்சியது—தென்புலத்தார் முதலியோர்க்குக் கொடுக்கப்பட்டு எஞ்சியது.

> "வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
> மிச்சின் மிசைவான் புலம்". (85)

என்னும் திருக்குறட் கருத்தோடு "எஞ்சியதுண்டல்" என்று ஈண்டுக் கூறியது ஒத்திருத்தல் காண்க.

[9] பிரமம் — வேதம்; இலக்கணையால் அதனை ஓதுதற்பொருட்டு மேற்கொள்ளும் விரதத்தையும் உணர்த்தும். அவ்விரதவொழுக்கமுடையான் பிரமசாரியாவான்.

[10] அங்கிவினை—அக்கினிகாரியம்.

[11] நீராடலை விதந்துகூறியது — காலை, நண்பகல், மாலை யென்னும் முக்காலத்தினும் பிரமசாரி நீராடல்வேண்டுமென்பதுகருதி.

[12] விரதம் — மணம்புரிதற்குமுன் செய்யப்படும் மயிர்களைதல் இறுதி யாகவுடைய வொழுக்கம். இஃது உபகுருவாணர்க்குரியது. பிரமசாரிகள், உபகுருவாணன் நைட்டிகன் என இருதிறப்படுவர். உபகுருவாணன் வேதமோதியபின் ஆசிரியன் அநுமதிபெற்றுப் பிரமசரியவிரதத்தை முடித்துக்கொண்டு மணம்புரிந்துகோடற்குரியவன். நைட்டிகன்—மணஞ் செய்துகோடலின்றி வாணாள்காறும் உரிய விரதமேற்கொண்டொழுகு வோன்.

[13] "உயிருள்ளவரை" முதலியன நைட்டிகற்கே உரியன.

தல், அவன் இல்லையானால் அவ்வாசிரியனுடைய புதலவன்பக்க லிலாதல் ஒத்தசாகையினனாகிய ஒரு பெரியோன்பக்கலிலாதல் இருத்தல் என்னும் இவையாம்.

[14] வானப்பிரத்தனுக்குரியன— [15] பிரமசரியம், நிலத்திற்படுத் தல், சடைவளர்த்தல், [16] தோலுடுத்தல், [17] அங்கிவினை, [18] நீராடல், தென்புலத்தார் தெய்வம் விருந்துகளை உபசரித்தல், கனி கிழங்கு முதலியன உண்டல் என்னும் இவையாம்.

துறவிக்குரியன:—பொறியடக்கம், [19] வினையொழிவு, பொருள் சிறிதுமின்மை, [20] எவருடனும் கூடாமை [21] பலவிடங்களில் ஐய

---

[14] வானப்பிரத்தம்—காடுறைநிலை.

[15] பிரமசரியம் — ஈண்டுப் பெண்புணர்ச்சியின்றி ஊர்த்துவரேதசாக இருக்கும் தன்மையை யுணர்த்தும்.

[16] தோல்—மான்றோல், புலித்தோல், மரவுரி முதலியன.

[17] அங்கிவினை—காலை மாலைகளில் தீக்கடவுட்குச் செய்யும் வழிபாடு.

[18] நீராடல்—ஈண்டும் முக்காலத்தும் மூழ்கலை உணர்த்தும். ஈண்டுக் கூறிய வானப்பிரத்தனுக்குரிய ஒழுக்கங்களைப் பின்வரும் புறப்பொருள் வெண்பாமாலைச்செய்யுளானும் உணர்க.

> " நீர்பல கான்மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
> சோர்சடை தாழச் சுடரோம்பி—ஊரடையார்
> கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
> வானகத் துய்க்கும் வழி " (வாகை-14)

இது தாபதவாகை என்னும் துறைக்கு எடுத்துக்காட்டாகவுள்ளது. இவ்வொழுக்கங்களுள் "சுடரோம்பல், விருந்தோம்பல்" என்னும் இவற்றால் இவை வானப்பிரத்தனுக்குரிய ஒழுக்கங்களாகக் கொள்ளப்படும்.

[19] வினையொழிவு — யாதொரு கருமமும் செய்யாதிருத்தல். "சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது" என்னும் தாயுமானார் அநுபவ உரை ஈண்டு நினைக்கத்தக்கது.

[20] மற்றொரு துறவியுடனும் கூடலாகாதென்பது.

[21] உயிர்வாழ்வதற்கு வேண்டிய அளவு உணவை ஓரிடத்துப்பெறுதலால் கொடுப்பார்க்கு அசௌகரியம் உண்டாகுமென்று கருதிப் "பல இடங்களில்" என்று கூறப்பட்டது.

மேற்றல், காடுறைதல், [22]அகந்தூய்மை, புறந்தூய்மை யென்னும் இவையாம்.

[23] எல்லோரும் மேற்கோடற்குரியன :—பிறரைத் துன்புறுத் தாமை, வாய்மை, தூய்மை, [24] அழுக்காறுமை, இரக்கமுடைமை, பொறுமை யென்பனவாம்.

கடமையை மேற்கோடலால் இம்மைநலமும், மறுமை யின்பமும், வீட்டின்பமும் உண்டாம். அதனைக் கைவிடில் வரை யறையிகந்த [25] கலப்பால் உலகம் [26] அழிவெய்தும்.

### சுலோகங்கள்

(1) ஆதலின் அரசன் மக்களை அவர்தம் கடமையினின்றும் பிறழவிடலாகாது. அவர்தம் கடமையை நன்கு மேற்கொள்ளச் செய்யின் இம்மையினும் மறுமையினும் இன்பமெய்துவான்.

---

[22] " புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்." (298)

என்னும் திருக்குறளும் " மனந்தூய்தாதல் — மெய்யுணர்தல் ; இதனானே துறந்தார்க்கு இரண்டுதூய்மையும் வேண்டும் என்பதூஉம் பெற்றாம்." என்னும் பரிமேலழகர் உரையும் நினைக்கத்தக்கன.

[23] எல்லோரும் என்பதால் வருணாச்சிரம வேறுபாடின்மை புலப் படும்.

[24] அழுக்காறு — பிறராக்கம் பொறாமை ; பிறர்குணத்திற் குற்ற மேற்றலுமாம்.

[25] கலப்பு—வருணாச்சிரம வொழுக்கங்கள் பிறழ்தல்.

[26] உலகத்துக்கு உறுதியான நலம்பயக்கும் ஏதுக்களாக இங்குக் கூறப்பட்ட வருணாச்சிரமதருமங்கள், அவற்றை மேற்கொண்டொழுகும் இருமுதுகுரவர் மரபிற்றோன்றி அவ்வொழுக்கத் தொடர்பொடுங்கூடியவர் களாகிய அவ்வவ்வருணாச்சிரம சீலர்களால் தங்குலதருமமெனக்கொண்டு பத்திசிரத்தையோடு அநுட்டிக்கப்படுவனவாய்த் தாம் சிறப்புறுதற்கும், உலகத்துக்கு உபகாரமாய்நின்று மிக்க சிறப்பையளித்தற்கும், தகுதி யுடையனவாம். அங்ஙனமாகவும் அவை வரையறையின்றி உரியாரல்லாரால் பிறழ மேற்கொள்ளப்படுமாயின், விரைவில் அவை தாமும் இழிவெய்தி உலகோபகாரத்தினும் சிறப்பைத் தாராமல் ஒழுக்கத்துக்கும் புறனும் நிலையையெய்தும். ஆதலின் அறப்பிறழ்ச்சியால் உலகம் அழிவெய்தும் என்பதாம்.

(2) [27] வரையறுக்கப்பட்ட ஆன்றோர் ஆசாரியமத்தை உடையதும், நன்கு தூய்மைசெய்யப்பட்ட வருணாச்சிரமநிலைகளை உடையதும், திரையீயாற் காக்கப்பட்டதுமாகிய இவ்வுலகம் அழிவின்றி இன்பமெய்தும்.

முதலதிகரணம் முதற் பிரகரணத்தில்
"திரையீயினியல்பு" என்னும் மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

[27] வருணாச்சிரம தருமங்களை விதிக்குமுகமாக, திரையீயால் விளையும் பெரும்பயன் இவ்வத்தியாயத்தின் இறுதியிற் கூறப்படுகின்றது.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## முதற் பிரகரணம் — வித்தைவிளம்பல் — [1]வார்த்தை தண்டநீதிகளின் இயல்பு

## நான்காம் அத்தியாயம்

[2]உழவு, [3]பசுக்காவல், [4]வாணிகம் என்னும் வார்த்தையானது தானியம், பசு, பொன், [5]குப்பியம், அடிமை என்னும் இவற்றைத்

---

### நான்காம் அத்தியாயக் குறிப்புரை

[1] உழவு முதலியன வார்த்தையாகும். தண்டநீதி—அரசநீதி.

[2] உழவு முதலியன ஈண்டு அவ்வந்நூல்களை உணர்த்தும். அவற்றுள் உழவுநூல்—நிலந்திருத்தல், வித்திடல், உரமிடல், களைகட்டல் முதலிய வற்றைப்பற்றியது ; பராசரராற் கூறப்பட்டது. வார்த்தையின் வகை களாகவுள்ள மூன்றனுள் வாணிகத்தினும் உழவு சிறந்ததென்பது கருதி அது முற்கூறப்பட்டது. வணிகர் வேளாளர் இருதிறத்தார்க்கும் உழவு உரியதாயினும் சிறுபான்மை வணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தென்ப. பெரும்பாலும் வடநூல்களுள் நான்காம் வருணத்தவர்க் குரிய இழிதொழிலாக உழவு கூறப்பட்டுள்ளது. தமிழ்நூலார் எல்லாத் தொழில்களினும் தலையாயது உழவு என்று கூறுப ; இதனை

> " சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
> உழந்தும் உழவே தலை " (1031)
>
> " உழுவார் உலகத்தார்க்கு ஆணி ", (1032)

என்னும் திருக்குறள்களானும், "வருத்தமிலவேனும் பிறதொழில்கள் கடை என்பது போதர 'உழந்தும் உழவே தலை' என்றும் கூறினர்" என்பது முதலிய பரிமேலழகர் உரைக்குறிப்புக்களானும், " இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழவிடைவிளைப்போர் " (நாடுகா–149) என்னும் சிலப்பதிகாரத்தானும் தெளிய உணரலாம். இந்நூலில் கூறிய முறை வைப்புத் தமிழ்நூலார் கொள்கையைத் தழுவியிருத்தலான், கௌடலியர் தமிழர் வழக்கவொழுக்கங்களுள் சிறந்தனவற்றைத் தம் பொருள்நூலுக்கு உரியவாகக்கொள்ளும் கொள்கையுடையரென்பது போதரும்.

[3] இது பசு குதிரை முதலியவற்றைப் பாதுகாத்தலைப்பற்றிக் கூறும் நூல். கௌதமர் சாலிகோத்திரர் முதலியோரால் கூறப்பட்டது.

[4] விற்றல், விலைகொடுத்துவாங்கல் முதலிய விவகாரங்களை உணர்த்தும் நூல் ; விதேகவரசனால் கூறப்பட்டது.

[5] குப்பியம்—பொன் வெள்ளியல்லாத உலோகங்களும், மரம் செடி, கொடி முதலியவைகளுமாம்.

தருதலால் உலகிற்கு உபகாரமாவதாம். அவ்வார்த்தையால் உண்டாம் [6]பொருட்பெருக்கம், படைப்பெருக்கங்களால் [7]தன்பக்கத்தையும், பிறர்பக்கத்தையும் அரசன் தன்வயப்படுத்துவான்.

ஆன்வீட்சிகீ, திரையீ, வார்த்தை என்னும் இவற்றைப் பெறுதற்கும், காத்தற்கும் [8]தண்டம் [9]சாதனமாகவுள்ளது. அதனைப் பற்றி நிகழும் [10]நீதி தண்டநீதியாகும்; அதனால் விளையும் பயன்கள், [11]அடையப்பெறாத பொருளை அடைதலும், பெற்றன காத்

---

[6]. உழவு வாணிகம் முதலியவற்றாற் பொருட்பெருக்கமும் அதனாற் படைப்பெருக்கமும் உண்டாம் என்பது கருத்து. இதனை,

“ பொன்னினாகும் பொருபடை அப்படை
தன்னினாகும் தரணி ” (சீவகசி–செ–1923)

என்பதனானும் அறிக.

[7] தன்பக்கத்துள்ளாரையும், பகைவர்பக்கத்துள்ளாரையும் தன்வயப் படுத்துவான் என்பது கருத்து.

[8]தண்டம்–ஈண்டுச் சாமம் முதலிய உபாயம் நான்கனுள் ஒன்றாகிய ஒறுத்தலை உணர்த்தும்; காரிய காரண அபேதத்தால் அத்தண்டத்தைச் செய்யும் அரசனும் “ தண்டம் ” என்று கூறப்படுவான். இனி, தண்டம் என்பதைக் கோல் எனக் கொண்டு “ அம்முறை ஒருபாற் கோடாது செவ்வியகோல் போறலின் செங்கோல் எனப்பட்டது, வடநூலாரும் தண்டம் என்றார் ” என்பர் பரிமேலழகர். (55-ஆம் அதி–அவதாரிகை)

[9] தண்டபயம் உள்வழி உலகம் ஆன்வீட்சிகீ முதலியவற்றில் தலைப் படும். அஃதின்றேல் அங்ஙனம் தலைப்படாது. ஆதலின், ஆன்வீட்சிகீ முதலியவற்றிற்குத் தண்டம் சாதனமாம் என்பது போதரும். இது கருதியே பெரியாரும்,

“ மக்களெல்லோரும் தண்டத்தால்
அடக்கப்பட்டவராவர்; இன்றேல்
யாண்டேனுந் தூய்மையுடையானைக்
காண்டல் அரிதாகும். தண்டபயத் தாலேயே
உலகம் இன்பத்தில் தலைப்படுவதாம் ”

என்று கூறுவர்.

[10] நீதி–ஈண்டு நன்று தீது துணிதற்குக் கருவியாகிய நூலையுணர்த்தும்.

[11] இக்கருத்துக்கள்,

“ இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு ” (557)

என்னும் திருக்குறட் கருத்தைத் தழுவியிருத்தல் காண்க.

தலும், காத்தவற்றை வளர்த்தலும், அவற்றை [12]நல்வழியிற் பயன் படுத்தலுமாம். அத்தண்டநீதியைப்பற்றியே உலகம் நிகழ்வது; ஆகலின் உலகநிகழ்ச்சியை விரும்பும் அரசன் எப்பொழுதும் [13]தண்டத்தைச் செலுத்துதலில் முயற்சியுடையவனுதல்வேண்டும்.

மக்களைத் தன்வயப்படுத்தற்குத் தண்டத்தை ஒத்த கருவி வேறொன்றில்லை என்ப ஒருசாராசிரியர்.

அதனை மறுத்துக் கௌடலியர் கூறுவன—[14]கொடுந்தண்டம் மக்களை நடுக்கமுறுத்தும். குறைந்த தண்டம் அவமதிக்கப்படும். [15]தகுதியான தண்டம் நன்குமதிக்கப்படும். [16]நூன்முறைவழாது நன்கு நுனித்துணர்ந்து செலுத்தப்படும் தண்டம் மக்களை அறம் பொருளின்பங்களில் தலைப்படுத்தும். காமம் வெகுளி மயக்கம் காரணமாக நூன்முறை வழீஇச் செலுத்தப்படும் தண்டம் வானப் பிரத்தம் துறவுநிலைகளில் உள்ளாரையும் சினமுறச்செய்யுமெனின்,

---

12 நல்வழியிற் பயன்படுத்தல் — அறம் பொருள் இன்பங்களின் பொருட்டுச் செலவிடல்.

13 " ஒல்லும் வாயெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல் " (673)

என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையில் " இயலும் இடம் பகையில் தான் வலியனுயகாலம்; அக்காலத்துத் தண்டமே நன்றென்ருர்; அஞ்சுவது அதற்கேயாகலின் " என்று கூறியது இங்கே நினைக்கத்தக்கது.

14 கொடுந்தண்டம் மீக்களை நடுக்கமுறுத்துமுகமாக அரசற்கும் கேடு விளைப்பதாகும். இதனை,

" கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம் " (567)

என்பதனுனும் உணர்க.

15 தகுதியான தண்டம்—காலம், இடம், குற்றம் இவற்றிற்குத்தகப் பிரயோகிக்கப்படுவது.

16 " ஓர்ந்து கண்ணேடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை " (541)

என்னும் திருக்குறளில் தேர்ந்து என்பதற்கு "அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும் ஆராய்ந்து " என்று பரிமேலழகர் எழுதிய உரைக்குறிப்பு ஈண்டு நோக்கத்தக்கது.

[17]இல்லறநிலையிலுள்ளாரைச் சினமுறுத்தும் என்பதைப்பற்றிக் கூறவேண்டுவதென்? தண்டம் செலுத்தப்படுவதின்றேல் அது [18]மச்சநியாயத்தை விளைவிப்பதாம். அரசன் தண்டத்தைச் செலுத்துவானல்லனேல் வலியவன் மெலியவனைத் துன்புறுத்துவான். அத்தண்டத்தால் காக்கப்படின், மெலியவனும் வலியவனுவான்.

## சுலோகம்

நால்வகை வருணச்சிரமங்களையுமுடைய இவ்வுலகத்து மக்கள் அரசனது தண்டநீதியால் காக்கப்படுவாராயின் தத்தம் கடைமைகளை வழாமல் மேற்கொண்டு தமக்குரிய இல்லங்களிலிருந்து [19]இனிது வாழ்வார்.

முதலதிகரணம் முதற் பிரகரணத்தில்
“வார்த்தை தண்டநீதிகளின் இயல்பு” என்னும்
நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

[17] பொறியடக்கமுடையாரையும் சினமுறுத்துமாயின் அஃதில்லாரை யாது செய்யாதென்பது கருத்து.

[18] மச்சநியாயம்—பெரியமீன்கள் சிறியமீன்களை உண்டல்போல வலியவர் மெலியவரைத் துன்புறுத்தல்.

[19] அரசனது தண்டப்பாதுகாப்பின்றேல் தம் இல்லங்களிலிருந்தும் இன்புறல் அரிதென்பது கருத்து. இதனை,

“அரைச வேலி யல்லது யாவதும்
புரைதீர் வேலி இல்” (சிலப்-அழற்படு-23-45)

என்னும் சிலப்பதிகார அடிகளானும் அறிக.

## முதல் அதிகாரணம்—பயிற்சிபகர்தல்

## இரண்டாம் பிரகரணம்—[1] பெரியோரிணக்கம்

## ஐந்தாம் அத்தியாயம்

இவ்வுலகம் அரசனது தண்டத்தால் காக்கப்பட்டுத் [2]தன் கடமையை மேற்கொண்டொழுகலான் [3]வித்தைகள் மூன்றும் அத்தண்டத்தையே பற்றுக்கோடாக உடையன. நூற்பயிற்சியைப் பற்றுக்கோடாகவுடைய அத்தண்டம் உயிர்களுக்கு நற்பேறளித்துக் காப்பதாகும்.

பயிற்சி, [4]இயற்கையின் அமைவது [5]செயற்கையின் அமைவது என இரண்டாம். [6]தூய்மைச்செயல் [7]தகுதிப்பொருளைச் செம்மைப் படுத்தும். [8]தகுதியில்பொருளை அங்ஙனஞ்செய்யாது. [9]அது

---

### ஐந்தாம் அத்தியாயக் குறிப்புரை

[1] வித்தைகள் பெரியோர் இணக்கமின்றிப் பெறப்படாவாதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது. பெரியோர்—ஆன்வீட்சிகீ முதலிய வித்தைகளை நன்குணர்ந்தோர்.

[2] கடமை—வருணச்சிரம தருமங்கள்.

[3] "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய், நின்றது மன்னவன் கோல்" என்பது ஈண்டு நினைவுகூர்தற்பாலது.

[4] முயற்சி முதலியன இன்றிப் பண்டைப் பிறப்புத்தொடர்பால் தானே எய்துவது இயற்கைப் பயிற்சியாகும்.

[5] முயற்சி முதலிய செயலால் எய்துவது செயற்கையாகும். "மதிநுட்பம் நூலோடுடையார்" (குறள் 693) என்புழி, மதிநுட்பம், இயற்கையையும் நூலறிவு, செயற்கையையும் புலப்படுத்தி நிற்றல் ஈண்டுக் கருதற்பாலது.

[6] தூய்மைச்செயல்—சாணைதீர்தல் முதலியன.

[7] தகுதிப்பொருள்—அச்செயலால் விளக்கமுறுதற்குத் தகுதியான வயிர மணிமுதலியன.

[8] தகுதியில்பொருள்—சாணைதீர்தற்குத் தகுதியற்ற பரற்கல் முதலியன.

[9] அதுபோல்—வித்தைகள்கேட்டல் முதலிய குணங்கள் இயற்கையின் அமைந்த புத்தியுடையானைச் செம்மைப்படுத்தும் எனவும், அல்லாதானை அங்ஙனம் செய்யா எனவும் கூட்டுக.

போலக் [10]கேள்விவிரும்பல், கேட்டல், கோடல், உள்ளத்தமைத்தல், பகுத்துணர்தல், [11]குறிப்பினுணர்தல், [12]விலக்கல், உண்மை தெளிதல் என்னும் குணங்களின் நிலையமாகிய புத்தியையுடையானை வித்தைகள் செம்மைப்படுத்தும். அல்லாதானை அங்ஙனம் செய்யா.

வித்தைகள் ஆசிரியனைப் பிரமாணமாக உடைமையால் அவ்வாசிரியன்கட்டளையைக் கடவாமைப்பொருட்டு மாணாக்கர்க்கு [13]விநயமும் [14]நியமமும் வேண்டும்.

மயிர்களைதலாகிய [15]சௌளகன்மம் நிறைவேறியபின் [16]எழுத்தையும், எண்ணையும் நியமமாகக் கற்றல்வேண்டும். உபநயநம் நிறைவேறியபின், திரையீயாகிய மும்மறைகளையும் ஆன்வீட்சிகியாகிய அங்கம் முதலிய நூல்களையும் ஆன்றோர்முகமாக ஓதல் வேண்டும். வார்த்தையாகிய உழவுமுதலியவற்றை உழவுத்தொழிற்றலைவன் முதலியோர்பால் பயிலவேண்டும். தண்டநீதியைச் சொல்லானும் செயலானும் வல்லார்பால் பயிலவேண்டும்.

[17]பதினாறுயாண்டுவரை பிரமசரியம் காத்தல்வேண்டும்.

---

10 புத்தியின் குணங்கள் எட்டனையுங் கூறுவான் தொடங்குகின்றார். கேள்விவிரும்பல் முதலியன புத்தியின் குணங்கள்.

11 குறிப்பினுணர்தல்—கூறிய சொற்களானன்றிப் பிறகுறிப்புக்களால் பொருளையுணர்தல்; இதனை ஊகம் என்ப.

12 விலக்கல்—யுக்திக்குப் பொருந்தாதனவற்றை ஒழித்தல். இதனை "அபோகம்" என்ப.

13 விநயம்—பயிற்சியையும், ஆன்றோர் ஆசாரத்தையும் உணர்த்தும். ஆசாரமாவது—ஆசிரியன் வருங்காலும் இருக்குங்காலும், முறையே மாணாக்கன் இருக்கையெழலும், எழுந்துநிற்றலும் முதலியன.

14 நியமம்—ஆசிரியனுக்குப் பணிபுரிதல் முதலிய விரதங்கள்.

15 சௌளகன்மம் மூன்றும் ஆண்டிலாதல் ஐந்தாம் ஆண்டிலாதல் செய்யவேண்டும்.

16 எழுத்து — ஒலியெழுத்துக்களும் வரிவடிவமாகிய எழுத்துக்களும் இலக்கணமுமாம். எண்-கணிதநூல்; அளவைநூலுமாம்.

17 பதினாறும்யாண்டு மணஞ்செய்தற்குரிய பருவம் என்று ஈண்டுக் கூறியது பண்டைக்காலத்துத் தமிழர் கொள்கையைத் தழுவியிருத்தல் காண்க. அகப்பொருள்பற்றிய தமிழ்நூல்களில் கற்புமணத்திற்குரிய பருவம் பதினாறுயாண்டென்பது வெளிப்படை. "ஈராறுண்டகவையான்" எனச் சிலப்பதிகார மங்கலவாழ்த்துப் பாடற்பகுதியில் கூறியிருத்தலும் காண்க.

அதன்பின் [18]மயிர்களைதல்வினை முடித்து மணஞ்செய்தல்வேண்டும். நூற்பொருட்டெளிவு வித்தைகளிற்சிறந்த பெரியாரிணக்கத்தால் உண்டாமாதலின் மணவினை முடித்தவனுக்கும் அத்தெளிவு மிகுதற்பொருட்டு அப்பெரியாரிணக்கம் எஞ்ஞான்றும் வேண்டற்பாலதாம்.

[19]நாடோறும் முற்பகலில், யானை, குதிரை, தேர், படைக்கலம் என்னும் இவற்றைப்பற்றிய கலைகளிலும், பிற்பகலில் இதிகாசங்களிலும், பயிற்சிபெறல்வேண்டும் [20]இதிகாசங்களாவன—[21]புராணம், [22]புராவிருத்தம், [23]ஆக்கியாயிகம், [24]உதாகரணம், அறநூல், பொருணூல் என்பனவாம். நண்பகலிலும், இரவில் [25]எஞ்சிய காலங்களிலும் புதியபொருள்களை அறிதலும், முன் உளங்கொண்ட பொருள்களைச் சிந்தித்தலும், சிறிது உணர்ந்தபொருள்களை நன்கு தெளிதற்பொருட்டு அடிக்கடி கேட்டு உணர்தலும் செய்தல் வேண்டும்.

---

[18] மயிர்களைதல்வினை மணவினைக்கு முன்னர்ச் செய்யப்படுவது; இதனைக் 'கோதானம்' என்ப.

[19] "கிள்ளி வளவற் படர்குவை யாயின்
நெடுங்கடை நிற்றலும் இலையே கடும்பகற்
றேர்வீ சிருக்கை" (புறநா–69)

என்னும் புறப்பாட்டுப்பகுதிக்கு எழுதிய விசேடவுரையில், "ஒருநாளுள் முதலனபத்து நாழிகையும் அறத்தின் வழியொழுகி பின்பத்து நாழிகையும் இறைமின்முறைமை கேட்டுச்செய்த பொருளைப் பரிசிலர்க்குக்கொடுத்து மகிழ்ந்திருத்தலால் 'கடும்பகல் தேர்வீ சிருக்கை' என்றார்" என்று குறிப்பிட்டிருத்தல் ஈண்டு நினைக்கத்தக்கது.

[20] புராணம் முதலிய எல்லாம் இதிகாசத்துள் அடங்குமென்பது இவ்வாசிரியர் கருத்து.

[21] புராணம் சைவமுதலிய பதினெட்டு மகாபுராணங்களும், உபபுராணங்களுமாம்.

[22] புராவிருத்தம்–சிவரகசியம், இராமாயணம், மகாபாரதம் முதலியன.

[23] ஆக்கியாயிகம் — தெய்வத்தன்மை வாய்ந்த பெரியோர் வரலாறு முதலியன.

[24] உதாகரணம்—தருக்கம் மீமாஞ்சை முதலியன.

[25] எஞ்சியகாலங்களாவன—இரவில், தெய்வவழிபாடு, உணவு, உரக்கம் முதலியனவற்றிற்கு வேண்டுவனபோக எஞ்சிய காலக்கூறுகள்.

நூற்கேள்வியால் அறிவும், அறிவால் ஒழுக்கத்திற் பற்றும், அவ்வொழுக்கப்பற்றால் தூய மனவுறுதியும் உண்டாம். இவை [26]வித்தைகளின் ஆற்றலான் எய்தும் பயன்களாம்.

வித்தைகளை நன்குபயின்ற அரசன் தன் குடிமக்களை ஆளும் திறனுடையனாய், எல்லா உயிர்கட்கும் நலம்புரிந்து, நிலத்தைப் பொதுவறப் புரந்து இன்புறுபவனாவான்.

முதலதிகரணம் இரண்டாம் பிரகரணத்தில்
"பெரியோரிணக்கம்" என்னும் ஐந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[26] ஈண்டு அவற்றையுடைய பெரியாரையும் குறிக்கும்.

## முதல் அதிகாரணம்—பயிற்சிபகர்தல்

## மூன்றும் பிரகாரணம்—[1] பொறியடக்கம்—குற்றங்கடிதல்

## ஆறும் அத்தியாயம்

**வித்**தைகளாலாம் செம்மைக்கு ஏதுவாகிய பொறியடக்கம், காமம், வெகுளி, [2]கடும்பற்றுள்ளம், [3]மானம், [4]மதம், [5]உவகை என்னும் [6]குற்றங்களைக் கடிதலான் ஆம். மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறிகள் தத்தம் புலன்களாகிய ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பவைகளில் [7]இயற்கையாகவே மாறுபடாமல் நிகழ்தலும், [8]நூற்பொருள் உணர்ந்து ஒழுகலான் நிகழ்தலும் பொறியடக்கமாம். [9]இவ்வெல்லா நூற்பொருள்களும் பொறியடக்கத்துக்குக் காரணம் ஆகும்.

---

ஆறும் அத்தியாயக் குறிப்புரை

[1] பொறிகள்—மெய் வாய் கண் மூக்குச் செவிகள். அடக்கம்—அவை தத்தம் புலனுகர்ச்சியிற் பிறழ்ச்சியின்றிச் சேறல். அப்பொறியடக்கம் நூலுணர்ச்சி முதலியவற்றானன்றித் தானே அமைவது இயற்கையாகும். நூற்கேள்விகளான் அமைவது செயற்கையாகும். இதனைக் குற்றங்கடிதல், பொறியடக்கமுடைய அரசன் இயல்பு என இருகூறாக்கி இரண்டு அத்தியாயங்களால் கூறுவான் தொடங்கி, முதற்கட் பகைவருக்கநீக்கமென்னும் குற்றம் கடிதலைக் கூறுகின்றார். பெரியாரிணக்கங்கூறிப் பின் அதற்கேதுவாகிய பொறியடக்கம் கூறுதலின் பிரகரண இயைபுண்மை காண்க.

[2] கடும்பற்றுள்ளம்—பிறர்பொருட்கண் உண்டாம் அவா, உலோபம் என்ப.

[3] மானம்—கருதியது செய்யத்தகாதாயினும் அதனை முடித்தேவிடும் தீயகுணம்.

[4] மதம்—செல்வமுதலியவற்றானுண்டாம் செருக்கு.

[5] உவகை—ஈண்டு அளவிறந்த நிலையிலுள்ளது.

[6] இக்குற்றங்களை முறையே சிறுமை, சினம், இவறல், மாண்பிறந்த மானம், செருக்கு, மாணுவுவகை என்பர் திருவள்ளுவர். (திருக்-44 அதி-1,2 செ.)

[7] இயற்கைப் பொறியடக்கம்.

[8] செயற்கைப் பொறியடக்கம். "கற்றடங்க லாற்றுவான்" (குறள் 130) என்பதும் அது.

[9] மேற்கொள்ளத்தக்க நூற்பொருள்களெல்லாம் பொறியடக்கத்திற்குக் காரணம் என்பது கருத்து.

ஓரரசன் நாற்புறமும் கடல்சூழ்ந்த இந்நிலவுலகனைத்துக்கும் தலைவனாயினும், ஆன்றோர் நூற்கு மாறுபட்ட ஒழுக்கமும் பொறியடக்கமின்மையும் உடையனாயின் விரைந்து கேடெய்துவான்.

போசகுலத்தில் தோன்றிய [10]தாண்டக்கியன் என்பானும் விதேகநாட்டரசனாகிய கராளன் என்பானும் காமத்தால் அந்தணர் குலத்துப்பெண்களை வலிந்துபற்றி உறவினரையும் நாட்டையும் இழந்து தாமும் அழிவெய்தினர். சனமேசயன் அந்தணர்களோடும், தாலசங்கன் பிருகு மரபினரோடும் வெகுளியாற் கலகம்விளைத்துக் கேடெய்தினர். [11]அயிலனும், சௌவீரநாட்டரசனாகிய அசபிந்துவும் உலோபமாகிய கடும் பற்றுள்ளத்தால் நான்குவருணத்து மக்களிடத்துநின்றும் அளவின்மிக்க பொருளைக்கவர்ந்து அழிவெய்தினர். மானத்தால் இராவணன் பிறர்மனைவியைக் கொடாமலும், துரியோதனன் இராச்சியத்தின் கூறுகொடாமலும் கேடுற்றனர். [12]தம்போற்பவனும், ஏகயநாட்டரசனாகிய கார்த்தவீரியார்ச்சுனனும் மதத்தால் பிறரை அவமதித்துக் கேடெய்தினர். உவகையால் வாதாபி அகத்தியமுனிவரையும், யாதவக்குழுவினர் வியாத முனிவரையும் வஞ்சித்து அழிவெய்தினர்.

---

[10] தாண்டக்கியன் — போசமரபிற் பிறந்தவனென்று இவ்வாசிரியர் கூறுகின்றார்; அவனைப்பற்றிய வரலாறு தெரியவில்லை. ஆனால் தண்டகன் என்பான் ஒருவன் இட்சுவாகுவின் புதல்வனாய் விந்தியத்திற்கும் சைவலத்திற்கும் இடையே உள்ள நாட்டை ஆண்டானெனவும், அவன் சுக்கிரன் புதல்வியாகிய அரசையை வலிதிற் புணர்ந்த காரணத்தால் அச்சுக்கிரனால் சபிக்கப்பட்டுத் தன்னாட்டில் மண்மாரி பொழியத் தானும் அழிவெய்தினன் எனவும் பிறநூல்கள் கூறும். சுக்கிரநீதியிலும், காமந்தகநீதியிலும் காமக்கேட்டிற்கு இவனே எடுத்துக்காட்டப்பட்டுள்ளான்.

[11] அயிலன்—இளையின் புதல்வன்; இளை—வைவச்சுதமனுவின் புதல்வருள் ஒருவன். அம்பிகையின் தவவனத்தை அறியாமல் அடைந்தமையால் இளையெனும் பெயர் மடவரல் ஆயினன். அவ்விளையின்பால், சந்திரன் புதல்வனாகிய புதனுக்குப்பிறந்த புரூரவா என்பவனே அயிலனாவான். இவன் பொருளாசைமேற்கொண்டு சனற்குமாரர் முதலிய பெரியோர்களின் உபதேசங்களையும் ஏற்றுக்கொள்ளாமல், அந்தணர்களுடைய இரத்தின முதலிய பொருள்களையெல்லாம் கவர்ந்துகொண்டு அதுகாரணமாக முனிவரால் சபிக்கப்பட்டு அழிவெய்தினன் என்ப.

[12] தம்போற்பவன்—இவன், செல்வம் முதலியவற்றால் களித்து நரநாராயணரால் பங்கமடைந்தவன்.

இங்குக் கூறப்பட்டாரும் பிறருமாகிய பல அரசர்கள் இவ் வறுவகைக் குற்றங்களையும் உடையராய்ப் பொறியடக்கமிலராய் உறவினரையும் நாட்டையும் இழந்து அழிவு எய்தினர்.

பகைவருக்கமாகிய இக்குற்றங்களை ஒழித்துப் பொறியடக்க மேற்கொண்ட சமதக்கினி புதல்வனாகிய [13]பரசுராமனும், நபாகன் புதல்வனாகிய [14]அம்பரீடனும் நெடுங்காலம் இந்நிலவுலகத்தை ஆண்டு இன்புற்றனர்.

முதலதிகரணம் மூன்றும் பிரகரணத்தில்
"குற்றங்கடிதல்" என்னும் ஆரும் அத்தியாயம்
முற்றிற்று.

---

[13] பரசுராமர்—இவர் சமதக்கினியின் புதல்வர்; திருமாலின் அம்சாவதாரம்; சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து 'பரசு' பெற்றவர். வீரத்தாலும் தவத்தாலும் சிறந்தவர். இவர் ஒரு காரணத்தால் சூரியவமிசத்து அரசர்களை அழித்துப் பூமியை ஆண்டு பின் காசியபருக்குத் தானம் செய்தனர்.

[14] அம்பரீடன்—இவன் சூரியவமிசத்து நபாகனின் புதல்வன். திருமால் பத்தியிற் சிறந்தவன். திருமாலின் ஆழிப்படை உதவியால் துருவாசரும் தன்பால் அடைக்கலம் எய்தப்பெற்றவன்.

# முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## மூன்றும் பிரகரணம்—பொறியடக்கம்—[1]அதனையுடைய அரசன் இயல்பு

## ஏழாம் அத்தியாயம்

நலத்திற்கு ஏதுவாதல்பற்றிக் குற்றங்கடிதலால் பொறியடக்கத்தையும், பெரியோரிணக்கத்தால் [2]அறிவையும், ஒற்றனல் [3]கண்ணையும், முயற்சியால் நலத்தையும், [4]காரியக்கட்டளையால் மக்களுடைய கடமையையும், வித்தையைக் கற்பித்தலால் பயிற்சி

---

### ஏழாம் அத்தியாயக் குறிப்புரை

[1] இப்பிரகரணத்தின் இரண்டாங்கூறுகிய பொறியடக்கமுடைய அரசனியல்பைக் கூறத் தொடங்குகின்றுர். அதனையுடைய அரசன்—பொறியடக்கத்தையுடைய வேந்தன் ; இவனை " இராசவிருடி " என்று முதல்நூல் கூறும்.

[2] அறிவை விளக்கிக்கொள்ளவேண்டுமென்பது கருத்து.

[3] தன்னுட்டிலும், வேற்றுநாட்டிலும் நிகழும் செய்திகளை அறிந்துவந்து தெரிவித்தற்பொருட்டு ஒற்றர்களை அரசன் கண்ணுகக்கொண்டு போற்றல் வேண்டுமென்பது கருத்து. ஈண்டு ஒற்றினை அரசன் கண்ணுகக்கொள்ளல் வேண்டும் என்னும் இது,

> " ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
> தெற்றென்க மன்னவன் கண் " (581)

என்னும் திருக்குறட்கருத்தைத் தழுவியிருத்தல் காண்க. ஒற்றினையும் நீதி நூலையும் அரசன் தன் கண்களாகக்கொள்ளவேண்டும் என்பதைப்பற்றி "ஒற்றுத் தன் கண் செல்லமாட்டாத பரப்பெல்லாம் சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லாம் உணர்த்தலானும், நூல் அங்நிகழ்ந்தவற்றிற்குத் தன் உணர்வு செல்லமாட்டாத வினைகளையெல்லாம் சொல்லி உணர்த்தலானும் இவ்விரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்துகொண்டொழுகுக என்பதாம்" என்று பரிமேலழகர் விளக்கியிருத்தல் காண்க.

[4] இக்காரியத்தை இங்ஙனம் செய்தல்வேண்டுமென்று கட்டளையிடுதலால் மக்களை அவரவர் கடமையில் ஈடுபடச்செய்தல்.

யையும், [5]நல்லாற்றிற் பொருள்படைத்தலால் மக்களுக்கு மகிழ்ச்சி விளைத்தலையும், [6]நற்செயலால் உலகவாழ்க்கையையும் கொள்ளல் வேண்டும்.

இங்ஙனம் பொறியடக்கமுடையோன், பிறர்மனை நயத்தல், பிறர்பொருள் கவர்தல், பிறர்க்குத் துன்பம் விளைத்தல், தகாத தூக்கம், மனக்கலக்கம், பொய்மை, ஆடம்பரவேடமுடைமை, [7]தீயவழியில் பொருள்படைத்தல், மறச்செயல், கேடுபயக்கும் செயல் என்னும் இவற்றை ஒழித்தல்வேண்டும்.

அறத்திற்கும் பொருளுக்கும் மாறுபடாமல், இன்பத்தை அடைதல்வேண்டும். இன்ப நுகர்ச்சியின்றி இருத்தலாகாது. அறம், பொருள், இன்பங்களுள் ஒன்று மிகுதியாக அடையப்படு மாயின் அது மற்றைய இரண்டையும் தன்னையும் [8]கெடுக்கும்.

---

[5] பொருளை நல்லாற்றில் ஈட்டி நன்னெறியிற் செலவிடலால் என்பது கருத்து.

> "அறனீனும் இன்பமு மீனும் திறனறிந்து
> தீதின்றி வந்த பொருள்" (754)

என்னும் திருக்குறளும், "செங்கோலனென்று புகழப்படுதலானும், கடவுட் பூசைதானங்களாற் பயன் எய்தலாலும் 'அறனீனும்' என்றும், நெடுங் காலம் நின்று துய்க்கப்படுதலான் 'இன்பமும் ஈனும்' என்றும் கூறினர்" என்று பரிமேலழகர் விளக்கியிருத்தல் காண்க.

[6] நற்செயல் — நிகழ்கால எதிர்காலங்களுக்கு நலம் விளைக்குஞ்செயல். இனி அறமும் புகழும் பயத்தலால் நல்லவாகிய செயல் எனினும் பொருந்தும். இதனை,

> "துணைநலம் ஆக்கந் தரூஉம் வினைநலம்
> வேண்டிய வெல்லாந் தரும்" (651)

என்னும் திருக்குறளில் 'வினைநலம் வேண்டியவெல்லாம் தரும்' என்பதனு னும், அதற்குப் பரிமேலழகர் "'வேண்டியவெல்லாம்' என்றது, இம்மைக் கண் அறம் பொருள் இன்பம் முதலாயவற்றையும் மறுமைக்கண் தான் விரும்பிய பதங்களையும்" என்று கூறிய உரையானுந் தெளிக.

[7] பொருளைத் தீயவழியிலீட்டித் தீயவழியிற் செலவிடல்.

[8] அறமிகுதியால் பொருளும் இன்பமும், பொருள்மிகுதியால் அறமும் இன்பமும், இன்பமிகுதியால் அறமும் பொருளும் கேடுறும் என்பதும், அவை கேடுறலால் மிகுதியாக எஞ்சிநின்ற அவ்வுறுதிப்பயனும் கேடுறும் என்பதும் கருத்து.

ஆதலின் அம்மூன்றனையும் ஒன்றற்கொன்று தொடர்புடையன வாகக்கொண்டு, ஒத்த அளவில் அடையவேண்டும். அறமும், இன்பமும் பொருளால் அடையத்தக்கனவாதலின் [9]பொருளே சிறந்ததாகும் என்பது கௌடலியர் கொள்கை.

அரசன் [10]உவளகம்முதலியவற்றில் மிகவும் ஈடுபட்டிருக்கும் தன்னை [11]நிழல், நாழிகை முதலிய கால அளவைகளை அறிவுறுத்து [12]நெருக்கிக்கூறிக் கேடுவிளைக்கும் காரியங்களினின்றும் தடுத்து நிறுத்தவல்ல ஆசிரியரையாதல் அமைச்சரையாதல் தனக்கு [13]வரம்பாகக் கொள்ளல்வேண்டும்.

---

[9] "ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை யிரண்டும் ஒருங்கு" (760)

என்னும் திருக்குறளும், அதற்கு "பொருளை இறப்பமிகப் படைத்தார்க்கு மற்றை அறனும் இன்பமும் ஒருங்கே எளியபொருள்களாம் எனவும், ஏனை யிரண்டும் அதன் (பொருளின்) விளைவாகலிற் றாமே ஒரு காலத்திலே உள வாம் என்பார் 'எண்பொருள்' என்றும் கூறினார்" எனவும் பரிமேலழகர் கூறிய உரையும் ஈண்டு நினைக்கற்பாலன.

"நடுவணதெய்த இருதலையும் எய்தும்" (நாலடி) என்பதும் இக் கருத்துப்பற்றியதே. இதனால் அறம் பொருள் இன்பம் மூன்றும் ஒத்த அளவில் அடைதல்வேண்டும் என்னும் கொள்கை கௌடலியருக்கு உடன் பாடன்று என்பது புலனும்.

[10] உவளகம்—அந்தப்புரம்.

[11] நிழல்—கதிரவன் ஒளியில் காலை, நண்பகல், மாலை நேரங்களில் அடி யளந்து நாழிகை அறிதற்குரியது.

[12] நெருக்கிக்கூறலாவது—அரசன் செய்யவேண்டிய காரியத்தைவிட்டுப் பிறசெயலிற் காலம்போக்குதலை அடிக்கடி அறிவித்து உரிய கடமையில் தலைப்படக் கழறிக்கூறல்.

"இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்" (447)

என்னுந் திருக்குறளில் 'இடிக்குந்துணையார்' என்பதற்குத் "தீயனகண் டால் நெருங்கிச்சொல்லும் துணையாம் தன்மையுடையார்" என்று எழுதிய உரை ஈண்டுக் கருதற்பாலது.

[13] வரம்பு — அரசன் தன் கடமையினின்றும் வழீஇ ஒழுகாமைப் பொருட்டு அமைத்துக்கொள்ளும் எல்லை.

## சுலோகம்

வண்டியுருள்கள் இரண்டில் ஒன்றின்றி மற்ருென்று சுழலாது; அதுபோல் அரசியல் துணைவலியின்றி நடைபெருது. ஆதலால் அரசன் [14] துணைவர்களை அமைத்துக்கொண்டு அன்னார் கருத்துக்களையும் கேட்டு ஒழுகல்வேண்டும்.

முதலதிகரணம் மூன்ரும் பிரகரணத்தில்
“ அதனையுடைய அரசன் இயல்பு ” என்னும்
ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[14] துணைவர்—ஆசிரியர் அமைச்சர் முதலியோர். “ சூழ்வார்கண் ணுகவொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் ” என்னுந் திருக்குறள் (445) ஈண்டுக் கருதற்பாலது.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## நான்காம் பிரகரணம்—[1]அமைச்சரையமைத்தல்

## எட்டாம் அத்தியாயம்

அரசன் தன் உடன்கற்றவர்களுடைய மனத்தூய்மையையும், திறமையையும் கண்கூடாகக் [2]கண்டிருத்தலின், தன் நம்பிக்கைக்குத் தகுதியுடையராகிய அன்னாரை அமைச்சராக அமைத்தல் வேண்டும் என்பது [3]பாரத்துவாசர் கொள்கை.

உடன்கற்றவர் உடன்விளையாட்டிலும் கலந்திருப்பர் அதனால் அன்னார் அரசனை அவமதித்தலும் கூடும் ஆகலின் அவரை அமைச்சராக அமைத்தல் கூடாது என்பதும், அரசனோடு [4]மறைவொழுக்கத்தில் தலைப்பட்டு ஒழுகினோர் ஒத்த ஒழுக்கக்கேடுடையராவர் ஆதலான் அன்னாரை அமைச்சராக அமைத்தல்வேண்டும் என்பதும் அவர் அமைச்சராயின் அரசன் நம் உளப்பாங்கை அறிந்தவன் என்னும் அச்சத்தால் [5]குற்றம் செய்யார் என்பதும் விசாலாக்கர் கொள்கைகளாம்.

அரசனுக்கும் [6]அவர்க்கும் ஒழுக்கக்கேட்டாலாகும் குற்றம் பொதுவாகும்; அதனால் அவர் தன் உள்ப்பாங்கை அறிந்தவர் என்னும் அச்சம் காரணமாக, அவரால் செய்யப்படும் செவ்வியவல்லாக்

---

### எட்டாம் அத்தியாயக் குறிப்புரை

[1] அமைச்சர்—அரசனுக்குத் துணைவராகிய மந்திரிகள். அரசன் பெரியோரிணக்கமும் பொறியடக்கமும் உடையவனாயினும், துணைவரையின்றி அரசியற்காவலை நடாத்தும் ஆற்றலிலனாவான். ஆதலின் இது பொறியடக்கத்தின் பின்னர்க் கூறப்பட்டது. இது பிரகரணவியைபாம்.

[2] உடன்கற்றமையால் கண்கூடாகக் காண்டல் கூடுமென்பது.

[3] பாரத்துவாசர் — இவரை முதலாகக்கொண்டு ஆசிரியர் எழுவர் கொள்கைகள் இனிக்கூறப்படும்.

[4] மறைவொழுக்கம்—பிறர்மனைநயத்தல் முதலியன.

[5] தம் ஒழுக்கத்தைச் சீர்திருத்திக்கொண்டு தம் கடமைகளை நன்கு செய்வர் என்பது கருத்து.

[6] அவர்—ஒழுக்கக்கேடுடையவர்,

காரியங்களையும் அரசன் உடன்படநேரும். ஆதலின் அன்னாரை அமைச்சராக அமைத்தலாகாது என்பதும்,

[7] சுலோகம்

அரசன் தன் மறைவொழுக்கத்தைப் பிறர் அறியின், அதனால் தன்வயமிழந்து அறிந்த பிறர் வயப்பட்டவனாவன் என்பதும்,

தன் உயிர்க்கு இறுதிபயக்கும் கேடுகளில் உதவிபுரிந்தோர்பால் உண்மையன்பு காணப்படுவதால் அன்னாரை அரசன் அமைச்சராக அமைத்தல்வேண்டும் என்பதும் பராசரர் கொள்கைகளாகும்.

[8]இஃது [9]அன்பின்பாற்படும் ; [10]அறிவின் திறனன்று. வரையறைசெய்யப்பட்ட பொருட்பயனையுடைய செயல்களில் நியமனம் பெற்றோர், அவ்வரையறுக்கப்பட்ட பொருளையோ, அல்லது மிகுதியான பொருளையோ அச்செயல்களால் விளைவிப்பாராயின் [11]அக்குணம் கண்டு அன்னாரை அமைச்சராக அமைத்தல்வேண்டும் என்பது நாரதர் கொள்கை.

முற்கூறப்பட்டார்பால் [12]மற்றை அமைச்சியற் குணங்கள்

---

[7] இச்சுலோகப்பொருள் முற்கூறியதை வலியுறுத்துவதாகும்.

[8] இஃது — ஒருவன் தன் உடலையும் பொருட்படுத்தாமல் அரசனைக் காத்தல்.

[9] அன்பு காரணமாகப் பணிபுரிதல் என்னும் அறமாம் என்பது கருத்து.

[10] அறிவுவன்மை உடையாரை அமைச்சராக்கவேண்டும் என்பது கருத்து. அரசன் அன்புடைமை ஒன்றே காரணமாக அமைச்சரைத் தெளிதல் ஆகாதென்பதும், அறிவாற்றல் உடைமையையே சிறந்த காரணமாகக்கொண்டு தெளிதல்வேண்டும் என்பதும்

" காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும் " (507)

" அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று " (515)

என்னும் திருக்குறள்களானும், அவற்றிற்குப் பரிமேலழகர் எழுதிய உரைக் குறிப்புக்களானும் அறிக.

[11] பொருளீட்டும் அறிவுவன்மை.

[12] மற்றைக்குணங்கள் — பொருளாக்கல் அல்லாத நம்பிக்கை அன்பு முதலியன.

இன்மையால் அன்னாரை அமைச்சராக்கலாகாது. [13]முன்னை நிகழ்ச்சிகளைக் கண்டிருத்தலால் தந்தையுடன் பிறந்தோர் பாட்டன் வழிவந்தோர் என்னும் இவர்களை அமைச்சராக அமைத்தல் வேண்டும். அன்னார் தமக்குத் தீங்கிழைப்பினும் [14]உறவுத் தொடர்புண்மையால் அரசனைக் கைவிடமாட்டாராதலின், இது விலங்கு முதலியவற்றினும் காணப்படுவதொன்று. ஆனினங்கள் பழக்கமில்லாத நிரைகளை விட்டுப் பழக்கமுள்ள கூட்டங்களிலேயே தங்குகின்றன. இது [15]கௌணபதந்தர் கொள்கை.

முற்கூறிய குலமுதியோர் அரசனுடைய செல்வங்கள் எல்லாவற்றையும் கைப்பற்றிக்கொண்டு தம் விருப்பப்படி ஒழுகுவார் ஆதலின் அன்னாரை அமைச்சராக்கலாகாது என்பதும், நீதியறிந்த [16]புதியவர்கள் தவறுதல் கண்டால் மறலியைப்போல அரசன் கடுந்தண்டம் செய்வான் என்னும் கருத்தால் பிழைசெய்யமாட்டார் ஆதலின், அப்புதியவரை அமைச்சராக அமைத்தல்வேண்டும் என்பதும் [17]உத்தவர் கொள்கைகளாம். நீதிநூல் அறிந்தும், அந்நூற்பொருளைச் செயல்முறையில் [18]காணாதார் அமைச்சியற் காரியங்களில் [19]இடர்ப்படுவாராதலின் அன்னாரை அமைச்சராக்கல் ஆகாது என்பதும், அமைச்சர்க்குச் சிறப்பாகவேண்டுவன குணங்களேயாதலின், நற்குடிப்பிறப்பு, பேரறிவு, [20]தூய்மை, ஊக்க

---

[13] முன்னை நிகழ்ச்சிகள் — தந்தையுடன்பிறந்தோர், பாட்டன்வழிவந்தோர், மேற்கொண்டசெயல்கள்.

[14] இக்கருத்து,

“ பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள ” (521)

“ விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும் ” (522)

என்னும் திருக்குறள்களில் விளக்கப்பட்டிருத்தலறிக.

[15] கௌணபதந்தரை பீஷ்மர் என்பர் வாசஸ்பத்தியமுடையார்.

[16] புதியவர்கள்—முற்றொடர்பில்லாதவர்.

[17] உத்தவர்—கண்ணனுடைய அமைச்சர்.

[18] காணாதார்—அநுபவமில்லாதார்.

[19] இடர்ப்பாடு—அரசியற்காரியங்களை நடத்துவதில் ஆற்றலின்மை.

[20] உபதைகளால் ஆராயப்பட்ட தூய்மை.

முடைமை, தலைவன்பால் அன்பு முதலியன உடையாரையே அமைச்சராக அமைத்தல்வேண்டும் என்பதும், [21]வாகுதந்தீ புத்திரன் கொள்கைகளாம்.

ஒருவனுடைய [22]காரியங்களின் திறமையாலும், அறிவு முதலியவற்றின் திறமையாலும் அவனுக்கு அவ்வப் பதவிக்குரிய தகுதி துணியப்படும். ஆதலின் இங்குக்கூறிய [23]எல்லாம் பொருத்த முடையன என்பது கௌடலியர் கொள்கையாகும்.

### சுலோகம்

அமைச்சர்க்குரிய குணச்செல்வத்தையும் காலம், இடம், செயல் என்னும் இவற்றையும் பகுத்துணர்ந்து இவ்வெல்லோரையும் அமைச்சராக அமைக்கலாம் அன்றி, அமைச்சர்க்குத் தலைவராக்கலாகாது.

முதலதிகரணம் நான்காம் பிரகரணத்தில்
"அமைச்சரை அமைத்தல்" என்னும் எட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[21] வாகுதந்தீபுத்திரனை இந்திரன் என்று கூறுப.

[22] காரியங்கள்—உடன்கற்றல், உடன்விளையாடல் முதலியன.

[23] எல்லாம் பொருத்தமுடையன என்றமையால், குணங்களும், குற்றங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டனவாம். அங்ஙனமாயின் ஆசிரியர் கருத்துப் பின்வருமாறு — உடன்கற்றவர் முதலியோர்பால் நம்பிக்கை முதலிய குணங்கள் உண்மையால் அவரை விலக்கலும் ஆகாது. அவமதிப்பு முதலிய குற்றங்கள் உண்மையால் அமைச்சர்தலைவராகச் செய்தலுமாகாது. எனவே, பாரிசேட அளவையால் அன்னார் குணங்களுக்கேற்பக் காலம் இடங்கட்கொத்தவாறு அவரைச் சிறிய தொழில் அமைச்சர்பதவியில் நியமனம் செய்யலாமென்பது போதரும்.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## ஐந்தாம் பிரகரணம்—[1]மந்திரி புரோகிதரை அமைத்தல்

## ஒன்பதாம் அத்தியாயம்

முதலமைச்சனுக்குரிய குணங்கள் வருமாறு—தன் அரசனது நாட்டிற் பிறத்தல், நற்குடிப்பிறப்பு, [2]நற்சுற்றமுடைமை, [3]கலைப் பயிற்சி, பொருணூல் உணர்ச்சி, மதிநுட்பம், மறவியின்மை, சோர்வின்மை, சொல்வன்மை, காலம் இடங்களுக்கு ஏற்ற அறி வுடைமை, [4]எதிர்ச்செயல் மாற்றம், [5]ஆண்மை, [6]பெருமை, துன் பம் பொறுத்தல், [7]தூய்மை, [8]அன்புடைமை, அரசனிடத்து உறுதி

---

### ஒன்பதாம் அத்தியாயக் குறிப்புரை

[1] மந்திரி—அமைச்சர் தலைவன்; ஏனைய அமைச்சர் எல்லாம் இவனுக்கு உட்பட்டவராவார். புரோகிதன் அரசனுக்குரிய காரியங்கள் எல்லாவற்றிற் கும் சான்றாக (பிராமாணிகனாக) முன்னிற்பவன். அமைச்சரை அமைத்தல் கூறியபின் அன்னார் தலைவரையும் புரோகிதரையும் அமைத்தல் கூறப் படுதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது. இதனால் பிரகரணவியைபு புலனாதல் அறிக.

[2] ஸ்வஹ்ருஹ:—என்று முதனூல் கூறும்; இதற்கு நற்சுற்றமுடைமை என்பதும், எளிதில் திருந்தத்தக்கவன் என்பதும் பொருளாம். அமைச்சன் நல்ல சுற்றமுடையவனாக இருக்கவேண்டும் என்பதை,

“அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி” (500)

என்னும் திருக்குறளானும், “உலகத்தார் பழிப்பன ஒழிதற்கும் புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலகநடையியல்பு சுற்றமில்லாதார்க்கு இன்மையின் அவர் தெளியப்படார் என்பதாம்” என்னும் பரிமேலழகர் உரையானும் உணர்க.

[3] கலைப்பயிற்சி—யானை, குதிரை, தேர் இவற்றை நடாத்தல், போர் புரிதல், படைக்கலப்பயிற்சி, இசைப்பயிற்சி முதலியன.

[4] எதிர்ச்செயலும் எதிர்மாற்றமும் எனக்கொள்ளல் வேண்டும். மாற் றம்—எதிருரை. இதனை, பிரதிபத்தி என்று முதனூல் கூறும். இதற்கு எதிர்ச்செயல், எதிர் உரை என்பன பொருளாதலோடு, இன்னது செய்யத் தக்கது என்னும் துணிவுடைமையும் பொருளாம்.

[5] ஆண்மை—உற்சாகசக்தி.

[6] பெருமை—பிரபுசக்தி.

[7] தூய்மை—அறவுபதை முதலிய சோதனைகளால் ஆயது.

[8] இஃது எல்லோரிடத்தும் செல்வது.

யான அன்பு, ஒழுக்கம், உடல்வலி, பிணியின்மை, அஞ்சாமை, செருக்கின்மை, [9]அசைவின்மை, [10]காண்டற்கினிமை, [11]பகை செய்யாமை என்பனவாம். [12]இவற்றில் காற்கூறு குறைந்தவன் இடையாயவன் எனவும், அரைக்கூறு குறைந்தவன் கடையாயவன் எனவும் கூறப்படுவார். மேற்கண்ட குணங்களுள், தன் நாட்டிற் பிறத்தல் நற்குடிப்பிறத்தல் நற்சுற்றமுடைமை என்னும் இவற்றை நம்பிக்கையுடையார் முகமாகவும், கலைப்பயிற்சி பொருணூல் உணர்ச்சி என்னும் இவற்றை ஒத்த கல்விப்பயிற்சி உடையார் முகமாகவும், மதிநுட்பம் மறவியின்மை சோர்வின்மை என்னும் இவற்றைக் காரியம்செய்தல் முகமாகவும், சொல்வன்மை காலம் இடங்களுக்கேற்ற அறிவுடைமை எதிர்ச்செயல் மாற்றம் என்னும் இவற்றைக் காரியங்களைப்பற்றிய பேச்சுக்களினின்றும், ஆண்மை பெருமை துன்பம்பொறுத்தல் என்னும் இவைகளைக் கேட்டின் விளைவினின்றும், தூய்மை அன்புடைமை அரசனிடத்து உறுதி யான அன்பு என்னும் இவற்றை நடந்துகொள்ளும் முறையி னின்றும், ஒழுக்கம் உடல்வலி பிணியின்மை அஞ்சாமை செருக் கின்மை அசைவின்மை என்னும் இவற்றை உடன்பழகுவோர் முகமாகவும், காண்டற்கினிமை பகைசெய்யாமை என்னும் இவற்றைக் காட்சியளவையானும் ஆராய்ந்து அறிதல்வேண்டும்.

[13]அரசியற்காரியம், காட்சி அநுமானம் ஆகமம் மூன்று அளவைகளானும் நிகழ்வதாம். நேரில் காண்டல் காட்சியாகும். பெரியோர் உரை ஆகமமாகும். செய்யப்பட்ட காரியக்கூறு

---

[9] ஓர் உறுதிப்பாட்டினின்றும் சிதைவெய்தாமை.

[10] அழகிய தோற்றம்.

[11] மண், பெண் முதலியகாரணங்களால் பிறரோடு பகைகொள்ளாமை.

[12] ஈண்டு அமைச்சர் தலைவனுக்குக் கூறப்பட்ட குணம் செயல்களில் பல, திருக்குறளில் 'தூது' என்னும் அதிகாரத்தில் காணப்படுகின்றன. அத்தூதுவருள் தான் வகுத்துக்கூறுவானை அமைச்சனோடு ஒப்பான் எனவும், கூறியது கூறுவானை அவனிற் காற்கூறு குணங்குறைந்தோன் எனவும் பரிமேலழகர் கூறுவர். (தூது—அவதாரிகை.)

[13] அரசன் செய்யவேண்டிய காரியங்கள் காண்டல் கருதல் உரை என்னும் மூன்றையும்பற்றி நிகழ்வன ஆதலால் அம்மூன்று அளவைகளின் இயல்பும் இங்கே கூறப்படுகின்றன.

கொண்டு, செய்யப்படாத காரியக்கூற்றின் அளவை உய்த்துணர்ந்து அறிதல் அநுமானமாகும். அரசியல் காரியங்கள் ஓரே சமயத்தில் விரைந்து செய்யத்தக்கனவும், பலவிடங்களைப்பற்றி நிற்பனவும், பல்வேறு வகைப்பட்டனவும் ஆக இருத்தலால், காலம் இடங்களுக்கு மாறுபடாமல் இருக்கவேண்டும் என்பதுபற்றி அரசன் நேரிற்செய்ய இயலாத காரியங்களை அமைச்சர்களைக்கொண்டு செய்வித்தல்வேண்டும். இத்துணையும் மந்திரிகளை அமைத்தல் கூறப்பட்டது.

நூல்களில் கூறப்பட்ட குடிப்பிறப்பு, கல்வி முதலியவற்றால் நிறைந்தகுலத்திற் பிறத்தலும், ஒழுக்கமும், ஆறங்கங்களுடன்கூடிய வேதங்கள், கணிதநூல், [14]நிமித்தநூல், அரசநீதி என்னும் இவற்றில் சிறந்த பயிற்சியும், தெய்வத்தாலும், மனிதராலும் ஏற்படும் [15]கேடுகளை அதர்வ வேதத்தில் கூறப்பட்ட [16]மந்திரங்களாலும் உபாயங்களாலும் போக்கவல்ல திறமையும் உடையானைப் புரோகிதனாக அமைத்தல்வேண்டும். ஆசிரியனிடத்து மாணவகனும், தந்தையின்பால் புதல்வனும், தலைவன்பால் பணியாளனும் நடந்து கொள்ளுதல்போலப் புரோகிதன்பால் அரசன் ஒழுகல்வேண்டும்.

### சுலோகம்

புரோகிதனால் வளர்க்கப்பட்டதும், மந்திரியின் சூழ்ச்சியினால் காக்கப்பட்டதும், நீதிநூல் நெறியொழுகுவதும், ஆகிய அரசகுலம்

---

14 நிமித்தநூல்—சகுனங்களைப்பற்றிய நூல்.

15 தெய்வத்தால் நேரும் கேடு—மிகுபெயல், பெயலின்மை, இடிவீழ்ச்சி முதலியன. மனிதரால் உண்டாகும் கேடு—தீயவர்களால் உண்டாகும் துன்பங்கள்.

16 தெய்வத்தால் நேர்வனவற்றை உரிய மந்திரங்களாலும், மனிதர்களால் நேர்வனவற்றை சாமம்முதலிய உபாயங்களானும் போக்கவேண்டும் என நிரனிறையாற் பொருள் கொள்ளவேண்டும். இக்கருத்துக்களை,

“ உற்றநோய் நீக்கி உறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல் ” (442)

என்னும் திருக்குறளானும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய விளக்கவுரைகளானும் தெளியலாம்.

[17]படைத்துணையின்றியே எய்தற்கரிய [18]வெற்றிகளை நன்றாக எய்துவதாகும்.

முதலதிகரணம் ஐந்தாம் பிரகரணத்தில்
"மந்திரி புரோகிதரை அமைத்தல்" என்னும்
ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[17] போர்ச்செயலில்லாமலே வெற்றியெய்தும் என்பது. ஈண்டு,

"தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை" (444)

என்னும் திருக்குறளும் "பொருள்படை அரண்களாகிய வலியினும் இத்துணைவலி சிறந்ததென்றது இவர் அவற்றான் நீக்கப்படாத தெய்வத்துன்பம் முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின்" என்னும் பரிமேலழகர் உரையும் நினைக்கத்தக்கன.

[18] வெற்றியாலாம் பேறுகளை என்பது கருத்து.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## [1] ஆரும் பிரகரணம்—[2] உபதைகளால் அமைச்சர்களின் [3] மனவியல்பு ஆராய்தல்

## பத்தாம் அத்தியாயம்

அரசன் மந்திரி புரோகிதர்களோடு கலந்துகொண்டு அமைச்சர்களைச் சிறிய பதவிகளில் இருத்தி உபதைகளால் ஆராய்தல் வேண்டும்.

தகுதியற்றவர்களுக்கு ஓதுவிக்கவும் வேட்பிக்கவும் அரசனுல் ஏவப்பட்டு உடன்படாமல் வெறுத்த புரோகிதனை அப்பதவியினின்றும் [4]விலக்கிவிடல் வேண்டும். அப்புரோகிதன் [5]சத்திரி என்னும் ஒருவகை ஒற்றர்களால் "இவ்வரசன் அறவோன் அல்லன் ஆதலின் இவனைப்போக்கி இவன் குலத்துத் தோன்றியவன், [6]இவனுல் சிறைப்படுத்தப்பட்டவன், அரசுரிமைக்கு உரிய நற்குடியிற்

---

### பத்தாம் அத்தியாயக் குறிப்புரை

[1] ஒருவன் குடிப்பிறப்பு முதலிய குணம் செயல்களை உடையனுயினும் உபதைகளால் தெளியப்படும் தூய்மையுடையன் அல்லனுயின் அமைச்சனும் தன்மைக்கு உரியனுகான்; ஆதலின் உபதைகளால் ஆராய்தல் கூறப்படுகின்றது. இதனுல் பிரகரண இயைபு அறிக.

[2] உபதை—மறைவிற்செய்யும் சோதனை. இப்பிரகரணத்தில் கூறப்படும் உபதைகளின் இயல்பெல்லாம் திருக்குறளில் 'தெரிந்து தெளிதல்' என்னும் அதிகாரத்தில்,

> " அறம் பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
> திறந் தெரிந்து தேறப்படும் " (501)

என்னும் குறளினும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய விசேட உரையினும் செவ்விதின் விளக்கிக் கூறப்பட்டன.

[3] மனவியல்பு—அரசன்பால் வைத்த எண்ணத்தின் நலம் தீங்குகள்.

[4] விலக்குதல், உபதைகளால் ஆராயப்படுவார் தம் உட்கருத்தைச் சொல்லுதற்கு நம்பிக்கைகொள்ளுதல் பொருட்டாம்.

[5] சத்திரி என்பார் ஒற்றருள் ஒருவகையினர் (இந்நூல் 12-ஆம் அத்தியாயம்) குறிசொல்லுதல் முதலியவற்றைத் தலைக்கீடாகக்கொண்டு பலவிடத்தும் மறைந்து திரிவோர்.

[6] சிறையில்வைத்துக் காக்கப்படும் அவ்வரசன்புதல்வன் முதலியோருள் ஒருவன்.

பிறந்தவன், எல்லோராலும் ஒருங்கு போற்றப்படுவோன், குறுநில மன்னன், காட்டுத்தலைவன், [7]நம்மெல்லோராலும் துணியப்பட்டவன் என்னும் இவருள் அறவோனாகிய பிறன் ஒருவனை இப்பதவியில் அரசனாக்குவோம். இதுதான் யாவர்க்கும் இயைந்தது; நின் கருத்தென்னை?" என்று அமைச்சரைத் தனித்தனியே [8]சூளுறவோடு சொல்லுவித்து வேறுபடுத்தல்வேண்டும். இதற்கு உடன்படாஅயின் தூயோனாவான். இஃது [9]அறவுபதையாம்.

தகுதியற்றவனை வணங்கும்படி அரசனால் ஏவப்பட்டு உடன்படாமையால் [10]விலக்கப்பட்ட படைத்தலைவன் ஒற்றர்களைக் கொண்டு "இவ்வரசனைக் [11]கொன்றால் விரும்பிய பொருளைப் பெறலாம் இதுதான் எல்லோர்க்கும் இயைந்தது; நின் கருத்தென்னை?" என்று அமைச்சரைத் தனித்தனியே சூளுறவோடு சொல்லுவித்து வேறுபடுத்தல்வேண்டும். இதற்கு உடன்படாஅயின் தூயோன் ஆவான். [12]இது பொருளுபதையாம்.

உரிமை மகளிரின் [13]நம்பிக்கைக்கும், வழிபாட்டிற்கும் இடமான ஒரு தவமுதுமகள் "கோப்பெருந்தேவி நின்னைக் கூடுதற்கு விரும்பி அதற்குரிய உபாயத்தையும் ஆராய்ந்துகொண்டு இருக்கின்றாள். அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமேயன்றிப்

---

[7] ஔபபாதிகன் என்று முதல்நூல் கூறும். இதற்கு மலைச்சாரலில் வாழ்வோன் என்றும் துணியப்பட்டவன் என்றும் பொருள்கொள்ளலாம்.

[8] சூளுறவு, மறை வெளிப்படாமைப் பொருட்டு.

[9] அறத்தை நிலைநிறுத்துதற்பொருட்டுச் செய்யப்படும் கபடசோதனையாதலின் இஃது அறவுபதை என்று கூறப்பட்டது.

[10] ஈண்டும் விலக்கப்படுவதற்குக் காரணம் முன்னர்க் கூறியாங்குக் கொள்ளல்வேண்டும்.

[11] ஈண்டும் இவ்வரசன் கொடையாளியல்லன் ஆதலின் கொடையுடையான் பிறனொருவனை இப்பதவியில் அரசனாக்குவோம் என்னும் கருத்தை இயைத்துக்கொள்ளல் வேண்டும்.

[12] உலோப குணமுடையாரைப் பொருட்பேறு காட்டி ஆராய்தற்கு உரியதாகலின் இது பொருளுபதை என்று கூறப்பட்டது.

[13] நம்பிக்கைக்கு இடனாதல் அமைச்சர் நம்புதற்கு ஏதுவாம் என்பது கருத்து.

பெரும்பொருளும் கைகூடும்" என்று அமைச்சரைத் தனித்தனியே சூளுறவோடு சொல்லி வேறுபடுத்தல்வேண்டும். இதற்கு உடன்படானாயின் தூயோனாவான். இஃது இன்பவுபதையாம்.

[14]உண்டாட்டு முதலிய நிமித்தத்தை மேலிட்டு ஓரமைச்சன் ஏனைய அமைச்சரை எல்லாம் அழைத்து ஓரிடத்துக் கூட்டல் வேண்டும். அது [15]பொறாத அரசன் அவரைத்தடுத்து இடையூறு செய்தல்வேண்டும். இங்ஙனம் இடையூறு செய்யப்பட்டு பொருளும் மானமும் இழந்த அமைச்சரை அரசனால் முன்னரே [16]அவமதிக்கப்பட்ட மாணவகவேடந் தாங்கிய [17]காபடிகன் என்னும் ஒருவகை ஒற்றன் அடைந்து "இவ்வரசன் தீயநெறியில் ஒழுகுகின்றான். இவனைக்கொன்று ஒழித்து மற்றொருவனை அரசனாக்க வேண்டும். இதுதான் யாவர்க்கும் இயைந்தது. நின் கருத்தென்னை?" என்று தனித்தனியே சூளுறவோடு சொல்லி வேறுபடுத்தல்வேண்டும். இதற்கு உடன்படானாயின் தூயவனாவான். இஃது [18]அச்ச உபதையாம்.

உபதைகளால் ஆராயப்பட்டாருள், அறவுபதையால் தூயராயினாரை, நீதிமன்றத்திலும் சிறுபகை களைதலினும், பொருள் உபதையால் தூயராயினாரை, இறைப்பொருளீட்டல் பொருட்பண்டாரம் புரத்தல் என்னும் இவற்றிலும், இன்ப உபதையால் தூயராயினாரை, [19]உரிமைமகளிர் போகப்பெண்கள் இருக்கும் உவளக முதலியவற்றின் பாதுகாப்பினும், அச்சவுபதையால் தூயராயினாரை, அரசன் பக்கலிருந்து செய்யத்தக்க [20]காரியங்களிலும் வினையாளராக நியமித்தல்வேண்டும். எல்லா உபதைகளாலும்

---

[14] இங்குக் கூறப்படும் நிகழ்ச்சிகள் எல்லாம் கபடசோதனையின் நிமித்தம் அரசனால் நிகழ்வனவாம்.

[15] பொறாதவன்போல் வெளிப்படுத்திக்கொண்ட அரசன் என்க.

[16] இவ்வவமதிப்பு உண்மையன்று; படைத்துக்கொண்டது.

[17] காபடிகன்—ஆசிரியனாக அல்லது மாணவகனாக நடித்து மறைபொருளை அறியும் ஒருவகை ஒற்றன்.

[18] அச்சத்தைப்பற்றி நிகழ்தலின் அச்ச உபதையாயிற்று.

[19] உரிமை மகளிர்—அரசனுடைய தேவிமார்.

[20] உடற்பாதுகாப்பு முதலிய செயல்கள்,

தூயராயினரை தலைமை அமைச்சர் பதவியில் இருத்தல்வேண்டும். எல்லா உபதைகளாலும் தூய்மையில்லாதாரை, [21]ஆகரம், [22]நன் மரக்காடு, யானைக்காடு என்னும் இவற்றின் [23]தொழிலாளராக நியமனம் செய்தல்வேண்டும்.

## சுலோகங்கள்

(1) அறம் பொருள் இன்பம் உயிரச்சம் ஆகிய நான்கினாலும் ஆராயப்பட்ட தூயவர்களை அவரவர் தூய்மைக்கேற்ப அன்னார் தகுதிக்குரிய செயல்களில் நியமனம் செய்தல்வேண்டும் என்று பண்டை ஆசிரியர்கள் வரையறைப்படுத்தினர்.

(2) [24]அரசன் அமைச்சரின் தூய்மையை ஆராய்தற் பொருட்டு [25]தன்னையாதல், தன் [26]தேவியையாதல் கருவியாகக் கொள்ளலாகாது என்பது கௌடலியர் கொள்கையாம்.

(3) [27]நன்னீர்க்கு நஞ்சினாற் கேடுவிளைப்பதுபோல் குற்றமற்ற அமைச்சனுக்கு உபதையால் கேடுவிளைக்கலாகாது; என்னை? ஒரோவழி உபதையால் கலக்கமுற்றவனைத் தேற்றுதற்குரிய மருந்து காண்டல் அரிதாகவும் கூடும்.

---

[21] ஆகரம்—பொன், வெள்ளி முதலியன உண்டாகும் இடம்.

[22] நன்மரம்—பலகை, தூண் முதலியவற்றிற்குத் தகுதியான மரங்கள்.

[23] இதனால் இவரை உடல்வருந்திச் செய்யத்தக்க காரியங்களில் இருத் தல் வேண்டும் என்பது கருத்து.

[24] இச்சுலோகக் கருத்து—தூய்மையாராய்ச்சிக்குரிய கருவிகளில் ஒருசில கௌடலியருக்கு உடன்பாடில்லை என்பது.

[25] தன்னைக் கருவியாகக்கொண்டது அச்ச உபதையில் "இவ்வரசனைக் கொன்றுவிடவேண்டும்" என்பது.

[26] தேவியைக் கருவியாகக்கொண்டது இன்ப உபதையில் "கோப்பெருந் தேவி விரும்புகின்றாள்" என்பது.

[27] இதுமுதல் மூன்று சுலோகங்களாலும் இயல்பாகவே குற்றமற்ற அமைச்சனை உபதைகளால் ஆராயுங்கால் தன்னையும் தன் தேவியையும் கருவியாகக்கொள்ளலாகாது என்பதும், கொண்டால் வரும் தீங்கும் தெரி விக்கப்பட்டன.

(4) [28]நால்வகை உபதைகளாலும் கலக்கமுற்ற திறலுடையான் அறிவு உறுதியில் நிலைபெற்றுக் கருதியசெயலின் முடிவை அடையாமல் ஒழியாது.

(5) ஆதலால் அரசன் நால்வகை உபதைகளையும் மேற்கொள்ளுங்கால் தன்னையும் தன் தேவியையும் அல்லாத புறம்பான கருவிகளைக்கொண்டு அமைச்சரின் நலந்தீங்குகளை ஒற்றர்களால் ஆராய்தல்வேண்டும்.

முதலதிகரணம் ஆறும் பிரகரணத்தில்
"உபதைகளால் அமைச்சர்களின் மனவியல்பு ஆராய்தல்"
என்னும் பத்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[28] இயல்பாகவே தூய்மையுடையான் உபதைகளால் கலக்கமுற்று ஒரோவழித் தகாத செயல்களில் தலைப்பட நினைப்பானுயின் ஆற்றலுண்மையால் அச்செயலை முடித்தேவிடுவான் என்பது கருத்து.

## முதல் அதிகாரணம்—பயிற்சிபகர்தல்

## ஏழாம் பிரகாரணம்—[1] ஒற்றரை அமைத்தல்

## பதினோராம் அத்தியாயம்

உபதைகளால் அமைச்சரின் தூய்மையை ஆராய்ந்த அரசன் காபடிகன், உதாத்திதன், கிருகபதிகன், வைதேககன், தாபதன் என்னும் குறியுடையாரையும், சத்திரி, வன்கண்ணன், நஞ்சிடுவோன், தவமுதுமகள் என்னும் இவர் [2]முதலியோரையும் ஒற்றராக அமைத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறர் உள்ளத்தை அறிதல், புத்துணர்ச்சி, ஆசிரிய மாணவகத் தொழில் என்னும் இவற்றை உடையான் [3]காபடிகன் ஆவான். அவனைத் தலைமை அமைச்சன், பொருளானும் [4]பெருமைப்படுத்தலானும் ஊக்கமுறுத்தி "அரசனுடையதும் என்னுடையதும் ஆகிய கட்டளைகளை மேற்கொண்டு அமைச்சன் முதலியோருள் எவனிடத்து [5]எக்குற்றத்தை எப்பொழுது காண்கின்றாயோ அப்பொழுதே எம்மிடம் அறிவித்தல்வேண்டும்" என்று கூறல் வேண்டும்.

அறிவும் தூய்மையும் உடையனாய்த் [6]துறவறத்தினின்றும்

---

### பதினோராம் அத்தியாயக் குறிப்புரை

[1] அமைச்சருடைய நலம் தீங்குகளை ஆராய்தல் ஒற்றரான் அன்றிக் கூடாதாகலான் இஃது அதன்பின் கூறப்பட்டது. இதனால் பிரகரண இயைபு புலனாதல் அறிக.

[2] முதலியோர் என்றதனால் கூனன், குறளன், ஊமன், செவிடன், அறிவிலி, குருடன், கூத்தன், இசைபாடுவோன் என்னும் இவரையும் கொள்ளல்வேண்டும்.

[3] கபடச்செயலையுடைமையால் 'காபடிகன்' என்னும் பெயரை உடையனாயினான்.

[4] பெருமைப்படுத்தல்—சிறப்புப்பட்டம் முதலியன வழங்கல்.

[5] குற்றம்—களவு பிறர்மனை நயத்தல் முதலியன.

[6] பௌத்த சைவ ஆசாரங்களினின்றும் வழீஇனோரையும் ஈண்டுத் தழீஇக்கொள்ளல்வேண்டும்.

நழுவினவன் உதாத்திதனுவான். அவன் மிகுதியான [7]பொருளேயும் மாணவரையும் உடையனுய், உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் செயல்களின்பொருட்டு ஏற்பட்டுள்ள நிலத்தில் அச்செயல்களைச் [8]செய்வித்தல்வேண்டும். அச்செயல்களால் விளையும் பயனைக் கொண்டு [9]எல்லாத் துறவிகட்கும் உண்டி, உடை, உறையுள் என்னும் இவற்றை அளித்தல்வேண்டும். அவற்றில் விருப்பமுடையோரை இவ்வுருவத்தோடு அரசனுக்குரிய [10]பயன் விளைக்கும் செயல்களில் தலைப்பட்டு உணவு, கூலி பெறுங்காலத்தில் இங்கு வரவேண்டும் என்று வேறுபடுத்துத் தன்வயமாக்கல் வேண்டும்.

இங்ஙனமே எல்லாத்துறவிகளும் [11]தத்தம் குழூஉக்களை வேறு படுத்தல்வேண்டும்.

[12]உழவுத்தொழிலால் மெலிந்தவனும், அறிவும் தூய்மையும் உடையானும் ஆகிய உழவன் கிருகபதிகனுவான். அவன் உழவுத் தொழிற்குரிய நிலத்தில் மிகுதியான பொருளையும், துணைவரையும் உடையவனுய் அச்செயல்களைச் செய்வித்தல்வேண்டும். அச்செயல்களால் விளையும் பயனைக்கொண்டு இல்லற நிலையிலுள்ள எல்லோர்க்கும் உணவு முதலியன அளித்தல்வேண்டும். அவற்றில் விருப்பமுடையோரை "இவ்வுருவத்தோடு அரசனுக்குப் பயன் விளைக்கும் செயலில் தலைப்பட்டு உணவு கூலி பெறுங்காலத்தில் இங்கு வரவேண்டும். என்று வேறுபடுத்துத் தன்வயமாக்க

---

[7] உழவு முதலிய தொழில்களுக்குப் பொருளும் வினையாளரும் வேண்டும் என்பதுபற்றி இவ்வாறு கூறப்பட்டது.

[8] தன்னுடைய மாணவரைக்கொண்டு செய்வித்தல் என்பது கருத்து.

[9] உணவு முதலியவற்றை விரும்பிவரும் புதிய புதிய பல மாணுக்கர்களைத் திரட்டுதற்குரிய புகழ்ப்பரப்பைக் குறித்து "எல்லாத்துறவிகட்கும்" என்று கூறப்பட்டது. எல்லாத்துறவிகட்கும் என்றது இங்கே தன்பால் பணிசெய்வாரை அன்றி ஏனைய துறவிகளையும் குறிக்கும்.

[10] செயல்—பிறர்நாட்டில் நிகழும் செய்திகளை அறிந்து கூறுதல்.

[11] தத்தம் குழூஉக்களை என்றது பௌத்த சைவ வைணவர் முதலியோர் அவரவர் சமயத்தவரை எனக்கொள்க.

[12] இப்பகுதிக்கு உதாத்திதனியல்பிற்கண்ட குறிப்புக்களை ஓட்டிக் கொள்க.

வேண்டும். இங்ஙனமே அக் கிருகபதிகளும் தம்மவரை வேறு படுத்தல்வேண்டும்.

[13]வாணிகத் தொழிலால் மெலிந்தவனும், அறிவும் தூய்மையும் உடையானும் ஆகிய வாணிகன் வைதேககன் ஆவான். அவன் வாணிகத் தொழிற்குரிய நிலத்தில் மிகுதியான பொருளையும், துணைவரையும் உடையனாய் அச்செயல்களைச் செய்வித்தல் வேண்டும். அவற்றால் விளையும் பயனைக்கொண்டு வாணிகத் தொழிலாளர் எல்லோர்க்கும் உணவு முதலியன அளித்தல் வேண்டும். அவற்றில் விருப்பமுடையோரை, இவ்வுருவத்தோடு அரசனுக்குப் பயன்விளைக்கும் செயலில் தலைப்பட்டு உணவு கூலி பெறுங்காலத்தில் இங்கு வரவேண்டும் என்று வேறுபடுத்துத் தன் வயமாக்கல்வேண்டும். இங்ஙனமே அவ் வைதேககர்களும் தம் மவரை வேறுபடுத்தல் வேண்டும்.

[14]மழித்தலும் நீட்டலும் உடையனாய்ப் பிழைப்பில் விருப்பம் உடையோன் தாபதனாவான். அவன் நகரத்தின் அணிமையில் மழித்தலும் நீட்டலுமுடைய பல மாணாக்கரை உடையனாய்க் [15]கீரை முதலியவற்றையாதல், ஒரு கைப்பிடி புல்லையாதல் திங்களுக்கு ஒருமுறை அல்லது இரண்டு திங்கள்களுக்கு ஒருமுறை [16]வெளிப்படையாக உண்ணவேண்டும். மறைவில் விருப்பமான உணவை உண்ணலாம். வாணிகத்தொழிலாளரும் மாணவரும் [17]விரும்பிய பொருட்பேறுமிகுதி குறித்து இவனை வழிபடல்

---

[13] இப்பகுதிக்கும் மேற்கண்டவாறு குறிப்புக்கொள்க.

[14] மழித்தல்—தலைமயிரை அறவே களைதல்; இது பௌத்த துறவி முதலியோர்க்கு உரியது. நீட்டல்—சடையாக்கல்; இது சைவத் துறவி முதலியோர்க்கு உரியது. இங்கே கூறிய தாபதரை "துறந்தார் படிவத்தர்" என்பர் திருவள்ளுவர். (586)

[15] முதலியவை என்றதனால் கிழங்கு, குருத்து, தளிர், இலை, பூ, காய், கனி, ஆம்பி முதலியனவும் கொள்ளல்வேண்டும்.

[16] வெளிப்படையாக—எல்லோரும் அறியும்படி. இவ்வெளிப்படையுணவு, உணவின்மையை வெளிப்படுத்தற் பொருட்டாம்.

[17] இத்தாபதர் அருளால் யாங்கள் நிறைந்த பொருட்பேறுடையேம் ஆயினேம் என்று கபடமாகக்கூறிப் பொருள் முதலியவற்றைக் கையுறையாகக்கொடுத்து வணங்கவேண்டும் என்பது கருத்து.

வேண்டும். இவனுடைய மாணுக்கர்கள் "இவர் ஒரு சித்தர்; வருங்காலம் உணர்ந்தவர்" என்று வெளிப்படுத்தல்வேண்டும். எதிர்காலப்பயனை அறியவேண்டும் என்னும் விருப்பத்தால் வினவ வந்தார்க்கு அவர்தம் உடலுறுப்புக்களின் செயல் வேறுபாடுகளைக் குறிக்கும் [18]சோதிட நூல் முறையாலும், [19]மாணுக்கர்களின் குறிப்புக்களாலும், அவர் குலத்தில் முன்னிகழ்ந்த காரியங்கள், [20]ஊதியச் சுருக்கம் [21]தீப்பற்றி எரிதல், கள்வர்பயம், வெறுக்கத்தக்க கொலை, [22]மகிழ்ச்சிக்கொடை, அயல்நாட்டு நிகழ்ச்சி அறிதல் "இஃது [23]இன்றே நாளையோ வரும், இதனை இன்றே நாளையோ அரசன் செய்வான்", என்பவை முதலியவற்றைக் கூறல்வேண்டும்.

இத் தாபதனது சொல்லை மறைவான, "சத்திரிகள்" என்னும் ஒற்றர் [24]உண்மைப்படுத்தல்வேண்டும். அஞ்சாமை, அறிவு, சொல்வன்மை, ஆண்மை என்னும் இவை [25]உடையார்க்கு அரசனால் கிடைக்கும் பொருட்பேற்றையும், மந்திரியின் நல்வரவையும் பற்றித் தெரிவித்தல்வேண்டும். இவர்களுடைய வாழ்க்கைக்கும், தொழில்களுக்கும் தலைமை அமைச்சன் [26]சிறப்பாக முயலவேண்

---

[18] சோதிட நூல்—ஈண்டு ஆரூடம் கேட்கும் காலத்தில் கேட்போருடைய உடல் உறுப்புக்களின் செயல்களைக்கொண்டு நன்மை தீமைகளை அறிதற்கு உரியது.

[19] மாணுக்கர் குறிப்பு—வருவோர் இயல்பை வேறுவகையாக உணர்ந்து கண் புருவம் முதலியவற்றால் ஆசிரியன் உணரக் குறிப்பில் தெரிவித்தல்.

[20] கேட்போன் பொருள்நிலையால் நடுத்தரமுடையோனாயின் அவனுக்குக் கூறுவது.

[21] தீப்பற்றி எரிதல் முதலிய மூன்று நிகழ்ச்சிகளும் அரசனுக்குத் தீங்கு செய்வோர்க்குக் கூறுவன.

[22] அரசனுக்கு உதவிபுரிவோர்க்குக் கூறுவது.

[23] "இன்றே நாளையோ" என்பன, துணிவின்மையால் ஏமாற்றுதற் பொருட்டுக் கூறப்படுவன.

[24] பொருட்பேறு, தீப்பற்றியெரிதல் முதலியவற்றை மறைவாகச் செய்தல்வேண்டும் என்பது கருத்து.

[25] இவர்கள்—தாபதன்பால் குறிகேட்க வந்தவர்கள்.

[26] தாபதன்சொன்ன குறிக்கேற்ப முதலமைச்சன் நடந்துகொள்ள வேண்டும் என்பது கருத்து,

டும். தக்க காரணத்தால் அரசன்பால் சினமுடையாரைப் பொருட் கொடையாலும் சிறப்புக்களாலும் [27] தணித்தல்வேண்டும். காரண மின்றிச் சினப்போரையும், அரசனுக்குத் தீங்குபுரிவோரையும் வஞ்சித்து [28] ஒறுத்தல்வேண்டும்.

### சுலோகம்

[29] பொருளாலும் சிறப்புக்களாலும் அரசனால் பெருமைப் படுத்தப்பட்ட ஒற்றர்கள், அமைச்சர் முதலியோரின் தூய்மையை அறிதல்வேண்டும். இங்ஙனம் (ஒற்றர்களின்) [30] இவ்வைந்து நிலை களும் கூறப்பட்டன.

முதல் அதிகரணம் ஏழாம் பிரகரணம்
"ஒற்றரை அமைத்தல்" என்னும் பதினோராம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[27] சினத்தைத் தணித்தல் என்பது கருத்து.

[28] ஒறுத்தல்—கொலைபுரிதல்.

[29] இதுகாறும் தலைமையமைச்சர் ஒற்றர்களுக்குச் செயற்பாலன கூறி இனி அரசன் செய்யவேண்டுவன கூறுகின்றார்.

[30] நிலைகள்—காபடிகன் முதலிய ஒற்றர்கள் ஐவரையும், அவர்கள் தனித் தனியிருக்கும் இடங்களையும் குறிப்பனவாம்.

## முதல் அதிகரணம் — பயிற்சிபகர்தல்

## எட்டாம் பிரகரணம்—[1] ஒற்ருடல்

## பன்னிரண்டாம் அத்தியாயம்

அரசனேடு தொடர்புடையவரும், அவனுல் இன்றியமையாது பாதுகாக்கப்படுவோரும், [2]ஆடவர் மகளிர் இலக்கணம், [3]அங்க வித்தை, வசீகரணம், மறைதல், இந்திரசாலம், [4]நால்வகை நிலை களைப்பற்றிய அறநூல், [5]நிமித்தநூல், [6]சகுன நூல் [7]காமநூல் என் னும் இவற்றைக் கற்றவரும் சத்திரிகள் என்னும் ஒற்றராவார்.

---

### பன்னிரண்டாம் அத்தியாயக் குறிப்புரை

[1] பகை, நொதுமல், நட்பு, என்னும் மூன்று திறத்தார் மாட்டும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல்; முன் அத்தியாயத்தில் கூறிய ஒற்றர்களுள் காபடிகன் முதலிய ஐந்து ஒற்றர்களுடைய இலக்கணமும் கூறப்பட்டது. எஞ்சிய சத்திரி, வன்கண்ணன், நஞ்சிடுவோன், தவமுது மகள் என்னும் இவர்களது இயல்பு இவ்வத்தியாயத்தின் முதற்கட் கூறப் படும். இவ்விருதிறத்தாரும் ஒற்றர்களேயாயினும், ஏவுதற்கருத்தாக்களின் வேற்றுமையானும், இலக்கண வேறுபாட்டானும் அத்தியாயம் வேரு யிற்று. காபடிகன் முதலிய ஐவருக்கும், தலைமை அமைச்சனுடன் கூடிய அரசன் ஏவுதற்கருத்தா ஆவான். மந்திரி முதலியோர் தூய்மை அறிதற் கும் சத்திரி முதலியோர் ஏவப்படுதலால் அன்னுர்க்கு அரசனே கருத்தா ஆவான். காபடிகன் முதலியோர் தத்தம் இருப்பிடங்களிலேயே இருந்து அரசனுடைய காரியங்களைச் செய்வோராதலின் அன்னுர் "நிலையினர்" என்று வழங்கப்படுவர். சத்திரி முதலியோர் எல்லா இடங்களினும் திரிந்து அரசனுடைய காரியங்களைச் செய்வராதலின் அன்னுர் "இயங்குவோர்" என்று வழங்கப்படுவர். பிரகரண இயைபு இதனுல் புலப்படுதல் அறிக.

[2] சாமுத்திரிகா இலக்கணம்.

[3] அங்கவித்தை—வேதாங்கங்களாகிய வியாகரணம் முதலியன; உடல் உறுப்புக்களின் இயல்பைக்கொண்டு நன்மை தீமைகளை அறிந்து கோடற் குரிய நூலுமாம்.

[4] நால்வகை நிலை—ஓதுநிலை இன்னிலை காடுறைநிலை துறவுநிலை.

[5] நிமித்தநூல்—நிறைகுடம் முதலியவற்ருல் வரும்பயன் அறிவிக்கும் நூல்.

[6] சகுனம்—பறவைகளைப்பற்றியது.

[7] காமநூல்—ஆடல், பாடல் முதலிய எல்லாம் இதன்பாற்படும்.

அரசனது நாட்டில் தம் உடலையும் பொருட்படுத்தாமல் பொருள் நிமித்தம் யானை புலி முதலியவற்றோடு அஞ்சாது போர் புரியும் வீரர் வன்கண்ணர் ஆவார்.

உறவினர்மாட்டும் பற்றற்றவராய்க் கொடுந்தன்மையும் மடிமையும் உடையோர் நஞ்சிடுவோர் ஆவார்,

இன்பநுகர்ச்சியில் விருப்பம், வறுமை, கைம்மை, காலம் இடங்களுக்கேற்ற அறிவுடைமை, உவளகத்துள்ளார் வழிபாடு என்னும் இவையுடைய பார்ப்பனப்பெண்கள் ' தவமுதுமகளிர் ' என்று கூறப்படுவர். இவர்கள் அடிக்கடி அமைச்சருடைய இல்லங்கட்குச் சென்றுவருதல் வேண்டும். இவர்களைப்போலவே [8]பிக்குணி, சூத்திரப்பெண் இவர்களும் தவமுதுமகளிர் ஆவார். இவர்கள் ' இயங்குவோர் ' என்னும் வகையினர்.

அரசன் தன் நாட்டிலுள்ள மந்திரி, புரோகிதன், படைத் தலைவன், இளவரசன், வாயில்காப்போன், உவளகவினைஞன், பாசறை அமைப்போன், இறைப்பொருள் தொகுப்போன், பொருட்பண்டாரம் புரப்போன், சிறுபகை களைவோன், [9]நாயகன், [10]நகரத்தலைவன், ஆகரத்தொழிலாளன், மந்திரியவைத்தலைவன், [11]தண்டபாலன், அரண்காவலன், எல்லைகாவலன், காட்டுத்தலைவன் என்னும் [12]இவர்கள்பால் இயங்குவோர் என்னும் ஒற்றரை

---

[8] பிக்குணி—துறவறநெறியில் ஒழுகும் பௌத்தப்பெண்.

[9] நாயகன்—ஆயிரம் இரண்டாயிரம் காலாட்படைக்குத் தலைவன்.

[10] " பௌரவியாவகாரிகன் " என்று முதனூல் கூறும் ; இதற்கு நகரத் தலைவன் என்பதும், நகரத்துள்ள நீதிமன்றத்தலைவன் என்பதும் பொருளாகும்.

[11] தண்டபாலன்—படைக்குழு (சைனியம்) படைமுகம் (சேனாமுகம்) முதலியவற்றின் தலைவன் ; ஓர் அக்குரோணிக்கு அதிபனாகிய படைத் தலைவன் இவனின் வேறானவன்.

[12] அரசன் தன்வினை செய்வார் சுற்றத்தார் முதலிய எல்லோரையும் ஒற்றினால் ஆராய்ந்து தெளியவேண்டும் என்பதை,

" வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வ தொற்று " (584)

என்னும் திருக்குறளானும் அறிக.

[13]நம்பத்தக்க நாடு, உருவம், கலைவன்மை, மொழி, குலம் என்னும் இவற்றிற்கு உரியவர்களாக்கிப் [14]பக்திக்கும் [15]திறமைக்கும் தக்கவாறு அமைத்து உய்த்தல்வேண்டும்.

வன்கண்ணர் என்னும் ஒற்றர், குடைபிடித்தல், கமண்டலம் ஏந்தல், விசிறுதல், பாதுகை தாங்கல், இருக்கை அமைத்தல், சிவிகை தாங்கல், ஊர்திகளை நடத்தல் என்னும் [16]இத்தொழில்களை மேற்கொண்டு மந்திரி முதலியோருடைய புறச்செய்திகளை அறிய வேண்டும். இங்ஙனம் வன்கண்ணர் அறிந்த செய்திகளைச் சத்திரிகள், [17]நிலையினர் என்னும் ஒற்றர்களுக்குத் தெரிவிக்கக்கடவர்.

அடிசில் அமைத்தல், சிற்றுண்டியமைத்தல், நீராட்டுதல், உடம்புபிடித்தல், படுக்கை விரித்தல், மயிர்வினை, [18]அணிசெய்தல், நீர் கொணர்தல் என்னும் இத்தொழிலை மேற்கொண்ட நஞ்சிடுவோரும் [19]மறைந்தொழுகும் கூனன், குறளன், உடல் மெலிந்த

---

[13] நம்பத்தக்க என்னும் சொல்லை உருவம் முதலியவற்றிற்கும் கொள்க; ஒற்றப்படுவோர் நம்பும்படி மொழி முதலியவற்றை மேற்கொள்ளச் செய்தல்வேண்டும் என்பது கருத்து.

" கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று " (585)

என்னும் திருக்குறளும்,

" ஐயுறாத வடிவாவன பார்ப்பார் வணிகர் முதலாயினார் வடிவு "
என்னும் உரைக்குறிப்பும்,

" ஒற்றிமேல் வீழ்ந்துரைக்கும் உபாயமா வாணிக வுருவினவாகி மற்றவர் ஆணத்தானை அகம்புக்கு ஆராய்ந்து " (மகத-17-88)
என்னும் பெருங்கதைப் பகுதியும் ஈண்டு நினைக்கத்தக்கன.

[14] பக்தி — ஒற்றப்படுவோரது கடவுட்பத்தி. அதற்குத் தக்கவாறு ஒற்றனும் பத்தருருவங்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[15] திறமை ஒற்றர்க்குரியது; அவரவர் திறமைக்கேற்ப ஒற்றப்படுவோர்க்குப் பணிசெய்ய நியமித்தல்வேண்டும் என்பது கருத்து.

[16] உண்மை அறிதற்குத் தம்மை மறைத்துக்கொள்ளற்பொருட்டு இத்தொழில்களை மேற்கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[17] நிலையினர்—காபடிகன் முதலியோர்.

[18] அணிசெய்தல்—ஆடை அணிகலன்களால் ஒப்பனைசெய்தல்.

[19] " மறைந்தொழுகும் " என்னும் அடையைக் குறளன் முதலியோர்க்கும் கூட்டுக.

வன், ஊமன், செவிடன், அறிவிலான், குருடன் என்னும் இவர்களும் [20]கூத்தன், [21]ஆடுவோன், பாணன், இசைக்கருவியாளன், பௌராணிகன், கழைக்கூத்தன், [22]வஞ்சமகளிர் என்னும் இவர்களும் மந்திரி முதலியோருடைய இல்லங்களுள் நிகழும் அகச்செய்திகளை அறியக்கடவர். இங்ஙனம் இவர்கள் அறிந்த செய்திகளைத் தவமுதுமகளிர், நிலையினர் என்னும் ஒற்றர்களுக்குத் தெரிவித்தல்வேண்டும்.

நிலையினருடைய மாணவர்கள் [23]சங்கேத எழுத்துக்களால் [24]அச்செய்திகளை அரசனுக்குத் தெரிவிக்கக்கடவர். [25]நிலையினரும், இயங்குவோரும் ஆகிய இருதிறத்தினருள்ளும் ஒருவர் அறிந்ததை மற்றொருவர்க்கு அறிவித்தலாகாது.

தவ முதுமகள், [26]ஒற்றப்படுவோர் இல்லங்களில் புகுதற்குத் தடையேற்படுமாயின் [27]வாயில்காப்போர், [28]தாய்தந்தை முறை

---

[20] கூத்தன்—மெய்ப்பாடு தோன்ற அவிநயிப்போன். "கூத்தராயினார் எண்வகைச்சுவையும் மனத்தின்கட்பட்ட குறிப்புக்களும் புறத்துப்போந்து புலப்பட ஆடுவார்" (தொல்-பொரு-புறம்-சூ. 36) என்பர் நச்சினார்க்கினியர்.

[21] ஆடுவோன்—தாளமுறைக்கேற்ப ஆடலை மேற்கொள்வோன்.

[22] உபலக்கணத்தால் பேடியையும் கொள்ளல்வேண்டும்.

[23] கருதிய பொருளைத் தெரிவித்தற்குத் தாமே குறியீடாக அமைத்துக்கொண்ட எழுத்துக்கள் சங்கேத எழுத்துக்களாகும்.

[24] அச்செய்திகள்—அகச்செய்திகளும் புறச்செய்திகளுமாம்.

[25] நிலையினருள் ஒருவர் அறிந்ததை மற்றையோர்க்கும், இயங்குவோருள் ஒருவர் அறிந்ததை மற்றையோர்க்கும் அறிவித்தல் ஆகாதென்பது கருத்து. அங்ஙனம் அறிவராயின் அவர், தம்முள் ஒற்றுமைப்பட்டு அரசனை வஞ்சிக்கவும் கூடும். மேலும், அச்செய்தி பலரானும் அறியப்பட்டு மறை வெளிப்படுதற்கு ஏதுவுமாகும். "ஒற்றொற் றுணராமை யாள்க" என்பர் திருவள்ளுவர் (குறள் 589).

[26] ஒற்றப்படுவோர்—மந்திரி முதலியோர்.

[27] வாயில்காப்போருள் ஒருவன் மற்றொருவனுக்கும் அவன் பிறனொருவனுக்குமாக அடிசிலாக்குவோன் முதலியோர்முகமாக அறிந்த அகச்செய்தியை முறையே வெளிப்படுத்தி இறுதியில் புறத்தேயுள்ள தவமுதுமகள் முதலிய இயங்குவோர்க்காதல், அரசனுக்காதல் அறிவிக்கவேண்டும் என்பது கருத்து. "அகத்தொற் றாளரி னகப்பட அறிந்து" என்பது பெருங்கதை (வத்தவ-8·51).

களை ஏறிட்டுக்கொண்டோர், ஒப்பனைசெய்யும் மகளிர், ஏவற் சிலதியர், பாடினிகள் என்னும் இவர்கள், [29]இசைப்பாடல், செய்யுள், [30]இசைக்கருவி இவற்றின் மூலமாகவும், குடம் முதலிய கலங்களில் சங்கேதமாக எழுதி மறைத்துவைத்த ஓலைகளாலும் அகச்செய்திகளைத் தெரிந்து உய்க்கக்கடவர். [31]தணியாநோய், [32]பைத்தியம், [33]நெருப்பிடல், [34]நஞ்சூட்டல் என்னும் இவற்றாலும் மறைவுச்செய்தியை வெளிப்படுத்தலாம்.

[35]ஒற்றர் மூவருடைய சொற்களும், பொருள் ஒற்றுமை

---

[28] ஒற்றப்படுவோரில்லத்துள் பணிசெய்வோர்க்குத் தாய்தந்தை முறைகளைப் படைத்துக்கொண்ட மூப்புடைய ஆடவரும் மகளிரும் ஆவர்.

[29] இசைப்பாடல்—ஈண்டுத் தெரிவிக்கவேண்டிய பொருளைக் குறிப்பில் புலப்படுத்தும் சொற்களால் இயற்றப்பட்ட பாடல்; பின்வரும் செய்யுளும் அன்னதே.

[30] இசைக்கருவிகள்—ஈண்டுக் கருதியபொருள் குறிப்பாகப் புலப்படும்படி வாசிக்கப்படுவன.

[31–32] அடிசிலாக்குவோர் முதலியோர் மேற்கூறிய உபாயங்களால் இல்லத்துள் நிகழும் செய்தியை வெளிப்படுத்த இயலாவிடின், வயிற்றுவலி முதலிய நோய்களை ஏறிட்டுக்கொண்டும், பைத்தியம் பிடித்தவர்கள்போன்றும் தாமே வெளிப்பட்டு அறிவிக்கக்கடவர்.

[33–34] நோய்முதலியவற்றை ஏறிட்டுக்கொள்ளாத நிலையில் கொட்டகை முதலியவற்றில் நெருப்புவைத்தும், உணவில் நஞ்சிட்டும் அவற்றால் இல்லத்தில் நிகழும் ஆரவாரங்களுக்கிடையில் வெளிப்பட்டு அறிவிக்கக்கடவர்.

[35] ஒருவனை ஒருவன் அறியாவாறு மூன்று ஒற்றர்களை ஒரு காரியத்தில் தனித்தனியே விட்டால் அம்மூவர் சொல்லும் பயனால் ஒத்தனவாயின் அது மெய்யென்று தெளியப்படும் என்பது கருத்து. இதனை,

“ உடன்மூவர் சொற்றொக்க தேறப்படும் ” (589)

என்னும் திருக்குறளானும் “ ஒருவனை ஒருவன் அறியின் தம்முள் இயைந்து ஒப்பக் கூறுவராகலின் உணராமை ஆள்க என்றும், மூவர்க்கும் நெஞ்சொற்றுமைப்படுதலும் பட்டால் நீடுநிற்றலும் கூடாமையின், தேறப்படும் என்றும் கூறினர் ”, என்னும் பரிமேலழகர் உரையானும்,

“ அறிந்த ஒற்றாளர் செறிந்தனர் உரைப்ப
ஒற்று மாக்களை ஒற்றரின் ஆயா
முற்றனக் குரைத்த மூவர் வாயவுள்
ஒத்தது நோக்கி மெய்த்தகத் தேறி ” (மகத-25·47)

என்னும் பெருங்கதைப் பகுதியானும் தெளிக.

உடையதாக இருக்குமாயின் உறுதியாக நம்பிக்கைகொள்ளலாம். ஒன்றுக்கொன்று முரண்படுமாயின் அவ்வொற்றர்களை [36]மறைவாக ஒறுத்தல்வேண்டும்; அல்லது அத்தொழிலினின்றும் விலக்குதல் வேண்டும்.

[37] "சிறுபகை களைதல்" என்னும் அதிகரணத்தில் கூறப்பட்ட [38]ஒற்றர்கள் பகையரசரிடத்து அறிந்த செய்திகளை எளிதில் [39]தெரிவித்தற்பொருட்டுக் [40]கூலிபெற்று ஏவலாளராகப் பணி செய்யவேண்டும். அன்னார் [41]ஈரிடத்தும் கூலிபெறுவோர் ஆவார்.

## சுலோகங்கள்

(1) ஈரிடத்தும் கூலிபெறும் ஒற்றருடைய மனைவிமக்களை அரசன் [42]தன்வயப்படுத்திக் கொள்ளல்வேண்டும். அன்னார் தூய்மையையும் அங்ஙனமே, பகைவரால் அனுப்பப்பட்ட ஒற்றர்

---

[36] ஒறுத்தலை மறைவாகச் செய்யவேண்டும் எனவே சிறந்த ஒற்றர்க்குச் சிறப்புச் செய்தலையும் பிறர் அறியாவாறு மறைவிற் செய்யவேண்டும் என்பதும் போதரும். இதனை,

> " சிறப்பறிய ஒற்றின்கட் செய்யற்க செய்யின்
> புறப்படுத்தான் ஆகும் மறை " (590)

என்னும் திருக்குறளானும் அறிக.

ஈண்டு மறைவாகச் செய்தற்குக் காரணம் ஒறுக்கப்பட்டான் அல்லது சிறப்புப்பெற்றான் யாவன் என்றும், இங்ஙனம் படுதற்கும் பெறுதற்கும் காரணம் யாவை என்றும் வினவுவாரும் விடை கூறுவாரும் அயலாராதலால் அவர்முகமாக மறை வெளிப்படும் என்பதாம்.

[37] இதுகாறும் கூறப்பட்ட ஒற்றர்களேயன்றி வேறுசில ஒற்றர்களும் உளரென்பதை இதன்கட் கூறுகின்றார்.

[38] ஒற்றர்கள்—ஈண்டுச் சித்தன், துறவி, சக்கரசரன் முதலியோர்.

[39] தம்மரசற்கு.

[40] தம் அரசரால் தரப்படும் கூலி.

[41] ஈரிடத்தும்—தம் அரசனிடத்தும், பகையரசனிடத்தும் என்பதாம்.

[42] தன்வயப்படுத்தல் — வேண்டுவ கொடுத்துத் தம் பாதுகாப்பில் வைத்துக்கோடல்,

களையும் [43]அத்தகைய பிற ஒற்றர்களால் அறியவேண்டும்.

(2) பகைவன், நண்பன், [44]நடுவன், [45]நொதுமலன் என்னும் அரசரிடத்தும் அவர்களுடைய [46]பதினெண் பகுதிகளிடத்தும் ஒற்றரைப் போக்கல்வேண்டும்.

(3) கூனன், குறளன், பேடி, ஒப்பனைசெய்யும் மகளிர், ஊமன், பல்வகை இழிகுலமாக்கள், இவர்களைப் பகைவர் [47]முதலி யோரின் இல்லங்களில் இயங்குவோராகச் செய்தல்வேண்டும்.

(4) அரணுள் அமைந்த தலைநகரங்களில் வைதேககரையும், அந்நகர எல்லைகளில் தாபதர்களையும், நாட்டில் உழவரையும், உதாத்திதரையும், நாட்டின் எல்லையில் ஆயர்களையும் ஒற்றராக இருத்தல்வேண்டும்.

(5) பௌத்தத்துறவி, காட்டுத்தலைவன் முதலியோரைக் காட்டில் ஒற்றராக அமைத்தல்வேண்டும். பகையரசர் செய்தி களை அறிதற்பொருட்டு விரைவுள்ள ஒற்றர் பலரை வைத்துக் கொள்ளவேண்டும்.

(6) மறைவாகவும் வெளிப்படையாகவும் இங்கே கூறப் பட்ட இயங்குவோரும், நிலையினருமாகிய அத்தகைய பகை ஒற்றர் களை, அன்னாரைப்போன்ற தன் ஒற்றர்களால் அறிந்துகொள்ள வேண்டும்.

---

[43] அத்தகைய ஒற்றர்—ஈரிடத்தும் கூலிபெறும் ஒற்றர்.

"மறை புறப்படாமை மனத்தே யடக்கி
ஒற் றொற்றியவரை ஒற்றின் ஆய்ந்து" (பெருங்-மகத-23·52)

என்பதும்,

"ஒற்றர் தங்களை ஒற்றரின் ஆய்தலும்" (சீவகசி-செ. 1921)

என்பதும் கருதத்தக்கன.

[44] நடுவன்—தனக்கும் பகைவனுக்கும் ஒத்தவாறு நடந்துகொள்பவன்.

[45] நொதுமலன்—ஓர் இயைபும் இல்லாதவன்.

[46] பதினெண்பகுதிகள்—இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் கூறப் பட்ட மந்திரி முதலியோர்.

[47] முதலியோர்—நண்பன், நடுவன், நொதுமலன் என்பாரும் அவர் தம் பகுதிகளும் ஆவர்.

(7) பகைவருக்கு வயப்படாதவரும், தன்னாட்டில் சிறந்தவருமாகிய மக்களைப் பகைவர்பக்கச் சார்பிற்கேற்ற காரணகாரியங்களை [48]ஏறிட்டுப் பகைவர்களுடைய ஒற்றர்களை அறிதற்பொருட்டுத் தன்னாட்டின் எல்லையில் இருத்தல்வேண்டும்.

முதலதிகரணம் எட்டாம் பிரகரணம்
"ஒற்றாடல்" என்னும் பன்னிரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[48] ஏறிடல்—உண்மையில் இல்லாதவைகளைப் பிறர் நம்புதற்பொருட்டுப் படைத்துக்கொண்டு வெளிப்படுத்தல்.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## ஒன்பதாம் பிரகரணம்—[1] தன் நாட்டு நல்லவர் தீயவர் குழுஉக்களைக் காத்தல்

## பதின்மூன்றும் அத்தியாயம்

மந்திரி [2]முதலியோரைக் குறித்து ஒற்றுடல் மேற்கொண்ட அரசன் தன்னாட்டிலும் நகரத்திலும் உள்ள மக்களையும் ஒற்றரால் [3]ஆராயக்கடவன்.

சத்திரிகள், நீர்த்துறை, அவைக்களம், அன்னசத்திரம், தண்ணீர்ப்பந்தர், தொழிலாளர் குழு, பல்வகை மக்கட்கூட்டம் என்னும் இவ்விடங்களில் தம்முள் [4]கலாம் விளைத்துக்கொண்டு முரண்பட்ட செய்திகளைப் பின்வருமாறு பேசக்கடவர்—"இவ்வரசன் எல்லா நற்குணங்களும் நிரம்பப்பெற்றவன் என்று கேட்டோம். ஆனால் நாடு நகரங்களிலுள்ள மக்களை ஒறுத்தலானும் இறைப்பொருள் கோடலானும் [5]துன்புறுத்துகின்றான். இவன்பால் நற்குணம் ஒருசிறிதும் இன்று" என்று ஒருவன் கூறினானாக, ஆண்டு அவனையும், அவன் கருத்துக்கு ஒத்துப்பேசும் [6]சிறியோரையும் மற்றோர் ஒற்றன் மறுத்து உரைத்தல்வேண்டும். மறுப்புரை வருமாறு :—

[7] "மச்சநியாயமாக அல்லற்பட்ட குடிமக்கள் கதிரவன்

---

### பதின்மூன்றும் அத்தியாயக் குறிப்புரை

[1] தன்னாட்டிலுள்ள மக்களுள் நல்லவர் தீயவர்களை அறிதற்கும் ஒற்றர் இன்றியமையாமையால் ஒற்றுடலின்பின் இது வைக்கப்பட்டது; இதனால் பிரகரணவியைபு புலனாம்.

[2] முதலியோர் என்றதனால் பதினெண் பகுதிகளையும் கொள்ளல் வேண்டும்.

[3] ஆராய்தல்—ஈண்டுக் குடிமக்களுக்குத் தன்பாலுள்ள விருப்பு வெறுப்புக்களைத் தெளிதல்.

[4] கலாம் விளைத்தல்—பிறர் நம்புதற்பொருட்டு மேற்கொள்ளப்பட்டது.

[5] அளவின்மிக்க ஒறுத்தலும் இறைப்பொருள் கோடலும் துன்பத்திற்குக் காரணங்களாம்.

[6] சிறியோர்—அக்கூட்டத்திலுள்ள ஒற்றரல்லாதார்.

[7] மச்சநியாயம்—பெரிய மீன்கள் சிறிய மீன்களை விழுங்குதல்போல வலியவர்கள் மெலியவர்களைத் துன்புறுத்தல்.

புதல்வனுன மநுவை அரசனுக்கிக்கொண்டார்கள். [8]கூலப்பொருள் வருவாயில் ஆறில் ஒருகூறும், வாணிகப்பொருள் வருவாயில் பத்தில் ஒருகூறும், [9]பொன்னும் அரசனுக்குரிய இறைப்பொருளாக ஏற்படுத்தினர். அவ்விறைப்பொருட் [10]கூலியைப் பெற்றுக் கொண்டு அரசர்கள் குடிமக்களைப் பாதுகாப்பாராயினர். அவ்வரசரால் செய்யப்படும் ஒறுத்தலும் பெறப்படும் இறைப்பொருளும் குடிமக்களுடைய [11]பாவத்தைப்போக்கி அன்னுர்க்கு ஆக்கநிலையாகிய நலத்தை விளைவிப்பனவாம். ஆதலின், அரசனுக்கு நம்மைக் காப்பாற்றுதல் குறித்து மேற்குறிப்பிட்ட கூறுகள் உரியனவாம் என்று கருதிக் [12]காட்டில் வாழ்வோரும், சிறிது சிறிதாகச் சேர்க்கப்பட்ட கூலங்களில் ஆறில் ஒன்று கொடுக்கின்றனர். அரசர் கண்கூடாக [13]அளியும் தெறலும் உடையோராதலின்,

---

[8] கூலப்பொருள்—நெல் முதலியன.

[9] நிலத்தினின்றும் எடுக்கப்படும் பொன் முழுதும் அரசனுக்கு உரியது என்பது கருத்து.

> "உறுபொருளும் உல்குபொருளும் தன்னென்னுர்த்
> தெறுபொருளும் வேந்தன் பொருள்" (756)

என்னும் குறளில் "உறுபொருள்" என்பது "வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெருததூஉமாம்" என்பர் பரிமேலழகர்.

[10] அரசன் குடிமக்களைக் காத்தற்குக் கூலியாகவே இறைப்பொருள் கருதப்பட்டு வந்தது என்பதாம்.

[11] மறுமையில் பாவப்பயனை நுகராமைக்கும், இம்மையில் மீண்டும் பாவம் செய்யாமைக்கும் ஒறுத்தல் ஏதுவாம் என்பதும் இறைப்பொருள் கொண்டு அரசன் அறம் செய்தலால் ஆக்கநிலையாகிய நலத்திற்கு அஃது ஏதுவாம் என்பதும் கருத்து.

[12] காட்டில் வாழ்வோர்—ஈண்டு முனிவர் முதலியோர்.

[13] அளி—அநுக்கிரகம்; தெறல்—நிக்கிரகம்.

> "வலியுந் தெறலும் அளியும் உடையோய்" (செ. 2-வரி 8)

என்னும் புறப்பாட்டுப் பகுதியும்,

> "அருளுமேல் அரசாக்கும் மன்காயுமேல்
> வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வம்" (247)

என்னும் சிந்தாமணிப்பகுதியும் ஈண்டு நினைவு கூரத்தக்கன.

[14]இந்திரனையும் மறலியையும் ஒப்பாவர். அவ்வரசரை அவமதிப் போரைத் தெய்வமும் ஒறுப்பதாகும். ஆதலின், அரசர் அவமதிக்கத்தக்கவரல்லர் என்பனவாம். (சத்திரிகள் இங்கிகழ்ச்சி பற்றி) பொதுமக்களுடைய பேச்சுக்களையும் [15]அறிந்துகொள்ளக் கடவர்.

அரசனுடைய கூலம், பசு, பொன் என்னும் இவற்றால் பிழைப்போரும், இவற்றால் அவ்வரசனுக்கு நலந்தீங்குகளில் உதவி புரிவோரும், [16]வெறுப்புற்ற உறவினரையும் நாட்டினரையும் அவ்வெறுப்பினின்றும் மீட்போரும், பகைவரையும் (பகைமை உடைய) காட்டுத்தலைவரையும் அப்பகைமையினின்றும் நீக்குவோரும் ஆகிய இவர்களுடைய மகிழ்ச்சியையும் மகிழ்ச்சியின்மையையும் [17]மழித்தலும் நீட்டலுமுடையார் அறியக்கடவர்.

மகிழ்ச்சியுடையாரை [18]மிகுதியாகப் போற்றுதல்வேண்டும். மகிழ்ச்சியில்லாரை மகிழ்விக்கும்பொருட்டுப் [19]பொருட்கொடையாலும் இன்சொற்களாலும் சிறப்பிக்கவேண்டும். [20]இவர்களை ஒருவரோடு ஒருவர் கலவாமலும், குறுநிலமன்னர் காட்டுத்தலைவர் ஞாதிகள் சிறைப்பட்டார் என்னும் இவர்களோடு கலவாமலும்

---

14 அளித்தற்கு இந்திரனையும், தெறலுக்கு மறலியையும் ஒப்புக் கூறியவாறு.

15 இங்ஙனம் அறிந்துகோடலைக்குறித்து

“மறைந்தவை கேட்கவற்றாகி” (587)

என்னும் குறட்பகுதிக்கு “மறைந்தவை சொல்லுவாரை அறிந்து அவர் அயிராமற் சென்றொட்டித் தாமே சொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாக, செயலாக முன்னே விளைத்து அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறாஅதார் போன்று நின்று கேட்க வேண்டுதலின் ‘கேட்கவற்றாகி’ என்றார்” என்று பரிமேலழகர் எழுதிய உரைக்குறிப்புத் தெளிவுறுத்தலை அறிக.

16 வெறுப்பு அரசனைப்பற்றியது ; அதனை நாட்டிற்கும் கூட்டுக.

17 மழித்தலும் நீட்டலும் உடையார்—ஒற்றருள் ஒரு வகையினர்.

18 மகிழ்ச்சி மேன்மேலும் பெருகுதற்பொருட்டு.

19 இக்கருத்து,

“கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்” (525)

என்னும் திருக்குறளிற் காண்க.

20 கொடை முதலியவற்றாலும் மகிழாதாரை.

[21]வேறுபடுத்தல்வேண்டும். [22]அங்ஙனம் செய்தும் மகிழ்ச்சியடையா தாரை ஒறுத்தலதிகாரத்தையாதல், இறைப்பொருளீட்டும் அதி காரத்தையாதல் அளித்து நாட்டுமக்கள் வெறுப்பிற்கு உரிய ராக்கல்வேண்டும். அங்ஙனம் வெறுக்கப்பட்டாரை மறைவிற் கொலைபுரிந்தாதல், நாட்டுமக்கள் வெகுளியாலாதல் அடக்கிவிடல் வேண்டும். பகைப்பக்கத்தார்க்கு இவர்கள் இடனாதல்கூடும் என் னும் அச்சத்தால் அவர்தம் மனைவிமக்களைத் தான் பாதுகாத்துக் கொண்டு அவரை ஆகரத்தொழிலிடங்களில் இருத்தல்வேண்டும்.

சினமுடையான், பொருணசையுடையான், அச்சமுற்றோன், [23]மானமுடையோன் இவர்கள் பகைவரால் [24]வேறுபடுக்கத்தக்கவ ராவார். அவர்கள் தம்முள் ஒருவரோடு ஒருவர் மேற்கொண்ட தொடர்பையும், பகைவரோடு கொண்ட தொடர்பையும், ஊழ் வினை உணர்ந்தோர், நிமித்திகர், முக்காலமும் உணர்ந்தோர் என் னும் உருக்கொண்ட ஒற்றர்கள் அறியக்கடவர்.

[25]தன்பால் மகிழ்ச்சியுடையாரைப் பொருட்கொடையானும் [26]பெருமைப்படுத்தலானும் அரசன் சிறப்பித்தல் வேண்டும். [27]மகிழ்ச்சியடையாதாரை இன்சொற் கூறல், கொடுத்தல், வேறு படுத்தல், ஒறுத்தல் என்னும் இவ்வுபாயங்களால் அடக்கல் வேண்டும்.

### சுலோகம்

இங்ஙனம் நீதியுணர்ந்த அரசன் தன்னாட்டிலுள்ள நல்லவர் தீயவர் குழூஉக்களைப் பெரியராயினும், சிறியராயினும் பகை வரால் வேறுபடுக்கப்படாமல் காத்தல்வேண்டும்.

முதலதிகரணம் ஒன்பதாம் பிரகரணம்
“ தன் நாட்டு நல்லவர் தீயவர் குழூஉக்களைக் காத்தல் ” என்னும்
பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

[21] கலப்பின் அரசனுக்குத் தீங்கு விளைக்கக்கூடும் என்பது கருத்து.

[22] அங்ஙனம் செய்தும்—அவ்வாறு வேறுபடுத்தும்.

[23] மானம்—ஈண்டு மாண்பிறந்த மானம்; அஃதாவது—முடிக்கப்படா தாயினும், கருதியது முடித்தேவிடுவல் என்னும் அகங்காரம்.

[24] இதனால் இங்குக் கூறப்பட்டாரல்லாதார் பகைவரால் வேறுபடுக்கத் தகாதவர் என்பது புலனும்.

[25] மகிழ்ச்சியுடையார்—பகைவரால் வேறுபடுக்கப்படாதார்.

[26] பெருமைப்படுத்தல்—பெருமைக்குரிய பட்டம் பரிசுகள் வழங்கல்.

[27] பகைவரால் வேறுபடுக்கப்பட்டார்.

## பத்தாம் பிரகாணம்—பகை நாட்டு நல்லவர் தீயவர் குழூஉக்களைத் தன்வயப்படுத்தல்

### பதினொன்காம் அத்தியாயம்

[1]இதுகாறும் தன்னாட்டு நல்லவர் தீயவர் குழூஉக்களைக் காத்தல் கூறப்பட்டது. இனிப் பகைநாட்டு அக்குழூஉவைத் தன்வயப் படுத்தல் கூறப்படும்.

[2]பொருள் தருவதாக உறுதிகூறி அரசனால் ஏமாற்றப்பட்டவன், சிறப்பத்திலாதல், வேறோர் உதவியினாதல் ஒத்த செயலையுடையார் இருவருள் [3]பாராட்டப்படாதவன், அரசனுக்கு நெருங்கிய பணியாளரால் [4]தடுக்கப்பட்டவன், [5]அழைக்கப்பட்டுத் தோல்வியுற்றோன், [6]வேற்றிடத்திருத்தலால் துன்புற்றோன், [7]பொருட்செலவிட்டும் காரியம் கைகூடாதவன், குலதருமத்தையாதல் தாயபாகத்தையாதல் அடையத் தடைப்படுத்தப்பட்டவன். [8]சிறப்பு,

---

பதினொன்காம் அத்தியாயக் குறிப்புரை

1 இதனால் பிரகரண இயைபு புலனாதல் அறிக.

2 தீயவர்கள், சினமுடையார் பொருணசையுடையார் அச்சமுடையார் மாண்பிறந்த மானமுடையார் என நான்குவகைப்படுவர். அவருள் சினமுடையார் இயல்பு ஈண்டுக் கூறப்படுகின்றது.

3 இருவரும் ஒத்த தகுதியினராக ஒருவனைப் பெருமைப்படுத்தி மற்றொருவனை அங்ஙனம் செய்யாதிருப்பின் அவன் சினமுடையோன் ஆவன் என்பது கருத்து.

4 அரண்மனையில் புகாதவாறு தடுக்கப்பட்டவன்.

5 சூதுவிளையாட்டின்பொருட்டு அழைக்கப்பட்டுப் பொருளிழந்தோன்.

6 அரசனுடைய தடையால் தான் விரும்பிய இடத்தில் இருக்கவியலாமல் துன்புற்றவன் என்பது கருத்து.

7 அரசனுக்கு நெருங்கியவர்கள்பால் பொருள்கொடுத்தும் காரியத்தின் பயனை அடையாதவன்.

8 சிறப்பு—குடை பல்லக்கு முதலியன; அதிகாரம்—அரசியல்வினைகளில் பெறும் பதவி.

அதிகாரம் என்னும் இவற்றினின்றும் விலக்கப்பட்டவன், [9]குலத்தவரால் விளக்கம்பெருதவன், வலிந்துபற்றுதலால் கெடுக்கப்பட்ட மனைவியை உடையான், சிறைப்படுத்தப்பட்டவன், [10]பிறர் சொற்கொண்டு ஒறுக்கப்பட்டவன், [11]பொய்யுரை நம்பி நன்னெறியில் தடைப்பட்டவன், பொருள் முழுதும் கவரப்பட்டோன், [12]காரியக் கட்டுப்பாட்டால் துன்புறுவோன், நாட்டினின்றும் விலக்கப்பட்ட [13]உறவினரையுடையோன் என்னும் இவர் சினமுடையார் ஆவார்.

[14]தன்னால் கேடுற்றவன், [15]மாறுபட்ட செயல் புரிவோன், [16]தீவினையால் பழியெய்திஞேன், [17]ஒத்த குற்றவாளிக்குச் செய்த தண்டத்தை அஞ்சிஞேன், [18]நிலத்தைக் கவர்ந்துகொண்டோன், [19]தண்டத்தால் மெலிந்தவன், அரசியல் வினைகள் பலவற்றிற்கும் தலைமையாயிஞேன், [20]எதிர்பாராத நிலையிற் பொருட்பெருக்கம் எய்திஞேன், அரசனுக்கு உரிய தாயப்பொருளை விரும்பியடைந்

---

[9] அரசனுடைய உறவினரால் குணநலம் மறைக்கப்பட்டுப் புகழ் பெருதவன்.

[10] அயலார் கூறும் சொற்களை நம்பி விசாரணையின்றித் தண்டிக்கப்பட்டவன்.

[11] நன்னெறி தீங்கு பயக்குமென எடுத்துக்காட்டிய பொய்யுரையை நம்பி அந்நெறியில் செல்லத் தடைப்பட்டவன்.

[12] தனக்குப் பொருத்தமில்லாத காரியத்தில் அரசனல் தலைப்படுத்தப்பட்டுத் துன்புறுவோன்.

[13] உறவினர்—ஈண்டுப் புதல்வன் முதலியோர்.

[14] தன்னுற் கேடுறுதல்—பொருள் நிமித்தம் தானே கொலை முதலிய கொடுஞ்செயல்களைச் செய்து கேடுற்றவன் என்றும், அரசனல் ஏவப்பட்டுப் பொருள் பெற்றுக் கொலை முதலியன செய்து கேடுற்றவன் என்றும் பொருள் கொள்ளல்வேண்டும்.

[15] அரசனுக்கு மாறுபட்ட செயல்.

[16] தீவினை—கொலை முதலியன.

[17] தன்பாலும் அத்தகைய குற்றமுண்மையால் தனக்கும் அத்தண்டம் விதிக்கப்படுங்கொல்! என்னும் எண்ணத்தால் அஞ்சினவன்.

[18] நிலம்—பொதுநலத்திற்காக அரசனல் விடப்பட்ட நிலம்.

[19] முன்செய்த குற்றங்களுக்காகப் பன்முறை தண்டிக்கப்பட்டவன்.

[20] "ஸாஹஸம்" என்று பாடங்கொண்டு கொடுஞ்செயலால் பொருட்பெருக்கம் எய்திஞேன் எனலுமாம்.

தோன், அரசனால் வெறுக்கப்பட்டோன், அரசன்பால் வெறுப் புற்றோன் என்னும் இவர்கள் அச்சமுடையோர் ஆவர்.

[21]பொருளெல்லாம் இழந்தவன், [22]அரசனால் மிகுதியாகக் கொள்ளப்பட்டுப் பொருள் இழந்தோன், [23]கடும்பற்றுள்ள முடையோன், [24]விதனமுடையோன், மிகுதியான பொருள் [25]வழக் குடையோன் என்னும் இவர்கள் பொருணசை உடையோராவார்.

[26]தற்பெருமையுடையோன், [27]பெருமையை விரும்புவோன் பகைவனுக்கு நேரும் சிறப்புக்குறித்துப் பொறாதவன், கயவரோடு கூடினவன், தன்னுடலைப் பொருட்படுத்தாதவன், ஆராயாது செயல்புரிவோன், இன்பநுகர்ச்சியில் மகிழாதவன் என்னும் இவர் கள் மாண்பிறந்த மானமுடையோர் ஆவர்.

[28]பகைநாட்டுத் தீயவர்களாகிய இவர்களுள், எவன் எதனை விரும்புகின்றானோ அவற்கு அதனைக்கொடுத்து மழித்தலும் நீட் டலும் உடைய ஒற்றர்களால் வேறுபடுத்தல்வேண்டும்.

[29] "திறமையில்லாத பாகனால் நடத்தப்பட்ட மதக்களிப்பு மிக்க யானை எதிர்ப்பட்ட எல்லாவற்றையும் அழித்தல்போலத் திறமையில்லாத அமைச்சனால் நடத்தப்படும் நீதிநூலறிவில்லாத

---

21 இவ்விழப்பு வாணிகம் முதலிய தொழில்களால் நிகழ்ந்தது.

22 கொள்ளப்படுதல்—ஈண்டுத் தண்டமாகவும் இறையாகவும் வாங்கப் படுதல்.

23 கடும்பற்றுள்ளம்—உலோபம்.

24 விதனம்—கட்காமம் முதலியவற்றால் விளையும் குற்றம்.

25 வழக்கு—நீதிமன்றத்தில் செய்யும் முறையீடு.

26 பெருங்கல்வி முதலியவற்றை உடைமையால் யான் பெரியவன் என்று செருக்குறுவோன்.

27 பொருளைப் பொருட்படுத்தாமல் பிறர் பாராட்டையே பெரிதும் விரும்புவோன்.

28 பகைநாட்டுத் தீயவர்கள் தனக்கு நல்லவர் ஆவர்.

29 அத்தீயவருள் சினமுடையாரை வேறுபடுத்துமாறு. கொடுத்தல் இன்சொற்கூறல் வேறுபடுத்தல் ஒறுத்தல் என்னும் இந்நால்வகை உபாயங் களுள் ஏற்றதுகொண்டு செய்யவேண்டும் என்பது கருத்து.

இவ்வரசன் தன் நாட்டினும் நகரத்தினும் உள்ள மக்களை அழிக்கத் தலைப்பட்டுள்ளான். [30]இவனுடைய பகைவனை ஊக்கமுறுத்து முகமாக இவனுக்குக் கேடுவிளைவித்தல் கூடும். ஆதலின், சினத்தை மேற்கோடல் தக்கதே.'' என்று சினமுடையாரை வேறுபடுத்தல் வேண்டும்.

[31]"புற்றிற் கரந்துறையும் பாம்பு எவனுக்கு அஞ்சுகின்றதோ அவன்பால் நஞ்சைக் காலுதல்போல, நின்பாற் குற்றமுளதென முன்னரே ஐயமுற்ற இவ்வரசன் வெகுளியாகிய நஞ்சை நின்பாற் செலுத்துவான். ஆதலின், வேற்றிடஞ் செல்லுக'' என்று அச்சமுடையோரை வேறுபடுத்தல்வேண்டும்.

[32]"நாய்க்கூட்டங்களுக்குத் தலைவனது பசு அந்நாய்களுக்குப் பால் தருமன்றிப் பார்ப்பனர்க்குத் தாராது; அதுபோல இவ்வரசன் மனத்தூய்மை அறிவு வாய்மை முதலிய நற்குணமில்லாக் கயவர்களுக்குப் பொருள்கொடுப்பானேயன்றி [33]அந்நற்குணமுடைய சான்றோர்க்குக் கொடான். மக்களுடைய தகுதியறிந்த [34]அவ்வரசனை அடைதல் நன்று'' என்று பொருணசையுடையாரை வேறுபடுத்தல்வேண்டும்.

[35]புலையர்க்குரிய கேணி அப்புலையர்களுக்கே அன்றிப் பிறர்க்குப் பயன்படாதவாறு போல, இழிந்த இவ்வரசன் இழிந்தவர்க்கே அன்றி நின்னைப்போன்ற உயர்ந்தோர்க்குப் [36]பயன்படான். [37]அவ்வரசன் மக்களது தகுதியறிந்தவன். அவன்பால் அடைதல் நன்று'' என்று மாண்பிறந்த மானமுடையோரை வேறுபடுத்தல்வேண்டும்.

---

30 இவனுடைய பகைவனென்றது தன் அரசனைக்குறிக்கும்.

31 இஃது அச்சமுடையாரை வேறுபடுத்துமாறு.

32 இது பொருணசை யுடையாரை வேறுபடுத்துமாறு.

33 அந்நற்குணம்—மனத்தூய்மை முதலியன.

34 அவ்வரசன்—ஒற்றனாற் சுட்டப்படும் மற்றோர் அரசன்; அவ்வொற்றனை ஆளும் அரசன் என்பது கருத்து.

35 இது, மாண்பிறந்த மானமுடையாரை வேறுபடுத்துமாறு.

36 பயன்படல்—பட்டம் பரிசு வழங்கல்.

37 34-ஆம் எண்ணிற் கண்ட குறிப்புக்களே ஈண்டும் ஒக்கும்.

## சுலோகங்கள்

(1) அங்ஙனமேயாக என உடன்பட்ட அன்னாரை [38]உறுதியான சூளுறவு கூறித் தன்வயப்படுத்து [39]ஒற்றர்களுடன் சேர்த்துத் தன் காரியங்களில் அவரவர் ஆற்றற்கேற்ப நியமனம் செய்தல் வேண்டும்.

(2) பகைநாட்டிலுள்ள [40]தீயவர்களை இன்சொற்கூறல் பொருள்கொடுத்தல் என்னும் உபாயங்களானும், அந்நாட்டு [41]நல்லோரை வேறுபடுத்தல் ஒறுத்தல் என்னும் உபாயங்களானும் தன்வயப்படுத்துக்கொள்க. பகைவனுடைய [42]குற்றங்களையும் அவர்க்கு எடுத்துக்காட்டல்வேண்டும்.

முதலதிகரணம் பத்தாம் பிரகரணம்
" பகைநாட்டு நல்லவர் தீயவர் குழூஉக்களைக் காத்தல் "
என்னும் பதினன்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

[38] சூளுறவுகூறுதல், நம்புதற்பொருட்டு.

[39] ஒற்றர்களுடன்சேர்த்தல், அவர்கள் மீண்டும் பிறழாமையை ஆராய்தற்பொருட்டு.

[40] இத்தீயவர்கள் தனக்கு நல்லவர்கள் ஆதலானும் முன்னரே பகைவரிடத்தில் வெறுப்புற்றவர் ஆதலானும் அவரை வயப்படுத்தற்குச் சாம தான உபாயங்களே பொருந்துவன.

[41] இந்நல்லோர் தனக்குத் தீயவர் ஆதலான் அன்னாரை வயப்படுத்தற்குப் பேத தண்ட உபாயங்களே பொருந்துவன. இக்கருத்துக்கள்,

" ஆற்றின் வருந்தா வருத்தம் " (468)

என்னும் குறட்பகுதிக்கு "முடியும் உபாயத்தால் கருமத்தை முயலாத முயற்சி" எனப் பொருள்கொண்டு, " முடியும் உபாயத்தால் முயறலாவது—கொடுத்தலைப் பொருணசையாளன்கண்ணும், இன்சொல்லைச் செப்பமுடையான் மடியாளன் முன்னே பிறரொடு பொருது நொந்தவன் என இவர் கண்ணும், வேறுபடுத்தலைத் துணைப்படையாளன் தன் பகுதியொடு பொருந்தாதான் என இவர்கண்ணும், ஒறுத்தலை இவற்றின் வாராதவழி இவர்கண்ணும் தேறப்படாத கீழ்மக்கள்கண்ணும் செய்து வெல்லுமாற்றால் முயறல் " என்று பரிமேலழகர் உரையில் தெளிவுறுத்தப்பட்டிருத்தலை அறிக.

[42] குற்றங்காட்டுதல், வேறுபடுத்தற்கு இன்றியமையாதது என்பது கருத்து.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## பதினோம் பிரகாணம்—[1] மந்திராதிகாரம்

## பதினைந்தாம் அத்தியாயம்

தன்னைச் சார்ந்தோரையும், பகைவரைச் சார்ந்தோரையும் தன்வயப்படுத்திய அரசன் [2]காரியம் செய்தலைப்பற்றிச் சூழக் கடவன். எல்லாக் காரியங்களும் [3]சூழ்ந்து செயற்பாலன.

அச் சூழ்ச்சிக்குரிய இடம் நாற்புறமும் மறைவுள்ளதாகவும், உள்ளே நிகழும் பேச்சுக்கள் வெளிப்படாமலிருக்கக் கூடியதாக வும், பறவைகளாலும் பார்க்க இயலாததாகவும் இருத்தல்வேண் டும். [4]கிளி, நாகணவாய்ப்புள், நாய், மற்றைய புள்ளு விலங்குகள்

---

பதினைந்தாம் அத்தியாயக் குறிப்புரை

[1] மந்திரம்—அரசன் தான் செய்யக்கருதும் காரியத் தொடக்கத்தில் அதனைப்பற்றிச் சூழ்தல். முன்னை அத்தியாயங்களில் மந்திரிகளின் இயல்பு கூறப்பட்டது. இது மந்திரத்தின் இயல்பு கூறுகின்றமையால் பிரகரண இயைபு புலனாதல் அறிக.

[2] காரியம்—தன்னாட்டில் அரணமைத்தல் முதலியனவும், பகைநாட்டில் சந்திவிக்கிரக முதலியனவும் ஆம்.

[3] முதலிற் சூழ்தலும் பின்னர்க் காரியம் தொடங்குதலும் முறை. அங்ஙனம் செய்யப்படும் காரியங்களே சிறந்த பயனை விளைக்கும் என்பது கருத்து.

" எண்ணித் துணிக கருமம் " (476)

என்னும் குறட்பகுதியும்,

" அந்தணர் ஒழுக்கமும் அரசர் வாழ்க்கையும்
மந்திர மில்லையேல் மலரும் மாண்பில "

என்னும் சூளாமணிப் பகுதியும் ஈண்டு நினைக்கத்தக்கன.

[4] பறவைகளாலும் பார்க்க இயலாததாக இருக்கவேண்டும் என்பதற் குக் காரணம் கூறுகின்றார். கிளி நாகணவாய்ப்புள் முதலியன சூழ்ச்சிக் குரிய இடத்தில் இருத்தல் ஆகாதென்பதை

" புள்ளும் இல்லா ஒள்ளொளி இருக்கையுள்
மறை புறப்படாச் செறிவினராகி " (பெருங்-மகத-24-216)

என்பதனானும்,

" பூவையும் கிளியும் மன்னர் ஒற்றெனப் புணர்க்கும் சாதி
யாவையும் இன்மை யாராய்ந்து " (சீவகசி-384)

என்பதனானும் அறிக.

என்னும் இவற்றால் சூழ்ச்சி வெளிப்பட்ட செய்தியைக் கேட்டிருக்கின்றோம். ஆதலால் சூழ்தற்குரிய இடத்திற்கு அரசன் கட்டளை பெறாதார் செல்லலாகாது. சூழ்ச்சியை வெளிப்படுத்துவோனை வேரறக் களைதல்வேண்டும்.

தூதுவன், அமைச்சன், அரசன் என்னும் இவர்களுடைய [5]இங்கித [6]ஆகாரங்களால் சூழ்ச்சி வெளிப்படக்கூடும். இங்கிதம் இயல்பின் நிகழும் செயற்கு வேறாவது; ஆகாரம் எண்ணங்களை அறிதற்குக் காரணமான உடலுறுப்புக்களின் வேறுபாடு.

அரசன் தான் மேற்கொண்ட காரியம் முடியுங்காறும் அவ்விங்கித ஆகாரங்களை மறைத்தலும் சூழ்ச்சித்துணைவராகக் கட்டளையிடப்பட்ட மந்திரி முதலியோரை மந்திரம் வெளிப்படாவாறு காத்தலும் [7]செய்யவேண்டும். சூழ்ச்சிப்பொருள் வெளிப்படுதற்கு அச்சூழ்ச்சித் துணைவரின் [8]விழிப்பின்மை [9]களிப்பு [10]கனவிற் பிதற்றுதல் காமம் செருக்கு முதலியன வாயில்களாம். [11]மறைந்து கேட்போன், [12]மதிக்கப்படாதோன் என்னும் இவரும் வாயில்கள்

---

[5] இங்கிதம்—குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில்.

[6] ஆகாரம் — குறிப்பின்றி நிகழும் வேறுபாடு. "இங்கிதம் வடிவு தொழில் சொல் என்பன முதலாகப் பிறர்கருத்தளக்கும் அளவைகள் பல" என்பர் பரிமேலழகர். (திருக்குறள் செ-710 உரை)

[7] மேற்கண்ட செயலை முடிவின்கண் அன்றி முன்னெல்லாம் மறைத்துச் செய்யவேண்டும் என்னும் இதனை,

> "கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்
> எற்றா விழுமந் தரும்" (663)

என்னும் திருக்குறளினும், "மறைத்துச் செய்தலாவது—அங்கம் ஐந்தும் எண்ணியவாறு பிறரறியாமலும் தானறிந்ததும் தன் இங்கிதம் வடிவு செயல் சொற்களான் அவர் உய்த்துணராமலும் அடக்கிச்செய்தல்" என்னும் உரையினும் தெளியலாம்.

[8] விழிப்பின்மை—வேறு காரியத்தில் ஈடுபட்டிருத்தலால் நேர்வது.

[9] களிப்பு—கள்ளுண்டமையால் உண்டாம் சித்தவிகாரம்.

[10] தன்வயமிழந்து பேசுதல்.

[11] மறைதல்—சுவர் முதலியவற்றில் கரந்துறைதல்.

[12] இவன் அறிவிலான், இவனால் தீங்கு நேராதென்னும் எண்ணத்தால் மதிக்கப்படாதவன்.

ஆவார். ஆதலால் அவ்வாயில்களினின்றும் மந்திரத்ஸ்தக் காக்கக் கடவன். சூழ்ச்சிவெளிப்படுதல் அரசனுக்கும், அவனுடைய சூழ்ச்சித் துணைவர்க்கும் கேடுவிளைப்பனவாம். ஆதலால் மறைவான பொருளை அரசன் [13]தனித்திருந்து சூழவேண்டும் என்பது பாரத்துவாசர் கொள்கை. மந்திரிகளுக்கும் துணைவர் உளர்; அத்துணைவருக்கும் வேறுசிலர் துணைவர் ஆவார் [14]இப்பரம்பரை மந்திரத்தை வெளிப்படுத்தக்கூடும்.

### சுலோகம்

ஆதலின் அரசன் செய்யக்கருதிய காரியத்தைப் பிறர் சிறிதும் அறிதலாகாது. அக்காரியத்தைத் தொடங்கினவர்களும் தொடங்கியபின்னர் [15]அக்காரியத்தைமட்டில் அறியக்கடவர்.

ஒருவன் [16]துணையின்றிச் சூழ்ச்சிமுடிவை எய்த இயலாது. [17]அரசியற் காரியங்கள் காண்டல், கருதல், உரை என்னும் அளவை

---

[13] தனித்திருத்தல் — சூழ்தற்குரிய அமைச்சரையும் உடன்வைத்துக் கொள்ளாமல் தனியனாக இருத்தல். "தெரிந்த இனத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு" (குறள்-462) என்புழி "எண்ணி" என்பதற்கு "தாமேயும் எண்ணி" என்று பரிமேலழகர் எழுதிய உரைக்குறிப்பு இக்கருத்தை ஒருவாறு தழுவியிருத்தல் காண்க.

[14] துணைவர் பரம்பரையாக அறிவராயின் சூழ்ச்சிப்பொருள் எளிதில் வெளிப்படும் என்பது கருத்து.

[15] அரசன் ஏவல்வழி நின்று காரியத்தைத் தொடங்கினவர்களும் தொடங்கியபின்னரே அதனைமட்டில் அறிந்துகொள்ளல்வேண்டும்; அதன் பயனையும், அஃதல்லாத பிறிதொன்றையும் அறிதற்கு இடந்தரலாகாது என்பது கருத்து; இவ்வளவும் பாரத்துவாசர் கொள்கைகளாம்.

[16] துணையின் இன்றியமையாமையை,

"சூழ்வார் கண்ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்" (குறள்-445)

என்புழிப் பரிமேலழகர் "தானே சூழவல்லனாயினும் அளவிறந்த தொழில்களான் ஆகுலமெய்தும் அரசன்பாரம் அதுவே தொழிலாய அமைச்சரான் அல்லது இனிதுநடவாமைபற்றி அவரைக் கண்ணாகக் கூறினார்" என்று கூறிய உரைக்குறிப்பால் தெளிக.

[17] இத்தொடக்கத்தன "மந்திரி புரோகிதரை அமைத்தல்" என்னும் பிரகரணத்தில் கூறப்பட்டன.

களால் துணிந்து செய்யத்தக்கன. அறியப்படாததை அறிதல், அறிந்ததை உறுதியாகத் துணிதல், பொருள் இரண்டுபடுங்கால் உண்டாம் ஐயத்தை ஒழித்தல், காணப்பட்ட ஒரு கூறுகொண்டு எஞ்சியவற்றை அறிதல் என்னும் இவ்வெல்லாம் மந்திரிகளால் இயல்வன. ஆதலின் [18]அறிவின் முதிர்ந்தவர்களுடன் கூடிச் சூழ்ச்சியை மேற்கொள்ளக்கடவன்.

### சுலோகம்

ஒருவரையும் எள்ளலாகாது; எல்லோருடைய கொள்கைகளையும் கேட்டல்வேண்டும்; [19]ஒருவன் சிறுவனாயினும் அவன் சொல் பொருளுடையதாயின் அறிவுடையான் ஏற்றுக்கொள்ளக் கடவன் என்பன விசாலாக்கர் கொள்கைகளாம்.

[20]இது மந்திரத்தை அறிதற்கு உரியதன்றி அதனைக் காப்பாற்றுதற்கு உரியதாகாது. அரசன் எக்காரியத்தைப்பற்றிச் சூழ்தற்கு விரும்புகின்றானோ அதனையொத்த பிறிதொன்றைக் குறித்து இக்காரியம் இவ்வாறிருந்தது; அதனை இவ்வாறு முடிக்கவேண்டின் எவ்வாறு செய்யலாம்? என்று சூழ்ச்சித்துணைவரை வினவ வேண்டும். அன்னார் சூழ்ந்து கூறியபடி [21]செய்தல்வேண்டும். இங்ஙனம் செய்யின் [22]சூழ்ச்சியறிவும் சூழ்ச்சி வெளிப்படாமையும் உண்டாம். இவை [23]பாராசரர் கொள்கைகளாம்.

---

[18] அறிவின் முதிர்ந்தோர்—சூழ்ச்சிக்குரிய அமைச்சர் முதலியோர்.

[19] "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" (423)

என்னும் திருக்குறளுக்கு, "குணங்கண் மூன்றும் மாறிமாறி வருதல் யாவர்க்கும் உண்மையின் உயர்ந்தபொருள் இழிந்தார்வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார்வாயினும் உறுதிப்பொருள் பகைவர்வாயினும் கெடு பொருள் நட்டார்வாயினும் ஒரோவழிக் கேட்கப்படுதலான் 'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்' என்றார்" என்று பரிமேலழகர் எழுதிய உரைக்குறிப்பில் இக்கருத்துத் தெளிவுறுத்தப்பட்டிருத்தல் அறிக.

[20] இது விசாலாக்கர் கொள்கை.

[21] அரசன் தான் கருதிய காரியத்தைச் செய்தல்வேண்டும் என்பது கருத்து.

[22] சூழ்ச்சியறிவு—ஒரு காரியத்தை ஆராய்ந்து தெளியும் அறிவு.

[23] பாராசரர்—பராசரர்வழிப்பட்டோர்.

பாராசரர் கொள்கை [24]பொருந்ாது. நிகழ்ந்ததாயினும் நிகழாததாயினும் மறைமுகமாக அரசன் வினவிய காரியத்தைக் குறித்து அமைச்சர் [25]பொருட்படுத்தாமல் விடைகூறக்கூடும். அல்லது அதனை வெளிப்படுத்தவும் கூடும். [26]அது குற்றமாம். ஆதலின் எக்காரியத்தில் யார் தகுதியுடையாராகத் தெளியப் பட்டனரோ அன்னாரோடு [27]சூழக்கடவன். அங்ஙனம் தெளியப் பட்டவரோடு சூழும் அரசன் சூழ்ச்சியறிவையும், சூழ்ச்சி வெளிப் படாமையையும் உடையனுவான் என்பன நாரதர் கொள்கை களாம்.

[28]இக்கொள்கையும் பொருந்தாது என்பது கௌடலியர் கருத்து. என்னை? இது [29]வரையறையின்மையை உடைத்தாகலின். மூன்று அல்லது நான்கு மந்திரிகளோடு கூடி ஆராய்தல்வேண்டும். ஒருவனோடு [30]சூழ்பவன் அரிதின் முயன்று துணியவேண்டிய காரி யங்களில் துணிவெய்த இயலாது. மந்திரி ஒருவனாயின் அவன்

---

[24] பாராசரர் கொள்கைப்படி சூழ்ச்சியறிவும், சூழ்ச்சி வெளிப்படாமை யும் ஆகிய இருபயனும் விளையாவென்பது கருத்து.

[25] அரசன் நம்மை நம்பாமல் நம்மால் செய்யத்தக்க காரியத்தை மறைத் துக் கூறுகின்றான் என்னும் வெறுப்பு, அமைச்சர் பொருட்படுத்தாமைக் கும் வெளிப்படுத்தற்கும் காரணமாகும் என்பது கருத்து. இனி அரசன் கூறிய மறைமுகமான காரியம் இன்றியமையாததன்று என்னும் அமைச் சரது எண்ணத்தைக் காரணமாகக் கோடலும் பொருந்தும்.

[26] பொருட்படுத்தாமல் கூறும் விடையினால் சூழ்ச்சியறிவும், வெளிப் படுத்துக் கூறுதலால் சூழ்ச்சி மறைவும் ஏற்படாமையால் குற்றமாம் என் பது கருத்து.

[27] கருதிய காரியத்தை வெளிப்படையாகக் கூறிச் சூழக்கடவன் என்பது.

[28] இக்கொள்கை—நாரதர் கொள்கை.

[29] ஒவ்வொரு செயலுக்கும் தகுதியுடையாரை அறிந்து அவரோடு அரசன் தான் செய்யும் காரியம் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி தகுதியுடை யாரைச் சூழ்ந்து செய்யத்தொடங்கின், காரியங்கள் பலவாதலால் தகுதி யுடைய சூழ்ச்சித்துணைவரும் பலராதல்வேண்டும். இது கருதியே வரை யறையின்மை ஏதுவாயிற்று.

[30] சூழ்பவன்—அரசன்.

விரும்பியவண்ணம் [31]தடையின்றி நடந்துகொள்பவனுவான். இருவராயின், அவ்விருவரும் ஒத்தகருத்துடையராங்கால் அரசனைத் தம்வயப்படுத்துக்கொள்வர். முரண்பட்ட கருத்துடையராங்கால் காரியத்திற்குக் [32]கேடுவிளைப்பர். சூழ்ச்சித்துணைவர் மூவர் அல்லது நால்வராயின், [33]மேற்கூறிய குற்றங்கள் அறவே நிகழா. ஓரோவழி நிகழுமாயின் அரிதின் நிகழ்தல் கூடும். பொருத்தமும் ஆம். நான்கு பெயர்களுக்கு மேற்படுமானல் காரியத்தைத் துணிதலும், சூழ்ச்சி வெளிப்படாமற் காத்தலும் அரியனவாம்.

காலம் இடம் காரியங்களுக்கேற்ப ஓரோவழி அமைச்சன் ஒருவனேடாதல், இருவரோடாதல், தனித்தாதல் [34]திறமைக்குத் தக்கவாறு சூழ்தலும் பொருந்தும்.

[35]காரியங்களைத் தொடங்குதற்குரிய உபாயம், [36]வினைசெய் வாரும் [37]பொருளும் நிரம்ப உடைமை, ஏற்ற காலம் இடங்களை

---

[31] தடையின்றி—அவ்வொருவனைத் தவிரத் தடுத்துரைப்பார் இல்லாமையால்.

[32] கருத்துவேற்றுமையால் ஒருமுடிவுக்கு வராமல் காரியத்தைக் கெடுத்துவிடுவர் என்பது கருத்து.

[33] மேற்கூறிய குற்றங்கள்—அமைச்சன் ஒருவனுங்கால் நிகழும் காரியத் துணிவின்மையும், விரும்பியவண்ணம் நடத்தலும், இருவராங்கால் நிகழும் அரசனைத் தம்வயப்படுத்தலும் காரியக்கேடு விளைத்தலுமாம்.

[34] திறமை—ஈண்டு அரசனதும், அமைச்சரதுமாகிய ஆற்றல்கள். சூழப்படும் காரியம் அவ்வாற்றல்களைக் கடந்ததாக இருத்தல் ஆகாதென்பது கருத்து.

> " கருவியுங் காலமும் செய்கையும் செய்யும்
> அருவினையு மாண்ட தமைச்சு " (குறள். 631)

என்புழிக் கூறப்பட்ட அமைச்சரது குணங்கள் ஈண்டு நினைக்கத்தக்கன.

[35] காரியங்கள்—ஓரரசற்குத் தன்னுட்டில் அகழி, மதிலமைத்தல் முதலியனவும், பகைநாட்டிற் சந்திவிக்கிரகம் முதலியன குறித்துத் தூதுவிடுத்தல் முதலியனவுமாம்.

[36] வினைசெய்வார்—தன்னுட்டில் அரணமைத்தல் முதலியவற்றில் திறமைவாய்ந்த தச்சர், கொல்லர் முதலியோரும், பகைநாட்டிற் சந்தி முதலியவற்றில் திறமைவாய்ந்த தூதுவர் படைத்தலைவர் முதலியோரும் ஆவர்.

[37] பொருள்—பொன், மணி முதலியன.

அறிதல், இடையூறு களைதல், காரியத்தின் [38]பயன் என்னும் ஐந்தும் சூழ்ச்சிக்கு உறுப்புக்களாம். சூழ்ச்சித் துணைவரைத் [39]தனித்தனியாகவும், ஒருங்கு கூட்டியும் வினவல்வேண்டும். அன்னார் கருத்துவகைகளைக் [40]காரணங்களோடு ஆராய்தல்வேண்டும். [41]துணிந்தபொருளை முடிக்கக் காலங்கடத்தலாகாது. நெடுங் காலம் சூழ்தலுமாகாது. தன்னால் கேடுவிளைக்கப்படுவாரைச் சார்ந்தவர்களோடு சூழ்தல் கூடாது.

[42]அமைச்சரவையில் அமைச்சர் பன்னிருவர் இருக்கவேண்டும் என்று மானவரும், பதினறுவர் இருக்கவேண்டும் என்று பார்கற்பத்தியரும், இருபதின்மர் இருக்கவேண்டும் என்று ஔசனசரும் கூறுவர். [43]திறமைக்குத் தக்கவாறு இருக்கவேண்டும் என்று கௌடலியர் கூறுவர்.

---

[38] தொடங்கிய காரியத்திற்குக் குறைந்ததும், ஒத்ததும், மிக்கதுமாகிய பயன்கள். ஈண்டுக் கூறப்பட்ட சூழ்ச்சிக்குரிய உறுப்புக்களைப்பற்றித் திருக்குறளாசிரியர்,

"பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்
இருடீர எண்ணிச் செயல்" (675)

என்று கூறுவர். இவ்வைந்தனோடு இங்குக் கூறப்பட்ட ஐந்தும் பொருந்துமாற்றை உய்த்துணர்க.

[39] முன்னர் ஒருவரை ஒருவர் அறியாவாறு தனித்தனியே வினவுதலோடு பின்னர் எல்லோரையும் ஒருங்குவைத்துச் சூழ்தலும்வேண்டும்.

[40] காரணங்களோடு ஆராய்தல்—காரியத்தைத் துணிதற்பொருட்டு.

[41] "சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது" (குறள். 671)

என்புழி இக்கருத்துத் தெளிவுறுத்தப்பட்டிருத்தல் அறிக.

[42] சூழ்ந்து துணிந்த பொருளைச் செய்தல், சூழ்தற்குரிய புதிய பல காரியங்களை உய்த்துணர்தல் முதலிய அரசியற் காரியங்கள் எல்லாவற்றையும் நடாத்துதற்குச் சிறந்ததொரு அமைச்சரவை அரசனுக்கு இருக்க வேண்டும் என்பதும், அதன்கண் இத்துணை உறுப்பினர் இருக்கவேண்டும் என்பதில் கொள்கைவேற்றுமை இன்னவென்பதும் குறிக்கப்படுகின்றன.

[43] திறமை—காரியத்திறமையும், செய்பவன் திறமையுமாம்.

அவ்வுறுப்பினர் தம் அரசன் [44]திறத்தையும், பகைவர்திறத்தையும் சீர்தூக்கி ஆராய்தல்வேண்டும். தம் செயல்களுள், புதிதாகக் தொடங்குதல், தொடங்கியதைச் செய்துமுடித்தல், முடிந்ததைச் [45]சிறப்புறுத்தல், அவ்வச் செயலாளர்களைத் தக்கவாறு அமைத்தல் என்னும் இவற்றை மேற்கொள்ளக்கடவர்.

அரசன் தன் அணிமையிலுள்ள உறுப்பினரோடு கலந்தும், சேய்மையிலுள்ளாரோடு முடங்கல் போக்கியும் சூழ்ந்துகொள்ளக் கடவன். இந்திரனுடைய அமைச்சரவையில் முனிவர் [46]ஆயிரவர் உறுப்பினர் ஆவர்; அவன் அவரைக் [47]கண்ணாகவுடையான் ஆவான். ஆதலின் இரண்டு கண்ணுடையனாயினும் அவனை "[48]ஆயிரங்கண்ணுடையன்" என்று கூறுவர்.

உயிர்க்கு இறுதிபயக்கும் காரியத்தில் முற்கூறிய சூழ்ச்சித் துணைவரையும், அமைச்சர் அவையையும் ஒன்றுகூட்டி வினவுதல் வேண்டும்.

---

[44] திறமென்பன ஈண்டுக் காரியம் முதலியவற்றைக் குறிக்கும்.

"வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்" (471)

என்னும் குறளில் சீர்தூக்கி ஆராய்தற்குரிய வினை முதலியவற்றைப்பற்றி விளக்கப்பட்டிருத்தல் அறிக.

[45] சிறப்புறுத்தலாவது—பிறிதொன்றாற் பெறப்படாத பயனுள்ளதாகச் செய்தல்.

[46] ஆயிரவர் என்பது ஈண்டுப் பலர் என்னும் பொருட்டு. தசரதன் அறுபதினாயிரம் அமைச்சரையும் வாசவதத்தையின் தந்தையாகிய பிரச்சோதனன் பதினாயிரம் அமைச்சரையும் உடையர் என்பதும் இப்பொருட்டு.

[47] காரியத்தின் உண்மையைக் காண்டற்குக் கருவியாதலின் அவர் கண் ஆவர் என்பது கருத்து.

"சூழ்வார் கண்ணாக ஒழுகலான்" (குறள்-445)

எனவும், "கற்றமாந்தரைக் கண்ணெனக் கோடலும்" (சீவக-1921)

எனவும் கூறப்பட்டிருத்தல் இதனைத் தெளிவுறுத்தும்.

[48] இந்திரனுக்கு இயல்பாக உள்ளன இரண்டு கண்களே. ஆயிரம் கண்கள் உடையன் என்பது உபசாரமாதல் அறிக.

அக்குழுவில் மிகுதியான உறுப்பினர் கூறுவதைச் செய்தல் வேண்டும். அல்லது காரியம் நிறைவேறுதற்கு உரியவாறு [49]கூறியதையும் செய்யலாம்.

## சுலோகம்

(1) காரியம் புரியும் அரசனது [50]மந்தணத்தைப் பிறர் அறியலாகாது. பிறர் மந்தணத்தைத் தான் அறிதல்வேண்டும். [51]ஆமை தன் உறுப்புக்களை அடக்கிக்கொள்ளுதல்போல அரசன் வெளிப்பட்ட தன் காரியத்தை மறைத்துக்கொள்ளல் வேண்டும்.

(2) வேதம் அறியாதவர் பெரியோரது சிராத்த உணவை உண்ணுதற்குத் தகுதியற்றவராதல்போல, [52]அரசியல் நூற்பொருள் உணராதார் மந்திரத்தைக் கேட்டற்குத் தகுதியற்றவர் ஆவார்.

முதலதிகரணம் பதினொராம் பிரகரணம்
"மந்திராதிகாரம்" என்னும் பதினைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[49] கூறுவார் சிலராயினும் காரியம் நிறைவேற்றற்கு ஏற்றதாயின் அதனையும் செய்யலாம் என்பது கருத்து.

[50] மந்தணம்—இரகசியகாரியம்.

[51] ஆமை தன் உறுப்புக்களை மறைத்துக்கொள்ளுதலை "ஒருமையுள் ஆமைபோல்" (126) என்னும் திருக்குறளானும் அறிக.

[52] "கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்" (குறள். 404)

என்பது நினைக்கத்தக்கது.

## முதல் அதிகாரணம்—பயிற்சிபகர்தல்

## பன்னிரண்டாம் பிரகரணம்—[1] தூதுவிடுத்தல்

## பதினாறும் அத்தியாயம்

தூதுவிடுத்தல் சூழ்ந்து துணியப்பட்ட பொருளைப்பற்றி நிகழ்வதாகும். தூதுவர், தான் வகுத்துக்கூறுவான் கூறியது கூறுவான் ஓலைகொடுத்து நிற்பான் என மூவகைப்படுவர். [2]அமைச்சனுக்குக் கூறிய குணங்கள் முற்றும் உடையான் தான் வகுத்துக் கூறுவானாவான்; அவனிற் காற்கூறு குணங்குறைந்தவன் கூறியது கூறுவானாவான்; அரைக்கூறு குணங்குறைந்தவன் ஓலைகொடுத்து நிற்பவன் ஆவான்.

தூதுவன் நன்றாக அமைக்கப்பட்ட சிவிகை, [3]ஊர்தி, ஏவலாளர், படுக்கை என்னும் இவை உடையவனாய்ப் [4]புறப்படல் வேண்டும். "நம் அரசன் கட்டளையைப் பகைவன்பால் இங்ஙனம் தெரிவித்தல்வேண்டும்; அவன் இவ்வாறு கூறுவான். அதற்கு மாற்றம் இதுவாகும்; இவ்வாறு பகைவனை வஞ்சித்தல்வேண்டும்"

---

### பதினாறும் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசன் ஒரு காரியத்தைப்பற்றி அமைச்சரோடு சூழ்ந்து துணிந்த பின்னர்ச் செயற்பாலது தூதுவிடுத்தல் ஆதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது; இதனால் பிரகரண வியைபு புலனாதல் அறிக.

[2] அமைச்சனுக்குக் கூறிய குணங்களை 5-ஆம் பிரகரணத்திற் காண்க. தான் வகுத்துக் கூறுவானைத் தலையாயவன் என்பர் திருவள்ளுவர்.

> "கடனறிந்து காலங் கருதி இடனறிந்து
> எண்ணி உரைப்பான் றலை" (687)

என்னும் திருக்குறளும் அதன் விசேட உரையில் "வடநூலார் இவ்விரு வகையாருடன் ஓலைகொடுத்து நிற்பானையும் கூட்டித் தூதரைத் தலையிடை கடை என்று வகுத்துக் கூறினாராகலின் அவர் மதமும் தோன்றத் தலை என்றார்" என்னும் பரிமேலழகர் உரைக்குறிப்பும் ஈண்டுக் கருதத்தக்கன.

தூது என்னும் அதிகாரத்தில் பரிமேலழகர் எழுதிய அவதாரிகையாலும் உரைக்குறிப்புக்களாலும் தான் வகுத்துக்கூறுவான் முதலிய தூதுவரின் இயல்புகளை அறியலாம்.

[3] ஊர்தி—குதிரை முதலியன.

[4] பகைவர் நாட்டைக் குறித்துப் புறப்படவேண்டும் என்பது.

என்று அடிக்கடி நினைவுகூர்ந்து செல்லக்கடவன். காடுகாவலன், எல்லைகாவலன், நாடு நகரங்களிலுள்ள சிறந்த மக்கள் என்னும் இவர்களோடு [5]நட்புக்கொள்ளல்வேண்டும்; தன் அரசனுக்கும் பகைவனுக்கும் உள்ள படை தங்குமிடம், போர் தொடங்கும் இடம், பின்னடையும் இடம் என்னும் இவற்றை அறிந்து கொள்ளல்வேண்டும். [6]அரணின் அளவு, நாட்டின் அளவு சிறந்த பொருள், உயிர்வாழ்க்கை, பாதுகாப்பு, நுழைவழி என்னும் இவற்றையும் அறிதல்வேண்டும். பகைவனது இடத்தில் அவன் உடன்பாடுபெற்றுப் புகுதல்வேண்டும். தன்னுயிர்க்குக் கேடு விளையும் என்று தோன்றினும் தன் அரசன்கட்டளையை [7]அவன் கூறியவாறே கூறல்வேண்டும். தன் தூதுரையில் பகைவன் மகிழ்ச்சியுடையனாயின், அவன் சொல், முகம், கண்களில் [8]தெளிவும், தன் உரையில் மதிப்பும், [9]நலம் வினுதலும், [10]குணங்களைக் கூறுங்கால் விருப்பமும், [11]அருகில் இருக்கையளித்தலும், பெருமைப்படுத்தலும், [12]விரும்பிய பொருளை நுகருங்கால் நினைத்தலும், நம்பிக்கை மேற்கோடலும் ஆகிய இவற்றைக் காணலாம். மகிழ்ச்சியிலனாயின் இவ்வெல்லாம் [13]மாறுபடக் காணலாம். அப்பகை

---

[5] நட்புக்கொள்ளுமுகமாகத் தான் தூதுபோதலை அவர்கட்கும் தெரிவிக்கலாம் என்பது.

[6] அரண் முதலியன ஈண்டுப் பகைவனைச் சார்ந்தனவாகக் காமந்தகர் கூறுவர்.

[7] தன்னுயிர்க்கு அஞ்சிப் பிறழக் கூறலாகாது.

> "இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவர்க்கு
> உறுதி பயப்பதாம் தூது" (குறள். 690)

என்புழி இக்கருத்து வலியுறுத்தப்படுதல் அறிக.

[8] தெளிவு—ஈண்டு மகிழ்ச்சிக்கு அறிகுறியான தெளிவு.

[9] தன் அரசனது நலத்தைப்பற்றிக் கேட்டல்.

[10] குணங்கள்—தன் அரசனது பெருமை முதலியன.

[11] அருகு—அவன்பக்கல்.

[12] இனிய உணவு முதலியவற்றை உண்ணுங்கால் தன்னை நினைத்தல்.

[13] தூதுவன், தன் உரையில் பகையரசனுக்கு உண்டாகும் விருப்பு வெறுப்புக்களை இக்குறிகளான் உணர்ந்து தன் முடிவான உட்கோளைத் தெரிவித்தல்வேண்டும் என்பது கருத்து.

யரசனை நோக்கி "நீயும், மற்றைய அரசரும் தூதுவரை [14]முகமாக உடையீராவீர். ஆதலின் அன்னாரைக் கொல்லுதற்கு வாளையுருவினும், அவர் தம் அரசன் கூறியபடியே கூறும் கடப்பாடுடையர் ஆவர்! தூதுவர் சண்டாளராயினும் அவரைக் கொலைபுரிதல் ஆகாது; எனின் அந்தணரைப்பற்றிக் [15]கூறவேண்டுவதென்? இந்நீதியுரை [16]பிறர் கூறியதாகும். இதுவே தூதுவர்க்குரிய அறமுமாகும்" என்று கூறல்வேண்டும்.

[17]அவன் விடைதருங்காறும் ஆங்கே இருத்தல்வேண்டும் அவன் செய்யும் சிறப்புக் குறித்துச் செருக்குறலாகாது; பகைவர்பால் தான் ஆற்றலுடையவன் என்னும் எண்ணத்தை வெளியிடலாகாது. தனக்கு வெறுப்பு விளைக்கும் சொற்களைப் பிறர் கூறினும் பொறுத்தல்வேண்டும். கட்காமங்களை ஒழித்தல்வேண்டும். தனித்து உறங்கல்வேண்டும். [18]களிப்பிலும், உறக்கத்திலும் உள்ளம் அறிந்தது [19]வெளிப்படுதல் கண்கூடாம். [20]தீயவரை வேறு

---

[14] அரசர் தத்தம் கருத்துக்களைப் பிறர்க்குத் தெரிவித்தற்கும், பிறர் கருத்துக்களைத் தாம் தெரிந்துகொள்ளுதற்கும் தூதுவரே வாயில்களாக உள்ளார் என்பது கருத்து.

[15] கொலைபுரிதல் ஆகாதென்பது கூறாமலே விளங்கும் என்றபடி.

> "மாதரைக் கொலைசெய்தார்கள் உளரென வரினும் வந்த
> தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்"
> (சுந்தர-பிணிவீ-செ. 113)

என்பர் கம்பர்.

[16] பிறர்—பண்டை நீதிநூலோர்.

[17] அவன்—பகையரசன்.

[18] கட்காமங்களை ஒழித்தற்கும், தனித்து உறங்குதற்கும் ஏதுக் கூறப்படுகின்றது; களித்தல்—கள்ளுண்டு மயங்கல்.

> "தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றும்
> வாய்மை வழியுரைப்பான் பண்பு" (குறள். 688)

என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

[19] வெளிப்படுதல்—பிதற்றுரையால் தன்னையறியாமல் உண்மை வெளிப்படுதல்.

[20] தீயவரும், நல்லோரும் ஈண்டுப் பகைவனைச் சார்ந்தோர்; அன்னாரை அவன் வேறுபடுத்தலையும், ஒற்றுடலையும் தூதுவன் அறிந்துகொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

படுத்தலையும், நல்லோரைக் குறித்து ஒற்றுடலையும், அமைச்சர் முதலியோர்க்கு அரசன்பாலுள்ள விருப்பு வெறுப்புக்களையும், [21]புரைநெறியையும் தாபதர், வைதேககர் என்னும் ஒற்றரால் அறிதல்வேண்டும். [22]அன்னாருடைய மாணவர்களானுதல் மருத்துவன், [23]பாசண்டன் என்னும் உருக்கொண்ட ஒற்றரானுதல் [24]ஈரிடத்தும் கூலிபெறுவோரானுதல் அவர்களோடு பேசுதற்கு வாய்ப்பு இல்லையானால், இரப்போன், களித்தவன், [25]மருளன், உறங்குவோன் இவர்களின் பிதற்றுரையானுதல்,[26]அறக்கோட்டம், திருக்கோயில் என்னும் இவற்றில் வரையப்படும் ஓவியங்கள், சங்கேத எழுத்துக்களானுதல் பகைவர் செய்தியை அறிந்து கொள்ளல்வேண்டும். அறிந்த செய்திக்கேற்ப வேறுபடுத்தலை மேற்கொள்ளவேண்டும். தன்னுடைய [27]பகுதிகளின் [28]அளவைப் பற்றிப் பிறர் கேட்பினும் கூறலாகாது. [29]"எல்லாவற்றையும் தாங்கள் அறிவீர்கள்" என்று கூறல்வேண்டும். அல்லது [30]காரியம் முடிவுறுதற்கு வேண்டிய அளவு கூறக்கடவன்.

---

[21] புரைநெறி—குற்றங்காணும் வழி.

[22] அன்னர்—தாபத வைதேககர்கள்.

[23] பாசண்டர்—வேதத்துக்குப் புறம்பான சமயக்கொள்கையுடையார்.

[24] ஈரிடத்தும்—பகையரசனிடத்தும், தன்னரசனிடத்தும்.

[25] மருளன்—பைத்தியம் பிடித்தவன்.

[26] அறக்கோட்டம் — நீர்த்துறை, செபமண்டபம், முனிவிருக்கை முதலியன ; ஒற்றர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்தற்குரிய அறக்கோட்டம் திருக்கோயில்கள் முதலியவற்றின் சுவர்களில் தாம் அறிந்த செய்திகளை ஓவியங்களாலும், அடையாள எழுத்துக்களாலும் புலப்படுத்தல்வேண்டும் என்பது கருத்து.

[27] பகுதிகள்—அமைச்சர் முதலாயினோர்.

[28] பகுதிகள் இத்துணையர் என்பதையும், அவர் தம் வன்மை மென்மைகளைப்பற்றியும் கூறலாகாது என்பது கருத்து.

[29] ஒற்றுக்கண்ணால் தாங்கள் அறியாதது என்னை ? என்பது கருத்து.

[30] பகுதிகளின் அளவை எவ்வளவு கூறினால் காரியம் நிறைவேறுமோ அத்துணை கூறவேண்டும் என்பது.

[31]காரியத்தை முடிப்பதில் காலந்தாழ்த்துத் தடைப்படுத்தப் பட்ட தூதுவன் [32] "என்னுடைய அரசனுக்கு அணிமையில் ஏற் படும் கேட்டை எதிர்பார்த்தோ? அன்றித் தனக்கேற்பட்ட கேட்டைப் போக்க விரும்பியோ? அன்றி நம் பகைவனுக்கு நண் பனையாதல், [33]அவனுடைய நண்பனையாதல், காட்டுத்தலைவனை யாதல் போர்செய்யும்படி தூண்ட விரும்பியோ? [34]பகுதிக்குள் வெறுப்பை உண்டுபண்ண விரும்பியோ? அன்றி நம்மரசனுடைய [35]முற்புறத்து நண்பனையாதல் பிற்புறத்து நண்பனையாதல் கொலை புரியக் கருதியோ? அன்றி தனக்குப் பிறரோடு ஏற்பட்ட போரை அடக்க விரும்பியோ? தன் பகுதிக்குள் ஏற்பட்ட வெறுப்பை நீக்க நினைந்தோ? தன் காட்டுத்தலைவனை அடக்கக் கருதியோ? அன்றி நம் தலைவனுக்கு அனுகூலமாக நேர்ந்திருக்கும் போர்ச் செலவைத் தடைப்படுத்த எண்ணியோ? கூலம், குப்பியம், ஏனை விலைப்பொருள் இவற்றைத் தொகுக்க எண்ணியோ? அரண்களைச் செப்பனிடக்கருதியோ? படைகளைத் திரட்ட எண்ணியோ? அன்றித் தன் படைகளின் உடற்பயிற்சிக்கு ஏற்பக் [36]காலம் இடங் களை எதிர்பார்த்தோ? [37]வெறுப்புக் காரணமாகவோ? [38]உவகை காரணமாகவோ? மணம் முதலிய தொடர்பை விரும்பியோ? எக்காரணத்தால் என்னைத் தடைப்படுத்துகின்றான்?" என்று ஆராயக்கடவன். அவ்வாராய்ச்சியால் காரணத்தைத் துணிந்து

---

[31] தூதுவன், தான் குறித்துவந்த சந்திமுதலிய காரியங்களைப் பகை யரசன் உரியகாலத்தில் நிறைவேற்றாமலும், மீண்டுபோதற்கு விடைதரா மலும் காலம் தாழ்ப்பானேல் அப்பொழுது தான் ஆராயவேண்டுவன இன்னவெனக் கூறப்படுகின்றன.

[32] "என்னுடைய" என்பது தொடங்கி "என்னைத் தடைப்படுத்து கின்றான்" என்பதுவரையுள்ள செய்திகள் தூதுவனுடைய ஐயத்திற்கிட மான ஆராய்ச்சிக் கருத்துக்களாம்.

[33] அவன்—பகைவனுக்கு நண்பன்.

[34] பகுதி—தன் அரசனைச்சார்ந்த அமைச்சர் முதலியோர்.

[35] "முற்புறம், பிற்புறம்" என்பன தன் அரசனுடைய நாட்டை அடுத்து முன்னும் பின்னும் உள்ள நட்டோர் நாடுகள்.

[36] போர்செய்தற்குத் தக்க காலம், இடங்களை என்பது கருத்து.

[37] வெறுப்பு—தன் பகுதிகளுக்குள் இவன் கலகம் விளைத்தான் என்னும் எண்ணத்தால் உண்டாயது.

[38] உவகை — தன்னோடு உடன்வைத்துக்கொள்ள எண்ணியதால் உண்டாயது.

[39]இருத்தல், அல்லது ஓடிப்போதல்வேண்டும். [40]தனக்கு விருப்ப மான பயனை எதிர்பார்த்திருத்தல்வேண்டும்; அல்லது பகை வனுக்கு வெறுக்கத்தக்க தன்னரசன் கட்டளையைச் சொல்லி விட்டுத் தன்னைச் சிறைப்படுத்தவும், கொலைபுரியவும் கூடும் என் னும் அச்சத்தால், அவன் உடன்பாடுபெருமலே ஓடிவிடல் வேண்டும். இன்றேல் தளைப்படுத்தப்படுவன்.

சுலோகங்கள்

(1–2) [41]செய்தி உய்த்தல், [42]செய்த சந்தியைக் காத்தல், வீரமுடைமை, நட்பாக்கல், வேறுபடுத்தல், நட்டோரைப்பிரித்தல், படைகளையும், ஒற்றரையும் தன்வயப்படுத்தல், [43]உறவினரையும், மணிமுதலியவற்றையும் கவர்ந்துகோடல், [44]ஒற்றரியல்பறிதல், பராக்கிரமம் நம்பிக்கை நிமித்தம் வைத்த [45]பொருளை விடுவித்தல், [46]மறைவுச்செயலை மேற்கோடல் இவ்வெல்லாம் தூதுவன் செயல் களாம்.

(3) அரசன் இச்செயல்களைத் தன் தூதுவரைக்கொண்டு செய்வித்தல்வேண்டும். எதிராக விடுக்கும் தூதுவராலும், ஒற்ற ராலும், மறைவாகவும், வெளிப்படையாகவும் உள்ள காவல ராலும் பகைப்பக்கத்துத் தூதுவரைக் [47]காத்தல்வேண்டும்.

முதலதிகரணம் பன்னிரண்டாம் பிரகரணம்
“ தூதுவிடுத்தல் ” என்னும் பதினாரும் அத்தியாயம்
முற்றிற்று.

---

39 தன்னைத் தடைப்படுத்தியதற்கு அன்பு காரணமாயின் ஆண்டு இருத்தல்வேண்டும்; வேறு காரணமாயின் அவ்விடத்தினின்றும் ஓடிப் போதல்வேண்டும் என்பது கருத்து.

40 பகைவனது ஊரிலேயே இருந்து தன் அரசனுக்கு ஒற்றர்முகமாகச் செய்திகளை உய்த்துப் பகைவன் செய்யும் கேடுகளுக்கு எதிர்ச்செயலைச் செய் விக்கவேண்டும் என்பது கருத்து.

41 செய்தி உய்த்தல்—பகைவன் நாட்டில் தான் அறிந்த செய்திகளைத் தன் அரசனுக்கு அனுப்புதல்.

42 சந்தியைக் காத்தல்—வெளிப்படாமல் மறைத்தலும், சிதைவுருமல் போற்றலுமாம்.

43 உறவினர்—பகைவனைச் சேர்ந்தோர்.

44 தன் அரசனைச்சார்ந்த ஒற்றர்களின் தன்மையை ஆராய்தல்.

45 பொருள்–தான் செய்யும் சந்தியில் பகையரசனிடத்தில் நம்பிக்கைக்கு ஈடாக வைக்கப்பட்ட புதல்வர் முதலியோர்.

46 மறைவுச்செயல்—14-ஆம் அதிகரணத்தில் 1—2 பிரகரணங்களில் கூறப்படும் மருந்து மந்திரங்களால் மறைந்துசெய்யும் கொலை முதலியன.

47 காத்தல்—பகைவனுடைய தூதுவர் தன்னுட்டில் உள்ளாரை நட்பாக்கல் முதலியன செய்யாவாறு விழிப்புடன் இருத்தல்.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## பதின்மூன்ரும் பிரகரணம்—[1] காவலன்புதல்வர் காப்பு

## பதினேழாம் அத்தியாயம்

தன் அருகிலுள்ளார், பகைவர் என்னும் இவர்களிடத்தி னின்றும் [2]தன்னைக் காத்துக்கொள்ளும் அரசன் தன்னுட்டைக் காப்பவனுவான். [3]முதலில் [4]மனைவி மக்களிடத்தினின்றும் தன்னைக் காத்துக்கொள்ளல்வேண்டும். மனைவியைக் காத்தல் "அரண்மனை அமைத்தல்" என்னும் பதினேழாம் பிரகரணத்திற் கூறப்படும்.

இனிப் புதல்வர் காப்புக் கூறப்படுகின்றது. பிறப்பு முதல் தன் புதல்வர்களை அரசன் காத்தல்வேண்டும்; என்னை? அரசன் புதல்வர் [5]நண்டோடு ஒத்த இயல்பினராய்ப் பெற்ருேரை அழிப்

---

### பதினேழாம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசன் தன் மக்களால் தனக்குக் கேடுவாராமல் காத்தல் என்பது பொருள். தூதுவிடுத்தல் முதலியவற்ருல் அரசன் குடிகளைக் காக்கவேண் டும் என்பது முன்னர்க் கூறப்பட்டது. இதன்கண் அவ்வரசன் தனக்குக் கேடுவாராமலிருக்கும்படி தன் மக்களைக் காக்குமுகமாகத் தன்னைக் காத்துக் கோடல் கூறப்படுகின்றது; இதனுல் பிரகரண இயைபு புலனுதல் அறிக.

[2] தன்னைக்காத்தல்—அருகிலுள்ளார் முதலியோரால் தனக்குத்தீங்கு நேராமல் காத்துக்கோடல்.

[3] மனைவி மக்களே அரசனுக்குக் கேடுவிளைப்போருள் முதல்வராவர் என்பது கருத்து.

[4] அருகிலுள்ளார் இன்னர் என்பதை வெளிப்படுத்துக் கூறுகின்ருர்.

[5] "நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்துக் கொண்ட கருவழிக் கும் கொள்கைபோல்" என்றபடி நண்டு தான் பிறக்கும்போதே தாயை அழித்துப் பிறக்கும் என்ப. நண்டுக்குக் "குளீரம்" என்னும் பெயருண்மை யும் இதனை உறுதிப்படுத்துவதாம். "குளீரம்" என்பதற்குக் "குலத்தைக் கெடுப்பது" என்பது பொருள். "தாய்சாப் பிறக்கும் புள்ளிக்கள்வன்" (ஐங்குறுநூறு-செ. 24) என்பதும் ஈண்டு நினைக்கத்தக்கது.

பவர் ஆதலின், தந்தைக்கு மக்களிடத்து [6]அன்பு உண்டாதற்கு முன்னரே அவரை மறைவிற் கொன்றுவிடவேண்டும் என்பது பாரத்துவாசர் கொள்கை.

[7]மறைவிற் கோறல் மிகக்கொடிய செயலாகும்; அரசர் குலத்திற்கு அழிவும் உண்டாம். ஆதலின் [8]ஓரிடத்தில் அப்புதல்வரைப் பாதுகாப்பில் இருக்கச்செய்தல் சிறந்ததென்பது விசாலாக்கர் கொள்கை. இங்ஙனம் செய்வது [9]பாம்புடன் பழகுதல் போல்வதாம். "என் வீரத்திற்கு அஞ்சி என் தந்தை என்னைப் பாதுகாப்பில் வைத்திருக்கின்றான்" என்று அறிந்து புதல்வன் அவ்வீரச் செயலை [10]அணிமையிலே செய்தல்கூடும். ஆதலின், நாட்டின் [11]எல்லைகாவலனது அரணில் இருக்கச்செய்தல் நலமாகும் என்பது பராசரர் வழியினர் கொள்கை.

---

[6] அன்பு உண்டாயின் கொலைப்படுத்த மனம் இடந்தராது என்பது கருத்து. ஈண்டு அரசியன் முறைபற்றி மக்களைக் கொன்றுவிடவேண்டும் என்று கூறினாராயினும் இது மிகக்கொடியது. தமிழர் கொள்கை,

> "தம்பொருள் என்ப தம்மக்கள் அவர்பொருள்
> தந்தம் வினையான் வரும்" (குறள்-63)

எனவும் "பொன்போற் புதல்வர்" (புறம்-9) எனவும் "மக்களை யில்லோர்க்குப் பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே" (புறம்-செ. 188) எனவும் கூறியவாற்றால் மக்களைப் பேணிப் பாதுகாக்கவேண்டும் என்பதும், மகப்பேறின்மை தீவினைப்பயனாகும் என்பதுமாம்.

[7] குற்றமற்ற சிறுவரைக் கொல்லுதல் பெரும் பாவமாகும் என்பது.

[8] உவளகத்தில் ஓரிடத்தில் வைத்துக் காத்தல்வேண்டும் என்பது.

[9] இக்கருத்து,

> "உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
> பாம்போ டுடனுறைந் தற்று" (890)

என்னும் குறளில் தெளிவுறுத்தப்பட்டிருத்தல் அறிக.

[10] அணிமையில்—சமீபத்தில் உள்ள தன் இல்லத்தில்.

[11] தொலைவில் இருத்தினால் எளிதிற் புதல்வன் வீரச்செயலைக் காட்ட இயலாது என்பது கருத்து.

[12]இஃது ஆட்டுக்கடாவின் செயல்போல் அஞ்சுதற்கு இடனாகும். [13]இயற்கைக்குணம் மாறுதலடையாமையால் [14]அக்காரணத்தையே அறிந்து எல்லைகாவலனை [15]நட்டோனாக உடையனாவான். ஆதலால், தன்னாட்டினின்றும் சேய்மையிலுள்ள வேற்று நாட்டு வேந்தனது அரணுள் இருக்கச்செய்தல் நலமாகும் என்பது நாரதர் கொள்கை. இஃது ஆவின் கன்றின் கட்டுத்துறை போல்வதாம். கன்றைக்காட்டி ஆவைப் பால் கறப்பதுபோலப் புதல்வனைக் காட்டித் தந்தையின் பொருளை அவ்வேற்றுநாட்டு வேந்தன் கவர்ந்துகொள்ளுவான். ஆதலின் [16]தாய்வழிப்பட்ட உறவினர் பக்கல் இருக்கச்செய்தல் சிறந்ததாகும் என்பது வீடுமர் கொள்கை.

[17]இஃது அறிகுறி போல்வதாம். அக்குறிகளைக்கொண்டு ஐயமேற்பவளும் பாம்பாட்டியும் ஐயமேற்றல்போல, இவ்வரச குமாரனுடைய தாய்வழி உறவினர் பொருளை இரந்து பெறுவோராவார் ஆதலின், அவனைச் சிற்றின்பத்துறையில் விடல்வேண்டும்.

---

[12] ஓர் ஆட்டுக்கடா தன்னெதிரிலுள்ள மற்றோர் ஆட்டுக்கடாவோடு போர் செய்தற்கு முயன்று பின்வாங்குதல் பொருதற்குரிய வலிமையை மிகுத்துக்கோடற் பொருட்டாம். அதுபோல, தந்தைக்குக் கேடுவிளைக்க விரும்பிய புதல்வன் சேய்மையிடத்திருத்தல் ஆற்றலை மிகுத்துக்கொள்ளுதற்கு ஏதுவாகலின், அஃது அஞ்சுதற்கு இடனாம் என்பது கருத்து.

" ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து " (486)

என்னும் குறட்கருத்து ஈண்டு நினைக்கத்தக்கது.

[13] இயற்கைக்குணம்—தந்தைக்குத் தீங்குவிளைக்கும் எண்ணம்.

[14] அக்காரணம்—தன் வீரத்திற்குத் தந்தை அஞ்சியதாகக்கொண்ட எண்ணம்.

[15] இதனால் துணைவலி உண்டென்பது புலப்படுத்தவாறு.

[16] தசரதன் தன் புதல்வன் பரதனைத் தாய்வழிப்பாட்டன் வீட்டிற்கு அனுப்பியதும் இது கருதிப்போலும்.

[17] அறிகுறி—ஐயமேற்பவள், பாம்பாட்டி என்னும் இவர்கள் ஐயம் ஏற்றற்கு ஏதுவாக முறையே காட்டும் தெய்வப்படிவங்களும், பாம்புமாகிய அடையாளங்கள். இதுபோலத் தாய்வழி உறவினர் அரசனிடத்திலிருந்து பொருளைக் கவருதற்கு அவன் புதல்வனை நிமித்தமாகக் கொள்ளுவர் என்பது கருத்து.

சிற்றின்பத்தில் ஈடுபட்ட புதல்வர் தம் தந்தைக்குக் [18]கேடு விளைக்கமாட்டார். இஃது உத்தவர் கொள்கை.

[19]இஃது உயிருடன்கூடிய நிலையிலுண்டாம். [20]இறப்புக்கு ஒப்பாகும். [21]உளுக்குடைந்த மரம்போல நூற்பயிற்சி முதலியன இல்லாத புதல்வரையுடைய அரசகுலம் எதிர்க்கப்பட்ட அளவி லேயே அழிந்துவிடும் ஆதலின், பெருந்தேவி [22]பூப்புடையளாக இருக்கும்பொழுதே [23]வேட்பிப்போர் [24]இந்திரனையும் வியாழனை யும் தலைவராகக் குறித்துக் கொடுக்கப்படும் அவியையுடைய வேள்விகளைச் செய்தல்வேண்டும். அவள் கருவுற்றதும் குழந்தை மருத்துவன், கருவளர்தற்கும் மகப்பெறுதற்கும் பெரிதும் முயன்று உதவிபுரிதல் வேண்டும். புதல்வனைப் பெற்ற பின்னர்ப் புரோகிதன் அப்புதல்வனுக்குரிய சாதகன்மம் முதலிய கிரியை களைச் செய்தல்வேண்டும். பற்பல கலைகளினும் தேர்ச்சிபெற்ற ஆசிரியர் தக்க பருவத்தில் அப்புதல்வனைக் கற்பித்தல்வேண்டும். இவ்வெல்லாம் கௌடலியர் கொள்கைகளாம்.

---

[18] சிற்றின்பத்தில் ஈடுபட்டமையால் பிறிதொன்றையும் கருதார் என்பது. "தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ" என்பர் பரஞ்சோதியார். (திருவிளையாடற்பு-படலம்-1-செய்-4)

[19] இஃது—சிற்றின்பத்தில் ஈடுபடுதல்.

[20] நூற்பயிற்சி முதலியன செய்விக்கப்படாமையாலும், விதனங்களா னும் உடல்வலி அறிவு முதலியன கேடுறுதலின் இறப்புக்கு ஒப்பாகும் என்பது கருத்து.

[21] உளுத்தமரம் தொட்ட அளவிலேயே முறிந்துவிடுதல்போல நன் மக்களையில்லாத அரசர்குலம், பகைவர் பொரக்கருதிய அளவிலேயே அழிந்து விடும் என்பதாம்.

[22] பூத்தபின் பன்னிரண்டு நாட்களும் பூப்புநாட்களாகக் கருதப்படும். அந்நாட்களே கருக்கொள்ளுதற்கு ஏற்ற காலமாகும். இதனைப்பற்றிய விளக்கங்களை மூன்றும் அத்தியாயம் 6-ஆம் குறிப்பிற் காண்க.

[23] வேட்பிப்போர்—வேள்வி செய்விப்போர்.

[24] செல்வம், வலிமை முதலியவற்றை அடைதற்கு இந்திரனையும், கல்வி, அறிவு முதலியவற்றை அடைதற்கு வியாழனையும் வேள்வியால் மகிழ் வித்தல்வேண்டும் என்பது கருத்து.

[25]ஒற்றருள் ஒருவன் இவ்வரசகுமாரனை வேட்டையாடல், சூது, கள் காமம், முதலியவற்றில் ஈடுபடுத்தி "தந்தையினிடத்தில் ஆண்மையைக்காட்டி நாட்டைக் கவர்ந்துகொள்க!" என்று கூறல்வேண்டும். மற்றோர் ஒற்றன் தடுத்து உரைத்தல்வேண்டும் என்பது [26]ஆம்பீயர் கொள்கை.

[27]நினையாத தீங்கொன்றை நினைப்பித்தல் பெருங்குற்றமாம் என்பது கௌடலியர் கொள்கை. புதிய மட்பாண்டம் முதலியன எவ்வெப் [28]பொருள்களோடு தோய்கின்றனவோ அவ்வப் பொருள்களைத் தம்முட்படுத்திக்கொள்ளும். அதுபோலப் [29]புத்தறிவு உடைய இவன் யார் எது கூறினும் அதனை நூல் அறிவுறுப்பது போல உட்கொள்வன். ஆதலின் அறத்தையும், [30]நலத்தையும் இவனுக்கு உபதேசித்தல்வேண்டும்; மறத்தையும், [31]கேட்டையும் கூறலாகாது.

ஒற்றர்கள் அவனை நோக்கி "யாங்கள் நின்னைச் [32]சேர்ந்தவர்கள் ஆவோம்" என்றுசொல்லிக் [33]காத்தல்வேண்டும். இளமைக்களிப்பால் வேற்று மகளிர்பால் உள்ளம் செலுத்துவானாயின் சிறந்த பெண்களின் உருக்கொண்ட தூய்மையில்லாத இழிந்த மகளிரைக்கொண்டு இரவில் பாழறையில் அவனுக்கு அருவருப்பு உண்டாக்குதல் வேண்டும். கள்ளுண்ண விரும்புவானாயின் [34]கலப்புக் கள்ளினால் வெறுப்புண்டாக்கல் வேண்டும். சூதாடலை

---

[25] தந்தைக்குத் தீங்கு இழையாவாறு ஒற்றருள் ஒருவன் அவ்வெண்ணத்தை உண்டாக்கவும் மற்றொருவன் விலக்கவும்வேண்டும். ஈண்டுக்கூறிய வேட்டையாடல் முதலியவற்றை அரசற்கு வேண்டாத விதனங்கள் என்பர்;

" வேட்டம் கடுஞ்சொல் மிகுதண்டம் சூதுபொருள்
ஈட்டம் கட் காமமோ டேழு" (குறள்-566 உரை மேற்கோள்).

[26] ஆம்பீயர்—ஓர் இருடி; வீடுமன் வழிப்பட்டோர் என்றுங்கூறுப.

[27] நினையாத தீங்கு—தந்தைக்குக் கேடிழைத்தல்.

[28] பொருள்கள்—நீர், நெய் முதலியன.

[29] புத்தறிவு—நன்மை தீமைகளின் பாகுபாடு அறியாத அறிவு.

[30] நலம்—நன்மை பயக்கும் செயல்கள்.

[31] கேடு—தீமை பயக்கும் கட்காமம் முதலியன.

[32] சேர்ந்தவர்கள்—பணியாளர்கள்.

[33] காத்தல்—விதனங்களில் தலையிடாவாறு தடுத்தல்.

[34] கலப்புக் கள்—வெறுக்கத்தக்க சுவைப்பொருள் கலந்த மது.

விரும்புவானாயின், வஞ்சச் சூதர்களால் ஏமாற்றி வெறுப்புறச் செய்தல்வேண்டும். வேட்டையை விரும்புவானாயின் ஆறலைகள்வர் உருக்கொண்டவர்களைக்கொண்டு அச்சுறுத்தல்வேண்டும். தந்தையைக் கொலைபுரிய நினைப்பானாயின், அப்படியே ஆகவென [35]உடன்பட்டு "அரசன் வெறுக்கத்தக்கவன் அல்லன். [36]முயற்சி பயன் விளைக்கவில்லையாயின் நினக்கே கொலை நேரும். பயன் விளைக்குமாயின் நிரயத்துன்பம் நேரும். பழியும் உண்டாம். குடிமக்கள் எல்லோரும் ஒன்றுகூடி [37]தலைக்கொரு கல்லானெறிந்து நின்னைக் கொன்றுவிடவும் கூடும்" என்று அவன் உள்ளத்தை வேறுபடுத்தல்வேண்டும்.

அரசன் தன்பால் அன்பில்லாதவனும், தன் அன்பிற்குரியவனும் ஆகிய மகன் ஒருவனேயாயின் அவனைச் சிறைப்படுத்தல் வேண்டும். மக்கள் பலராயின், அவருள் தனக்கு மாறுபட்டவனை [38]நல்ல உணவு உடை முதலியனவும் [39]அரசியற் கலகமும் இல்லாத [40]அநாகரிகர் வாழும் நாட்டிற்காவது வேறு நாட்டிற்காவது துரத்தல்வேண்டும். தன்னோடு மாறுபாடில்லாத நன்மகனைப் படைத்தலைமை, இளவரசு என்னும் பதவிகளில் இருத்தல் வேண்டும்.

அறிந்து செய்பவன், அறிபவன், அறிவிலான் எனப் புதல்வர் மூத்திறப்படுவர். [41]நூல்களைக் கற்று அறம்பொருள்களை அறிந்து அந்நெறி ஒழுகுவோன் அறிந்து செய்பவனாவான். கற்றறிந்தும் அந்நெறி ஒழுகாதவன் அறிபவனாவான். என்றும் விழிப்பின்றி அறம்பொருள்களை வெறுப்பவன் அறிவிலானாவான்.

அவ்வறிவிலான் அரசனுக்கு ஓரே புதல்வனாக இருந்தால் அப்புதல்வனுக்குப் [42]புதல்வனை உண்டாக்குவதில் பெரிதும்

---

35 உடன்படுதல், சொல்லளவில்.

36 முயற்சி—தந்தையைக் கொலைபுரிதற் பொருட்டு மேற்கொண்டது.

37 தலைக்கொரு கல்லாலெறிந்து—ஒவ்வொருவரும் ஒவ்வொரு கல்லால் எறிந்து.

38 "நல்ல" என்பது ஈண்டு அரசகுமாரனுக்கேற்ற சிறப்புடைய என்னும் பொருளைக் குறிக்கும்.

39 அரசகுமாரன் நிமித்தம் குடிமக்கள் விளைக்கும் கலகம் என்பது.

40 அநாகரிகரை "மிலேச்சர்" என்று முதனூல் கூறும்.

41 கல்வி அறிவு ஒழுக்கம் இம்மூன்றும் உடையோன் தலையாயவன் என்பது.

42 அரசியலுக்குத் தகுதியான புதல்வனை என்பது.

முயலல்வேண்டும். அன்றிப் [43]புதல்விக்குப் புதல்வரை உண்டாக்க முயலல்வேண்டும். அரசன் [44]மூப்புடையனுக அல்லது நோயுடையனுக இருப்பின் தன் தாய்வழி உறவினர், தன் குலவழியினர், நற்குணமுடைய வேற்றுமன்னர் என்னும் இவருள் ஒருவனைக் கொண்டு தன் மனைவியினிடத்துப் புதல்வனை உண்டுபண்ணிக் கொள்ளலாம். ஓரே மகனுயினும் நூலறிவுடையன் அல்லனுயின் அவனை அரசியலில் இருத்தலாகாது.

### சுலோகங்கள்

(1) புதல்வர் பலருள் ஒருவன் அறிவிலானுக இருப்பின் அவனை அயல்நாட்டுக்குத் துரத்திவிடலாம். தனக்குத் தீங்கு நேராதவழித் தந்தை மக்களுக்கு நலஞ்செய்பவனுகவே இருக்க வேண்டும். அரசுரிமை [45]முதல்மகனை அடைவதே பாராட்டத் தக்கது.

(2) அன்றித் தன் [46]குலத்திற்கே அரசியலை உரிமையாக்க லாம். குலக்குழுவைப் பகைவர் வெல்ல இயலாது. மேலும் அரசனுடைய விதனங்களால் குடிமக்களுக்கு உண்டாகும் [47]துன்பமும் நிலவுலகத்தில் என்றும் இராது.

முதலதிகரணம் பதின்மூன்ரும் பிரகரணம்
"காவலன்புதல்வர் காப்பு" என்னும் பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[43] புதல்வி—இவளுக்குப் பிறக்கும் புதல்வன் எனக்கு மகனுவான் என்று உறுதி கூறி மணம் செய்துகொடுக்கப்பட்ட மகள். பாண்டியன் மகள் சித்திராங்கதையை அருச்சுனனுக்கு மணஞ்செய்த வரலாறு இதற்குச் சான்ரும்.

[44] பெண்மகவும் இல்லாதவனுய், மூப்பினுலும் நோயினுலும் புதல்வர்ப் பேற்றிற்குத் தகுதியில்லாதவனுகவும் இருப்பின் என்பது கருத்து. ஓர் அரசன் சந்ததியை உண்டுபண்ணுதற்குக் தகுதியில்லாதவனுக இருக்கும் பொழுது பிறன் ஒருவனைக்கொண்டு தன் மனைவியிடத்துச் சந்ததியை உண்டாக்கிக்கொள்ளலாம் என்னுமிது தமிழர் ஒழுக்கத்திற்கு மிகவும் மாறுபட்டதாகும். மகாபாரதத்தில் வியாசர், தாயின் கட்டளைப்படி தம்பியர் மனைவியரோடு கூடிச் சந்ததியை உண்டுபண்ணியதும் பாண்டு மன்னன் புதல்வர்ப்பேற்றை அடைந்ததும் காணப்படுதலால் இஃது ஆரியர் கொள்கை என்பது புலனும்.

[45] எல்லா மக்களும் தந்தைக்கு ஏற்ற தகுதியுடையராயின் அரசுரிமைக்கு உடையார் இன்னுர் என்பது.

[46] குலமென்றது ஈண்டு நன்மக்கள் எல்லோரையும் குறிக்கும்.

[47] மக்கள் பலருள் ஒருவன் கெட்டவனுக இருப்பினும் மற்றையோரால் அரசியல் நன்கு நடைபெறும் என்பது கருத்து.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## பதின்மூன்று பதினைந்தாம் பிரகரணங்கள்—[1] விலக்கப்படும் மக்கள் வேந்தன்பாலொழுகல், விலக்கப்படும் மக்கள்பால் வேந்தன் ஒழுகல்

## பதினெட்டாம் அத்தியாயம்

துன்பவாழ்க்கையுடைய அரசகுமாரன் தன் உயிர்க்குத் தீங்கு விளைத்தல், குடிமக்களுக்கு வெறுப்பு விளைத்தல், பாவம் உண்டாதல் என்னும் இவையொழிந்த செயல் தன் தகுதிக்குப் பொருந்தாது எனினும் தந்தை கட்டளையிடின் அதனைச் செய்யக்கடவன். நற்செயலைச் செய்யக் கட்டளையிடின் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் ஒரு கன்மத்துணைவனை வேண்டி அடையவேண்டும். அக்கன்மத்துணைவனைப் பெற்றபின் தந்தையின் கட்டளையைச் சிறப்புறச் செய்தல்வேண்டும். இனிய அக்கன்மப் [2]பயனையும், [3]கையுறைப் பொருளாகிய ஊதியத்தையும் தந்தையின்பாற் [4]சேர்த்தல்வேண்டும்.

[5]அங்ஙனம் செய்தும் மகிழ்ச்சியடையாமல் [6]மற்றை மனைவி மக்கள்பால் அன்புபூண்டொழுகும் தந்தையினிடத்துத் தான்

---

### 18-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசனுடைய மக்கள் பலருள் ஒருவன் அரசுரிமைக்கு உரியனாக ஏனையோர் விலக்கப்பட்டவராவர். அன்னார் அரசன்பால் எவ்வாறு ஒழுகல் வேண்டும் என்பதைக் கூறுவது. முன்னைப் பிரகரணத்தில் “ அரசகுமாரருள் தக்காரொருவன் இளவரசு முதலிய பதவிக்கு உரியவனாவான் ” என்பது கூறப்பட்டது ; மற்றைப் புதல்வரும் தகுதியுடையராயின் அன்னார் அரசனிடத்து எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பது இதன்கட் கூறப்படுதலின் பிரகரண இயைபு புலனாம்.

[2] பயன்—கூலமுதலிய விளைபொருள்களும் பிறவுமாம்.

[3] கையுறை—உழவர் முதலியோர் இடத்தினின்றும் பெறுவது.

[4] தந்தைக்கு மகிழ்ச்சி உண்டாதற்பொருட்டுச் “ சேர்த்தல்வேண்டும் ” என்பது.

[5] அங்ஙனம் செய்தும்—கன்மப்பயன், கையுறைப்பொருள் இவற்றைக் கொடுத்தும்.

[6] மற்றை மனைவி—மாற்றாந்தாய்,

[7]காட்டிற்குச் செல்லுதற்பொருட்டு வேண்டிக்கொள்ளக் கடவன். [8]சிறைப்படுத்தல் அல்லது கொலைபுரிதல் கூடும் என்னும் அச்சந் தோன்றின், நன்னெறியில் ஒழுகுவோனும், அறவோனும், வாய்மையுடையோனும், பிறழ்ச்சியில்லாதவனும், அடைக்கலம் புகுந்தோரை ஏற்றுப் பெருமைப்படுத்துவோனும் ஆகிய வேற்றரசனை அடைதல்வேண்டும். வேற்றரசனிடத்திருந்து [9]பொருள், படை உடையவனுய்ச் சிறந்த வீரனுடைய மகளை மணத்தல், [10]காட்டுத் தலைவனை நட்புக்கோடல், தன் தந்தையின் தீயவர்குழுவைத் தன் வயப்படுத்தல் என்னும் இவற்றைச் [11]செய்தல்வேண்டும். [12]தனிப்பட்டவனுயின் இரசவாதம், மணி, [13]செஞ்சாந்து, பொன், வெள்ளி என்னும் விலைப்பண்டங்கள், ஆகரத்தொழில் என்னும் இவற்றைக் கொண்டு வாழ்தல்வேண்டும். இன்றேல் [14]பாசண்டக் குழுவின்

---

[7] காட்டிற்குச்சென்று தவம்புரிதற்பொருட்டுத் தந்தையின் உடன்பாடு பெற முயலல்வேண்டும் என்னும் இதனுல் தன் எளிமை குறித்துத் தந்தை இரங்கியருளுதல் கூடும் என்பது கருத்து.

[8] காட்டிற்குச்செல்ல அனுமதிவேண்டும் புதல்வன் வெறுப்பினுல் தனக்குக் கேடுவிளைக்கக் கூடுமென்று கருதி அரசன் அவனைச் சிறைப்படுத்த அல்லது கொலைபுரிய முற்படலாம். அதுகாரணமாக உண்டாகிய அச்சத்தால் தந்தைக்குத் தீங்குசெய்யும் நிமித்தம் புதல்வன் துணைவலிநாடி வேற்று அரசனை அடைதல்வேண்டும் என்பது கருத்து.

[9] இங்குக் கூறப்பட்ட பொருளும் படையும் தன்னுல் ஈட்டப்பட்டனவாம். சிறந்த வீரனுடைய மகளை மணத்தலும் காட்டுத்தலைவனுகிய குறுநில மன்னன் மகளை மணத்தலும் ஓரரசகுமாரனுக்குத் துணைவலியை உண்டாக்கும் என்னும் இதனை,

> " நலிவில் குன்றொடு காடுறை நன்பொருட்
> புலியனுர் மகட் கோடலும் பூமிமேல்
> வலியின் மிக்கவர் தம்மகட் கோடலும்
> நிலைகொண் மன்னர் வழக்கென நேர்பவே"
>
> (செய். 1919)

என்னும் சிந்தாமணிச் செய்யுளானும் உணர்க.

[10] காட்டுத்தலைவன்—தன் தந்தையைச் சார்ந்தவன்.

[11] துணைவலியைப் பெருக்குதற்கு இவற்றை மேற்கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[12] தனிப்பட்டவன்—பொருள் படை முதலியன இல்லாதவன்.

[13] செம்பஞ்சுக்குழம்பு முதலியனவுமாம்.

[14] பாசண்டர்களது சங்கத்திற்கு மூலமாகத் தொகுக்கப்பட்ட பொருள்.

பொருளையாதல், அந்தணர்க்குப் பயன்படாத [15]நாட்டுப் பொருளை யாதல் பொருள் மிகப்படைத்த கைம்பெண்ணின் பொருளை யாதல் [16]மறைவாக ஒழுகிக் கவர்ந்துகொள்ளலாம். அல்லது வாணிகக் கூட்டத்தாரை மயக்கத்தை விளைவிக்கும் கள் முதலிய வற்ருல் வஞ்சித்து அவர்களுடைய மரக்கலங்களில் உள்ள பொருள் களைக் கவர்ந்துகொள்ளலாம். அல்லது பிறருடைய ஊர்களைத் தன்வயப்படுத்துதற்குரிய [17]உபாயத்தை மேற்கொள்ளலாம். அல் லது, தாயின் பணியாட்களின் உதவியினுல் முயலலாம். அல்லது தச்சன், கொல்லன், சிற்பி, பாணன், மருத்துவன், பௌராணிகன், பாசண்டன் என்னும் இவர்கள் [18]உருவின் மறைந்து, அவ்வுருக் கொண்ட பிறரையும் துணைக்கொண்டு அரசனுக்குக் கேடுவிளைக் கும் வழியிற்புகுந்து படைகளாலும், நஞ்சாலும் அரசனைக் கொன்று அமைச்சர் முதலியோரை நோக்கி "யான் அரசகுமாரன்; [19]துணைவரோடு நுகரத்தக்க அரசியற்செல்வம் தனிமையாக நுகர இயலாததொன்று. அவ்வரசியலில் அமைச்சர் முதலிய பதவிகளை விரும்புவோர்க்கு யான் இருமடங்கு உணவும் கூலியும் தந்து நியமித்துப் பெருமைப்படுத்துவேன்" என்று கூறல்வேண்டும்.

முதலதிகரணத்தில் பதினுன்காம் பிரகரணம்
முற்றிற்று.

**இனி "[20]விலக்கப்படும் மக்கள்பால் வேந்தன் ஒழுகல்" வருமாறு :—**

விலக்கப்பட்ட மகனை அமைச்சர் முதலிய தலைவர்களின் புதல்வர்களாகிய ஒற்றராதல், அரசனுல் பெருமைப்படுத்தப்பட்ட

---

[15] நாட்டுமக்கள் பொதுநலத்திற்குத் தொகுக்கப்பட்ட பொருள்.

[16] மறைவு—உதவிசெய்வார்போல் வஞ்சித்தல்.

[17] உபாயங்கள் இன்னவென்பது "பகையரண் எய்தல்" என்னும் பதின்மூன்ரும் அதிகரணத்தில் கூறப்படும்.

[18] உருவின் மறைதல்—தன் இயற்கை உருவத்தை மறைத்துத் தச்சன் முதலியோர் உருவைக்கொள்ளுதல்.

[19] அரசியற் செல்வநுகர்ச்சியில் அமைச்சர் முதலியோர்க்கு விருப் பத்தை உண்டாக்க இவ்வாறு கூறல்வேண்டும் என்பது கருத்து.

[20] "விலக்கப்படும் மக்கள் வேந்தன்பால் ஒழுகல்" முன்னர்க் கூறப் பட்டது. இனி "விலக்கப்படும் மக்கள்பால் வேந்தன் ஒழுகல்" கூறப் படுகின்றமையின் பிரகரண இயைபு புலனும்.

அவன் தாயாதல் [21]அறிவுறுத்தி அழைத்துவரல் வேண்டும். [22]வெறுத்து ஒதுக்கப்பட்டவனை ஒற்றர்கள் படைகளானும் நஞ்சினாலும் கொன்றுவிடக்கடவர். [23]வெறுத்து ஒதுக்கப்படாதவனை ஒத்த ஒழுக்கமுடைய பெண்களிடத்தும், கள் முதலியவற்றிலும், வேட்டையாடலினும் ஈடுபடுத்தி இரவில் பிடித்துக்கொண்டுவரல் வேண்டும்.

### சுலோகம்

அரசன் தன்பால் வந்த மகன் அறவோனாயின் அவனை நோக்கி "எனக்குப்பின் இவ்வரசு நின்பாலதாம்" என்று தேற்றி ஆறுதல் கூறல்வேண்டும். அம்மகன் அறவோனல்லனாயினும் ஒருவனாயின் அவனைச் சிறைப்படுத்தல்வேண்டும். மக்கள் பலராக, அவருள் ஒருவன் தீயோனாயின் அவனை நாட்டினின்றும் அகற்றல்வேண்டும்.

முதலதிகரணம் பதினான்கு பதினைந்தாம் பிரகரணங்கள்
"விலக்கப்படும் மக்கள் வேந்தன்பாலொழுகல்,
விலக்கப்படும் மக்கள்பால் வேந்தன் ஒழுகல்" என்பன
அடங்கிய பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[21] அறிவுறுத்தல்—"நீ நின் தந்தைக்கியைந்த ஒழுக்கமுடையனாயின் நின் தந்தை உனக்கு இளவரசு நல்கிப் பெருமைப்படுத்துவான்" என்று உடன்படச் செய்தல்.

[22] வெறுத்து ஒதுக்கப்பட்டவன் — எவ்வாற்றானும் உடன்படுத்த இயலாமைபற்றி அரசனால் வெறுத்துத் தள்ளப்பட்டவன்.

[23] வெறுத்து ஒதுக்கப்படாதவன் — எவ்வாற்றானும் உடன்படுத்த இயலாவிடினும் புதல்வன் ஒருவனென்னும் காரணத்தானும், மகன்மை அன்பானும் வெறுத்துத் தள்ளப்படாதவன்.

## முதல் அதிகரணம் பயிற்சிபகர்தல்

## பதினும் பிரகரணம்—[1] அரசனது செயன்முறை

## பத்தொன்பதாம் அத்தியாயம்

*அரசன் விழிப்புடையனுயின் வினைஞரும் விழிப்புடையராவர்; அவன் காரியத்திற் கருத்துடையன் அல்லனுயின் [2]அவரும் அங்ஙன மாவர்; அரசனுடைய காரியங்களுக்கும் [3]கேடுவிளைப்பர். பகை வரும் அரசனை வஞ்சிப்பர். ஆதலின், அரசன் தனக்குரிய [4]செயல் களைச்செய்தல்வேண்டும். பகலையும், இரவையும் நாழிகையளவை யால் [5]எட்டுக் கூறுபடுத்தல் வேண்டும். [6]நிழலளவையால் மூன்று ஆள் நீளம், ஓர் ஆள் நீளம், நான்கு அங்குல நீளம், நண்பகல் என் னும் இவை பகற்கூறு எட்டனுள் முற்பகுதியாகிய நான்கு கூறு களுமாம்; [7]அக்கூறுகளாலேயே பிற்பகுதிகளையும் கூறிக்கொள்க.*

---

### 19-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசன் மக்கள்பால் ஒழுகுமுறை முன்னர்க் கூறப்பட்டது. இதன் கண் அவனுடைய நாட்செயல் முறைகள் கூறப்படுகின்றமையின் பிரகரண இயைபு புலனும்.

[2] அவரும்—அமைச்சர் முதலிய வினைஞரும்.

[3] "கேடுவிளைப்பர்" என்னும் பயனிலைக்கு "வினைஞர்" என்பது எழுவாய்.

[4] செயல்கள்—நாடோறும் செய்யத்தக்க காரியங்கள்.

[5] மூன்றேமுக்கால் நாழிகைகொண்ட கூறு எட்டாகப் பகலையும், அவ் வாறே இரவையும் கூறுபடுத்தல்வேண்டும் என்பது கருத்து.

[6] முற்பகலை நான்கு கூறுபடுத்து, மூன்றாள் நீளமுள்ள நிழலளவை முதற்கூற்றின் முடிவாகவும், ஓராள் நீளமுள்ள நிழலளவை இரண்டாங் கூற்றின் முடிவாகவும், நான்கங்குல நீளமுள்ள நிழலளவை மூன்றாங்கூற் றின் முடிவாகவும், நண்பகலை நான்காங்கூற்றின் முடிவாகிய பதினைந்து நாழிகையாகவும் கொள்ளல்வேண்டும் என்பதாம்.

[7] பிற்பகலையும் நான்கு கூறுபடுத்து, நான்கங்குல நீளமுள்ள நிழ லளவை ஐந்தாங்கூற்றின் முடிவாகவும், ஓராள் நீளமுள்ள நிழலளவை ஆறாங்கூற்றின் முடிவாகவும், மூன்றாள் நீளமுள்ள நிழலளவை ஏழாங்கூற் றின் முடிவாகவும் பகற்பொழுதின் முடிவை எட்டாங்கூற்றின் முடிவாகிய முப்பது நாழிகையாகவும் கொள்ளல்வேண்டும்.

அப்பகற்கூறு எட்டனுள், [8]முதற்கூற்றில் [9]நகரப்பாதுகாப்பின் இயல்பையும், [10]வரவுசெலவுக் கணக்குகளையும் கேட்டல் வேண்டும். இரண்டாங்கூற்றில் நகரத்தினும் நாட்டினும் உள்ள மக்களுடைய காரியங்களை ஆராய்தல்வேண்டும். மூன்றும் கூற்றில் நீராடல், உண்டல், வேதம் ஓதல் என்னும் இவற்றைச் செய்தல்வேண்டும். நான்காங்கூற்றில் [11]பொருள் பெறுதலும், தலைமை வினைஞரை அவ்வத்தொழிலில் தலைப்படுத்தலும் செய்தல் வேண்டும். ஐந்தாங்கூற்றில் அமைச்சர் அவையோடு ஓலை முதலியன போக்கி எழுத்துமூலமாகக் காரியங்களைச் சூழ்தல்வேண்டும். ஒற்றர்களுக்கு மறைவில் கூறவேண்டிய செய்திகளையும் ஆராய்தல் வேண்டும். ஆறுங்கூற்றில் தன் விருப்பப்படி [12]விளையாடுதல் அல்லது காரியச் சூழ்ச்சியை மேற்கொள்ளலாம். ஏழாங்கூற்றில் [13]யானை, குதிரை, தேர், காலாட்படை என்னும் நால்வகைப் படைகளையும் பார்க்கவேண்டும். எட்டாங்கூற்றில் படைத் தலைவனுடன் கூடித் தன் வலிமையை ஆராய்ந்தறிதல்வேண்டும். பகற்பொழுது கழிந்ததும் சந்திவழிபாடு செய்தல்வேண்டும்.

இரவின் முதற்கூற்றில் ஒற்றர்களைப் பார்த்தல்வேண்டும். இரண்டாங்கூற்றில் நீராடல், உண்டல், வேதமோதல் என்னும் இவற்றைச் செய்தல்வேண்டும். மூன்றுங்கூற்றில் மங்கலவாச்சியங்களின் இன்பங்களை நுகர்ந்துகொண்டு படுத்து நான்காங்கூற்றிலும் ஐந்தாங்கூற்றிலும் [14]துயில்கொள்ளல்வேண்டும். ஆறுங்கூற்றில் மங்கலவாச்சியங்களின் ஒலியால் விழித்தெழுந்து பொருணூல்

---

[8] ஒரு கூற்றை ஒரு முகூர்த்தம் என்று கூறுப.

[9] முதல்நாள் இரவு நிகழ்ந்த நகரக்காவலின் தன்மை.

[10] வரவு செலவு—முதல்நாட் பகலிலும், இரவிலும் நிகழ்ந்தன.

[11] சென்ற நாட்களில் குடிமக்களிடமிருந்து இறையாகக் கொள்ளப்பட்ட பொருள்.

[12] இளைப்பாறுதற்பொருட்டு விளையாடலை மேற்கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[13] யானை, குதிரை, தேர்களையும், அவற்றின் வீரர்களையும், காலாட்படைகளையும் பார்க்கவேண்டும் என்பது கருத்து.

[14] அரசன் துயில்கொள்ளுதலை "கண்படைநிலை" எனவும் விழித்தெழுதலை "துயிலெடைநிலை" எனவும் தொல்காப்பியர் கூறுவர். (தொல்-பொருள்-சூ. 90-91).

களையும், இவ்வமயம் இன்னது செய்தல்வேண்டும் என்பதையும் பற்றி ஆராய்தல்வேண்டும். ஏழாங்கூற்றில் காரியங்களைச் சூழ்ந்து கொண்டு ஒற்றர்களை [15]உய்த்தல்வேண்டும். எட்டாங்கூற்றில் வேட்பிப்போன், [16]ஆசிரியன், புரோகிதன் இவர்களுடன் கூடி [17]மங்கலவாழ்த்துக்களைப் பெறுதல்வேண்டும். [18]மருத்துவன், அடிசிலாக்குவோன், ஒளிநூல் வல்லோன் என்னும் இவர்களைக் காணல்வேண்டும். கன்றுடன் கூடிய ஆவையும், காளையையும் வலம்வந்து அரசரிருக்கையை அடைதல்வேண்டும்.

[19]தன் காரியத் திறமைக்கு ஏற்பப் பகல் இரவுகளின் கூறு களை வேறுவகையாகவும் வகுத்துக்கொண்டு காரியங்களைச் செய்யலாம்.

அரசிருக்கையை அடைந்த அரசன், காரியங் கருதிவரும் குடி மக்களுக்கு வாயிலில் [20]தடையில்லாமலிருக்கச் செய்தல்வேண்டும்.

அரசன் காட்சிக்கு அரியனுயின் தக்கனவும், தகாதனவுமாகிய காரியங்களை [21]மாறுபடச் செய்யும்படி அருகிலுள்ளார் அவனைத் தலைப்படுத்துவர். அதனுல் அரசன் அமைச்சர் முதலிய பகுதி களின் சினத்திற்கு ஆளாதலோடு, பகைவர் வயப்படவும் கூடும்.

---

15 உய்த்தல் — குறிப்பிட்ட காரியத்தை மறைவில் அறிந்துவரப் போக்கல்.

16 ஆசிரியன்—கல்விபயிற்றுவோன்.

17 மங்கலவாழ்த்து—மறைகளிற் கூறப்பட்ட வாழ்த்துப்பகுதிகள்.

18 உடல்நிலையை ஆராய்தற்பொருட்டு மருத்துவனையும், தனக்கு விருப்பமான உணவாக்குதலைத் தெரிவித்தற்பொருட்டு அடிசிலாக்குவோனை யும், அந்நாளிற் கோள்களின் நன்மை தீமைகளை அறிந்துகொள்ளுதற் பொருட்டு ஒளிநூல் வல்லோனையும் காண்டல்வேண்டும் என்பது கருத்து. ஒளிநூல்—சோதிட நூல்.

19 முற்கூறப்பட்ட காலக்கூறுகள் பொதுவாகும்; இனிச் சிறப்பு வகையால் வேறுபடவும் வகுத்துக்கொள்ளலாம் என்பது கருத்து.

20 காட்சிக் கெளியனுக இருக்கவேண்டும்.

“காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்னன் நிலம்” (குறள்–386)

என்னும் இதனுல் அதன் பயனும் கூறப்பட்டிருத்தல் அறிக.

21 செய்த்தக்க காரியங்களைத் தகாதனவாகவும், தகாதகாரியங்களைத் தக்கனவாகவும் மாறுபடுத்துவர் என்பது கருத்து.

ஆதலின், தேவர், முனிவர், பாசண்டர், இருபிறப்பாளர், பாலர், முதியவர், பிணியாளர், துன்புறுவோர், தலைவனில்லாதோர், பெண்கள் என்னும் இவர்களுடையவும், பசு, அறநிலையம் என்னும் இவற்றினுடையவும் ஆகிய காரியங்களை முறையே பார்த்தல் வேண்டும். [22]அன்றிக் காரியங்களின் பெருமை நோக்கியாதல், காரியக்கேடு கருதியாதல் இம்முறை மாறியுஞ்செய்யலாம்.

### சுலோகங்கள்

(1) [23]எல்லாக்காரியங்களையும் கேடெய்தும் நிலையில் [24]காலங் கடத்தலாகாது. காலங்கடத்தப்பட்ட காரியம் பின்னர் வருந்திச் செய்யத்தக்கதாகும். அல்லது செய்ய இயலாததாகவும் கூடும்.

(2) அரசன் அங்கிவினைச்சாலையில் புரோகிதன், ஆசிரியன் இவர்களுடனிருந்து [25]அறிஞரையும், முனிவரரையும் எழுந்து எதிர்கொண்டு வணங்கி அன்னார் காரியங்களைச் செய்தல்வேண்டும்,

(3) முனிவரர் காரியங்களை [26]வேதம் உணர்ந்தவர்களுடன்

---

[22] ஒரு காரியம் பெரிதாயின் அதனையும், ஒன்றிற்குக் கேடுவிளையும் எனத்தோன்றின் கேடுநேராவாறு அதனையும், முற்படச் செய்யவேண்டுமாதலின் முன்கூறிய முறையினின்று மாறியும் செய்யலாம் என்பது கருத்து.

[23] எல்லாமென்பது சிறியவாயினும், பெரியவாயினும் என்றபடி.

[24] கேடு நேராவாறு விரைந்து முடிக்கவேண்டும் என்பது கருத்து.

" கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல் " (குறள்-668)

என்புழி, தூக்கம் கடிந்துசெயல் என்பதற்குக் காலம் நீட்டித்தலை ஒழிந்து செய்யவேண்டும் என்பது கருத்தாதலறிக. காலநீட்டிப்பால் மேற்கொண்ட காரியம் இடையறவுபடுமாயின் அது தீங்குபயக்கும் என்பதனை,

" வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும் " (674)

என்னும் திருக்குறளாலறிக.

[25] " வைத்தியர் " என்று முதனூல் கூறும்; ஈண்டு மருத்துவரைக் குறிப்பிடல் இயைபின்றாதலின் " அறிஞர் " என்று கூறப்பட்டது.

[26] வேதம் உணர்ந்தவருடன் இருத்தல் காரியத்துணிவில் நம்பிக்கை உண்டாதற்பொருட்டு.

இருந்து செய்வித்தல்வேண்டும். [27]மாயையின் பிரயோகத்தை அறிந்தவர்களின் காரியங்களை அவர் வெகுளிகாரணமாக அரசன் தானே செய்தலாகாது.

(4) முயற்சி, வேள்வி, காரியத்திற் கட்டளையிடல், கொடை, ஒப்பநாடல், வேள்வியாளரை முடிவில் மஞ்சனஞ்செய்வித்தல் ஆகிய இவ்வெல்லாம் அரசனுடைய விரதங்களாம்.

(5) [28]குடிமக்களுக்கு இன்பம் உண்டாயின் அரசனுக்கும் இன்பம் உண்டாம். குடிமக்களுக்கு நலம் விளையின் அரசனுக்கும் நலம் விளையும். அரசனுக்குப் பிரியமான காரியம் அவனுக்கு நன்மை பயப்பதாகாது. குடிமக்களுக்குப் பிரியமான காரியம் அரசனுக்கு நலம் பயப்பதாகும்.

(6) [29]ஆதலின், அரசன் என்றும் முயற்சியுடையனாய் அரசியற் காரியங்களைச் செய்யவேண்டும். முயற்சியே திருவினையாக்கும். முயற்சியின்மை கேடு விளைப்பதாகும்.

(7) முயற்சியின்மை அடைந்ததும் அடைவதுமாகிய காரியங்களுக்கு ஒருதலையாக அழிவு பயப்பதாகும். முயற்சியுடைமையால் உடனே நற்பயன் எய்தும். பொருட்பெருக்கமும் உண்டாம்.

முதலதிகரணம் பதினாறும் பிரகரணம்
"அரசனது செயன்முறை" என்னும் பத்தொன்பதாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[27] மாயையின் பிரயோகமாவது—பிறர்க்குக் கேடுவிளைக்க வஞ்சகமாகச் செய்யப்படும் பில்லி, சூனியம் முதலியன.

[28] "எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு" (குறள்-426)

என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

[29] "முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்" (குறள்-616)

என்பதும்,

"மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்" (குறள்-617)

என்பதும் ஈண்டு நினைவுகூரத்தக்கன.

## முதல் அதிகரணம்—பயிற்சிபகர்தல்

## பதினேழாம் பிரகரணம்—[1] அரண்மனை அமைத்தல்

## இருபதாம் அத்தியாயம்

மனை நூல் வல்லாரால் பாராட்டப்படும் நல் இடத்தில் மதில் அகழி வாயில் என்னும் இவற்றுடன் பற்பல கட்டுக்களை உடையதாக அரண்மனை அமைத்தல் வேண்டும். [2] நிதியறை அமைக்கும் முறைப்படி [3]அரண்மனை நடுவண், அரசன் தனக்கு இருப்பிடம் அமைத்தல் வேண்டும். அல்லது, சுவருள் மறைவான போக்கு வரவு வழிகளையுடைய [4]மயங்கியல் இல்லத்தை அமைத்து அதன் நடுவண் தன்னிருப்பிடத்தை அமைக்கலாம். அல்லது, அணிமையான இடத்தில் அமைந்த கோயிலில் உள்ள [5]தெய்வப்படிவம் அமைத்த கதவுகளையுடைய வாயிலையும், பல [6]சுருங்கைவழிகளையும் உடைய நிலவறையையாதல், [7]சுவருள் மறைவான படிக் கட்டுகளையுடைய மேல்வீட்டையாதல் [8]உட்டுளையுடைய தூண்

---

### 20-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசனது செயன்முறை முன்னர்க் கூறப்பட்டது. இனி அவன் வாழ்தற்குரிய அரண்மனை அமைத்தல் கூறப்படுகின்றமையின் பிரகரண வியைபுண்மையறிக.

[2] நிதியறை அமைக்கும் முறையை 2-ஆம் அதிகரணம் 5-ஆம் அத்தியாயத்திற் காண்க.

[3] "அந்தப்புரம்" என்று முதனூலிற் காணப்படும் சொற்கு "அரண்மனை" என்று மொழிபெயர்க்கப்பட்டது ; அரசன் இருப்பிடம் முதலிய பல இல்லங்களைப்பற்றிக் கூறுதலும், பிரகரணம் அரண்மனை அமைத்தல் என்றிருத்தலும் இதற்குக் காரணமாகும்.

[4] மயங்கியல் இல்லம்—இதனை "மோகன கிருகம்" என்று முதனூல் கூறும். வழி மயங்க அமைக்கப்பட்டமையின் இப் பெயர்த்தாயிற்று.

[5] தெய்வவுருவம் வகுத்த மரம், இரும்பு முதலியவற்றால் அடைக்கப்பட்ட வாயில் காண்பதற்கு அச்சம் விளைப்பதாகும். தெய்வவுருவம் ஈண்டுத் துர்க்கை முதலிய படிவங்கள்.

[6] சுருங்கைவழி—நிலத்தில் மறைவாக அமைக்கப்படும் நுழைவழி.

[7] மேல்வீடு ஒன்று அமைத்து அதற்கு வழி வெளிப்படையாக இல்லாமல் சுவருள்ளும் தூணுள்ளும் வகுத்தல் பிறரறியாமைப் பொருட்டு.

[8] உட்டுளை—மரத்தூணின் உள்ளே உள்ள துளை,

வழியாகப் போக்கு வரத்துச் செய்தற்குரிய மேல்வீட்டையாதல் அமைத்துக்கொள்ளலாம். அல்லது தனக்கு நேரும் கேட்டினை ஒழித்தற் பொருட்டுப் [9] பொறிகளால் [10] நிலத்தின் மேலும் கீழும் இயங்கும் இருப்பிடத்தை அமைத்துக்கொள்ளலாம். இவ்விருப்பிடத்தை இடையூறு [11] நேருங் காலத்திலாவது அமைத்துக் கொள்ளல் வேண்டும். அல்லது, தன்னைப்போலப் பொருணூல் உணர்ந்த பகைவனுக்கு அஞ்சி முற்கூறியவற்றினின்றும் [12] வேறு வகையாகவும் இருப்பிடம் அமைத்துக் கொள்ளலாம்.

[13] மனித சம்பந்தமான நெருப்பினுல் மூன்று முறை (அவசவ்வியம்) இடப்புறமாகச் [14] சுற்றப்பட்ட அரண்மனையை வேறு நெருப்புச் சுட்டழியாது. [15] வேற்று நெருப்பும் அவ்விடத்தில் எரியாது. மின்னலால் உண்டான [16] நீற்றைப் புற்று மண்ணோடு கலந்து [17] ஆலிநீராற் குழைத்துப் பூசப்பட்ட அரண்மனையையும் வேறு நெருப்புச் சுட்டழியாது.

சீந்திற்கொடி, சங்கஞ்செடி, காட்டுப்பருத்தி, அலரிச்செடியின்

---

[9] பொறி—யந்திரம்.

[10] பொறி முருக்கத்தால் மேல் ஏறி நிற்பதும், பொறித் தளர்ச்சியால் கீழிறங்குவதுமாகிய இல்லம் என்பது கருத்து. கீழிறக்குதல் பகைவனைக் கொல்லுதற் பொருட்டுமாம்.

[11] முன் அமைக்கப்படவில்லையாயினும் இடையூறு நேருங்காலத்தில் அமைத்துக்கொள்ளல் இன்றியமையாதது என்பது கருத்து.

[12] இத்தகைய பொருணூல்களைப் பகைவனும் அறியக் கூடுமாகலின் ஈண்டுக் கூறப்படாத முறையில் வேறுவகையாகவும் அமைத்துக்கொள்ளலாம் என்பது.

[13] மனித சம்பந்தமான நெருப்பு—பகைவனாற் கொல்லப்பட்ட, அல்லது கழுவேற்றப்பட்ட மனிதனுடைய எலும்பில் கன்மூங்கிலாற் கடைந்தெடுக்கப்படுவது.

[14] அதர்வ வேதத்தில் கூறப்பட்ட மந்திரத்தைச் சொல்லிச் சுற்ற வேண்டுமென்பது மரபு.

[15] "வேறு நெருப்பு" என்பது அடுக்களை விளக்கு முதலியன அல்ல; பகைவரால் இடப்படுவதாகும்.

[16] நீறு—மின்னலோடு கூடிய இடிவீழ்ந் தெரித்த மரத்துச் சாம்பல். இடி வீழ்ச்சியால் சாம்பல் உண்டாம் என்பதை "மரந்தின்னூஉ வரையுதிர்க்கும் நரையுருமின் ஏறு" (மதுரைக் காஞ்சி 62–63) என்பதனாலும் அறிக.

[17] ஆலிநீர்—ஆலங்கட்டி மழைநீர்.

மேலுண்டாகிய புல்லுருவி என்னும் [18] இவற்றாலும் [19] முருங்கை யில் தோன்றிய அரசிலையால் தொடுக்கப்பட்ட மாலையாலும் புனைந்த இல்லத்தைப் பாம்புகளும் பிற [20] நச்சுப் பொருள்களும் துன்புறுத்தமாட்டா.

பூனை, மயில், கீரி, [21] வெண்புள்ளியுள்ள ஒருவகை விலங்கு என்னும் இவை பாம்புகளைக் கொல்லுவனவாம். கிளி, நாகணவாய்ப்புள், [22] பிருங்கராசன் என்னும் இவை பாம்பின் நஞ்சைக் கண்ட அளவில் கத்தும். அன்றில், நஞ்சின் அணிமையிற் கலக்கம் எய்தும். [23] சீவஞ்சீவகன் என்னும் பறவை வாட்டம் எய்தும். களிப்புமிக்க குயில் இறந்துவிடும். சகோரப்புள்ளின் கண்கள் நிறம் வேறுபடும். இவ்வாறு நெருப்பு, நஞ்சு, பாம்பு இவைகளினின்றும் [24] பாதுகாத்துக் கொள்ளல் வேண்டும்.

---

[18] இவற்றாலும் என்பதற்கு சீந்திற்கொடி முதலியவற்றின் வேர்களாலும், இலைகளாலும் தொடுக்கப்பட்ட மாலைகளாலும் என்று பொருள் கொள்ளல் வேண்டும்.

[19] முருங்கை மரக்கிளைகளில் பறவைகள் உண்டுகழித்த வித்தில் தோன்றிய அரசின் இலைகளால் தொடுத்த மாலை என்பது.

[20] பிற நச்சுப் பொருள்கள்—மலையியற் பொருள்களாகிய காகோலம் முதலிய நஞ்சுகள்.

[21] இதனைப் "பிருஷதோத் ஸர்க்கம்" என்று முதனூல் கூறும்; இவ் விலங்கு இன்னதென்று விளங்கவில்லை.

[22] பிருங்கராசன்—கரிய நிறமுள்ள ஒருவகைப் பறவை.

[23] சீவஞ்சீவகன்—பறவைகளுள் ஒன்று.

[24] உணவு உடை முதலியவற்றில் நச்சுப் பொருளின் கலப்பின்மையை அன்னம் சக்கரவாகம் முதலிய பிராணிகளைக்கொண்டு பரிசோதித்தறியலாம் என்பதை,

> "வண்ணப் பூமாலை சாந்தம் வாலணிகலன்கள் ஆடை
> கண்முகத் துறுத்தித் தூய்மை கண்டலாற் கொள்ளவேண்டா
> அண்ணலம் புள்ளோ டெல்லா ஆயிரம் பேடைச் சேவல்
> உண்ணுநீர் அமிழ்தம் காக்க யூகமோ டாய்க என்றான்"
> (செய். 1893)

என்னும் சிந்தாமணிச் செய்யுளானும்,

"பூமாலை முதலியவற்றை அன்னப்புள்ளின் கண்ணினும் சக்கரவாகச் சேவல் முகத்தினும் உறுத்தித் தூய்மை கண்டல்லது கைக்கொள்ள வேண்டா. தண்ணீரிலும் சோற்றிலும் தீங்கு வாராமற் காத்தற்கு கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்க என்றான் என்க. "அன்னம் கண்குருதி காலும் சக்கரவாகம் முகங்கருக்கும் கருங்குரங்கு உண்ணாது" என்னும் நச்சினார்க்கினியர் உரையானும் அறிக.

அரசனுடைய இருப்பிடத்திற்குப் பின்புறத்தில் தேவிக்குத் தனி இல்லமும், அதற்குப்பின் கருவுற்ற தேவியர்க்கும், [25] நோய் வாய்ப்பட்டார்க்கும், மருத்துவரால் தீர்க்கத்தகாத [26] நோயாளர்க் கும் தனித்தனி இல்லங்களும் அமைத்தல் வேண்டும். அவற்றின் பின் பூங்காவும், நீர் நிலைகளும் அமைத்தல் வேண்டும். இவற்றின் வெளிப்புறத்தில் [27] சிறுமியர்க்கும், சிறுர்க்கும் இருப்பிடம் அமைத் தல் வேண்டும். முற்புறத்தில் [28] அணியறையும், சூழ்ச்சி மண்டப மும் [29] அத்தாணி மண்டபமும், அரசிளங்குமரர் இருப்பிடமும் [30] தொழிற்றலைவர் இருப்பிடங்களும் இருத்தல் வேண்டும். இவ் வில்லங்களின் இடையிடையே உள்ளிடத்திருந்து காக்கும் காவலர் கள் இருத்தல் வேண்டும்.

அரசன் தன் [31] இருப்பிடத்திலிருந்தே [32] முதியவள் ஆராய்ந்த தூய்மையுடைய தேவியைக் காண்டல் வேண்டும். தேவிமாருள் யாரையும் குறித்து அவர்தம் இருப்பிடத்திற்குச் செல்லலாகாது. [33] பத்திரசேனன் என்னும் அரசன் தன் தேவியின் இல்லத்தில் மறைந்திருந்த உடன்பிறந்தவனல் கொல்லப்பட்டான். கருச நாட்டு அரசனை அவன் புதல்வன் தன் தாயின் படுக்கையறையில்

---

[25] நோய்வாய்ப்பட்டார்—தீர்க்கத்தக்க பிணியுடைய தேவிமார்.

[26] நோயாளர்—இவர்களுந் தேவியரே.

[27] ஈண்டுக் கூறப்பட்ட சிறுமியரும் சிறுரும் அரசகுடும்பத்தைச் சார்ந்தவராவார்.

[28] அணியறை—அலங்காரம் செய்துகொள்ளுதற்குரிய இல்லம்.

[29] அத்தாணி மண்டபம்—அரசன் கொலுவீற்றிருக்கும் இடம்.

[30] தொழிற்றலைவர்—கருவூலத்தலைவர் முதலியோர்.

[31] அரசன் தன் தேவியைத் தன்னிருக்கைக்கே அழைத்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[32] முதியவள்—நம்பிக்கைக்குரிய வயது முதிர்ந்த பணிப்பெண்.

[33] தேவியின் இல்லத்தை அடைந்ததனல் உண்டாம் குற்றத்திற்கு எடுத்துக்காட்டு ; பத்திரசேனன்—கலிங்கநாட்டு வேந்தன். அவன் மனைவியி னிடத்து நட்புக்கொண்டிருந்த உடன்பிறந்தவனுகிய வீரசேனன் என்பான் அரசியற் றிருவை விழைந்து தேவியின் இல்லத்தில் ஒருபால் மறைந்திருந்து ஆங்குப் போந்த அம்மன்னனைக் கொன்ருன் என்பது புராண கதை. இத னுல் அரசன் தான் காதலித்த பொருள்களைப் பகைவர் அக்காதல் அறியாத நிலையில் அனுபவிக்கவேண்டும் என்பது போதரும். இதனை,

“ காதல காதல் அறியாமை யுய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல் ” (குறள்-440)

என்பதனுலறிக.

மறைந்திருந்து கொன்றான். [34] நஞ்சைத் தேனெனக்கூறிப் பொரியொடு கலந்து உண்பித்துக் காசி அரசனை அவன் மனைவி [35] கொன்றாள். [36] வைரந்தியன் என்னும் அரசனை [37] நஞ்சு பூசிய சிலம்பினாலும், [38] சௌவீரதேயத்து அரசனாகிய பரந்தபனை மேகலைமணிகளாலும், [39] சாலூதன் என்பானைக் கண்ணாடியாலும், விடூரதன்

---

[34] முதியவள் ஆராய்ச்சி யின்மையால் ஏற்படும் குற்றங்கட்கு எடுத்துக் காட்டுக்கள் :—அரசர் தாங்கூடுதற்குரிய மகளிரை முதுமகளிரைக் கொண்டு ஆராய்ந்த பின்னர் கூடல் வேண்டும் என்பதை,

"தோய்தகை மகளிர்த் தோயின் மெய்யணி நீக்கித் தூய்நீர்
ஆய்முது மகளிர் தம்மால் அரில்தபத் திமிரியாட்டி
வேய்நிறத் தோளினார்க்கு வேண்டுகின் மாலைசாந்தம்
தானல கலன்கள் சேர்த்தித் தடமுலை தோய்க என்றான்".
(1892)

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளானும் "கூடுதற்குரிய மகளிரைக் கூட வேண்டின் அவர் பூணை நீக்கி ஆராய்ந்து தெளிந்த மூப்பிமாரால் குற்றமறத் திமிர்ந்து தூயநீராட்டி அவர்க்குத் துகின் முதலியவற்றைச் சேர்த்திப் பின்புதான் அவர் முலையைத் தோய்வானாக என்றான் என்க" என்னும் நச்சினார்க்கினியர் உரையானுந் தெளிக.

[35] கொல்லுதற்குக் காரணம்:—காசி அரசன் தன் மனைவியின் சுற்றத்தாரைப் போரில் வென்று சிறைப்படுத்தியதாம்.

[36] மாற்றவள் பொய்மையாக ஏறிட்டுக்கூறிய பழியுரையை நம்பித் தன்னை வெறுத்தது காரணமாக வைரந்தியனை அவன் மனைவி கொன்றாள் என்பது புராண கதை.

[37] பரிசவேதி என்னும் விடம் தொட்டமாத்திரத்திற் கொல்வது. "நஞ்சு பூசிய" என்ற இவ்வடைமொழியை மேகலை மணிகளுக்கும், கண்ணாடிக்கும் கூட்டுக.

[38] பரந்தபனை அவன் மனைவி கொல்லுதற்குக் காரணம் அவன் கூறிய கடுஞ்சொல் பொறுக்கமாட்டாமையாம்.

[39] சாலூதன்—அயோத்தி நாட்டு வேந்தன்; அவன் மற்றொரு மனைவியினிடத்து காதற் சிறப்பைப் பொறாமையால் அவன் மனைவி கொன்றாள் என்பது. சடைப்பின்னலில் மறைத்து வைத்த படையால் கணவனைக் கொன்றாள் என்னும் இச்செயலில்,

"தொழுததங் கையினுள்ளும் துறுமுடி யகத்தும் சோர
அழுதகண் ணீரினுள்ளும் அணிகலத் தகத்தும் ஆய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுடன் ஒடுங்கும்பற்று
தொழிகயார் கண்ணும் தோற்றம் தெளிகுற்றார் விளிகுற்றாரே"
(1891)

இச்சீவக சிந்தாமணிச் செய்யுட் கருத்து நினைக்கத்தக்கது. இதன்கண் "துறுமுடி யகத்தும்" என்றதில் ஈண்டுக் கூறிய சடைப்பின்னல் அடங்குதல் அறிக.

என்பானைச் சடைப்பின்னலில் மறைத்து வைத்த படையாலும் அவரவர்களின் தேவிமார் கொலைபுரிந்தனர். ஆதலின் இங்ஙனம் கேட்டிற்குக் காரணமான [40] செயல்களைத் தவிர்த்தல் வேண்டும்.

மழித்தலும் நீட்டலும் உடைய துறவிகள், [41] மாயாவிகள் என்பாரோடும் வெளிப்புறத்துப் பணிப் பெண்களோடும் தேவிமார்கள் பழகாமல் தடுத்தல் வேண்டும். தேவிமாரைக் கருவுற்ற நிலையிலும், நோய்வாய்ப்பட்ட நிலையிலும், [42] உடனிறக்கும் நிலையிலும் அன்றி அவர் தம் உறவினர் பார்த்தல் ஆகாது. உருவச் சிறப்பால் வாழ்க்கை நடத்தும் கணிகையர், நீராடலால் அழுக்கு நீங்கிய தூய உடம்பினராய்ப் புதிய ஆடை அணிகலங்களால் அணி செய்து கொண்டு அரசனைக் [43]காணக்கடவர். தாய்தந்தையரை யொத்த எண்பதாண்டு நிறைந்த ஆடவரும், ஐம்பதாண்டு நிறைந்த பெண்டிரும், ஆண்டு முதிர்ந்தோரும், பேடிகளும், அரண்மனையிலிருந்து, அரசனுடைய குடும்ப நலம் கருதுவோரும் ஆகிய இவர்கள் உவளகத்து மகளிரின் தூய்மை தூய்மையின்மைகளை ஆராய்ந்தறிந்து தம் தலைவனாகிய அரசனது நலத்திற்கு அவர்களைத் தகுதியுடையராக்க வேண்டும்.

## சுலோகங்கள்

(1) உவளகத்து மகளிர் எல்லோரும் தமக்கென ஏற்படுத்தப்பட்ட இடங்களிலேயே இருத்தல் வேண்டும். வேற்றிடங்களிற் சேரலாகாது. உள்ளிடத்துள்ளார் யாரும் வெளிப்புறத்து மக்களோடு கலத்தலாகாது.

---

[40] செயல்கள் — முதியவளால் ஆராயப்படாமையும் தேவியர் இருக்கும் இல்லத்திற்குச் செல்லுதலுமாம்.

[41] மாயாவிகள்—மாயவித்தைக்காரர்கள்.

[42] உடனிறத்தல்—கணவனுடன் உயிர் நீத்தல்; உடன்கட்டையேறல். அரசன் தேவிமாரை ஈண்டுக் குறிக்கப்பட்ட சந்தர்ப்பங்களினன்றிப் பிறர் காண்டலாகாது என்பதை,

"பீடுகெழு சிறப்பின் பெருந்தகை யல்லது
ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பு" (நெடுநல் 106-7)

என்பதனாலும் அறிக.

[43] காண்டல் அரசனுக்குப் பணிவிடை செய்தற் பொருட்டு.

(2) [44]ஏட்டில் எழுதப்பட்டு வருவதும் வெளிப்படுவதும், [45]இலச்சினை இடப்பட்ட [46]பேழைப்புறமுடையதும் ஆகிய எல்லாப் பொருள்களும் அரசனால் நேரில் பார்க்கப்பட்டு வரல் வேண்டும். அல்லது வெளிப்படல் வேண்டும்.

முதலதிகரணம் பதினேழாம் பிரகரணம்
"அரண்மனை அமைத்தல்" என்னும் இருபதாம்
அத்தியாயம் முற்றிற்று

---

[44] இன்ன இடத்தினின்றும் வந்தது, இன்ன இடத்திற்குப் போவது என்பதைப்பற்றிக் கணக்குப் புத்தகத்தில் எழுதப்படும் என்பது கருத்து.

[45] இலச்சினை — ஈண்டு வந்த இடத்தையும், போகுமிடத்தையும் பற்றியது.

[46] பேழை—பொருள் வைத்தற்கு ஆதாரமாகவுள்ள பெட்டி முதலியன.

## முதல் அதிகரணம்—பயிற்சி பகர்தல்

## பதினெட்டாம் பிரகரணம்—[1]தற்காப்பு

## இருபத்தோராம் அத்தியாயம்

படுக்கையினின்றும் எழுந்த அரசன்[2] ஆங்கு வில்லேந்திய கையினராகிய மகளிர் குழுவாற் சூழப்படவேண்டும். இரண்டாங் கட்டில் குப்பாயமும் தலைப்பாகும் உடைய அலிகளாலும், அரச னுடைய குடும்ப நலங் கருதுவோராலும், மூன்றாங்கட்டில் கூனன், குறளன், வேடன் என்னும் இவர்களாலும், நான்காங் கட்டில் அமைச்சராலும் உறவினராலும், ஈட்டியேந்திய வாயில் காப்பவ ராலும் சூழப்பட வேண்டும்.

[3]தந்தை பாட்டன் வழித் தோன்றல், உயர்குடிப் பிறந்தோரின் தொடர்புடைமை, கல்வியுடைமை, தன்னிடத்து அன்புடைமை, அன்புரிமையைப் புலப்படுத்தற்குரிய காரியங்களைச் செய்துவரல் என்னும் குணம் செயல் உடையாரை அரசன் தற்காப்பினிமித்தம் அருகில் வைத்துக் கொள்ளல் வேண்டும். பொருள் கொடுத்துப் பெருமைப் படுத்தாத அயல் நாட்டினரையும், தன்னாட்டினராயி

---

### 21-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரண்மனை அமைத்தல் என்னும் முன்னைப் பிரகரணத்தில் மனைவி மக்களிடத்தினின்றும் அரசன் தன்னைக் காத்துக்கொள்ளல் வேண்டும் என்று கூறப்பட்டது. இதன்கண் அவரல்லாத பிறரிடத்தினின்றும் தற் காப்புக் கூறப்படுதலின் பிரகரண வியைபு புலனாதலறிக.

[2] ஆங்கு—படுக்கை உள்ள முதற்கட்டில். அரசனது படுக்கையறையில் மிலேச்சர் பாதுகாப்பு உண்டென்பதை,

> " எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்
> உடம்பின் உரைக்கும் உரையா நாவின்
> படம்புகு மிலேச்சர் உழையராக " (முல்லை 64-66)

என்பதனாலுமறிக.

[3] அரசன் தன் கிளைஞரை அருகில் வைத்துக்கொள்ளவேண்டும் என் னும் இக்கருத்து,

> " பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்
> சுற்றத்தார் கண்ணே யுள " (குறள் 521)

என்னும் இதனால் வலியுறுதல் காண்க.

னும் [4]முன்னர்க் கேடிழைத்துப் பின்னர் ஏற்றுக் கொள்ளப் பட்டாரையும் அருகில் வைத்துக் கொள்ளலாகாது. உள்ளிடத்துக் காவலர்கள் அரசனையும், உவளகத்தையும் காத்தல்வேண்டும்.

அடிசிலாக்குவோன் மறைவான இடத்தில் பலவகையான அடிசிலையும் [5]மிக்க சுவை உடையனவாக ஆக்குதல் வேண்டும். அரசன் அவ்வுணவுகளைத் தான் உண்டற்கு முன்னர் அங்கிக்கும் [6]பறவைகளுக்கும் [7]பலியாக இட்டுப் பின்னர் [8]அப்படியே உண்ணக் கடவன்.

[9]நஞ்சு கலந்த நெருப்பின் சுடரிலும், புகையிலும் நீல நிறமும் [10]வெடிப்பொலியும் உண்டாம். பறவைகள் [11]இறக்கும் [12]சோற்றின் ஆவி மயிலின் கழுத்துப் போன்ற நிறமுடையதாகும். சோறு விரைவிற் குளிரும்; பிசையப்பட்டதுபோல நிறவேற்றுமையெய்தும்; நீர் கசிந்து திரளும்; நன்றாக வெந்திராது; [13]கறியுணவு விரைவில் உலர்ந்து விடும்; மிகுதியாகக் கொதிக்கும்; கரிய நுரைப் பரப்புச் சிதறியிருக்கும். மணம் ஊறு சுவை என்னும் இவை கெட்டிருக்கும். கஞ்சி முதலிய நெகிழ்ச்சிப் பொருள்களி

---

[4] முன்னர்க் கேடிழைத்துப் பிரிந்து, பின் வந்தாரை அருகில் வைத்துக் கொள்ளலாகாது என்னும் இது,

"உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல்" (குறள் 530)

என்பதனுள் ஒருவாறு புலனாதல் அறிக.

[5] "நன்றாகச் சுவைத்துப் பார்த்து" என்றும் கூறலாம்.

[6] பறவை—ஈண்டுக் காகத்தை உணர்த்தும்.

[7] பலியிடல்—அறநூல் விதியை மேற்கோடற்கும், நஞ்சுடைமையை ஆராய்தற்குமாம்; இதனை "வைசுவ தேவம்" என்று கூறுவர். 20-ஆம் அத்தியாயம் 24-ஆம் குறிப்பைப் பார்க்க.

[8] அப்படியே உண்டல்—கால நீட்டிப்பால் மாறுபடாதபடி உண்ணல்.

[9] நஞ்சு கலத்தல்—நஞ்சு கலந்த அன்னத்தால் ஓமம் செய்யப்படுதல்.

[10] வெடிப்பொலி—சடசட என்னும் ஒலி.

[11] நஞ்சு கலந்த உணவை உண்டமையால் இறக்கும் என்பது.

[12] நஞ்சுக் கலப்பைச் சோறு, கறி முதலிய எல்லாவற்றிற்கும் கூட்டுக.

[13] கறியுணவு—பருப்பு காய் அடகு முதலியன.

[14]நிழல் [15]குறைந்தும், மிகுதியாகவும் காணப்படும். நுரைப் பரப்பும், [16]வேறுபட்டிருத்தலும், மேற்கோடுகளும் காணப் படும். நெய் [17]முதலியவற்றின் நடுவண் நீலவரியும், பால் நடுவண் செவ்வரியும், கள், நீர் இவற்றின் நடுவண் கருவரியும், தயிர் நடு வண் நீலவரியும், தேன் நடுவண் வெண்மை வரியும் தோன்றும். [18]ஈரமான பொருள்கள் விரைவில் வாடுதலையும், மிகுதியான குழைவையும், வேக்காட்டில் கருமையும், கருமை பொன்மை கலந்த நிறத்தையும் உடையனவாம். உலர்ந்த பொருள்கள் விரைவிற் றூளாகி நிறம் வேறுபடும். வன்மையான பொருள்கள் மென்மையையும், மென்மையான பொருள்கள் வன்மையையும் அடையும். நஞ்சு கலந்த பொருளின் அணிமையிற் செல்லும் [19]சிற்றுயிர்கள் இறந்துவிடும். நஞ்சு கலந்த [20]மேல்விரிப்பு, போர்வை இவைகளில் கரும் புள்ளிகளும், நூல் மயிர் இவற்றின் நுண்ணிய பகுதிகள் உதிர்தலும் உண்டாம். [21]உலோகம், மணி முதலியவற்றுலாகிய [22]பொருள்களில் நஞ்சு கலந்திருப்பின் [23]சேற்று அழுக்குப் பூச்சும் [24]நீரோட்டம், ஒளி, திண்மை, [25]ஆற்றல், நிறம், ஊறு இவற்றின் கேடும் உண்டாம். இவை நஞ்சு கலந்த பொருள்களின் அடையாளங்கள் ஆகும்.

நஞ்சு கலந்தவனுடைய முகம் உலர்ந்து [26]புற்கென்றிருக்கும்;

---

14 நிழல்—மனித உருவத்தின் நிழல்.

15 ஒருகால் குறைந்தும், ஒருகால் மிகுதியாகவும் காணப்படும் என்பது கருத்து.

16 வேறுபட்டிருத்தல்—கஞ்சியிற் கலவாதிருத்தல்.

17 முதலிய என்றதனுல் எண்ணெய், கருப்பஞ்சாறு முதலியனவுங் கொள்ளல் வேண்டும்.

18 ஈரமான பொருள்கள்—மா, மாதுளை முதலிய பழங்கள்.

19 சிற்றுயிர்கள்—எறும்பு முதலியன.

20 மேல்விரிப்பு—படுக்கை, இருக்கைகளில் விரிக்கப்படும் ஆடை.

21 உலோகம்—பொன் வெள்ளி முதலியன.

22 பொருள்கள்—அணிகலன் முதலியன.

23 சேறு போன்ற அழுக்குப் படிந்திருத்தல்.

24 நீரோட்டம்—மணிகளிற் காணப்படுவது.

25 ஆற்றல்—சந்திரகாந்தக் கல் சந்திரனொளி தோய்ந்த அளவில் நீர் காலுதலைப் போன்ற திறமை.

26 புற்கென்றிருத்தல்—ஒளி மழுங்கி இருத்தல்.

சொல் தடைபடும்; வியர்வை, கொட்டாவி, மிக்க நடுக்கம், [27]தடுமாற்றம், [28]பிறர் கூற்றில் விழிப்புடைமை, தன்வயம் இழத்தல், தன் செயலிலும், தனக்குரிய இடத்திலும் [29]நிலைப்படாமை என்னும் இவை உண்டாம்.

ஆதலின் அரசனருகில் நஞ்சு மருத்துவரும், வேறு மருத்துவரும் இருத்தல் வேண்டும்.

மருத்துவன் மருத்துச் சாலையினின்றும் தான் உண்டு குற்றமின்மை அறிந்த மருந்துகளைக் கொணர்ந்து, தானும், மருந்து செய்யும் [30]துணைவரும் [31]அரசன் முன்னிலையில் உண்டு காட்டி அரசனுக்குக் கொடுக்கவேண்டும். கள்ளும் நீரும் [32]அங்ஙனமே கொடுக்கத் தக்கன.

மயிர் வினைஞனும், [33]ஒப்பனை செய்வோனும் நீராடித் தூய ஆடையணிந்து கைகளைத் தூய்மை செய்துகொண்டு இலச்சினை இடப்பட்ட [34]உபகரணங்களை உள்ளிடத்திருக்கும் பணியாளரிடத்தினின்றும் பெற்றுக்கொண்டு அரசனுக்குப் பணி செய்யக்கடவர்.

---

[27] தடுமாற்றம் — மேடுபள்ளமின்றி ஒத்த நிலத்தில் நடக்குங்காலும் கால்இடறுதல்.

[28] எவனுவது ஒருவன் வேறு ஒன்றைப் பேசினும் அப்பேச்சில் உள்ளஞ் செலுத்தல்.

[29] செயலில் நிலைப்படாமை — தொடங்கிய காரியம் நிறைவேருமல் இருக்க மற்ருெரு செயலிற் புகுதல். இடத்தில் நிலைப்படாமை—தான் பணி செய்தற்குரிய இடத்தைவிட்டுப் பிறிதோர் இடத்தை அடைதல்.

[30] துணைவர்—மருந்துச் சரக்குக்களைப் பொடித்தல், அடுப்பிலேற்றிப் பக்குவஞ்செய்தல் முதலிய தொழில் புரிவோர். இவரை "உழைச் செல்வார்" என்பர். இதனை,

"உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானுற் கூற்றே மருந்து" (குறள் 950)

என்பதனுலறிக.

[31] மீண்டும் அரசன் முன்னிலையில் உண்ணல், நம்பிக்கைப் பொருட்டு.

[32] கள்ளும் நீரும் கொடுப்போர் முதலில் தாம் உண்டு பார்த்துக் கொடுக்கவேண்டும் என்பது.

[33] ஒப்பனை செய்வோன்—அலங்கரிப்போன்.

[34] உபகரணங்கள்—மயிர்களையும் கத்தி, ஆடை, அணிகலன் இவற்றையுடைய பேழை முதலியன. இவை அரசிலச்சினை இடப்பட்டிருக்க வேண்டும் என்பது.

நீராட்டல், உடம்பு பிடித்தல், படுக்கை விரித்தல், உடை வெளுத்தல், பூத்தொடுத்தல் என்னும் இச்செயல்களைப் [35]பணிப் பெண்கள் செய்தல் வேண்டும். அல்லது அவர்கள் தலைமையின் கீழ் அவ்வத் தொழிலாளரும் செய்யலாம். ஆடை, மாலை இவற்றைக் கொடுப்போர் தம் கண்களில் [36]ஒற்றிக் கொடுத்தல் வேண்டும். [37]தைலம், [38]பூச்சுப் பொருள், [39]உரைத்தற் பொருள், ஆடைக்கிடும் மணப்பொடி, நீராடுங்கால் தலையிலுரைக்கும் மணப்பொடி என்னும் இவற்றைக் கொடுப்போர் தம் மார்பினும் தோள்களினும் கண்களினும் ஒற்றிக் கொடுத்தல் வேண்டும். இதனால் பிறநாட்டினின்றும் வந்த பொருள்களையும் [40]இங்ஙனமே அரசனிடம் கொடுத்தல் வேண்டும் என்பது கூறப்பட்டபடியாம்.

[41]விளையாட்டு மக்கள் படைக்கலம், நெருப்பு, நஞ்சு என்னும் இவையில்லாமல் [42]விளையாடல் வேண்டும். இவர்களுக்குரிய வாச்சியங்கள் [43]அரண்மனைக்குள்ளேயே இருத்தல் வேண்டும். குதிரை, தேர், யானை என்னும் இவற்றின் அலங்காரப் பொருள்களும் அரண்மனையினுள்ளேயே இருத்தல் வேண்டும்.

---

35 இப்பணிப்பெண்கள் முன்னரே ஆராய்ந்துஅமைக்கப்பட்டவராவார்.

36 ஒற்றுதல், நஞ்சுத் தோய்வு முதலியவற்றை ஆராய்தற் பொருட்டு.

37 தைலம் — மணப்பொருளும் நெல்லிக்காய்ச் சாறு முதலியனவும் கலந்த எண்ணெய்.

38 பூச்சுப்பொருள்—சந்தனம் முதலியன.

39 உரைத்தற் பொருள்—" பத்துத்துவரும், ஐந்து விரையும், முப்பத்திருவகை ஓமாலிகையுமாம்" (சிலப்பதிகாரம் பாட்டு. 6–77 உரை பார்க்க.)

40 வேற்று நாட்டினின்றும் வந்த புதிய ஆடை முதலியவற்றையும் கொடுப்போர் தம் கண், மார்பு தோள் இவற்றில் ஒற்றிக் கொடுத்தல் வேண்டும் என்பது கருத்து.

41 விளையாட்டு மக்கள்—தாண்டுதல், குதித்தல் முதலிய விளையாட்டுக்களால் அரசனை இன்புறுத்துவோர்.

42 விளையாடுதல், அரசன் முன்னிலையில்.

43 அரண்மனைக் குள்ளிருத்தல் நஞ்சு முதலியன கலவாமைப் பொருட்டு. விளையாடுங் காலத்தில் மாத்திரம் அவ்வாச்சியங்களை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

தொன்று தொட்டுச் சிறந்த அன்புத் தொடர்பு உடையவனால் நடத்தப்படும் சிவிகை ஊர்திகளில் இவர்ந்து செல்லலாம். சிறந்த நம்பிக்கையுடைய தோணி இயக்குவோனால் செலுத்தப்படும் தோணியில் ஏறல் வேண்டும். மற்றொரு தோணியுடன் பிணைக்கப் பட்ட தோணியிலும், காற்றினால் உந்தப்படும் தோணியிலும் ஏற லாகாது. நீர்நிலையின் இரு கரையினும் [44]படைவீரர் இருத்தல் வேண்டும். [45]செம்படவரால் ஆராய்ந்த நீரில் நீராடலாம். பாம்பு பிடிப்போரால் ஆராயப்பட்ட பூங்காவிற் புகுதலாம்.

கள்வர், பகைவர் என்னும் இவராலும் [46]பொல்லாத விலங்கு களாலும் ஏற்படும் அச்சத்தை, நாய்க் கூட்டங்களையுடைய வேடர் களால் நீக்கி விலங்குக் காட்டில் [47]அசையுங் குறியைத் தாக்கிப் பழகுதற் பொருட்டு அரசன் அடைதல் வேண்டும்.

புதியவராய்த் தன்னைக் காண விரும்பிவரும் முனிவரரை அன்புமிக்க [48]படைவீரர் சூழக் காணல் வேண்டும். அமைச்சர் சூழவிருந்து வேற்றரசனுடைய தூதுவரைப் பார்த்தல் வேண்டும். [49]போர்க்கோலங் கொண்டு யானை, குதிரை, தேர் என்னும் இவற் றுள் ஒன்றிலேறிச் சென்று போர்க்குச் சித்தமாக இருக்கும் படை வீரரைச் சார்தல் வேண்டும்.

அரசன் [50]வெளிச் செல்லுங்காலும், உட்புகுங்காலும் [51]கோப் பெருந் தெருவின் இருமருங்கினும் [52]கோலேந்திய வீரர்கள் நின்று பாதுகாப்ப, வாட்படை ஏந்திய கையினரும், துறவிகளும், உறுப்

---

44 படைவீரர் இருத்தல், பாதுகாப்பின் பொருட்டு.

45 செம்படவர் ஆராய்ச்சி, முதலை முதலியவற்றால் தீங்கு நேராமைப் பொருட்டு.

46 பொல்லாத விலங்குகள்—புலி முதலியன.

47 அசையுங்குறி—ஓடுகின்ற மான் முதலிய இலக்குக்கள்.

48 பகைவரால் உய்க்கப்பட்டிருத்தல் கூடும் என்னும் அச்சம் காரண மாகப் படைவீரர் சூழக் காணவேண்டும் என்பது.

49 கவசம் புனைதல், படை தாங்கல் முதலியன.

50 வெளிச் செல்லல்—வேற்றிடம் நோக்கிச் சேறல்.

51 கோப்பெருந் தெரு—அரசவீதி.

52 கோல்—மூங்கிற்கோல், பிரப்பங்கோல் முதலியன.

பறையரும் எதிர்ப்படாவாறு போதல் வேண்டும். மக்கள் நெருங்கி யிருக்கும் இடத்திற் சேரலாகாது. [53]தெய்வ யாத்திரை, மக்கட் கூட்டம், திருவிழா தோட்ட விருந்து என்னும் இவற்றிற்குச் செல்லுங்கால் படைத்தலைவருடன் போதல் வேண்டும்.

சுலோகம்

அரசன் வஞ்சகர்களான ஒற்றரால் மற்றை அரசரைத் தான் துன்புறுத்தல் போல் [54]வேற்று வேந்தர்களின் துன்பத்தினின்றும் தன்னை முயன்று காத்துக்கொள்ளல் வேண்டும்.

முதலதிகரணம் பதினெட்டாம் பிரகரணம்
"தற்காப்பு" என்னும் இருபத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

"பயிற்சிபகர்தல்" என்னும் முதலதிகரணம்
முற்றிற்று.

---

[53] தெய்வ யாத்திரை—தேவதைகள் உலாப்போதல்.

[54] வேற்றரசர், வஞ்சகராகிய ஒற்றர் மூலமாக இழைக்கும் துன்ப மெனக் கொள்க.

## இரண்டாம் அதிகரணம்—[1]தொழிற்றலைவர் செயன்முறை

### முதற் பிரகரணம்—[2]நாடு அமைத்தல்

### இருபத்திரண்டாம் அத்தியாயம்

வேற்று நாட்டிலிருந்து மக்களைக் [3]கொணர்ந்தும், தன்னுட்டில் மிகுதியான மக்களை [4]வேற்றிடம் உய்த்தும், முன்னுள்ள தனைத் திருத்தியாதல், புதிதாகவாதல் நாட்டினை [5]அமைத்தல் வேண்டும். பெரும்பாலும் [6]சூத்திரர் உழவர்களை உடையதாகவும், நூறு வீடுகட்குக் குறையாமலும் ஐந்நூறு வீடுகட்கு மேலில்லாமலும் ஒரு குரோசம் அல்லது இரண்டு குரோச அளவு எல்லையுடையதாகவும், ஒன்றற்கொன்று பாதுகாப்பாகவும் கிராமத்தை அமைத்தல் வேண்டும். கிராமத்தின் எல்லையிறுதிகளில் ஆறு,

---

### 22-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] இனி, இரண்டாம் அதிகரணத்தில் தொழிற்றலைவரும், அவர் செயன்முறைகளும் கூறப்படும். முதலதிகரணத்தில் கூறிய குணஞ்செயல்கள் நிரம்பப் பெற்ற அரசன் எல்லாக் காரியங்களையும் அவ்வத் தொழிற்றலைவரைக்கொண்டே நடத்தும் இயல்பினனுவான். ஆதலின் அதிகரண வியைபு புலனும்.

[2] நாடு—தானியம், துரோணமுகம், கார்வடிகம், சங்கிரகணம், கிராமம் என்னும் பல்வகைப் பிரிவுகளை யுடையது. அரசு, அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பென்னும் அரசியலுறுப்புக்கள் ஏழனுள் அரசும், அமைச்சும் முதலதிகரணத்திற் கூறப்பட்டன. நாடு இதன்கட் கூறப்படுதலின் பிரகரண வியைபுண்மை அறிக.

[3] தன்னுட்டில் மக்கள் குறைவாக இருப்பரேல் வேற்று நாட்டிலிருந்து கொணர்தல் வேண்டும் என்பது.

[4] வேற்றிடம்—தன்னுட்டினுள் புதிதாக அமைக்கப்படும் ஒரு கூறு.

[5] வேற்று நாட்டிலிருந்து மக்களைக் கொணர்ந்து பழைய நாட்டைத் திருத்தியும், மிகுதியான மக்களுக்கு இடனமைத்தற் பொருட்டுப் புதிய நாட்டையும் அமைத்துக்கொள்ளலாம் என்று நிரனிறையாக இப்பகுதிக்குப் பொருள் கோடலும் பொருந்தும்.

[6] " தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு " (731)

என்பது திருக்குறள்.

[7] ஆறும், மலையும், காடும் எல்லையில் அமையும்படி கிராமத்தை அமைத்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

மலே, காடு, [8]பள்ளம் [9]அணைக்கட்டு என்னும் இவைகளேயும் [10]இலந்தை, இலவம், வன்னி, பால் மரங்கள் என்னும் இவை களேயும் அமைத்தல் வேண்டும்.

[11]எண்ணூறு கிராமங்கட்கு நடுவண் தானியத்தையும், நானூறு கிராமங்கட்கு நடுவண் துரோண முகத்தையும், இருநூறு கிராமங்கட்கு நடுவண் கார்வடிகத்தையும், பத்து கிராமங்களைச் சேர்த்து ஒரு சங்கிரகத்தையும் அமைத்தல் வேண்டும்.

நாட்டின் எல்லேகளில் எல்லே காவலர்க்குரிய அரண்களேயும், எல்லே காவலர் தலைமையிற் பாதுகாக்கப்படும் [12]நாட்டு வழி களேயும் அமைத்தல் வேண்டும். எல்லே காவலருடைய அரண் களின் [13]நடுவிடங்களே [14]வலேஞரும், [15]சவரரும், புளிஞரும், புலேய ரும், காட்டில் வாழ்நரும் பாதுகாக்கக் கடவர்.

---

[8] பள்ளம்—கிராமத்தில் நீர் தேங்காமல் வடிதற் பொருட்டு அமைக்கப் படுவது.

[9] ஆற்றைக் கடந்து செல்லுதற் பொருட்டு அணைக்கட்டு வேண்டும் என்பது.

[10] இலந்தை முதலியன பல்லாற்றானும் மக்களுக்குப் பயன்படும் என் பது கருத்து.

[11] எண்ணூறு, நானூறு, இருநூறு, பத்து என்னும் எண்களேயுடைய கிராமங்கட்கு முறையே தானியம், துரோணமுகம், கார்வடிகம், சங்கிரகம், என்னும் பெயர்களால் தலைநகரங்கள் அமைத்தல் வேண்டும் என்பதும், மேற்குறித்த கிராமங்களில் வாழுமக்கள் வாணிக முதலியன செய்தற்கும், அரசியல் வினைஞர்பால் வினைமுடித்தற்கும் அத்தலைநகரங்கள் இடனும் என் பதும் கருத்து.

[12] நாட்டு வழிகள்—நாட்டிற் புகுதற்கும், வெளிப்படுதற்கும் உரிய நெறிகள்.

[13] நடுவிடங்கள்—எல்லே காவலர் இருவர் அரண்களுக்கும் நடுவிலுள்ள பகுதிகள்.

[14] வலேஞர்—வலேகளால் விலங்கு படுப்போர்.

[15] சவரரும், புளிஞரும், காட்டில் வாழ்நரும் வேட்டுவ வகுப்பினைச் சார்ந்தவராவார்.

வேட்பிப்போர், ஓதுவிப்போர், புரோகிதர், வைதிகர் என்னும் இவர்களுக்குத் [16]தண்டம், [17]இறையில்லாமலும், [18]விருப்பப்படி விற்றல், வழங்குதற்கு உரிமை யுடையனவாகவும் பிரமதேயமாக நிலங்களைக் கொடுத்தல் வேண்டும். [19]தொழிற்றலைவர், கணக்கர், முதலியோர்க்கும் [20]கோவர், [21]தானிகர், யானையைப் பயிற்றுவோர், மருத்துவர், குதிரையைப் பயிற்றுவோர், [22]நடைவல்லார் என்னும் இவர்களுக்கும் விலைப்படுத்தற்கும், ஈடு வைத்தற்கும், ஒற்றி வைத்தற்கும் உரிமையின்றி நிலங்களைக் கொடுத்தல்வேண்டும். [23]இறை இறுப்போன் முன்னரே [24]பண்படுத்திய நிலத்தை அவன் ஒருவனுக்கே உரிமையாம்படி கொடுத்தல் வேண்டும். பண்படுத்த வேண்டிய நிலத்தைத் [25]தகுதியுடையானிடத்தினின்றும் எடுத்துக் கொள்ளலாகாது.

உழாதவரிடத்தினின்றும் நிலங்களைக் கைப்பற்றிப் [26]பிறரிடம் கொடுக்கவேண்டும். இன்றேல் அந்நிலங்களைக் கிராமாதிகாரிகளாவது, வாணிகர்களாவது உழவேண்டும். உடன்பட்டு உழா

---

[16] இருபோகத்திற்குரிய நிலங்களை முப்போகமாக விளைவித்துக் கொள்ளுதற்கும், வாய்க்கால் வழி நீரை மிகுதியாகப் பயன்படுத்திக் கொள்ளுதற்கும் விதிக்கப்படுவது.

[17] இறை—அரசனுக்கு இறுக்கவேண்டிய ஆறில் ஒரு கூறு.

[18] அரசனால் கொடுக்கப்படும் நிலத்தை விரும்பியவாறு பிறர்க்கு விற்றற்கும், புதல்வர் முதலியோர்க்குக் கொடுத்தற்கும் உரிமையுடன் கொடுக்கவேண்டும் என்பது கருத்து.

[19] தொழிற்றலைவர்—பொற்காசு இயற்றும் இடத்தலைவர் முதலியோர்.

[20] கோவர்—பத்து அல்லது ஐந்து கிராமங்கட்குத் தலைவர்.

[21] தானிகர்—நகரத்தின் நான்கிலொரு கூற்றுக்கு அதிகாரி.

[22] நடைவல்லார்—சேய்மையிலுள்ள இடங்கட்குச் செய்திகொண்டு விரைந்து செல்லும் கால்வன்மையுடையார்.

[23] இறை இறுப்போன்—இறுக்கவேண்டிய இறைப்பொருளை ஒழுங்காக இறுத்து வருபவன்.

[24] பண்படுத்தல்—நெல் முதலியன மிகுதியாக விளைதற்குத் தகுதியாகச் சீர்படுத்தல்.

[25] தகுதியுடையான் — பண்படுத்தற்கும், உரிய இறைப்பொருள் கொடுத்தற்கும் தகுதிவாய்ந்தவன்.

[26] பிறர்—உழுது பயன் விளைப்போர்,

தவர் [27]இழப்பிற்கு ஈடு செய்யவேண்டும். கூலம், பசு, பொருள் இவற்றைக் கொடுத்து [28]அவர்களுக்கு அருள் புரிதல் வேண்டும். அவர்கள் பின்னர் அக்கூலம் முதலியவற்றைத் [29]துன்புருமல் அரசனுக்குக் கொடுக்கக் கடவர்.

அவ்வுழவர்களுக்குக் கொடுக்கப்படும் [30]ஆக்கம், [31]குறை நீக்கம் என்னும் பொருள்களைக் கருவூலத்திற்கு [32]வளர்ச்சி உண்டாமாறு கொடுத்தல் வேண்டும். கேடுண்டாமாறு கொடுத்தலாகாது. என்னை? கருவூலங் குறையின் அரசன் தன்னுட்டு—நகரத்து—மக்களைத் [33]துன்புறுத்துவனுதலின். புதுவதாகக் குடி வாழ்க்கை தொடங்குவோர்க்கு அக்காலத்திலும், வேற்று நாட்டிலிருந்து [34]குடியேறினுர்க்கும் குறை நீக்கம் கொடுத்தல் வேண்டும். குறை நீக்கப் பொருளைத் திருப்பித் தந்த பின்னர் அன்னுரைத் தந்தையைப் போல [35]அருள் புரிதல் வேண்டும்.

ஆகரத் தொழிற்சாலை, [36]பயன்மரக்காடு, யானைக்காடு, பசு

---

[27] இழப்பு—அந்நிலத்தினின்றும் கிடைக்கும் வருவாயைப் பற்றியது.

[28] அவர்களுக்கு—உழவிற்கு வேண்டிய கருவிகளும் மழையும் இல்லாமை பற்றி உழாதவர்களுக்கு.

[29] துன்புருமல்—தம் பிழைப்பிற்கு இடையூறு நேராதபடி.

[30] ஆக்கம் — வளமுடையானுக்கு மேன்மேலும் நலனுண்டாதற் பொருட்டுக் கொடுக்கப்படும் பொருள்.

[31] குறை நீக்கம் — கேடெய்தினுற்கு அதனை யொழித்து நலனுண்டாக்குதற் பொருட்டுக் கொடுக்கப்படும் பொருள்.

[32] வளர்ச்சி—வட்டி முதலியவற்ருல் ஆவது.

[33] துன்புறுத்துதல், கருவூல நிறைவு குறித்து.

[34] குடியேறினுர்—புதியராக வந்தடைந்தார்.

[35] அருள்புரிதல்—மேன்மேலும் நன்மை வளர்ச்சிப் பொருட்டு ஆக்கப் பொருள் கொடுத்துதவல் வேண்டும் என்றபடி.

[36] பயன் மரம்—சந்தனம் அகில் முதலியனவும், இல்லங்கள் அமைத்தற்குரிய தேக்கு முதலியனவும் ஆம்.

மந்தை, வாணிகத் தொழிற்சாலை, [37]நீர்வழி, [38]நிலவழி, [39]பல பண்டங்களை விற்கும் இடம் என்னும் இவற்றை யேற்படுத்தல் வேண்டும். நீர் இடையறுதொழுகும் யாறு முதலியவற்றிற்கும் வேண்டுங்கால் [40]நீர்கொணர்தற்குரிய வாய்க்கால் முதலியவற்றிற் கும் [41]அணை கட்டுவித்தல் வேண்டும். அணை கட்டும் மற்றை யோர்க்கும் [42]இடம், [43]வழி, மரம் முதலிய உபகரணங்களைக் கொடுத்து உதவல் வேண்டும். அறக் கோட்டம் இளமரக்கா என்னும் இவற்றிற்கும் [44]உதவல் வேண்டும். பலர் கூடி அணை கட்டுங்கால் அக்குழுவினின்றும் [45]விலகினவனுடைய பணியாட்க ளும், எருதுகளும் அவ்வேலைகளைச் [46]செய்யவேண்டும். அங்ஙனம் விலகினவன் செலவு பொருளிற் [47]கூறுடையவனுவான்; வரவு பொருளிற் கூறு பெருன்.

---

[37] நீர்வழி—மழை முதலியவற்ருல் மிகுதிப்படும் நீர் ஒழுகி வெளிப் படுதற்குரிய வாய்க்கால் முதலியன.

[38] நிலவழி—நிலத்தின்கண் மக்களும், வண்டி முதலியனவும் செல்லுதற் குரிய சாலை முதலியன.

[39] "பண்ய பத்தனம்" என்று முதனூல் கூறும். இதற்குக் "காலி னும், கலத்தினும் வரும் பண்டங்களையுடைய "பட்டினம்" என்றும் கூறலாம்.

[40] மேட்டு நிலங்களிலிருந்து கொண்டுவரப்படும் நீர் என்பது கருத்து.

[41] அணை–பயிர்த்தொழிற்குச் சிறு வாய்க்கால் வழியாக நீர் செல்லுதற் பொருட்டுத் தேக்கி வைத்தற்குக் கட்டப்படுவது.

[42] இடம்—மிகுதியான நீர் தேங்குதற்குத் தக்க நிலம்.

[43] வழி—நீர் உட்புகுதற்கும், வெளிப்படுதற்கும் ஏற்ற நெறி.

[44] இடமும், மரம் முதலிய உபகரணமும் கொடுத்து உதவவேண்டும் என்பது கருத்து.

[45] விலகியவன் — விருப்பமின்மையால் தனக்குரிய காரியக் கூற்றைச் செய்யாமற் பிரிந்தவன்.

[46] பணியாட்களும், எருதுகளும் அத்தொழில்களைச் செய்யும்படி அரசன் வற்புறுத்துச் செய்விக்கவேண்டும் என்பது கருத்து.

[47] கூறு—அணை கட்டுதற்கு ஏற்படும் பொருட் செலவில் விலகினவனுக் குரிய பகுதி. அவன், செலவுபொருளுக்குக் கூறுகொடுக்கக் கடமையுடைய வனேயன்றி, அணைக்கட்டு முடிந்த பின்னர் வரும் ஊதியத்திற் கூறுபெறு தற்கு உரிமையற்றவன் ஆவான் என்பது கருத்து.

அவ்வணைத் தேக்கத்திலுண்டாம் மீன், நீர்வாழ் பறவை, தாமரை அல்லி முதலியன என்னும் இவ்விலைப் பொருள்களின் உரிமை [48]அரசனைச் சார்ந்ததாகும். [49]அடிமையாளர், [50]பொருள் பெற்றுப் பணி செய்வோர், [51]உறவினர் என்னும் இவர்கள் தம்மைக் காப்பாற்றுவோர் சொற்படி நடக்கவில்லையாயின் அரசன் அன்னாரைப் பணிந்து நடக்கும்படி செய்யவேண்டும். [52]சார்பு அற்ற சிறுவர், முதியவர், நோயாளர், துன்புறுவோர் என்னும் இவர்களையும் மகப்பேறிலாத மகளிரையும் ஈன்றணிமைப்பட்ட குழந்தைகளையும் அரசன் காத்தல் வேண்டும்.

[53]ஒரு சிறுவனுக்குரிய பொருளை அவன் ஆட்சிபுரியும் பருவம் எய்தும் வரை கிராமத்திலுள்ள முதியோர்கள் தாம் [54]பயன்படுத்திக் கொள்ளலாகாது. கடவுளர்க்குரிய பொருளையும் [55]அடைதல் ஆகாது.

[56]ஒழுக்கக் கேடிலாத மனைவி மக்களையும், தாய் தந்தையரையும், பருவமடையாத சோதரரையும், கன்னிகையும், கைம்பெண்ணுமாகிய சோதரிமாரையும் ஆற்றலிருந்தும் எவன் காப்பாற்றவில்லையோ அவனுக்குப் பன்னிரண்டு [57]பணம் தண்டம் விதித்தல்

---

[48] அணைக்கட்டைப் பலர்கூடிச் செய்யினும் அதன்கண் நிறைந்த நீரில் உண்டாம் பொருள் வருவாய் அரசனைச் சாருமன்றி அவர்களுக்கு இல்லை என்பது கருத்து.

[49] அடிமையாளர்—வழியடிமை, விலையடிமை, ஊதிய அடிமை, தாயக்கூற்றடிமை எனப் பலதிறப்படுவர்.

[50] ஓரளவு பொருள் பெற்று அதனைத் திருப்பிக் கொடுக்குங்காறும் தலைவனுக்குப் பணிசெய்வோர்.

[51] உறவினர்—புதல்வர் முதலியோர்.

[52] சார்பற்ற—ஆதரவு இல்லாத. இவ்வடைமொழியைச் சிறுவர் முதலியோர்க்கும், மகளிர்க்கும், குழந்தைகளுக்கும் கூட்டுக.

[53] சிறுவன்—சார்பற்ற இளைஞன்.

[54] சிதையாமற் பாதுகாப்பதோடு இயலுமாயின் வளர்க்கவும் செய்யலாம் என்பது.

[55] என்றும் அடைதலாகாது என்பது கருத்து.

[56] ஒழுக்கக் கேடிலாத என்னும் அடையை மனைவி முதலிய எல்லோர்க்கும் ஏற்றிக்கொள்க.

[57] பணம்—பதினாறு மாடங்கொண்டது.

வேண்டும். "[58]ஒழுக்கக் கேடிலாத" என்னும் அடை தாய்க்கு இன்று.

மனைவி மக்களுக்கு, [59]வேண்டுவன செய்யாமல் துறவு கொள்ளுபவனுக்கும், மகளிரைத் துறவு பூணும்படி தூண்டுகிறவனுக்கும் [60]பிரதம சாகசம் என்னும் தண்டம் விதித்தல் வேண்டும். மகளிரோடு புணர்தற்குரிய ஆற்றலிலாதவன், [61]அறமுணர்ந்தார் உடன்பாடு பெற்றுத் துறவு கொள்ளலாம்; [62]இன்றேல் சிறைப் படுத்தப்படுவன்.

வானப்பிரத்தன் அல்லாத துறவியும், [63]நல்லோர் குழுவல்லாத கூட்டமும் [64]கூடித் தொழில் புரியும் குழுவல்லாத [65]சங்கேதக் குழுவும், அரசனது நாட்டில் [66]இருத்தலாகாது.

[67]அந்நாட்டில் விளையாடுதற்குரிய இளமரக்காவும், நாடக அரங்கும் இருத்தலாகாது. கிராமங்களில் [68]அவற்றிற்கு இடமில்லாமையால், நட்டம் ஆடுவோன், கூத்தன், பாணன், இசைக்கருவி

---

58 தாய், ஒழுக்கக் கேடுடையளாயினும் காப்பாற்றவேண்டும் என்பது கருத்து.

59 வேண்டுவன—வாழ்க்கைக்கு வேண்டிய உண்டி உறையுள் முதலியன.

60 "பிரதம சாகசம்" என்பது இருநூற்றைம்பது பணம் இறுக்கும்படி விதிக்கப்படும் தண்டம்.

61 அறம் உணர்ந்தார்-அறநூலுணர்ந்தாரும், நீதிமன்றத்தலைவருமாவர்.

62 இங்ஙனம் உடன்பாடு பெறாமல் துறவுகொள்வானாயின், அவன் சிறைக்கோட்டத்தில் சேர்ப்பிக்கப்படுவன் என்பது கருத்து.

63 நல்லோர்—அரசனுக்கும், நாட்டிற்கும் நலஞ்செய்வோர்.

64 தொழில்—அரசனுக்கும், குடிமக்களுக்கும் பயன்தரும் அணைகட்டுதல் முதலிய செயல்கள்.

65 சங்கேதக்குழு—அரசனுக்குத் தீங்கு விளைக்கும் குறிக்கோளுடைய கூட்டம்.

> " பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
> கொல்குறும்பும் இல்லது நாடு " (735)

என்னும் திருக்குறளும், 'பல்குழுவும்' என்பதற்குச் 'சங்கேத வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டம்' என்று பரிமேலழகர் எழுதிய உரைக் குறிப்பும் ஈண்டுக் கருதத்தக்கன.

66 ஈண்டுக் கூறப்பட்டார்பால் ஐயுறத்தக்க ஒழுக்கமுண்மையே இருத்தல் கூடாதென்பதற்குக் காரணமாகும்.

67 ஈண்டும் " நாட்டிலிருத்தலாகாது " என்பதற்குப் பின்வரும் கருத்து கட்கியைய அந்நாட்டிலுள்ள உழவுத் தொழிலுக்குரிய கிராமங்களில் இருத்தலாகாது என்று பொருள் கொள்ளல் வேண்டும்.

68 அவை அமைக்கப்படாமையால்.

யியக்குவோன், பௌராணிகன், [69]விளையாடுவோன் என்னும் இவர்களால் [70]காரியக்கேடு ஏற்படாது. கிராமத்து மக்கள் [71]தொழிலிடங்களில் ஈடுபடுதலால் பொருள், [72]வலிய செயல், [73]மரப் பொருள், கூலம் [74]நெய் முதலியன என்னும் இவை பெருக்கம் எய்தும்.

### சுலோகங்கள்

(1) அரசன் பகைப்படைகளாலும், காட்டுத் தலைவராலும், பிணி வறுமைகளாலும் துன்புறும் தன்னாட்டை அத்துன்பத்தை ஒழித்துப் பாதுகாத்தல் வேண்டும். பொருட் செலவுண்டாக்கும் விளையாட்டுக்களைத் தடைப்படுத்தல் வேண்டும்.

(2) [75]தண்டம், [76]கருமம், இறைப்பொருள் என்னும் இவற்றால் உழவுத் தொழிற்கு இடையூறு வராமலும், கள்வராலும், புலி, பாம்பு முதலிய கொடிய உயிர்களாலும், பிணிகளாலும், ஆவினங்களுக்குத் துன்பம் நேராமலும் பாதுகாத்தல் வேண்டும்.

(3) அரசன், தன்னைச் சார்ந்தவர், வினை செய்வோர், கள்வர், எல்லை காவலர் என்னும் இவராலும் [77]கொடிய விலங்குகளாலும்

---

69 விளையாடுதல்—கழைக்கூத்தாடல் முதலியன.

70 காரியக்கேடு—உழவு முதலிய தொழிற்கு இடையூறு.

71 தொழிலிடங்கள்—நன்செய், புன்செய் முதலிய உழவுத் தொழிற்குரிய இடங்கள்.

72 வலிய செயல்—பலர்—ஒன்றுகூடிச் செய்யுங்காரியம்.

73 மரப்பொருள் — பலகை முதலியவற்றால் ஆக்கப்படும் பேழை முதலியன.

74 நெய் முதலியன—எண்ணெய், கருப்பஞ்சாறு முதலியனவுமாம்.

75 தண்டம் முதலியவற்றை அளவின்மிக விதித்தலால் உழவுத் தொழிற்கு இடையூறு நேரும் என்பது கருத்து.

76 கருமம்—கூலிகொடாமற் செய்வித்துக்கொள்ளும் ஊழிய வேலை.

77 கொடிய விலங்குகள் நாட்டில் மிகுதியாக இருக்குமாயின் வாணிகத் தொழினிமித்தம் போக்கு வரவு செய்ய இயலாதாகலின் அவற்றால் நேரும் குறைகளையும் விலக்கவேண்டும் என்பது கருத்து.

வாணிகத் தொழிற்குக் குறை நேராமல் காத்தல் [78]வேண்டும்.

(4) இவ்வாறு முன்னரே அமைந்துள்ள மரக்காடு, யானைக் காடு, அணைக்கட்டு, ஆகரம் என்னும் இவற்றை அரசன் பாது காப்பதோடு, புதியனவாகவும் அமைத்தல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் முதற்பிரகரணம்
"நாடமைத்தல்" என்னும் இருபத்திரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[78] இவ்விரண்டாம் மூன்றும் சுலோகங்களின் கருத்துக்களோடு,

*"மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத்*
*தானதனுக்கு இடையூறு தன்னால்தன் பரிசனத்தால்*
*ஊனமிகும் பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்*
*ஆனபயம் ஐந்தும்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ"*

(பெரியபுராணம்-திருநகரச்சிறப்பு 36-வது செய்யுள்)

என்னும் செய்யுட் கருத்துக்கள் ஒப்புநோக்கி இன்புறற்பாலன.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இரண்டாம் பிரகரணம்—[1]உழவிலா நிலத்தைப் பயனுற அமைத்தல்

## இருபத்துமூன்றும் அத்தியாயம்

அரசன் உழவுக்குத் [2]தகுதியில்லாத நிலத்தில் [3]பசுக்களின் நிமித்தம் [4]மேய்தனிலம் விடல் வேண்டும். [5]இயங்கியல் [6]நிலையியற் பொருள்களுக்கு அச்சம் விளையாதவாறு பாதுகாக்கப்படுவதும், இரண்டு குரோச அளவுட்பட்டதுமாகிய வனத்தை மறைபயில்தற் பொருட்டும் வேள்வி செய்தற் பொருட்டும் அந்தணர்க்கும், [7]தவ வனத்தைத் தவஞ்செய்வார்க்கும் கொடுத்தல் வேண்டும். ஒரு வாயிலையும், நாற்புறமும் அகழியின் பாதுகாப்பையும், இனிய பழம் செடி பூந்துணர்களையும், முள்ளில்லாத மரங்களையும், ஆழமில்லாத நீர் நிலைகளையும், [8]அடக்கமுள்ள மான் முதலிய விலங்கு களையும், பல், [9]உகிர் களையப்பட்ட புலி முதலியவைகளையும், வேட்டையாடுதற்குத் தக்க களிற்றி யானை பிடியானைக் கன்று களையும் உடைய அவ்விரண்டு குரோச அளவுள்ள விலங்குக் காட்டை அரசன் தன் விளையாட்டு நிமித்தம் அமைப்பித்துக் கொள்ளல் வேண்டும்.

---

### 23-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உழவிலா நிலம்—வேளாண்டொழிற்குத் தகுதியற்ற நிலம். முன்னைப் பிரகரணத்தில் மரக்காடு, யானைக்காடு முதலியன அமைத்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது. இதன்கண் அவற்றிற்குரிய இடம் வகுத்தலின் பிரகரணவியைபு புலனும்.

[2] தகுதியில்லாத நிலம்-மேடு, பள்ளம், மலை, பரல் நிலம் முதலியவை.

[3] பசு—ஈண்டு ஆ, எருமை, யாடு என்னும் இவற்றை உணர்த்தும்.

[4] மேய்தல் நிலம்—புல், நீர், நிழல், அமைந்த இடம் "விடுநில மருங்கிற் படுபுல்லார்ந்து" என்பது மணிமேகலை.

[5] இயங்கியற் பொருள்—மான் முதலியன.

[6] நிலையியற் பொருள்—மரம் செடி முதலியன.

[7] "இயங்கியல்" எனத் தொடங்கி "அளவுட்பட்டது" என்பது காறும் உள்ள அடையைத் தவவனத்திற்கும் கூட்டுக.

[8] அடக்கம்—மக்களோடு பழகுதலால் உண்டாம் சாந்தம்.

[9] உகிர்—நகம்.

[10]அணிமையிலாதல், [11]தகுதியான பிறிதோரிடத்திலாதல் [12]வேற்றிடத்திலிருந்து வந்த பலவகை விலங்குக் காட்டை அமைத்தல் வேண்டும்.

[13]குப்பியத் தலைவனைப் பற்றிய (அதிகரணம் 2. பிரகரணம் 17.) பிரகரணத்திற் சொல்லப்பட்ட [14]பொருள்களுக்குத் தனித்தனியே காடு அமைத்தல் வேண்டும். [15]மரத் தொழிற்குரிய காடுகளையும், அத்தொழில்களையும் அக்காட்டில் வாழ்வோர் அமைக்கக்கடவர்.

நாட்டின் எல்லைப் புறங்களில் காடு காவலரையுடைய யானைக் காட்டை அமைத்தல் வேண்டும். யானைக் காட்டுத் தலைவன் மலை, ஆற்றங்கரை, குளக்கரை, பிற நீர்வளமுள்ள நிலம் என்னும் இவ்விடங்களிலுள்ள யானைக் காடுகளை அவற்றின் வரம்பையும், உட்புகுதல் வெளிவருதற்குரிய வழிகளையும் அறிந்துகொண்டு யானைக் காட்டுக் காவலருடன் காத்தல் வேண்டும். [16]யானையைக் கொல்பவரைக் கொன்றுவிடல் வேண்டும். தானே இறந்த யானையின் இரண்டு தந்தங்களையும் கொண்டுவருபவனுக்கு நாலேகாற்பணம் பரிசிலாகக் கொடுக்கவேண்டும்.

யானைக்காட்டுத் தலைவர், யானைப் பாகன், யானைக் காலைக் கயிற்றால் பிணிப்போன், எல்லை காவலன், காட்டில் வாழ்வோன், யானைக்கு உணவுமுதலியன சமைப்போன் என்னும் இவர்களுடன் கூடி யானையினுடைய மூத்திர [17]புரீடங்களின் மணத்தால் மறைக்

---

[10] அணிமையில்—முற்கூறிய விலங்குக் காட்டிற்குச் சமீபத்தில்.

[11] தகுதியான பிறிதோரிடம் சேய்மையில் உள்ளதாயினும் என்பது கருத்து.

[12] வேற்றிடத்திலிருந்து வருதல்—வேடரால் துரத்தப்பட்டு வருதல்.

[13] குப்பியம்—இன்னதென்பதை இரண்டாம் அதிகரணம் பதினேழாம் பிரகரணத்திற் காண்க.

[14] பொருள்கள்—தேக்கு முதலிய அகக்காழனவாகிய மரங்களும், மூங்கில் முதலிய புறக்காழனவாகிய புற்களும், மல்லிகை முல்லை முதலிய கொடி செடிகளுமாம்.

[15] மரத்தொழில்—பலகை முதலியவற்றால் செய்யும்தொழில்.

[16] யானையைக் கொல்பவர்—மலையில் வாழும் புளிஞரும், வேட்டுவருமாவர்.

[17] புரீடம்—மலம்.

கப்பட்ட உடலுடையராய், சே மரக்கிளைகளால் தம் உடம்பை மறைத்துக்கொண்டு ஐந்து, அல்லது ஏழு களிறு படுக்கும் பிடிக ளோடு திரிந்து யானை படுத்தல், இருத்தல், அடிச்சுவடு, இலண் டம், கோடுகுத்தி விளையாடல் என்னும் குறிகளால் யானைக் கூட்டம் திரியும் இடங்கள் எல்லாவற்றையும் அறிந்து கொள்ளல் வேண்டும்.

கூட்டத்துடன் திரிவது, தனிமையாகத் திரிவது, கூட்டத்தி னின்றும் வெளிப்பட்டது, [18]யூதபதி, கொடுங்குணமுடையது, மதச் செருக்குடையது, [19]கன்று, தறியினின்றும் பெயர்ந்தது என் னும் பலவகைப்பட்ட யானைகளையும் [20]கணக்குப் புத்தகமூலம் அறிந்து கொள்ளல் வேண்டும். அரசரது வெற்றிக்கு யானை சிறந்த கருவியாதலின், யானைப்படைத்தலைவர் கண்காணிப்பில் சிறந்த இலக்கணமும் செயலுமுடைய யானைகளைப் பிடித்தல் வேண்டும். என்னை ? மிகப் பெருத்த உடலும், மற்றை உயிர்களை அழிக்கவல்ல செயலும் உடைய யானைகள் பகைவருடைய படை வகுப்பு அரண் பாசறை என்னும் இவற்றை அழித்தொழிக்கும் ஆதலின்.

## சுலோகங்கள்

(1—2) கலிங்கம், அங்கம், சேதி, கரூசம் என்னும் இந்நாடு களிலும், கீழ்த்திசையிலும் தோன்றிய யானைகள் தலையாகவும், தசார்ண நாட்டிலும், மேற்றிசையிலும் தோன்றிய யானைகள் இடையாகவும், சௌராட்டிரம், [21]பஞ்சநதம், என்னும் நாடுகளில் தோன்றிய யானைகள் கடையாகவும் கருதப்படுவன. எல்லா யானைகளுக்கும் தொழிற்பயிற்சியால் தறுகண், விரைவு, தோற் றப் பொலிவு என்னும் இவைகள் வளர்ச்சி யெய்துவனவாம்.

இரண்டாம் அதிகரணம் இரண்டாம் பிரகரணம்
"உழவிலா நிலத்தைப் பயனுற அமைத்தல்" என்னும்
இருபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

18 யூதபதி—யானைக் கூட்டத்திற்குத் தலைமையான யானை.

19 கன்று—பத்தாண்டுடையது.

20 கூட்டத்துடன் திரிவது முதலிய யானைவகைகளில் இவ்வளவு இவ்வளவு உள்ளன என்று கணக்குப் புத்தகத்தில் எழுதித் தெரிந்து கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

21 பஞ்சநதம் என்பது ஈண்டுப் "பஞ்சாப்" நாட்டைக் குறிப்பதாம்.

# இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## மூன்ரும் பிரகரணம்—[1]அரண் அமைத்தல்

## இருபத்துநான்காம் அத்தியாயம்

நாட்டின் இறுதியில் நாற்புறத்தும் போர்க்குத் தகுதியாக [2]இயற்கையின் அமைந்த அரண்களை அரண்களாக அமைத்துக் கொள்ளல் வேண்டும். அவ்வரண்களாவன :– [3]நடுவே தீவுடையதும், சூழ்ந்திருக்கும் [4]பள்ளங்களும் ஆகிய நீரரணும், [5]மலைக் கற்களும் குகைகளும் ஆகிய மலையரணும், [6]நீரும் புல்லும் இல்லாத நிலமும் [7]களர்நிலமுமாகிய நிலவரணும், [8]வழங்குதற்கரிய சேற்று நீரையுடைய காடும் செடியடர்ந்த காடுமாகிய காட்டரணும் [9] என்பனவாம். இவற்றுள், நீரரணும் மலையரணும் நாட்டிற்குக் காவலாக அமைந்தனவாம். நிலவரணும் காட்டரணும் காட்டிற்குக் காவலாதலோடு இடையூறு நேர்ந்துழி அரசன் ஓடி ஒளிதற்கும் இடனுகும்.

நாட்டின் நடுவண்–மனை நூல் வல்லவரால் நல்லதெனக் கண்டதும், [10]யாறுகளின் கலப்புடையதுமாகிய நிலப்பரப்பில், அவ்

---

### 24-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசியலுறுப்புக்கள் ஏழனுள் மூன்ருவதாகிய நாட்டின் இயல்பு 1—2ம் பிரகரணங்களிற் கூறப்பட்டது. நான்காவதாகிய அரணமைத்தல் ஈண்டுக் கூறப்படுதலின் பிரகரணவியைபு அறிக.

[2] அரண்கள்—இயற்கையரணும் செயற்கையரணும் என இருதிறப்படும். அவற்றுள் ஒரு நாட்டிற்கு இயற்கையின் அமைந்த அரண்கள் இன்னவெனக் கூறுகின்ருர்.

[3] நடுவே தீவுடையது என்றதனல் நாட்டைச் சூழ்ந்துள்ள பேராறுகள் ஒருவகை நீரரண் என்பது போதரும்.

[4] பள்ளங்கள்—இயற்கையின் அமைந்த நீர்நிலைகள்.

[5] மலைக்கற்கள்—சிறு குன்றுகள்.

[6] நீரும் புல்லும் இல்லாத நிலம்—பாலை நிலம்.

[7] களர் நிலம்—உவர் நிலம்.

[8] வழங்குதற்கரிய—மக்கள் நடத்தற்கு இயலாத.

[9] ஈண்டுக் கூறப்பட்ட நீரரண் முதலிய நான்கும் ஒவ்வொன்றும் இரண்டிரண்டாக எட்டு வகைப்படும் என்பது கருத்து.

[10] யாறுகளின் கலப்பு—பல யாறுகள் ஒன்றுகூடல்.

விடத்தின் அமைப்புக் கேற்றவாறு வட்டம் நீளம் சதுரம் என்னும் வடிவங்களில் ஒன்ருகவும், [11]வலஞ்சுற்றும் நீரையுடையதாகவும், [12]பண்டப் பேழைகளின் கட்டு அவிழ்த்தற்குரியதாகவும், [13]நிலவழி நீர்வழிகளையுடையதாகவும் நீர் வற்ருத மடு ஓடை ஊருணி என்னும் நீர் நிலைகள் சூழவிருக்கும்படி பொருட்பெருக்க விளைவிற்கு இடமுகிய [14]தானீயம் என்னும் நகரத்தை அமைத்தல் வேண்டும். அந்நகரத்தைச் சூழப் [15]பதிஞன்கு பன்னிரண்டு பத்துக் கோல் அளவு அகலமும், அவ்வகலத்திற் காற் கூறு அல்லது அரைக் கூறு குறைந்த [16]ஆழமும், அவ்வகலத்தின் மூன்றில் ஒரு கூறு அளவு அடியகலமும், கற்படுக்கப்பட்ட ஒத்த அடிப்பரப்பும், கற்களாலும் இட்டிகைகளாலும் அமைக்கப்பட்ட பக்கச் சுவர்கள் உடையனவாகவும், ஊற்றுநீர் அல்லது [17]வேற்றுநீரால் நிறைந்தனவாகவும், நீர் வெளிப்படும் வழிகளையும் தாமரை முதலை முதலியவற்றையும் உடையனவாகவும், ஒன்றுக் கொன்று [18]ஒரு கோல் அளவு இடை நிலம் உடையனவாகவும் மூன்று அகழிகள் அமைத்தல் வேண்டும்.

---

[11] நகரத்தின் புறத்தே ஓடும் யாறு வலஞ்சுற்றி ஓடுமாறு நகரம் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[12] பண்டப் பேழை—விலைச்சரக்குகள் பொதிந்த மூடை கூடை பெட்டி முதலியன. இலச்சினை இடப்பட்டு வரும் அப்பண்டங்களைப் பிரித்தெடுக்குமிடம் அந்நகரம் என்பது கருத்து.

[13] நிலவழி—கற்படுத்தசாலை (Road) முதலியன. நீர்வழி—தோணித்துறை, பாலம் முதலியன. கழிவு நீர் வழிந்தோடுதற்குரிய கால்களுமாம்.

[14] தானீயம்—இந்நகரத்தின் அமைப்பை இவ்வதிகரணம் முதற் பிரகரணத்தில் காண்க.

[15] அமைக்கப்படும் மூன்றிற்கும் முறையே பதிஞன்கு பன்னிரண்டு பத்துக்கோல் அகலம் இருத்தல் வேண்டும் என்பது.

[16] ஆழத்தையும் அடியகலத்தையும் அவ்வவ் வகழிக்குரிய அளவினின்றும் கணக்கிட்டுக் கொள்க.

[17] வேற்றுநீர்—ஆறு முதலியவற்றினின்றும் கொணர்ந்த நீர்.

[18] ஓரகழிக்கும் மற்றோரகழிக்கும் இடையே ஒரு கோல் அளவு நிலப் பகுதி விடல் வேண்டும் என்பது.

அகழியினின்றும் [19]நான்கு கோல் [20]இடையிட்டு ஆறு கோல் உயரமும், அதற்கிருமடங்கு அகலமும் உடையதாகவும், [21]தடைப் படுத்தப்பட்டும், அடி அகன்று நுனி சுருங்கியதாகவாதல், அடியும் நுனியும் ஒத்த அகலமுடையதாகவாதல், [22]அடியும் நுனியும் சுருங்கி இடைப்பகுதி அகன்றதாக வாதல், யானைகளாலும், எருது களாலும் துவைத்துத் [23]துகளாக்கப்பட்டு [24]முட்செடிகளும் நச்சுக் கொடிகளும் அடர்ந்திருக்கும்படி அகழியினின்றும் தோண்டிய மண்ணால் மதிற்சுவர்க்கு ஆதாரமாக அடிப்படை யமைத்தல் வேண்டும். எஞ்சிய மண்ணைக் கொண்டு மனைக்கட்டுக்குரிய பள்ளமான இடங்களைத் தூர்த்தல் வேண்டும். அவ்வடிப்படை யின் மேல் அகலத்தினும் இருமடங்கு உயரமுடையதாக [25]ஒற் றைப் படையாக அல்லது இரட்டைப்படையாக அமையப் [26]பன் னிரண்டு முழத்திற்குமேல், இருபத்து நான்கு முழம் வரைச் செங் கற்களால் மதிற்சுவர் எடுப்பித்தல் வேண்டும். தேர்ச் செலவிற் குத் தக்க மேற் பரப்புடையதாகவும், [27]பனையின் அடிப்பாகம் முரசு குரங்குத்தலை என்னும் இவை போன்ற வடிவங்களால் நுனிப் பகுதி அமைந்ததாகவும் பெரிய கற்களைக்கொண்டு [28]கல்

---

[19] நான்கு முழம் கொண்டது ஒரு கோலாகும்.

[20] இடையிட்டு—அகழியின் உட்புறத்தில், அதற்கும் மதிற்சுவரின் அடிப்படைக்கும் இடையே நான்கு கோல் அளவு நிலம் விடல்வேண்டும் என்பது.

[21] தடைப்படுத்தல்—உள்ளே பொதியப்பட்ட மண் சரிந்து விழாதபடி கல் முதலியவற்றால் சுவர் எடுத்துத் தடைசெய்தல்.

[22] இது முட்டை வடிவமானது.

[23] துகளாக்கல்—மண் கட்டிகள் நுறுங்கி இறுகுதற் பொருட்டாம்.

[24] பகைவர் அணுகாவாறு முட்செடிகளையும், நச்சுக்கொடிகளையும் மிகுதியாக உண்டாக்கல் வேண்டும் என்பது.

[25] ஒற்றைப்படை—பதின்மூன்று பதினைந்து முதலியன. இரட்டைப் படை—பன்னிரண்டு பதினன்கு முதலியன.

[26] பன்னிரண்டு முழத்திற்கு மேல் என்பது உயரத்தின் அளவைக் குறிப்பதாகும்.

[27] மதிற்சுவரின் நுனிப்பாகம் பனையின் அடி முதலியன போன்ற உறுப் புக்கள் அமையும்படி செங்கல் சுண்ணம்புகளால் இயற்றல் வேண்டும் என் பது கருத்து.

[28] முற்கூறியவாறு செங்கல்லாலன்றிக் கற்களாலும் சுவரெடுக்கலாம் என்பது.

லுருவத்தினும் மதிலை அமைக்கலாம். மரங்களைக் கொண்டு அறவே அமைத்தலாகாது. அவற்றில் நெருப்பு [29]மறைந்திருத்தலின்.

அகலத்திற்கு ஒத்ததாகவும் [30]உயரத்திற்கு ஏற்றவாறு [31]இறங்குதற்குரிய படிக்கட்டுக்களை யுடையதாகவும் ஒன்றுக்கொன்று முப்பது கோல் இடைவெளி விட்டு [32]அட்டாலம் அமைத்தல் வேண்டும். இரண்டு அட்டாலங்களின் நடுவண் [33]இரண்டடுக்குள்ள [34]அரமியத்தோடு கூடியதாகவும், அகலத்தினும் அரைக் கூறு மிகுதியான நீளமுள்ளதாகவும் [35]பிரதோளி அமைத்தல் வேண்டும்.

அட்டாலத்திற்கும் பிரதோளிக்கும் நடுவண் மூடித் திறத்தற் குரிய துளைகளை உடைய பலகைகளால் இணைக்கப்பட்டு மூன்று வில்லாளிகள் இருத்தற்குரியதாக [36]இந்திரகோசம் அமைக்கப் படல் வேண்டும்.

மதிற்சுவரில் உள்ள [37]இடை வெளிகளில் இரண்டு முழ அகலமும் அதற்கு [38]நான்கு மடங்கு நீளமும் உள்ளதாகப் [39]பக்கத்

---

29 எளிதில் நெருப்புப் பற்றும் என்பது கருதி இவ்வாறு கூறப்பட்டது.

30 அட்டாலக் கட்டிடத்தின் உயரத்திற்கு ஏற்றவாறு படிக்கட்டுகளின் உயரம் அகலங்களைக் கணக்கிட்டு அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

31 "அவக்ஷேப சோபானம்" என்பது முதனூல். இதற்கு இறங்குதற் குரிய படிக்கட்டு என்று உரையாசிரியர் கூறுகின்றார். "க்ஷேப" என்னுஞ் சொல் அசைதல் என்னும் பொருளுடையது. ஆதலால அசையும் ஏணிப்படி எனவும் பொருள் கொள்ளலாம்.

32 அட்டாலம்—படைவீடு.

33 இரண்டடுக்கு—கட்டிடத்தின் கீழ்த்தளமும் மேற்றளமும்.

34 அரமியம்—நிலா முற்றத்தோடு கூடிய தவள மாளிகை; 'சந்திரன் ஒளிதிகழ் தவள மாளிகை' என்பர் கம்பர். (நகரப்படலம்)

35 பிரதோளி—இடைகழி போன்ற வீதி; பிரதோளி என்பது ஒரு வகை இல்லம் என்று உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

36 இந்திரகோசம் — மதிலுக்கு வெளிப்புறத்து நிகழும் செய்தியை அறிந்துகொள்ளுதற்கும் வில்லாளிகள் தங்கிக் காவல் செய்தற்குமாக அமைக்கப்படும் ஒரு மதிலுறுப்பு.

37 இடைவெளி — அட்டாலகம் பிரதோளி இந்திரகோசம் என்னு மிவற்றிற்கு இடை இடையே உள்ள வெளியிடங்கள்.

38 நான்கு மடங்கு—எட்டு முழம்.

39 பக்கம்—மதிற்சுவரின் அருகு.

தில் [40]தேவபதத்தை அமைத்தல் வேண்டும். ஒரு கோல் அல்லது இரண்டு கோல் அகலமுள்ளனவாக ஏறியிறங்குதற்குரிய [41]இடங்களை அமைத்தல் வேண்டும். பிறர் அறிதற்கியலாத இடத்தில் [42]ஏவறையையும் [43]பொந்துத் துளையையும் அமைத்தல் வேண்டும். [44]வெளிப்புறத்தில் [45]முழங்கால்முறி [46]முத்தலைக்கழு, கேணி, இருப்புச் சலாகை, [47]படுகுழி, இருப்பு முட்கயிறு, [48]அராமுதுகென்பு, [49]பனையோலை [50]கோட்டுப்பொறி, [51]நாய்ப்பல், [52]தாழக்கோல், [53]கணையமரம், [54]காலீடு, [55]வறையோடு [56]நச்சுநீர்க்குட்டை என்னும் பொறிகள் மறைந்துள்ள [57]வழிகளை அமைத்தல் வேண்டும்.

---

[40] தேவபதம்—தேவர்கள் போக்கு வரவு செய்தற்குரிய வழிபோல்வது; இது மறைவாகச் செல்லும் வழியாகும்.

[41] மதிலின் உட்புறத்தில் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[42] ஏவறை—மறைந்து நின்று பகைவர் மேல் அம்பெய்தற்கும் அவர் எய்யுங்கால் மறைந்துகொள்ளுதற்கும் உரியது.

[43] பொந்துத்துளை—மரப்பொந்து போன்ற துளை. அரணுக்கு வெளிப்புறத்தே உள்ள பகைவர் செய்தியை மறைந்து அறிந்துகொள்ளுதற்கு ஏவறைக்குப் பக்கத்தில் அமைக்கப்படுவது.

[44] வெளிப்புறம் என்பது ஈண்டு அகழிக்கு வெளிப்புறத்தை உணர்த்தும்.

[45] வன்மைமிக்க மரத்தறிகளாலாகிய பொறி.

[46] வன்மைமிக்க மரத்தாலும் இரும்பினாலும் ஆக்கப்படும் சூலம்.

[47] படுகுழி—சருகு புல் முதலியவற்றால் மூடப்பட்ட பள்ளங்கள்.

[48] அராமுதுகென்பு—பாம்பின் முதுகெலும்பு போன்ற கூரிய இருப்பு முட்களாலாகிய பொறி.

[49] பனையோலை — பனையோலை உருவமாகச் செய்யப்பட்ட இரும்புப் பொறி.

[50] கோட்டுப் பொறி—மூன்று முனைகளையுடைய இரும்புப் பொறி.

[51] நாய்ப்பல்—நாயின் பற்களைப்போன்ற பொறி.

[52] தாழக்கோல் உருவினமைத்த பொறி.

[53] கணையமரம்—தடைப்படுத்துதற் பொருட்டுக் குறுக்காகக் கிடத்தும் மரம்.

[54] காலீடு-ஒற்றைக்கால் அளவில் பதிதற்குரிய சேறு நிறைந்த பள்ளம்.

[55] வறையோடு—வறையோடு போல் நெருப்பிற் காய்ச்சப்பட்ட இரும்புச்சட்டி போன்ற பொறி.

[56] நச்சுநீர்க் குட்டை—உண்பார்க்குத் தீங்கு விளைக்கும் நீர் நிறைந்த சிறு குளம்.

[57] ஈண்டுக் கூறப்பட்ட இரும்பு மரப் பொறிகளையும் கேணி முதலியவற்றையும் அரணுக்கு வெளிப்புறங்களில் உள்ள வழிகளில் அமைத்து வைத்தல் வேண்டும் என்பது கருத்து.

மதிற்சுவரின் [58]இருபுறத்தும் [59]ஒன்றரைக்கோல் அளவு அகலமுள்ள மண்டபம் எடுத்துப் பிரதோளியின் [60]ஆறு தளங்களி னிடையில் [61]ஐந்து கோல் முதல் ஒவ்வொன்று கூடுதலாக எட்டுக் கோல் வரை [62]சதுர வடிவில் கோட்டை வாயில் அமைத்தல் வேண்டும். ஒரு சாரார் [63]இரண்டுகோல் அளவென்பர். மற்றொரு சாரார் [64]நீளத்தினின்றும் ஆறில் ஒரு கூறுதல் எட்டில் ஒரு கூறு தல் மிகுதியாக இருக்கலாம் என்பர்.

தூணின் உயரம் [65]பதினைந்து முழம் முதல் ஒவ்வொன்று கூடுதலாகப் பதினெட்டு முழம் வரை இருத்தல் வேண்டும்.

தூணின் சுற்றளவு [66]நீளத்தில் ஆறில் ஒரு கூறு இருத்தல் வேண்டும். சுற்றளவின் இரு மடங்கு நிலத்திற் புதைத்தல் வேண்

---

[58] இருபுறம்—உட்புறமும் வெளிப்புறமுமாம்.

[59] மதிற்சுவரின் இருபக்கங்களினின்றும் ஒன்றரைக்கோல் அகலமாகக் கொள்ளல் வேண்டும்.

[60] ஈண்டுக் கூறப்பட்ட ஆறு தளங்கள் வாயிலுக்கு இருமருங்கும் உள்ளவை. ஒருமருங்கு மூன்றும் மற்றொரு மருங்கு மூன்றுமாகக் கொண்டு அவற்றின் இடையே வாயில் வழி அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[61] வாயிலின் அகலம் ஐந்து கோல் முதல் எட்டுக்கோல் வரை ஏற்ற வாறு அமைத்துக்கொள்ளலாம் என்பதும், ஐந்துக்கு மேற்பட்ட அளவு முழுக்கோலாக இருத்தல் வேண்டும் என்பதுமாம்.

[62] சதுரம்—ஈண்டு நாற்கோணத்தைக் குறிப்பது.

[63] ஈண்டுக் கூறிய இரண்டு கோல் அளவும் கோட்டை வாயிலுக்கென அறிக.

[64] நீளம் ஈண்டு மதிற்சுவரின் அகலமாகும். அவ்வகலத்தின் ஆறிலொரு கூறு அல்லது எட்டில் ஒருகூறு மிகுதியாகச் சேர்த்துக் கோட்டை வாயிலின் அகலம் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து. இருபத்திநான்கு அங்குலம் கொண்டது ஒரு முழமாகவும், நான்கு முழங்கொண்டது ஒரு கோலாகவும் கணக்கிட்டுக்கொள்ளல் வேண்டும். ஈண்டுக் கூறிய அளவைகளை நோக்கக் கோட்டை வாயிலின் அகலம் இரண்டு கோல் அல்லது ஐந்து கோல் முதல் எட்டுக் கோல் வரை இருத்தல் வேண்டும் என்பது புலனும்.

[65] பன்னிரண்டு முழ உயரமுள்ள மதிற்சுவர்க்குக் காற்கூறு முதல் அரைக்கூறு வரை மிகுத்துப் பதினைந்து முழம் முதல் பதினெட்டு முழம் வரை உயரமுள்ள தூண் நிறுத்தலாம் என்பது கருத்து.

[66] பதினைந்து முழம் உயரமுள்ள தூணிற்குச் சுற்றளவு இரண்டரை முழமாகவும், நிலத்திற் புதையும் பகுதி ஐந்து முழமாகவும் தூணின் உச்சி அரையே அரைக்கால் முழமாகவும் இருத்தல் வேண்டும் என்பது கருத்து.

டும். தூணின் உச்சி சுற்றளவின் நான்கில் ஒரு கூறு இருத்தல் வேண்டும்.

கோட்டைவாயிலின் முதற்றளத்தின் அகலத்தை ஐந்து கூறுக்கிச் [67]சாலை கேணி அறை வீடு என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். [68]பத்திலொரு கூறு அளவு அகலமுடையனவும், மத்தவாரணப் படிவங்களை உடையனவும் கட்டில் வடிவினவுமாகிய இரண்டு [69]தெற்றிகளையும் [70]இடைவெளியில் நுழைவெளிகளையும் அமைத்தல் வேண்டும். இரண்டாவது மேற்றளம் முதற்றளத்தின் உயரத்தில் அரைக்கூறு உயரமுடையதாகவும் சிறிய தூண்களை உடையதாகவும் அமைத்தல் வேண்டும். மூன்ருவது மேற்றளம் [71]அரை மனையளவு அகலமுடையதாகவாதல் [72]மூன்றில் ஒரு கூறு அகலமுடையதாகவாதல், இருத்தல் வேண்டும். [73]செங்கல்லாற் கட்டப்பட்ட பக்கங்களையும், இடப் புறத்தில் வலஞ்சுற்றும் படிகளையும் [74]மற்ருெரு புறத்தில் சுவரில் மறைவான படிகளையும் அமைத்தல் வேண்டும்.

வாயிலின் உச்சி இரண்டு முழ அளவினதாதல் வேண்டும்.

---

[67] ஐந்து கூருகச் செய்யப்பட்ட அகலத்தின் நடுக்கூற்றில் கேணியையும், அக்கேணியின் இருமருங்கிலும் சாலைகளையும், அச்சாலைகளின் பக்கத்தின் எஞ்சி நின்ற கடைக்கூறுகளில் அறைவீடுகளையும் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து. சாலை—நடைவழி.

[68] வாயிலின் அகலத்தில் பத்தில் ஒரு கூறெனக் கொள்க.

[69] தெற்றி—திண்ணை. வாயின் முகப்புகளின் இருமருங்கும் இரண்டு திண்ணைகள் கட்டில் வடிவினவாக எடுத்து அவற்றில் யானை உருவங்களை அமைத்தல் வேண்டும் என்பது.

[70] சாலைக்கும் அறைவீட்டுக்கும் இடையில் நுழைவழிகளை அமைத்தல் வேண்டும் என்பது.

[71] ஒரு மனையின் அளவு மூன்று கோல் என்பர் ஆதலின் அறை மனையின் அளவு ஒன்றரைக் கோலாகும்.

[72] முதற்றளத்தின் அகலத்தில் மூன்றிலொரு கூறென்பது கருத்து.

[73] "செங்கலாற் கட்டப்பட்ட" என்பது முதல் "அமைத்தல் வேண்டும்" என்பது வரையுள்ள தொடர்கள் மூன்று தளத்திற்கும் உரியனவாகக் கொள்ளல் வேண்டும்.

[74] மற்ருெருபுறம்—வலப்புறம்; ஈண்டுக் கூறப்பட்ட மூன்று தளங்களும் கோட்டை வாயிலின் கோபுர தளங்களாகக் கருதத்தக்கன.

[75]ஐந்தில் மூன்று கூறு அளவு அகலமுள்ள கதவுகள் இரண்டு இணைக்கப்படல் வேண்டும். கதவு ஒவ்வொன்றற்கும் இரண்டிரண்டு தாழக்கோல்கள் அமைத்தல் வேண்டும். கதவுக்[76]குடுமிகள் ஒரு முழ நீளம் இருத்தல் வேண்டும். [77]சிறுவழி ஐந்து முழ உயரம் இருத்தல் வேண்டும். [78]யானைத்தாழ் நான்கு அமைத்தல் வேண்டும். (கோட்டை வாயிலினின்றும் இறங்குதற் பொருட்டு) வாயிலகலத்தின் [79]அரைக்கூறு அளவு [80]யானை நகம் அமைத்தல் வேண்டும். [81]அது கோட்டை வாயிலுக்கு ஒத்த அகலமுடையதாகல் வேண்டும். போக்கு வரத்திற்குரிய [82]சாதனம் திட்பமுடையதாகவும் [83]நீர் இல்லாதவிடம் [84]வன்னிலம் ஆகவும் இருத்தல் வேண்டும்.

[85]மதிற்சுவர்க்கு ஒத்த அளவில் வாயிலமைத்து அதன்

---

[75] கோட்டை வாயிலகலத்தின் அளவில் ஐந்தில் மூன்று கூறெனக் கொள்ளல் வேண்டும்.

[76] குடுமி-கதவுகளுக்கு ஆதாரமாக மேலும் கீழும் நீண்டிருக்கும் பகுதி.

[77] வாயிற்குரிய கதவு மிகப் பெரிதாகலான் அடிக்கடி மக்கள் போக்கு வரத்து செய்தற்கு அக்கதவின் நடுவண் சிறு வாயில் அமைத்தல் வேண்டும் என்பது.

[78] யானைத்தாழ்—வாயிற் கதவுகளுக்கிடப்படும் பெரிய தாழக் கோல்.

[79] கோட்டை வாயிலின் அகலம் ஐந்து கோல் அளவாயின் அதன் அரைக் கூறு இரண்டரைக் கோலாகும்; இவ்வளவு யானை நகத்தின் பரப்பிற்கென உணர்க.

[80] யானை நகம்—கோட்டை வாயிலினின்றும் நிலத்தினிலிறங்குதற்குச் சரிவாக அமைக்கப்படும் மண்மேடு; இஃது யானையின் நகம்போலச் சரிந்த வடிவினதாகலின் "யானை நகம்" எனப்பட்டது. யானையால் குத்தித் தகர்க்கமுடியாத வன்மையுடையதாகலின் யானை நகம் எனப்பட்டதெனினும் அமையும்.

[81] அது—அம்மண்மேடு.

[82] சாதனம்—அகழியைக் கடத்தற்கு மரம் முதலியவற்றால் அமைக்கப் படுவது. இதனை இக்காலத்தில் "பாலம்" என்று கூறுப.

[83] நீரில்லாத இடம்—அகழிகளுக்கும் மதிர் சுவர்க்கும் இடை இடையே உள்ள நிலப் பகுதிகள்.

[84] வன்னிலம்—கல் இட்டிகை சுண்ணும்புகளால் அமைத்துக் குற்றி இறுக்கப்பட்ட நிலம்.

[85] முன் கூறியபடியன்றி மதில் வாயில்களை வேறு வகையாகவும் அமைக்கலாம் என்று கூறத் தொடங்குகின்றார்.

அகலத்தில் மூன்றில் ஒரு கூறளவு [86]உடும்புமுக வடிவில் கோபுரம் அமைக்கலாம்.

அன்றி, மதிற்சுவர் நடுவண் கேணியையுடையதாகப் [87]புட்கரணி யென்னும் வாயிலை யமைக்கலாம். அல்லது, மிகவும் பயன் படத்தக்க இடைவெளியோடு கூடிய சிறு வழியமைந்த நான்கு அறைகளையுடைய குமாரீபுரம் என்னும் வாயிலை அமைக்கலாம். இரண்டு தளங்களில் சிகரம் இல்லாத [88]முண்டக வாயிலையும் அமைக்கலாம். அல்லது [89]நிலம் பொருள்களுக்கு ஏற்பவும் செய்ய லாம். அகலத்தினும் மூன்றில் ஒரு கூறு அளவு மிகுதியான நீளத்தில் படைக்கல முதலிய கருவிகள் வைத்தற்குரியவாக [90]வாய்க்கால்களையமைத்தல் வேண்டும்.

### [91]சுலோகங்கள்

(1—2) அவ்வாய்க்கால்களில் எறிகல் குந்தாலி [92]குடாரி அம்பு யானைக்குரிய அணிகலங்கள் கதாயுதம் [93]முற்கரம் எறிதடி ஆழி நூற்றுவரைக் கொல்லி யென்னும் பொறி தோமர முதலியன சூலம் ஈட்டி [94]ஒட்டகக் கழுத்தைப் போன்ற படை [95]தீப்பற்றி [96]குப்பியப் பொருள்கள் என்னும் இவற்லை வைத்தல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் மூன்றும் பிரகரணம்
"அரணமைத்தல்" என்னும் இருபத்து நான்காம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[86] உடும்பு முகம் போல அடியகன்று நுனி சுருங்கிய வடிவத்தில் சிறு கோபுரம் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[87] கேணியுடைமையால் அவ்வாயில் புட்கரணி யென்னும் பெயருடைய தாயிற்று.

[88] சிகர மின்மையால் முண்டக வாயிலாயிற்று.

[89] மேற்கூறிய வாயில்களுள் இடம் பொருள்களின் நிலைமைக்கேற்ப வேண்டியவாறு அமைத்துக் கொள்ளலாம் என்பது கருத்து.

[90] வாம்க்கால்—படைக்கலம் முதலியன வைத்தற்குத் தகுதியாக நிலத் தில் வாய்க்கால் போல் அமைக்கப்படும் பள்ளங்கள்.

[91] மேற்குறித்த வாய்க்காற் பகுதிகளில் வைக்கப்படும் உபகரணங்கள் இன்னவென இச்சுலோகங்களில் கூறுகின்றார்.

[92] குடாரி—கோடரி—கோடாலி என்றும் வழங்குப.

[93] முற்கரம்—சம்மட்டி.

[94] வளைதடி.

[95] தீப்பற்றி—பகைவரைக் கொளுத்துதற்கு எறியப்படும் குங்கிலியம் தீமுறி பாஷாணம் முதலியன.

[96] குப்பியம் — 2ம் அதிகரணம் 17ம் பிரகரணத்திற் கூறப்பட்ட பொருள்கள். மரப் பொருள்களும் தோல் மருந்து முதலியனவுமாம்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## நான்காம் பிரகரணம்—[1] அரணுள் அமைத்தல்

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

கிழமேல் நீளத்தில் மூன்று இராச வீதிகளும், தென்வடல் நீளத்தில் மூன்று இராச வீதிகளும் ஆக மனையிடம் [2]வகுக்கப்படல் வேண்டும். [3]பன்னிரண்டு வாயில்களையுடைய அம் மனையிடம் [4]நீர் நிலைகளையும் நீர் கழியும் கால்களையும் மறைவான சுருங்கை வழிகளையும் உடையதாக இருத்தல் வேண்டும்.

சிறிய தெருக்கள் நான்குகோல் அளவு அகலமுடையனவாக வும், அரசவீதி [5]துரோணமுகவழி தானீயவழி [6]நாட்டுவழி மேய்த னிலவழி [7]வாணிகத் தொழிலிடவழி [8]படைசெல்வழி சுடலைவழி கிராமவழி என்னும் இவை எட்டுக்கோல் அகலமுடையன வாகவும், அணைக்கட்டு வழியும் காடுசெல் வழியும் நான்குகோல் அகலமுடையனவாகவும், யானைசெல் வழியும் வயல் வழியும்

---

### 25-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அகழி மதில் அட்டாலகம் பிரதோளி இந்திர கோசம் தேவபதம் என்னும் இவை முதலிய எல்லாம் அரணாகும். அவ்வரணுள் அரசர் பெருந்தெரு முதலியனவும் அரண்மனையும் அமைச்சர் முதலியோர் இல்லங் களும் அமைத்தல் இதன் கட் கூறப்படும். ஆதலின் அரணமைத்தலின் பின் இது வைக்கப்பட்டது. இதனாற் பிரகரணவியைபு புலனாதலறிக. அர ணுள்ளே அரண்மனை முதலியவமைத்தலைக் கூறுதலின் இப்பிரகரணம் '' அரணுள் அமைத்தல் '' என்னும் பெயர்த்தாயிற்று.

[2] ஆறு பிரிவாக வகுக்கப்படல் வேண்டும் என்பது கருத்து.

[3] திசை ஒன்றிற்கு மூன்று விகிதமாக நான்கு திசைகளுக்கும் தெருக் கோடிகள் பன்னிரண்டு ஆகும் என்பது. வாயில் ஈண்டுத் தெருக் களின் கடைப் பகுதியை உணர்த்தும்.

[4] நீர் நிலை—கேணி ஊருணி முதலியன.

[5] துரோணமுகம் தானீயம் என்னும் இவற்றின் இலக்கணங்களை இவ்வதிகரணம் முதற் பிரகரணத்திற் காண்க.

[6] நாடு—ஈண்டு அயல் நாட்டைக் குறிப்பது.

[7] பண்டங்களைக் கொள்ளல் விற்றல் மிகுதியாக நடைபெறும் வேற் றூர் முதலிய இடங்களுக்குச் செல்லும் வழி.

[8] படை—நால்வகைப் படை.

இரண்டு கோல் அகலமுடையனவாகவும், [9]தேர் செல்வழி ஐந்து முழ அகலமுடையதாகவும், [10]ஆனதர் நான்கு முழ அகலமுடைய தாகவும், [11]சிறு விலங்கு செல்வழியும் மக்கள் நடைவழியும் இரண்டு முழ அகலமுடையனவாகவும் இருத்தல் வேண்டும்.

சிறந்த வன்மை மிக்கதும் நால்வகை வருணத்து மக்களும் வாழ்தற்குரியதுமாகிய மனையிடத்தில் அரண்மனை அமைத்தல் வேண்டும். மனையிடத்தின் [12]நடுக்கூற்றினின்றும் [13]வடபால் ஒன் பதில் ஒரு கூற்றில் [14]முன் கூறப்பட்ட முறைப்படி உள்ள அரண் மனையைக் கிழக்குமுகமாகவாதல் வடக்குமுகமாகவாதல் அமைத் தல் வேண்டும். அவ்வரண்மனைக்குக் [15]கீழ்பால் வடபகுதியில் ஆசிரியர் புரோகிதர் என்னும் இவர்களுடைய வேள்விச்சாலைகளும் [16]நீர் நிலைகளும் இருத்தல் வேண்டும். அமைச்சர்களும் ஆண் டிருத்தல் வேண்டும். கீழ்பால் தென்பகுதியில் அடுக்களையும் [17]யானை மாடமும் [18]கோட்டமும் அமைத்தல் வேண்டும். அவற் றின் புறத்தே கீழ்பால் [19]மணப்பொருளும் மலர்மாலையும் கூலமும்

---

9 தேர்—மக்கள் ஊர்ந்து செல்லும் வண்டி முதலியன.

10 ஆனதர்—பசு எருமை முதலியன செல்லும் வழி.

11 சிறு விலங்கு—யாடு முதலியன.

12 நடுக்கூறு—அரணுக்குட்பட்ட அரசனது தலை நகரத்திற்குரிய இடத்தைக் கிழமேலாக ஒன்பது கூறிட்டுக் கொள்ளப்படும் இடைக் கூறு. இதனை " வாஸ்து இருதயம் " என்று முதனூல் கூறும்.

13 வடபால் ஒன்பதில் ஒரு கூறு நடுக்கூற்றை அடுத்துள்ள கூறாகும்.

14 " முதலதிகரணம் பதினேழாம் பிரகரணத்திற் கூறப்பட்ட " என்பது.

15 அரண்மனையைச் சூழ்ந்து அடுத்துள்ள நிலத்தை எண் கூறாகவும் அவற்றிற்குப் புறத்தேயுள்ள நாற்றிசை நிலத்தையும் நாற்பகுதியாகவும் வகுத்துக் கொண்டு ஒவ்வொரு பகுதியிலும் உள்ள குடியிருப்பு முதலிய வற்றைக் கூறத் தொடங்குகின்றார்.

16 நீர் நிலை—வேள்விக்குப் பயன் படுதற்கும், உண்ணுதற்கும் நீராடற் குமாம்.

17 யானை மாடம்—யானை முதுகின் வடிவு அமைய எடுக்கப்படும் இல்லம். யானை கட்டும் கூடம் எனினுமாம்.

18 கோட்டம்—ஈண்டுச் சரக்கறையை உணர்த்தும்.

19 மணப் பொருள்—சந்தனம் முதலியன.

[20]நெய் முதலியனவும் ஆகிய விலைப்பண்டங்களும், சிறந்த சிற்பி களும் அரச குலத்தவரும் இருத்தல் வேண்டும். தென்பாற் கீழ் பகுதியில் கருவூலமும் வரவு செலவுக் கணக்கு எழுதும் இடமும் [21]பணிக்களரியும் இருத்தல் வேண்டும். தென்பால் மேற்குப் பகுதி யில் குப்பியக் கோட்டமும் படைக்கலக் கோட்டமும் இருத்தல் வேண்டும். அவற்றின் புறத்தே தென்பால் [22]நகராட்சியாளர் கூலவாணிகர் [23]தொழிலாளர் படைத்தலைவர் உண்டி விற்போர் கள்விற்போர் இறைச்சி விற்போர் வரைவின் மகளிர் கூத்தர் வாணிகர் என்னும் இவர்கள் இருத்தல் வேண்டும். மேல்பால் தெற்குப் பகுதியில் கழுதைக் கொட்டில் ஒட்டகக் கொட்டில் சிறைக்கோட்டம் [24]தொழிலிடம் என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். மேல்பால் வடக்குப் பகுதியில் [25]ஊர்திச்சாலையும் தேர்ச்சாலையும் அமைத்தல் வேண்டும். அவற்றின் புறத்தே மேல் பால் மயிர்க்கம்பலம் நூலாடை நெய்வோரும் [26]மூங்கின் முடை வோர் தோல் பதனிடுவோர் கவசம் [27]படையுறை இயற்றுவோர் என்னும் இவர்களும் சூத்திரரும் இருத்தல் வேண்டும். வடபால் மேற்குப் பகுதியில் விலைப்பண்டம் வைக்குமிடமும் மருத்துவச் சாலையும் அமைத்தல் வேண்டும். வடபால் கிழக்குப் பகுதியில் கூலம் முதலியன தொகுத்து வைக்குமிடம் பசுக்கொட்டில் குதிரைச்சாலை என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். அவற் றின் புறத்தே வடபால் [28]நகரத் தெய்வமும் அரசர்களுடைய குல

---

[20] முதலியன என்றமையால் தேன் எண்ணெய் அனைய பிற நெகிழ்ச்சிப் பொருள்களையும் கொள்க.

[21] பணிக்களரி—பொன் வெள்ளி முதலியவைகளைக் கொண்டு அணி கலன் பாத்திரம் முதலியன செய்யும் தொழிற்சாலை.

[22] நகராட்சியாளர்—நகரபரிபாலகர்.

[23] தொழிலாளர்—ஆகரத் தொழில் முதலியன செய்வோர்.

[24] தொழிலிடம்—கழுதை ஒட்டகம் என்னும் இவைகளும், சிறைப் பட்டோரும் வேலை செய்யுமிடம்.

[25] ஊர்தி—சிவிகை முதலியன.

[26] மூங்கின் முடைவோர்—மூங்கில் பிரம்பு முதலியவற்றைக் கொண்டு கூடை முதலியன பின்னுவோர்.

[27] படையுறை—ஆயுதங்களுக்குத் தோல் துணி முதலியவற்றால் செய் யும் உறை.

[28] நகரத் தெய்வம்—நகரத்தைப் பாதுகாக்கும் அதிட்டான தெய்வம்.

தெய்வமும் கொல்லரும் [29]மணிப்பணியாளரும் பார்ப்பனரும் இருத்தல் வேண்டும். அம்மனையிடத்தில் எஞ்சிய பகுதிகளில் வண்ணான் [30]முதலியோரும் அயல்நாட்டு வாணிகக் குழுவினரும் இருத்தல் வேண்டும்.

நகரத்தின் நடுவண் [31]கொற்றவை திருமால் முருகன் இந்திரன் என்னும் இத்தெய்வங்களுக்குரிய கோட்டங்களும், சிவன் குபேரன் தேவ மருத்துவர் திருமகள் [32]மதிரை என்னும் இத்தெய்வங்களுக்குரிய கோயில்களும் அமைத்தல் வேண்டும். அக்கோட்டங்களிலும் கோயில்களிலும் அவ்வவ்விடங்களில் நிலைப்படுத்த வேண்டிய [33]பரிவார தேவர்களை இருத்தல் வேண்டும். [34]நகர் வாயில்கள் பிரமன் இந்திரன் இயமன் முருகன் என்னும் இவர்களைத் தெய்வங்களாக உடையன. அகழிக்குப் புறத்தே நூறு கோல்களுக்கு அப்பால் [35]கடவுண்மரம் [36]நீர்த்துறை [37]பொழில் அணைக்கட்டு என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும். [38]திசைக் கடவுளரை [39]அவ்வத் திசைகளில் அமைத்தல் வேண்டும்.

---

[29] மணிப்பணியாளர்—இரத்தின வேலை செய்வோர்.

[30] "முதலியோர்" என்றதனால் மயிர் வினைஞர் தையற்காரர் முதலிய தொழிலாளர் அனைவரையும் கொள்ளல் வேண்டும்.

[31] கொற்றவை—துர்க்கை.

[32] மதிரை—இத்தெய்வம் இன்னதென்று விளங்கவில்லை.

[33] பரிவார தேவர்—சூரியன், சந்திரன் துவாரபாலகர் முதலியோர்.

[34] வடக்கு வாயிலுக்குப் பிரமனும், கிழக்கு வாயிலுக்கு இந்திரனும் தெற்கு வாயிலுக்கு இயமனும் மேற்கு வாயிலுக்கு முருகனும் அதிட்டான தெய்வங்களாம் என்பது.

[35] கடவுண் மரம்—தெய்வம் உறையும் மரம். கடவுட்டன்மை வாய்ந்த மரமுமாம்.

[36] நீர்த்துறை—ஈண்டுப் புண்ணிய தீர்த்தத் துறை.

[37] பொழில்—மக்கள் தங்கி இன்புறுதற்குத் தக்க நிழல் தரும் சோலை.

[38] திசைக் கடவுளர்—திக்குப் பாலகர்.

[39] கிழக்கில் இந்திரனையும், தென் கிழக்கில் தீக்கடவுளையும் தெற்கில் மறலியையும் தென் மேற்கில் நிருதியையும் மேற்கில் வருணனையும் வடமேற்கில் வாயுவையும் வடக்கில் குபேரனையும் வடகிழக்கில் ஈசானனையும் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[40]வடக்கிலாதல் கிழக்கிலாதல் சுடலை அமைத்தல் வேண்டும். [41]உயர்குலத்தவர்க்குத் தென்றிசையிற் சுடலை இருத்தல் வேண்டும். இம்முறையிற் பிறழ்வார்க்குப் [42]பூர்வசாகச தண்டம் விதித்தல் வேண்டும். பாசண்டரும் புலையரும் சுடலையின் அருகில் இருத்தல் வேண்டும்.

அரணுள் வாழும் இல்லறத்தார்க்கு [43]அவர்தம் தொழிலுக்கும் நிலத்திற்கும் ஏற்ப விளைநிலத்தை அளவிட்டு வரையறைப் படுத்தல் வேண்டும். [44]அந்நிலங்களில் மலர் பழம் உதவும் தோட்டங்களையும், தாமரை முதலிய [45]நீர்ப்பூக்களையும், விளை நிலங்களையும், கூலம் முதலிய விலைப்பொருள் தொகுத்து வைத்தலையும் அரசனுடைய கட்டளை பெற்று இயற்றல் வேண்டும். பத்துக்[46] குழி அளவுள்ள நிலம் ஒரு [47]கேணிப் பாய்ச்சலாகும். பலவகை எண்ணெய் பலவகைக் கூலம் [48]அக்காரம் உப்பு மருந்து உலர்ந்த [49]மரக்

---

40 இச்சுடலை நான்காம் வருணத்தவர் முதலிய இழிகுலத்தார்க்கு என்பது.

41 மூலத்தில் வருணோத்தமர் என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு நான்காம் வருணத்தவர் என்று உரையாளர் ஒருவர் பொருள் கூறினர். அங்ஙனமாயின் மேலே "வடக்கிலாதல் கிழக்கிலாதல் சுடலையமைத்தல் வேண்டும்" என்பதற்கு இருபிறப்பாளர் மூவர்க்கும் எனக் கொள்ளல் வேண்டும். உயர் குலத்தோர்—அந்தணர் அரசர் வணிகர் என்போர்.

42 பூர்வசாகச தண்டம்—இருநூற்றைம்பது பணம் ஆகும்.

43 பொதுவாக வுள்ள நிலத்தைக் குடிமக்களின் தகுதியையும் அந்நிலப் பரப்பையும் சீர்தூக்கி அறுதியிட்டுப் பகுத்துக் கொடுத்தல் வேண்டும் என்பது கருத்து.

44 அந்நிலங்களில்—அரசன் குடிகளுக்கென வரையறை செய்த நிலங்களில்.

45 நீர்ப்பூக்கள் என்பது அவற்றை உண்டாக்குதற்குரிய நீர் நிலைகளைக் குறிப்பதாம்.

46 நடுத்தரமான கலப்பைகளையுடைய இரண்டேர் பூட்டி உழுதற்குரிய அளவுள்ள நிலம் ஒரு குழி ஆகும்.

47 ஒரு கேணி நீரால் பத்துக் குழியளவு நிலத்திற் பயிர் செய்யலாம் என்பது கருத்து.

48 அக்காரம்—வெல்லம் சருக்கரை முதலியன.

49 மரக்கறிகளாவன :—கிழங்கு கீரை குருத்து தளிர் பழம் தண்டு புல்லுருவி பட்டை மலர் காளான் என்னும் இப்பத்துமாம்.

கறி வைக்கோல் உலர்ந்த இறைச்சி புல் விறகு [50]உலோகங்கள் தோல் கரி நரம்பு நஞ்சு விலங்குக் கொம்பு மூங்கில் மரவுரி வயிரம் ஏறிய மரம் படைக்கலம் கவசம் எறிகல் என்னும் இவற்றைப் பல ஆண்டுகளுக்கு வேண்டிய அளவு [51]தொகுத்து வைத்தல் வேண்டும். புதிய பொருள் வருங்கால் பழைய பொருளைச் செல விடல் வேண்டும்.

யானை குதிரை தேர் காலாள் என்னும் நால்வகைப் படை களுக்கும் தலைவர் பலரை அமைத்தல் வேண்டும். [52]தலைவர் பல ராயின் ஒருவர் ஒருவரை அஞ்சிப் பகைவரது வேறுபாட்டிற்கு ஆளாகார் என்பது.

[53]இதனால் நாட்டின் எல்லைக்குக் காவலாக உள்ள அரணமைப் பும் கூறப்பட்டபடியாம்.

### சுலோகம்

நாடு நகரத்து மக்களுக்குக் கேடுவிளைவிக்கும் [54]புறம்பானவர் களை நகரத்தில் இருக்கச் செய்யலாகாது. நாட்டின் கடைப்பகுதி யில் இருக்கச் செய்யலாம். [55]பிறரை யொப்ப அன்னாரையும் இறைப்பொருள் செலுத்தற்கு உரியராக்கல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் நான்காம் பிரகரணம்
"அரணுள் அமைத்தல்" என்னும் இருபத்தைந்தாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[50] உலோகங்கள்—இரும்பு முதலியன.

[51] முன் குறிப்பிட்ட இடத்தில் தொகுத்து வைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[52] தலைவன் ஒருவனாயின் தனக்கு ஒத்தார் யாரும் இன்மையால் அச்சமின்றிப் பொருளாசை காரணமாகப் பகைவர்க்கிணங்கித் தான் வேறு படுதலோடு தன்னுட்பட்ட படை வீரரையும் வேறுபடுத்தக் கூடும். பல ராயின் அவ் வேறுபாடு கோடற்கு இடனின்றென்பது கருத்து.

[53] நகரத்திற்கு ஈண்டுக் கூறிய அரணைப் போல நாட்டின் எல்லைகளுக் கும் அரண் அமைத்துக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[54] புறம்பானவர்—சூதாடுவோர் வஞ்சகர் நடர் முதலியோர்.

[55] பிறர்—நாடு நகரத்துள்ள குடிமக்கள்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## ஐந்தாம் பிரகரணம்—[1] பொருட்பண்டாரம் புரப்போன் செய்தி

## இருபத்தாறும் அத்தியாயம்

பண்டாரத்தலைவன் [2]நிதியறை விலைப்பண்டம் தொகுக்குமிடம் [3]உணவுப் பொருட்சாலை [4]குப்பியச்சாலை படைக்கலக் கொட்டில் சிறைக்கோட்டம் என்னும் இவற்றை அமைத்தல் வேண்டும்.

சதுரவடிவில் [5]நீர்க்கசிவில்லாதபடி வாவிபோலப் பள்ளம் தோண்டி [6]நாற்புறமும் அடிப்பரப்பும் பெரிய கற்களைப்படுத்து வயிரம் ஏறிய மரங்களாலாகிய [7]பஞ்சரத்தையும் [8]நிலமட்டத்தோடு ஒத்த மூன்று தளங்களையும் பலவகைக் [9]கோட்டங்களின் அமைப்பையும் நீறும் கல்லும் விரவி இறுக்கப்பட்ட மேல் நடு கீழாகிய

---

### 26-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரணுள் அமைத்தல் என்னும் முன்னைய பிரகரணத்தில் பல பொருள்களையும் தொகுத்து வைத்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது. இதன்கண் அப்பொருளைச் சேர்த்துக் காப்போன் செயல் கூறப்படுதலின் பிரகரணவியைபுண்மை அறியலாம். பண்டாரம்—கருவூலம் களஞ்சியம் முதலியன.

[2] நிதியறை—மணி பொன் முதலியன வைக்கும் அறை.

[3] உணவுப் பொருள்—நெல் முதலிய கூலங்களும் எண்ணெய் முதலியனவுமாம்.

[4] குப்பியம்—வயிரமுள்ள மரம் முதலிய பொருள்களும் பொன் வெள்ளியல்லாத ஏனைய உலோகங்களுமாம்.

[5] நிலவறை நிமித்தம் தோண்டப்படும் பள்ளத்தில் ஊற்று நீர் வெளிப்படாதபடி செங்கல் சுண்ணம்பு முதலியவற்றால் தடைப்படுத்தல் வேண்டும் என்பது கருத்து.

[6] நாற்புறமும்—நாற்புறத்துச் சுவர்களும்.

[7] பஞ்சரம்—பறவைகளை அடைத்து வைத்தற்குரிய கூடு; அக் கூடு போல வன்மை மிக்க மரங்களால் ஒவ்வொரு தளத்திற்கும் மேற்பரப்பு அமைத்தல் வேண்டும் என்பது.

[8] நிலமட்டம் ஒரு தளமாகவும் அதற்குக் கீழ் இரண்டு தளங்களாகவும் அமைத்தல் வேண்டும் என்பது.

[9] கோட்டங்கள்—உள்ளறைகள்.

அத்தளங்களையும் ஒரு வாயிலையும் [10]பொறிகளால் அமைக்கப்பட்ட ஏணிகளையும் தெய்வப் படிவம் அமைந்த கதவினையும் உடைய தாக நிலவறை அமைத்தல் வேண்டும். [11]அதன்மேல் உள்ளும் புறமும் தாழக்கோல்களையும் பொருள் வைத்தற்குரிய பல அறை களையும் உடையதாகவும், முகப்புடன் கூடியதாகவும் உள்ள நிதி யறையை [12]நிலத்தின்மேற் கட்டப்படும் இல்லம்போல் அமைத்தல் வேண்டும். கேடுநேர்ந்துழிப் பயன்படுதற் பொருட்டு நிலையான நிதியறையை [13]நாட்டின் எல்லையில் [14]புறப்படுத்தப்பட்டவர்களைக் கொண்டு செய்வித்தல் வேண்டும்.

நன்கு சுடப்பட்ட செங்கற்களாலாகிய தூண்களையும் ஒன்றுக் கொன்று எதிர்முகமாக உள்ள [15]நான்கு கட்டுக்களையும் ஒருவாயிலை யும் பல அறைகளையும் [16]பல தளங்களையும் வாயிலின் இரு பக்க மும் அகன்ற தூண்களையுடைய தெற்றிகளையும் உடையவாக விலைப்பண்டம் தொகுக்கும் இடத்தையும் உணவுப் பொருட்சாலை யையும் அமைத்தல் வேண்டும். நீண்ட [17]பல கோட்டங்களையும்

---

10 வேண்டுங்கால் வைத்துக்கொள்ளவும், வேண்டாத பொழுது விலக்கி விடவும் தகுதியாகப் பொறிகளால் ஏணிகள் அமைத்தல் வேண்டும் என்பது.

11 அதன் மேல்—அந்நிலவறையின் மேல்.

12 நிலவறையின்மேல் எடுக்கப்படும் இல்லம் பிறர் பார்வைக்கு அந் நிலவறையின்மேல் கட்டப்பட்டதாகத் தோன்றாமல் நிலத்தின்மேற் கட்டப் பட்டது போல் தோன்றும்படி அமைத்தல் வேண்டும் என்பது.

13 பகைவரால் துன்பம் நேர்ந்து வெளிப்படுங்கால் நாட்டின் எல்லை யில் மறைவாக வைக்கப்பட்ட பொருள் பயன்படலாமென்னும் கருத்துப் போலும்.

14 புறப்படுத்தப்பட்டவர்—கொலைத்தண்டம் விதிக்கப்பட்டவர். இவர் களைக் கொண்டு பிறர் அறியாவாறு நிதியறை அமைத்துக் கொண்டால், அச்செயல் முடிவில் இவர்கள் கொலைப்படுத்தப் படுவராதலின் முன்னும் பின்னும் யாரும் அறிந்துகொள்ள இயலாதென்பது கருத்து.

15 நான்குகட்டு—இதனை " சதுச்சாலை " என்று முதனூல் கூறும்.

16 தளம்—ஈண்டு மேற்றளத்தினை உணர்த்தும்.

17 நீண்ட பெரிய அறைகளையும் சிறிய பல அறைகளையும் நடுவில் முற்ற வெளியையும் உடையதாகக் குப்பியச் சாலை இருக்கவேண்டும் என்பது கருத்து.

சுவர்களால் வகுக்கப்பட்ட பல அறைகளையும், உள்ளிடத்தையும் உடையதாகக் குப்பியச்சாலையை அமைத்தல் வேண்டும். நில வறையுடன் கூடிய அக்குப்பியச்சாலையையே படைக்கலக் கொட்டி லாக அமைத்தல் வேண்டும். [18]அறங்கூறவையத்தையும் [19]பொருள் வினைஞர் நிலையத்தையும் ஆடவர் மகளிர்க்கு வேறு வேறமைந்த இடங்களையுடையதும் வலிய காவலமைந்த போக்கு வரத்து வழி களையுடையதும் ஆகிய சிறைக்கோட்டத்தையும் தனித் தனியே அமைத்தல் வேண்டும்.

[20]இவ் வெல்லாவற்றிற்கும் சாலை அகழி கிணறு என்னும் இவற்றையொப்ப நீராடும் அறை [21]தீக்காப்பு நஞ்சுக்காப்பு [22]பூனை கீரி [23]காவல் என்னும் இவற்றையும் [24]தத்தம் தெய்வ வழிபாட் டுடன் செய்வித்தல் வேண்டும்.

உணவுப் பொருட்சாலையில் மழையளவு கருவியாக ஒரு முழச் சதுர அளவு வாயகலமுடைய [25]ஒரு குண்டம் [26]அமைத்தல் வேண் டும்.

---

18 அறங்கூறவையம்—நீதிமன்றம்.

19 பொருள் வினைஞர்—பொருட் பண்டாரம் புரப்போர், இறைப் பொருள் தொகுப்போர் முதலிய பொருளதிகாரிகள்.

20 எல்லாவற்றிற்குமீ—நிதியறை முதலிய ஆறு இடங்களுக்கும்.

21 தீக்காப்பு நஞ்சுக் காப்பு என்னும் இவற்றினியல்பை முதலதிகரணம் பதினேழாம் பிரகரணத்திற் காண்க.

22 பூனையும் கீரியும் நஞ்சு கலந்த பொருளை ஆராய்தற்கும் எலி பாம்பு முதலியன வராமல் ஒழிப்பதற்கும் வேண்டும் என்பது.

23 காவல்—மக்களாற் செய்யப்படும் பாதுகாப்பைக் குறிக்கும்.

24 தத்தம் தெய்வங்களாவன—நிதியறைக்குக் குபேரனும் விலைப் பண் டம் தொகுக்குமிடத்திற்கும் உணவுப் பொருட்சாலைக்கும் திருமகளும், குப்பியச் சாலைக்குத் தெய்வத் தச்சனும் படைக்கலக் கொட்டிற்கு இயம னும் சிறைக்கோட்டத்திற்கு வருணனும் ஆவர்.

25 குண்டம்—அளவு கருவியாகிய ஒரு வகைப் பாத்திரம்.

26 அமைத்தற்கு வினைமுதல் உணவுப் பொருட்சாலைத் தலைவன். இங்ங னமே பின் வரும் எழுவாயில்லாத வினைமுடிவுகளுக்கும் அவ்வத் தொழிற் றலைவரையும் அரசனையும் எழுவாயாகக் கொள்ளல் வேண்டும்.

பழையனவும் புதியனவுமாகிய [27]மணிகளையும் [28]திண்மையும் [29]நொய்மையுமுடைய குப்பியப் பொருள்களையும் [30]அவ்வத் தொழிலாளர் மரபிற் பிறந்தவர்களோடும் கணக்கரோடும் கூடி ஆராய்ந்து தொகுத்தல் வேண்டும். அப்பொருள்களுள் [31]மணிகளை ஒருவன் வஞ்சிப்பானாயின் அவனுக்கும் அவனை ஏவியவனுக்கும் [32]உத்தமசாகச தண்டமும், திண்மைக் குப்பியப் பொருளை வஞ்சிப்பவனுக்கும் அவனை ஏவியவனுக்கும் [33]மத்தியமசாகச தண்டமும், நொய்மைக்குப்பியப் பொருளை வஞ்சித்தவனுக்கும் அவனை ஏவியவனுக்கும் அப் பொருளளவின் இருமடங்கு தண்டமும் விதித்தல் வேண்டும்.

[34]உருவ ஆராய்ச்சியால் மெய்மை எனக் கண்ட [35]பொற்காசு முதலியவற்றை ஏற்றுக்கொள்ளல் வேண்டும். [36]பொய்மை யெனக் கண்டவற்றைச் [37]சிதைத்துவிடல் வேண்டும். அவற்றைக் கொணர்ந்தவனுக்குப் [38]பூர்வசாகச தண்டம் விதித்தல் வேண்டும்.

பதரில்லாத புதிய கூலங்களை அளவு குறையாதபடி வாங்குதல் வேண்டும். [39]மாறுபடின் அக்கூல அளவிற்கு இருமடங்கு தண்டம் விதித்தல் வேண்டும்.

---

[27] மணி—வைரம் முத்து முதலியன.

[28] திண்மைப் பொருள்—சந்தனம் அகில் முதலியன.

[29] நொய்மைப் பொருள்—ஆடை முதலியன.

[30] அவ்வத் தொழிலாளர்—இரத்தினம் முதலியவற்றைச் சாணை பிடிப்போரும் ஆடை நெய்வோர் முதலியோரும் ஆவர்.

[31] மணிகளை வஞ்சித்தல்—குணமில்லாத இரத்தினங்களை மாற்றாக வைத்துக் குணமிக்க இரத்தினங்களைக் கவர்ந்து கொள்ளுதல்.

[32] உத்தம சாகச தண்டம்—ஆயிரம் பண அளவினது.

[33] மத்தியமசாகச தண்டம்—ஐந்நூறு பண அளவினது.

[34] உருவம்—அவ்வக் காலத்து அரசிலச்சினை.

[35] பொற்காசு—பொன் வெள்ளி செம்பு முதலியவற்றால் ஆகிய காசுகள்.

[36] பொய்மை-கள்ள நாணயம்.

[37] மீண்டும் பயன்படாதபடி அழித்துவிடல் வேண்டும் என்பது.

[38] பூர்வசாகச தண்டம்—இருநூற்றைம்பது பண அளவினது.

[39] மாறுபடுதல்—பதருடைமையும் பழைமையும் அளவிற் குறைதலுமாம்.

விலைப்பண்டம் குப்பியப் பொருள் படைக்கலம் என்னும் இவற்றிற்கும் [40]கூலத்திற்குக் கூறிய விதியையே கொள்ளல் வேண்டும்.

[41]மற்றைய தொழில் நிலையங்களினும் வஞ்சம் நிகழுமாயின் வஞ்சிக்கும் தலைவன், அவனுக்குத் துணையாயினான், அவர் தம் பணி யாளர் என்னும் இவர்க்கு முறையே ஒரு பணம், இரண்டு பணம், நான்கு பணங்கள் தண்டமாம். அவர் மீண்டும் வஞ்சிப்பாராயின் முறையே பூர்வ சாகசம், மத்தியம சாகசம், உத்தமசாகசம் என்பன வும், [42]கொலைப்படுத்தலும் தண்டமாம்.

கருவூலத்தலைவன் கருவூலத்துப் பொருளைக் கவர்ந்து கொள்ளு வானாயின் அவனைக் கொலைப்படுத்தல் தண்டமாம். அத்தொழிற்கு உதவிசெய்வார்க்கு முன்னதில் [43]அரைக்கூறு தண்டமாகும். தலைவன் செய்த களவு அறியப்படாததாயின் அவனுடைய பணி யாளரைக் [44]கடிந்து கூறல் வேண்டும். கன்னமிட்டுப் பொருள் கவரும் கள்வர்க்குச் சித்திரவதை தண்டமாகும். ஆதலின் பொருட் பண்டாரம் புரப்போன் தன் நம்பிக்கைக்குரியாரை முன்னிட்டுத் தன் காரியங்களைச் செய்யக்கடவன்.

## சுலோகம்

பொருட் பண்டாரம் புரப்போன் [45]புறத்தும் அகத்தும் உண்டாம் வரவு பொருளை நன்றாக அறிந்து கொள்ளல் வேண்டும்.

---

[40] நல்லனவற்றை ஆராய்ந்து கொள்ளல் வேண்டும் என்பதும் மாறு படின் மூலப்பொருளுக்கு இருமடங்கு தண்டம் விதித்தல் வேண்டும் என்பதுமாம்.

[41] மற்றைய—முன் கூறப்பட்டனவல்லாத.

[42] இரண்டு முறைக்கு மேற்பட்டுப் பன்முறை குற்றம் செய்வா ராயின் கொலைத் தண்டமும் விதிக்கலாம் என்பது கருத்து.

[43] அரைக் கூறு என்பது கொலைத்தண்டத்திற்கு ஒத்த கால அளவுத் தண்டத்திற் பாதி அளவைக் குறிக்கும்.

[44] கடிந்து கூறுமுகமாக உண்மையறிந்து கொள்ள முயலல் வேண்டும் என்பது கருத்து.

[45] புறத்தும் அகத்தும்—நாட்டினும் நகரத்தினும்.

[46]நூருண்டாயினும் கேட்கப்படின் தடையின்றி விடையிறுத்தல் வேண்டும். செலவு போக எஞ்சிய பொருளைக் கண் கூடாகக் [47]காட்டல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் ஐந்தாம் பிரகரணம்
" பொருட்பண்டாரம் புரப்போன் செய்தி " என்னும்
இருபத்தாரும் அத்தியாயம்—முற்றிற்று.

---

[46] நூருண்டாயினும் என்பது வரவு செலவு கணக்கைப் பற்றியது.

[47] கருவூலத்திற் காட்டல் வேண்டும் என்பது கருத்து.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

### ஆரும் பிரகாரணம்—[1] இறைப்பொருள் தொகுப்போன் ஏற்கும் பொருள்நெறி

### இருபத்தேழாம் அத்தியாயம்

இறைப்பொருள் தொகுப்போன் [2]அரண் நாடு ஆகரம் அணை காடு கொட்டில் வாணிகநெறி என்னும் இவற்றைக் கண்காணித்தல் வேண்டும்.

[3]சுங்கம் [4]தண்டம் [5]அளவு வரையறை நகரத்தலைமை [6]எல்லைக் குறியீட்டுத் தலைமை, [7]இலச்சினைத் தலைமை கள் இறைச்சி நூல் எண்ணெய் நெய் அக்காரம் பொன் விலைப்பண்டம் தொகுக்குமிடம், வரைவின் மகளிர் தலைமை சூது [8]மனைத்தொழில் காருகக் குழு சிற்பக்குழு திருக்கோயிற்றலைமை வாயிற்காவலர் [9]புறம்பானவர் என்னும் இவர்பாற் பெறும் பொருளாகிய [10]இவ்வெல்லாம் அரண் என்று கூறப்படும்.

---

### 27-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] பொருட் பண்டாரம் புரப்போன் போலவே இறைப்பொருள் தொகுப்போனும் பொருளுபதையால் ஆராய்ந்து தெளியப்படுவோன் ஆதலின், இஃது அதன் பின் வைக்கப்பட்டது. இதனாற் பிரகரண இயைபு புலனும்.

[2] அரண் முதலிய இவ்வேழும் அவ்வப் பகுதிகளினின்றும் கிடைக்கும் வருவாய்ப் பொருளை உணர்த்தும் குறியீடுகளாம்.

[3] அரண் என்பதன்பாற்படும் வகைகளைக் கூறத் தொடங்குகின்றார். சுங்கம்—பண்டங்களுக்கு விதிக்கப்படும் இறைப் பொருள்.

[4] தண்டம்—உத்தம சாகசம் முதலியன.

[5] துலையளவை முகத்தலளவை முதலியன.

[6] எல்லைக் குறியீடு—வயல் தோட்டம் முதலிய நிலங்களின் எல்லைகளை வரையறுத்து அடையாளக்கல் நடுதல்.

[7] இலச்சினை—காசு முதலியவற்றில் பொறிக்கும் முத்திரை.

[8] மனைத் தொழில்—இல்லம் அமைக்கும் தச்சர் கொல்லர் முதலியோர் தொழில்.

[9] புறம்பானவர்—இவர் இயல்பை இருபத்தைந்தாம் அத்தியாயத்தின் இறுதிச் சுலோகத்தாலும் அதன் குறிப்பாலும் அறிக.

[10] இவ்வெல்லாம்—இவ்விருபத்திரண்டு வகைகளும்.

உழவு [11]கூறு [12]கையுறை [13]அரசிறை வாணிகம் நீர்த்துறைக் காவல் தோணி கப்பல் [14]பட்டினம் மேய்தல்நிலம் [15]வழியிடம் நாடுகாவல் [16]களவுகடிதல் என்னும் [17]இவ்வெல்லாம் நாடென்று கூறப்படும்.

பொன் வெள்ளி வயிரம் [18]மணி முத்து பவழம் சங்கு இரும்பு உப்பு [19]நிலத்தாது கற்றாது நீர்த்தாது [20]என்னுமிவை ஆகரம் என்று கூறப்படும்.

பூங்கா காய்கனித்தோட்டம் கருப்பந்தோட்டம் [21]வாழைத் தோட்டம் நன்செய் புன்செய்கள் மஞ்சள் இஞ்சித்தோட்டம் என்னும் [22]இவை அணை என்று கூறப்படும்.

[23]பசுவனம் [24]விலங்குக்காடு [25]நன்மரக்காடு [26]யானைக்காடு என்னும் [27]இவை காடு என்று கூறப்படும்.

---

[11] கூறு—நெல் முதலிய விளைபொருள்களினின்றும் அரசனுக்குக் கிடைக்கவேண்டிய ஆறில் ஒரு பாகம். "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்னும் ஐம்புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலால் அரச னுக்கு இறைப் பொருள் ஆறிலொன்றாயிற்று" என்பர் பரிமேலழகர்.

[12] கையுறை—அரசனுக்குக் காணிக்கையாகச் செலுத்தப்படும் பொருள்.

[13] அரசிறை—தோட்டம் முதலிய நிலங்களுக்காக அரசனுக்குச் செலுத்தவேண்டிய இறைப் பொருள்.

[14] பட்டினம் என்பது ஈண்டுச் சிறு நகரத்தைக் குறிக்கும்.

[15] வழியிடம்—மக்களும் வண்டி முதலியனவும் செல்லுதற்குரியது.

[16] களவு கடிதல் என்பது களவு செய்வோரைப் பிடித்து அடக்குதற் பொருட்டு நாட்டு மக்கள் அரசனுக்குச் செலுத்தும் பொருளைக் குறிப்பது.

[17] இவ்வெல்லாம்—இப்பதின்மூன்றும்.

[18] மணி—மரகதம் மாணிக்கம் நீலம் முதலியன.

[19] நிலத்தாது முதலிய மூன்றும் முறையே நிலம் மலை கடல் என்னும் இவற்றினின்றும் எடுக்கப்படும் இயற்கைப் பொருள்களாம்.

[20] இவை—இப்பன்னிரண்டும்.

[21] கமுகு முதலியவற்றையும் ஈண்டுக் கொள்ளல் வேண்டும்.

[22] இவை—இவ்வாறும்.

[23] பசு—காட்டுப்பசு முதலியன.

[24] விலங்கு—மான் முதலியன.

[25] நன்மரம்—தேக்கு திமிசு முதலியன.

[26] யானைக்காடு—கலிங்க நாட்டிற் றோன்றிய சிறந்த யானைகளைப் பரி பாலிக்குமிடம்.

[27] இவை—இந்நான்கும்.

ஆன் எருமை வெள்ளாடு செம்மறியாடு கழுதை ஒட்டகம் குதிரை கோவேறுகழுதை என்னும் [28]இவை கொட்டில் என்று கூறப்படும்.

[29]நிலவழி நீர்வழி என்னும் இரண்டும் வாணிக நெறி என்று கூறப்படும்.

[30]இவ்வெல்லாம் வருவாயின் [31]உடலாகும். [32]விற்றல் கூறு [33]வாசி [34]கடத்தல் [35]வரையறை உப்பளக்கூறு தண்டப்பொருள் என்னும் இவ்வேழும் வருவாயின் முகம் ஆகும்.

கடவுள்வழிபாடு தென்புலத்தார்கடன் [36]மங்கலவாழ்த்து [37]உவளகம் அடிசிற்சாலை [38]தூதுவிடல் உணவுப்பொருட்சாலை

---

[28] இவை—இவை எட்டும்.

[29] நிலவழி நீர்வழி யென்பன வாணிக நிமித்தம் அயல் நாட்டிற்குக் காலினும் கலத்தினும் செல்லும் நெறிகள்.

[30] இவ்வெல்லாம்—இங்கே கூறப்பட்ட சுங்கம் முதலிய அறுபத்தேழு உட்பிரிவுகளையுடைய அரண் முதலிய ஏழும்.

[31] உடல் என்றது பொருள் வருவாய்க்குரிய நிலைக் களத்தை.

[32] வருவாயின் உடலில் விற்றல் முதலிய இவ்வேழும் சிறந்தனவாத லால் முகம் போல்வன என்பது கருத்து. விற்றல்—கூலம் முதலியவற்றின் விலையாற் கிடைக்கும் ஊதியம்.

[33] வாசி—குடிமக்களுக்குக் கூலம் முதலியன கொடுத்துக் காலம் தாழ்த்து வாங்குங்கால் மூலப்பொருளுக்கு வட்டிபோல் மிகுதியாக வாங் கப் படுவது.

[34] கடத்தல்—ஆறு முதலியவற்றைக் கடத்தற்கு அமைத்த தோணித் துறை முதலியவற்றினின்றும் கிடைக்கும் வருவாய்.

[35] வரையறை—இக்கிராமத்திற்கு இவ்வளவு பொன் அல்லது இவ் வளவு தானியம் கொடுத்தல் வேண்டும் என்று அறுதியிடல்.

[36] மங்கல வாழ்த்து—அரசனது நலங்கருதிச் செய்யப்படும் மங்கல வாழ்த்தினிமித்தம் பெரியோர்க்குக் கொடுக்கப்படும் பொருள்.

[37] உவளகம்—கோப்பெருந்தேவி காமக்கிழத்தி முதலிய அரச குடும்பத் தினர் பொருட்டுச் செலவு செய்யப்படும் பொருள்.

[38] தூதுவிடல்—வேற்று நாட்டிற்குத் தூது விடுதலால் நேரும் செல வுப் பொருள்.

[39]படைக்கலக்கொட்டில் விலைப்பண்டம்தொகுக்குமிடம் [40]குப்பியச் சாலை [41]தொழில் [42]வன்செய்கை யானை தேர் குதிரை காலாள் என்னும் படையமைப்பு ஆனினம் காட்டுப்பசு மான் [43]பறவை புலி என்னும் இவற்றைச் [44]சிறைப்படுத்தல் விறகு புல் உண்டாக்கும் நிலம் என்னும் இவை செலவிற்கு [45]உடலாகும்.

அரசன் முடிசூடிய யாண்டும் திங்களும் பக்கமும் நாளும் [46]திருநாளாகும். [47]மழை பனி வெயில் என்னும் இக்காலங்களின் [48]மூன்றுவது ஏழாவது பக்கங்கள் ஒவ்வொரு நாள் குறைந்தன

---

[39] படைக்கலக் கொட்டில்—புதிய படைக்கலங்களை உண்டாக்குதற்கும் அவற்றைக் காப்பாற்றுதற்கும் நேரும் செலவுப் பொருள்.

[40] குப்பியச்சாலை—தேக்கு முதலிய வன் மரங்கள் மூங்கில் பிரப்பங் கொடி மரவுரி இவற்றைச் செப்பனிட்டுக் கொணர்தற்கும் காத்தற்கும் நேரும் செலவுப் பொருள்.

[41] தொழில்—உழவு முதலிய தொழில்களின் பொருட்டுச் செலவிடப் படும் பொருள்.

[42] வன் செய்கை—நாட்டில் எதிர்பாராத நிலையில் ஏற்படும் அரசியற் கலகத்தை அடக்குதற் பொருட்டு மேற் கொள்ளப்படும் செயலால் உண் டாம் செலவுப் பொருள்.

[43] பறவை—கிளி நாகணவாய்ப்புள் முதலியன.

[44] சிறைப்படுத்தல் காட்சிப் பொருட்டு.

[45] உடல் என்றது பொருட் செலவுக்குரிய நெறிகளை.

[46] திருநாள் என்னும் பெயருடையதாகும். இஃது அரசியற் கணக்கு வரைதல் முதலியவற்றிற்கு எடுத்தாளப்படுதல் கருதி இவ்வாறு கூறப் பட்டது. " இன்ன ஆண்டு இத்திங்கள் இப்பக்கம் இந்நாளில் இன்னு னுக்கு இவ்வளவு கொடுக்கப்பட்டது " என்று கணக்கெழுத நேருங்கால் அவ்வாண்டு முதலியவற்றை அரசன் முடி சூடிய நாள் தொடக்கமாக எண்ணிக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[47] ஆவணி முதல் கார்த்திகை முடிய நான்கு திங்கள் மழைக்காலம் ஆகும். மார்கழி முதல் பங்குனி முடிய நான்கு திங்கள் பனிக்காலம்ஆகும். சித்திரை முதல் ஆடி முடிய நான்கு திங்கள் வெயிற்காலம் ஆகும்.

[48] ஒரு பக்கம் பதினைந்து நாளாகும். மழை பனி வெயில் என்னும் மூவகைப்பட்ட காலங்களில் ஒவ்வொன்றினும் மூன்றுவது ஏழாவது பக்கங் கள் என்று கொள்ளல் வேண்டும். அவையாவன—புரட்டாசி, கார்த்திகை, தை, பங்குனி, வைகாசி, ஆடி இத்திங்களின் முதற் பக்கங்கள். இவை ஒவ்வொன்றிற்கும் பதினான்கு நாட்களாகும். ஏனைய பக்கங்கள் பதினெட் டும், தனித்தனிப் பதினைந்து நாட்கள் கொண்டனவாம்.

வாகும். ஏனைய நிறைவுடையனவாம். [49]சாந்திரமான மாதம் வேறாகும். இங்ஙனம் கால அளவு கூறப்பட்டதாகும்.

[50]செயத்தகுபொருள் சித்தம் எச்சம் வரவு செலவு இருப்பு (இவ்வாறும் பொருள் நெறியாகும்.)

அவற்றுள் [51]செயத்தகுபொருள், [52]வரையறை [53]பிரசாரம் [54]உடல்நிலை [55]ஏற்றல் [56]பலவகைப் பொருட்டொகுதி [57]ஆக்கம் என்று அறுவகைப்படும்.

---

49 சௌரமானம் சாந்திரமானம் எனக் காலம் இருவகையாற் கணித்துக் கொள்ளப்படும். சௌரமானம் சூரியனைப் பற்றியும் சாந்திரமானம் சந்திரனைப்பற்றியும் கணிக்கப்படும். ஓர் இராசியிற் கதிரவன் புகுந்த நாள் தொடங்கி மற்றோர் இராசியிற் புகும் வரை உள்ள காலம் சௌரமான மாதமாகும். வளர்பிறைப் பிரதமை முதற்கொண்டு அமாவாசை முடிய உள்ள காலம் சாந்திரமான மாதம் ஆகும். சௌரமான அளவையினின்றும் சாந்திரமான அளவையில் மாதம் மிகு மாதலால் அம்மிகுதி நோக்கிச் சாந்திரமானத்தை அதிமாதம் என்று கூறுப.

50 பொருள் நெறி வகைகளின் பெயர்கள் கூறப்படுகின்றன.

51 செயத்தகுபொருள் — இன்றியமையாது செய்யத்தக்கது என்பது பற்றிச் செயத்தகுபொருள் எனப்பட்டது. இஃது அறுவகைத்து.

52 வரையறை—இன்ன கிராமத்தினின்றும் இவ்வளவு பெறவேண்டும் என்னும் வரையறை.

53 பிரசாரம்—இன்ன நாட்டினின்றும் இவ்வளவு பெறவேண்டும் என்னும் துணிவு.

54 உடல்நிலை—நாடு நகரங்களிலுள்ள வருவாயின் உடல் இத்துணைத்தென்னும் துணிவு.

55 ஏற்றல் — குடிகளிடத்தினின்றும் கூலம் பொன் முதலியவற்றைத் தக்க காலத்திற் பெறுதல்.

56 கிராமம் நகரங்கள் எல்லாவற்றினும் உண்டாம் பலவகைப் பொருட்கூட்டங்களைப் பற்றிய அறிவு. தொகுதி ஈண்டு அதனை அறியும் அறிவின் மேற்று.

57 ஆக்கம்—எல்லா வகையான பொருள் நெறிகளாலும் அடையப்பட்ட பொருள் இத்துணை என்னும் அறிவு. ஈண்டும் ஆக்கம் அதனை அறியும் அறிவின் மேற்று.

[58]கருவூலவைப்பு [59]அரசன் பெற்றது [60]நகரச்செலவு என்னும் [61]உட்புகுதியும், [62]கழிந்த ஆண்டுத்தொடர்பு [63]எழுத்துக்கட்டளைச் செலவு [64]சொற்கட்டளைச் செலவு என்னும் [65]வெளிப்பாடும் [66]சித்தமாகும்.

[67]இருப்புப்பொருளைத் தனக்கு [68]உரிமையாக்கிக் கோடல் [69]படையெச்சம் என்னும் [70]எளிதிற் பெறுதலும் [71]வலிமையாற் கொடாமை [72]விரும்பியவாறு ஒழுகுதலாற் கொடாமை என்னும்

---

[58] இனி இரண்டாவது பொருள் நெறியாகிய சித்தத்தின் வகைகள் கூறப்படுகின்றன. கருவூலவைப்பு—பொருட் பண்டாரம் புரப்போன்பால் வைக்கப்பட்டது.

[59] அரசன் பெற்றது — இறைப்பொருள் தொகுப்போனிடமிருந்து அரசன் தன் குடும்பச்செலவின் பொருட்டுப் பெற்றுக்கொண்டது.

[60] நகரச்செலவு—மன்றம் அமைத்தல் முதலியவற்றின் பொருட்டுச் செலவிடப்படுவது.

[61] உட்புகுதி—இங்கே கூறப்பட்ட மூன்றும் நகரத்துள் நிகழ்வன வாதலின் உட்புகுதி எனப்பட்டன.

[62] கழிந்த ஆண்டுத் தொடர்பு—சென்ற ஆண்டுகளில் வரவேண்டிய பொருள் வாராமல் எஞ்சி நிற்பது.

[63] எழுத்துக் கட்டளைச் செலவு—அரசனுடைய எழுத்து மூலமான கட்டளைபற்றிப் பிறர்க்குக் கொடுக்கப்படுவது.

[64] சொற்கட்டளைச் செலவு — அரசனுடைய சொற்படி பிறர்க்குக் கொடுக்கப்பட்டது.

[65] வெளிப்பாடு — இங்கே கூறப்பட்ட மூன்றும் நகரத்தினின்றும் வெளிப்படுவன ஆதலின் வெளிப்பாடு எனப்பட்டன.

[66] சித்தம்—இங்ஙனம் உட்புகுதி மூன்றும் வெளிப்பாடு மூன்றும் ஆகிய இவ்வறுவகையும் நிறைவேறிய முடிபு ஆதலின் சித்தம் எனப்பட்டன.

[6] இருப்புப் பொருள்—குடிகளிடம் கையிருப்பிலுள்ள கூலம் முதலியன.

[68] உரிமையாக்கிக் கோடல் — குடிகளிடமிருந்து கிடைக்கவேண்டிய இறைப்பொருளுக்கு ஈடாகக் கைப்பற்றிக் கொள்ளுதல்.

[69] படையெச்சம்—படைகளின் செலவுக்கெனத் திட்டம் செய்யப்பட்ட பொருளிற் செலவு போக எஞ்சிய பொருள்.

[70] இருப்புப் பொருளும் படையெச்சமும் எளிதிற் கொள்ளத்தக்கன வாதலின் இவ்விரண்டும் "எளிதிற் பெறுதல்" என்பதன்பாற்படும்.

[71] வலிமையாற் கொடாமை — அரசனுக்குக் கொடுக்கவேண்டிய பொருளை அரசியல் வினைஞரின் சார்பு வலிமையாற் கொடாதிருத்தல்.

[72] விரும்பியவாறு ஒழுகுதல்—அரசியல் நீதியைப் புறக்கணித்து மனஞ் சென்றவாறு நடத்தல்.

[73]அரிதிற் பெறுதலும் [74]பயனின்மை [75]சிறுபயனுடைமை என்னும் இவையும் [76]எச்சமாகும்.

நிகழ்வது கடந்தது வேறுயது [77]என்பன வரவு ஆகும். [78]நாடோறும் வருவது நிகழ்வது ஆகும். [79]சென்ற ஆண்டினதும் [80]பிறரின் வந்ததும் [81]கடந்ததாகும். [82]இழந்ததன் நினைப்பு, [83]வினைஞர் தண்டம் [84]நெறியிலி [85]அழிவினீடு [86]கையுறை [87]பூசலாலெய்

---

73 அரசனுக்கு இறுக்கவேண்டிய பொருளை வலிமையாலும், நீதி நூலைப் புறக்கணித்து விரும்பியவாறு நடத்தலாலும் கொடாதாரிடத்தினின்றும் முயன்று பெறவேண்டுமாகலின் அங்ஙனம் பெறுதல் " அரிதிற் பெறுதல் " என்பதன்பாற்படும்.

74 பயனின்மை—வரவேண்டிய பொருள் நிமித்தம் செய்யப்படும் செலவு பயனின்றி ஒழிதல்.

75 சிறுபயனுடைமை—மிகுதியாகச் செலவிட்டுச் சிறுபயன் பெறுதல்.

76 அரசனுக்கு வரவேண்டிய இறைப்பொருளில் எஞ்சியதைப் பற்றியதாகலின் " எச்சம் " எனப்பட்டது. எளிதிற் பெறுதலிரண்டும், அரிதிற் பெறுதலிரண்டும் பயனின்மையும் சிறுபயனுடைமையும் ஆகிய இவ்வாறும் எச்சமாகும் என்பதாம்.

77 என்பன—என்னும் மூன்றும்.

78 நாள்தோறும் வரும் வருவாய் " நிகழ்வது " என்னும் பெயர்த்தாம்.

79 சென்ற ஆண்டினது—சென்ற ஆண்டுகளில் வாராமல் தடைப்பட்டிருந்து நிகழும் ஆண்டில் வந்தது.

80 பிறரின் வந்தது—பகைவர் நாட்டினின்றும் வந்தது. முன்னிருந்த அரசியல்வினைத் தலைவரால் வந்ததுமாம்.

81 சென்ற காலத்தைப் பற்றியதாகலின் கடந்தது என்னும் பெயர்த்தாயிற்று.

82 இழந்ததன் நினைப்பு—மறப்பினால் இழந்ததை நினைந்து பெறுதல்.

83 வினைஞர் தண்டம்—குற்றஞ்செய்த அரசியல் வினைஞரிடத்தினின்றும் பெற்ற தண்டப்பொருள்.

84 நெறியிலி—நீதிமுறை கடந்து மிகுதியாக இறைப்பொருள் பெறுதல்.

85 அழிவினீடு—எருது முதலிய விலங்குகளால் அழிக்கப்பட்ட நெற்பயிர் முதலியவற்றிற்கு ஈடாகக் கொள்ளும் பொருள்.

86 கையுறை—அரசனைக் காண வருவோர் காணிக்கையாகக் கொடுக்கும் பொருள்.

87 பூசலால் எய்தும் பொருள்—பகைவராற் கலகம் நேர்ந்துழிப் பகைப்படையினின்றும் கவர்ந்த பொருள்,

தும் பொருள் [88]எச்சமில் பொருள் [89]நிதி என்னும் [90]இவை [91]வேறுயது ஆகும். [92]இயங்குபடைச் செலவெச்சம் [93]மருத்துவச் செலவெச்சம் [94]உள்வினைச் செலவெச்சம் என்னும் [95]இவை செலவின் எஞ்சிய வரவாகும். [96]விலைப்பண்டங்களின் மிகைவிலை [97]அயற்றோற்றம், முகத்தல் நிறுத்தல் முதலிய [98]அளவைமாறுபாடு [99]வாசி கொள்பொருளின் [100]இகல்விலை என்னும் [101]இவைகளும் வரவுபொருள்களாகும்.

நித்தியம், நித்தியத் தோற்றம், ஊதியம், ஊதியத் தோற்றம் [102]என்பன செலவாகும். நாடோறும் ஆகும் செலவு நித்தியமாகும். பக்கம் திங்கள் ஆண்டுகளிற் பெறக்கடவ ஊதியங்களின் பொருட்

---

88 எச்சமில் பொருள்—சந்ததியில்லாதார் பொருள்.

89 நிதி—புதையற் பொருள்.

90 இவை—இவ்வெண் வகையும்; இவை வேறுயதன்பாற்படும்.

91 வேறுயது–நிகழ்வது, கடந்தது என்பவற்றினின்றும் வேறுபட்டமையின் வேறுயதென்னும் பெயர்த்தாயிற்று.

92 இயங்குபடைச் செலவெச்சம்—ஒரு காரிய நிமித்தம் ஏவப்பட்ட படைவீரர் செலவின் பொருட்டுத் திட்டம் செய்யப்பட்ட பொருளினின்றும் எஞ்சியது.

93 மருத்துவச் செலவெச்சம் — மருத்துவச் செலவின் பொருட்டுத் திட்டஞ் செய்யப்பட்ட பொருளினின்றும் எஞ்சியது.

94 உள்வினைச் செலவெச்சம்—அரண் அரண்மனை முதலியவற்றைச் செப்பனிடுதற்குத் திட்டம் செய்த பொருளினின்றும் செலவு போக எஞ்சியது.

95 இவை—இம்மூன்றும்.

96 விலைப்பண்டங்களின் மிகைவிலை — பண்டங்களுக்கு அறுதியிடப் பட்ட விலையினின்றும் விற்போர் மிகுதிப்படுத்தி விற்று வாங்கிய பொருள்.

97 அயற்றோற்றம் — விற்பனை செய்யக்கூடாதென்று தடுக்கப்பட்ட பண்டங்களை விற்றதனால் கிடைக்கும் பொருள்.

98 அளவை மாறுபாடு—அளவு கருவிகளை மாறுபடுத்தி மிகையாகக் கொள்ளும் பொருள்.

99 வாசி—மீண்டும் அளக்குங்கால் குறைவுபடுதல் குறித்து ஓரளவு மிகுத்து வாங்குதல்.

100 இகல்விலை–ஒரு பண்டத்திற்கு அறுதியிட்ட விலையினின்றும் கொள்வோர் தம்முள் மாறுபட்டு உயர்த்திய விலைப்பொருள்.

101 இவை—இவ்வைந்தும்.

102 என்பன—என்னும் இந்நான்கும்.

டுச் செய்யப்படும் செலவு [103]ஊதியமாகும். இவ்விரண்டினின்றும் தோன்றுவன முறையே [104]நித்தியத் தோற்றமும் [105]ஊதியத் தோற்றமும் ஆம்.

செலவு கணக்கால் கணிக்கப்பட்டு எல்லாச் செலவுங்கழிய எஞ்சி நின்றது இருப்புப் பொருளாகும். அஃது [106]அடைந்ததும் [107]அடையக்கடவதுமாம்.

### சுலோகம்

இங்ஙனம் பொருள் நெறியை இயற்றல் வேண்டும். அறிஞனாகிய இறைப் பொருள் தொகுப்போன் [108]வருவாயின் பெருக்கத்தையும், செலவின் சுருக்கத்தையும் காட்டுதலோடு மாறுபாட்டையும் அறிந்து விலக்கல் வேண்டும்.

முதலதிகரணம் ஆறும் பிரகரணம்
“ இறைப்பொருள் தொகுப்போன் ஏற்கும் பொருள் நெறி ”
என்னும் இருபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

103 ஊதியம் — வருவாயின் பொருட்டுச் செய்யப்படுதல் பற்றி இச் செயல் ஊதியம் என்னும் பெயர்த்தாயிற்று.

104 நித்தியத் தோற்றம் — நாடோறும் வினை செய்வார்க்கு வரையறுக்கப்பட்ட வேதனத்தின் மிகுதியாகக் கொடுக்கப்படும் பொருள்.

105 ஊதியத் தோற்றம்—ஊதியத்தின் பொருட்டு வரையறுக்கப்பட்ட செலவின் மிகுதியாகச் செலவிடும் பொருள்.

106 அடைந்தது—கருவூலத்திற் சேர்ந்தது.

107 அடையக்கடவது—கருவூலத்திற் சேர்க்கவேண்டியதாகவுள்ளது.

108 “ ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை ” (478)

என்னும் திருக்குறட் கருத்து ஈண்டுப் பொருத்தமாதலறிக.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

### ஏழாம் பிரகாரணம்—[1]பொருட்கணக் கெழுதுவோர்ப் பொருந்ததிகாரம்.

### இருபத்தெட்டாம் அத்தியாயம்

கணக்கர்தலைவன் [2]கிழக்கு அல்லது வடக்கு நோக்கிய முகமுடையதாகவும், [3]பல்வேறு கட்டுக்களை உடையதாகவும் கணக்கேடுகளை வைத்தற்குரியதாகவும் கணக்கெழுதும் சாலையைச் செய்வித்தல் வேண்டும்.

பொருள் உண்டாகும் இடங்களின் [4]எண் ஊர் [5]தொகுதி என்னும் இவற்றின் அளவையும், [6]தொழில் நிலையங்களின் [7]பொருள் விநியோகத்தில் ஏற்படும் [8]வளர்ச்சி [9]குறைவு [10]செலவு

---

#### 28-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] முன்னைப் பிரகரணத்தில் இறைப் பொருள் தொகுப்போன் மேற்கொள்ளும் பொருள் நெறிகளில் வரவு செலவுகளைப் பற்றிய செய்திகள் கூறப்பட்டன. இப்பிரகரணத்தினுல் அவ் வரவு செலவுகளைப் பற்றிய கணக்கெழுதும் முறைகள் கூறப்படுகின்றமையின் இஃது அதன் பின் வைக்கப்பட்டது. இதனுற் பிரகரண வியைபு புலனும்.

[2] கிழக்கும் வடக்கும் மங்கலகரமான திசையாதலின் அத்திசைகளை நோக்கிய முகமுடையதாக அமைத்தல் நன்றென்பது கருத்து.

[3] தலை இடைகடையாய தலைவர்கள் தனித்தனி இருத்தற்குத் தகுதியுடையனவாக அக்கணக்குச் சாலையின் உள்ளே பல அறைகள் அமைத்தல் வேண்டும் என்பது.

[4] எண்—பெயர் குறிப்பிட்ட தொடர் எண்.

[5] தொகுதி—பொருளெல்லாவற்றின் கூடிய எண்.

[6] தொழில் நிலையங்கள்—ஆகரம் விளை நிலம் முதலியன.

[7] பொருள் விநியோகம்—அவ்வத் தொழிலாளர் பொருட்டுக் கொடுக்கப்படும் பொருட்கூறு.

[8] வளர்ச்சி—வட்டி.

[9] குறைவு—தொழிலாளர்க்குக் கொடுப்பதால் உண்டாவது.

[10] செலவு—கூலம் பொன் முதலியவற்றைப் பற்றியது.

[11]கூலவிருப்பம் [12]வாசி [13]கலப்பு [14]இடம் கூலி [15]வன்செய்கை என்னும் இவற்றின் அளவையும் மணி திண்மைப் பொருள் நொய்மைப் பொருள் குப்பியம் என்னும் இவற்றின் விலை [16]நிறப் பண்பு [17]சிற்றளவு [18]உருவ அளவு [19]பேரளவு மூலப் பொருள் என்னும் இவற்றையும் [20]நாடு கிராமம் [21]சாதி [22]குலம் குழு என்னும் இவற்றின் [23]கடமை தாயபாகம் [24]வழக்க இயல்பு என்னும் இவற்றையும் அமைச்சர் புரோகிதர் முதலியோர்க்குச் செய்யும் [25]சிறப்பு, வாழுமிடம் கையுறை [26]கறையின்மை உணவு கூலி ஊதியம் என்னும் இவற்றையும் அரசன் தேவி புதல்வர் என்னும் இவர்களுடைய மணி நிலம் இவற்றின் [27]பேறும் [28]மிகுதியின் துணிவும்

---

[11] கூல விருப்பம்—பண்டங்களின் விலை மிகுதி பற்றிக் கூலம் முதலியவற்றைத் தொகுத்து வைத்தல் வேண்டும் என்னும் விருப்பம்.

[12] வாசி—நிறுத்தலளவை முகத்தலளவைகளின் குறைவுபாடு நிமித்தம் ஏற்படும் மிகுதி.

[13] கலப்பு—உயர்ந்த பொருளோடு தாழ்ந்த பொருளைக் கலத்தல்.

[14] இடம்—கிராமம் முதலியன.

[15] வன் செய்கை—வலிந்து முயன்று செய்யும் செயல்.

[16] நிறப் பண்பு—மணி முதலியவற்றின் நிறவியல்பு.

[17] சிற்றளவு—நிறுத்தலளவையில் குன்றி முதலிய சிறிய எடை.

[18] உருவ அளவு—வட்டம் சதுரம் திரட்சி முதலிய வடிவங்கள்.

[19] பேரளவு—எடை மிக்கது.

[20] நாடு—நடு நாடு கீழ்நாடு மேனாடு முதலிய நாட்டின் உட்பிரிவுகள்.

[21] சாதி—அந்தணர் முதலிய வகுப்பு.

[22] குலம்—குடிப்பிறப்பு.

[23] கடமை—வருண தருமம்.

[24] வழக்கவியல்பு—நாடு சாதி குடிப்பிறப்பு முதலியவற்றால் மக்கள்பால் நிகழும் வழக்கங்கள்.

[25] சிறப்பு—தகுதிக்கேற்பப் பெருமைப்படுத்தல்.

[26] கறையின்மை—அமைச்சர் முதலியோர் நிலங்களுக்கு அரசிறை கொள்ளாமை.

[27] பேறு—இரத்தினம் நிலம் முதலியவற்றால் உண்டாகும் ஊதியம்.

[28] மிகுதியின் துணிவு—அரசன் தேவி புதல்வர் என்னுமிவர்க்கு நாடோறும் கொடுக்கப்படும் பொருளினின்றும் சிறப்பு முறையில் மிகுதியாகக் கொடுக்கவேண்டிய பொருளளவின் றுணிவு.

[29]விழா முதலியவற்றின் பொருட் பேறும் [30]பரிகாரப் பேறும் ஆகிய இவற்றையும் [31]நண்பர் பகைவர் என்னும் இவர்பால் நட்புக் கொண்டு கொடுப்பதையும் பொருது பெறுவதையும் கணக்கேடு களில் [32]எழுதிவைத்தல் வேண்டும்.

[33]எல்லாத் தொழில் நிலையங்களும் [34]செயத்தகு பொருள் சித்தம் எச்சம் வரவு செலவு இருப்பு [35]அரசிருக்கை எய்துங் காலம் நகரம் வழக்கமுறை முன்னை நிலை என்னும் இவ்[36]வெல்லாவற்றை யும் கணக்கேட்டில் எழுதிக் [37]கொடுத்தல் வேண்டும்.

[38]தலையிடை கடையாகிய காரியங்களில் அவற்றிற்குத் தகுதி யான தலைவரை அமைத்தல் வேண்டும். [39]தகுதியுடைய ஒரு குழுவில், [40]ஒறுக்கப்பட்ட வழி அரசன் இரங்குதற்கு ஏதுவாகாத

---

[29] திருவிழா முதலிய சிறப்பு நாட்களில் அரசன்பொருட்டுக் குடி மக்களால் கொடுக்கப்படும் பொருளூதியம் என்பது.

[30] பரிகாரப் பேறு—பிணிக்குக் கொடுக்கப்படும் மருந்து முதலியவற் றின் நிமித்தம் பெறும் பொருள்.

[31] நட்டோர்க்கு நட்பு கருதிக் கொடுக்கப்படும் பொருளும், பகைவ ரோடு பொருது பெறும் பொருளும் என்பது கருத்து.

[32] மேற் குறிப்பிட்ட எல்லாவற்றையும் விளக்கமாகக் கணக்கில் எழுதி வைத்தல் வேண்டு மென்பது.

[33] தொழில் நிலையங்கள் ஈண்டு அவ்வத் தொழிற்றலைவரை யுணர்த்தும்.

[34] செயத்தகு பொருள் முதல் இருப்பு ஈறாகவுள்ள ஆறனையும் முன்னை அத்தியாயத்திற் காண்க.

[35] கணக்கெழுதுவோர் தத்தம் காரியங்களை அறிவித்தற் பொருட்டு அரசன் திருமுன் எய்துங்காலம் என்பது கருத்து.

[36] எல்லாவற்றையும்—இப்பத்துச் செய்திகளையும்.

[37] அரசன் கொடுத்தல் வேண்டும் என்பது கருத்து.

[38] இறைப் பொருள் தொகுத்தல் கருவூலத் தலைமை முதலியன தலை யாய காரியம் எனவும் உணவுப் பொருட்சாலை படைக்கலக் கொட்டில் முதலியவற்றைப் பற்றிய தொழில்கள் இடையாய காரியம் எனவும் கள் இறைச்சி முதலியவற்றைப்பற்றிய தொழில்கள் கடையாய காரியம் எனவும் கொள்க.

[39] தகுதியுடைய குழு—ஒரு காரியத்தில் திறமை வாய்ந்த பலரையுடைய கூட்டம்.

[40] ஒரு காலத்துக் குற்றம் செய்து தண்டிக்கப்பட நேர்ந்துழி அத்தண் டனைபற்றி அரசன் இரங்குதற்கு ஏதுவாகாதவனும் திறனுடையானுமாகிய ஒருவனைத் தலைமைப் பதவியிலிருத்தல் வேண்டும் என்பது கருத்து. இதனால் அரசன் இரங்குதற்கு ஏதுவாகிய அந்தணர், தன் உறவினர், அரசியின் உறவினர் முதலியோரைத் தலைமைப் பதவியில் அமைத்தல் ஆகாது என்பது போதரும்.

[41]பெருமையுடையான் ஒருவனைத் தலைவனாக அமைத்தல் நன்று.

ஒரு தொழிற்றலைவனால் காரியக்கேடு நேர்ந்துழி அதனால் உண்டாம் இழப்பை அக்கேட்டிற்கு உதவியாயினார் பிணையாளர் உதவித் தொழிலாளர் அவன்புதல்வர் உடன்பிறந்தோர் மனைவியர் புதல்வியர் பணியாளர் என்னுமிவர்கள் [42]ஈடுசெய்யக்கடவர்.

இரவும் பகலும் ஆகிய நாள் [43]முந்நூற்றைம்பத்து நான்கு கொண்டது ஒரு தொழிலாண்டாகும். அத் தொழிலாண்டு [44]ஆவணித் திங்கள் தொடங்கி ஆடியிறுதியாகக் கொள்ளப்படும். [45]நிறையினும் குறையினும் அவ்வாறே கொள்ளல் வேண்டும் [46]அதிமாதத்தைக் கணக்கன் வாயிலாகக் கணித்துக்கொள்ளல் வேண்டும். நாட்டை ஒற்றர்களின் கண்காணிப்புடையதாகச் செய்தல் வேண்டும். நாட்டின் இயல்பு வழக்க ஒழுக்கங்கள் அவற்றின் முன்னை நிலைமை இவற்றை [47]அறியாத தொழிற்றலைவன் அறிவின்மையாலும், முயற்சி வருத்தத்தைப் பொறுக்க இயலாமையால் உண்டாம் மடியினாலும் ஓசை முதலிய புலன்களில் உள்ள

---

[41] பெருமை — அறிவு காரியத்திறமை நற்குணம் புகழ் முதலியன உடைமை. காரியத் திறமையுடையார் பலருள், நற்குணமுடையாரையும், நற்குணமுடையார் பலருட் கீர்த்தியுடையாரையும், ஆராய்ந்து அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[42] இங்குக் கூறப்பட்ட எண்மருள் முறையே முன்னவர் இல்வழிப் பின்னவர் ஈடுசெய்தல் வேண்டும் என்பது கருத்து.

[43] ஓராண்டிற்குரிய முந்நூற்றறுபது நாட்களில் சாந்திரமான முறைப் படிக் கார் முதலிய பருவம் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு நாள் விகிதம் குறைக்க ஆறு நாட்கள் கழிவு ஏற்படுமாதலால் 354 நாட்கள் ஓராண் டென்று கொள்ளப்பட்டது.

[44] இதனாற் பண்டைக்காலத்தில் ஆண்டுத் தொடக்கம் ஆவணி என்பது புலனாம். தமிழியல் நூலோர் பெரும்பொழுதை வரையறைப் படுத்துங்கால் “கார்” முதலாகத் தொடங்கியதும் ஈண்டுப் பொருத்தமாதலுணர்க.

[45] வினை செய்வார் ஆண்டின் தொடக்கத்தில் நியமனம் பெறினும், அன்றி இடைக்காலத்தில் நியமனம் பெறினும் அவ்வாண்டின் இறுதி ஆடித் திங்களாகவே கொள்ளல் வேண்டும் என்பதும், இங்ஙனம் கோடல் தொழில் கூலி கணக்குப் பரிசோதனை முதலியவற்றிற்கு என்பதும் கருத்து.

[46] அதிமாதம் இன்னதென்பதை 27-ம் அத்தியாயக் குறிப்பிற் காண்க.

[47] அறியாத—ஒற்றர்கள் முகமாக அறிந்துகொள்ளாத.

[48]மயக்கத்தாலும் பழி பாவம் கேடு விளையும் என்னும் அச்சத்தாலும் காரியங் கருதி வருவோரை முன்னிட்டெழும் [49]கழிகண்ணோட்டத்தாலும், பிறரைத் துன்புறுத்தற்பொருட்டெழும் வெகுளியாலும், கல்வியுடைமை பொருளுடைமை அரசனைச் சார்ந்திருத்தல் இவை காரணமாக உண்டாம் செருக்கினாலும், நிறுத்தலளவை முகத்தலளவை [50]மதித்தலளவை எண்ணலளவை இவற்றை மாறுபடுத்தி வஞ்சிக்க எழும் அவாவினாலும் பொருள் வருவாயைக் குறைக்கக் கூடும்.

முறையே [51]அக்குற்றங்களுக்கு, எத்துணைப் பொருட் குறைவு ஏற்பட்டுள்ளதோ [52]அதற்கு [53]இருமடங்கு முதலியன தண்டமாகும். [54]எல்லாக் குற்றங்களுக்கும் எண்மடங்கு தண்டமாகும் என்பர் பாராசரர்; பதின் மடங்கென்பர் [55]பாருகற்பத்தியர்; இருபது மடங்கென்பர் [56]ஔசனசர். [57]குற்றத்திற்குத்தக இருக்க வேண்டும் என்பர் கௌடலியர்.

---

48 மயக்கம்—ஐம்புலனுகர்ச்சியிலுள்ள ஈடுபாடு.

49 கண்ணோட்டம்—ஒருவன் தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இக்குணம் அளவின் மிகுமாயின் அது குற்றத்தின்பாற்படும். இதனைச் "சினனே காமம் கழிகண்ணோட்டம்" (பதிற்றுப்பத்து 22) என்பதனாலுமறிக.

50 மதித்தலளவை — வேறு கருவிகளாலன்றி மனத்தால் மதிப்பிட்டு அளத்தல்.

51 அக்குற்றங்கள்—மேலே கூறப்பட்ட அறிவின்மை முதல் அவா இறுதியாக உள்ள எண்வகைக் குற்றங்கள்.

52 அதற்கு—அக்குற்றத்தாற் குறைந்த பொருளளவிற்கு.

53 அறிவின்மையாற் குறைந்த பொருளுக்கு அப்பொருளின் இருமடங்கும், மடியினாற் குறைந்த பொருளுக்கு மும்மடங்கும் இங்ஙனமே மற்றைய குற்றங்கட்கும் முறையே ஒவ்வொரு மடங்கு கூட்டியும் அக்குற்றஞ் செய்தார்க்குத் தண்டம் விதித்தல் வேண்டும் என்பது கருத்து.

54 பராசரர்வழிப்பட்டோர் அக் குற்றங்களால் விளையும் குறைவில் வேற்றுமையின்மையால் எல்லாக் குற்றங்களுக்கும் தனித்தனியே எண் மடங்கு தண்டம் பொருத்தமாகும் என்று கூறுவர் என்பதாம்.

55 பாருகற்பத்தியர்—வியாழன்வழிப்பட்டோர்.

56 ஔசநசர்—சுக்கிரன்வழிப்பட்டோர்.

57 குற்றங்களின் பெருமை சிறுமைகட்கேற்பத் தண்டங்கள் விதித்தல் வேண்டும் என்பது கௌடலியர் கொள்கையாம்.

[58]கணக்குகள் ஆடித் திங்களில் [59]வரல்வேண்டும். இலச்சினை இடப்பட்ட கணக்குச் சுவடிப் பேழையையும், இருப்புப் பொருளை யும் கொண்டுவரும் கணக்கர்கள் ஓரிடத்திற் கூடித் தம்முட் கலந்து பேசாதபடி தடைப்படுத்திக் [60]காத்தல் வேண்டும்.

வரவு செலவு இருப்பு இவற்றின் கூடுதற்றொகையை வாய் மொழியாற் கேட்டு இருப்புப் பொருளைக் கொணர்வித்தல் வேண் டும். இருப்புப் பொருளைப் பற்றி விளக்கும் ஏட்டில் வரவின் கூடுதற் றொகையினின்றும் மிகுதியாக இருக்கும் என்று அறியப் படினும், செலவின் கூடுதற் றொகையினின்றும் குறைவாக இருக் கும் என்று அறியப்படினும் அப் பொருளளவின் [61]எண்மடங்கு மிகுதியான பொருளை அக்கணக்கனிடத்தினின்றும் வாங்குதல் வேண்டும். [62]மாறுபட்டிருப்பின் அவனுக்கே உரியதாகும்.

உரிய காலத்தில் வராதவர்களும், கணக்கு ஏடும் இருப்புப் பொருளும் இல்லாமல் வந்தவர்களும் ஆகிய கணக்கர்களுக்கு அவர் செலுத்தவேண்டிய பொருளின் பதின் மடங்கு தண்டமாம்.

கணக்கர் தலைவன் [63]சித்தமாக இருக்குங்கால் கணக்கன்

---

[58] கணக்குகள்—ஆண்டு முடிவுக் கணக்குகள்.

[59] ஆண்டு முடிவுக் கணக்குகளைத் தலைவர் பார்வைக்குக் கணக்கர்கள் கொண்டுவரல் வேண்டும் என்பதாம்.

[60] கணக்கர் பலர் கலந்து பேச நேரின் தம்முள் ஒற்றுமைப்பட்டு இடையூறு விளைத்தல் கூடுமாதலால் அவ்வாறு நேராதபடி பார்த்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

[61] கணக்கன் வாய்மொழியிற் கேட்டதினின்றும் கணக்கேட்டின் மூல மாக வரவு தொகை அதிகமாக இருக்குமென்றுதல் செலவு தொகை குறைந் திருக்கு மென்றுதல் ஆராய்ந்து அறியப்படின் அக்கூடுதல் குறைதலளவில் எண்மடங்கு மிகுதியான பொருளை அக்கணக்கனிடத்தினின்றும் பெறல் வேண்டும் என்பது கருத்து.

[62] உண்மையான வரவினும் மிகுதியாக எழுதப்பட்டிருப்பதாகவாதல், உண்மையான செலவினும் குறைவாக எழுதப்பட்டிருப்பதாகவாதல், உண்மையான இருப்பினும் மிகுதியாக எழுதப்பட்டிருப்பதாகவாதல் ஆராய்ந்தறியப்படின் இவ்வாற்றான் மிகுந்த பொருளை அக்கணக்கனுக்கே கொடுத்துவிடல் வேண்டும் என்பதும், அவனது விழிப்பின்மைக்குத் தண்ட மாக அதனைக் கொள்ளலாகாதென்பதும் கருத்தாம்.

[63] சித்தமாக இருக்குங்கால்—குறிப்பிட்ட காலத்தில் கணக்கேட்டை ஆராய்தற் பொருட்டு வந்திருக்கும் பொழுது.

வாராமலிருப்பானாயின் அக்கணக்கனுக்குப் பூர்வ சாகசம் தண்டமாகும். [64]மாறுபடின் கணக்கர் தலைவனுக்கு இருமடங்கு பூர்வ சாகசம் தண்டமாகும்.

சிறந்த தொழிலமைச்சர் எல்லோரும் நாட்டு மக்கள் முன்னிலையில் [65]முரண்படாதவாறு [66]செய்திகளை அறிவித்தல்வேண்டும். [67]இவருள், [68]முரண்பட்டவனுக்கும் பொய்யுரைப்போனுக்கும் உத்தம சாகசம் தண்டம் ஆகும்.

கொண்டுவரவேண்டிய பொருளைக் குறித்த நாளில் கொண்டு வராதவனை [69]ஒரு திங்கள் வரை எதிர்பார்க்கலாம். ஒரு திங்களுக்கு மேலும் கொண்டுவரவில்லையானால் [70]திங்கள் ஒன்றிற்கு [71]இருநூறு விகிதம் தண்டம் விதிக்கலாம். சிறிதளவு இருப்புப் பொருள் செலுத்தவேண்டியவனை [72]மேலும் ஐந்து நாள் [73]எதிர் பார்க்கலாம்.

செலுத்தவேண்டிய இருப்புப் பொருளையும், கணக்கு ஏட்டையும் குறிப்பிட்ட நாளில் கொண்டுவந்த கணக்கனை [74]அறம் [75]உரையாடல் [76]உலக வழக்கு [77]முன்னை நிலை [78]தொகுத்துக் காண்டல்

---

64 மாறுபடின் — குறிப்பிட்ட காலத்தில் கணக்கன் வந்திருப்பக் கணக்கர் தலைவன் வராதிருப்பானாயின்.

65 முரண்படாதவாறு—ஒருவர் கூற்றுக்கு மற்றொருவர் கூற்று மாறுபடாதபடி.

66 செய்தி—வரவு செலவு இருப்புக்கள் இத்துணைய வென்பது.

67 இவருள்—இவ்வமைச்சருள்.

68 முரண்பட்டவன்—திரித்துக் கூறுவோன்.

69 ஒரு திங்கள் நீட்டிக் கொடுக்கலாம் என்பது கருத்து.

70 தாழ்க்குந் திங்கள் ஒவ்வொன்றிற்கும் என்க.

71 இருநூறென்பது ஈண்டுப் பணத்தை யுணர்த்தும்.

72 மேலும்—ஒரு திங்களுக்குப் பின்னும்.

73 அதற்குமேலும் வராவிட்டால் தண்டிக்கலாமென்பது.

74 அறம்—விதித்தன செய்தலும் விலக்கிய ஒழிதலுமாம்.

75 உரையாடல்—வினவும் விடையுமாகச் சொல்லாடல்.

76 உலக வழக்கு—உலகத்தோடு ஒட்ட ஒழுகல்.

77 முன்னை நிலை—கணக்கனுடைய முற்கால நிலைமை.

78 தொகுத்துக் காண்டல்—கணக்கன் கொண்டு வந்த பொருளை ஒன்று சேர்த்து எண்ணியறிதல்.

[79]காரியமுடிவு [80]அநுமானம் [81]ஒற்று என்னும் இவற்ருல் ஆராய்தல்வேண்டும்.

[82]ஒருநாள் ஐந்துநாள் பக்கம் திங்கள் நாற்றிங்கள் ஆண்டு என்னும் காலக் கூறுகளால் எண்ணிக் கணக்கு முடித்தல் வேண்டும். [83]திருநாள் இடம் [84]காலம் [85]வருவாய்முகம் [86]தோற்றம் [87]தொடர்ச்சி [88]அளவு என்னும் இவற்ருேடு, கொடுத்தோன் [89]கொடுப்பித்தோன் எழுத்தாளன் பெற்றுக்கொண்டவன் ஆகிய இவர்களையும் விளக்கி வரவு கணக்கை எழுதல் வேண்டும். திருநாள் இடம் காலம் செலவின் உடல் [90]ஊதியம் காரணம் கொடுக்கக்கடவ பொருள் [91]கலப்பு அளவு என்னும் இவற்ருேடு கட்டளையிட்டோன் கடன்கொள்வோன் பொருட்பண்டாரம் புரப்போன் [92]தானம் பெற்ருேன் ஆகிய இவர்களையும் விளக்கிச் செலவு கணக்கு எழுதல் வேண்டும். திருநாள் இடம் காலம்

---

[79] காரியமுடிவு—குறிப்பிட்ட காரிய நிறைவேற்றம்.

[80] அநுமானம்—நிகழ்ந்தது கொண்டு நிகழாததை உணர்தல்.

[81] ஒற்று—ஒற்றர் செயல்.

[82] ஆண்டின் முதற்றிங்களில் வளர்பிறை முதனுள் தொடங்கி ஐந்தாம் நாள்காறும் நாடோறும் நேரும் வரவு செலவு இருப்புக்களைத் தனித்தனியே கணக்கேட்டில் எழுதி அவ்வைந்துநாள் எண்களையும் கூட்டிக் குறிப்பிடல்வேண்டும். இங்ஙனம் ஐந்து ஐந்து நாட்களுக்குக் கூடிய தொகைகளைப் பக்கத்துக்கு ஒருமுறையாகவும் இரண்டுபக்கங்களுக்குக் கூடிய தொகைகளைத் திங்களுக்கு ஒரு முறையாகவும், திங்கள் நான்கிற் கூடிய தொகைகளை நான்கு திங்களுக்கு ஒருமுறையாகவும் நாற்றிங்கள் தொகை மூன்றனையும் ஆண்டிற்கொருமுறையாகவும் எண்ணிக் கணக்கு முடித்தல் வேண்டும் என்பது கருத்து.

[83] அரசன் முடிசூடிய ஆண்டு திங்கள் பக்கம் நாள் என்னும் இவை திருநாள் ஆகும்.

[84] மழை பனி வெயில் என்னும் மூவகைக் காலக் கூறுகள்.

[85] "வருவாய்முகம்" என்னும் இதனுல் வருவாயின் உடலையும் கொள்ளல் வேண்டும். இவற்றின் இயல்பை 27ம் அத்தியாயத்திற் காண்க.

[86] தோற்றம்—வரவின் உற்பத்தி ; சுங்கம் முதலியன.

[87] தொடர்ச்சி—முன்னை வரவின் தொடர்ச்சி.

[88] அளவு—பொருளின் அளவு.

[89] கொடுப்பித்தோன்—கொடுக்கத் தூண்டிய அரசியல் வினைஞன்.

[90] ஊதியம்—இதனை 27ம் அத்தியாயக் குறிப்பிற் காண்க.

[91] இவ்வத்தியாயம் 13ம் குறிப்பிற்காண்க.

[92] தானம் பெற்ருேன்—பார்ப்பான்.

இருப்பின்முகம் [93]தொடர்ச்சி [94]வடிவம் [95]இலக்கணம் அளவு பொருள்வைப்புப் பேழை என்னும் இவற்றோடு பாதுகாப்போனை யும் விளக்கி இருப்புப் பொருட் கணக்கு எழுதல் வேண்டும்.

கணக்கன் அரசனுக்குரிய பொருளில் [96]கருத்தில்லாமலிருப் பினும், அரசன் கட்டளைப்படி நடவாமலிருப்பினும் வரையறுக்கப் பட்ட நியமத்தினின்றும் வரவு செலவுகளை வேறுவிதமாகச் செய் யினும் அவனுக்குப் பூர்வசாகசம் தண்டம் ஆகும்.

ஒரு பொருளைப்பற்றி [97]முறையின்றியாதல் [98]முறைகடந் தாதல் [99]அறியக்கூடாத நிலையிலாதல் [100]கூறியது கூறலாகவாதல் எழுதிய கணக்கனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாகும்.

இருப்புத் தொகையைக் குறைய எழுதியவனுக்கு [101]இரு மடங்கும், அதனைத் தனக்குப் பயன்படுத்திக்கொண்டவனுக்கு [102]எண்மடங்கும் [103]அழிவு செய்தவனுக்கு [104]ஐந்து மடங்குடன் அழிவளவு மீண்டு கொடுத்தலும் தண்டமாகும். பொய் கூறிய வனுக்குக் கள்வனுக்குரியது தண்டமாகும். [105]பின்னர் அறியப் படினும் மறந்து நினைக்கப்படினும் அவற்றிற்கும் [106]இருமடங்கு தண்டமாகும்.

---

[93] தொடர்ச்சி—முன்னிருப்புப் பொருளின் தொடர்ச்சி.

[94] வடிவம்—பொன் வெள்ளி கூலம் முதலியன.

[95] இலக்கணம்—அடையாளம்.

[96] கருத்தில்லாமலிருத்தல் — புறக்கணித்துக் கணக்கேட்டில் எழுதா திருத்தல்.

[97] முறையின்மை—எழுதவேண்டிய ஒழுங்கு தழுவாமை.

[98] முறைகடத்தல்—ஒழுங்கு பிறழ எழுதுதல்.

[99] அறியக்கூடாத நிலை—பிறர் தெளிவாக அறிந்துகொள்ளாவாறு.

[100] முன் எழுதிய தொன்றனையே மீட்டும் எழுதல்.

[101] இருமடங்கு—முன்னர்க் கூறிய பன்னிரண்டு பணத்தின் இருமடங் காகிய இருபத்திநான்கு பணமாகும்.

[102] எண்மடங்கு—இது தொண்ணூற்றாறு பணமாகும்.

[103] அழிவு செய்தவன்—வேறு வகையில் செலவிட்டுக் கெடுத்தவன்.

[104] ஐந்து மடங்கு—அறுபது பணம்; அவற்றுடன் அழிவு செய்த பொருள் எவ்வளவோ அவ்வளவுமாம்.

[105] பின்னர் அறியப்படுதல்—முன்னர் எழுதாமல் விடப்பட்டுக் கணக் குப் பரிசோதனைக் காலத்தில் அறியப்படுதல்.

[106] இருமடங்கு—கள்வனுக்குரிய தண்டத்தின் இருமடங்கு.

## சுலோகம்

[107]சிறிய குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளல் வேண்டும். [108]வருவாய் சிறிதாயினும் மகிழ்ச்சியடைதல் வேண்டும். பேருதவி செய்த கணக்கர்தலைவனைச் சிறப்புடன் [109]ஏற்றுப் பெருமைப் படுத்தல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் ஏழாம் பிரகரணம்
"பொருட்கணக்கெழுதுவோர்ப் பொருந்ததிகாரம்"
என்னும் இருபத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

107 சிறிய குற்றம்—கணக்கர் தலைவனைப் பற்றியது.

108 வருவாய்—கணக்கர் தலைவனால் உண்டாக்கப்பட்டது.

109 ஏற்றல்—அவன் உயிருள்ளளவும் அப்பதவியில் இருக்கச் செய்தல்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

### எட்டாம் பிரகாரணம்—[1]வினைவலார் கவர்பொருள் மீட்டுக்கொணர்வித்தல்

### இருபத்தொன்பதாம் அத்தியாயம்

[2]எல்லாக் காரியங்களும் [3]பொருளைக் காரணமாகவுடையன ஆதலின் முதலிற் பொருளை [4]ஆராய்தல் வேண்டும்.

நாட்டுவளம் [5]வழக்க ஒழுக்கங்களைக் காத்தல் [6]கள்வரைக் களைதல் [7]வினைவலாரைத் தடைப்படுத்தல் [8]பயிர்த்தொழில்

---

### 29-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] பொருட் கணக்கெழுதுவோராகிய அரசியல் வினைஞர் கரவிற் கவர்ந்த பொருளை ஆராய்ந்தறிந்து மீட்டுக் கொணர்வித்தலைப்பற்றிய இது முன்னைப் பிரகரணத்தோடு இயைபுடைத்தாதலறிக.

[2] தன் நாடு நலம் பெறுதற்குரிய செயலாகிய தந்திரமும் பகைநாடு கோடற்குரிய உபாயமாகிய ஆவாபமும் ஆகிய இவற்றைப்பற்றிய செயல்களெல்லாம் என்பது கருத்து.

[3] "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னான் முடியும்" என்பது திருக்கோவை.

[4] பொருள் குறைவுபடாமல் வளர்ச்சி யெய்துதலை ஆராய்தல்வேண்டும் என்பது. "பொன்னினுகும் பொருபடை யப்படை, தன்னினுகுந் தரணி தரணியிற் பின்னையாகும் பெரும்பொரு ளப்பொருள், துன்னுங் காலைத் துன்னாதன வில்லையே" (செ. 1923) என்னுஞ் சிந்தாமணிச் செய்யுட் கருத்து இதனை வலியுறுத்தும்.

[5] நாட்டு வழக்கம் குலவழக்கம் முதலியவைகளை முன்னை நிலையினின்றும் பிறழவிடாமற் காத்தலால் மக்கள் மகிழ்ச்சியுடையராய் அரசனது கருவூலத்தை வளர்விப்பர் என்பது கருத்து.

[6] கள்வரைக் களைதல்—கள்வரை ஒறுத்தலால் நாட்டிற் களவு நிகழா வாறு செய்தல்.

[7] வினைவலாரைத் தடைப்படுத்தல்—அரசியல் வினைஞர் பொருளைக் கவர்ந்துகொள்ளாமலும், கைக்கூலிபெற்றுக் குடிகளைத் துன்புறுத்தாமலும் பாதுகாத்தல். "தன்னால் தன் பரிசனத்தால்..............ஆனபயம் ஐந்தும் காத்து" என்னும் பெரியபுராணச் செய்யுள் ஈண்டுக் கருதற்பாலது.

[8] பயிர்த் தொழில் வளர்ச்சி—பல்வகைக் கூலங்களைப் பெருக்குதல்.

வளர்ச்சி [9]விளைப்பண்டங்களின் மிகுதி [10]இடுக்கண் களைதல் [11]பரிகாரக் குறைவு கையுறைப் பொருள் என்னும் [12]இவை பொருள் வளர்ச்சிக்குரிய ஏதுக்களாம்.

[13]தடைப்படுத்தல் பயன்படுத்தல் தொழில்செய்தல் மறைவு செய்தல் வரையறைவிடுத்தல் நுகர்தல் மாற்றுதல் கவர்தல் என்னும் [14]இவை பொருள் குறைதற்குரிய ஏதுக்களாம்.

[15]அரசிறையை அறுதியிடாமை [16]கொள்ளாமை [17]கருவூலத்திற் புகுத்தாமை என்னும் இவை தடைப்படுத்தல் ஆகும். [18]அதற்குப் பதின்மடங்கு தண்டம் ஆகும்.

கருவூலத்திற் சேர்க்கவேண்டிய பொருளை [19]வட்டிப்பொருட்டு உபயோகப்படுத்தல் பயன்படுத்தலாகும். அப்பொருளைக்கொண்டு

---

9 விளைப்பண்டங்களின் மிகுதி—நீரினும் நிலத்தினும் உண்டாம் பொருள்களை மிகுவித்தல்.

10 இடுக்கண் களைதல்—நெருப்பு முதலியவற்றால் பொருள்களுக்கு அழிவு வாராமற் காத்தல்.

11 பரிகாரக் குறைவு—அரசிறை கொள்ளாது விடுதலைக் குறைத்தல்; வற்கடம் முதலிய காரணம் பற்றி அரசிறை கொள்ளாமல் விடுதல் வேண்டுமாயினும் அங்ஙனம் விடுதலை இயன்றவரை குறைத்துக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

12 இவை—இவை ஒன்பதும்.

13 பொருள் குறைதற்குரிய ஏதுக்களைப் பெயரளவிற் குறிப்பிடத் தொடங்குகின்றார்.

14 இவை—இவ்வெட்டும்.

15 அரசிறையை அறுதியிடாமை—குடிமக்களுக்கு விதிக்க வேண்டிய அரசிறையை விதியாமலும், இத்துணை யென்று வரையறை செய்யாமலும் விடுதல்.

16 கொள்ளாமை—விதித்த இறைப் பொருளைக் கொள்ளாது விடுதல்.

17 கருவூலத்திற் புகுத்தாமை—கொண்ட இறைப் பொருளைக் கருவூலத்திற் சேர்க்காமல் விடுதல்.

18 தடைப்படுத்த பொருளளவினும் பதின் மடங்கு தடைப்படுத்தியவன் தண்டம் இறுக்கவேண்டும் என்பது கருத்து.

19 அப்பொருளாற் கிடைக்கும் வட்டி ஊதியத்தைத் தான் அநுபவித்துக் கொண்டு பின்னர்க் கருவூலத்திற் சேர்த்து விட லாமென்று துணிந்து பயன் படுத்திக் கொள்ளுதல் என்பது.

[20]வாணிகஞ்செய்தல் தொழில்செய்தலாகும். இவ்விரண்டிற்கும் தண்டம் [21]பயனுக்கு இருமடங்காகும்.

[22]வந்த காலத்தை [23]வாராததாகவும் [24]வாராத காலத்தை வந்ததாகவும் செய்தல் மறைவுசெய்தலாம். அதற்குத் தண்டம் [25]ஐந்து மடங்காகும்.

வரையறுக்கப்பட்ட வரவைக் குறைத்தலும், வரையறுக்கப் பட்ட செலவை மிகுத்தலும் வரையறைவிடுத்தல் ஆகும். அதற்குத் தண்டம் [26]குறைவின் நான்கு மடங்காகும்.

அரசனுடைய பொருள்களைத் தான் அநுபவித்தலும், பிறரை அநுபவிக்கச் செய்தலும் நுகர்தல் ஆகும். அப்பொருள்களுள் மணிகளை அநுபவிப்பவனுக்குக் கொலைத்தண்டமும் [27]திண்மைப் பொருளை அநுபவிப்பவனுக்கு மத்தியமசாகச தண்டமும், நொய் மைப் பொருளையும் குப்பியப் பொருளையும் அநுபவிப்பவனுக்கு அப்பொருளளவின் இருமடங்கு தண்டமுமாம்.

---

20 வாணிகஞ் செய்தல்—வாணிகத்தாற் கிடைக்கும் ஊதியத்தைத் தான் அடைதற் பொருட்டுச் செய்தல் என்பது கருத்து.

21 பயன்—வட்டியும் ஊதியமுமாம்.

22 வந்த காலம்—இறைப் பொருள் கோடற்கு அறுதியிடப்பட்டு நெருங்கிய காலம்.

23 வாராததாகச் செய்தல் கைக்கூலி பெறும் விருப்பத்தால் என்பது கருத்து.

24 வாராத காலத்தை வந்ததாகச் செய்தற்குக் காரணம் இறைப் பொருள் இறுப்போர்பாலுள்ள வெறுப்பாகும்.

25 ஐந்து மடங்கு—அக்காலங்களில் இறுக்கப்படும் இறைப் பொருளின் ஐந்து மடங்கு என்பது கருத்து.

26 வரவிற் குறைந்த பொருளளவினும் செலவு மிகுதியால் வரவு பொருளிற் குறையும் பொருளளவினும் நான்கு மடங்கு தண்டம் என்பது கருத்து.

27 திண்மை நொய்மை குப்பியம் என்னும் பொருள்களினியல்பை 26-ம் அத்தியாயத்திற் காண்க.

பிறிதொரு பொருளை மாற்றாக வைத்து அரசனது பொருளைக் கவர்ந்துகொள்ளுதல் மாற்றுதலாகும். நுகர்தற்கு விதித்த [28]தண்டம் இதற்குமாம்.

வரவாக வந்த பொருளைக் கணக்கிற் குறிக்காமல் விடுதலும், [29]குறித்த செலவு பொருளைக் கொடாமலிருத்தலும், அடையப்பட்ட இருப்புப் பொருளை அடையவில்லை என்று [30]மறுத்தலும் கவர்தல் ஆகும். அதற்குப் [31]பன்னிரண்டு மடங்கு தண்டமாகும்.

அரசியல் [32]வினைஞர் அரசன் பொருளைக் கவர்ந்துகொள்ளுதற்குரிய வழிகள் நாற்பதாகும்—[33]முன்னர் வந்ததைப் பின்னர்ப் புகுத்தல் [34]பின்னர் வரக்கடவதை முன்னர்ப் புகுத்தல் [35]கொள்ள

---

[28] மணி திண்மை நொய்மை குப்பியம் என்னும் இப்பொருள்களை அநுபவிப்பவர்க்கு விதித்த தண்டங்களே மாற்றியவர்க்கும் முறையே கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[29] குறித்த—கணக்கிற் குறிப்பிட்ட.

[30] மறுத்தல்—அப் பொருள் என் கைக்கு வரவில்லை யென்று மறுத்துரைத்தல்.

[31] கவர்ந்த பொருளளவிற் பன்னிரண்டு மடங்கு என்பது கருத்து.

[32] கவர்ந்து கொள்ளும் நெறிகளை அறிந்தாலன்றிக் கவர்ந்து கொள்ளுதலை விலக்குதற்கும் கவர்ந்த பொருளை மீண்டு பெறுதற்கும் இயலாதாகலின் அந்நெறிகள் இங்கே கூறப்படுகின்றன.

[33] முன் விளைந்து வந்த நெல் முதலியவற்றின் இறைப் பொருளை அப்பொழுதே கணக்கிற் புகுத்தாமல் பின் விளைந்து வந்த கோதுமை முதலியவற்றின் இறைப் பொருளோடு கூடப் புகுத்தல் என்பது கருத்து. இதனால் இடைக்காலத்தில் அரசியல் வினைஞன் அநுபவித்தான் என்பது பெறப்படும்.

[34] பின்னர் விளைந்து வரக்கூடிய கோதுமை முதலியவற்றின் அரசிறையை அரசியற் காரியத்திற்கு அநுகூலஞ்செய்வதாகக் காரணம் காட்டி முன்னரே வாங்கி அதன் ஒரு கூற்றைக் கருவூலத்திற் சேர்த்தல் என்பது கருத்து. இதனாற் சேர்க்கப்பட்ட கூற்றின் எஞ்சிய பகுதியைப் பின்னர் உரிய காலத்தில் கருவூலத்திற் சேர்க்குங்காறும் தான் கொண்டு அதன் வட்டி முதலிய வருவாயை அநுபவித்தான் என்பது பெறப்படும்.

[35] கொள்ளாமல் விடுதற்குக் காரணம் இறுப்போன்பாற் பெறும் கைக்கூலி யென்பது கருத்து.

வேண்டிய இறைப்பொருளைக் கொள்ளாதுவிடல் [36]இறையிலிக்கு இறைகோடல் [37]கொண்டதைக் கொள்ளாததாகக் கூறல் [38]கொள்ளாததைக் கொண்டதாகக் கூறல் [39]சுருக்கமாக வந்ததைப் பெருக்கிக் காட்டல் [40]பெருக்கமாக வந்ததைச் சுருக்கிக் காட்டல் [41]ஒன்றைப் பெற்றுக்கொண்டு பிறிதொன்றைக் குறித்தல் [42]ஒருவன்பாற் பெற்ற இறைப்பொருளை மற்றொருவன்பாற் பெற்றதாகக் குறித்தல் [43]கொடுக்கத் தக்கதைக் கொடாமல் கொடுக்கத் தகாததைக் கொடுத்தல். [44]காலத்தாற் கொடாமற் காலந் தாழ்த்துக் கொடுத்தல். [45]சுருக்கமாகக் கொடுத்துப் பெருக்கமாகக்

---

36 இறையில்லாமல் திருக்கோயில் முதலியவற்றிற்கு அரசனால் விடப்பட்ட நிலங்களின் வருவாய்களுக்கு மறைவாக இறைகொண்டு கவர்ந்து கொள்ளுதல் என்பது கருத்து.

37 பெற்றுக்கொண்ட இறைப்பொருளைக் கொள்ளவில்லை என்று சொல்லிக் கவர்ந்துகொள்ளுதல் என்பது.

38 இறைப்பொருள் முழுதும் கொள்ளுதற்குரிய காலத்தில் முழுதும் பெற்றுக்கொண்டதாகக் கணக்கில் வரவு வைத்தல் என்பது கருத்து. இதனால் இங்ஙனம் செய்தற்குக் காரணம் இறுப்போன் கொடுக்கும் கைக்கூலியென்பது போதரும்.

39 சுருக்கமாக வந்த இறைப்பொருளைக் கைக்கூலி பெற்றுக்கொண்டு கணக்கிற் பெருக்கிக்காட்டல்.

40 மிகுதியாக வந்த இறைப் பொருளைச் சுருக்கமாகக் கணக்கிற் காட்டி எஞ்சியதைக் கவர்ந்துகோடல் என்பது.

41 மிகு விலைக் கூலத்தைப் பெற்றுக் கொண்டு குறைந்த விலைக் கூலமாகக் கணக்கிற் குறித்தல் என்பது. இது விலை மிகுதியால் வரும் ஊதியத்தைக் கவர்ந்து கொள்ளுதற்குரிய நெறி என்பது புலனும்.

42 இறைப் பொருள் கொடுத்தவனை விட்டுக் கொடாதவன் பெயரால் கணக்கெழுதல் அவன்பாற் கைக் கூலி பெறுதற் பொருட்டாம் என்பது.

43 ஒருவனுக்கு அரசன் கட்டளைப்படி பொன் வெள்ளி முதலியன கொடுக்கத் தக்கனவாக இருக்க அவற்றைக் கொடாமற் கொடுத்ததாகக் கணக்கில் எழுதி ஆடை முதலிய நொய்மைப் பொருளைக் காலங்கடத்திக் கொடுத்தல் என்பது கருத்து.

44 அரசன் கட்டளைப்படி, ஒரு காரியம் நிகழுங்கால் கொடுக்கவேண்டியதைக் காலங் கடத்திக் கைக்கூலி பெற்றுக் கொடுத்தல் என்பது கருத்து.

45 அரசன் கட்டளைப்படி கொடுக்கவேண்டிய பொருளளவில் ஒரு கூறு தான் எடுத்துக் கொண்டு முழுவதும் கொடுத்ததாகக் கணக்கெழுதல் என்பது.

குறித்தல் [46]பெருக்கமாகக் கொடுத்துச் சுருக்கமாகக் குறித்தல் [47]ஒன்றைக் கொடுத்து மற்றொன்றைக் குறித்தல் [48]ஒருவனுக்குக் கொடுக்கவேண்டியதை மற்றொருவனுக்குக் கொடுத்தல் [49]வந்ததை வாராததாகச் செய்தல் [50]வாராததை வந்ததாகச் செய்தல் [51]விலை கொடுக்கப்படாத குப்பியப்பொருளின் வரவு [52]விலை கொடுக்கப் பட்ட குப்பியப்பொருளின் வரவின்மை [53]தொகுதியைப் பகுதி யாக்கல் [54]பகுதியைத் தொகுதியாக்கல் [55]பெருவிலைப் பொருளைச்

---

[46] அரசன் கட்டளைப்படி கொடுக்கவேண்டிய பொருள் சுருக்கமாக இருப்பத் தற்பயன் கருதிப் பெருக்கமாகக் கொடுத்தல் என்பது.

[47] அரசன் கட்டளைப்படி கொடுக்கவேண்டிய பொருள் உயர்ந்ததாக இருப்ப அதனைக் கொடாமல் தாழ்ந்த பொருளைக் கொடுத்தல் என்பது.

[48] அரசன் கட்டளைப்படி ஒருவனுக்குக் கொடுக்க வேண்டிய பொருளை அவனுக்குக் கொடாமல் மற்றொருவனுக்குத் தற்பயன் கருதிக் கொடுத்தல் என்பது.

[49] கருவூலத்திலிருந்து குடிகளுக்குக் கடனாகக் கொடுக்கப்பட்ட பொருளில் திரும்பி வந்ததை வாராததாகச் செய்தல்; கணக்கில் வரவு வையாமல் விடுதல் என்பதாம்.

[50] கடன் கொடுக்கப்பட்ட பொருளில் வாராததைத் தற்பயன் குறித்து வந்ததாகக் கணக்கில் எழுதல். தற்பயன்—கைக்கூலி.

[51] அரசன் கட்டளைப்படி விலைக்கு வாங்கப்பட்ட குப்பியப் பொருள்களுக்கு விலைகொடாமல் கொடுத்துவிட்டதாகக் கணக்கில் எழுதிக் கவர்ந்து கொள்ளுதல் என்பது.

[52] விலை கொடுத்து வாங்கப்பட்ட குப்பியப்பொருளை அரசன் உடைமை யாகச் சேர்க்காமல் தான் கவர்ந்து கொள்ளுதல் என்பது.

[53] ஒரு கிராமத்தினின்றும் பொதுவாக வாங்கவேண்டிய இறைப் பொருளை அக்கிராமத்தில் வாழும் மக்களிடத்தில் தனித்தனியே பிரித்து வாங்குதல் என்பது. இது சிலர் கொடுக்கவில்லை என்று சொல்லிக் கவர்ந்து கொள்ளுதற்கும் சிலரிடத்தில் மிகுதியாகக் கொள்ளுதற்கும் ஏதுவாம் என்பது.

[54] ஒரூரிலுள்ள சிலரிடமிருந்து தனித்தனியே கொள்ளவேண்டியதாக விதித்த பொருளை அவ்வூரிலுள்ளார் பலர்க்கும் விதித்ததாகக் கூறித் திரட்டி வாங்குதல்.

[55] அரசனது விலையுயர்ந்த பொருளைக் கொடுத்து அதற்கு மாறாக விலை குறைந்த பொருளைக் கொள்ளுதல். இது விலைமிகுதியால் கிடைக்கும் ஊதியத்தைக் கவர்ந்துகொள்ளுதற்கு வழியாம் என்பது.

**சிறுவிலைப்பொருளுக்கு மாற்றுதல் [56]சிறுவிலைப்பொருளைப் பெரு விலைப்பொருளுக்கு மாற்றுதல் [57]விலையை உயர்த்தல் [58]விலையைக் குறைத்தல் [59]நாட்களைக்கூட்டல் [60]நாட்களைக்கழித்தல் [61]ஆண்டைத் திங்களால் மாறுபடுத்தல் [62]திங்களை நாட்களால் மாறுபடுத்தல் [63]கூட்டத்தில் மாறுபடுத்தல் [64]வாயிலை மாறுபடுத்தல் [65]அறவோன்**

---

[56] மாறாகக் கொடுக்கப்பட்ட சிறுவிலைப் பொருள் விரைவின் மிகுதியாக விற்கப்படும் ஆதலால் அதன் மூலம் சிறுவிலைப் பொருளைப் பெறுவோனுக்குக் கிடைக்கும் ஊதியத்தில் ஒருகூறு மறைவாகக் கொள்ளலாம் என்பதாம்.

[57] விலையை உயர்த்துதலால் விற்போரிடம் கைக்கூலி பெறலாம் என்பது.

[58] விலையைக் குறைத்தலால் விற்போர் தமக்கு ஊதியக்கேடு நேரும் என்று அஞ்சி முன்னை விலையை ஏற்படுத்த விரும்பி அதற்காகக் கைக்கூலி தரக்கூடும் என்பது கருத்து.

[59] ஐந்து நாட்களுக்குரிய கூலியைக் கொடுத்து ஏழு நாட்களுக்குக் கொடுத்ததாகக் கணக்கெழுதி இரண்டுநாட் கூலியைக் கவர்ந்துகொள்வது போல்வன. இங்ஙனம் கவர்ந்துகொள்வது தொழிலாளர் பொருளாம் என்பது.

[60] பத்து நாட்களுக்குரிய கூலியை அரசனிடம் பெற்றுக்கொண்டு ஏழு நாட்களுக்குப் பெற்றுக்கொண்டதாகக் கணக்கெழுதி எஞ்சியதைக் கவர்ந்துகொள்வது போல்வன. இங்ஙனம் கவர்ந்துகொள்வது அரசன் பொருளாம் என்பது.

[61] சாந்திரமானப்படி அதிமாதம் இல்லாத ஆண்டை அதிமாதம் உடையதாகக் கணக்கெழுதி அவ்வதிமாதம் பற்றி வரும் ஊதியத்தைக் கவர்ந்துகொள்ளுதல் என்பது.

[62] நிறைந்த நாட்களையுடைய திங்களைக் குறைந்த நாட்களையுடையதாகக் கணக்கெழுதி மிகுதியான நாளுக்குரிய ஊதியத்தைக் கவர்ந்து கொள்ளுதல் என்பது.

[63] பலர்க்கும் பொதுவாகக் கொடுக்கவேண்டிய கூலியைச் சிலர்க்குக் கொடாமல் மறைவிற் கவர்ந்து கொள்ளுதல்.

[64] ஒரு வாயிலில் வந்த வருவாயை மற்றொரு வாயிலில் வந்ததாக கைக்கூலி பெற்றுக்கொண்டு மாற்றுதல்.

[65] ஓரந்தணர்க்கு நூறு பண விகிதம் கொடுக்கவேண்டும் என்று அரசன் கட்டளையிட அதனிற் பாதியைப் புரோகிதனுதல் புரோகிதனைச் சார்ந்தோனுதல் கவர்ந்துகொள்ளுதல் என்பது.

மாறுபடுதல் [66]நிறைவேற்றத்தின் மாறுபடுதல் [67]குழுவின் மாறுபடுதல் [68]வருணத்தை மாறுபடுத்தல் [69]விலையை மாறுபடுத்தல் [70]அளவுகருவியை மாறுபடுத்தல் [71]அளப்போனை மாறுபடுத்தல் [72]கலங்களை மாறுபடுத்தல் என்னும் இவை கவர்ந்துகொள்ளுதற் குரிய நெறிகளாம்.

[73]இந்நிகழ்ச்சியில் [74]தலைமைவினைஞன் கருவூலத்தலைவன் எழுத்தாளன் [75]பெற்றுக்கொண்டவன் [76]கொடுத்தோன் [77]கொடுப்

---

[66] இறைப்பொருள் தொகுக்கும் செயலில் முற்பட்டு இறுப்போரை இன்றே தரல் வேண்டும் என்று நெருக்கி அவரிற் சிலரைக் 'கைக்கூலி பெற்றுக்கொண்டு விடுதல்.

[67] ஒரு கூட்டத்தாரிடத்தினின்றும் பொதுவாக வாங்கவேண்டிய பொருளைக் கைக்கூலிபெற்றுச் சிலரைவிடுத்து ஏனையோரிடத்து வாங்குதல்.

[68] வருணத்தை மாறுபடுத்தல்—சாதியை மாறுபடுத்திக் கூறல். வருணம் என்பதற்கு நிறம் எனப் பொருள் கொண்டு மாற்றுயர்ந்த பொன்னை வாங்கிக்கொண்டு மாற்றுக் குறைந்த பொன்னுகக் கணக்கில் எழுதிக் கவர்ந்துகொள்ளுதல் எனினுமாம்.

[69] படைகள் தங்குமிடம் முதலியவற்றில் பண்டங்களின் விலை வரையறையாக இராதாகலின் அவ்விலையைச் சிறிது கூட்டிச் சொல்லிக் கவர்ந்து கொள்ளுதல்.

[70] முகத்தலளவை, நிறுத்தலளவை முதலியவற்றின் கருவிகளில் கொடுத்தற்குச் சிறியனவாகவும் வாங்குதற்குப் பெரியவையாகவும் மாறு படுத்திக் கவர்தல்.

[71] அளவு கருவிகளால் பொருளை அளக்கும் பணியாளனை மாறுபடுத்திக் கோடல்.

[72] கலம்—பாத்திரம். "நெய்க்குடம் நூறு கொடுக்க" என்று அரசன் கட்டளையிடச் சிறிய குடங்களாக நூறு கொடுத்துப் பெரிய குடங்களைக் கொடுத்ததாகக் கணக்கெழுதிக் கவர்ந்து கொள்ளுதல்.

[73] இந்நிகழ்ச்சியில்—இந்நெறிகளாற் பொருள் கவர்ந்துகொண்டதாக ஐயம் நேர்ந்துழி.

[74] தலைமை வினைஞன்—பல தொழில்களினும் நியமிக்கப்பட்ட வினைஞர் பலர்க்கும் மேலதிகாரி.

[75] பெற்றுக்கொண்டவன்—இறைப்பொருள் பெற்றுக்கொண்ட அரசியல் வினைஞன்.

[76] கொடுத்தவன்—இறைப்பொருள் கொடுத்தோன்.

[77] கொடுப்பித்தோன்—கொடுக்கும்படி தூண்டிய அரசியல் வினைஞன்.

பித்தோன் [78]அமைச்சன் அமைச்சனுடைய பணியாளன் என்னும் [79]இவர்களைத் தனித்தனியே [80]வினுதல் வேண்டும். இவர்கள் பொய் கூறுவராயின் தொழிற்றலைவர்க்குரிய தண்டமே இவர்களுக்குமாம். "அத்தொழிற்றலைவனால் [81]துன்புறுத்தப்பட்ட மக்கள் (தம் துன்பத்தை) அறிவிக்கவேண்டும்" என்று நாட்டிற் பறையறைவித்தல் வேண்டும். [82]அறிவித்தவனுக்குத் துன்பத்திற்குத் தகப்பொருள் கொடுப்பித்தல் வேண்டும். துன்பஞ்செய்ததாகப் பலவழக்குத் தொடரப்பட்டவன் [83]மறுத்துரைக்குங்கால் அவற்றுள் ஒன்று [84]மெய்ப்பிக்கப்படுமாயின் அவன் மறுப்புப் புறக்கணிக்கப்பட்டு எல்லாக் குற்றங்களுக்கும் அவனே [85]ஆளாவான். சிலவற்றை உடன்பட்டுச் சிலவற்றை மறுப்பானாயின் மறுக்கப்பட்ட எல்லாவற்றையும் கேள்வி மூலம் [86]ஆராய்தற்கு அவகாசம் அளித்தல் வேண்டும். மிகுதியான பொருள் கவர்ந்து கொள்ளப்பட்டதாக நேர்ந்த வழக்கில் சிறுபொருள் கவர்ந்தது மெய்ப்பிக்கப்படுமாயின் எல்லாப் பொருளுக்கும் அவனே [87]பொறுப்பாளி ஆவான்.

---

[78] அமைச்சன்—தொழிற்றலைவனுக்குச் சூழ்ச்சித் துணைவன்.

[79] இவர்களை—இவ்வெண்மரையும்.

[80] இஃது இத்தொழிற்றலைவனால் கவர்ந்துகொள்ளப்பட்டதா? இல்லையா? என்பதுபற்றி வினவுதல் வேண்டும் என்பது கருத்து.

[81] துன்புறுத்தப்படுதல்—கைக்கூலி முதலிய காரணங்களால் வருத்தப் படுதல்.

[82] கைக்கூலி முதலியன காரணமாகத் துன்புறுத்தப்பட்டு மெய்ப்பித்தவனுக்கு அவனடைந்த துன்பத்திற்குத் தகுதியான பொருளைத் துன்புறுத்திய தொழிற்றலைவன் கொடுக்கும்படி செய்தல்வேண்டும் என்பது கருத்து.

[83] மறுத்துரைத்தல்—எல்லா வழக்குக்களையும் மறுத்துரைத்தல்.

[84] மெய்ப்பிக்கப்படுமாயின் — சான்று முதலியவற்றால் உண்மைப் படுத்தப்படுமானால்.

[85] ஆளாதல் — துன்பமுற்றோர் எல்லோர்க்கும் துன்பத்திற்குத் தக்க அளவு பொருள் கொடுக்கக் கடமைப்படுதல்.

[86] ஆராய்தல், விருப்பு வெறுப்பு முதலிய காரணங்களால் வழக்கில் பொய் கலந்திருக்குங்கொலோ? என்னும் ஐயத்தை நீங்குதற் பொருட்டாம்.

[87] பொறுப்பாளியாவான்—எல்லாப் பொருளையும் இறுக்கக் கடமைப் பட்டவனாவான்.

[88]அறிவிப்போன் [89]எதிராகச் செய்யப்படும் துன்பம் பற்ரு மைக்குப் பிணைகொண்டு அறிவிக்கும் காரியத்தை மெய்ப்பிப்பா ஞயின் [90]ஆறிலொருகூறு பெறுதற்கு உரியனுவான். [91]பணி யாளன் அறிவிப்பின் பன்னிரண்டில் ஒருகூறு பெறுதற்கு உரிய ஞவான். மிகுதியான பொருளைப்பற்றிய அறிவிப்பில் மெய்ப் பிக்கப்பட்டது சிறிதாயின் மெய்ப்பிக்கப்பட்ட பொருளளவிலேயே [92]கூறு பெறக்கடவன். எவ்வாற்ருனும் மெய்ப்பிக்கவில்லையாயின் [93]உடற்றண்டம் அல்லது பொருள் தண்டத்திற்கு உரியவனுவான்; [94]அளிக்கத்தக்கவனுகான்.

## சுலோகம்

அறிவிப்போன் மெய்ப்பித்தபின் வழக்கை முடித்துத் தன்னை [95]விடுவித்துக்கொள்ளல்வேண்டும். வழக்கிடப்பட்டவனுல் [96]வேறு படுத்தப்படின் கொலைத்தண்டத்திற்கு ஆளாவான்.

இரண்டாம் அதிகரணம் எட்டாம் பிரகரணம்
"வினைவலார் கவர்பொருள்மீட்டுக் கொணர்வித்தல்" என்னும்
இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[88] அறிவிப்போன் — தொழிற்றலைவன் கவர்ந்த பொருளைப்பற்றி வழக்குக் கொணர்ந்தவன்.

[89] எதிர்த்துன்பமாவது—தொழிற்றலைவன் தன்னைப்பற்றிய வழக்குக் காரணமாக அது கொணர்ந்தானுக்கு எதிராகச் செய்யப்படும் இடையூறு.

[90] ஆறில் ஒரு கூறு—கவர்ந்ததாக மெய்ப்பிக்கப்படும் பொருளில் ஆறி லொரு கூறு என்பது கருத்து.

[91] தொழிற்றலைவனுடைய பணியாளன்.

[92] கூறு—முறையே ஆறிலொன்றும் பன்னிரண்டில் ஒன்றுமாம்.

[93] உடற்றண்டம்—சிறைப்படுத்தல் கசையடி முதலியன.

[94] வழக்குக்கொணரப்பட்டு மெய்ப்பிக்கப்படாமல் விடுதலையடைந்த தொழிற்றலைவனுல் நேரும் துன்பத்தினின்றும் காப்பாற்றத் தக்கவனல்லன் என்பது கருத்து.

[95] விடுவித்துக் கொள்ளுதல் வழக்குத் தொடர்பினின்றும் விடுதலை எய்தல்; மேற்கொண்ட வழக்கை மெய்ப்பிக்க வில்லையானுல் வழக்கு முடிவும் விடுதலையும் அறிவிப்போன் அடையமாட்டான் என்பது கருத்து.

[96] வேறுபடுத்தப்படுதல், கைக்கூலி பெறுதல் முதலியவற்ருல் ஆம் என்பது.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## ஒன்பதாம் பிரகரணம்—[1]தலைமை வினையாளர் தகைமையாராய்தல்

### முப்பதாம் அத்தியாயம்

[2]அமைச்சர்க்குரிய குணங்கள் நிறைந்த தொழிற்றலைவர் [3]எல்லோரும் அவரவர் ஆற்றற்கேற்பக் காரியங்களில் நியமிக்கத்தக்கவராவர். இவர்களுடைய காரியங்களிலும் [4]ஆராய்ச்சி செய்தல் வேண்டும். என்னை? மக்களுடைய மனம் நிலையற்றதாதலின் காரியங்களில் நியமிக்கப்பட்ட மக்கள் [5]குதிரையை ஒத்தவர்களாய்க் குணவேற்றுமையை அடைவர்.

---

### 30-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] வினைவலாரை ஆராய்தல் முன்னைப் பிரகரணத்திற் கூறப்பட்டது. அவருக்கு மேலாக நியமனம் பெற்ற தலைமை வினையாளர் இயல்பை ஆராய்தல் இதன்கட் கூறப்படுதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது. இதனாற் பிரகரண வியைபு புலனாம்.

[2] அமைச்சர்க்குரிய குணங்கள் முதலதிகரணம் ஐந்தாம் பிரகரணத்திற் கூறப்பட்ட, நாட்டிற் பிறத்தல் நற்குடிப் பிறப்பு முதலியனவாம். இக் குணநிறைவு வேண்டும் என்றமையால் பொருளுபதையால் ஆராய்ந்த தூய்மை மாத்திரம் போதியதன்று என்பது புலப்படுக்கப்பட்டவாறும்.

[3] எல்லோரும் என்றமையால் தலைமை வினையாளரும் கொள்ளப்படுவர். அவரவர் ஆற்றற்கேற்ப நியமிக்க வேண்டும். இக்கருத்தை,

> "இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
> அதனை அவன்கண் விடல்" (517)

என்னும் திருக்குறளும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரைக் குறிப்பும் தெளிவிப்பனவாம்.

[4] ஆராய்ச்சி குற்ற நற்றங்களைப் பற்றியது.

> "எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையால்
> வேறாகும் மாந்தர் பலர்." (குறள் 514)

என்பது வள்ளுவர் வாய்மொழியாகலின், ஆராய்ச்சி செய்தல் இன்றியமையாததொன்றே.

[5] குதிரை தேரிற் பூட்டுதற்கு முன்னர் நற்குணமுடையது போலக் காணப்பட்டுப் பூட்டிய பின்னர் குணவேற்றுமை எய்தல் போல மக்களும் காரியத்தில் தலைப்படுதற்கு முன்னர் நற்குண முடையராகக்காணப்பட்டுத் தலைப்பட்ட பின்னர்க் குணவேற்றுமை அடைவர் என்பது கருத்து.

ஆதலின் அரசன் இத்தலைமை வினையாளரைக் குறித்துச் [6]செய்பவன் [7]கருவி இடம் [8]காலம் காரியம் [9]கூலி [10]ஊதியம் என்னும் [11]இவற்றை அறிந்துகொள்ளல் வேண்டும். அவ்வினையாளர் [12]சங்கேதக்கூட்டமும் தம்முள் முரண்பாடும் இல்லாமல் அரசன் கட்டளைப்படிக் காரியங்களைச் செய்யக்கடவர். சங்கேதக்கூட்டம் உடையராயின் காரியத்தின் பயனைக் கவர்ந்துகொள்வர். தம்முள் முரண்பாடுடையராயின் காரியத்திற்குக் கேடுவிளைப்பர். எதிர் பாராத நிலையில் உண்டாம் [13]கேட்டை ஒழிப்பதற்கன்றித் தலைவனுக்கு அறிவித்து உடன்பாடு பெருமல் ஒருசிறு காரியத்தையும் செய்யலாகாது. இவ்வினையாளர்பால் [14]விதனங்கள் காணப்படுமாயின் அவருக்கு [15]நாட்கூலி அழிவு என்னும் இவற்றின் இருமடங்கு பணம் தண்டமாகும்.

இவ்வினையாளருள் எவன் ஓர் அரசியற் காரியத்தை அரசன் கட்டளையிட்டவாருதல் அதனின்றும் சிறப்பாகவாதல் செய்து முடிக்கின்ருனே அவன் மேற்பதவியையும் [16]சிறப்பையும் பெறுவான்.

சுருங்கிய வருவாயுடையவன் [17]மிகுதியாகச் செலவிடுவா

---

[6] செய்பவன்—காரியத்திற்கு வினைமுதலாக உள்ளவன்.

[7] கருவி—காரியத்தை முடித்தற்கு வேண்டிய துணைக் கருவிகள்.

[8] காலம்—காரியத்தைத் தொடங்கி முடித்தற்கு ஏற்றது.

[9] கூலி—பணி செய்வோர்க்குக் கொடுக்கப்படும் வேதனம்.

[10] ஊதியம்—மேற்கொண்ட காரியத்தால் விளையும் பயன்.

[11] இவற்றைச் சீர்தூக்கி ஆராய்ந்து விளையும் பயன் மிகுதியாகக் காணப்படுமாயின் குறித்த காரியத்தைத் தொடங்கலாமென்று அறிய வேண்டும் என்பது கருத்து.

[12] சங்கேதக் கூட்டம்—ஒரு காரியத்தைத் தடைப் படுத்தற்குக் குறிக்கொண்டு பலர் ஒருங்கு கூடும் கூட்டம்.

[13] கேடு—நீர் நெருப்பு முதலியவற்ருல் உண்டாகும் தீங்கு.

[14] விதனங்கள்—கட்காமம் முதலியன.

[15] கட்காமம் நுகர்ந்த நாளின் கூலியையும் அந்நுகர்ச்சியால் காரியத்திற்கு நேர்ந்த அழிவின் அளவினையும் அறிந்து அவற்றின் இருமடங்கு பணம் தண்டம் விதிக்கவேண்டும் என்பது கருத்து.

[16] சிறப்பு—பட்டம் பரிசு முதலியன.

[17] மிகுதியாகச் செலவிடுதல்—பெருநுகர்ச்சிப் பொருட்டு.

னுயின் [18]பொருளைக் கவர்ந்துகொள்ளுவான் என்பதும், இதற்கு [19]மாறாக நடப்பவனும் வரவுக்குத்தக்க செலவுடையவனும் பொருளைக் கவர்ந்துகொள்ளமாட்டானென்பதும் சில ஆசிரியர் கொள்கையாகும். ஒற்றர் [20]முகமாகவே [21]அறிந்துகொள்ள வேண்டும் என்பது கௌடலியர் கொள்கையாம்.

பொருள் [22]வருவாயைக் குறைக்கின்றவன் அரசனது பொருளைக் கவர்பவனுவான். அவன் அறியாமை [23]முதலியவற்றால் குறைப்பானுயின் அங்ஙனம் குறையும் பொருளுக்கு இரு மடங்கு [24]முதலியவாக அவனை இறுக்கும்படி செய்தல் வேண்டும்.

பொருள் வருவாயை [25]அளவின்மிகப் பெருக்குகின்றவன் குடிமக்களுக்குக் கேடுவிளைவிப்பவனுவான். [26]அப்பொருளை அவன் அரசனிடம் சேர்ப்பிப்பானுயின் [27]சிறு குற்றத்தில் வைத்துத்

---

[18] பொருள்—ஈண்டு அரசனுடையதும் குடிமக்களுடையதுமாம்.

[19] மாறாக நடத்தல்—மிகுதியான வருவாயும் சுருங்கிய செலவும் உடையனுதல்.

[20] முகமாகவே என்புழி ஏகாரம் தேற்றப் பொருட்டு. சுருங்கிய வருவாயுடையவனும் பெருங்குடும்பமுடையனுயின் கடன் கொண்டு பெருஞ் செலவு செய்யக் காண்டலானும் அரசனதும் குடிகளுடையதுமாகிய பொருளைக் கவர்ந்து கொள்ளுதலால் மிகுந்த வருவாயுடையவனும், இயற்கையிலுள்ள உலோப குணத்தால் சுருக்கமாகச் செலவிடக் காண்டலானும் பெருஞ் செலவு சிறு செலவுகள் கரவிற் கவர்ந்து கொள்ளுதலை யறிதற்குக் காரணமாகா வென்பது கருத்து.

[21] அறிந்து கோடல்—ஒற்றர் மூவர் தனித்தனியே அறிந்து வந்து கூறும் சொற்கள் பொருள் ஒற்றுமையுடையனவாகக் காணப்படின் நம்பிக்கை கோடல்.

[22] பொருள் வருவாய்—பொருள் வரும் நெறி.

[23] முதலிய என்றதனுல் மடிமை அச்சம் மயக்கம் காமம் வெகுளி செருக்கு உலோபம் என்னும் இவற்றையும் கொள்ளல்வேண்டும்.

[24] மும்மடங்கு முதலியவாக 28-ம் அத்தியாயத்திற் கூறப்பட்டபடி தண்டமாம் என்பது கருத்து.

[25] அளவு—இத்துணை என்று செய்த வரையறை.

[26] அப்பொருளை—வரையறை கடந்து வாங்கிய பொருளை.

[27] சிறுகுற்றத்தில் வைத்து—அவன் சிறுகுற்றம் செய்தானுகக் கருதி.

[28]தடைப்படுத்தற் குரியனுவான். குற்றம் [29]பெரிதாயின் அதற்குத் தகத் தண்டிக்கத் தக்கவனுவான்.

செலவிற்கென வரையறுக்கப்பட்ட பொருளை வரவிற் சேர்ப்பவன் தொழிலாளர்க்கும் தொழில்களுக்கும் [30]கேடுவிளைவிப்பவனுவான். தொழில் தடைப்பட்ட நாள்களில் அத்தொழிலால் விளையக்கடவ பயனையும், அத்தொழில் நிமித்தம் பணியாளர் பெறக்கடவ கூலியையும் அழிவுசெய்ததாக வைத்துக் குற்றத்திற்குத்[31] தக அவன் தண்டிக்கத்தக்கவனுவான்.

[32]ஆதலின் ஒரு தொழிலில் நியமனம்பெற்ற தொழிற்றலைவன் அத்தொழிலின் இயல்பையும் அதனுல் நேரும் வரவு செலவுகளையும் வகுத்தும் தொகுத்தும் அரசனுக்கு அறிவிக்கக் கடவன்.

முதலழிப்போன் அற்றைப் பிழைப்புடையோன் கடும்பற்றுள்ளமுடையோன் என்னும் இவர்களைத் [33]தடைப்படுத்தல் வேண்டும். தந்தை பாட்டன் முதலியோர் ஈட்டிவைத்த பொருளை முறைதவறிச் செலவிட்டு அழிப்பவன் முதலழிப்போன் ஆவான். நாடோறும் கிடைக்கும் பொருளை அவ்வப்பொழுதே செலவிட்டழிப்பவன் அற்றைப் பிழைப்புடையோன் ஆவான். தானுந் துன்புற்றுத் தன் பணியாளரையும் துன்புறுத்திப் பொருளை

---

[28] இங்ஙனம் குடிமக்களிடத்தினின்றும் வரையறை கடந்து வாங்கலாகாதென்று தடைப்படுத்தல் வேண்டும் என்பது கருத்து.

[29] பெரிது—இருமடங்கு மும்மடங்கு மிகுதியாக இறைகோடலும் தான் கவர்ந்து கோடலுமாம். இங்ஙனம் கோடலால் குடிமக்களுக்குத் துன்பம் உண்டாம் என்பதும், அது காரணமாக அரசனது கருவூல வளர்ச்சிக்குக் கேடுவிளையும் என்பதும் கருத்து.

[30] குறிப்பிட்ட தொழில் நடைபெறச் செய்யாமையால் கேடுவிளைப்பவனுவான் என்பது கருத்து.

[31] இழந்த தொழிலால் விளையும் பயனளவையும் கூலியளவையும் கணக்கிட்டு அத்துணைத் தண்டம் விதித்தல் வேண்டும் என்பது கருத்து.

[32] ஆதலின்—பொருள் வருவாய் பற்றிய குற்றத்திற்குத் தண்டம் விதிக்கப்பட்டமையால்.

[33] தடைப்படுத்தல்—முறையே முதற்பொருளை அழித்துவிடாமலும், நாடோறும் ஈட்டிய பொருளை அவ்வப்பொழுதே செலவிட்டழியாமலும், தனக்கும் பணியாளர்க்கும் துன்பம் விளையும்படி பொருளை வளர்க்க முயலாமலும் தடைப்படுத்திக் காத்தல்வேண்டும் என்பது கருத்து.

வளர்ப்பவன் [34]கடும்பற்றுள்ளமுடையோன் ஆவான். [35]இவர் சுற்றமுடையோராயிருப்பின் இவர் பொருள் அரசனாற் [36]கொள்ளற் பாலன அல்ல. சுற்றமில்வழி முழுதும் [37]கொள்ளற்பாலனவாம்.

பெரும் பொருளுடையவனும் கடும்பற்றுள்ளமுடையவனு மாகிய அரசியல் வினைஞன் தன் பொருளைத் தன்னில்லத்திற் சேமித்து வைத்திருப்பினும் தன்னாட்டு நகரத்து மக்கள்பால் கொடுத்துவைத்திருப்பினும் பகைவர் நாட்டிற் கொடுக்கல் வாங்கல் செய்துகொண்டிருப்பினும் அவனுடைய சூழ்ச்சித் துணைவர் நண்பர் பணியாளர் உறவினர் என்னும் இவர்களது இயல்பையும், பொருளின் வரவு செலவையும் சத்திரி என்னும் ஒற்றன் [38]அறிந்துகொள்ளல் வேண்டும்.

உலோபியாகிய அவ்வரசியல் வினைஞனுடைய பொருளை எவன் பகைவன் நாட்டிற் கொடுக்கல் வாங்கல் செய்கின்றானோ அவனை [39]நெருங்கிய தொடர்புடையனாகக்கொண்டு அவன் உட்கருத்தை ஒற்றன் அறிந்துகொள்ளல் வேண்டும். உட்கருத்தை நன்றாக [40]அறிந்துகொண்டபின்னர்ப் பகைவனது கட்டளையோலையைப் [41]படைத்துக்கொண்டு அதனால் அவ்வரசியல் வினைஞ

---

[34] கடும்பற்றுள்ளம்—உலோபம்.

[35] இவர்—இம்மூவரும்

[36] சுற்றத்தார்க்கு வெறுப்பு விளையாவண்ணம் பொருளைக் கவர்ந்து கொள்ளாமல் அவரைப் பதவியினின்றும் விலக்கவேண்டும் என்பது கருத்து.

[37] பொருளைக் கொள்ளுதலோடு பதவியினின்றும் விலக்குதல் வேண்டும் என்பதாம்.

[38] ஓரரசியல் வினைஞன் உலோப குணமுடையனாய்ப் பொருளை மிகுதியாக ஈட்டுதலினும், அதனை வளர்ப்பதினும் முயற்சியுடையனாகக் காணப்படின் அவன் கைக்கூலி முதலியன பெறுதல், பகைவர் சூழ்ச்சிக்கு வயப்படுதல்கூடும் என்னும் ஐயம் காரணமாக ஒற்றர்களைக்கொண்டு அரசன் ஒற்றியறிதல் வேண்டும் என்பது கருத்து.

[39] நெருங்கிய தொடர்பு—நண்பனாதல் அல்லது பணியாளனாதல்.

[40] அறிந்துகொள்ளுதற்குக் கருத்தா அரசனாவான்.

[41] படைத்துக்கொள்ளலாவது — "நின்னால் வரவிடுத்த பொருளைப் பெற்றுக்கொண்டேன். எஞ்சியபொருளையும் விரைவில் அனுப்புக" என்று பகையரசன் இவ்வரசியல் வினைஞனுக்கு எழுதியதாகவும், அவ்வோலையைப் பகைவன் நாட்டிலிருந்து தூதுவன் ஒருவன் கொண்டுவந்ததாகவும் அஃது எல்லை காவலனாற் கைப்பற்றப்பட்டு அரசனிடம் சேர்ப்பிக்கப்பட்டதாகவும் கற்பித்துக்கொள்ளலாம்.

னுக்குக் கொலைத்தண்டம் விதித்தல்வேண்டும்.

[42]ஆதலின் அரசியற் றொழிற்றலைவர்கள் கணிதரையும் எழுத்தாளரையும் [43]வண்ணக்கரையும் இருப்புப் பொருட் பொறுப்பாளரையும் மேலதிகாரிகளையும் [44]துணைக்கொண்டு அரசனுடைய [45]காரியங்களைச் செய்யக்கடவர்.

[46]யானைவீரரும் குதிரைவீரரும் தேர்வீரரும் (ஈண்டு) மேலதிகாரிகள் ஆவர். அவர்களுடைய [47]தூய்மையும் [48]திறமையும் வாய்ந்த மாணவர்கள் கணிதர் [49]முதலியோர் இயல்பை அறிதற்குரிய ஒற்றராவர்.

[50]என்றும் நிலையுதவில்லாத பல தலைமையதிகாரிகளை உடையதாகத் தொழில் நிலையங்களை அமைத்தல்வேண்டும்.

## சுலோகங்கள்

(1) நாவின்கண் உள்ளது தேனாயினும் நஞ்சாயினும் [51]உண்ணுமல் இருக்கவியலாது. அதுபோல அரசனது பொருள்

---

[42] ஆதலின்—அரசனது பொருளைக் கவர்ந்துகொள்ளுதற்குக் கொடுந் தண்டம் விதிக்கப்பட்டிருத்தலால்.

[43] வண்ணக்கர்—நாணய பரிசோதகர்.

[44] துணைக்கொண்டு—சான்றாகக்கொண்டு.

[45] காரியங்கள்—ஈண்டுப் பொருளைப்பற்றியன.

[46] மூப்புடைமை காரணமாகப் போர்ச்செயல் ஒழிந்திருக்கும் வீரர்களே ஈண்டு மேலதிகாரிகளாவர் என்பது கருத்து.

[47] தூய்மை—தம் கடமையிற்றவறாமை.

[48] திறமை—தலைவர் பணித்த காரியத்தை முடிக்கும் ஆற்றல்.

[49] முதலியோர் என்றதனால் எழுத்தாளர் முதலியோரையும் கொள்ளல் வேண்டும்.

[50] தலைமையதிகாரிகள் பலராக இருப்பின் ஒருவர் ஒருவரை ஐயுற்றுப் பொருள் கவரத்துணியார் என்பது கருதியும், ஒரு தொழில் நிலையத்தில் ஓரதிகாரி நெடுங்காலம் நிலைத்திருப்பின் ஆண்டுள்ளாரை எளிதின் நட்புக் கொண்டு தன் குற்றத்தை மறைத்துக்கொள்ளல் கூடும் என்பது குறித்தும், குடிமக்களும் பிற்காலத்தில் அவன் தமக்குத் தீங்கு விளைக்கக்கூடும் என்னும் அச்சத்தால் அவன் குற்றத்தை வெளிப்படுத்தத் துணியார் என்பது கருதியும் இவ்வாறு கூறப்பட்டது.

[51] ஒருவன் தன் நாவிலுள்ள பொருளை உண்ணுதற்கு விரும்பாமலிருப்பினும் நாவிலிருப்பதால் முயற்சியின்றியே வயிற்றினுட் புகுந்துவிடும் என்பது கருத்து.

[52]சிறிதாயினும் பொருள்வினைஞனாற் [53]கவர்ந்துகொள்ளாமலிருக்க வியலாது.

(2) நீரினுள்ளே வாழ்கின்ற மீன்கள் உண்ட நீரை அறிய இயலாதது போல, தொழினிலையங்களில் நியமிக்கப்பட்ட வினைஞர் கவர்ந்த பொருளை அறிய இயலாது.

(3) விண்ணிற் செல்லும் பறவைகளின் [54]செலவை அறியினும் கரவுள்ளமுடைய வினைஞரது [55]செலவை அறிய இயலாது.

(4) பொருள்கவர்ந்த வினைஞரை மேலும் கவர்ந்து கொள்ளாவாறும் கவர்ந்த பொருளைத் திரும்பத் தருமாறும் வற்புறுத்திப் பெற்றுத் தொழினிலையங்களில் [56]மாற்றி அமைத்தல் வேண்டும்.

(5) அரசனது பொருளைக் கவர்ந்து கொள்ளாமல் முறைப்படி வளர்ப்போரும், அரசனிடத்து அன்பும் அவன் நலத்திற் பற்றும் உடையோரும் ஆகிய தக்காரை என்றும் தொழிற் றலைவராக நியமனம் செய்தல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் ஒன்பதாம் பிரகரணம்
"தலைமை வினையாளர் தகைமை ஆராய்தல்" என்னும்
முப்பதாம் அத்தியாயம்—முற்றிற்று.

---

[52] கவர்ந்த பொருள் சிறிதாயின் கேடு விளைவியாமையால் தேனும், கவர்ந்த பொருள் பெரிதாயின் கேடு விளைவித்தலால் நஞ்சும் உவமமாயின.

[53] என்றும் பொருளோடு தொடர்புடைமையால் கவர்ந்து கொள்ளுதலில் நோக்கம் நிகழும் என்பது கருத்து.

[54] செலவு—ஈண்டுச் செல்லும் நெறியை உணர்த்தும். "தேன் சென்ற நெறியும் தெண்ணீர்ச் சிறு திரைப் போர்வை போர்த்து மீன் சென்ற நெறியும் போல விழித்திமைப்பவர்க்குத் தோன்ற" என்ற சிந்தாமணி அடிகளை ஒப்பு நோக்குக. (பதுமையாரி–225)

[55] செலவு—கரவொழுக்கம்.

[56] மாற்றியமைத்தல்—உயர்ந்த பதவியினின்றும் இறக்கித் தாழ்ந்த பதவியில் நியமித்தல்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பத்தாம் பிரகாரணம்—[1]முடங்கல் விதிமுறை

## முப்பத்தோராம் அத்தியாயம்

[2]முடங்கலில் எழுதப்படும் பொருளைக் கட்டளை யென்று [3]கூறுவர். [4]சந்தி விக்கிரகங்களுக்கு முடங்கல் காரணமாகலின் அரசர் அதனையே [5]சிறப்புடையதாகக் கொள்ளும் இயல்பின ராவர்.

ஆதலின் [6]எழுத்தாளன் அமைச்சர்க்குரிய [7]குணங்களையும், [8]பலவகைப்பட்ட உலகியலறிவையும் சொற்களை விரைவிலிணைக்

---

### 31-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] முடங்கல்—அரசன் வேற்று நாட்டு மன்னர்க்கும் தன் வினைஞர்க்கும் அறிவிக்கவேண்டிய செய்திகள் எழுதப்படும் ஓலை முதலியன; தலைமை வினையாளர் தகைமை ஆராய்தற்குரிய கருவிகளுள் முடங்கலும் ஒன்றாத லின் அதன்பின் இது கூறப்பட்டது; இதனாற் பிரகரண வியைபு புலனாத லறிக.

[2] வாய்மொழியாகக் கூறிவிடுக்கும் செய்தியும் கட்டளையாகுமாயினும் சிறந்ததாக மதிக்கப்படாது என்பது கருத்து.

[3] ஆன்றோர் கூறுவர் என்க.

[4] சந்தி விக்கிரகம் என்பன ஈண்டு அறுவகைக் குணத்தையும் உணர்த் தும்.

[5] வாய்மொழி ஓலை என்னும் இரண்டனுள் வாய்மொழி, சொல் பவன் தடுமாற்றத்தாலும் சோர்வினாலும் ஒரோவழிப் பிறழ்ச்சி யெய்த வும் கூடும். ஓலை அங்ஙனமின்றித் தெரிவிக்கவேண்டிய பொருளைப் பிறழாது தெளிவிக்கும் இயல்பினதாகலின் வாய்மொழியினும் ஓலை சிறப்புடைய தாகக் கருதப்படும் என்பது.

[6] எழுத்தாளன்—ஓலை யெழுதுவோன்.

[7] குணங்கள்—9-ம் அத்தியாயத்திற் கூறப்பட்ட நற்குடிப்பிறப்பு முதலிய 25ம் ஆம்.

[8] வருணம் ஆச்சிரமம் மதம் முதலியவற்றின் பலதிறப்பட்ட வழக்க வொழுக்கங்கள்.

கும் ஆற்றலையும் [9]அழகாக எழுதுந் திறனையும் முடங்கலை [10]எளிதின் வாசித்தறியும் வன்மையையும் உடையனுதல் வேண்டும்.

அவ்வெழுத்தாளன் கலக்கமற்ற மனமுடையனும் அரசன் சொல்லிய பொருளைக் கேட்டுத் [11]துணிந்து [12]அரசனுக்காயின், அவனுடைய [13]நாடு செல்வம் மரபு பெயர் என்னுமிவற்றைச் சிறப்பித்தும், [14]அமைச்சர் முதலியோர்க்காயின் அவர் தம் [15]நாட்டையும் பெயரையும் சிறப்பித்தும் முடங்கல் எழுதல் வேண்டும்.

## சுலோகம்

சாதி [16]குலம் [17]பதவி [18]ஆண்டு கல்வி தொழில் செல்வம் ஒழுக்கம் [19]இடம் காலம் மணவியைபு என்னும் இப்பதினொன்றை

---

[9] அழகு—ஈண்டு எழுத்துக்களின் தனிநிலையினும் சேர்க்கைநிலையினும் காணப்படும் வனப்பு.

[10] எளிதின் வாசித்தல்—நல்ல குரலில் தெளிவாகவும் சொன்முடிபு முதலியவைகளைப் புலப்படுத்தியும் படித்தல். இனி மறைபொருளுடையனவும் குறிப்பாக வரையப்பட்டனவும் எழுத்துக்கள் விடப்பட்டனவும் சொல் தொடர்மொழி இவற்றைக் குறிக்கும் கோடுகளின் வேறுபாட்டையுடையனவும் ஆகிய முடங்கல்களை எளிதில் ஆராய்ந்தறிதலுமாம்.

[11] துணிதல்—முன் பின் முறைவைப்பையும் பிறரெழுதிய முடங்கலுக்கு இயைபு இயைபின்மைகளையும் ஆராய்ந்து துணிதல்.

[12] அரசனுக்காயின்—அரசனுக் கெழுதுங்கால்.

[13] நாட்டைச் சிறப்பித்தலாவது பாண்டி நாட்டை அணி செய்பவன் எனவும், செல்வத்தைச் சிறப்பித்தலாவது பாண்டி நாட்டுத் தலைமையும் பிறரால் வெல்லமுடியாத படைப் பெருக்கத்தால் பகைவெல்லும் திறலையுமுடையான் எனவும் மரபைச் சிறப்பித்தலாவது திங்கள் மரபிற்கு அணிகலம் எனவும் பெயரைச் சிறப்பித்தலாவது அரசர்க்கரசாம் உயர்திரு. நின்றசீர் நெடுமாறன் எனவும் எழுதவேண்டும் என்பது கருத்து.

[14] அமைச்சர்க்காயின்—அமைச்சர்க் கெழுதுங்கால்.

[15] நாட்டைச் சிறப்பித்தலாவது பாண்டி நாட்டை அணி செய் அமைச்சர் திலகம் எனவும், பெயரைச் சிறப்பித்தலாவது திருமிகு. குலச்சிறையார் எனவும் எழுதல் வேண்டும் என்பது கருத்து.

[16] குலம்—குடிப்பிறப்பு.

[17] பதவி—சந்தி விக்கிரகம் முதலிய செயல்களிற்றலைப்படும் அதிகாரம்.

[18] ஆண்டு—வயது.

[19] இடம்—வாழுமூர்.

யும் நன்கு தெரிந்துகொண்டு செயத்தகு காரியத்தில் மக்கள் [20]தகுதிக் கேற்றவாறு முடங்கல் வரைதல் வேண்டும்.

[21]பொருள்வைப்புமுறை இயைபு நிறைவு இனிமை உயர்ச்சி விளக்கம் என்னும் இவ்வாறும் முடங்கலுக்குரிய குணங்களாம். இவற்றுள் பொருள்வைப்புமுறையாவது—சிறப்புப் பொருளை முன் வைத்துப் பின்னர்த் தகுதி நோக்கி வரிசைப்படுத்தமைத்தல். இயைபாவது—[22]தொடங்கிய பொருளுக்கு முரணுகாமல் முடிவு வரை மேற்பொருளை அமைத்தல்.

நிறைவாவது—எழுத்துச் சொற் பொருள்களின் [23]குறைவு மிகையில்லாமல் [24]ஏதுவோடும் நூல் வழக்கினும் உலக வழக்கினும் உள்ள [25]எடுத்துக்காட்டுகளோடும் [26]சொற் சோர்வின்றிப் பொருளைத் தெளிவுறுத்து நிற்றல். இனிமையாவது—எளிதினறிதற்குரிய பொருளையுடைய அழகிய சொற்களுடைமை. உயர்ச்சியாவது—[27]இழிசினர் வழக்கின்மை. விளக்கமாவது—[28]எல்லோரும் அறிந்த சொற்களுடைமை.

---

[20] தகுதியாவது—தலை யிடை கடையென மக்களை முத்திறப்படுத்துக் கொண்டு அவர்க்கு முறையே விண்ணப்பம், அறிவிப்பு, கட்டளை என்னும் சொற்களால் முடங்கல் எழுதல் வேண்டும் என்பது கருத்து ;

"செல்வம் உறவே ஆண்டே தொழிலொடு
கல்வியிவ் வைந்தும் முறை சிறந்தனவே"

என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

[21] பொருள்வைப்புமுறை முதலிய ஆறும் பின் வருமாறுணர்க.

[22] முடங்கலில் வரையப்படும் பொருள்கள் முன்னுக்குப்பின் மாறுபடாமல் கடைபோக எழுதல் வேண்டும் என்பது கருத்து.

[23] நிலம் என்பதைக் 'கு' என்றெழுதுதல் எழுத்துக் குறைவு ; அதனை 'நிலவலயம்' என்றெழுதுதல் எழுத்துமிகை. கலிங்கநாட்டு யானையை 'யானை' என்று கூறல் சொற்குறை; வேற்றியானையை, கலிங்க நாட்டியானை என்று கூறல் சொன்மிகை. 'வந்தன' என்பதை 'வந்தது' என்றெழுதுதல் பொருட்குறை. 'வந்தது' என்பதை 'வந்தன' என்றெழுதுதல் பொருண்மிகை.

[24] ஏது—பொருளை வலியுறுத்துதற்குரிய காரணம்.

[25] எடுத்துக்காட்டு—மேற்கோள்.

[26] சொற்சோர்வு—கருதிய பொருளை விளக்குதற்குரிய ஆற்றலின்மை.

[27] இழிசினர்—கீழ்மக்கள்.

[28] செஞ்சொற்கள் என்பது கருத்து.

அகரம் முதலிய எழுத்துக்கள் [29]அறுபத்து மூன்றாகும். எழுத்துத் தனித்துந் தொடர்ந்தும் பொருள்தரின் பதமாகும். அது, பெயர், ஆக்கியாதம், உபசருக்கம், நிபாதம் என நான்கு வகைப்படும். அவற்றுள் [30]பொருள் குணம் சாதி இவற்றைக் குறிப்பது பெயராகும். [31]ஆண் பெண் அலி என்னும் பால் வேறுபாடின்றித் தொழில் பற்றி நிகழ்வது ஆக்கியாதம் ஆகும். [32]வினையின் சிறப்பை விளக்கும் 'பிர' முதலியன உபசருக்கமாகும். 'ச' முதலிய அவ்வயங்கள் [33]நிபாதமாகும்.

[34]பொருண் முடிபுடைய சொற்கூட்டம் தொடர் மொழி ஆகும். [35]நிலைமொழியுடன் வருமொழி மூன்றுக்கு மேற்படா

---

[29] வடமொழியில் குறில் நெடில் அளபெடை என்னும் விகற்பத்தால் அ, இ, உ, ஊ என்னும் நான்கும் உறழப் பன்னிரண்டும், நெடிலின்மையால் ஌ இரண்டும், குறிலின்மையால் ஏ, ஓ, ஐ, ஔ என்னும் நான்கும் உறழ எட்டும் ககரமுதல் மகரமிறுதியாகவுள்ள வருக்க வெழுத்துக்கள் இருபத்தைந்தும், ய, ர, ல, வ நான்கும், ஶ, ஷ, ஸ, ஹ நான்கும், வருக்கத்தின் முதல் நான்கெழுத்துக்களோடு வருக்க ஐந்தாம் எழுத்துப் புணருங்கால் இடையிற்றோன்றும் யம எழுத்து நான்கும், அநுசுவாரம் ஒன்றும் விசர்க்கம் ஒன்றும், ꣳக, ꣳப (ஜிஹ்வாமூலீயம், உபத்மானீயம்) இரண்டும் ஆக அறுபத்து மூன்றாதல் காண்க.

[30] பெயர்ச்சொற்களும் உரிச்சொற்களும் பெயரென்பதனுள் அடங்கும்.

[31] வடமொழியில் வினைமுற்று முதலியன பால்வேற்றுமையை உணர்த்தா. பவதி என்பது இருக்கின்றான், இருக்கின்றாள், இருக்கின்றது என முப்பாற்கும் பொதுவாகும். ஆகவே எழுவாயோடு இயைந்தே பொருள் தருவதாகும். ஆதலின் ஆக்கியாதம் என்பது வினைச்சொற்களை உணர்த்துவதாகும்.

[32] வினைச்சொல்லைப்பற்றி அதன் வேறுபாடுகளை விளக்கும் பிர அநு முதலியன உபசர்க்கங்களாகும். இவையும் பின்வரும் உம்மைப் பொருளுணர்த்தும் சகரம் முதலியனவும் இடைச்சொற்களின்பாற் படுமென்க.

[33] இடைச்சொற்களின் ஒரு பகுதி ஈண்டு நிபாதம் என்று கூறப்படும்.

[34] இரண்டும் பலவுமாகிய சொற்கள் பொருள் முடிபுடையனவாகப் புணர்ந்து வருவது தொடர்மொழியாகும் என்பது கருத்து.

[35] முடங்கலில் எழுதப்படும் தொகைநிலைத் தொடரில் வருமொழி மூன்றுக்கு மேற்படின் இனிமை தெளிவு முதலிய குணங்கள் கெடும் என்பது கருத்து.

மல், [36]வருமொழிப் பொருளுக்கியையத் [37]தொகை நிலைத் தொடர் இருத்தல் வேண்டும். முடங்கலின் முடிபை யுணர்த்தற்கு [38]இதி என்றுதல், [39]இவன்வாய்மொழி என்றுதல் குறிப்பிடல்வேண்டும்.

## சுலோகங்கள்

(1—2) [40]பழித்தல் புகழ்தல் விணுதல் விடையிறுத்தல் வேண்டல் மறுத்தல் கழறுதல் தடுத்தல் ஏவுதல் நயத்தல் அருளுதல் உரப்புதல் உடன் படுத்தல் என்னும் இப்பதின் மூன்றும் முடங்கலில் வரைதற்குரிய பொருள்களாம். இவற்றுள், பழித்தலாவது— ஒருவனுடைய [41]குலம் உடல் தொழிலிவற்றைப் பற்றிக் குற்றங் கூறல். புகழ்தலாவது—[42]இவற்றைப் பாராட்டிப் பேசுதல். விணுதலாவது—[43]இஃதென்னை என்றல். விடையிறுத்தலாவது— [44]இஃதிங்ஙனம் என்றல். [45]வேண்டலாவது—கொடுவென இரத்தல். மறுத்தலாவது—கொடேனென்றல். கழறுதலாவது—நினக்

---

[36] வருமொழிப் பொருளுக்கியைதல்—நிலைமொழியும் வருமொழியும் பொருட் பிறழ்ச்சியின்றிப் புணர்ந்து நிற்றல்.

[37] தொகைநிலைத் தொடர் — வேற்றுமையுருபு முதலியன தொகப் புணரும் சொற்கூட்டம்.

[38] ‘ இதி ’ என்பது வடமொழியில் முடிபை உணர்த்தும் சொல்லாகும்.

[39] முடங்கலில் எழுதப்படும் பொருள் முற்றுப்பெறின் “ இதி ” எனவும், அப்பொருள் முடங்கலினடங்காமல் எஞ்சியவழி அவ்வெஞ்சிய பொருளை முடங்கல் கொணரும் தூதுவன் வாய்மொழியாகக் கேட்டல் வேண்டும் என்னும் குறிப்புத்தோன்ற “ இவன் வாய்மொழி ” எனவும் முடங்கலினிறுதியில் எழுதல்வேண்டும் என்பது கருத்து.

[40] இனி முடங்கலில் வரைதற்குரிய பொருள்களைப் பெயரளவிற் குறிப்பிடுகின்றார்.

[41] இயல்பாகவே இழிந்த குடியெனக் குலத்தையும், தொழுநோயுடையதென உடலையும், பசுக்கொலையெனத் தொழிலையும் இழித்துக் கூறல் என்பது கருத்து.

[42] இவற்றை—குலம் உடல் தொழிலாகிய இவற்றை.

[43] இஃதெவ்வாறு செய்யத்தக்கது என்று செயத்தகு பொருளைப்பற்றி அறியலுறவு வெளிப்படுப்பது என்பது.

[44] இஃதிவ்வாறு செயத்தக்கதென்று விணுவப்பட்டவனுல் அறிவுறுக்கப் படுவது.

[45] நட்பாக்கும் நிமித்தம் சிறிது பொருள் படை முதலியன உதவல் வேண்டும் என்று இரத்தல் என்பது கருத்து.

கிது தகவன்றென இடித்துக் கூறல். தடுத்தலாவது—[46]இங்ஙனம் செய்யற்க என்றல். ஏவுதலாவது—இதனைச் செய்க என்றல். நயத்தலாவது—[47]யானே நீ; என் பொருள் நின்னுடையது என்று அன்புகோடல். அருளுதலாவது—[48]உற்றுழி உதவல். உரப்புதலாவது—[49]எதிர் காலத்துக் கேடு விளையுமெனக் குற்றங் கூறி அச்சுறுத்தல். உடன்படுத்தலாவது—[50]காரிய நிறைவேற்றம் [51]வரம்பு மீறல் [52]தமர் முதலியோரைப்பற்றி நிகழும் துன்பம் என்னும் ஏதுக்களால் மூவகைப்படும்.

## சுலோகங்கள்

(1) அறிவிப்பு (பிரஞ்ஞாபனம்) ஆணை பரிதானம் பரிகாரம் படைப்பு நிகழ்ச்சியறிவுறுத்தல் மாற்றம் யாண்டுஞ்செல்வது என [53]மீண்டும் முடங்கல் எண்வகைப்படும்.

(2) [54]இவனால் இங்ஙனம் அறிவிக்கப்பட்டது. அஃது

---

[46] நண்பனொருவன் தகாத காரியத்தில் தலைப்படுங்கால் நட்புரிமை பற்றி அவனைத் தடுத்துரைத்தல் என்பது.

[47] ஒருவன் தனக்கும் நண்பனுக்கும் உள்ள வேறுபாடின்மையை உடலினும் பொருளினும் வைத்துக் காட்டியபடி.

[48] உற்றுழி—பகைவரால் இடுக்கண் நேர்ந்தவிடத்து.

[49] தன்வழி நடவாதவனை விரைவிற் கொலை சிறை முதலிய துன்பங்களால் ஒறுப்பல் என எதிர்கால விளைவுகூறி அச்சுறுத்தல் என்பது.

[50] இன்றியமையாது முடிக்கத்தக்க காரியத்தில் தலையிடாமலிருப்பவனை நண்பனொருவன் வற்புறுத்தித் தலையிடச் செய்தல் என்பது.

[51] அறத்தின் எல்லையைக்கடந்து வெகுளி முதலியன மேற்கொள்ளுவோனைச் சினந்தணித்து நன்னிலைப்படுத்தல் என்பது.

[52] சுற்றத்தார் நண்பர் வினைவலார் முதலியோரிழப்பில் ஒருவனுக்கு நேரும் துன்பத்தை ஒழித்துச் சாந்தப்படுத்தல் என்பது.

[53] மீண்டும் மற்றொரு வகையாக முடங்கல் எண்வகைப்படும் என இச் சுலோகத்தாற் குறிப்பிடுகின்றார்.

[54] அரசனுடைய ஒற்றர்கள் அமைச்சர் முதலியோரைக் குறித்து அவர்தம் நண்பர் பகைவரியல்புகளை ஆராய்ந்து அரசற்குத் தெரிவித்தல் அறிவிப்பாகும். இதுபற்றி அரசன் எழுதுவிப்பது அறிவிப்பு என்னும் முடங்கலாகும். அது நட்பு பகை முதலியனபற்றிப் பலதிறப்படும் என்ப. "அமைச்சருள் இன்னான் எங்கோ ஓரிடத்தில் புதைபொருளை எடுத்துத் தனதாக்கிக்கொண்டான்" என்று ஒற்றராலறிந்த அரசன் கூற்றாகும் "இவனால் இங்ஙனம்" என்று தொடங்கும் தொடர்மொழி.

உண்மையானல் அதனைக் கொடுத்தல் வேண்டும் என்று அரசன் கூறுகின்றான் எனவும் [55]அரசன் பக்கலில் மங்கல காரியத்தைக் [56]கூறுகின்றான் எனவும் இவ்விதம் பலதிறமாக எழுதுதல் அறிவிப்பென்னும் (பிரஞ்ஞாபனம் என்னும்) முடங்கலாகும்.

(3) [57]பெரும்பாலும் பணியாளரை முன்னிட்டு அளியும் தெறலும் குறித்து அரசன் செய்யும் கட்டளையை உடையது ஆணை என்னும் முடங்கலாகும்.

(4) தகுதிக்குத் தக்க ஏற்றத் தாழ்வுகளை யுடையது [58]பரிதானம் என்னும் முடங்கலாகும். அஃது [59]இன்பமும் துன்பமும் ஆகிய இரண்டையும் பற்றி எழுதப்படுவதால் இருவகைப்படும்.

(5) [60]குறிப்பிட்ட சாதியினர்க்கும் நாடு நகரம் கிராமங்களிலுள்ள மக்களுக்கும் அரசனது கட்டளைப்படி அவன் அருளைத் தெரிவிப்பது பரிகாரம் என்னும் முடங்கலாகும்.

---

[55] அரசன் பக்கல் ஒருவன் வந்து அமைச்சருள் இன்னன் தங்களுக்கு நலம் பயக்கும் செயல்களைச் செய்கின்றான் என்று கூறக்கேட்ட அரசன் அவ்வமைச்சனுக்கு எழுதுவிப்பது “அரசன் பக்கல்” என்று தொடங்கும் தொடர்மொழி. இது நட்புப்பற்றியதாகும்.

[56] அரசனது கட்டளைப்படி எழுத்தாளனல் எழுதப்படுதலின் ‘கூறுகின்றான்’ எனப் படர்க்கையில்வைத்துக்கூறினர். இப்பகுதி பகைமை பற்றியதாகும்.

[57] பெரும்பாலும் என்றமையால் பொதுமக்களைப்பற்றிய கட்டளையும் ஆணைமுடங்கலாகுமென்பது.

[58] தகுதி–தலை இடை கடையினராகிய எழுதப்படுவோரைப் பற்றியது.

[59] அரசன் தனக்கு நலம்புரிந்தானெருவனைக் குறித்து, “தாங்கள் என் கட்டளையைச் சிறப்புறச்செய்துமுடித்ததற்கு யான் தரும் பரிசில் சிறியதாக இருப்பினும் அதனை அன்புடன் ஏற்றுக்கொள்வீர்களாக” என்று எழுதுவித்தல் இன்பம்பற்றியதாகும். உறவினர் இழப்பால் வருத்தமுறும் வினைஞரைக் குறித்துச் சிறந்த குணங்களையுடைய அறவோராகிய தங்களுக்கு இத்துன்பம் நேர்தலாகாது. தெய்வத்தால் நேர்ந்ததற்கு யாம் என் செயலாம்! பொறுத்துக்கோடல் அறிஞராகிய நும் கடமையாகும் என்று எழுதுவித்தல் துன்பம்பற்றியதாகும்.

[60] இத்துணைக்காலம் வரை இன்ன மரபினரிடமிருந்தும் இன்ன நாடு நகரம் கிராமங்களிலுள்ள மக்களிடமிருந்தும் இறைப்பொருள் கொள்ளலாகாதென்று இறைவிடுதல்செய்தலைக் குறித்து எழுதுவிப்பது பரிகார முடங்கலாம் என்பது கருத்து.

(6) சொல்லினும் செயலினும் பிரமாணம் ஆக்குதல் [61]படைப்புமுடங்கலாகும். அது [62]சொற்பற்றியது [63]செயல் பற்றியது என இருவகைப்படும்.

(7) உண்மையில் பலவிதமாகத் [64]தெய்வத்தாலும் மக்களா லும் உண்டாம் செய்திகளை அறிவிப்பது நிகழ்ச்சியறிவுறுத்தல் என்னும் முடங்கலாகும். அஃது [65]இருவகையாகும்.

(8) பிறர் முடங்கலை [66]உள்ளவாறு படித்துப் பின்னர் அரச னிடம் படித்துக்காட்டி அரசன் சொல்லிய வண்ணம் மறுமொழி எழுதுவது மாற்றம் என்னும் முடங்கலாகும்.

(9) அரசன் வழிச்செல்வார்பொருட்டு [67]உதவியையும் [68]பாதுகாப்பையும் அளிக்குமாறு [69]தலைவர்களுக்கும் [70]வினைஞர் களுக்கும் குறிப்பிட்டு எழுதுவிப்பது யாண்டும் செல்வதென்னும் முடங்கலாகும். அதனை அரசன் தன்னுட்டிலிருந்தும், வேற்று

---

[61] அரசன் தன் வினையாளருள் ஒருவனைக்குறித்து இவன்செயல் என் செயல் எனவும் இவன்சொல் என்சொல்லெனவும் தனக்குப் பிரதிநிதியாகப் படைத்து எழுதுவிப்பது படைப்புமுடங்கலாகும்.

[62] சொற்பற்றியது — சொல்லைப் பிரமாணமாகக் கொள்ளும்படி எழுதுவது.

[63] செயல்பற்றியது — செயலைப் பிரமாணமாகக் கொள்ளும்படி எழுதுவது.

[64] தெய்வத்தால் நிகழ்வன காலம் மழை முதலிய நலங்களும் பெருங் காற்று வெள்ளம் பூகம்பம் முதலிய தீங்குகளுமாம். மக்களால் நிகழ்வன நட்டோர் முதலியோரால் உண்டாம் நலங்களும் பகைவர் கள்வர் முதலி யோரால் விளையும் தீங்குகளுமாம்.

[65] இருவகை—தெய்வத்தால் நிகழ்வது பற்றியும் மக்களால் நிகழ்வது. பற்றியும் ஆம்.

[66] உள்ளவாறு—எழுதியவன் கருத்துக்கு ஒத்தவாறு.

[67] உண்டி உறையுள் முதலியன.

[68] பாதுகாத்தல்—கள்வர் முதலியோராலும் விலங்கு முதலியவற்றாலும் இடையூறு வாராமற் காத்தல்.

[69] தலைவராவார்—அரண் நாடு எல்லை முதலிய இடங்களிலிருந்து காவல் புரிபவர்.

[70] வினைஞராவார்—இறைப்பொருள் தொகுப்போர் முதலிய அதி காரிகள்.

நாட்டுச் செலவினும் எக்காலத்திலும் [71]எழுதுவிக்கலாம்.

[72]இன்சொற் கூறல் கொடுத்தல் வேறுபடுத்தல் ஒறுத்தல் என உபாயம் நான்கு வகைப்படும்.

[73]அவற்றுள் இன்சொற்கூறல், குணநலம்பாராட்டல் தொடர்புரைத்தல் உதவியுரைத்தல் வருபயன்கூறல் தன்னை வழங்கல் என ஐந்து வகைப்படும்.

அவற்றுள், குடிப்பிறப்பு உடல் செயல் இயல்பு கல்வி பொருள் என்னும் இவை [74]முதலியவற்றின் [75]சிறப்புக்களைக் கூறல் [76]பாராட்டிக் கூறல் [77]துதி செய்தல் என்னுமிவ் வெல்லாம் குணநலம் பாராட்டலாகும்.

ஒத்த குடிப்பிறப்பு மணவியையு [78]மொழித் தொடர்பு [79]வேள்வித் தொடர்பு [80]முன்னையோர் தொடர்பு உள்ளமொத்தல் நட்புரிமை என்னும்இவற்றை எடுத்துரைத்தல் தொடர்புரைத்தல் ஆகும்.

[81]தானும் பிறனும் ஒருவர்க்கொருவர் செய்து கொள்ளும்

---

[71] யாண்டும்செல்வது என்னும் பெயர்க்காரணமும் இதனால் அறியத் தக்கது.

[72] சந்திவிக்கிரகங்களை மேற்கோடற்கு உபாயத்தைப்பற்றிய அறிவு எழுத்தாளர்க்கு இன்றியமையாததாகலின் அவ்வுபாயங்களினியல்பை உணர்த்தத் தொடங்குகின்றார்.

[73] இன்சொற் கூறலின் வகைகளைக் கூறுகின்றார்.

[74] முதலிய என்பதனால் ஆண்டு அழகு முதலியவற்றையும் கொள்ளல் வேண்டும்.

[75] குடிப்பிறப்பு முதலியவற்றின் குறைகளைவிட்டுக் குணங்களை எடுத்து மொழிதல் என்பது கருத்து.

[76] பாராட்டிக் கூறல்—புகழ்ந்துரைத்தல்.

[77] துதிசெய்தல்—இல்லனவற்றையும் சேர்த்துப் புனைந்துரைத்தல்.

[78] மொழித் தொடர்பு—ஆசிரியர் மாணவகரியையு.

[79] வேள்வித் தொடர்பு—வேள்வி ஆசானும் வேள்வித்தலைவனும் ஆகிய சம்பந்தம்.

[80] முன்னையோர்—குலமுதியோர்.

[81] தான்-உபாயஞ் செய்வோன். பிறன்-உபாயஞ் செய்யப்படுவோன். இவ்விருதிறத்தாரும் ஒருவருக்கு ஒருவர் முன் செய்துகொண்ட உதவிகளை எடுத்துரைத்தல் உதவியுரைத்தலாகும்.

உதவியைக் கூறுதல் உதவியுரைத்தலாகும். [82]இதனை இங்ஙனம் செய்தால் இப்பயன் நம்மிருவர்க்கும் விளையும் என்று கூறி அவா விளைத்தல் வருபயன் கூறலாகும். யான் நின்னின் வேறல்லன் ஆதலின் என் [83]பொருளை நின்னுடையதாகக் கொண்டு நின் காரியத்திற் பயன்படுத்தலாமென்று கூறுதல் தன்னை வழங்கலாகும். இனிப் பொருள்கொடுத்தல் கொடுத்தல் என்னும் உபாயமாகும்.

[84]ஐயம் விளைத்தலும் [85]வெருட்டுதலும் வேறுபடுத்தலாகும்.

[86]துன்பஞ்செய்தல் பொருள்கோடல் கோறல் இம்மூன்றும் ஒறுத்தலாகும்.

[87]ஒளியின்மை முரண் கூறியதுகூறல் பிழைபடமொழிதல் பிறழ்ச்சி இவ்வைந்தும் முடங்கற் குற்றங்களாம். அவற்றுள் ஒளியின்மையாவது: [88]அழுக்கு முடங்கலும் அழகும் [89]வடிவொப்பும் [90]பதிவும் இல்லாத எழுத்துக்களுடைமையுமாம். முன்னொடு பின் [91]பொருத்தமின்றி யிருத்தல் முரணாகும்.

---

82 இதனை—இக்காரியத்தை.

83 பொருள்—நிலம் பொன் மணி முதலியன.

84 ஐயம் விளைத்தல்—நண்பர் பலருள் ஒருவனுக்கிழைத்த தீங்கைக் கண்டு மற்றொருவன், நம்மையும் இங்ஙனமே துன்புறுத்துவன் என்று வெறுத்தற்கும் பொறாமை கொள்ளுதற்கும் காரணமாகிய ஐயத்தை உண்டாக்குதல்.

85 வெருட்டுதல்—" பணிவில்லாத நின்னைக் கொன்றுவிடுவேன் " என்பதுபோன்ற சொற்களால் அச்சுறுத்தல்.

86 துன்பஞ்செய்தல்—சிறைப்படுத்தல் அடித்தல் முதலியவற்றால் துன்புறுத்தல்.

87 இதுகாறும் முடங்கலுக்குரிய குணங்களைக்கூறி இனி அதன் குற்றங்களைக்கூறத் தொடங்குகின்றார்.

88 அழுக்கு முடங்கலாவது இயற்கையில் அழுக்கேறிய ஓலை. அளவின் மிக்க மைத் தோய்வினால் கருமையேறிய ஓலையுமாம்.

89 வடிவொப்பு—பெரியனவும் சிறியனவுமின்றி உருவொத்தல்.

90 பதிவு—வரைவு நன்கு பதிதல்.

91 பொருத்தமின்றி யிருத்தல் பொருளைப்பற்றியதாகும். " வணங்கிக் கட்டளையிடுகின்றான் " என்றாற்போல. வணங்குதற்குரியவன் கட்டளையிடுதற்குரியன் ஆகாமையின் முரணுதல் அறிக.

முன் கூறியதொன்றைப் பயனின்றி மீண்டுங் கூறல் கூறியது கூறலாகும்.

ஆண்பால் பெண்பால் ஒருமை பன்மை காலம் [92]காரகம் முதலியவற்றை மாறுபடக் கூறல் பிழைபடக் கூறலாகும். பிரிக்க வேண்டாத இடத்திற் பிரித்தலும் வேண்டிய இடத்திற் பிரியாமையும் [93]குணமாறுபாடும் பிறழ்ச்சியாகும்.

### சுலோகம்

[94]பொருணூல்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்து மக்கள் வழக்க ஒழுக்கங்களையும் கண்டு அரசர் பொருட்டுக் [95]கௌடலியனுல் முடங்கல்விதி கூறப்பட்டது.

இரண்டாம் அதிகரணம் பத்தாம் பிரகரணம்
"முடங்கல் விதிமுறை" என்னும் முப்பத்தொன்ரும்
அத்தியாயம்—முற்றிற்று.

---

92 காரகம் இன்னதென்பதை "விளிகுறை யிரண்டையும் விட்டவேற்றுமைகள், வினையான் முடியிற் காரக மெனப்பெறும்" என்பதனுல் அறிக.

93 குணங்கள்—பொருள் வைப்புமுறை இனிமை முதலியவாக முடங்கலுக்குக் கூறப்பட்ட நலங்கள்.

94 வியாழன் வெள்ளி முதலியோரால் அருளிச்செயப்பட்ட நூல்கள்.

95 பண்டை நூல்வழக்கிலும் உலகியலிலும் முடங்கல் விதிமுறை காணப்படுமாயினும் அதற்குரிய நலந்தீங்குகள் எல்லாவற்றையும் தொகுத்து ஈண்டுக் கூறினமையால் "கௌடலியனுற் கூறப்பட்டது" என்ருர்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை.

## பதினொராம் பிரகரணம்—[1]கருவூலத்திலை திருமணி ஆய்தல்.

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

கருவூலத் தலைவன் கருவூலத்திற் சேர்க்கத்தக்க [2]மணி [3]திண்மைப் பொருள் [4]நொய்மைப் பொருள் [5]குப்பியப் பொருள் என்னும் இவற்றை, இவை சம்பந்தமான செய்திகளை நன்கறிந்த [6]கணக்கர்களுடனிருந்து பெற்றுக் கொள்ளல் வேண்டும்.

[7]பொருநையாறு [8]பாண்டிய கபாடம் [9]பாசிகையாறு [10]குலையாறு [11]சூரணியாறு [12]மகேந்திரம் [13]கர்த்தமையாறு [14]சிரௌதசீ

---

### 32-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] கருவூலத்திற் சேர்க்கத்தக்க அழகிய மணி முதலியவற்றின் நன்று தீதாராய்தல். மணி என்பது உபலக்கணத்தால் திண்மை நொய்மைக் குப்பியப் பொருள்களையும் உணர்த்தும். முடங்கல் விதிமுறை உணர்ந்த வேந்தற்குக் கருவூலம் இன்றியமையாத தொன்றாகலானும், பொருட்பண்டாரம் புரப்போன் இறைப்பொருள் தொகுப்போன் என்னும் இவர் தம் செயல்களால் கருவூலத்தின் ஆக்கமும் பாதுகாப்பும் முற்கூறப்பட்டமையானும் ஆண்டுப் பெறப்படாத அதனியல்பு இங்கே கூறப்படுகின்றது. இதனாற் பிரகரண இயைபு புலனாதல் அறிக.

[2] மணி—முத்து முதலிய இரத்தினங்கள்.

[3] திண்மைப் பொருள்—சந்தனம் அகில் முதலிய மரங்கள்.

[4] நொய்மைப் பொருள்—பட்டு, நூல் முதலியன.

[5] குப்பியம்—பொன் வெள்ளியல்லாத மற்றைய உலோகங்களும் காழ்த்த மரம் முதலியனவும், அம்பு வாள் முதலிய படைக்கலன்களுமாம்.

[6] உடனிருத்தல்—நன்று தீதாராய்ந்துகொள்ளுதற் பொருட்டு.

[7] பொருநை—தாமிரபரணி.

[8] பாண்டிய கபாடம்—பாண்டிய நாட்டிற்கு வாயிற் கதவுபோல் அமைந்த பொதியின்மலையின் ஒரு பகுதி.

[9] பாசிகை—பாடலீபுத்திரம் என்னும் நகரத்தின் அருகிலுள்ள ஓர் யாறு.

[10] குலை—சிங்கள நாட்டில் மயூரக் கிராமத்திலுள்ள ஓர் ஆறு.

[11] சூரணி—சேரநாட்டில் முரசி என்னும் பட்டினத்திற் கருகிலுள்ள ஒரு யாறு.

[12] மகேந்திரம்—இது மகேந்திரமலையின் பக்கலிலுள்ள கடலையுணர்த்தும்.

[13] கர்த்தமை—பாரசிக நாட்டிலுள்ள ஓர் யாறு.

[14] சிரௌதசீ—பற்பர நாட்டிலுள்ள ஒரு நதி.

யாறு [15]சீகண்டமடு இமயமலை என்னும் [16]இப்பத்தும் முத்துத் தோன்றும் இடங்களாம்.

சங்கு சிப்பி [17]பல்வகைக் குழு என்னும் இவை முத்தீனும் பொருள்களாம்.

[18]மசூரகவுரு திரிபுடகவுரு ஆமையுரு பிறையுரு [19]குப்பாய முடைமை இரட்டையுரு பிளவு [20]சருச்சரை தேன்மெழுகு போன்ற புள்ளி கமண்டலவுரு கறுப்பும் மஞ்சளுங் கலந்த நிறம் நீல நிறம் [21]வேற்றிடத்துளை என்னும் இக்[22]குற்றத்தையுடைய முத்துக்கள் சிறந்தனவாகா.

பருமை வட்டம் உண்டை ஒளியுடைமை வெண்மை திண்மை வழுவழுப்பு உரியவிடத்தில் துளையுடைமை இக் [23]குணமுடைய முத்துக்கள் சிறந்தனவாம்.

[24]தலைமணி உடையது [25]உதவித் தலைமணியுடையது [26]கணு

---

[15] சீகண்டமடு—இது பப்பர நாட்டின் கடலில் ஒரு பகுதி.

[16] இப்பத்திடங்களிலும் தோன்றும் முத்துக்களுக்கு முறையே தாமிர பருணிகம், பாண்டிய கபாடகம், பாசிக்கியம், கௌலேயம், சௌர்ணேயம், மாகேந்திரம், கார்த்தமிகம், சிரௌதசீயம், இராதீயம், ஐமவதம் என்பன பெயர்களாம்.

[17] பல்வகைக் குழு—யானைமருப்பு பன்றிக்கொம்பு மூங்கில் பாம்பின் தலை மேகம் மீன்தலை முதலியன.

[18] மசூரகம் திரிபுடகம் என்பன தானிய வகைகளாம்.

[19] குப்பாயமுடைமை—சட்டை போன்ற படலமுடைமை.

[20] சருச்சரை—சொரசொரப்பு.

[21] துளையிடுதற்குரியதல்லாத இடத்தில் துளையிடப்பட்டது.

[22] மேற்கூறிய உருவங்களும் படலமுதலியவும் நிறங்களும் உடைய முத்துக்கள் குற்றமுடையன வென்பது கருத்து; குற்றங்கள் அறவே இருத்தலாகாதென்பது தோன்ற முற்கூறப்பட்டன.

[23] இக்குணங்களுட் சில முன்கூறிய குற்றங்களின்மையாற் பெறப்படு மாயினும் பருமை முதலியனவே குணங்களாகும் என்பது வலியுறுதற்கு மீண்டும் கூறப்பட்டன.

[24] நடுவிற் பருமணி ஒன்றும் இருமருங்கிலும் ஒத்த அளவினையுடைய சிறுமணிகளும் வைத்துக் கோக்கப்பட்ட வடம் தலைமணியுடையது என் னும் பெயருடையதாகும்.

[25] நடுவில் ஒரு பருமணியும் இருமருங்கிலும் ஒத்த அளவினையுடைய ஒவ்வொரு சிறு மணியும் ஆக மாறிமாறி அமைத்துக் கோக்கப்பட்ட வடம் உதவித்தலைமணி யுடையது என்னும் பெயருடையதாகும்.

[26] நடுவில் ஒரு பெருமணியும் இருமருங்கிலும் ஒத்த அளவின உடைய இரண்டிரண்டு சிறுமணிகளும் ஆக மாறிமாறி அமைத்துக் கோக்கப்பட்ட வடம் கணுசிலை என்னும் பெயருடையதாகும்.

நிலை [27]செறி நிலை [28]தரளக் கட்டு என்னுமிவ்வைந்தும் முத்து வடத்தின் வகைகளாம்.

[29]முத்துவடங்கள் ஆயிரத்தெட்டுக் கொண்டது [30]இந்திரச் சந்தம் என்னும் பெயருடையதாகும். அவ்வளவிற் பாதிகொண்டது விசயச் சந்தம் எனவும் நூறு கொண்டது தேவச் சந்தமென வும் அறுபத்து நான்கு கொண்டது அருத்தகாரம் எனவும் ஐம்பத்து நான்கு கொண்டது கதிர்க்கலாபம் எனவும் முப்பத்திரண்டு கொண்டது குச்சமெனவும் இருபத்தேழு கொண்டது நாண்மீன் மாலை யெனவும் இருபத்து நான்கு கொண்டது அருத்தகுச்ச மெனவும் இருபது கொண்டது மாணவகமெனவும் அவ்வளவிற் பாதி கொண்டது அருத்தமாணவகமெனவும் பெயர் பெறும். [31]ஈண்டுக் கூறப்பட்டவைகளே மாணிக்கம் முதலிய மணிகளில் ஒன்றை நடுவிலுடையனவாக இருப்பின் [32]முன்னைப் பெயரோடியைந்த மாணவகம் என்னும் பெயரை உடையனவாம். தலை மணியுடைய வடங்களை மாத்திரம் கொண்டது [33]தூய மாலை

[27] நடுவில் ஒரு பெருமணியும் இருமருங்கிலும் முறையே சிறுத்து வருமாறு ஏற்ற மணிகளையும் அமைத்துக் கோக்கப்பட்ட வடம் செறிநிலை என்னும் பெயருடையதாகும்.

[28] ஒத்த அளவினையுடைய மணிகளால் கோத்தமைக்கப்பட்ட வடம் தரளக்கட்டு என்னும் பெயருடையதாகும்.

[29] முத்துவடங்கள்—தலைமணியுடையது முதலிய ஐந்துமாம்.

[30] இந்திரச்சந்தம் என்னும் பெயரை தலைமணியுடையது முதலிய ஐந்து வகைகளோடும் இயைத்து தலைமணியுடைய இந்திரச்சந்தம் உதவித் தலைமணியுடைய இந்திரச்சந்தம் கனுநிலை இந்திரச்சந்தம் செறிநிலை இந்திரச்சந்தம் தரளக்கட்டு இந்திரச்சந்தம் எனக் கொள்ளல் வேண்டும். பின்வரும் விசயச்சந்தம் முதலியவற்றிற்கும் இவ்வாறே இயைத்துப் பெயர் கூறிக்கொள்ளல் வேண்டும்.

[31] கூறப்பட்டவை—இந்திரச்சந்தம் முதலாக அருத்த மாணவகம் ஈறுக வுள்ள பத்தும் ஆம்.

[32] இந்திரச்சந்தமாணவகம் விசயச்சந்தமாணவகம் முதலிய பெயர் களைப்பெறும் என்பது கருத்து.

[33] இத்தூயமாலை தலைமணியுடைய இந்திரச்சந்தம் முதலிய பெயர்களோடு இயைந்து தலைமணியுடைய இந்திரச்சந்தத் தூயமாலை, தலைமணியுடைய விசயச்சந்தத் தூயமாலை தலைமணியுடைய தேவச்சந்தத் தூயமாலை முதலிய பெயர்களைப் பெறும் என்பது கருத்து.

யாகும். [34]எஞ்சியவைகளும் [35]அங்ஙனமே. மாணிக்கம் முதலிய மணிகளுள் ஒன்றை நடுவிலுடைய அருத்தமாணவகம் மூன்று அல்லது ஐந்து [36]தகட்டுருக்களை உடையனவாயின் தகட்டுமாலை எனப் பெயர் பெறும். [37]கலப்பில்லாத ஒற்றைவடம் சூத்திரம் என்று கூறப்படும். அவ் வொற்றைவடமே மாணிக்கம் முதலிய மணிகளுள் ஒன்றனை நடுவிலுடையதாக இருப்பின் மாலை எனப் படும். பொன்னாலாகிய மணிகளை இடையிடையே யுடைய முத்து வடம் இரத்தினவளி என்று கூறப்படும். பொன்னாலாகிய மணி களையும் மாணிக்கம் முதலிய மணிகளையும் இடையிடையே யுடைய முத்துவடம் அபவருத்தகம் எனப்படும். பொற் கம்பி இடையிடையே புலப்படக் கோத்தமைத்த முத்துவடம் சோபா னகம் என்று கூறப்படும். அது மாணிக்கம் முதலிய மணிகளுள் ஒன்றை நடுவிலுடையதாயின் மணிசோபானகம் எனப்படும்.

[38]இதனால் தலை கை கால் இடை என்னும் இவ்வுறுப்புக்களில் அணிதற்குரிய வடமும் வடத் தொகுதியும் ஆகிய வேறுபாடுகள் [39]கூறப்பட்டபடியாம்.

[40]கௌடம் [41]மாலேயகம் [42]பாரசமுத்திரகம் என மணி

---

[34] எஞ்சியவை—உதவித் தலைமணியுடையது முதலிய நான்குமாம்.

[35] உதவித்தலைமணியுடைய இந்திரச்சந்தத் தூயமாலை முதலியவாகவும் கணுநிலை இந்திரச்சந்தத் தூயமாலை முதலியவாகவும் செறிநிலை இந்திரச் சந்தத் தூயமாலை முதலியவாகவும் தளரக்கட்டு இந்திரச்சந்தத் தூயமாலை முதலியவாகவும் பெயர்பெறும் என்பது கருத்து.

[36] தகட்டுரு—இலைவடிவமாகச் செய்யப்பட்ட பொற்றகடு.

[37] கலப்பு—மாணிக்கம் முதலியவற்றின் சேர்க்கை.

[38] தலைமணியுடையது முதலிய முத்துவடங்களெல்லாம் கழுத்தில் அணிதற் குரியனவாக இங்கே கூறப்பட்டமையால் தலை கை கால் இடை என்னும் இவ்வுறுப்புக்களில் அணிதற்குரிய வடங்களின் வேறுபாடும் இது போலவே அறியத்தக்கதென்பது கருத்து.

[39] இதுவரை முத்துக்களைப்பற்றிய செய்திகள் கூறப்பட்டன.

[40] இனி முத்து அல்லாத ஏனைய மணிகளின் இயல்பைக் கூறத் தொடங்குகின்றார். பொதியின் மலைக்கும் கடலுக்கும் நடுவிடம் கோடி எனப் பெயர்பெறும். அங்கே உண்டாம் இரத்தினம் கௌடமாகும்.

[41] பொதியின் மலையின் ஒரு கூறு மாலை எனப்படும். அதன்கண் உண் டாம் இரத்தினம் மாலேயகம் ஆகும்.

[42] சிங்களத்தீவிலுள்ளதொருமலை பாரசமுத்திரம் எனப்படும். அதில் தோன்றும் இரத்தினம் பாரசமுத்திரகம் ஆகும்.

[43]மூவகைப்படும்.

[44]சௌகந்திகம் பதுமராகம் [45]அநவத்தியராகம் பாரிசாதபுட்பகம் பாலசூரியகம் என மாணிக்கம் ஐந்து வகைப்படும்.

வைடூரியம் — உற்பலவண்ணம் வாகைப்பூவண்ணம் நீர் வண்ணம் [46]மூங்கில்வண்ணம் கிளிச்சிறைவண்ணம் மஞ்சள் வண்ணம் (புட்பராகம்) [47]கோமூத்திரவண்ணம் [48]கோமேத வண்ணம் என எண்வகைப்படும்.

நீலமணி—[49]நீலாவளீயம் [50]இந்திரநீலம் [51]கலாயவண்ணம் [52]மகாநீலம் [53]நாவல் வண்ணம் முகில் வண்ணம் [54]நந்தகம் [55]நடு நீர்ப் பெருக்கு என எண் வகைப்படும்.

[56]தூயபடிகம் [57]மூலாட வண்ணம் [58]சந்திரகாந்தம் [59]சூரிய

---

43 தோன்றுமிடம்பற்றி மூவகைப்படும் என்று கூறியது பெரும் பான்மை குறித்து; மரகதம் வைடூரியம் படிகம் முதலியன விந்தியம் விதூரம் தருத்தரம் முதலிய மலைகளிலும் உண்டாதலின்.

44 சௌகந்திகம்—செங்கழுநீர்மலர்; அதுபோல சிறிது நீலநிறம் கலந்த செந்நிறமுடைமையால் இப்பெயராயிற்று.

45 அநவத்தியம்—குங்குமப்பூவை உணர்த்துமென்பர் உரையாசிரியர். அதனை ஒத்த நிறமுடைமையால் அநவத்தியராகமெனப் பெயராயிற்று.

46 மூங்கில்—அதன் இலையை உணர்த்தும். கிளிச்சிறை வண்ணம்—கிளியின் இறகுபோன்ற பசுமை நிறமுடையதென்பது.

47 கோமூத்திர வண்ணம்—பசுவின் மூத்திரம் போன்ற வெண்மை கலந்த மஞ்சள் நிறமுடையது.

48 கோமேதம்—கோரோசனை.

49 நீலாவளீயம்—அலைகளைப்போன்ற நீலக்கோடுகளை யுடையது.

50 இந்திரநீலம்—மயிற்றோகைபோல் நீலநிறமுடையது.

51 கலாயவண்ணம்:— கலாயம்—ஒருவகைத் தானியம்; வண்ணம்—அதன் மலர்நிறம் போன்ற நிறமுடையது.

52 மகாநீலம்—வண்டின் நிறம் போன்ற நிறமுடையது.

53 நாவல் வண்ணம்—நாவற்பழம் போன்ற நிறமுடையது.

54 நந்தகம்—தவளை; அதுபோல உள்ளே வெண்மையும் புறத்தே நீலமும் உடையதென்பது.

55 நடுநீர்ப்பெருக்கு—நீர்ப்பெருக்குப் போல நடுவண் ஒளியுடையது என்பது.

56 தூயபடிகம்—மிக்க வெண்மை நிறம் வாய்ந்தது.

57 மூலாடவண்ணம் — ஆடையெடுக்கப்பட்ட தயிர் போன்ற நிற முடையது.

58 சந்திரகாந்தம்—சந்திர கிரணம் பட்டவுடன் தண்ணீர் காலுவது.

59 சூரியகாந்தம்—சூரிய கிரணம் பட்டவுடன் நெருப்புக்காலுவது.

காந்தம் எனப் படிகமணி [60]நான்கு வகைப்படும்.

[61]அறுகோணம் நாற்கோணம் வட்டம் நன்னிறம் [62]உறுப்பமைப்பு தெளிவு வழுவழுப்பு திண்மை ஒளியுடைமை [63]உள்ளொளியுடைமை [64]ஒளிப்படுத்தல் இப்பதினொன்றும் இரத்தினங்களின் குணங்களாம்.

நிறக்குறை ஒளிக்குறை [65]பரலுடைமை உட்புள்ளி [66]பிளவு வேற்றிடத்துளை [67]கோடு என்னும் இவ்வேழும் இரத்தினங்களுக்குரிய குற்றங்கள்.

---

[60] ஈண்டுக்கூறிய மாணிக்கம் முதலியவற்றின் வகைகளைப்பற்றி ஒருசாராசிரியர் கொள்கை வருமாறு :—சௌகந்திகம் என்பதை மாணிக்கமெனக் கொண்டு அதனைத் தலைப்பாகக் கருதி அது பதுமராகம்முதல் நான்குவகைப்படும் என்பதும், வைடூரியம் உற்பலவண்ணம் முதலாக நீலாவளியம் இறுதியாக ஒன்பது வகைப்படும் என்பதும், இந்திரநீலம் என்பதைத் தலைப்பாகக் கொண்டு அது கலாயவண்ணம் முதலாக நடுநீர்ப்பெருக் கிறுதியாக அறுவகைப்படும் என்பதும், தூயபடிகம் முதலாக சூரியகாந்தம் இறுதியாகப் படிகமணி நான்கு வகைப்படும் என்பதூஉமாம்; மேற்கூறிய மணிவகைகளைப்பற்றி வேறொருசா ராசிரியர் பின்வருமாறு கூறுவர் :—" மாணிக்கங்கள்—முயற்குருதி செம்பருத்திப்பூ திலகமலர் பாரிசாதமலர் இளஞாயிறு இவற்றை ஒத்த நிறமுடையனவாகும். வைடூரிய மணிகள்—கிளியிறகு நீர் கடலுப்பு வாகைமலர் மஞ்சள் பூனைக்கண் மூங்கிலிலை இவற்றை ஒத்த நிறமுடையனவாகும். நீலமணிகள்—மயிற்றோகைக்கண் வண்டு நாவற்கனி இவற்றை ஒத்த நிறமுடையனவாகும்; அவை கதிரவன் ஒளிவெப்பம்படின் காண்டற்கரியனவாகும். மரகதமணிகள்—பாற்கடல் கடையுங்கால் மந்தரமலையாற் றுன்புற்ற வாசுகி என்னும் பாம்பின் நஞ்சினின்றும் தோன்றினவென்று சிலரும், பாம்பின் முட்டையினின்றும் தோன்றினவென்று சிலரும் கூறுப. அவை கருடனிறகு வாழையிலை மூங்கிலிலை பசியநெற்கதிர் இவற்றை ஒத்த நிறமுடையனவாகும்.

[61] அறுகோணம் முதலிய மூன்றனுள் ஒன்றுடைமை என்பது கருத்து.

[62] உறுப்பமைப்பு — அணிகலன்களிற் பதித்தற்குரிய உறுப்புக்கள் உடைமை.

[63] உள்ளொளியுடைமை—மணியின் உட்பகுதியில் ஒளியுடைய நீரோட்டம் அமைந்திருத்தல்.

[64] ஒளிப்படுத்தல்—தன்னொளியால் எதிர்ப்பட்ட பொருளையும் ஒளியுடையதாக்கல்.

[65] பரலுடைமை—இடையிடையே பரற்கற்போன்று காணப்படல்.

[66] பிளவு—வெடிப்புக் காணப்படுதல்.

[67] கோடு—கீறல்.

விமலகம் (வெண்மையும் பசுமையும் கலந்த நிறமுடையது), சசியகம் (நீலநிறமுடையது), அஞ்சன மூலகம் (நீலமும் கருமையும் கலந்த நிறமுடையது), பித்தகம் (ஆவின் பித்துப்போன்ற நிற முடையது), சுலபகம் (வெண்மைநிறமுடையது), செங்கண் (விளிம் பிற் செந்நிறமும் நடுவிற் கருநிறமும் உடையது), மிருகாசுமகம் (வெண்மையும் கருமையும் கலந்த நிறமுடையது), சோதிரசகம் (வெண்மையும் செம்மையும் கலந்த நிறமுடையது), மைலேயகம் (பெருங்காயம் போன்ற நிறமுடையது), ஆகிச்சத்திரகம் (குறைந்த நிறமுடையது), கூர்ப்பம் (பரற்கற்போன்றஅரும்புகளையுடையது), பிரதிகூர்ப்பம் (மெழுகுபோன்ற நிறமுடையது), சுகந்திகூர்ப்பம் (பாசிப்பயறுபோன்ற நிறமுடையது), க்ஷீரபகம் (பால்போன்ற நிற முடையது), சுத்திசூரணகம் (பல்வகை நிறமுடையது), சிலாப்பிர வாளகம் (பவள நிறமுடையது), புளகம் (உள்ளே கருமையுடை யது), சுக்கிரபுளகம் (உள்ளே வெண்மையுடையது) என்னும் இப்பதினெட்டும் மணிகளின் உட்பிரிவுகளாகும்.

எஞ்சியவை யெல்லாம் [68]காசமணிகளாம்.

வைரமணி தோன்றும் இடங்கள் [69]கலிங்கநாடு விதர்ப்பநாடு கோசலநாடு காத்தீரநாடு திருக்கடனமலை மணிமந்தமலை [70]என்பன வாம்.

[71]நிலவறை நீர்நிலை [72]பல்வகைக்குழு என்னும் இம்மூன்றும்

---

[68] காசமணிகள்—கடைத்தரமான மணிகள்; இங்குக் கூறியவாற்றால் மாணிக்கத்தின் வகைகள் ஐந்தும் வைடூரிய வகைகள் எட்டும் நீலத்தின் வகைகள் எட்டும் படிகத்தின் வகைகள் நான்கும் ஆக இருபத்தைந்து வகைப்படும் என்பதும், மணியின் குணங்கள் அறுகோணம் முதலிய பதி னொரு வகைப்படும் என்பதும், குற்றங்கள் நிறக்குறை முதலிய ஏழு வகைப் படும் என்பதும் உட்பிரிவுகள் விமலகம் முதலிய பதினெட்டு வகைப்படும் என்பதும் போந்தவாறும்.

[69] விதர்ப்பநாட்டை சபாராஷ்டிரகம் என்றும் கோசலநாட்டை மத்தியமராஷ்டிரகம் என்றும் கலிங்கநாட்டை இந்திரவானகம் என்றும் முதனூல் கூறும்.

[70]வைரமணி மகதம் முதலிய பிற நாடுகளிலும் தோன்றுதலால் இங்கே கூறிய ஆறிடங்ளும் உபலக்கணமாம்.

[71] நிலவறை—சுரங்கம்.

[72] யானைத்தந்தம் முதலிய வெல்லாம் பல்வகைக் குழுவின்பாற்படும்.

வைரமணி விளையும் [73]இடங்களாம்.

பூனைக்கண்வண்ணம் வாகைப்பூவண்ணம் கோமூத்திரவண்ணம் கோரோசனைவண்ணம் தூயபடிகவண்ணம் மாணிக்கம் முதலிய மணிவகைகளில் ஒன்றன்வண்ணம் ஆகிய இவ்வெல்லாம் வைரமணிக்குரிய நிறங்களாம்.

பருமை வழுவழுப்பு திண்மை [74]தகர்க்கப்படாமை [75]ஒத்த கோணமுடைமை [76]கலக்கீற்றுக்கல் [77]தருக்குச்சுழற்சி மிக்க ஒளியுடைமை என்னுமிக் குணங்களையுடைய வைரமணிகள் சிறந்தனவாம்.

[78]கோணமின்மை [79]விளிம்பின்மை [80]வட்டக்கேடு என்னும் குற்றமுடைய வைரமணிகள் சிறந்தன [81]ஆகா.

பவழம் தோன்றுமிடங்கள் [82]அலகந்தமும் [83]விவருணமும்

---

[73] முன்னர்க் கூறப்பட்ட தோன்றுமிடங்களாகிய விதர்ப்பம் முதலியன ஆகரங்களாகும். இங்கே கூறப்பட்ட விளையுமிடங்களாகிய நிலவறை முதலியன யோனிகளாகும்.

[74] தகர்க்கப்படாமை—கற்றுண்டு முதலியவற்றால் நுறுக்கப்படாமை.

[75] கோணம்—கோடி.

[76] கலக்கீற்றுக்கல்—கலம்—வெண்கலப் பாத்திரம்; கீற்று—கோடு. நீர் நிரம்பிய வழுவழுப்பான வெண்கலப் பாத்திரத்தில் வைரமணியை இட்டு அசைத்தால் அப்பாத்திரத்தில் கோடுண்டாகும் என்பது கருத்து.

[77] தருக்கு—சுழலும் ஒருவகைப் பொறி; அது போல் ஒளி நீர்ச் சுழற்சியை யுடையது என்பது கருத்து. ஒருசார் ஆசிரியர் இன்னும் சில குணங்களையும் கூறுவர்; வைரமணி நெருப்பிலிடப்படின் நிறவேற்றுமை அடைதலாகாதென்பதும் சாணையிலாதல் உரைகல்லிலாதல் தேய்க்கப்படின் ஒளி மிகுதல் என்பதும் பிறவுமாம்.

[78] கோணம்—ஈண்டு மேற்பாகத்திலுள்ளது.

[79] விளிம்பு—பக்கங்களிலுள்ளது.

[80] வட்டக் கேடு—வட்டவடிவில் ஒருபால் சிதைந்திருத்தல்.

[81] குற்றமுடைய மணிகளைப்பற்றி ஒரு சாராசிரியர் கூறுவது—அழகின்மை வண்ணமின்மை ஒளியின்மை கடுங்காட்சி சூடுண்டல் வெடிப்பு என்னும் இக்குற்றமுடைய மணிகளை பகைவர்பால் வைத்தல் வேண்டும் என்பது.

[82] அலகந்தம் பப்பரநாட்டின் அருகிலுள்ள கடலின் ஒரு பகுதி; அதன்கட்டோன்றிய பவழம் ஆலகந்தகம் எனப்படும்.

[83] விவருணம்—யவனத் தீவிலுள்ள கடலின் ஒரு பகுதி அதன்கட்டோன்றிய பவழம் வைவருணிகம் எனப்படும்.

ஆம். அதன் நிறம் தூய செம்மையும் செந்தாமரைப்பூவண்ணமும் ஆம். புழுத்தின்றலும் நடுப்பெருத்தலும் அதற்குரிய குற்றங்களாம்.

[84]சந்தனம் சாதனநாட்டிலுண்டாவது செந்நிறமும் [85]மண்மணமும் உடையதாகும். கோச்சிரநாட்டிலுண்டாவது கருமையும் செம்மையும் கலந்த நிறமும் [86]மீன்மணமும் உடையதாகும். அரி என்னும் நாட்டிலுண்டாகும் அரிசந்தனம் கிளியிறகு போன்ற நிறமும் மாம்பழம் போன்ற மணமும் உடையதாகும். [87]திருணசந்தியின் பக்கலுண்டாவதும் [88]அத்தகையதே. கிராமேருகம் என்னும் இடத்திலுண்டாவது செந்நிறமும் செம்மையுங் கருமையுங் கலந்த நிறமும் [89]ஆட்டு மூத்திர மணமும் உடையதாகும். தேவசபையிலுண்டாவது செம்மை நிறமும் தாமரைமலர்மணமும் உடையதாகும். சாவகம் என்பதும் [90]அத்தகையதே. சோங்ககம் என்பது செம்மை நிறமும் செம்மையும் கருமையும் கலந்த நிறமும் வழுவழுப்பும் [91]உடையதாகும். தவ்வுருவமும் [92]அத்தகையதே.

---

[84] இதுகாறும் இரத்தினங்களைப்பற்றிய செய்திகள் கூறப்பட்டன; இனித் திண்மைப் பொருள்களைப் பற்றிய செய்திகளைக் கூறத் தொடங்குகின்றார். திண்மைப் பொருள்களுள் சந்தனம் சிறந்ததாதலின் அது முதலில் எடுத்துக் கொள்ளப்பட்டது. அது தோன்றுமிடங்கள் பதினாறென்பதும் அதன் வண்ணம் ஒன்பது வகை என்பதும் மணம் ஆறு வகை என்பதும் குணங்கள் பதினொன்றென்பதும் பின்வரும் விளக்கங்களாலறியலாம்.

[85] மண்மணம் — புதிய மழை நீரால் நனைந்த மண்ணிற் றோன்றும் மணம் போல்வது.

[86] மீன்மணம் என்பதை மத்ஸ்யகந்தி என்று முதனூல் கூறும். அதற்குச் செவ்வலரிப்பூமணத்தை ஒத்தது என்பர் மற்றோர் உரையாசிரியர்.

[87] இதனைத் தாருணசம் என்பர்.

[88] கிளியிறகு போன்ற நிறமும் மாம்பழம் போன்ற மணமும் உடையதென்பது கருத்து.

[89] முதனூலில்வந்த 'பஸ்தி' என்னும் சொல்லிற்கு ஆடு என்று பொருள் கொள்ளப்பட்டது. அதற்குக் கத்தூரி என்று பொருள் கொள்வர்.

[90] செம்மை நிறமும் தாமரை மலர் மணமும் உடையதென்பது கருத்து.

[91] இதற்கென மணம் கூறாமையால் முன்னதற்குக் கூறப்பட்ட தாமரைப்பூமணமே இதற்கும் கொள்ளல் வேண்டும்.

[92] செம்மை நிறமும் செம்மையும் கருமையும் கலந்த நிறமும் வழுவழுப்பும் தாமரைப்பூமணமும் உடையதென்பது கருத்து. சாவகம் முதலிய மூன்றும் காமரூப நாட்டில் உண்டாவன என்பது அறியத்தக்கது.

மாலேயகம் என்பது வெண்மையும் செம்மையும் கலந்த [93]நிற முடையது. குசந்தனம் என்பது கருமைநிறமும் [94]கோமூத்திர மணமும் உடையது. காலபர்வதகம் என்பது திண்மையும் அகிலை ஒத்த கருமைநிறமும் செம்மைநிறமும் செம்மையும் கருமையும் கலந்த நிறமும் [95]உடையதாகும். கோசகாரபர்வதகம் என்பது கருமைநிறமும் கருமையும் சாம்பல்நிறமும் கலந்த வண்ணமும் உடையதாகும். சீதோதகியம் என்பது தாமரைவண்ணமும் கருமைநிறமும் வழுவழுப்பும் உடையதாகும். நாகபர்வதகம் திண்மையும் நீர்ப்பாசி வண்ணமும் உடையதாகும். சாகலம் என்பது [96]கபிலநிறமுடையதாகும்.

[97]நொய்மை வழுவழுப்பு விரைவில் உலராமை [98]நெய்ப்பு நறுமண இனிமை [99]மெய்ப்புகுதல் [100]உருவெளிப்படாமை [101]நிறப்

---

93 இதற்கும் தாமரைப்பூமணம் உடையதென்பதை இயைத்துக் கொள்ளல் வேண்டும்.

94 கோமூத்திரம் பரிணமையிலையில் நன்மணம் உடையதாகும் என்ப. ஒருசிலர் கோமூத்திரம் என்பதற்கு நீலோற்பலம் என்று பொருள் கூறுவர்.

95 இதற்கும் வேறு மணம் கூறாமையால் கோமூத்திரமணமுடையதென்பதை இயைத்துக்கொள்ளல் வேண்டும். முதனூலின் வேறு சில படிகளில் குசந்தனம் திண்மையும் கருமை நிறமும் அகிலை ஒத்த கருமை நிறமும் செம்மைநிறமும் செம்மையும் கருமை கலந்த நிறமும் உடையதாகும் எனவும் காலபர்வதகம் குங்குமவண்ணமுடையதெனவும் காணப் படுகின்றனவாம்.

96 காலபர்வதகம் முதல் சாகலம் இறுதியாக உள்ள சந்தனக் கட்டைகள் கோமூத்திரமணம் உடையனவாம் என்பது கருத்து. சந்தன வகைகளாக ஈண்டுக் கூறப்பட்ட பதினாறு பெயர்களும் அஃது உண்டாகும் இடங்களைப் பற்றி வந்தனவாம். இவ்விடங்களில் பெரும்பாலன பொதியின் மலையைச் சார்ந்தனவென்று உரையாசிரியர் கூறுவர். இதுகாறும் சந்தன மரத்தின் பிறப்புவகைகளும் அவற்றின் நிறங்களும் கூறப்பட்டன. இனிச் சந்தனத்தின் குணங்கள் கூறப்படும்.

97 நொய்மை—கனமின்மை.

98 நெய்ப்பு—உடலிற் பூசுங்கால் நெய்போற் பசையுடையதாக இருத்தல்.

99 மெய்ப்புகுதல்—தோலின் வழியாக உடலினுட் புகுந்து இன்பஞ் செய்தல்.

100 உருவெளிப்படாமை—நன்றாக அரைக்கப்பட்டு நுண்ணிதாகக் கரைதலாம்.

101 நிறப் பிறழ்ச்சியின்மை—வேற்றுப் பொருட் கலவையாலும் பூசப்பட்ட உடலின் வியர்வையாலும் மாறுபடாத நிறமும் மணமும் உடைத்தாதல்.

பிறழ்ச்சியின்மை [102]சூடுதாங்கல் வெப்பந் தீர்த்தல் ஊற்றின்பம் என்னும் இப்பதினொன்றும் சந்தனத்திற்குரிய குணங்களாம்.

அகில், [103]சோங்ககம் தோங்ககம் [104]பாரசமுத்திரகம் என மூவகைப்படும். அவற்றுள் சோங்ககம் கருமைநிறத்தையும் கருமையும் வெண்மையும் கலந்த வரிகளையும் கருமையும் வெண்மையும் கலந்த புள்ளிகளையும் உடையதாகும். தோங்ககம் கருமை நிறமுடையது. பாரசமுத்திரகம் பல்வகை நிறங்களையுடையதாகும். அவை விலாமிச்சைவேர் இருவாட்சிமலர் இவற்றின் மணம் போன்ற மணமுடையனவாம்.

திண்மை வழுவழுப்பு நறுமணம் [105]சேட்படக்கமழ்தல் [106]தீத்தாங்கல் [107]கலக்கமில் புகையுடைமை [108]ஒத்த மணமுடைமை [109]துடைத்துழிக் குன்றாமை என்னும் இவை அகிலின் குணங்களாம்.

[110]தைலபருணிகம் என்னும் மரம் [111]அசோககிராமிகம் சோங்

---

[102] சூடுதாங்கல்–உடலிற் பூசப்பட்டபின் வெளி வெப்பம் தாக்காவாறு தடைப்படுத்தல் ; வெப்பந்தீர்த்தல்–பூசப்பட்ட உடலின் உள் வெப்பத்தைப் போக்குதல்.

[103] சோங்ககமும் தோங்ககமும் காமரூபமென்னும் நாட்டிலுண்டானவை.

[104] பாரசமுத்திரகம் — இது தென்கடற்கப்பாலுள்ள சிங்களத்தீவிலுண்டாவது.

[105] சேட்படக் கமழ்தல்—நெடுந்தூரம் பரவி மணம் வீசுதல்.

[106] தீத்தாங்கல்—நெருப்பினால் விரைந்தெரிக்கப்படாமை.

[107] அகிற் புகையால் கண் முதலியவற்றிற்குக் கலக்கமுண்டாகாவென்பது கருத்து.

[108] ஒத்த மணமுடைமை—புகைக்கத் தொடங்கியதுமுதல் முடிவுவரை ஒரேவித மணமுடைத்தாதல்.

[109] துடைத்துழிக் குன்றாமை—புகையிடப்பட்ட பொருளை ஆடை முதலியவற்றால் துடைத்த விடத்தும் மணங் குறையாதிருத்தல்.

[110] தைலபருணிக மரம்—நெய் பூசப்பட்டதுபோன்ற இலைகளையுடைய ஒருவகை மண மரம்; பொதியின் மலையின் ஒரு கூறாகிய தைலபருணம் என்னும் குன்றிற்றோன்றியதுபற்றி இம்மரத்தைத் தைலபருணிகம் என்று கூறுவாரும் இதனைச் சந்தன மரத்தின் வகைகளுள் ஒன்றெனபாருமுளர்.

[111] அசோககிராமிகம் முதலிய ஐவகைப் பெயர்களும் காமரூபநாட்டில் இம்மரம் தோன்றிய இடங்களைப்பற்றி வந்தனவாம்.

ககம் கிராமேருகம் சௌவருணகுட்டியகம் பூரணதீவகம் என ஐந்து வகைப்படும். அவற்றுள் அசோககிராமிகம் [112]இறைச்சி நிறமும் தாமரைப்பூமணமும் உடையதாகும். சோங்ககம் செம்மையும் மஞ்சளும் கலந்த நிறமும் நீலோற்பலப்பூமணமும் கோமூத்திரமணமும் [113]உடையதாகும். கிராமேருகம் வழுவழுப்பும் கோமூத்திரமணமும் உடையதாகும். சௌவருணகுட்டியகம் செம்மையும் மஞ்சளும் கலந்த நிறமும் மாதுளங்கனிமணமும் உடையதாகும். பூரணதீவகம் தாமரைப்பூமணமும் வெண்ணெய்மணமும் [114]உடையதாகும்.

[115]பத்திரச்சீயம் என்னும் மரம் [116]பாரலௌகித்தியம் [117]ஆந்தரவத்தியம் என இருவகைப்படும். அவ்விரண்டும் கீழ்க்காய் நெல்லிமணமும் முறையே சாதிமலர்நிறமும் விலாமிச்சைவேர் நிறமும் உடையனவாம்.

காலேயகம் என்னும் மரத்தின் வகை இரண்டனுள் ஒன்ருகிய [118]பொன்னிலத்தில் தோன்றியது வழுவழுப்பும் பொன்மைநிறமும் உடையது. இமயமலேயிற் றேன்றியது செம்மையும் பொன்மையும் கலந்த நிறமுடையது.

[119]இவை அரைத்துப் பிசையினும் நெருப்பில் [120]வேகவைப்

---

112 இறைச்சியை மானிறைச்சி யென்று உரையாசிரியர் கூறுவர்.

113 இதனிறம் சோங்ககத்திற்குரிய செம்மையும் பொன்மையும் கலந்த வண்ணமாகும்.

114 இதனிறமும் செம்மையும் பொன்மையும் கலந்த நிறமாம்.

115 பத்திரச்சீயம் என்பதைச் சந்தனமரத்தின் வகைகளுள் ஒன்றெனவும் கர்ப்பூரமரம் எனவும் தேவதாரு எனவும் செஞ்சந்தனமரம் எனவும் கூறுவர்.

116 காமரூபநாட்டில் இலௌகித்தியம் என்னும் பெயரையுடைய ஆற்றின் கரையில் உண்டாதல் பற்றி பாரலௌகித்தியம் என்னும் பெயர்த்தாயிற்று. இலௌகித்தியத்தை பிரம்மபுத்திரா என்னும் ஆறெனவும் கூறுவர்.

117 அந்நாட்டில் ஆந்தரவதீ என்னும் யாற்றின் கரையில் உண்டாதல் பற்றி ஆந்தரவத்தியம் என்னும் பெயர்த்தாயிற்று.

118 பொன்னிலம் என்பது பர்மா நாட்டை உணர்த்தும் என்ப.

119 இவை—தைலபருணிகம் முதலிய மூன்றும்.

120 வேகவைத்தல்—நீரொடு கலந்து கொதிக்கச்செய்தல்.

பினும் புகைப்பினும் மாறுபடாத மணமும் [121]மாறுபடாத நிறமும் [122]பிறிதுபொருளோடு கலத்தற்குத் தகுதியும் உடையன. [123]சந்தனம் அகில்களுக்குரிய குணங்களும் இவற்றிற்காம். திண்மைப் பொருளைப்பற்றிய செய்தி [124]முடிந்தது.

[125]காந்தநாவகம் பிரையகம் என்னும் இரண்டும் இமயமலையிற் றோன்றும் தோலாகும். அவற்றுள் காந்தநாவகம் மயிற்கழுத்துப் போன்ற நிறவொளி உடையது. பிரையகம் கருமையும் பொன்மையும் கலந்த நிறமும் வெண்மைநிறமும் [126]பலவகைக் கோடுகளும் புள்ளிகளும் உடையதாகும். இவ்விரண்டும் எட்டங்குல [127]நீளமுடையனவாம்.

[128]துவாதசக் கிராமத்தில் உண்டாகிய தோல், பிசி மகாபிசி என இருவகைப்படும். அவற்றுள் பிசி, [129]புலப்படாவண்ணமும் அடர்த்தியான மயிரும் [130]பலவகை நிறமும் உடையதாகும். மகாபிசி, சொரசொரப்பும் பெரும்பாலும் வெண்மைநிறமும் உடையது. இவ்விரண்டும் பன்னிரண்டு அங்குல நீளமுடையனவாம். [131]ஆரோகம் என்னும் இடத்தில் உண்டாகிய தோல், சியாமிகை

---

121 வேற்றுப்பொருட் கலவையாலும் காலமிகுதியாலும் நிறம் மாறுபடாவென்பது கருத்து.

122 பிறிதுபொருள்—வேறு மணப்பொருள்.

123 இங்குக்கூறிய குணங்களேயன்றிச் சந்தனம் அகில்களுக்குரிய குணங்களும் இவற்றிற்குளவாம்.

124 இனி நொய்மைப் பொருளைப்பற்றிக் கூறத் தொடங்குகின்றார்; நொய்மைப் பொருள்களாவன—ஈண்டுத் தோல் மயிர்க்கம்பலம் பட்டு நூலாடை முதலியனவாம்.

125 காந்தநாவகம் பிரேயகம் இவ்விரண்டும் இமயமலையின் ஒரு பகுதியிலுள்ள இடங்களைக் குறிப்பனவாம்.

126 பலவகை என்பதைப் புள்ளிகளோடும் இயைத்துக் கொள்க.

127 ஈண்டு அகலம் கூறப்படாமையால் நீளத்திற்குரிய அளவையே அதற்கும் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து; பின்வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

128 துவாதசக்கிராமம்—இமயமலைப்பகுதியில் மிலேச்சர்கள் வாழுமிடம்.

129 புலப்படாவண்ணம்—ஒருவன் நிறம்போலப் பலவகை வண்ணமுடைமையால் இன்னதெனத் துணியப்படா நிறம்.

130 பலவகை நிறம்—மற்றொரு வகைக்கு.

131 ஆரோகம்—இமயமலையினருகிலுள்ள இடம்.

காலிகை கதலி சந்திரோத்தரை சாகுலே என ஐந்து வகைப்படும். அவற்றுள் சியாமிகை [132]கபிலநிறமும் பலவகைப் புள்ளிகளும் உடையது. காலிகை கபிலநிறமும் புருவண்ணமும் உடையது. இவ்விரண்டும் எட்டங்குல நீளமுடையனவாம். கதலி, சருச்சரையும் ஒரு முழ நீளமும் உடையது. [133]அக்கதலியே சந்திரன்வடிவு போல வட்டவடிவாக இருப்பின் [134]சந்திரோத்தரை எனப்படும். கதலியின் அளவில் [135]மூன்றிலொரு கூறுடைய சாகுலே செந்நிறமான வட்டங்களேயும் இயற்கையினமைந்த தாமரைக் கொட்டை போன்ற தோல்முடிச்சுக்களேயும் உடையதாகும்.

[136]பாகுலவம் என்னுமிடத்திலுண்டாகும் தோல் சாமூரம் சீனசீ சாமூலி என மூன்று வகைப்படும். அவற்றுள் சாமூரம் [137]முப்பத்தாறங்குல நீளமும் அஞ்சனவண்ணமும் உடையது. சீனசீ செம்மை கருமை கலந்த நிறமும் வெண்மை கருமை கலந்த நிறமும் உடையதாகும். சாமூலி கோதுமை [138]நிறமுடையதாகும்.

நீர்ப்பூனேயின் தோல், சாதினே நளதூலே விருத்தபுச்சம் என மூன்று வகைப்படும். அவற்றுள் சாதினே கருமை நிறமுடையது. நளதூலே, நளம் என்னும் புல்லின் இதழ் வண்ணம் உடையது. விருத்தபுச்சம் கபிலநிறமுடையது.

மென்மை வழுவழுப்பு அடர்ந்தமயிருடைமை ஆகிய இக்குணமுடைய தோல்கள் சிறந்தனவாம். தோல்களேப்பற்றிய செய்தி [139]முடிந்தது.

---

132 கபிலநிறம்—புகர்நிறம்.

133 இதற்கு நிறம் காலிகைக்குக் கூறியபடியாம்.

134 இதனளவு கதலிக்குக் கூறிய ஒரு முழ நீளமாகும்.

135 மூன்றில் ஒரு கூறு எட்டங்குலமாகும்; ஈண்டு மும்மடங்கெனப் பொருள்கொண்டு மூன்று முழமெனக் கோடலுமாம்.

136 பாகுலவம்—இஃது இமயமலேயின் ஒரு பகுதியிலுள்ள இடம்.

137 இங்கே கூறிய முப்பத்தாறங்குல நீளத்தைச் சீனசீ சாமூலீ என்னும் இரண்டிற்கும் கொள்ளல்வேண்டும்.

138 இங்கே கூறப்பட்டவை யெல்லாம் நிலத்தில் வாழும் எலி முதலியவற்றின் தோல்களாகும். இனி நீர்வாழுயிர்களின் தோல்களேப் பற்றிக் கூறப்படும்.

139 இங்கே கூறப்படாத வேறு பல தோல்களும் உள. அவை இக்குணமுடையனவாயிற் சிறந்தனவாமென்பது.

ஆட்டுமயிர்க் கம்பலம் வெண்மை நிறமுடையதும் தூட செம்மைநிறமுடையதும் ஒருபாற் செம்மைநிறமுடையதும் [140]ஆம். [141]கோத்தமைத்ததும் [142]நெய்தமைத்ததும் [143]பல துண்டுகளாலமைத்ததும் [144]நூல்விட்டமைத்ததும் [145]ஆம்.

ஆட்டுமயிர்க் கம்பலம் அமைப்பு முறையால் கம்பலம் [146]கேசலகம் [147]யானை விரிப்பு [148]சௌமிதிகை குதிரைவிரிப்பு வண்ணக் கம்பலம் [149]தலிச்சகம் [150]குப்பாயம் [151]அகன்றவிரிப்பு [152]சமந்தபத்திரகம் எனப் பத்துவகைப்படும்.

வழுவழுப்பு நனைந்ததுபோற் காணப்படுதல் நுண்மை மென்மை என்னும் குணங்களையுடைய கம்பலம் சிறந்தனவாம்.

நேபாளதேயத்திலுண்டாகும் கம்பலம் [153]பிங்கிசி [154]அபசாரகம் என இரண்டு வகைப்படும். அவற்றுள் பிங்கிசி மழைநீரைத் தடைப்படுத்தற்கு எட்டுத்துண்டுகள் இணைத்தமைக்கப்பட்டது; கருமை நிறமுடையது.

---

140 நிற வேறுபாட்டால் மூன்று வகைப்படும் என்பது.

141 கோத்தமைத்தது—ஊசியினால் பூத்தொழிலமையக் கோத்துச் செய்யப்பட்டது.

142 நெய்தற்றொழிலால் வனப்புறச் செய்யப்பட்டது.

143 கோத்தமைத்ததும் நெய்தமைத்ததுமாகிய பல துண்டுகளால் அழகுற அமைக்கப்பட்டது.

144 இடையிடையே நெய்யப்படாமல் இடைவெளிவிட்டமைக்கப்பட்டது.

145 தொழில் வேறுபாட்டால் நான்கு வகைப்படும் என்பது.

146 கேசலகம்—வேடர் முதலியோரின் தலைக்கட்டு.

147 யானை விரிப்பு—யானையின் முதுகில் விரிக்கப்படுவது.

148 சௌமிதிகை—யானைமேலுள்ள தவிசில் விரிக்கப்படுவது. இஃது எருதின்மேல் விரிக்கப்படுவதென்றும் கூறுவர்.

149 தலிச்சகம்—படுக்கையில் விரிக்கப்படுவது.

150 குப்பாயம்—மெய்ப்பையாக அமைக்கப்படுவது.

151 அகன்ற விரிப்பு—நிலத்தில் விரிப்பதற்குரிய பெரிய கம்பலம்.

152 சமந்தபத்திரகம்—கவசத்திற்குரியதாகச் செய்யப்படுவது.

153 பிங்கிசி—இதன் இலக்கணத்தை நோக்கக் குடையாகும் எனப் புலப்படுகின்றது.

154 அபசாரகம்—இதுவும் குடையைக் குறிப்பதாகும். முன்னது விரிந்த நிலையிலமைக்கப்படுவது; இது விரிக்கவும் சுருக்கவும் கூடியது.

விலங்குமயிரா லுண்டாவன [155]சம்புடிகை [156]நாற்கோண முடையது கட்டில் விரிப்பு [157]நெய்தற்பாய் மேலாடை [158]சத்தளிகை என்பனவாம்.

[159]வாங்ககம் பௌண்டிரகம் சௌவருணகுட்டியகம் எனப்பட்டு மூன்று வகைப்படும். அவற்றுள் வாங்ககம் வெண்மையும் வழுவழுப்புமுடையது. பௌண்டிரகம் கருமையும் நீலமணி போன்ற ஒளியும் உடையது. சௌவருண குட்டியகம் கதிரவனைப் போன்ற செம்மைநிறவொளியுடையது. [160]மணிநீர்நெய்தல் ஒத்தபடிநெய்தல் கலந்துநெய்தல் எனப் பட்டுநெய்தல் மூன்று வகைப்படும். இப்பட்டுக்கள் [161]ஓரிழை ஈரிழை மூவிழை நான்கிழைகளாலும், அரையளவு கூடிய இழைகளாலும் நெய்யப்படும்.

ஈண்டுக் கூறியவாற்றால் காசியிலும் புண்டரநாட்டிலும் உண்டாகும் பட்டுக்கள் [162]கூறப்பட்டனவாம்.

---

155 சம்புடிகை—முழங்கால் வரை அணியப்படுவது.

156 நாற்கோணமுடையது-கூரிய நுனியின்றி ஒன்பதங்குலக் கோணங்களோடு அமைக்கப்படுவது.

157 நெய்தற்பாய்—பாய்போல நெய்யப்பட்டது.

158 சத்தளிகை—இது நிலத்தில் விரித்தற்குரியது.

159 வாங்ககம் முதலிய மூன்றும் முறையே வங்க நாட்டிலும் புண்டர நாட்டிலும் காமரூபநாட்டிலுள்ள சுவர்ணகுட்டியம் என்னுமிடத்திலும் உண்டாவன.

160 நெய்தல்வகை மூன்றனுள் மணிநீர்நெய்தல் என்பது கைம்மணிக் கட்டாலிழுத்து நீரால் நனைத்து நெய்தலாம். ஒத்தபடிநெய்தல் என்பது ஒத்த அளவினதாக வேற்றுநூலும் வேற்றுநிறமும் கலவாத பட்டுநூலால் நெய்தலாம். கலந்துநெய்தல் என்பது பருத்திநூலும் பட்டுநூலும் கலந்து வேற்று நிறத்துடன் நெய்தலாம்.

161 நீளத்திலும் குறுக்கிலும் ஒவ்வோரிழையாகவும், இரண்டிரண்டிழையாகவும் மும்மூன்றிழையாகவும் நந்நான்கிழையாகவும் அமைத்தும் நீளத்தில் ஒன்றும் குறுக்கில் இரண்டுமாதல் மாறியாதல் இங்ஙனம் முறையே இரண்டு மூன்று நான்கிழைகளில் ஒவ்வொன்று குறைத்தமைத்தும் நெய்யலாமென்பது கருத்து. ஒருபால் ஒன்றும் மற்றொருபால் இரண்டும் ஆக மூன்றிழைகளாலாவதைப் பாதியாக்கினால் ஒன்றரையாகுமாதலின் அஃது அரையளவு கூடியதாகும். இங்ஙனமே இரண்டு மூன்று நான்கிழைகளுக்கும் கொள்க. ஓரிழையால் நெய்யப்படுவது மெல்லியதாகவிருத்தலின் சிறந்ததாகும். ஈரிழை முதலியவற்றால் நெய்யப்படுவன முறையே ஒன்றற்கொன்று தாழ்ந்ததென்பது கருத்து.

162 ஓரிழையாலாம் பட்டைத் துகூலம் என்றும் அதற்கு மேற்பட்ட இழைகளாலாம் பட்டை க்ஷௌமம் என்றும் கூறுவர்.

மகதம் புண்டரம் என்னும் நாடுகளிலும் சுவர்ணகுட்டியம் என்னுமிடத்திலும் உள்ள [163]நாகலிங்கம் எலுமிச்சை மகிழ் ஆல் என்னும் இம்மரங்கள் [164]உலண்டுப் புழுவின் [165]எச்சில்நூல் உண்டாதற்குரிய இடங்களாம். நாகலிங்க [166]மரத்தில் உண்டாகும் பட்டுநூல் மஞ்சள்நிறமும் எலுமிச்சைமரத்திலுண்டாவது கோதுமை நிறமும் மகிழமரத்திலுண்டாவது வெண்மை நிறமும் ஆலமரத்திலுண்டாவது வெண்ணெய் நிறமும் உடையனவாம்.

அவற்றுள் சுவர்ணகுட்டியத்திலுண்டாம் பட்டுநூல் சிறந்ததாகும். இதனால் [167]கௌசேயம் என்னும் பட்டும் சீனதேசத்திலுண்டாம் சீனப்பட்டுக்களும் [168]கூறப்பட்டபடியாம்.

[169]மதுரை கோங்கணநாடு கலிங்கநாடு காசிநகர் வங்கநாடு வற்சநாடு [170]எருமைநாடு என்னும் இவ்விடங்களிலுண்டாகும் பருத்திநூலாடைகள் சிறந்தனவாம். இவ்வளவில் நொய்மைப் பொருளைப்பற்றிய செய்திகள் முடிந்தன.

## சுலோகங்கள்

*(1—2)* இங்கே [171]கூறப்பட்டவைகளினும் வேறான இரத்தினம்முதலியவைகளையும் அவற்றின் [172]அளவு விலை [173]இலக்கணம்

---

[163] நாகலிங்கம் — பாம்பினால் கவிக்கப்பெற்ற இலிங்கம்போன்ற உருவத்தைத் தன்னுட்கொண்ட பூவுள்ள மரம்.

[164] உலண்டுப்புழு—பட்டுநூல் நூற்கும் ஒருவகைப்புழு.

[165] வாயினின்றும் உண்டாவதால் எச்சில்நூல் எனப்பட்டது; பட்டுநூல் நூற்றற்கு இது முதற்காரணமாகும்.

[166] இங்கே மரம் என்றது அதனிலையை உணர்த்தும்.

[167] கௌசேயம்—புழுக்கூட்டிலிருந்து எடுக்கப்படுவது; கோசம்—புழுக்கூடு. இதுவும் பட்டுநூல் நூற்றற்கு முதற்காரணமாகும்.

[168] உலண்டுப்புழுவின் எச்சில்நூலுண்டாதற்குரிய இடங்களும் அதன் நிறங்களும் இவற்றிற்கும் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[169] மதுரை—பாண்டியநாட்டின் தலைநகர். இஃது அந்நாடு முழுவதையும் குறிக்கும்.

[170] எருமைநாடு — மைசூரைத் தலைநகராகக் கொண்ட நாட்டைக் குறிக்கும்.

[171] கூறப்பட்டவைகள்—முத்து முதல் பருத்திநூலாடை வரையுள்ள பதினேழுமாம்.

[172] அளவு—குன்றி எடை அங்குலம் முதலியனவாக நாற்பது நாற்பத்தொன்றாம் அத்தியாயங்களிற் கூறப்படும்.

[173] இலக்கணமாவது—பாற்குடத்திலிட்ட நீலமணியால் அப்பால் முழுதும் நீலநிறமாதலும், எடுக்கப்பட்டதும் இயற்கை வெண்ணிறமாதலும் போல்வது; இவ்விலக்கணமுடைய நீலமணி சிறந்ததாகும்.

[174]சாதி [175]உருவம் [176]காக்குமுறை [177]புதியவாகச் செய்ற்படுத்தல் [178]பழையன புதுப்பித்தல் [179]மறைவுச்செயல் [180]கருவிகள் [181]காலம் இடங்களுக்குத் தகப் பயன்படுத்தல் [182]கேட்டின் எதிர்ச்செயல் என்னுமிவற்றை அறிந்துகொள்ளல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் பதினொராம் பிரகரணம்
“ கருவூலத்தியை திருமணியாய்தல் ” என்னும் முப்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

174 சாதி—பொருளைநதிக்கண் உண்டாதல் முதலிய பிறப்பு.

175 உருவம்—நிறமும் வடிவுமாம்.

176 முத்து முதலியவைகளைப் பாதுகாக்கும் முறை.

177 புதியவாகச் செயற்படுத்தல்—சுரங்கத்தினின்றும் எடுத்த இரத்தினத்தைச் சாணையிடல் துளைத்தல் முதலியன.

178 பழையன புதுப்பித்தல்—அறவே பயன்படுத்தாமையாலும் மிகுதியாகப் பயன்படுத்தினமையாலும் உண்டான சிதைவைத் திருத்தி அமைத்தல். உதாரணமாக முத்திற்கு உண்டாம் சிதைவைப் பின்வரும் சுலோகத்தால் உரையாசிரியர் எடுத்துக்காட்டுவர். இடையறுது அணிதலாலும் அறவே அணியாமையாலும் புகை நெருப்பு வியர்வை இவற்றின் இயைபாலும் நிலம் நீர் உப்பு இவற்றாலும் முத்து மணிகளின் நிறம் வேறுபடும்.

179 மறைவுச்செயல்—மணி முதலியவற்றின் நிறமாற்றம் வேற்று நிறமுண்டாக்கல் தேய்த்தல் முதலியன.

180 கருவிகள்—சாணை முதலியன.

181 காலம் இடங்களுக்குத் தக மணி முதலியவற்றைக் கொள்ளல் விற்றல் செய்யப்படவேண்டும் என்பதும் குளிர்ந்த காலமிடங்களில் கம்பலத்தையும் வெப்பமான காலமிடங்களில் நூலாடையையும் உபயோகப்படுத்த வேண்டும் என்பதும் கருத்து.

182 கேட்டின் எதிர்ச்செயல் — பட்டு முதலியவற்றைக் கடிக்கும் எலி முதலியவற்றைப் போக்குதற்குப் பூனையை விடுதல் முதலியனவும், புழு எலி முதலியவற்றால் கடிக்கப்பட்ட ஆடைகளைத் தைத்துத் திருத்தல் முதலியனவுமாம். இவ்வத்தியாயத்திற் கண்ட பொருள்களைச் சுருக்கி ஓர் உரையாசிரியர் பின்வருமாறு கூறுவர். முத்து, மணிகள் (மாணிக்கம் வைடூரியம் நீலம் படிகம்), வயிரம், பவழம் என இரத்தினங்கள் நான்கு வகைப்படும். திண்மைப் பொருள்கள் ஐந்து வகைப்படும். அவற்றுட் சந்தனமும் அகிலும் தலையாயவை. தைலபருணிகமும் பத்திரச்சிரியமும் இடையாயன. காலேயம் கடையாயது. தோல் ஆட்டுமயிர் விலங்குமயிர் மென்பட்டு வன்பட்டு பருத்திநூலாடை உலண்டுவாய்நூல் புழுக்கூட்டு நூல் என்னும் இவையெட்டும் நொய்மைப் பொருள்களாம். குப்பியப் பொருள்கள் குப்பியத் தலைவன் படைக்கலத் தலைவன் என்னும் பிரகரணங்களிற் கூறப்படும் ஆதலின் இங்கே கூறப்பட்டில. முத்து முதலியவெல்லாம் பதினேழு வகைப்படும் என்பது.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பன்னிரண்டாம் பிரகரணம்—[1] ஆகரத் தொழினிலை

## முப்பத்துமூன்றும் அத்தியாயம்

[2]சுற்பநூல் [3]தாதுப்பொருணூல் [4]இரசவியல்பு [5]பாகமுறை [6]மணிநிறம் என்னும் இவற்றை அறிந்தவனும் இவ்வறிவுடையாரைத் துணையாகவுள்ளவனுமாகிய ஆகரத் தொழிற்றலைவன் அத்தொழிலையே பரம்பரையாக மேற்கொண்ட தொழிலாளரையும் உரிய [7]கருவிகளையும் உடையனாய் [8]கிட்டம் [9]குகை கரி சாம்பல் என்னும் இவற்றை அடையாளமாகவுடைய முன்னுள்ள ஆகரத்தையும் [10]மண் கல் [11]இரசம் முதலிய தாதுப்பொருள்களையுடையதும் சிறந்த நிறமும் எடைமிகுதியும் மிக்கமணமும் மிக்கசுவை

---

### 33-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] ஆகரம்—பொன் மணி முதலியன விளையுமிடம். அவ்விடத்தைக் காண்டற்குரிய நெறிகளும் பொன் முதலியவற்றை எடுத்தற்கு மேற்கொள்ளும் செயல் முதலியவைகளும் இதன்கட் கூறப்படும். கருவூலத்திற் சேர்க்கத்தக்க மணி முதலியவற்றின் இயல்புகள் முன்னைப் பிரகரணத்திற் கூறப்பட்டன. இதன்கண் அம் மணி பொன் முதலியன உண்டாதல் கூறப்படுதலின் பிரகரணவியைபு புலனாதலறிக.

[2] சுற்பநூல்—தாதுப்பொருள்களையுடைய நிலத்தைப்பற்றிக் கூறும் சாகலம் முதலிய நூல்கள்; அன்றிச் சுற்பம் செம்பு எனக்கொண்டு செம்பு வெள்ளி பொன் முதலியவற்றின் இயல்பைக்கூறும் நூல் சுற்பநூல் என்பதுமாம்.

[3] தாதுப்பொருள் — ஆகரங்களில் எடுக்கப்படும் பொன் கந்தகம் முதலியன.

[4] இரச வியல்பு—பாதரசத்தை மணியாக்குதல் முதலியன.

[5] பாகமுறை—பொன் முதலியவற்றைப் புடமிடும் முறை.

[6] மணி நிறம்—இரத்தினம் முதலியவைகளை நிறவேற்றுமை செய்தல்.

[7] கருவிகள்—மண்வெட்டி துருத்தி குறடு சாணை முதலியன.

[8] கிட்டம்—இரும்பு முதலிய உலோகங்களிலிருந்து விலக்கப்பட்ட துரு முதலிய அழுக்குகள்.

[9] குகை—உலோகம் முதலியவற்றை உருக்குதற்குரிய பாத்திரம்.

[10] ஈண்டு மண் கல் முதலியன தாதுப்பொருள்களோடு கலந்தனவாம்.

[11] இரசம்—ஈண்டுப் பாதரசமும் நீரும் ஆம்.

யும் உடையதுமாகிய புதிய ஆகரத்தையும் [12]ஆராய்ந்தறிதல் வேண்டும்.

ஆகரக் கலையால் [13]அறியப்பட்ட இடப்பகுதிகளையுடைய மலைகளின் [14]பிலம் [15]குகை [16]தாழ்வரை [17]செயற்கையறை [18]மறைவறை என்னும் இவற்றின் உள்ளே ஊறிப் பெருகுகின்றதும் நாவற்கனி மாங்கனி பனம்பழம் முதிர்ந்த மஞ்சள் துண்டு அரிதாரம் தேன் சாதிலிங்கம் வெண்டாமரை கிளியிறகு மயிற்றோகை என்னும் இவற்றை ஒத்த நிறமுள்ளதும் பக்கங்களில் தன்னிறத்தை ஒத்த நிறம் வாய்ந்த நீரும் [19]கொடி செடிகளும் அமையப்பெற்றதும் வழுவழுப்பும் தூய்மையும் எடைமிகுதியும் உடையதும் ஆகிய [20]நீர் பொன்னுடைமையைப் புலப்படுப்பதாகும்.

நீரிற்றெளித்தால் எண்ணெய்போற் பரவுவதும் அந்நீரின் சேற்றழுக்கைத் திரட்டி அடிப்படுத்துவதுமாகிய [22]பொன்னீர் [23]நூறுமடங்கு மிகுதியாகிய செம்பு வெள்ளிகளின் மேற்படின்

---

[12] புதிய ஆகரத்திலுள்ள தாதுப்பொருள்கள் தலை இடை கடையாம் தரங்களுள் இன்னவென்பதை அவற்றின் நிறங்களைக்கண்டும் எடைமிகுதியை நிறுத்தும் மணத்தை முகர்ந்தும் சுவையை நாவாற் சுவைத்தும் ஆராய்ந்தறியவேண்டும் என்பது கருத்து.

[13] முன்னையோரால் அறியப்பட்டது என்பதூஉமாம்.

[14] பிலம்—மலையினடிப்பாகத்தில் இயற்கையினமைந்த நிலவறை.

[15] குகை—மலைமேல் இயற்கையினமைந்த அறை.

[16] தாழ்வரை—மலையின் அடிப்பக்கத் திடங்கள்.

[17] செயற்கையறை—உளியாற் கல்லைத் துளைத்தமைக்கப்பட்ட அறை.

[18] மறைவறை—இதுவும் செயற்கை யறையே ; தகட்டுக்கல்லால் மூடப்பட்ட வழியுடையது.

[19] தன்னிறத்தையொத்த நிறமுடைய என்னும் அடைமொழியைக் கொடிசெடிகளுக்கும் கூட்டுக.

[20] இத்தகைய நீர்சுரக்கும் மலைப்பகுதிகளில் பொன் இருக்குமென்பது கருத்து ; மண் கல் நீர் ஆகிய மூன்றனுள் நீர் இறுதிகட் கூறப்பட்டிருப்பினும் ஏனையவற்றை நோக்க நீர், மாறுபடாத மிக்கபயனை எளிதில் தரற்பாலதாகலின் அதனியல்பு முதற்கட் கூறப்பட்டது.

[21] பொன்னீரின் இலக்கணம் வேறொருபடியாகக் கூறப்படுகின்றது.

[22] பொன்னீர் — பொன்னுடைமையைப் புலப்படுத்துவதாகிய மேற்காட்டிய நீர்.

[23] தெளிக்கப்படும் (நீரின்) தன் அளவின் நூறுமடங்கென்பது கருத்து.

அவற்றைப் பொன்னாக்கும் [24]வேதகப் பொருளாகும்.

அப்பொன்னீரையொத்த நிறமும் மிக்கமணமும் மிக்கசுவையும் உடையதும் ஆகிய இரசப்பொருளை [25]சிலாசத்து என்று [26]அறிதல் வேண்டும்.

பொன்னிறமுடையதும் செந்நிறமுடையதும் பொன்மையும் செம்மையுங்கலந்த நிறமுடையதுமாகிய மண்ணுங்கல்லு[27]மாகிய தாதுப்பொருள்கள் உடைக்கப்படின் [28]நீலக்கீற்றுக்களையுடையனவாகவும் பயறு உழுந்து எட்சோறு என்னும் இவற்றையொத்த நிறமுடையனவாகவும், தயிர்த்துளி தயிர்க்கட்டி போன்ற சிறிய பெரிய புள்ளிகளை யுடையனவாகவும் மஞ்சள் கடுக்காய் தாமரையிலை நீர்ப்பாசி [29]ஈரல் மண்ணீரல் குங்குமம் என்னும் இவற்றையொத்த நிறமுடையனவாகவும் மீண்டும் சிறியனவாக உடைக்கப்படின் நுண்ணிய மணல்களையும் கீற்றுக்களையும் புள்ளிகளையும் [30]சுவத்திக வடிவத்தையும் பரற்கற்களையும் ஒளியினையும் உடையனவாகவும் நெருப்பினாற் சுடப்படின் வெடித்தலின்றி மிக்க புகையையும் [31]நுரையையும் வெளிப்படுத்துவனவாகவும் காணப்படும். இவை செம்பினையும் வெள்ளியையும் [32]வேதித்தற்குப் பொடித்துப் பயன்படுத்துதற்குரிய [33]சுவர்ணத் தாதுப் பொருள்களாம்.

---

24 வேதகம்—இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்குவது.

25 சிலாசத்து—உபதாதுப் பொருள்களில் ஒன்று.

26 சிலாசத்தென்னும் இப்பொருள் பொன்னீரையொத்த நிறம் மணம் சுவை இவற்றை யுடையதாயினும் எண்ணெய்போலப் பரவுதலும் சேற்றழுக்கைத் திரட்டியடிப்படுத்துதலும் இன்மையால் அப்பொன்னீரின் வேறுகுமென்பதை யுணர்த்துதற்கு ஈண்டுக் கூறப்பட்டது.

27 ஆகிய இம்மூவகைத் தாதுப்பொருள்களென்பது கருத்து.

28 நீலக்கோடு முதலியன உடைக்கப்பட்ட நடுப்பகுதியிற் காணப்படும் என்பது கருத்து.

29 ஈரல்—கருமைநிறமுடைய இறைச்சித் துண்டம்.

30 சுவத்திகம்—முக்கோணமமைந்த கோட்டு வடிவம்.

31 நுரை—ஈரமுடைமையாற் சூடுதாக்கியவுடன் உண்டாவது.

32 வேதித்தல்—தாழ்ந்த உலோகங்களை உயர்ந்தனவாக மாற்றுதல்.

33 பொன்னுண்டாக்குதற்குக் காரணமாகிய தாதுப்பொருள்கள் என்பது.

[34]வெள்ளியாகிய தாதுப்பொருள்கள் சங்கு கருப்பூரம் படிகம் வெண்ணெய் காட்டுப்புறு மாடப்புறு [35]விமலகமணி மயிற்கழுத்து நீலமணி கோமேதகம் அக்காரம் சருக்கரைப்பாகு குராமலர் தாமரைமலர் பாதிரிப்பூ [36]கலாயமலர் காயாமலர் [37]அதசிபுட்பம் என்னும் இவற்றையொத்த நிறமுடையனவாகவும் வெள்ளீயம் காரீயம் இவற்றை உடையனவாகவும் தீநாற்றமுடையனவாகவும் உடைக்கப்படின் [38]வெண்மைநிறத்திற் கருமையும் கருமைநிறத்தில் வெண்மையும் வாய்ந்தனவாகவும் இவ்வெல்லாவற்றினும் கீற்றுகளும் புள்ளிகளும் வாய்க்கப்பெற்று மென்மையுடையனவாகவும் காணப்படும். இவை நெருப்பினுற் சுடப்படின் வெடித்தலின்றி மிக்க புகையையும் நுரையையும் வெளிப்படுத்துவனவாம்

தாதுப்பொருள்கள் [39]எல்லாம் எடை மிகுதியாகக் காணப்படின் [40]சாரமானபகுதி மிகுதியாகவிருக்கும். அவற்றுள் [41]தூய்மையில்லாதனவும் [42]மறைந்த சாரமுடையனவுமாகிய தாதுக்கள். [43]காரமான மூத்திரத்தாலும் [44]காரமான சாம்பலாலும் [45]தூய்மை

---

34 வெள்ளியுண்டாக்குதற்குக் காரணமாகிய தாதுப்பொருள்கள் என்பது.

35 விமலகமணி—உட்பிரிவுமணி பதினெட்டனுள் ஒன்று.

36 கலாயம்—ஒருவகைத் தானியம்.

37 அதசி—இது காயாவின் ஒரு வகை.

38 உடைந்த பகுதி சிலவற்றில் சுற்றிலும் வெண்மைநிறமும் நடுவிற் கருமைநிறமும் வேறு சிலவற்றில் சுற்றிலும் கருமைநிறமும் நடுவில் வெண்மைநிறமும் காணப்படும் என்பது கருத்து.

39 எல்லாம் என்பது இதுகாறும் கூறப்பட்டனவும் இனிக் கூறப்படுவனவுமாகிய தாதுப்பொருளைக் குறிக்கும்.

40 சாரம்—உலோகப்பகுதி.

41 தூய்மையின்மை—தாழ்ந்த வேற்றுப்பொருட் கலப்பினுல் உண்டாயது.

42 மறைந்தசாரம் இயற்கையிலாயது.

43 காரமான மூத்திரம்—மக்களுடைய சிறுநீர் எனவும் யானை குதிரை பசு கழுதை யாடு என்னும் இவற்றின் மூத்திரம் எனவும் கூறுவர்.

44 காரமான சாம்பல்—நாயுருவி முதலியவற்றை எரித்து உண்டாக்குவது.

45 தூய்மை செய்தல்—மேற்கூறிய மூத்திரமும் சாம்பலும் கலந்த கலவையால் அடிக்கடி நனைத்துச் சுத்திசெய்தல்.

செய்யப்பட்டுக் கொன்றை ஆல் உகாய் கோபித்தம் கோரோசனை என்பவற்றாலும் எருமை கழுதை ஒட்டகம் என்னும் இவற்றின் மூத்திர புரீடங்களாலும் [46]பிண்டமாகச் செய்தல் [47]பொடித்துக் கலத்தல் [48]பூசுதல் என்னும் இவற்றுள் ஒன்றால் [49]மிகவும் தூய்மை யுடையனவாய்ச் சாரப்பகுதியை வெளிப்படுத்துவனவாம்.

யவநெல் உழுந்து எள் புரசு உகாய் என்னுமிவற்றை எரித்து ஆக்கிய சாம்பலோடும் ஆவின்பால் யாட்டுப்பால் இவற்றோடும் கலந்த வாழைக்கிழங்கு [50]வச்சிரக்கிழங்குகளைப் பொடித்துச் சேர்த் தலால் (பொன் வெள்ளிகளுக்கு) மென்மைத்தன்மை உண்டாம்.[51]

### சுலோகம்

எண்ணெய் நெய் அக்காரம் [52]மதுமூலம் [53]கந்தளீகம் என்னும் இவற்றோடு கூடிய தேன் [54]மதுகம் யாட்டுப்பால் இவற்றால் மும் முறை நனைக்கப்படின் பலவகையாகச் சிதறிக்கிடக்கும் கடினமான பொன் முதலிய தாதுக்கள் மென்மைத் தன்மை [55]எய்துவனவாம்.

---

[46] கொன்றை ஆல் முதலியவற்றின் சாறுகளையும் கோரோசனை சிறுநீர் முதலியவற்றையும் கலந்து முன்னர் மூத்திரத்தாலும் சாம்பலாலும் தூய்மை செய்யப்பட்ட தாதுக்களைப் பொடித்துச் சேர்த்து உண்டையாகச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

[47] பொடித்துக் கலத்தல்—கொன்றை ஆல் முதலியவற்றின் பட்டை யைத் தூளாக்கி மூத்திர புரீடங்களோடும் சேர்த்துக் கலத்தல்.

[48] பூசுதல்—அவற்றைத் தாதுப்பொருள்களின்மேல் தடவுதல்.

[49] மிகவும் தூய்மையுடையவாதல்—வேற்றுப்பொருட் கலப்பினாலும் இயற்கையாகவும் நேர்ந்த குற்றம் அறவே நீங்குதல்.

[50] முதனூலிலுள்ள வச்சிரகந்தம் என்பதற்கு வனசூரணக்கிழங்கு என்றும் விஷ்ணுகந்தம் என்றும் பொருள் கூறுவர்.

[51] இத்தொடர்மொழியில் யவநெல் தொடங்கி யாட்டுப்பால் வரை யுள்ள பகுதியை முன்வாக்கியத்தோடு சேர்த்துப் பொன் வெள்ளித் தாதுக் களைத் தூய்மையாக்குதற்கும் வாழைக்கிழங்கு தொடங்கி முடியும் வரை யுள்ள பகுதியை மென்மையாக்குதற்கும் கொள்வாருமுளர்.

[52] மதுமூலம்—பற்பல பொருள்களைக்கொண்டு ஆக்கப்படும் சாராயத் திற்குப் புளிப்பேற்றும் மூலப்பொருள்.

[53] கந்தளீகம்—தாமரைக்கொட்டை வாழை ஒருவகைக்கொடி.

[54] மதுகம்—இருப்பை ; ஒருவகைக் கொடியுமாம்.

[55] இது பொன் முதலிய தாதுக்களை மென்மைப்படுத்தற்குக் கூறப் பட்ட மற்றோர் உபாயமாகும்.

[56]ஆவின் பல் கொம்பு இவற்றைச் சேர்த்தலால் மென்மைத் தன்மைக்குத் தடையுண்டாம்.

[57]செம்பு என்னும் தாதுப்பொருள் எடைமிகுதியும் வழு வழுப்பும் மென்மைத் தன்மையும் வாய்ந்த கல்லாகவும் மண்ணு கவும் காணப்படும். [58]பொன்மையும் பசுமையும் [59]பாதிரிப்பூநிற மும் செம்மையும் அதற்குரிய நிறங்களாம்.

காரீயம் என்னும் தாதுப்பொருள் காக்கைநிறம் போன்ற கருமையும் புருவண்ணமும் கோரோசனைநிறமும் வெள்ளிய கீற்றுக்களின் நிறைவும் தீநாற்றமும் உடையதாகும்.

வெள்ளியம் என்னும் தாதுப்பொருள் [60]களர்நிலத்தையொத்த பலவகை வண்ணங்களையும் [61]சுடுமண் நிறத்தையும் உடையதாகும். [62]இரும்பு என்னும் தாதுப்பொருள் [63]சிறிய பரற்கற்கள் வடி வில் வெண்மையும் கருமையும் கலந்த நிறத்தினையும் நொச்சிமலர் போன்ற வண்ணத்தையும் உடையதாகும்.

[64]வைகிருந்தகம் என்னும் தாதுப்பொருள் காக்கைமுட்டை [65]பூர்ச்சத்தின் இலை என்னும் இவைபோன்ற நிறத்தையுடைய தாகும்.

---

[56] பசுவின் பல்லையும் கொம்பையும் பொடித்து மென்மைத்தன்மை யடைந்த பொன் முதலியவற்றிற் சேர்ப்பின் அம்மென்மை நீங்கி இறுகும் என்பது கருத்து.

[57] பொன் வெள்ளித் தாதுக்களின் இயல்பைக் கூறி முடித்துத் தாமிர தாதுவைப்பற்றிக் கூறத் தொடங்குகின்றார்.

[58] பிங்கலவண்ணம் என்பது முதனூல். இதற்குப் புகர்நிறம் என்றும் கூறுப.

[59] பாதிரிப்பூநிறம்—குறைந்த செந்நிறத்திற்குக் கூறப்பட்டது.

[60] களர்நிலம்—உவர்நிலம்.

[61] சுடுமண்நிறம்—ஒருவகைச் செம்மையுடையது.

[62] இரும்பு—இதனைத் தீக்ஷ்ண தாது என்று முதனூல் கூறும். ஏனைய தாதுக்களிலும் இது கடினமுடையதாகலின் இவ்வாறு கூறப்பட்டது.

[63] முதனூலில் குரும்பம் என்னுஞ்சொல் இப்பொருளை உணர்த்து மென்பர் உரையாசிரியர்.

[64] வைகிருந்தகம்—உலோகவகைகளுள் ஒன்று; இக்காலத்தில் அஃதின்ன தென்று புலப்படவில்லை.

[65] பூர்ச்சம்—மரவகைகளுள் ஒன்று.

மணிகளுண்டாகும் தாதுப்பொருள் தெளிவு வழுவழுப்பு ஒளி [66]ஒலி [67]மிக்ககுளிர்ச்சி குறைந்தநிறம் என்னும் இவற்றை யுடையதாகும்.

தாதுப்பொருள்களினின்றும் [68]கிடைத்த பொருளை [69]அத் தொழிற்பொருட்டுப் பயன்படுத்தல் வேண்டும்.

[70]பொற்கலம் முதலிய வாணிகத்தொழில்செய்யும் [71]இடத்தை [72]ஒரே வாயிலுடையதாக அமைத்தல்வேண்டும். அஃதல்லாத வேற்றிடத்திற் செய்வோர் வாங்குவோர் விற்போர் ஆகிய இவர் களுக்குத் [73]தண்டம் விதித்தல் வேண்டும்.

[74]இரத்தினங்களல்லாத ஆகரப்பொருள்களைக் களவு செய் வோர்க்கு அப்பொருளளவின் எண்மடங்கு தண்டம் இறுக்கச் செய்தல் வேண்டும்.

---

[66] மணியுண்டாகும் தாதுப்பொருள் சுடப்படினும் உளியினால் உடைக் கப்படினும் பேரொலி உண்டாகும் என்பது கருத்து.

[67] இயற்கையிற் குளிர்ந்திருத்தலும் நெருப்பிலிட்டு எடுத்தவுடன் விரைவிற் குளிர்தலும் உள வென்பது.

[68] கிடைத்த பொருளாவது—சிறிய முயற்சியினாலும் சிறிது பொருட் செலவினாலும் முதலில் உண்டாகிய பொன் முதலிய பொருள்களாம்.

[69] அத்தொழில்—பொன் வெள்ளி முதலிய எடுத்தற்குரிய ஆகரத் தொழில்; ஆகரத்தொழிலினின்றும் கிடைக்கும் ஊதியத்தை மீண்டும் அத் தொழிற்பொருட்டுச் செலவிடல்வேண்டும் என்றது முதலில் ஊதியம் கிடைத்தால் மேலும் அத்தொழிலிற் றலைப்படலாம் என்பதைப் புலப்படுத் தற்கு.

[70] பொற்கலம்—பொன்னாலாக்கப்படும் பாண்டம் முதலியன.

[71] இடம்—ஈண்டு அத்தொழிற்பொருட்டு அவ்விடத்தில் அமைக்கப் படும் இல்லத்தைக் குறிக்கும்.

[72] களவு முதலியன நிகழாவாறு எளிதிற் பாதுகாத்தற்பொருட்டு ஒரே வாயிலிருக்கவேண்டும் என்பது கருத்து.

[73] தண்டம் என ஈண்டுப் பொதுவாகக் கூறினும் இக்குற்றத்திற்கு இருபத்தைந்து பணம் விதித்தல்வேண்டும் என்று இவ்வத்தியாயத்திற் பின்னர்க் கூறுப; அறநிலையாட்சி (3-ஆம் அதிகரணம்) சிறுபகை களைதல் (4-ஆம் அதிகரணம்) என்னும் அதிகரணங்களில் வாணிகஞ் செய்யப்படும் பொருள்களின் அளவிற்கேற்பக் குற்றத்திற்குத்தகத் தண்டம் என்று கூறப் படுதலால் ஈண்டுப் பொதுவாகத் தண்டம் என்று கூறப்பட்டது.

[74] இரத்தினங்களல்லாத என்றமையால் இரத்தினக்களவு செய் வோர்க்குக் கொலைத்தண்டம் விதிக்கப்படும் என்பது கருத்து.

[75]பொருட்டண்டத்தால் உபகரிக்கப்பட்டுப் பொருளிறுக்காதவனையும் கள்வனையும் [76]அநுமதிபெறுமல் தொழில்செய்வோனையும் விலங்கிட்டு வேலைசெய்வித்தல் வேண்டும்.

மிக்க பொருட்செலவும் பெருமுயற்சியும் மேற்கொண்டு பயன்பெறத்தக்க ஆகரத்தைக் [77]கூறுகொண்டாதல் விலைகொண்டாதல் பிறரிடம் கொடுத்தல் வேண்டும். [78]எளிதிற் பயன்பெறத்தக்க ஆகரத்தைத் தானே தொழிற்படுத்தவேண்டும்.

[79]உலோகத்தலைவன் செம்பு காரீயம் வெள்ளீயம் வைகிருந்தகம் பித்தளை [80]விருத்தம் வெண்கலம் [81]தாலம் இரும்பு என்னும் இவைபற்றிய தொழில்களையும் இவ்வுலோகங்களாலாகிய கலங்களின் வாணிகத் தொழிலையும் செய்வித்தல் வேண்டும்.

[82]இலச்சினைத்தலைவன் [83]நான்கிலொருகூறு செம்பும் இரும்பு

---

75 நீதிபதியால் உறுப்புக் குறைத்தலாகிய தண்டம் விதிக்கப்பட்ட பெருங்குற்றவாளிகள் வேண்டுகோட் கிரங்கி அவ்வுறுப்புக் குறைத்தற்கு மாருக அவர்கட்குப் பொருட்டண்டம் விதிக்கலாமென்பதும் அப்பொருளைச் செலுத்தவில்லையாறல் அதற்குத்தக விலங்கிட்டு வேலைசெய்வித்தல் வேண்டுமென்பதும் கருத்து.

76 அரசன்கட்டளை பெறுமல் ஆகரத்தொழில் செய்வோன் என்பது கருத்து.

77 கூறுகோடல்—செலவையும் ஊதியத்தையும் கணக்கிட்டு இவ்வளவு தரவேண்டுமென்று வரையறை செய்துகொள்ளுதல்.

78 எளிதிற் பயன்பெறுதலாவது—சிறிது பொருட்செலவும் சிறுமுயற்சியும் மேற்கொண்டு பயன்கோடல்.

79 ஆகரத் தொழிற்றலைவனுக் குட்பட்ட உலோகத்தலைவன் இலச்சினைத்தலைவன் உப்புத்தலைவன் முதலியோரின் செயன்முறைகளைக் கூறத் தொடங்குகின்ருர்.

80 விருத்தம்—உறுதியான ஒருவகை இரும்பு.

81 தாலம்—மிக்க ஓசையுடன் கூடிய வாச்சியக் கருவிக்குப் பயன்படும் ஒருவகை உலோகம்.

82 இலச்சினை—பணம் முதலிய நாணயங்களுக்கிடும் முத்திரை.

83 பதினுறு உழுந்தளவு எடை கொண்டது ஒரு பணமாகும். அதனில் நான்கில் ஒருகூறு நான்குழுந்தெடையாகும். வெள்ளி நாணயமாகிய ஒரு பணம் பதினேருழுந்தெடை வெள்ளியும் நான்குழுந்தெடை செம்பும் வெள்ளீயம் முதலியவற்றில் ஒருழுந்தெடையும் சேர்த்து ஆக்கப்படல் வேண்டும். அரைப்பணம் முதலியவற்றிற்கும் இங்ஙனமே கணக்கிட்டுச் சேர்த்து ஆக்க வேண்டும் என்பது. வெள்ளி மிகுதியாகக் கலந்திருத்தல் பற்றி இது வெள்ளிநாணயம் என்று வழங்கப்படும்.

வெள்ளீயம் காரீயம் அஞ்சனம் என்னுமிவற்றுள் ஒன்றில் ஒருழுந் தளவும் சேர்த்து வெள்ளி நாணயமாகிய பணத்தைச் செய்தல் வேண்டும். [84]இங்ஙனமே அரைப்பணம் காற்பணம் அரைக்காற் பணங்களையும் கணக்கிட்டுச் செய்தல்வேண்டும்.

[85]காற்கூறுமதிப்புடைய செம்புக்காசு மாடகம் என்னும் பெயரினதாகும். அதன் அரைக்கூறு காற்கூறு அரைக்காற்கூறு களையுடைய காசுகள் முறையே அரைமாடகம் காகணி அரைக் காகணி என்று கூறப்படும்.

[86]வண்ணக்கன், நாட்டில்வழங்குதற்பொருட்டும் கருவூலத்திற் றெருகுத்தற் பொருட்டும் பணத்தின் [87]வழங்கன் முறையை ஏற் படுத்தல் வேண்டும். நூற்றுக்கு எட்டுவிகிதமுள்ள [88]உருவிகத் தையும் நூற்றுக்கு ஐந்துவிகிதமுள்ள [89]வாசியையும் நூற்றுக்கு அரைக்கால்விகிதமுள்ள [90]ஆராய்ச்சிக் கூலியையும் ஏற்படுத்தல் வேண்டும். [91]வேருகச் செய்வோர் விற்போர் வாங்குவோர் ஆராய்

---

84 இங்ஙனமே என்றதால் முக்காற்பணம் முதலியவற்றிற்கும் கணக் கிட்டுச் செய்துகொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

85 காற்கூறு — முன்கூறிய வெள்ளிப்பணத்தின் நான்கிலொருகூறு. செம்பு பதினொரு உழுந்தளவெடையும் வெள்ளி நான்குழுந்தளவெடையும் வெள்ளீயம் முதலியவற்றில் ஒன்றில் ஒருழுந்தளவெடையும் சேர்த்துச் செய்யப்படுவது மாடகம் என்னும் செம்புக்காசாகும். அரைமாடகம் முதலியவற்றிற்கும் இவ்வாறே கணக்கிட்டுக்கொள்ளல் வேண்டும் என்பது.

86 வண்ணக்கன்—நாணய பரிசோதகன்.

87 வழங்கன்முறை—செலாவணிமுறை; நாட்டில் வழங்குதற்கும் கரு வூலத்திற் றெருகுத்துவைத்தற்கும் முறையே முத்திரையிட்ட காசுகளாகவும் கட்டிவடிவினவாகவும், பொன் வெள்ளி முதலியவற்றைக் கணக்கிட்டு வரையுறை செய்தல்வேண்டும் என்பது கருத்து.

88 உருவிகம்—நூற்றுக்கு எட்டுவிகிதம் செலவாவது. வெண்பொற் காசு முதலியவற்றிற்கு இலச்சினையிடும் தொழிற்சாலையிலுள்ள பணியா ளர்க்கு நூற்றுக்கு எட்டுவிகிதம் கூலி கொடுக்கவேண்டும் என்பது கருத்து.

89 வாசி—நூற்றுக்கு ஐந்துவிகிதம் செலவாவது. இஃதரசனுக்குச் செலுத்தவேண்டிய கூருகும்.

90 ஆராய்ச்சிக் கூலியாவது — நாணயபரிசோதகற்குக் கொடுக்கப் படுவது.

91 வேருக—அரசியல் விதிக்கு மாருக.

வோர் என்னும் இவர்களுக்கு [92]இருபத்தைந்துபணம் தண்டம் விதித்தல் வேண்டும்.

ஆகரத்தொழிலதிகாரி சங்கு வைரம் மாணிக்கம் முத்து பவழம் உப்பு என்னும் இவற்றைப்பற்றிய [93]தொழில்களையும் [94]வாணிகத்தையும் செய்வித்தல் வேண்டும்.

உப்பளத்தலைவன் [95]விளைந்து முற்றிய உப்பையும் [96]பகுதி யுப்பையும் [97]வரையறை யுப்பையும் உரியகாலத்திற் றொகுத்து வைத்தல் வேண்டும். அவற்றை விலைப்படுத்தலால் பண்டத்தின் விலைப்பொருள் ஆராய்ச்சிக்கூலி [98]வாசி என்னுமிவற்றையும் கணக் கிட்டுக்கொள்ளல் வேண்டும்.

அயல்நாட்டினின்றும் விற்றற்பொருட்டு வரும் உப்பில் ஆறி லொருகூறு (அரசற்கு) [99]கொடுத்தல் வேண்டும். அக்கூறும் அளவு வாசியும் கொடுத்த வணிகன் [100]அவற்றை விற்றற்பொருட்டு நூற்றுக்கு ஐந்துவிகிதமுள்ள [101]வாசியையும் [102]ஆராய்ச்சிக் கூலி

---

[92] கள்ளநாணயங்கள் கண்டுபிடிக்கப்படின் அவற்றைப் பறிமுதல் செய்வதோடு இருபத்தைந்து பணம் தண்டமும் விதித்தல்வேண்டும் என் பது.

[93] தொழில்களாவன—சங்கை அறுத்தலும் மெருகிடலும் வைரம் முதலியவற்றைத் தூய்மை செய்தலும் சாணைபிடித்தலும் உப்பினை விளை வித்தலும் ஆம்.

[94] வாணிகம்—சங்கு முதலியவற்றை விற்றலும் வாங்குதலும் ஆம்.

[95] விளைந்து முற்றிய உப்பு—அரசனுடைய பணியாளரால் ஆக்கப் படுவது.

[96] பகுதியுப்பு—பிறராலெடுக்கப்படும் உப்பில் அரசனுக்குரிய கூறு.

[97] வரையறையுப்பு—இத்துணை அளவுள்ள நிலத்தில் எடுக்கப்படும் உப்பில் அரசற்கு இவ்வளவென்று வரையறை செய்யப்படுவது.

[98] வாசி—மீண்டுமளக்குங்கால் குறையாமைப் பொருட்டு நூற்றுக்கு ஐந்துவிகிதம் மிகுத்து வாங்கப்படுவது.

[99] அயல்நாட்டு வணிகன் கொடுத்தல்வேண்டும் என்பதாம்.

[100] அவற்றை என்பது அரசற்குரிய கூற்றையும் அதற்குரிய வாசியை யும் குறிக்கும்.

[101] ஈண்டுக்கூறிய வாசி அரசிறையாகும்.

[102] ஆராய்ச்சிக்கூலி நூற்றுக்கு அரைக்கால் விகிதமாகும்.

யையும் [103]உருவிகத்தையும் கொடுத்தல் வேண்டும். அப்பொருளை வாங்குவோர் சுங்கப்பொருளையும் அரசனது விலைப்பண்டத்தினின்றும் குறைதலை நிரப்புதற்குரிய பொருளையும் கொடுத்தல் வேண்டும். [104]வேற்றிடத்தில் வாங்குவோன் அறுநூறு பணம் தண்டம் இறுத்தல் வேண்டும்.

[105]கலவையுப்பு விற்பவனும் அரசனது அநுமதிபெறாமல் உப்புவிற்றுப் பிழைப்பவனும் உத்தமசாகச தண்டம் இறுக்கக் கடவர். வானப்பிரத்தனுக்கு [106]இது விலக்காகும். வேதம் ஓதுபவனும் எளியவனும் உடலுழைப்பாற் பணிசெய்வோனும் [107]உணவிற்கு வேண்டிய அளவு கொள்ளலாம்.

இங்குக் [108]கூறப்பட்டவர்களல்லாத [109]பிறர், உப்பு வெல்லம் [110]வகைகளைச் செய்வாராயின் அவர் [111]சுங்கம் மாத்திரம் கொடுத்தல் வேண்டும்.

### சுலோகங்கள்

(1—2) இங்ஙனம் விலை [112]பகுதி [113]வாசி [114]ஊதியம்

---

103 உருவிகம்—பணியாளர் கூலிப்பொருட்டு நூற்றுக்கு எட்டுவிகிதம் கொடுக்கப்படுவது.

104 வேற்றிடத்தில் வாங்குவோன்—தன்னரசனது நாட்டில் உப்பிருக்குங்கால் வேற்றுநாட்டிற் பெறுவோன்.

105 கலவையுப்பு—மண்முதலியன கலந்த உப்பு.

106 இது—அரசனுடைய அநுமதி பெறவேண்டும் என்னும் விதி.

107 வாணிகத்தின்பொருட்டுக் கொள்ளலாகாதென்பது கருத்து.

108 கூறப்பட்டவர்கள்—வாணிகத்தொழில் புரிவோரும் வானப்பிரத்தன் முதலியோரும் ஆவர்.

109 பிறர்—அந்நாட்டுக் குடிமக்கள்.

110 உப்பு வெல்லங்களின் வகைகளை முப்பத்தாறும் அத்தியாயத்திற் காண்க.

111 சுங்கம்—கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது; வரி.

112 பகுதி—ஆறிலொருகூறு.

113 வாசி — நூற்றுக்கு ஐந்துவிகிதம் பெறப்படுவதும் அளவுவாசியுமாம்.

114 ஊதியம்—ஆகரத்திற்கொண்ட பொருளை மேலும் அத்தொழிலில் செலவிட்டு ஈட்டிய இலாபம்.

[115]தண்டவரையறை சுங்கம் [116]குறையீடு [117]ஒறுத்தல் ஆராய்ச்சிக் கூலி உருவிகம் தாதுப்பொருள் விலைப்பண்டம் என்னும் இப் பன்னிரண்டனையும் ஆகரங்களின் முகமாக [118]உண்டாக்கிக் கொள்ளல்வேண்டும். இங்ஙனமே எல்லா விலைப்பண்டங்களினும் சிறந்தன கோடற்கு ஏற்பாடுசெய்தல் வேண்டும்.

(3) [119]ஆகரத்தாற் கருவூலப்பொருளும் கருவூலத்தால் அரசநீதியும் உண்டாவன. கருவூலம் அரசநீதி என்னுமிவற்றால் பொருள்மலிந்த நிலவுலகம் அடையப்படும்.

இரண்டாம் அதிகரணம் பன்னிரண்டாம் பிரகரணம்
"ஆகரத்தொழினிலை" என்னும் முப்பத்துமூன்றாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

115 தண்ட வரையறை—நீதிநூல்கள் வரையறுத்த உத்தமசாகசம் முதலிய தண்டத்தினளவு.

116 குறையீடு—நஷ்ட ஈடு.

117 ஒறுத்தல்—குற்றத்திற்குத்தகத் தண்டித்தல்.

118 இங்கே கூறப்பட்ட விலை முதலிய பன்னிரண்டனையும் ஆகரத் தொழிலின் நிமித்தம் வரையறை செய்துகொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

119 இச்சுலோகத்தால் ஆகரவருவாயின் சிறப்புக் கூறப்பட்டபடியாம்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பதின்மூன்றும் பிரகரணம்—[1] அக்கசாலையிற் பொற்றொழிற்றலைவன்

## முப்பத்துநான்காம் அத்தியாயம்

பொன்வினைத் தலைவன் பொன் வெள்ளி சம்பந்தமான தொழில் செய்தற்கு ஏற்றதாகவும் [2]நெருக்கமின்றி இருத்தற்குரிய தாகவும் [3]நாற்கட்டும் ஒரு வாயிலும் உடையதாகவும் அக்கசாலையைச் செய்வித்தல் வேண்டும். அங்காடித்தெரு நடுவண் [4]சிற்ப வன்மையும் நற்குடிப்பிறப்பும் [5]நம்பிக்கையும் உடைய [6]பொன் வினைஞனை இருத்தல் வேண்டும்.

[7]சாம்பூநதம் [8]சாதகும்பம் [9]ஆடகம் [10]வைணவம் [11]சிருங்கி

---

### 34-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அக்கசாலை—பொன் முதலிய உலோகத்தொழில் செய்யுமிடம். தலைவன் என்பது ஈண்டு அவன் செயலையுணர்த்தும். ஆகரத்தொழினிலை என்னும் முன்னைப் பிரகரணத்தில் அரசனது கருவூலத்திற்குச் சிறந்ததாகிய பொன் வெள்ளி முதலியன உண்டாதல் கூறப்பட்டது. அவற்றின் இயல்பு சாதி நிறம் குணம் குற்றம் முதலியனவும் ஈட்டல் காத்தல்களும் இப்பிரகரணத்திற் கூறப்படுதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது ; இதனாற் பிரகரணவியைபு புலனும்.

[2] தொழில்செய்வோர் நெருக்கமின்றி இருத்தற்குரியதாக அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[3] ஒன்றுக்கொன்று எதிர்முகமாக அமைக்கப்படும் நான்கு கட்டுக்களையுடைய இல்லம்.

[4] சிற்பம்—அணிகலன்கள் அமைக்கும் முறையும் மணி முதலியன பதிக்கும் முறையுமாம்.

[5] நம்பிக்கை—அறவுபதை முதலியவற்றின் ஆராய்ச்சியாலுண்டாவது.

[6] பொன்வினைஞனுடைய தொழின்முறை அடுத்துவரும் முப்பத்தைந்தாம் அத்தியாயத்திற் காண்க.

[7] சாம்பூநதம்—மேருமலையிலிருந்து தோன்றும் சாம்பூநதியில் உண்டாவது ; இது நாவற்கனியின் சாறுபோன்ற நிறமுடையது.

[8] சாதகும்பம்-இது சதகும்பம் என்னும் மலையிலுண்டாவது ; தாமரை மலரின் அகவிதழ்போன்ற நிறமுடையது.

[9] ஆடகம் — ஆடகமென்னும் நாட்டிலுள்ள ஆகரத்திலுண்டாவது ; பெருங் குறிஞ்சிமலர்போன்ற பொன்மை நிறமுடையது.

[10] வைணவம்—வேணு என்னும் மலையிலுண்டாவது ; இது கோங்கு மலர்போன்ற நிறமுடையது.

[11] சிருங்கிசுத்திசம் — சுவர்ணபூமியாகிய பர்மாநாட்டிலுண்டாவது ; இது மனோசிலை நிறமுடையதென்ப.

சுத்திசம் எனப் பொன் ஐந்து வகைப்படும். [12]இயற்கைப்பொன் [13]இரசவாதப்பொன் [14]ஆகரப்பொன் எனத் தோற்றமுறைபற்றி மூன்று வகைப்படும்.

தாமரைப்பூவின் அகவிதழ்போன்ற நிறமும் [15]மென்மைத் தன்மையும் வழுவழுப்பும் [16]ஓசையின்மையும் ஒளியும் உடைய பொன் மிகச் சிறந்ததாகும். செம்மையும் பொன்மையுங்கலந்த நிறமுடைய பொன் சிறந்தவற்றுள் நடுத்தரமாகும். செந்நிற முடைய பொன் சிறந்தவற்றுட் கடைத்தரமாகும்.

பசுமை வெண்மை கலந்த நிறமுடையதும் வெண்ணிற முடையதும் [17]இழிந்த பொன்னாகும். அஃது எப்பொருளின் கலப்பால் இழிந்ததாயிற்றோ அப்பொருளின் எடைக்கு நான்குமடங்கு ஈயத்தைச் சேர்த்துத் [18]தூயதாக்கல் வேண்டும். ஈயத்தின் கலப்பினாற் சிதறுபடுமாயின் காய்ந்த எருமுட்டைகளால் மூடி ஊதல் வேண்டும். திணிந்திருத்தலாற் சிதறுபடுமாயின் எண்ணெயிலும் சாணத்திலும் அடிக்கடி தோய்த்தல் வேண்டும்.

ஆகரத்தினின்றும் உண்டாகும் பொன் ஈயத்தின் கலப்பினாற் சிதறுபடுமாயின் [19]பாகபத்திரங்களையிட்டு மரப்பலகைகளில்

---

[12] பிறப்புமுறைபற்றி மூவகைப்படுத்திக் கூறத் தொடங்குகின்றார்; அவற்றுள் இயற்கைப்பொன் என்பது இயற்கையாகவே மற்றொரு பொருளின் கலப்பின்றித் தங்கமாக விளைவது.

[13] இரசவாதப்பொன்—செம்பு முதலிய உலோகங்களை வேதிப்பதால் உண்டாவது.

[14] ஆகரப்பொன்—ஆகரங்களில் எடுக்கப்படும் கல் மண் முதலியவற்றி னின்றும் உண்டாவது.

[15] தீயாற் காய்ச்சப்படாதபொழுதும் மென்மையுடையதென்பது.

[16] மாற்றுயர்ந்த பொன்னைத் தட்டிப்பார்த்தால் ஓசை குறைந்திருக்கும் என்பது கருத்து.

[17] இழிவு, வேற்று லோகக்கலப்பால் உண்டாவது.

[18] தூயதாக்கல்—முன்கலந்த வேற்றுலோகமும் பின்கலந்த ஈயமும் அறவே நீங்கும்படி காய்ச்சியெடுத்தல்.

[19] பாகபத்திரம்—ஒருவகைப் பச்சிலையாகும்.

வைத்தடித்தல் வேண்டும். அல்லது [20]கந்தலி [21]வச்சிரகந்தக் குழம்பினால் நனைத்தல் வேண்டும்.

[22]துத்தோற்கதம் [23]கௌடிகம் [24]காம்புகம் [25]சாக்கிரவாளிகம் என வெள்ளி நான்கு வகைப்படும். வெண்மையும் வழுவழுப்பும் மென்மைத்தன்மையு முடையது சிறந்ததாகும். இவற்றின் [26]மாறுபட்டுச் சிதறுபட்டிருப்பது தாழ்ந்ததாகும். [27]இதனை நான்கு மடங்கு ஈயத்தால் தூய்தாக்கல் வேண்டும். [28]மேற்குமிழிதோன்றல் தெளிவு ஒளியுடைமை தயிர்வண்ணம் என்னும் இக்குணங்கள் தூய்மையின் இலக்கணமாகும்.

மஞ்சள் துண்டு போன்ற நிறமுடைய தூயபொன் பதினாறுழுந்தளவு எடைகொண்டது [29]ஒரு வண்ணகமாகும். அதன்கட் காலுழுந்தளவெடை செம்புசேர்த்து அவ்வளவெடை பொன் எடுக்கப்படல் வேண்டும் (இஃது ஒரு கலப்பு வண்ணகமாகும்). இங்ஙனமே [30]நான்குழுந்தளவெடை வரை செம்பு சேர்த்து அவ்

---

20 கந்தலி—வாழை; ஒருவகைக் கொடியுமாம்.

21 வச்சிரகந்தம்—விஷ்ணுகந்தம்; வனசூரணமுமாம். வச்சிரம் என்பதற்குச் சிபேரம் எனவும், கந்தம் என்பதற்குத் தாமரைக்கிழங்கெனவும் பொருள்கொள்வர் இதன் உரையாளர்.

22 துத்தோற்கதம்—துத்தம் என்னும் மலையிலுண்டாவது; சாதிமலர் போன்ற நிறமுடையது.

23 கௌடிகம்—காமரூபநாட்டிலுண்டாவது; தகரமலர் நிறமுடையது.

24 காம்புகம்—கம்பு என்னும் மலையிலுண்டாவது.

25 சாக்கிரவாளிகம் — சக்கிரவாளமென்னும் ஆகரத்திலுண்டாவது; இவ்விரண்டும் முல்லைமலர் போன்ற நிறமுடையன.

26 மாறுபாடு—கருமையும் சொரசொரப்பும் வன்மைத்தன்மையும் ஆம்.

27 இதனை—தாழ்ந்தவெள்ளியை. ஈயத்தோடு கலந்து அது கழியும் வரை நெருப்பிற் காய்ச்சுதலால் தூய்தாகும் என்பது.

28 கலப்புவெள்ளியை உருக்குங்கால் மேற்குமிழி தோன்றுதல் முதலியன காணப்படுமாயின் தூய்தாயிற்று என்பது கருத்து.

29 வண்ணகம் என்பது பொற்காசைக் குறிக்கும்.

30 காலுழுந்தளவெடை தொடங்கி முறையே கால் கால் விகிதமாக நான்குழுந்தளவெடை வரை செம்பைப் பொற்காசிற் சேர்த்து அவ்வவ்வளவெடை பொன்னை முறையே எடுத்துவிடுவதால் பதினாறு கலப்புவண்ணகங்களாகும் என்பது கருத்து. கலப்புவண்ணகம் பதினாறும் சுத்தவண்ணகம் ஒன்றும் ஆகப் பதினேழாகுமென்பது.

வளவெடை வரையுள்ள பொன்னை எடுப்பதால் பதினாறு (கலப்பு) வண்ணகங்களாகும்.

[31]பொன்னை முதலில் உரைத்துப் பின்னர் [32]ஆணிப்பொன்னை உரைத்தல் வேண்டும். பள்ளமேடில்லாத உரைகல்லில் ஒத்த வண்ணமும் கோடுந்தோன்ற உரைத்தல் [33]வேண்டும். [34]அழுந்த உரைத்தல் [35]அழுந்தாது உரைத்தல் [36]உகிரிடையிலுள்ள அரிதாரப் பொடியைத் தூவுதல் என்னும் [37]இவை வஞ்சித்தலாம். [38]கோமூத் திரத்திற் கலந்த சாதிலிங்கத்தையாதல் அரிதாரத்தையாதல் விரல் நுனியிற் பூசிக்கொண்டு பொன்னுரையில் தடவினால் அது வெண்மை நிறமுடையதாகும்.

தாமரைமலரின் சிறிய [39]அகவிதழ் போன்ற நுண்வரிகளும் வழுவழுப்பும் மென்மைத்தன்மையும் ஒளியும் உடைய [40]உரைவரி நிறம் சிறந்ததாகும்.

பாசிப்பயறு போன்ற நிறமுடைய கலிங்கநாட்டில் (மகேந்திர மலையில்) உண்டாகிய கல்லும் (ஆரட்டநாட்டில்) தாபி என்னும்

---

[31] உரைகல்லில் உரைத்தல் வெட்டிப்பார்த்தல் உருக்குதல் ஆகிய மூன்றும் பொன்னின் மாற்றை ஆராய்தற்குரிய உபாயங்களாகும்; உரைகல்லில் அப்பொன்னை முதலில் உரைத்து அதன்கீழ் மாற்றளவிடுதற்குரிய ஆணிப் பொன்னை உரைத்தல்வேண்டும் என்பது கருத்து.

[32] ஆணிப்பொன்—மாற்றறுதிசெய்து அளவைப்பொருட்டு வைக்கப் பட்ட ஆணி வடிவமான பொன்.

[33] இங்ஙனம் உரைத்தல் நேரிய முறையாகும்.

[34] அழுந்த உரைத்தல் விற்பவன் மாற்றுயர்வு காட்டுதற்பொருட்டு.

[35] அழுந்தாது உரைத்தல் வாங்குவோன் மாற்றுக்குறைவு காட்டுதற் பொருட்டு.

[36] விற்பவன் பிறரறியாவாறு நகத்தினிடையில் மஞ்சணிறமான அரி தாரப்பொடியைக் கரந்துவைத்து மாற்றுக்குறைந்த பொன்னுரையில் தூவுதல் என்பது கருத்து.

[37] இவை—இம்மூன்று செயலும்.

[38] இச்செயல் வாங்குவோனது வஞ்சகச்செயலாகும்.

[39] அகவிதழ்—பூ நடுவணுள்ள பொகுட்டைச் சூழ்ந்திருக்கும் மெல்லிய இதழ்கள்.

[40] உரைவரிநிறம்—உரைகல்லில் உரைக்கப்பட்ட கோடுகளின் வண்ணம்.

யாற்றில் உண்டாகிய கல்லும் உரைகல்லுட் சிறந்தனவாம். ஒரே நிறமுடைய கல், விற்போன் வாங்குவோன் இருவர்க்கும் நலம் பயப்பதாகும். [41]யானைத்தோல் போன்ற நிறமுடையதும் பசுமை நிறமுடையதும் ஆகிய கல், நிறத்தை[42]யுயர்த்துக் காட்டுதலால் [43]விற்பனைக்கு நலமாவதாம். திண்மையும் சொரசொரப்பும் பல் வகை நிறமுடைய கல், நிறத்தைக் [44]குறைத்துக் காட்டுதலால் (விலை கொடுத்து) கொள்ளுதற்கு நலமுடையதாகும்.[45]

வெட்டுத்துண்டு, [46]நெய்த்திருத்தல் [47]ஒத்தவண்ணம் வழு வழுப்பு மென்மைத்தன்மை ஒளி இவற்றையுடையதாக இருப்பின் சிறந்ததாகும். உருக்கப்பட்ட பொன் உள்ளும் புறமும் ஒத்த வண்ணமுடையதாய் தாமரைமலரின் அகவிதழ்போன்ற நிறம் அல்லது பெருங்குறிஞ்சிப்பூப் போன்ற நிறமுடையதாகவிருப்பின் சிறந்ததாம். புகர்நிறம் அல்லது கருமைநிறம் உடையது இழிந்த தாகும்.

நிறுத்தலளவையை 'துலைமுதலளவையின் நிலையாராய்தல்' (அதி. 2. அத். 40) என்னும் பிரகரணத்திற் [48]கூறுவோம். ஆங்குக் கூறிய முறைப்படி வெள்ளியையும் பொன்னையும் கொடுத்தல் வாங்குதல் செய்தல்வேண்டும்.

அக்கசாலையில் வேலையில்லாதவன் செல்லலாகாது. [49]மீறிச் செல்வோன் தண்டிக்கப்படுவான். வேலை செய்வோனும் வெள்ளி

---

[41] யானைத்தோல் போன்ற சொரசொரப்பும் உலர்ச்சியும் நிறமும் உடையதென்பது கருத்து.

[42] உயர்த்துக்காட்டல்—மாற்றுக்குறைவுள்ள பொன்னை மாற்றுயர்ந்த தாகக் காட்டுதல்.

[43] விற்பனை—ஈண்டுப்பொன் விற்றலைக்குறிக்கும்; பின்வருங் கொள்ளு தலுமது.

[44] குறைத்துக்காட்டுதல்—மாற்றுயர்ந்த பொன்னை மாற்றுக் குறைந்த தாகக் காட்டுதல்.

[45] இத்துணையும் உரைகல்லில் உரைத்தாராய்தல் கூறப்பட்டது; இனி வெட்டிப்பார்த்தாராய்தல் கூறப்படும்.

[46] நெய்த்திருத்தல்—நெய்ப்பசையுடையதாகவிருத்தல்.

[47] ஒத்த வண்ணம்—உள்ளும் புறமும் ஒத்த நிறம்.

[48] இது மொழிவாமென்னும் உத்தி.

[49] மீறிச் சேறல்—தடையைப் பொருட்படுத்தாமல் புகுதல்.

பொன் என்னும் [50]இவற்றோடு செல்வானாயின் [51]அவற்றோடு தண்டமும் இறுக்கக்கடவன். [52]பொன்செய்வோர் பொன்மணி செய்வோர் [53]மணியிழைப்போர் அணிகலன்சமைப்போர் என்னும் இவரும் உலையூதுவோர் சிறுபணியாளர் [54]பொற்றுகள் கழுவுவோர் என்னுமிவரும் ஆடை கை மறைவிடங்கள் பரிசோதிக்கப்பட்டு அக்கசாலையுள் போக்குவரவு செய்தல் வேண்டும். இவர்களுடைய எல்லா உபகரணங்களும் [55]தொழில் முடிவுறாத சிற்பப்பொருள்களும் அவ்வக்கசாலையிலேயே இருத்தல் வேண்டும். [56]பெற்றுக்கொண்ட பொன்னையும் தொழில் முடிவுற்ற சிற்பப்பொருளையும் [57]கணக்கர் சான்றாக நிறுத்துக்கொடுத்தல் வேண்டும். நாடோறும் மாலைப்பொழுதில் [58]செய்பவன் செய்விப்போன் என்னுமிருவரும் இலச்சினையிட்டுவைத்துக் காலைப்பொழுதில் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

[59]கேவணத்தொழில் [60]ஞாண்வினை சிற்றணிவினை என்பன (பொன் வெள்ளி முதலியவற்றைப்பற்றிய) தொழில்களாம். அவற்றுட் கேவணத்தொழில் மணியிழைத்தலாம். ஞாண், பொன்னிழையால் ஆக்கப்படும் அரைஞாண் முதலியன. சிற்றணி, [61]திட்ப

---

[50] வேலை செய்வோனும் பொன் வெள்ளி முதலியவற்றோடு புகுதலாகாதென்றது, வெளிப்படுங்கால் பரிசோதனையில் அவர்பால் எதுவுமிருத்தலாகாது என்பது கருதியாம்.

[51] அவற்றோடு—அப் பொன் வெள்ளிகள் பறிமுதல் செய்யப்படுவதோடு.

[52] பொன் செய்வோர்—தாதுப் பொருளைப் பொன்னாக்குவோர்.

[53] மணியிழைப்போர்—இரத்தின வேலை செய்வோர்.

[54] பொற்றுகள் கழுவுவோர்—கரி சாம்பல் முதலியவற்றோடு கலந்த பொற்றுகளைக் கழுவி அரித்தெடுப்போர்.

[55] தொழில் முற்றுப்பெறாத அணிகலன் முதலியன.

[56] கருவூலத்தினின்றும் தொழில் செய்தற் பொருட்டுப் பெற்றுக்கொண்ட பொன் என்பதாம்.

[57] கணக்கர்—அரசியல் வினைஞர்.

[58] செய்பவன்—பொற் கொல்லன்; செய்விப்போன்—அத்தொழிற்றலைவன்.

[59] கேவணம்—மணியழுத்துங் குழி.

[60] ஞாண்—சரடு.

[61] திட்பமுடையன—வளை கணையாழி முதலியன.

முடையனவும் [62]உட்டுளையுடையனவும் [63]உண்டைவடிவினவும் [64]பிறவுமாம்.

கேவணத்தொழிற்கு [65]ஐந்திலொருகூறு காஞ்சனமும் பத்திலொருகூறு [66]அழுத்தகமும் அமைத்தல் வேண்டும். காற்கூறு செம்புகலந்த வெள்ளியும் காற்கூறு வெள்ளிகலந்த பொன்னும் நல்லனபோற் காணப்படும். அவ்வாறு கலவாமற் பாதுகாத்தல் [67]வேண்டும்.

பொன்மணியும் இரத்தினமும் கலந்திழைப்பதற்கு (உரிய பொன்னை ஐந்துகூறுபடுத்து) மூன்றுகூறு [68]சுற்றடுக்காகவும் இரண்டுகூறு அடிப்படையாகவும் அமைத்தல்வேண்டும். [69]அல்லது (உரியபொன்னை ஏழுகூறுபடுத்து) நான்குகூறு அடிப்படையாகவும் மூன்றுகூறு சுற்றடுக்காகவும் அமைக்கலாம்.

[70]தகட்டுத்தொழில் வருமாறு :—செப்புக்கலத்தை ஒத்த அளவெடையுள்ள [71]பொன்னோடு சேர்த்தல் வேண்டும். [72]திண்ணி

---

[62] உட்டுளை யுடையன—குண்டிகை கரகம் முதலியன.

[63] உண்டை வடிவின—சதங்கை மணி முதலியன.

[64] பிற என்றதனால் இலை மலர் போன்ற வடிவினவுங் கொள்க.

[65] மணியளவின் ஐந்திலொரு கூறு பதித்தற்குரிய தளமாகவும் பத்திலொரு கூறு மணியின் பக்கத்தில் அழுத்துதற்குரிய பாகமாகவும் அமைக்க வேண்டும் என்பது கருத்து ; இஃது இரத்தின குண்டலத்திற்குப் பொருந்துவதாகும்.

[66] அழுத்தகம்—மணிகளை வைத்துச் சிதையாதவாறு பக்கத்தில் பொன் வைத்தழுத்துமிடம்.

[67] இது பிறிதொன்றும் கலவாமல் இரத்தினங்களை மாத்திரம் வைத்திழைக்கும் முறை ; பொன் மணியும் இரத்தினங்களும் கலந்திழைக்கும் முறை பின் வருவது.

[68] சுற்றடுக்கு—மணியைச் சூழத் தாமரைமலர் சுவத்திகம் போன்ற உருவங்களாக அமைக்கப்படும் பகுதி.

[69] அழுத்தப்படும் மணி பருமையுடையதாக விருப்பின் அமைக்கும் முறை கூறுகின்றார்.

[70] செம்பு வெள்ளி இவற்றாற் செய்யப்படும் தகட்டுத்தொழில் என்பது கருத்து.

[71] பொன்னோடு—பொன்னாலாகிய திண்ணிய தகட்டோடு.

[72] கணையாழி வளை முதலியன திண்ணியதன் பாற்படும்.

யதும் [73]திண்மையோடு உட்டுளையுடையதுமாகிய வெண்பொற் கலத்தை அதனிற் பாதியளவு எடையுள்ள [74]பொன்னேடு இயைத் தல் வேண்டும். அல்லது [75]நான்கிலொருகூறு பொன்னை இரசம் சாதிலிங்கம் என்னும் இவற்ருலாகிய [76]குழம்பு அல்லது பொடி யைக்கொண்டு பூசுதல்வேண்டும்.

தலையாயதும் நல்லநிறமும் நல்லவொளியும் உடையதும் [77]தமனியமாகும். ஒத்த எடையளவுள்ள காரீயத்தால் தூய்மை செய்யப்பட்டதும் மெல்லிய தகடுசெய்து புடமிடப்பட்டதும் [78]சிந்துநாட்டு உப்பினுல் தேய்த்து ஒளியுண்டாக்கப்பட்டதும் ஆகிய பொன், நீலம் மஞ்சள் [79]வெண்மை பசுமை கிளிப்பிள்ளை நிறம் என்னும் இந்நிறங்களுக்குக் காரணமாகும். இப்பொன்னிற்கு மயிற்கழுத்துப்போன்ற நிறமும் வெண்மையான வெட்டுவாயும் மிக்க ஒளியுமுடைய இரும்பினது நீற்றப்பட்ட [80]மஞ்சள் நிறமான பொடியும் காரணமாகும். கால் உழுந்தளவெடையுள்ள இரும்புத் துகள் பதினுறுழுந்தளவெடையுள்ள பொன்னிற்கு நிறம்பயப்ப தாகும்.

எலும்புத்தூள் கலந்த குகையில் நான்கு முறையும் சமனெடை யுள்ள காரீயத்தோடு கலந்து நான்கு முறையும் காய்ந்த பரற்கற் குகையில் நான்கு முறையும் களிமண்குகையில் மூன்று முறையும் சாணக்குகையில் இரண்டு முறையும் ஆக இங்ஙனம் பதினேழு முறை குகைகளில் உருக்கி எடுத்துச் சிந்துநாட்டு உப்புமண்ணுல் தேய்த்து ஒளியுண்டாக்கப்பட்ட மிக்க தூய்மையுடைய வெள்ளி

---

[73] கரகம் குண்டிகை முதலியன திண்மையோடு உட்டுளையுடையதன் பாற்படும்.

[74] பொன்னேடு—பொன்னுலாகிய மெல்லிய தகட்டோடு.

[75] பூசப்படும் வெண்பொற்கலத்தின் எடையளவின் நான்கிலொரு கூறு என்பது கருத்து.

[76] குழம்பு—நீர்வடிவிலாகியது.

[77] தமனியம்—ஈண்டு அணிகலன் செய்தற்குரிய பொன்னைக் குறிக்கும்.

[78] இதனைச் சிந்துநாட்டுமண் என்பாரும் மலையுப்பு என்பாரும் உளர்.

[79] இங்கே கூறிய ஐவகை நிறவேற்றுமைகளையும் அடைதற்கு இங் ஙனம் தூய்மை செய்யப்பட்ட பொன் உரியதாகும் என்பது கருத்து.

[80] மஞ்சணிறந் தோன்றும்படி நீற்றப்பட்ட பொடி என்பது கருத்து.

யும் [81]காரணமாகும். இவ்வெள்ளியினின்றும் காலுழுந்தளவெடை முதல் இரண்டுழுந்தளவெடை வரை யெடுத்துப் [82]பொன்னிற் சேர்த்து முறையே அவ்வவ்வளவுடைய பொன்னை எடுத்துவிடல் வேண்டும். பின்னர் [83]நிறக்கலவை செய்யத்தக்கது. இங்ஙனம் கலக்கப்பட்ட பொன், வெள்ளியைப்போன்ற வெண்ணிறமுடைய தாகும்.

[84]தமனியத்தின் மூன்றுகூறு கலந்த பொன்னில் முப்பத்தி ரண்டில் ஒருகூறு தூய்மை செய்யப்பட்ட வெள்ளியைக் கலந்தால் அது வெண்மையும் செம்மையும் கலந்த நிறமாகும். அத்துணைச் செம்பைக் கலந்தால் மஞ்சள் நிறத்தை உண்டாக்கும்.

[85]தமனியத்தை (சிந்துநாட்டு உப்புமண்ணல்) தேய்த்து ஒளி

---

[81] முன்னர்க் கூறிய தூய பொன், நிறவேற்றுமையடைதற்குக் காரண மாகும் என்பதாம்.

[82] பொன்—பதினாறுழுந்தள வெடையுள்ள அத்தூய பொன்னென்பது கருத்து.

[83] நிறக்கலவை—முற்கூறிய மஞ்சள் நிறமான இரும்புத் தாளில் காலு ழுந்துள்ளவெடை கலப்பதால் உண்டாவதாம்.

[84] இங்குக் கூறியபடி தூய்மை செய்யப்படாத பொன்னை முப்பத்தி ரண்டு கூறுபடுத்து மூன்று கூறு எடுத்துவிட்டுத் தூய்மை செய்யப்பட்ட சிறந்த பொன்னில் அம்மூன்று கூற்றையும் சேர்க்கவேண்டும் என்பதும் அங்ஙனம் சேர்க்கப்பட்ட கலவைப் பொன்னில் முப்பத்திரண்டிலொரு கூறு தூய்மை செய்யப்பட்ட வெள்ளியைச் சேர்ப்பின் அது வெண்மையும் செம்மையும் கலந்த நிறமுடையதாகும் என்பதும் அவ்வொருகூறு வெள்ளி யைச் சேர்க்காமல் அத்துணைச் செம்பைச் சேர்ப்பின் அது மஞ்சள்நிறத்தை உண்டாக்கும் என்பதும் ஒருசாராசிரியர் கருத்து. பிறிதொரு சாரார் கருத்து :—முப்பத்திரண்டு கூற்றில் மூன்று கூறு தூய்மை செய்யப்பட்ட பொன்னும் இருபத்தொன்பது கூறு தூய்மை செய்யப்பட்ட வெள்ளியும் சேர்ப்பின் அது வெண்மையும் செம்மையும் கலந்த நிறமுடையதாகும் என்பதும், இங்ஙனமே இருபத்தொன்பது கூறு செம்பில் மூன்று கூறு தூய்மை செய்யப்பட்ட பொன்னைச் சேர்ப்பின் அது மஞ்சள் வண்ணம் உடையதாகும் என்பதுமாம்.

[85] தமனியம் ஈண்டுத் தூய்மை செய்யப்படாத பொன்னை உணர்த்தும் என்பதும், மூன்றில் ஒரு கூறு தூய்மை செய்யப்பட்ட பொன்னென்பதும் ஒரு சாராசிரியர் கொள்கை. பிறிதொரு சாரார் தமனியம் தூய்மை செய் யப்பட்ட பொன்னெனவும் மூன்றிலொரு கூறு செம்பு சேர்க்கவேண்டும் எனவும் கூறுவர்.

யுண்டாக்கி மூன்றில் ஒருகூறு கலப்பின் அது பொன்மையும் செம்மையும் கலந்த நிறமுடையதாகும்.

தூயவெள்ளி இரண்டுகூறும் தூயபொன் ஒருகூறும் [86]கலட்பின் அது பயறுபோன்ற பசுமைநிறமுடையதாகும்.

[87]பாதியளவு இரும்புக்குழம்பினுற் [88]பூசப்பட்ட பொன் கருமைநிறமுடையதாகும். இரசங்கலந்த இரும்புக் குழம்பால் இரண்டுமுறை பூசப்பட்ட தூயபொன் கிளிச்சிறைவண்ணம் உடையதாகும். [89]அவற்றின் தொடக்கத்தில் நிறவேற்றுமைகளை அறிந்துகோடற் பொருட்டு [90]நிறவொப்புப் பகுதியை [91]எடுத்து வைத்தல் வேண்டும்.

இரும்பு செம்பு இவற்றைத் [92]தூய்மைசெய்யும் முறைகளையும் அறிந்துகொள்ளல் வேண்டும். அங்ஙனமே வயிரம் மாணிக்கம் முத்து பவளம் என்னும் இவற்றை [93]மாற்றிக்கவர்தலையும் வெள்ளி பொன் இவற்ருலாகிய கலன்கள் முதலியவற்றின் இணைப்புக்களையும் அளவுகளையும் அறிந்துகொள்ளல் வேண்டும்.

---

[86] ஈண்டுக் கூறிய நிறவேற்றுமைக்குரிய கலவைகள் எல்லாவற்றிற்கும் மஞ்சள் நிறம் தோன்றும்படி நீற்றப்பட்ட இருப்புத்துகளை முன் கூறிய அளவுப்படி சேர்க்கவேண்டும் என்பதை இயைத்துக் கொள்க.

[87] பாதி என்பது நிறவேற்றுமை நிமித்தம் கூறப்பட்ட மூன்றிலொரு கூறு இரும்பிற் பாதி என்றபடியாம். அங்ஙனமாங்கால் குறிப்பிட்ட பொன்னெடையில் ஆறில் ஒரு கூறென்பது முடிந்த பொருளாம்.

[88] பூசப்பட்ட என்பதனுல் கலத்தலாகாதென்பது போதரும்.

[89] அவற்றின் தொடக்கத்தில்—நீலம் முதலிய நிறவேற்றுமைகளை உண்டாக்கத் தொடங்குங்கால்.

[90] நிறவொப்புப் பகுதி—நீலம் முதலிய நிறமூட்டப்பட்ட உலோகப் பகுதி.

[91] அவ்வுலோகத்தின் ஏற்றத் தாழ்வுகளை அறிந்துகொள்ளுதற் பொருட்டுத் தனிப்படுத்தி வைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[92] தூய்மை செய்யும் முறை—தேய்த்துப் புடமிடல் முதலியன; ஆகரப் பொருளாராய்ச்சிநூலின் அறியத்தக்கன.

[93] மாருகப் போலி மணிகளை வைத்து நல்லனவற்றைக் கவர்ந்து கோடல்; இதனை அறிதல் இழப்பு நேராமை குறித்தாம்.

**சுலோகங்கள்**

(1—2) [94]ஒத்த நிறமுடைமை [95]ஒத்த இணையாதல் [96]உராயாதமணியுடைமை உறுதிப்பாடு நன்ருகமெருகிடப்படுதல் [97]கலப்பின்மை [98]உறுப்புப்பிரிவு அணியுங்கால் இன்பஞ்செய்தல் அழகுசெய்தல் ஒளியுடைமை அழகியஅமைப்பு [99]ஏற்றத்தாழ்வின்மை உள்ளக்கவர்ச்சி கண்கவர்ச்சி என்னும் இப்பதினுன்கும் பொன்னணிகலன்களின் குணங்களாம்.

இரண்டாம் அதிகரணம் பதின்மூன்ரும் பிரகரணம்
“ அக்கசாலையிற் பொற்ருெழிற்றலைவன் ” என்னும்
முப்பத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

[94] இச்சுலோகங்களிரண்டாலும் தூயபொன்னுலாகிய அணிகலன்களுக்குரிய குணங்கள் பதினுன்கையும் கூறுகின்ருர். அவற்றுள் ஒத்த நிறமுடைமையாவது :—அணிகல உறுப்புக்களின் உள்ளும்புறமும் வண்ணம் வேறுபடாமை.

[95] அணிகல உறுப்புக்களுள் இரட்டையாகச் செய்யப்படுவன எடையளவாலும் நிறத்தாலும் ஒத்திருத்தல்.

[96] உண்டைவடிவமாகச் செய்யப்பட்ட உருக்கள் ஒன்றனேடு ஒன்று உராயாமல் அமைத்தல்.

[97] நிற ஒளிகளின் உயர்வு கருதி வேற்றுலோகங்கள் கலக்கப்படாமை.

[98] உறுப்புப்பிரிவு—அணிகல உறுப்புக்கள் விளங்கித் தோன்றுமாறு பிரிந்திருத்தல்.

[99] இரட்டையமைப்பிலும் நிறவொளிகளிலும் ஏற்றத்தாழ்வில்லாமலிருத்தல்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பதினன்காம் பிரகரணம்—[1]அங்காடித்தெருவிற் பொன்வினைஞன் செயல்

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

பொன் வினைஞன் நாட்டு நகரத்து மக்களுக்கு வெள்ளி பொன் இவற்றின் [2]தொழிலைச் சிறப்புத் திறமை வாய்ந்த பொற்கொல்லரைக் கொண்டு செய்வித்தல் வேண்டும். காலத்தையும் காரியத்தையும் [3]உறுதி செய்துகொண்டு தொழிலைச் செய்யக் கடவர். காரியத்தின் [4]தகுதி நோக்கிக் காலவரையறை செய்து கொள்ளாமலும் தொழிலைச் செய்யலாம்.

[5]காலங்கடப்பின் காற்கூறு குறைந்த அளவு கூலி பெறுதலோடு [6]அக் கூலியளவின் இருமடங்கு தண்டமும் இறுக்கக் கடவன். காரியத்தை [7]வேறாகச் செய்வானாயின் கூலியை இழப்பதோடு [8]அதற் கிருமடங்கு தண்டமும் [9]இறுக்கக் கடவன்.

---

### 35-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அங்காடி—கடை ; பொன் வினைஞன்—பொற்பணி முதலியன செய்விப்போன். முன்னைப் பிரகரணத்தில் அங்காடித் தெரு நடுவண் சிறப்பவன்மையும் நற்குடிப் பிறப்பும் நம்பிக்கையுமுடைய பொன்வினைஞனை யிருத்தல் வேண்டும் என்று கூறப்பட்டது. அப் பொன்வினைஞனின் செயல் இங்கே கூறப்படுதலின் பிரகரணவியைபு புலனாதலறிக.

[2] தொழில்—அணிகலன் முதலியன செய்யுந் தொழில்.

[3] உறுதி செய்து கொள்ளல்—இன்ன காலத்தில் இன்ன பணியை இன்ன கூலிக்குச் செய்து முடிப்பதென்று வரையறை செய்துகோடல்.

[4] தகுதி—கால நீட்டிப்பில் செய்யத்தக்க பெருமை.

[5] காலம்—வரையறை செய்யப்பட்டது.

[6] பெற்றுக்கொண்ட கூலியளவில்.

[7] வேறாகச் செய்தல்—வளையல் செய்வதாகப் பேசிக்கொண்டு கணையாழி செய்தல்.

[8] அதற்கு—அக்கூலியளவிற்கு.

[9] ''சிறுபகைகளைதல்'' என்னும் 4-ஆம் அதிகரணத்துக் ''காருகரரற் றீங்கு நேராமற் காத்தல்'' என்னும் பிரகரணத்தில் சிறப்புத் தொழிலாளர்க்குரிய எல்லாவிதமான தண்டங்களும் கூறப்படும் ; அங்ஙனமாகவும் இங்கே பொற் கொல்லனுக்கு விசேடமாகத் தண்டம் விதித்தது, ஏனைய சிறப்புத் தொழிலாளர்க்கு நீதிபதிமாத்திரம் ஆராய்ந்து தண்டம் விதித்தல் வேண்

தொழிற் பொருட்டுள்ள பொன் வெள்ளிகளை மாற்றுமளவும் பிறழ்ச்சியில்லாமல் கொள்ளலும் கொடுத்தலும் வேண்டும். [10]காலம் வேறுபட்ட விடத்தும் [11]தேய்தல் சிதைதலில்லாத நிலையில் (கொடுத்ததை) [12]அப்படியே பெற்றுக்கொள்ளல் வேண்டும்

பொன் வெள்ளிகளின் சிறந்த [13]நிறம் [14]உருவம் [15]இலச்சினை என்னும் இவற்றைக் கையாளுவதில் ஏற்படும் [16]கரவு கரவின்மைகளைச் சிற்பத் தொழிலாளர்களால் (பொன் வினைஞன்) அறிந்து கொள்ளல் வேண்டும்.

[17]உருக்கப்பட்ட பொன் வெள்ளிகளில் [18]வண்ணகம் ஒன்றுக்குக் கால் உழுந்தளவெடை [19]கழிவு கொடுக்க வேண்டும். நன்னிறமுண்டாதற் பொருட்டுக் காலுழுந்தளவெடை இரும்பும் அதன் [20]இருமடங்கு வெள்ளியும் கலக்கப்பட்டிருக்குமாயின் அதற்கு

---

டும் என்பதையும் பொற்கொல்லனுக்கு நீதிபதியும் பொன்வினைஞனுங் கலந்து தண்டம் விதித்தல் வேண்டுமென்பதையும் புலப்படுத்தற் பொருட்டாம்.

[10] காலம் வேறுபடுதலாவது :—சிற்பத் தொழிலாளன் நெடுந் தொலைவிலுள்ள வேற்றிடத்திற் றங்குதல் முதலியவற்றாலும் மரணமடைதலாலும் நேர்வது; தொழிலாளன் இறப்பின் அவன் புதல்வர் முதலியோரிடத்தினின்றும் கொடுத்ததைப் பெற்றுக் கொள்ளலும் அவர்க்குக் கூலி கொடுத்தலும் வேண்டும் என்பதும் கருத்து. காலம் மாறுபடல் நாட்டுக் குழப்பத்தாலும் நேர்வதாம்.

[11] தேய்தல் சிதைதல்கள் தொழின்முற்றிய அணிகலன் முதலியவற்றைப்பற்றியவை. அவை சிற்பத்தொழிலாளன் உபயோகத்தால் தேய்தல் சிதைதலுற்றிருப்பின் தண்டம் இறுக்கவேண்டும் என்பது கருத்து.

[12] அப்படியே—அளவும் மாற்றும் பிறழாதபடி; அணிகலன் முதலியனவாகவின்றிக் கொடுக்கப்பட்டபடி பொன் வெள்ளியாக வென்பது கருத்து.

[13] நிறம்—மாற்று.

[14] உருவம்—அணிகலன் பாண்டம் முதலியன.

[15] இலச்சினை—முத்திரைக் காசு.

[16] கரவு—வஞ்சகம்.

[17] உருக்கப்படுதல்—அணிகலன் பண்டம் ஆக்குதற்கு.

[18] வண்ணகம்—பதினாறு உழுந்தளவெடை கொண்டது.

[19] தேய்தல் சிதைதல் குறித்துக் கழித்துக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[20] இருமடங்கு—அரை உழுந்தளவெடை.

[21]அவ்வளவின் [22]ஆறில் ஒரு கூறு கழிவு கொடுக்கவேண்டும்.

உழுந்தளவெடை பொன்னில் மாற்றுக் குறைவு ஏற்பட்டால் பூர்வ சாகசம் தண்டமாகும். உழுந்தளவு பொன் எடைக் குறைவு ஏற்பட்டால் மத்தியம சாகசம் தண்டமாகும். நிறுத்தலளவை யிலும் தொழின் முற்றிய கலன்களிலும் [23]கரவு ஏற்படின் அதற்கு உத்தம சாகசம் தண்டமாகும்.

பொன்வினைஞனின் [24]அநுமதிபெறுமலோ [25]வேறிடத்திலோ அணிகலன் செய்விப்பவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமும் செய்பவனுக்கு [26]இருமடங்கு தண்டமும் ஆம். [27]இது தூய வரவு நெறியுடையோர்க்கு. (செய்விப்போன்) தூய வரவு நெறியிலனு யின் கரவை ஆராய்ந்தறிதற் பொருட்டு அவனை (நீதிமன்றத்திற் கு)ப் போக்கல் வேண்டும். [28]செய்பவனுக்கும் இருநூறு பணம் தண்டமாகும். [29]அல்லது (அவனுடைய) விரல்கள் ஐந்தனையும் வெட்டிவிடவேண்டும்.

நிறுத்தலளவைக்குரிய [30]கருவிகளை அளவுக் கருவித் தலைவ

---

21 அவ்வளவு—கலக்கப்பட்ட முக்காலுழுந்தளவெடை.

22 ஆறிலொரு கூறு அரைக்கால் உழுந்தளவெடையாகும்.

23 கரவு—ஈண்டு எடைக் குறைவை நிரப்புதற்கு தராசிற் செய்யும் வஞ்சகமும், செய்து முடித்த அணிகலன் முதலியவற்றிற் கலப்புமாம்; இங்குக் கூறியவற்றால் இரண்டுழுந்தளவு மூன்றுழுந்தளவு எடைக்குறை முதலியவற்றிற்கும் இரு மடங்கு மும்மடங்கு தண்டம் விதிக்கத்தக்கதென் பது உய்த்துணரத் தக்கது.

24 அநுமதி பெறுமல் உரிய இடத்திலென்பது.

25 அநுமதி பெற்றும் உரியதல்லாத இடத்தில் என்பது.

26 இரு மடங்கு—இருபத்தினன்கு பணம்.

27 இங்கே கூறிய தண்டங்கள், பொன் வெள்ளிகள் தமக்குக் கிடைத்த வரலாற்றை வஞ்சியாமல் வெளிப்படுத்திக்கூறுஞ் செய்பவனுக்கும் செய் விப்போனுக்கும் ஆம் என்பது கருத்து.

28 தூய வரவுநெறியிலன் என்னும் அடையைச் செய்பவனுக்கும் ஏற்றிக் கொள்க.

29 இருநூறு பணம் தண்டம் இறுக்க இயலாதவனுயின் தொழில் செய் தற்குரிய அவன் விரல்களைக் களைந்துவிட வேண்டும் என்பது கருத்து.

30 உபலக்கணத்தால் முகத்தலளவைக்கருவி முதலியனவும் கொள்ளப் படும்; மூலபாடத்தைத் 'துலாமான பாண்டம்' என்றுகொள்ளின் துலா பாண்டம் மானபாண்டம் எனப் பொருள்பட்டு உபலக்கணத்தால் கொள் ளும் பொருளை நேரே உணர்த்தும்.

னிடத்தினின்றும் விலைகொடுத்துப் பெற்று வழங்கல் வேண்டும். [31]இன்றேல் பன்னிரண்டு பணம் தண்டமாகும்.

சிற்பியின் தொழில்கள் [32]திண்ணிதாக்கல் [33]திண்ணிதிற் றுளையிடல் [34]வலிதாக விணைத்தல் [35]மெலிதாக விணைத்தல் [36]தொகுத்தாக்கல் [37]பூசுதல் என்பனவாம்.

[38]சிற்பத் தொழிலில் கவர்ந்துகோடற்குரிய வழிகள் துலைப் பிறழ்ச்சி கலவை மாற்றம் இணைப்பு மாசூட்டல் என்பனவாம்.

[39]வளைத்தற்கேற்றது [40]துளைக்கப்பட்டது [41]தலைபிளந்தது [42]கழுத்துநெருங்கியது இழிந்ததட்டுடையது [43]பக்கங்கோடியது அசைவுடையது காந்தத்தாலாயது என்னும் இவைகள் [44]பிறழ்ந்த துலைகளாம்.

---

[31] இன்றேல்—அக்கருவிகளை உரியதல்லாத இடத்தில் விலைகொடுத்து வாங்கியாதல் தானே ஆக்கிக்கொண்டாதல் வழங்கினுல்.

[32] திண்ணிது—உட்டுளையில்லாமல் திண்ணிதாகச் செய்யப்படும் கணையாழி முதலியன.

[33] திண்ணிதிற் றுளையிடப்படுவது—உட்டுளையுடன் கூடிய கமண்டலம் முதலியவற்றைக் குறிக்கும்.

[34] வலிதாக இணைத்தல்—வன்மைமிக்க தகட்டுவடிவினவாகச் செய்து பொருத்தல்.

[35] மெலிதாக இணைத்தல்—மெல்லிய தகடுகளாகச்செய்து பொருத்தல்.

[36] தொகுத்தாக்கல்—சிறிய இதழ்களாகச்செய்து அவற்றையெல்லாம் ஒன்றுக வியைத்து மலர்முதலிய வடிவிலமைத்தல்; சிறிய கம்பிகளாகச் செய்து ஒருங்குசேர்த்து ஞாணுக்கலுமாம்.

[37] பூசுதல்—இரசம் முதலியவற்றுல் மூலாம் பூசுதல்.

[38] இங்கே பெயரளவிற் குறிக்கப்படும் துலைப்பிறழ்ச்சி முதலியவற்றின் விளக்கங்களைப் பின்னர்க் காண்க.

[39] மெல்லிய உலோகத்தால் ஆக்கப்பட்டு விரும்பினபடி வளைத்தற் குரியது.

[40] இருப்புத்துகள் அல்லது இரசத்தால் நிரப்பப்பட்ட உட்டுளையுடைய துலை என்பது கருத்து.

[41] நுனிப்பகுதியிற் றுளையுடையது; இது காற்றிற்கு எதிர்முகமாகத் தூக்கப்படின் காற்றினுல் வளைக்கப்படும் என்பது கருத்து; வளைத்தற் கேற்றது முதலிய இம்மூன்றும் துலைத்தன்மைப் பற்றினவாகும்.

[42] துலைக்கயிற்றில் முடிச்சு மிகுதியுடையது.

[43] துலைத்தட்டிற்கும் தண்டிற்கும் இடையிலுள்ள கயிறுகளின் ஏற்றத் தாழ்வால் பக்கங்கோடியதென்பது கருத்து.

[44] வஞ்சித்தற்பொருட்டு ஆக்கப்பட்ட துலைகள் என்பது கருத்து.

[45]இரண்டு கூறு வெள்ளியும் ஒரு கூறு செம்பும் கலந்தது திரிபுடகம் எனப்படும். ஆகரத்திலிருந்து எடுக்கப்படும் பொன்னோடு இது கலக்கப்படின் அது திரிபுடகக் கலவை எனப்படும். செம்பு கலக்கப்படின் செம்புக் கலவை எனப்படும். [46]வேலகம் கலக்கப்படின் வேலகக் கலவை எனப்படும். சமனெடை செம்பொடு கலந்த பொன் கலக்கப்படின் பொற்கலவை எனப்படும்[47].

[48]மூங்கைக்குகை கிட்டம் உலைக்குறடு உலையூதுங் குழல் இடுக்கி உலையாணி வெங்காரம் உப்பு இவை "தூய பொன்" எனக்கூறிக் கலப்பதற்குரிய [49]கருவிகளாம். அல்லது [50]முன்னரே வைக்கப்பட்டுக் குகையுடைந்ததனால் உலையிலிருந்து எடுக்கப்படும் மண்ணுண்டைகளும் கருவிகளாம்.

[51]பின்னர் இணைக்கும் பொழுதும் [52]தகட்டுடுக்குகளை ஆராயும்

---

45 இனிக் கலவைகூறத் தொடங்கிக் கலத்தற்குரிய இழிந்த உலோகங்கள் நான்கு வகைப்படும் என்று கூறுகின்றார்.

46 இரும்பும் வெள்ளியும் சமனெடை கலக்கப்பட்டது வேலகம் எனப்படும்.

47 இங்கே கூறிய நான்கு வகைப் பொருள்களையும் கலப்பது அவ்வளவெடைத் தூய பொன்னைக் கவர்ந்து கொள்ளுதற் பொருட்டென்பது கருத்து.

48 மூங்கைக் குகை—இரு கூறாகச் செய்து வாயிலில்லாமல் புணர்க்கப்படும் குகை.

49 தூய பொன்னைக் குகையில் வைத்துருக்கும் பொழுது கிட்டத்தை எடுத்தல்; வெங்காரம் உப்புக்களைச் சேர்த்தல் என்பவற்றைத் தலைக்கீடாகக் கொண்டு திரிபுடகம் முதலியவற்றைக் கலந்து குறடு முதலிய கருவிகளால் அத்தூய பொன்னைக் கவர்ந்துகொண்டு ஆகரத்தில் நின்றும் எடுக்கப்பட்ட பொன் இத்தகையதே என்று கூறல் பொற்கொல்லர் இயல்பு என்பது கருத்து.

50 முன்னரே உலைத்தீயில் வைக்கப்பட்ட பொன்னிறமான மண்ணுண்டைகளின் அளவு தூய பொன்னைக் கவர்ந்துகொண்டு பின்னர்க் குகை உடைந்த காரணத்தை முன்னிட்டு அங்குள்ள மண்ணுண்டைகளைப் பொன்னுண்டைகளாக உரியவன் முன்னிலையிற் காட்டித் தீயினின்றும் எடுத்துக் கலப்பதென்பது கருத்து.

51 முன்னரே செய்யப்பட்டுப் பின்னர் இணைக்கும் காலத்தும் என்பது.

52 செய்யப்பட்ட தகடுகளை ஒன்றனோடொன்று இணைக்க ஆராயும் காலத்தும் என்பது கருத்து.

பொழுதும் [53]வெள்ளியால் மாற்றுதலும் பொன்தாதுப் பொருளுக்கு ஈடாக இரும்புத் தாதுப் பொருளை வைத்தலும் மாற்றமாகும்.

இறுகியது பெயர்க்கத்தக்கது என இணைப்பு இருவகைப்படும். அது வலிதாக விணைத்தல் மெலிதாக விணைத்தல் தொகுத்தாக்கல் என்பவற்றில் மேற்கொள்ளப்படும். உள்ளே ஈயத் தகட்டையும் புறத்தே பொற்றகட்டையும் வைத்து இடையே அரக்கு முதலியவற்றால் நெருக்கி இணைத்தல் இறுகிய இணைப்பாகும். (இடையில் அரக்கு முதலியன இன்றி) இவ்விரண்டு தகடுகளையும் பொருத்தும் அவ்விணைப்பே பெயர்க்கத்தக்கதாகும். [54]மெலிதாக இணைத்தலில் பொற்றகட்டை ஒரு பக்கத்திலாதல் இரண்டு பக்கத்திலுமாதல் [55]இயைத்து அப் பொற்றகட்டின் உட்பகுதியில் செம்பு அல்லது வெள்ளி சேர்க்கப்படும்.

தொகுத்தாக்கலில் செம்பினாலாகிய உறுப்புக்களை ஒருபால் பொற்றகடுகளால் மறைத்து மெருகிடல் வேண்டும். அச் செம்புறுப்புக்களையே இரு புறமும் பொற்றகடுகளால் மறைத்து மெருகிடலும் கூடும். [56]மறைத்தற்குரிய மேற்றகடுகள் செம்பு வெள்ளிகளாலும் அமையலாம்.

[57]அவ்விரண்டனையும் உருக்குதல் உரைத்தல் ஒலியுண்டாக்கல்

---

[53] வெள்ளியால் மாற்றுதல்—வெள்ளித்தகட்டை உள்ளே செருகி அத்துணை எடையுள்ள பொற்றகட்டைக் கவர்ந்துகொள்ளுதல்.

[54] மெலிதாக இணைத்தல் தொகுத்தாக்கல் என்னும் இவ்விரண்டிலும் மேற்கொள்ளப்படும் இணைப்புப் பின்னர்க் கூறப்படுகின்றமையால் இங்கே கூறிய இறுகியது பெயர்க்கத்தக்கது என்னும் இவ்விரண்டும் வலிதாக விணைத்தலின்பாற்படும் என்பது போதரும்.

[55] வலிதாக இணைத்தலில் உயர்ந்த உலோகமும் இழிந்த உலோகமும் ஒத்த எடையுள்ளனவாகவும்; மெலிதாக இணைத்தலில் உயர்ந்த உலோகம் எடைக்குறைவாகவும் இழிந்த உலோகம் எடை மிகுதியாகவும் இருக்குமென்பது.

[56] மறைத்தற்குரிய மேற்றகடுகள் செம்பு வெள்ளிகளாலும் அமையலாமென்னும் இதனால் மறைக்கப்படும் உறுப்பு அவற்றினுமிழிந்த இரும்பு முதலியவற்றால் அமைக்கப்படும் என்பது கருத்து.

[57] அவ்விரண்டனையும்—இறுகியது பெயர்க்கத்தக்கதாகிய இருவகையிணைப்பினையும்.

வெட்டுதல் கீறுதல் என்னுமிச் செயல்களால் ஆராய்ந்து அறியலாம். பெயர்க்கத்தக்க இணைப்புடையதை இலந்தைப் பழச்சாற்றிலாவது, உப்பு நீரிலாவது [58]இட்டு ஆராய்தல் வேண்டும். இத்துணையும் இணைப்பைப் பற்றியனவாம்.

துளையிட்ட திண்ணிய வடிவில் [59]பொன்மண் பொன்மாலுகை சாதிலிங்கம் என்னுமிவற்றின் கலவைக் கசட்டை [60]உருக்கிவிட்டுத் தங்கச் செய்யலாம். திண்ணிய [61]கற்குழியில் மணல் கலந்த அரக்கையும் சிந்தூரத்தையும் உருக்கி, அக்குழம்பை விட்டுத் தங்கச் செய்யலாம். [62]அவ்விரண்டனையும் உருக்குதலாலும் அடித்தலாலும் ஆராய்ந்தறியலாம். [63]சிறிய மணிக்கட்டமைப்பில் மெல்லிய பரற்கற்களுடன் உப்பைத் தழலால் உருக்கித் தங்கச் செய்யலாம்; அதனைக் கொதிக்கவைத்து ஆராயலாம். [64]இருமடங்கு ஆழ்ந்த கற்குழியில் [65]அப்பிரகத்தை அரக்கு முதலியவற்றால் பதித்து வைக்கலாம். அவ் வப்பிரகம் பொதிந்த பொற்கலன் நீரிலிடப்படின் அதன் [66]ஒரு பகுதி நீரிற்றாழும். [67]வேறு தகடுகள் வைக்கப்பட்டிருப்பின் ஊசியாற் குத்தி ஆராய்தல் வேண்டும். உட்டுளையுடைய திண்ணிய பொருள்களில் மணிகளும் பொன்னும்

---

[58] இடுதலால் உண்டாகும் நிறவேற்றுமையைக்கொண்டு ஆராய்ந்து தெளிதல் வேண்டும் என்பது கருத்து.

[59] பொன்மண் பொன்மாலுகை இவ்விரண்டும் ஆகரத்தினின்றும் எடுக்கப்படும் உலோகத்துடன் கலந்த தாதுப்பொருள்.

[60] மாசுதங்கிய அளவெடை தூயபொன்னைக் கவர்ந்துகொள்ளலாம் என்பது கருத்து; இங்ஙனமே பின் வருவனவற்றிற்கும் கொள்க.

[61] கற்குழி—இரத்தினங்கள் பதித்தற்கு அணிகலன்களில் அமைக்கப் படும் குழி.

[62] அவ்விரண்டனையும் — மேற்கூறிய மாசுகலந்த இரண்டு பொருள்களையும்.

[63] சிறிய மணிக்கட்டு — முத்துவடிவிற் பொன்னால் அமைக்கப்படும் மணிக்கோவை.

[64] இருமடங்கு—பதிக்கப்படும் இரத்தினத்தின் அளவில் மூன்றில் இரு மடங்கு என்பது கருத்து.

[65] அப்பிரகம்—நிலத்திலிருந்தெடுக்கப்படும் ஒருவகைத் தாதுப்பொருள்.

[66] அப்பிரகம் இல்லாத கூறு திண்ணிதாக இருத்தலின் நீரிற்றாழும் என்பதும் அதனையுடைய கூறு நொய்மையாக இருத்தலின் நீரிற்றாழாதென்பதும் கருத்து.

[67] வேறுதகடுகள்—செம்பு முதலியவற்றால் ஆயவை,

வெள்ளியும் [68]மாசாகும்; உருக்குதலாலும் அடித்தலாலும் ஆராய்ந் தறியலாம். இத்துணையும் மாசூட்டலாம்.

[69]ஆதலின் வயிரம் மாணிக்கம் முத்து பவழம் என்னுமிவற் றின் பிறப்பு உருவம் நிறம் அளவு அணிகலன் அடையாளம் இவற்றை நன்கறிந்து கொள்ளல் வேண்டும்.

[70]செய்யப்பட்ட கலன்களை ஆராயுங்காலும் பழைய கலன் களைச் செப்பனிடுங்காலும் [71]தட்டுதல் பிரித்தெடுத்தல் கீறுதல் தேய்த்தல் என்னும் இந்நான்கும் கவர்ந்துகோடற்குரிய உபாயங் களாம்.

இணைப்பைத் தலைக்கீடாகக் கொண்டு சிறிய மணிகளையாதல் சிறு கம்பிகளையாதல் பெரிய துண்டுகளையாதல் வீழ்த்துதல் [72]தட்டுதலாகும். [73]இருமடங்கு ஆழ்ந்த கற்குழிகளில் ஈயத்தை யிட்டு உள்ளிருக்கும் பொன்னைப் பிரித்துக் கவர்ந்துகொள்ளுதல் பிரித்தெடுத்தலாகும். திண்ணிய கலன்களிற் கூர்மையான கருவி களால் [74]கீறிக் கவர்தல் கீறுதலாகும். அரிதாரம் மனோசிலை சாதி லிங்கம் என்னும் இவற்றுள் ஒன்றன் பொடியை யாதல் [75]குருவிந் தத் துகளையாதல் ஆடையில் முடிந்து (பொற்கலனில்) நன்றாக [76]உரைத்தல் தேய்த்தலாகும். அதனால் பொன் வெள்ளிகளாலாகிய

---

[68] உயர்ந்த மணிகளைக் கவர்தற்கு இழிந்தமணிகளும் உயர்ந்த பொன் னைக் கவர்தற்கு இழிந்தபொன்னும் வெள்ளியும் மாசாகும் என்பது கருத்து.

[69] ஆதலின்—கவர்தற்குரிய வழிகள் இங்ஙனம் பல இருத்தலின்.

[70] பிறிதோரிடத்தில் செய்யப்பட்ட கலங்கள் என்பது.

[71] தட்டுதல் ஓசையைக்கொண்டு ஆராய்தற்பொருட்டு. இங்ஙனமே சமைக்கப்பட்ட கலன்களைப்பிரித்துப் பார்த்தலும் கீறிப்பார்த்தலும் தேய்த் தலும் ஆராய்ச்சிப் பொருட்டாம். இவற்றைத் தலைக்கீடாகக்கொண்டு சிறந்த பகுதியைக் கவர்ந்துகோடல் கூடும் என்பது கருத்து.

[72] தட்டுதலால் இங்ஙனம் வீழ்த்திக் கவர்ந்துகோடலுண்டென்பது கருத்து.

[73] இதன் விளக்கம் மேலே கூறப்பட்டது.

[74] கீறிக்கவர்தல்—கீறுதலால் வெளிப்படும் பொன்னைக் கவர்தல்.

[75] குருவிந்தம்— இது பதுமராகமணியையும் கண்ணாடியையும் ஒரு வகைக் கல்லையும் உணர்த்தும்.

[76] உரைத்தலால் கலங்கள் தேய்ந்து துகள்வடிவில் ஆடையிற் பற்றிக் கொள்ளும் என்பதும், அதன்மூலம் பொன்னைக் கவர்ந்துகொள்ளக்கூடும் என்பதும் கருத்து.

கலன்களின் எடை குறைவுபடும். அக்கலன்களுக்குச் சிறிதும் [77]உறுப்புக் குறையேற்படாது.

வலிதாக இணைத்த கலன்களுள் தட்டுதல் பிரித்தெடுத்தல் கீறுதல் தேய்த்தலாலுண்டாகும் கரவை [78]ஒத்த கலன்களைக் கொண்டு அநுமித்தறிதல் வேண்டும். மெலிதாக இணைத்த கலன்களில் எத்துணை பெயர்த்தெடுக்கப்பட்டதோ அத்துணை (பிறிதோரிடத்தில்) பெயர்த்தெடுத்து ஆராய்ந்து காண்டல் வேண்டும். [79]கலப்பினால் விகாரமடைந்த கலன்களையும் இங்ஙனமே ஆராய்தல் வேண்டும். பலமுறை புடமிடுதலும் அதனை நீரிற் றேய்த்தடித்தலும் தூய்தாக்குதற்குரிய உபாயமாகும்.[80]

[81]விரைவிற் சேர்த்தல் [82]நிறைகல்மாற்றம் [83]நெருப்பு [84]கண்டிகை [85]அச்சு இருப்புப்பாண்டம் மயிற்றேகை [86]நூல் ஆடை

---

[77] கலங்களின் உறுப்புக்கள் ஒருசிறிதும் குறைவுபடாத நிலையில் கவர்ந்துகொள்ளுதற்கு வழி இது.

[78] ஒத்த கலன்கள்—தட்டுதல் முதலியவற்றால் கவர்ந்துகொள்ளப்படாமல் எடையிலும் நிறத்திலும் ஒத்தனவாகிய கலன்கள்; அக்கலன்களைக் கொண்டு குறைந்த பகுதிகளை யாராய்ந்து காணல்வேண்டும் என்பது கருத்து.

[79] இழிந்த உலோகக்கலப்பினால் நிறவேற்றுமை யடைந்திருக்கும் கலங்களில் ஓரளவெடை எடுத்துத் தூய்தாக்கிக் குறைவு இவ்வளவெனக் கண்டு அக்கலன் முழுதிற்கும் கணக்கிட்டு அறிந்துகொள்ளவேண்டும் என்பது கருத்து.

[80] கவரப்பட்ட பகுதி இத்துணையென்று துணிவதால் போதரும் பயன் நிறவேற்றுமை எடைக்குறைவு கண்டு தக ஒறுத்தலாம். தண்டிக்கும் முறையை இவ்வத்தியாயத்தின் தொடக்கத்திற் காண்க.

[81] கையின் விரைவினால் நற்பொருளைக் கவர்ந்துகொண்டு போலிப் பொருளைச் சேர்த்தல்.

[82] நிறைகல்மாற்றம்—உண்மைப் படிக்கல்லை மாற்றிப் போலிக்கல்லை உபயோகித்தல்.

[83] நெருப்பு—உருக்குதற்குரிய நெருப்பிற் கவர்ந்துகோடல்.

[84] கண்டிகை—பதித்தற்குரிய இரத்தினங்களுக்கு ஆதாரமாகவுள்ள மரக்கட்டை.

[85] அச்சு—உருக்கிய பொன் முதலியவற்றை வார்த்தற்குரிய இடம்.

[86] நூல்—துலைநூல்.

[87]கலங்கச் செய்தல் [88]தலை [89]மடித்தலம் [90]ஈ [91]தன்னுடலை நோக்குதல் [92]துருத்தி [93]நீர்ச்சட்டி [94]தீயிலிருக்கும் பொருள் என்னும் இவ்வெல்லாம் கவர்ந்துகோடற்குரிய கருவிகளாம்.

[95]வெள்ளிக் கலன்களுக்குத் [96]தீநாற்றம் அழுக்குடைமை சொரசொரப்பு [97]திண்மை [98]நிறவேற்றுமை என்னுமிவை [99]குற்றங்களாம்.

---

[87] கலங்கச்செய்தல் — பேச்சைத் தலைக்கீடாகக்கொண்டு காண்பார் மனத்தைக் கலக்கமுறச் செய்தல்.

[88] தலை-தலையைச் சொறிந்துகொள்ளும்மூலம் பொருளைக்கொள்ளுதல்.

[89] மடித்தலம்—இஃது உபலக்கணத்தால் மறைவான இடத்தையும் உணர்த்தும்.

[90] ஈ—உடம்பிலுள்ள ஈயை ஓட்டுதல். இதனைத் தலைக்கீடாகக்கொண்டு பசைப்பொருள் பூசிய தன்னுடம்பில் பொன் முதலியவற்றை ஒட்டிக் கொள்ளுதல்.

[91] தன்னுடலை நோக்குதல்—வேர்வை முதலியவற்றைத் துடைக்கும் முகமாகக் கவர்தல்.

[92] துருத்தி—துருத்திமூக்காற் கவர்தல்.

[93] நீர்ச்சட்டி—நெருப்பிற் காய்ச்சிய பொன்னைத் தோய்த்தற்குரிய நீர்ப்பாண்டம்.

[94] கலத்தற்பொருட்டு முன்னரே நெருப்பில் வைக்கப்பட்ட இழிந்த உலோகப்பொருள்.

[95] ஈண்டு வெள்ளிக்கலன் என்றமையால் இதற்குமுன் கூறப்பட்டவை எல்லாம் பொற்கலன்களைப்பற்றியன வென்பது புலனும்.

[96] தீ நாற்றம்—ஈயம் முதலியவற்றின் கலப்பிலுண்டாவது.

[97] வெள்ளிக்குரிய எடையளவின் மிக்கது.

[98] நிறவேற்றுமை, இழிந்த பொருட்கலவையால் உண்டாயது.

[99] இக்குற்றங்களை ஆராய்தற்குரிய உபாயங்களை முன்னை அத்தியாயத்திற் காண்க,

### சுலோகம்

புதியதும் பழையதும் [100]உருமாறியதுமாகிய கலன்களை இங்ஙனம் ஆராய்தல் வேண்டும். இக் குற்றங்களுக்கு [101]முற்கூறியபடி தண்டமும் அவசியம் விதித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் பதினான்காம் பிரகரணம்
"அங்காடித்தெருவிற் பொன்வினைஞன்செயல்" என்னும்
முப்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[100] உருமாற்றம்—இழிந்த உலோகக் கலப்பாலாவது.

[101] இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் ஈண்டு எடுத்துக்காட்டாகவுள்ள பாருகற்பத்திய சுலோகங்களின் பொருள்கள் நினைவுகூரத்தக்கன. அச்சுலோகப் பொருள்கள் வருமாறு :—

(1) வாணிகரும் சிற்பிகளும் திருடர்களல்லராயினும் திருட்டுத்தொழில் உடையவராவர் ஆதலின் செல்வத்தை விரும்பும் மக்கள் அன்னாரை நம்பலாகாது.

(2) பிறர்பொருளை வெளிப்படையிற் கவர்ந்துகொள்ளும் கள்வராகிய வணிகரையும் சிற்பிகளையும் அரசன் ஒறுத்தடக்கவேண்டும்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பதினைந்தாம் பிரகாணம்—[1]உணவுப்பொருள்நிலையத் தலைவன்

## முப்பத்தாறும் அத்தியாயம்

உணவுப்பொருள்நிலையத் தலைவன் [2]உழவு நாடு விலைப் பொருள் பண்டமாற்று விலையில்பொருள் கடன் தொழிலிறை வேறுயது செலவெச்சம் அணுக்கம் என்னுமிவற்றை அறிந்திருத் தல் வேண்டும்.

[3]உழவுத்தொழிற் றலைவனாற் கொண்டுவரப்பட்ட கூலவகை கள் உழவு எனப்படும்.

[4]இறைத்தொகுதி [5]ஆறிலொருகூறு [6]படையுணவு [7]வழி

---

### 36-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உணவுப்பொருள்—நெல் முதலிய தானியங்களும் எண்ணெய் உப்பு முதலியனவுமாம்; தலைவன் என்பது ஈண்டு அவன் தொழிலையுணர்த்தும். கருவூல வளர்ச்சிக்குரிய பொன் வெள்ளி முதலியவற்றை ஆகரங்களி னின்றும் எடுத்தல் பாதுகாத்தல் முதலிய காரியங்களை முன்னை அத்தியாயங் களிற் கூறினர்; இனி உயிர்வாழ்க்கைக்குரிய உணவுப்பொருள்களைத் தொகுத்தல் காத்தல் முதலிய செயல்களைக் கூறத்தொடங்கி முதலிற் கூலம் எண்ணெய் முதலியவற்றைப்பற்றி இவ்வத்தியாயத்திற் கூறுகின்றார்; ஆதலின் முன்னையத்தியாயத்தோடு இதற்குள்ள இயைபு புலனாதலறிக.

[2] இங்கே உணவுப்பொருள்நிலையத் தலைவன் அறிந்துகொள்ளவேண்டிய உழவு நாடு முதலிய பத்து வருவாய் நிலைகளும் பெயரளவில் குறிப்பிடப் படுகின்றன; இவற்றின் விளக்கங்களை முறையே பின்னர்க் காண்க.

[3] உழவுத்தொழிற் றலைவன் செயல்களைப் பின்வரும் நாற்பத்தைந்தாம் அத்தியாயத்திற் காண்க.

[4] இறைத்தொகுதி—இன்ன கிராமத்திற்கு இவ்வளவென்று தொகுதி யாக வரையறுக்கப்பட்ட இறைப் பொருள்.

[5] ஆறிலொரு கூறு—நெல் முதலிய விளைபொருள்களினின்றும் அரச னுக்குக் கிடைக்கவேண்டிய ஆறில் ஒரு பாகம்; தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்னும் ஐம்புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலால், அரசனுக்கு இறைப் பொருள் ஆறிலொன்றாயிற்று என்பர் பரிமேலழகர்.

[6] படையுணவு—படை போர்குறித்துச் செல்லுங்கால் அப்படைகளின் உணவு நிமித்தம் அரசற்குக் குடிமக்களால் கொடுக்கப்படும் அரிசி எண் ணெய் முதலியன.

[7] வழிபாட்டுப் பொருள்—அரசற்குக் குடிமக்கள் விருந்து முதலியவற் றின் மூலம் கொடுக்கும் பொருள்.

பாட்டுப்பொருள் [8]அரசிறை [9]உவகைக்கொடை [10]நெறியிலி [11]அழிவினீடு [12]கையுறை [13]அறநிலைப்பொருள் என்னும் இவை நாடு எனப்படும்.

[14]தானியவிலை விலையிற்கொள்ளும் கூலம் [15]வட்டிக்கு ஈடாகக் கொள்ளும் பொருள் என்னுமிவை விலைப்பொருளாகும். பல்வகைக் கூலப்பொருள்களை [16]விலைக்கேற்ப மாற்றிக்கொள்வது பண்டமாற்றாகும்.

பிறரிடமிருந்து [17]இரந்துபெறுங் கூலம் விலையில்பொருளாகும்.

[18]திருப்பிக்கொடுப்பதாகப் பிறரிடமிருந்து பெறும் கூலம் முதலியன கடனாகும்.

[19]குற்றல் [20]உடைத்தல் மாவாக்கல் கள் முதலியன வடித்தல்

---

[8] அரசிறை—பழமரம் முதலியவை சம்பந்தமாக அரசர்க்குக் கொடுக்கப்படும் இறைப் பொருள்.

[9] உவகைக்கொடை—அரசற்குப் புதல்வர்ப்பேறு முதலியன குறித்துக் குடிமக்களால் மகிழ்ச்சி கூர்ந்தளிப்பது.

[10] நெறியிலி—வரையறை கடந்து மிகுதியாகப் பெறும் இறைப் பொருள்.

[11] அழிவினீடு—எருது முதலிய விலங்குகளால் அழிக்கப்பட்ட நெற்பயிர் முதலியவற்றிற்கு ஈடாகக் கொள்ளும் பொருள்.

[12] கையுறை—காணிக்கைப் பொருள்.

[13] அறநிலைப் பொருள்—அரசனுக்குரிய தடாகம் பூஞ்சோலை முதலியவற்றினின்றும் உண்டாகும் பொருள்.

[14] தானிய விலை—கூல விற்பனையிற் கிடைக்கும் பொருள்.

[15] கடனாகக் கொடுத்த பொருளின் வட்டிக்கீடாகக் கொள்ளும் கூலம் முதலியன.

[16] ஒரு மரக்கால் நெல் கொடுத்து அதன் விலைக்கேற்ப நான்கு மரக்கால் வரகு பெறுதல் போல்வது என்பது கருத்து.

[17] திருப்பிக் கொடாத நிலையில் பெறுவது என்பது கருத்து.

[18] திருப்பிக் கொடுக்குங்கால் வட்டியுடன் கொடுத்தல் வேண்டுமென்பது கருத்து.

[19] குற்றல்—நெல் முதலியன குற்றுதல்.

[20] உடைத்தல்—உழுந்து பயறு முதலியவற்றை உடைத்தெடுத்தல்.

[21]பிசைதல் என்னும் இத் தொழிலாளரிடத்தினின்றும் எண்ணெ யாட்டல் [22]ஆட்டுமயிர்க் கம்பலம் நெய்தல் கருப்பஞ்சாற்றினின் றும் வெல்லங் காய்ச்சல் என்னும் இத்தொழிலாளரிடத்தினின்றும் இறையாகப் பெறும் பொருள் தொழிலிறையாகும். இழந்ததை நினைத்தல் [23]முதலியவை வேருயதாகும்.

[24]இயங்குபடைச்செலவெச்சம் மருத்துவச்செலவெச்சம் உள் வினைச்செலவெச்சம் என்னும் இவை செலவெச்சமாகும். [25]நிறுத்த லளவை முகத்தலளவைகளின் வேற்றுமை [26]கை நிரப்பல் [27]தூற் றுதல் [28]வாசி [29]கடந்தது [30]திறலாக்கம் என்னும் இவைஅணுக்க மாகும்.

கூலம் [31]நேயம் அக்காரம் உப்பு என்னுமிவற்றுள் கூலத்தைப் பற்றி "உழவுத்தொழிற்றலைவன்" என்னும் (45) அத்தியாயத்திற் கூறப்படும். நெய் எண்ணெய் கொழுப்பு [32]மச்சை என்னும் இவை நேயப் பொருளாம்.

---

21 பிசைதல்—சிற்றுண்டியின் பொருட்டு நீர் முதலியன சேர்த்து மாவைப் பிசைதல்.

22 இதன் மூலத்திற்கு...'' வேள்வியினிமித்தம் ஆட்டைக் கொலை செய் யுந் தொழிலெனவும் பொருள் கொள்வர்.

23 முதலிய என்றதனுல் இருபத்தேழாம் அத்தியாயத்தில் வேருயதன் விரியாகக்கூறிய வினைஞர்தண்டம் முதலியவற்றையும் கொள்ளல்வேண்டும்.

24 இயங்குபடைச் செலவெச்சம் முதலியவற்றின் விளக்கங்களை இருபத் தேழாம் அத்தியாயக் குறிப்பிற் காண்க.

25 அளவுகருவிகளால் மிகையாகக்கொண்டு குறைவாகக்கொடுத்து எஞ் சியது.

26 நெல் முதலியவற்றைக் கருவிகளைக்கொண் டளக்குங்கால் விரலாற் கட்டி மிகையாக அளத்தல்.

27 தூற்றுதல்—சிதறுதல்; எண்ணலளவைப்பொருள் முகத்தலளவைப் பொருள் முதலியவற்றை அளக்குங்கால் சிதறவிட்டுப் பின் அவற்றைக் கொள்ளுதல்.

28–29 "வாசி, கடந்தது" இவற்றிற்கு 27ஆம் அத்தியாயக்குறிப்பைப் பார்க்க.

30 திறலாக்கம்—தன் திறமையால் ஈட்டிக்கொள்ளப்பட்டது.

31 நேயம்—நெய்ப்புப்பொருள்.

32 மச்சை—எழுவகைத் தாதுக்களுள் ஒன்று; எலும்பினுள் இருப்பது.

[33]இளம்பாகு இறுகியபாகு வெல்லக்கட்டி கண்ட சருக்கரை என்னுமிவை அக்காரமாகும்.

[34]சயிந்தவம் [35]சாமுத்திரம் வெடியுப்பு [36]யவக்காரம் [37]சௌவர்ச்சலம் [38]மண்ணுப்பு என்னுமிவை உப்பின் வகைகளாம்.

தேனும் முந்திரிப்பழச்சாறும் மதுவெனப்படும்.

ஆடுதின்னுப்பாளை திப்பிலி என்னும் இவற்றின் சாற்றைக் கொதிக்கவைத்து அதனோடு கருப்பஞ்சாறு வெல்லம் தேன் பாகு நாவற்பழச்சாறு பலாப்பழச்சாறு என்னும் இவற்றுள் ஒன்றைக் கலந்து ஒரு திங்கள் ஆறு திங்கள் அல்லது ஓர் யாண்டுவரை [39]வைத்துப் பின் அதனோடு [40]சிற்பிடம் வெள்ளரிப் பழம் கரும்பு மாம்பழம் நெல்லிக்கனி என்னுமிவற்றின் சாற்றிற் [41]கலந்தேனும் கலவாமலேனும் அமைக்கப்படுவன சாராய வகைகளாம்.

புளி பெருங்களா மா மாதுளை நெல்லி கொம்மட்டி மாதுளை சிற்றிலந்தை பேரிலந்தை [42]இனிப்பிலந்தை இனிப்புப்புளி [43]முதலிய இவற்றின் பழச் சாறுகள் [44]புளிப்புச் சுவைச் சாறுகளாகும்.

---

[33] இளம்பாகு முதலியன காய்ச்சப்பெற்ற கருப்பஞ்சாற்றினலாவன.

[34] சயிந்தவம்—சிந்துநாட்டில் விளைவது.

[35] சாமுத்திரம்—கடலுப்பு.

[36] யவக்காரம்—யவமென்னும் தானியத்திலிருந்துண்டாவது.

[37] சௌவர்ச்சலம்—சுவர்ச்சலநாட்டிலுண்டாவது.

[38] மண்ணுப்பு—களர்நிலத்திலிருந்து எடுக்கப்படுவது.

[39] ஓர் ஆண்டுவரை வைக்கப்படுவது தலையாயது என்பதும் ஆறு திங்கள் வரை வைக்கப்படுவது இடையாயது என்பதும் ஒருதிங்கள் வரை வைக்கப்படுவது கடையாயது என்பதும் கருத்து.

[40] சிற்பிடம்—ஒருவகைக் கொடிப்பழம்.

[41] சிற்பிடம் முதலிய பழங்களுள் ஒவ்வொன்றின் சாற்றையாதல் எல்லாவற்றின் சாற்றையுமாதல் கலக்கலாம் என்பது கருத்து.

[42] இனிப்பிலந்தையைச் சௌவீரகம் என்று கூறுவர்; சுவீரகநாட்டிலுண்டாவதென்பது இதன் பொருள்.

[43] முதலிய என்றதனல் நாவற்கனி முதலியவற்றின் சாறுகளையும் கொள்ளல்வேண்டும்.

[44] தித்திப்பும் புளிப்பும் கலந்த சாறென்பது கருத்து.

தயிர் காடி [45]முதலியன புளிப்புநீர் வகைகளாகும்.

திப்பிலி மிளகு இஞ்சி சீரகம் நிலவேம்பு வெண்கடுகு மல்லி என்னும் இவையும் [46]சோரகம் தமனகம் மருக்காரை முருங்கை என்னும் இவற்றின் பட்டை [47]முதலியவைகளும் காரப் பொருள் வகைகளாம்.

[48]மீனுணங்கல் [49]உலர்ந்த இறைச்சி கிழங்கு வேர் பழம் கீரை முதலியன சாகவருக்கங்களாம்.

முற்கூறிய நேயப்பொருள் முதலிய வருவாயிற் பாதியை நாட்டுமக்களுக்கு [50]உற்றுழி உதவுதற்பொருட்டு இருப்பில் வைத்து எஞ்சிய பாதியைப் [51]பயன்படுத்திக்கொள்ளலாம். புதிய பொருள்களை இருப்பாக வைத்து அவற்றிற்கு ஈடாகப் பழைய பொருள்களைப் பயன்படுத்திக்கொள்ளல் வேண்டும்.

[52]உடைத்தல் அரைத்தல் இடித்தல் வறுத்தல் நனைத்தல் உலர்த்தல் [53]பண்படுத்தல் என்னுமித் தொழில்களால் கூலங்களுக்கு ஏற்படும் அளவின் ஏற்றத்தாழ்வுகள் இவ்வளவென்று உணவுப் பொருள்நிலையத் தலைவன் நேரிலாராய்ந்து [54]தெளிந்துகொள்ளல் வேண்டும்.

வரகு நெல் இவற்றிற்கு [55]உள்ளீடு தத்தமளவிற் பாதியாகும்

---

45 முதலியன என்றதால் மோர் முதலியவற்றையும் கொள்ளல் வேண்டும்.

46 சோரகம் தமனகம் என்னும் இவ்விரண்டும் மரவகைகள்.

47 முதலிய என்றதனால் சுக்கு, கடுகு முதலியவற்றையும் கொள்ளல் வேண்டும்.

48 மீனுணங்கல்—கருவாடு.

49 உலர்ந்த இறைச்சி—உப்புக்கண்டம்.

50 உற்றுழியுதவுதல்—வற்கடம் நேர்ந்தபோது உதவிசெய்தல்.

51 பயன்படுத்தல்—அரண்மனை மடைப்பள்ளி முதலியவற்றிற்காம்.

52 உடைத்தல்-உழுந்து பயறு முதலிய கூலங்களை ஒருமுறை குற்றுதல்.

53 பண்படுத்தல்—புடைத்து ஆய்ந்தமைத்தல்.

54 தெளிந்துகோடல் — அத்தொழில் செய்வோர், தன்னை ஏமாற்றுு திருத்தற்பொருட்டு.

55 உள்ளீடு—உமி அல்லது மேந்தோல் போக்கப்பட்ட அரிசி பருப்பு முதலியவை,

[56]சாலிநெல்லுக்கு உள்ளீடு [57]எட்டிலொருகூறு குறைந்த பாதியாகும். பாசிப்பயற்றுக்கு உள்ளீடு [58]தன்னளவில் மூன்றிலொருகூறு குறைவாகும். [59]பிரியங்குவிற்கு உள்ளீடு தன்னளவில் ஒன்பதில் ஒருகூறு மிக்க பாதியாகும். சாமைக்கு உள்ளீடு [60]ஒத்த அளவாகும். உடைக்கப்பட்ட யவநெல்லுக்கும் கோதுமைக்கும் உள்ளீடு [61]ஒத்த அளவாகும்.

[62]அரைக்கப்பட்ட எள் யவநெல் பயறு உழுந்து இவை [63]ஒத்த அளவாகும். [64]கோதுமையும் வறுத்திடித்த [65]மாவுகளும் தம்மளவின் ஐந்திலொருகூறு மிகும். [66]கலாயத்தின் நுண்ணிய மா அதனளவிற் காற்கூறு குறைந்ததாகும். [67]பயறு உழுந்துகளுக்கு அரைக்காற்கூறு குறைவாகும். [68]மேந்தோலுடைய தானியங்களுக்கு உள்ளீடு தம்மளவிற் பாதியாகும். கடலைக்கு உள்ளீடு மூன்றிலொருகூறு குறைவாகும்.

[69]அவிக்காமலிடித்த மாவும் [70]காராமணிப்பயறும் தம்மள

---

[56] சாலிநெல்—ஆறுதிங்கள் நீரினின்று விளையும் சம்பாநெல் வகைகள்.

[57] நெல்லினளவில் எட்டிலொருகூறு குறைந்த பாதியாவது எட்டில் மூன்று கூறும்; உள்ளீட்டின் அளவில் எட்டிலொரு கூறென்று கொண்டு அரையளவாகிய எண்கூற்றில் ஒருகூறு குறைந்த ஏழுகூறு என்பதுமாம்.

[58] மூன்று தூணி காட்டுப்பயற்றுக்கு இரண்டு தூணி உள்ளீடு உண்டென்பதாம்.

[59] பிரியங்கு—ஒருவகைக்கூலம்.

[60] ஒத்த அளவு—பிரியங்குவின் உள்ளீட்டை ஒத்த அளவு; குற்றப்படுதற்கு முன்னுள்ள கூலத்தின் அளவே உள்ளீட்டினளவு என்பதுமாம்.

[61] ஒத்த அளவு—உடைப்பதற்கு முன்னுள்ள அளவை ஒத்த அளவு.

[62] அரைத்தல்—திரிகையிற் பொடியாக்கல்.

[63] ஒத்த அளவு—அரைக்கப்படுதற்கு முன்னிருந்த அளவோடு ஒத்த அளவு.

[64] அரைக்கப்பட்ட கோதுமை என்பது கருத்து.

[65] மா—யவதானியத்தின் மா.

[66] கலாயம்—ஒருவகைக்கடலை.

[67] பயறு உழுந்துகளின் நுண்ணிய மா என்பது கருத்து.

[68] மேந்தோலுடையன—மேலே கூறப்படாத கொள்ளு முதலியன.

[69] அவிக்காமலிடித்த மா—கோதுமைமா முதலியன.

[70] காராமணிப்பயறு இடிக்கப்படின் என்பது கருத்து.

வில் அரைக்கூறு மிகும். [71]யவ அரிசி இருமடங்காகும். [72]புழுங்க லரிசியும் [73]பண்படுத்தப்பட்ட மாவும் இருமடங்காகும்.

வரகு காட்டுப் பயறு சாமை பிரியங்கு இவைகளின் [74]உள்ளீடு சமைக்கப்படின் மும்மடங்கும் நெல்லின் அரிசி நான்கு மடங்கும் சாலிநெல்லரிசி ஐந்துமடங்கும் அன்னம் ஆகும். [75]புது நெல் லரிசியும் நன்கு முற்றுத நெல்லரிசியும் இரு மடங்கு அன்னமாகும். முளைநெல்லரிசி [76]ஒன்றரை மடங்காகும்.

[77]வறுக்கப்பட்டவை ஐந்தில் ஒரு கூறு மிகும். கலாயமும் நெல்லும் யவநெல்லும் [78]இருமடங்காகும்.

காயாவிதையில் ஆறில் ஒரு கூறு நேயப் பொருள் இருக்கும். வேம்பு நாணல் மா விளா [79]முதலியவற்றில் ஐந்தில் ஒரு கூறு கிடைக்கும். எள் குசும்பை இருப்பை மணிப்புன்கு [80]முதலிய வற்றில் நான்கிலொரு கூறு கிடைக்கும்.

ஐந்து பல எடையுள்ள பருத்தியிலும் [81]மரப் பட்டையிலும் ஒரு பல எடையுள்ள நூல் கிடைக்கும்.

---

71 யவ அரிசி இடிக்கப்படின் என்பது கருத்து.

72 புழுங்கலரிசி நனைத்து இடிக்கப்படின் தன்னளவில் இருமடங்காகும் என்பது கருத்து.

73 பண்படுத்தப்பட்டமா என்பது ஈண்டுக் கோதுமை முதலியவற்றைக் குறிக்கும்; அதுவும் அரிசியளவின் இருமடங்காகும் என்பது கருத்து.

74 உள்ளீடு—அரிசி பருப்பு முதலியன.

75 "திமிதம்" என்னும் மூலத்திற்கு ஈரமாக்கப்பட்டது என்பது பொருள் ஆதலின் "திமிதம் அபராந்நம்" என்பதற்கு ஊறவைக்கப்பட்ட துவரை கடலை எனவும் பொருள் கொள்வர்.

76 ஈண்டு முன் வாக்கியத்தோடிணைத்து இரண்டரை மடங்கு எனப் பொருள் கோடலுமாம்.

77 வறுக்கப்பட்டவை—துவரை கடலை முதலிய தானியங்கள்.

78 வறுக்கப்படின் என்பது கருத்து.

79 முதலிய என்றதனுல் கடுகு முதலியவற்றையும் கொள்ளல்வேண்டும்.

80 முதலிய என்றதனுல் முத்துக்கொட்டை முதலியவற்றையும் கொள் ளல் வேண்டும்.

81 "க்ஷௌமம்" என்பது மூலம். இதற்குப் பூச்சிப்பட்டெனவும் பொருள் கொள்ளலாம்,

ஐந்து [82]தூணி சாலிநெல்லைப் [83]பன்னிரண்டு மரக்காலாகக் குற்றி எடுத்த அரிசி யானைக் கன்றுகளின் உணவுக்குத் தகுதியாகும். பதினொரு மரக்காலாகக் குற்றப்பட்ட அரிசி [84]கொடிய யானைகளுக்கும் பத்து மரக்காலாகக் குற்றப்பட்ட அரிசி பட்டத்து யானைக்கும் ஒன்பது மரக்காலாகக் குற்றப்பட்ட அரிசி [85]போர் யானைக்கும் எட்டுமரக்காலாக ஆக்கிய அரிசி காலாட் படையினர்க்கும் ஏழு மரக்காலாக ஆக்கியது [86]அரசியற் றலைவர்களுக்கும் ஆறு மரக்காலாக ஆக்கியது அரசியர்க்கும் அரச குமரர்களுக்கும் [87]ஐந்து மரக்காலாக ஆக்கியது அரசனுக்கும் தகுந்த உணவாம். அல்லது, முறிவில்லாதனவாகவும் தூயனவாகவும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட ஒரு படி அரிசி அரசனுக்கு உணவாகத்தகும்.

[88]நான்கில் ஒரு கூறு பருப்பும் பருப்பின் பதினறில் ஒரு கூறு உப்பும் [89]நான்கில் ஒரு கூறு நெய் அல்லது எண்ணெயும் [90]சிறந்த மனிதன் ஒருவனுக்குத் தகுந்த உணவாகும்.

---

82 தூணி—நான்கு மரக்கால்; பல்வேறு வகைப்பட்ட உணவுகளின் பொருட்டு அரிசியாக்கும் வரையறையைக் கூறத் தொடங்குகின்றார்.

83 தவிடும் உமியும் அறவே கழியாவாறு குற்றியெடுக்கப்பட்ட அரிசியே யானைக்கன்றுகளுக்கு உணவாக்க அமையும் என்பது கருதி இருபது மரக்கால் நெல்லைப் பன்னிரண்டு மரக்காலாகக் குற்றி எடுக்கவேண்டும் என்று கூறப்பட்டது; பின் வருவனவற்றிற்கும் ஐந்து தூணி நெல்லிலிருந்தே கணக்கிட்டுக்கொள்ளல் வேண்டும். உள்ளீடு குறையக் குற்றியெடுப்பது அரிசியின் நயங்கருதியாம்.

84 கொடிய யானைகள்—புதிதாக அகப்படுத்து நன்கு பயிற்றப்படாத யானைகள்.

85 போர்யானை—போர்ப்படையிலுள்ள யானை.

86 அரசியற்றலைவர்—அமைச்சர் படைத்தலைவர் முதலிய அதிகாரிகள்.

87 ஐந்து தூணி நெல்லைக் குற்றியெடுத்த அரிசியில் முனைமுறிந்தனவற்றையும் தூயனவல்லாதவற்றையும் ஒதுக்கி ஆராய்ந்து அரசன் உணவிற்கு எடுக்கவேண்டியது ஐந்து மரக்காலாகும் என்பது கருத்து; ஐந்து தூணி நெல்லிலிருந்து நன்றாகக் குற்றி எடுக்கப்பட்ட அரிசியில் ஒருபடி விகிதம் ஆராய்ந்தெடுக்கப்பட்ட நல்ல அரிசி அரசன் உணவுக்குப் பொருந்தும் என்பது. இஃது ஒரு சாரார் கொள்கை.

88 நான்கிலொருகூறு—அரிசியின் நான்கில் ஒருகூறு.

89 பருப்பின் அளவில் நான்கில் ஒருகூறு.

90 சிறந்த மனிதன்—மக்களுள் உயர்ந்தோன்.

[91]தாழ்ந்தோருக்கு ஒரு படியின் ஆறிலொருகூறு பருப்பும் [92]அரைக்கூறு நேயப்பொருளும் தகுந்த உணவாகும். [93]மகளிர்க்கு முக்காற்கூறும் சிறுவர்களுக்கு அரைக்கூறும் தகுந்த உணவாகும்.

இருபது பலம் இறைச்சிக்கு [94]அரை உழக்கு நேயப்பொருளும் ஒரு பலம் உப்பும் [95]ஒரு பலம் அக்காரமும் இரண்டு [96]தரணம் [97]கார்ப்புப் பொருளும் அரைப்படி தயிரும் ஆம்.

இதனால் [98]மிகுந்தவற்றிற்கும் அளவு கூறப்பட்ட படியாம். மரக்கறியுணவிற்கு [99]ஒன்றரைமடங்காகும். உலர்ந்தவைகளுக்கு மேற் கூறிய [100]கூட்டுப் பொருள்கள் [101]இருமடங்காகும்.

---

91 தாழ்ந்தோர்—தொழில் செய்வோர் பணியாளர் முதலியோர்.

92 அரைக்கூறு—சிறந்தோர்க்குரிய நேயப்பொருளளவிற் பாதி; தாழ்ந்தோருக்குரிய பருப்பினளவிற் பாதி என்பாருமுளர்; தாழ்ந்தோர்க்கு உப்புக் கூறப்படாமையால் சிறந்தோர்க்குரிய அளவே இவர்களுக்கும் கொள்க.

93 சிறந்தோருணவில் முக்காற்கூறு சிறந்தமகளிர்க்கும் தாழ்ந்தோருணவில் முக்காற்கூறு தாழ்ந்தமகளிர்க்கும் தகுந்த உணவாம் என்பது கருத்து; இங்ஙனமே சிறுவர்க்கும் கொள்க.

94 உழக்கு—காற்படி.

95 "க்ஷாரம்" என்ற மூலத்திற்கு யவக்காரம் என்று பொருள்கொண்டு உப்பில்லாவிடத்து அதைச்சேர்த்தல் வேண்டும் என்பர் உரையாசிரியர். யவக்காரம்—ஒருவகை உப்பு.

96 தரணம்—(எண்பத்தெட்டு வெண்சிறுகடுகு எடை கொண்டது ஒரு மாடமாகும்) மாடம் பதினாறு கொண்டது ஒரு தரணம். இதனை 40-ஆம் அத்தியாயத்திற் காண்க.

97 கார்ப்பு—மிளகு இஞ்சி முதலிய காரப்பொருள்கள். இவை இறைச்சியைப் பக்குவப்படுத்தற்குரிய கூட்டுப்பொருள்கள் என்பது கருத்து.

98 இங்கே கூறப்பட்ட இருபது பலத்தின் மிகுந்ததும் குறைந்ததுமான இறைச்சிக்கும் என்பது கருத்து.

99 ஒன்றரை மடங்கு-இறைச்சிக்குக் கூறிய அளவில் ஒன்றரை மடங்கு; உலர்ந்தவை—உலர்ந்த இறைச்சியும் வற்றலாகிய காய்கறிகளுமாம்.

100 கூட்டுப்பொருள்—காரம் உப்பு நேயம் முதலியன.

101 பச்சிறைச்சி பசிய காய் முதலியவற்றிற்குக் கூறிய அளவின் இரு மடங்கு அவ்வவற்றின் வற்றல்களுக்குக் கூட்டுப்பொருளாம் என்பது கருத்து; இருபது பலம் உலர்ந்த இறைச்சிக்கு ஓர் உழக்கு எண்ணெயும் இருபது பலம் மரக்கறி வற்றலுக்கு ஒன்றரை உழக்கு எண்ணெயும் சேர்க்க வேண்டுமென்பது. இங்ஙனமே உப்பு காரம் முதலியவற்றையும் கணக்கிட்டுக்கொள்க.

யானை குதிரைகளுக்கு உணவின் அளவுமுறையை [102]அவ் வவற்றிற்குரிய பிரகரணத்திற் கூறுவாம். காளைகளுக்கு (உண வின் அளவு) உழுந்து அல்லது நன்கு குற்றப்படாத யவ அரிசி ஒரு தூணியாம். [103]மற்றவை குதிரைகளுக்குக் கூறியபடியாம். [104]ஒரு துலாம் உலர்ந்த பிண்ணாக்கும் பத்து மரக்கால் தவிடும் [105]சிறப்பாக உரிய உணவாம்.

எருமைகளுக்கும் ஒட்டகங்களுக்கும் [106]இரு மடங்காகும். கழுதை புள்ளிமான் செம்மான் இவைகளுக்கு [107]அரைத்தூணி உணவாகும். [108]ஏணமான் மான் இவைகளுக்கு உணவு ஒரு மரக்கா லாகும். ஆடு [109]ஏழகம் பன்றி இவைகளுக்கு [110]அரைமரக்கால் அல்லது இருமடங்கு தவிடு உணவாகும். நாய்களுக்கு ஒருபடி சோறு உணவாகும். அன்னப்பறவை மயில் கிரவுஞ்சம் இவை களுக்கு அரைப்படி சோறு உணவாகும். இவையல்லாத ஏனைய காட்டுவிலங்குகள் நாட்டுவிலங்குகள் பறவைகள் பாம்புகள் இவை களுக்குரிய அளவை, ஒவ்வொன்றிற்கு உணவிட்டு ஊகித்து அறிந்துகொள்ளல்வேண்டும்.

[111]கரி உமி இவற்றை [112]கம்மத்தொழில் சுவர்பூசுந்தொழில் இவற்றின்பொருட்டுச் சேர்த்துவைத்தல்வேண்டும். நொய்யரிசியை

---

102 51—52—53-ஆம் அத்தியாயங்களிற் காண்க.

103 மற்றவை—உப்பு முதலியன ; 51-ஆம் அத்தியாயத்தில் குதிரை களுக்குக் கூறியவற்றைக் காண்க.

104 ஒரு துலாம்—நூறு பலம்.

105 சிறப்பு—குதிரைகளுக்கில்லாமல் காளைகளுக்கு மாத்திரம் உள்ளது.

106 காளைக்குக்கூறிய அளவின் இருமடங்கு.

107 அரைத்தூணி உழுந்து அல்லது நன்கு குற்றப்படாத யவ அரிசி என்பது கருத்து ; பின்வருவனவற்றிற்கும் இவற்றையே கொள்க.

108 ஏணமான்—கரியநிறமுடைய ஒருவகை மான்.

109 ஏழகம்—ஒருவகை ஆடு.

110 உழுந்து அல்லது நன்கு குற்றப்படாத யவ அரிசி அரை மரக்கால் என்பது கருத்து.

111 உபலக்கணத்தால் சாம்பலையும் கொள்ளல்வேண்டும்; வயல் முதலிய வற்றிற்கு உரமாமாதலின்.

112 கம்மத்தொழில்—இரும்பு முதலிய உலோகத்தொழில்.

அடிமைகள் பணியாளர் [113]பருப்புச் சமைப்போர் இவர்களுக்குக் [114]கொடுக்கவேண்டும். அதனின் எஞ்சியதைச் சோறு சமைப்போர் பண்ஸரிகாரஞ் செய்வோர் இவர்களுக்குக் கொடுத்தல் வேண்டும்.

நிறுத்தலளவைக்கருவிகள் முகத்தலளவைக்கருவிகள் திரிகை அம்மி உலக்கை உரல் [115]குந்தாணி [116]அரைக்கும் இயந்திரம் குதிர் முறம் சல்லடை [117]தொம்பை கூடை விளக்குமாறு இவைகள் கருவிகளாம்.

[118]அலகிடுவோன் காவலன் நிறுப்பவன் அளப்பவன் அளப்பிப்போன் கொடுப்பவன் கொடுப்பிப்போன் சுமைகாவுவோன் அடிமை பணியாளர் என்னும் இவர்கள் தொழிற்றுணைவராவர்.

### சுலோகங்கள்

கூலங்களை [119]உயரமான இடத்தில் வைத்தல்வேண்டும். நெருக்கமாக [120]முடையப்பட்டவை அக்காரத்திற்கு இடமாகும். மண்ணாலாதல் மரத்தாலாதல் செய்யப்பட்ட [121]மிடாக்கள் நெயப் பொருளுக்கு இடனாகும். உப்பு வைத்தற்கு [122]நிலம் [123]இடனாகும்.

இரண்டாம் அதிகரணம் பதினைந்தாம் பிரகரணம்
"உணவுப்பொருள் நிலையத் தலைவன்" என்னும்
முப்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

113 பருப்புச்சமைப்போர்—பருப்பு முதலியன கலந்து உயர்ந்த கறி வகைகளை ஆக்குவோர்.

114 உணவிற்காகக் கொடுக்கவேண்டும் என்பது.

115 குந்தாணி—பேருரல்.

116 இது மனிதராலும் காளையினாலும் நீர் ஓட்டத்தின் ஆற்றலினாலும் இயக்கப்படுவது.

117 தொம்பை—மூங்கிலால் அமைக்கப்படும் நெற்குதிர்.

118 அலகிடுவோன்—துடைப்பத்தால் தூசிகளை நீக்குவோன்.

119 நிலத்தில் பொருந்தாமல் வைத்தல்வேண்டும் என்பது கருத்து.

120 முடையப்பட்டவை—கூடை பாய் முதலியன.

121 மிடா—பெரிய பாண்டங்கள்.

122 நிலம்—இதன் உபலக்கணத்தால் மட்பாண்டமும் கொள்ளல் வேண்டும்.

123 இங்கே இடங்கூறப்படாத காய்கறி முதலியவற்றிற்கும் தகுதியான இடங்கள் அமைத்துக்கோடல் வேண்டுமென்பதும் புலப்படுக்கப்பட்டபடியாம்.

## இரண்டாம் அதிகாரணம் தொழிற்றலைவர் செயன்முறை

## பதினோராம் பிரகரணம்—[1]விலைப்படுபண்டத் தலைவன்

## முப்பத்தேழாம் அத்தியாயம்

விலைப்படுபண்டத்தலைவன் [2]நீரில்விளைந்தனவும் [3]நிலத்தில் விளைந்தனவும் காலினும் கலத்தினும் வந்தனவுமாகிய பலவகை விலைப்பண்டங்களின் [4]உயர்வு தாழ்வுகளையும் விலையின் மிகுதி குறைவுகளையும் [5]விருப்பு வெறுப்புகளையும் அறிதல்வேண்டும். அங்ஙனமே [6]விரித்தல் [7]தொகுத்தல் கொள்ளல் விற்றல் இவை களுக்கு [8]ஏற்ற காலங்களையும் அறிதல்வேண்டும்.

[9]மிகுதியாகவுள்ள விலைப்பண்டங்களை ஒருங்குசேர்த்து விலையை உயர்த்துதல்வேண்டும். தகுதியான விலை ஏற்பட்டவுடன் [10]வேறு விலையும் விதிக்கலாம்.

---

### 37-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] விலைப்படுபண்டத் தலைவன்—பண்டங்களை விற்றல் வாங்குதற்குரிய தொழிலதிகாரி. முன்னைப் பிரகரணத்தில் உணவுப் பொருள்தலைவன், பொருள்களை விற்றல் பண்டமாற்றல் முதலியவற்றை அறிந்துகொள்ளல் வேண்டும் என்று கூறப்பட்டது; அங்ஙனம் விற்றல் பண்டமாற்றல் முதலியன விலைப்படுபண்டத்தலைவன் வாயிலாக நடைபெறவேண்டுமாத லால் அதன்பின் இது வைக்கப்பட்டது. இதனுற் பிரகரணவியைபு புலனாதலறிக.

[2] நீரில் விளைவன—முத்து பவழம் மீன் முதலியன.

[3] நிலத்தில் விளைவன—நெல் முதலிய கூலவகைகளாம்.

[4] உயர்வு தாழ்வுகள் விலையினாலும் பொருளின் இயல்பாலும் ஏற்பட்டவை.

[5] விருப்பு வெறுப்புக்கள்—விலைப் பண்டங்களைப் பெறுதலில் மக்கள் பால் நிகழ்வன.

[6] விரித்தல்—தொகுத்து வைத்த பொருளை வாணிகத்தின் பொருட்டு வெளிப்படுத்திப் பரப்புதல்.

[7] தொகுத்தல்—பல இடங்களிலும் பரவிக்கிடக்கும் பண்டங்களை ஒருங்கு சேர்த்தல்.

[8] கொள்ளல் விற்றல்களுக்கு ஏற்றதும் ஏலாததும் ஆகிய காலம் என்பது கருத்து.

[9] மிகுதி, விளைவினாலும் வேற்று நாட்டு வரவினாலும் ஆகும்.

[10] வேறு விலை—மிகுதியினின்றும் குறைக்கப்பட்டது.

அரசன் தன்னாட்டிலுண்டான தன்னுடைய விலைப்பண்டங்களை [11]ஒரே வாயிலாகவும் பிறநாட்டிலுண்டானவைகளைப் பல வாயிலாகவும் விற்கும்படி செய்தல்வேண்டும். இருவகைப் பொருள்களையும் குடிமக்களுக்குத் தீங்குவிளையாவாறு விற்கும்படி செய்தல்வேண்டும். ஊதியம் பெரிதாயினும் குடிமக்களுக்குத் துன்பமுண்டாக்குமாயின் விலக்கிவிடுதல் வேண்டும். விரைவில் விற்றற்குரிய [12]பண்டங்களுக்குக் [13]காலத்தாழ்வையும் கலத்தற் குற்றத்தையும் செய்தலாகாது.

விலை வரையறுக்கப்பட்ட அரசனுடைய பண்டங்களை வணிகர்கள் பற்பல வாயிலாகவும் விற்கலாம். விலைக் குறைவிற்குத்தகக் [14]குறையீடு கொடுத்தல்வேண்டும்.

முகத்தலளவைப் பொருள்களுக்குப் பதினாறில் ஒரு கூறும் நிறுத்தலளவைப் பொருள்களுக்கு இருபதில் ஒரு கூறும் எண்ணலளவைப் பொருள்களுக்குப் பதினொன்றில் ஒரு கூறும் [15]வாசியாகும்.

பிறநாட்டிலுண்டான விலைப்பண்டங்களை [16]இடையூறகற்றிக் கொணர்வித்தல் வேண்டும். ஓடக்காரர்களுக்கும் வணிகர்களுக்கும் [17]எதிர்காலத்திற்கேற்பக் [18]குறைநீக்கம் கொடுத்தல்

---

[11] ஒரேவாயில்—ஒரே இடத்தில் அல்லது ஒருவன் முகமாக.

[12] பண்டங்கள்—ஈண்டுக் கறி காய்களையும் பால் முதலியவற்றையும் உணர்த்தும்.

[13] காலத்தாழ்வாலும் கலத்தற் குற்றத்தாலும் அப்பண்டங்கள் கெடுதலடையும் என்பது கருத்து.

[14] வரையறுக்கப்பட்ட விலையளவில் குறைய விற்க நேரின் அக்குறை விற்குத் தக, விற்பவர் அரசனுக்கு ஈடுசெய்தல்வேண்டும் என்பது கருத்து.

[15] வாசி—இங்கேகூறிய அளவுகளை மீண்டும் ஆராயுங்கால் குறையாமல் இருத்தற் பொருட்டு மிகுதியாகக் கொடுக்கப்படுவது; இவ்வாசி விலைப் பண்டம் பெறுவோனுக்குக் கொடுக்கப்படுவதாகும்; குடிமக்கள் அரசனுக்கு அரசிறையாகக் கொடுக்கவேண்டிய கூலம் முதலியவற்றிற்கும் இஃது ஒக்கும்.

[16] இடையூறு—எல்லைகாவலன் காட்டுத்தலைவன் அரசியல்வினைஞர் முதலியோரால் நேர்வது.

[17] எதிர்காலத்தில் தனக்கு இடையூறு நேராவண்ணம்.

[18] குறை நீக்கத்தின் இயல்பை இருபத்திரண்டாம் அத்தியாயத்திற் காண்க.

வேண்டும். வேற்று நாட்டிலிருந்து வந்தவர்களுக்குப் [19]பொருள் வழக்கின்மையை ஏற்படுத்தல்வேண்டும். இது [20]துணைவர் உதவி யாளர்களுக்கு விலக்காகும்.

[21]பண்டங்களை விற்போர் அப்பண்டங்களை விற்றுப் பெற்ற பொருளை ஒரே துளையையுடைய மூடியமைந்த மரப் பேழையில் ஒருவன்முகமாக வைத்தல்வேண்டும். நாளினது [22]எட்டாங் கூற்றில் விலைப்படுபண்டத் தலைவனிடத்தில் இத்துணைவிற்றது, இத்துணை [23]எஞ்சியது எனக் கூறிக் கொடுத்தல்வேண்டும். நிறுத்த லளவைக் கருவிகளையும் முகத்தலளவைக் கருவிகளையும் அவனிடமே கொடுத்தல்வேண்டும். இங்ஙனம் தன்னாட்டு வாணிக முறை கூறப்பட்டது.

பிறநாட்டிலெனின் [24]விற்கும் பொருள் [25]கொள்ளும் பொருள் இவற்றின் [26]பெறுமானத்தையும் விலையையும் தெரிந்து கொண்டு சுங்கம் [27]வழி [28]துணை [29]காடு [30]ஆறு [31]உணவு [32]வாடகை

---

[19] கடனுகக் கொடுத்த பொருள்பற்றி வழக்குத் தொடுக்க நேரின் வழக்கில்லாமலே உதவி செய்யவேண்டும் என்பது கருத்து.

[20] இத் துணை வரும் உதவியாளரும் வேற்று நாட்டிலிருந்து வந்தாரைச் சார்ந்தோர் ஆவர்.

[21] பண்டங்கள்—அரசனுடையன.

[22] எட்டாங்கூறு என்றது பண்டங்களை விற்றற்குரிய காலத்தின் இறுதியைக் குறிக்கும்.

[23] எஞ்சியது—விற்கப்படாமல் எஞ்சிய பண்டம்.

[24] விற்கும் பொருள்—தன்னாட்டில் விளைவது.

[25] கொள்ளும் பொருள்—பிற நாட்டில் விளைவது.

[26] பெறுமானம்—பண்டமாற்றில் ஆராய்தற்குரிய குறை ஒப்பு மிகுதி.

[27] வழியென்பது பண்டங்களைக் கொண்டு செல்லுதற்கும் கொணர்தற்கும் வழியில் எல்லைகாவலனுக்குக் கொடுக்கப்படும் பொருட் செலவைக் குறிக்கும்.

[28] துணையென்பது வழியைக் கடந்து செல்லுதற்கு உதவியாக வரும் படைவீரருக்குக் கொடுக்கும் பொருட் செலவைக் குறிக்கும்.

[29] காடு—காடு காவலனுக்குக் கொடுக்கப்படுவது.

[30] ஆறு—ஆற்றைக் கடப்பதற்கு ஓடக்காரர்க்குக் கொடுக்கும் கூலி.

[31] உணவு—தனக்கும் உடன் வருவோர்க்கும் உணவின் பொருட்டுச் செலவாகும் பொருள்.

[32] வாடகை—தங்குமிடத்திற்குக் கொடுக்கும் கூலி.

இவற்றிற்கு ஆகும் செலவு கழித்து எஞ்சிய ஊதியத்தையும் [33]அறிதல்வேண்டும். ஊதியமில்லாவழிப் பண்டங்களை [34]உய்த்த லாலாதல் பண்டமாற்றுதலாலாதல் அவ்வூதியத்தைக் காண்டல் வேண்டும். [35]பின்னர் [36]ஊதியத்தின் நான்கிலொருகூறு செல விட்டு [37]இடையூறில்லாத நிலவழியாகச்சென்று வாணிகஞ்செய்தல் வேண்டும். காடுகாவலன் எல்லைகாவலன் நாடு நகரத்துத் தலை மக்கள் இவர்களோடு [38]நலங்குறித்து நட்புக்கொள்ளல்வேண்டும்.

கேடுநேர்ந்துழித் தன்னையும் சிறந்த பொருளையும் (அக்கேட்டி னின்றும்) [39]காத்துக் கொள்ளுதல்வேண்டும். [40]தன்னாட்டை அடையாதவன் கொடுக்கவேண்டிய எல்லாவற்றினும் தூயனாக நடந்துகொள்ளல்வேண்டும்.

நீர்வழியில் ஓடக்கூலியும் ஆற்றுணவும் விற்கும் பொருள் கொள்ளும் பொருள்களின் விலையளவும் செல்லுதற்குரிய [41]கால மும் அச்சம்நேர்ந்துழிக் காப்பும் வாணிகஞ் செய்தற்குரிய நகரங்

---

[33] அறிதற்கு வினைமுதல் விலைப்படுபண்டத் தலைவன் ஆவான் என்பது; இங்ஙனம் அறிதலால் ஊதியம் கிடைக்கும் என்னும் துணிவு தோன்றில் தன்னாட்டு விலைப்பொருளை வேற்றுநாட்டிற்கு அனுப்பலாம் என்பது கருத்து.

[34] உய்த்தல்—ஊதியம் கிடைத்தற்குரிய காலத்தை எதிர்பார்த்து மற்றொரு நாட்டிற்கு அனுப்புதல்.

[35] ஊதியம் கிடைக்கும் என்ற துணிவு ஏற்பட்டபின் என்பது கருத்து.

[36] ஊதியம் ஈண்டு எதிர்பார்க்கப்படுவது.

[37] இடையூறு—ஆறலைப்போர் சூறைகொள்வோர் முதலியோரால் நேர்வது.

[38] நலம்—ஈண்டு வாணிகத் துறைக்குரிய நன்மைகளாம்.

[39] சிறந்த பொருளையும் தன்னையும் காத்துக் கோடற்கு இயலாவிடின் பொருளை இழந்தாவது தன்னைக் காத்துக்கொள்ளல் வேண்டும்; இதனைப் "பொருளினும் உடலினைப் போற்றல் வேண்டுமால்" என்பதனாலும் அறிக.

[40] ஒருவன் தன் பண்டங்களை விற்றற்குரிய வேற்று நாட்டினின்றும் தன்னாட்டிற்குத் திரும்பிவருமளவும் அந்நாட்டில் கொடுக்கவேண்டிய சுங்கம் முதலிய எல்லாவற்றிலும் குற்றம் நேராமல் நடந்துகொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[41] காலம் ஈண்டுச் செல்லுதற்குரிய காலத்தின் இயல்பும் அளவுமாம்.

களின் வழக்க ஒழுக்கங்களும் ஆகிய இவற்றை அறிதல்வேண்டும்.

**சுலோகம்**

யாற்றுவழியில் வாணிகத்துறையை [42]வழக்க ஒழுக்கத்தால் நன்கறிந்து எங்கு ஊதியம் உளதோ அங்குச் செல்லுதல்வேண்டும். [43]ஊதியமில்வழி ஒழிதல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் பதினாறும் பிரகரணம்
"விலைப்படுபண்டத்தலைவன்" என்னும்
முப்பத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[42] வழக்க ஒழுக்கம்—அவ்வந்நாட்டு வழக்க ஒழுக்கம்.

[43] சுருங்கிய ஊதியம் முயற்சிக்குத்தக இல்லாத ஊதியம் என்னும் இவையும் யாற்றுவழிச் செலவை ஒழித்தற்கு ஏதுவாகும் என்பது.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பதினேழாம் பிரகரணம்—[1] குப்பியத்தலைவன்

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

குப்பியத்தலைவன் [2]நன்மரக்காடுகாவலர்களால் குப்பியங்களைக் கொணர்வித்தல்வேண்டும். [3]மரத்தொழில்களையும் செய்வித்தல் வேண்டும். தொழிற்குரிய மரங்களை வெட்டுவோர்க்குக் [4]கொடுக்கவேண்டியவற்றையும் [5]தண்டனையையும் வரையறை செய்தல்வேண்டும். [6]கேடுநேர்ந்த காலத்து இது விலக்காகும்.

[*] குப்பியங்களாவன :—

தேக்கு தினிசு தனிசு மருதம் இருப்பை மஞ்சாடி மராமரம் [7]சிஞ்சுபம் [8]அரிமேதம் பழமுண்ணிப்பாலை வாகை கருங்காலி சரளம் பனை ஆச்சா [9]அசுவகருணம் வெண்கருங்காலி கசம் மா

---

### 38-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] குப்பியம்—அகக்காழன புறக்காழனவாகிய மரம் புற்களும் செடி கொடிகளும் பொன் வெள்ளி யல்லாத செம்பு ஈயம் இரும்பு முதலிய உலோகங்களுமாம். முன்னைப் பிரகரணத்தில் விலைப்படுபண்டத்தலைவனின் செயல் கூறப்பட்டது. அவ்விலைப்படுபண்டங்களுள் குப்பியப் பொருள்களும் ஒரு கூறுயடங்குமாதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது; இதனாற் பிரகரண இயைபு புலனாதலறிக.

[2] நன்மரம்—இல்லம் முதலிய அமைத்தற்குப் பயன்படும் மரம்.

[3] மரத்தொழில்—மரத்தால் வீடு வண்டி முதலியன அமைக்குந் தொழில்.

[4] கொடுக்கவேண்டியவை—குப்பியத்தலைவனின் கட்டளைபெற்று மரம் வெட்டுதல் முதலிய தொழில் செய்வோர்க்குக் கொடுக்கவேண்டிய கூலி.

[5] தண்டனை—அக்கட்டளைபெறாமல் செய்வோர்க்கு விதிக்கப்படுவது.

[6] எதிர்பாராத நிலையில் இடையூறு நேர்ந்த காலத்துக் கட்டளை பெறாமல் ஓரோவழி மரம் வெட்டிப் பயன்படுத்திக்கொள்ளலாமென்பது கருத்து; அஃதாவது பண்டங்கள் ஏற்றிச் செல்லும் வண்டியின் நுகத்தடி முதலிய உறுப்புகளில் ஒன்று முறிந்துவிடுமாயின் அப்பொழுது தலைவனின் கட்டளை பெறாமல் மரம் வெட்டிப் பயன்படுத்திக்கொள்வது போல்வது.

[7] சிஞ்சுபம்—நூக்கமரம்.

[8] அரிமேதம்—தீநாற்றமுடைய ஒருவகைக் கருங்காலி.

[9] அசுவகருணம்—ஆச்சாவகைகளுள் ஒன்று.

வேங்கை [10]தவம் முதலிய சிறந்த மரவகைகளும்;

[11]குழாய்மூங்கில் கன்மூங்கில் [12]வின்மூங்கில் [13]வேணு [14]குழல் மூங்கில் சாதீனமூங்கில் முள்மூங்கில் பெருமூங்கில் முதலிய மூங்கில் வகைகளும்;

பிரம்பு [15]சீகவல்லி [16]வாசி கருங்கொடி வெற்றிலைக்கொடி முதலிய கொடிவகைகளும்;

மாலதி மருள் எருக்கு சணல் பீர்க்கு காயா முதலிய மரவுரி வகைகளும்;

முஞ்சி கோரை முதலிய கயிற்றுக்குரியவைகளும் கூந்தற்பனை பனை பூர்ச்சம் ஆகிய ஏடுகளும் முள்முருக்கு குசும்பை குங்குமம் இவைகளின் [17]மலர்களும்;

கிழங்கு வேர் பழம் முதலிய மருந்துவகைகளும், [18]காளகூடம் [19]வச்சைநாபி [20]ஆலகாலம் [21]மேடசிருங்கம் [22]முத்தை [23]குட்டம்

---

10 தவம்—பெருஞ்சுமை தாங்குமியல்பினது.

11 குழாய் மூங்கில்—அகன்ற துளையினையும் சிறிய முட்களையும் உடைய மூங்கில்.

12 வின்மூங்கில்—சிறு துளையும் திண்மையுமுடைய மூங்கில்.

13 வேணு—வில்லுக்குப் பயன்படும் முள்ளிலா மூங்கில்.

14 குழல்மூங்கில் — நெருக்கமில்லாக் கணுவும் துளையும் முள்ளும் உடையது.

15 சீகவல்லி—இதனை அம்சவல்லி என்றும் கூறுப.

16 வாசி—இது மருதமலர்போன்ற மலருடையது.

17 இம்மலர்கள் ஆடை முதலியவற்றில் நிறமூட்டுவதற்குப் பயன்படுவனவாம்.

18 காளகூடம்—அரசிலைபோன்ற இலையினையுடைய ஒருவகை மரத்தின் கணுக்களில் உண்டாகும் பயின்.

19 வச்சைநாபி—இதிற் றோய்ந்துவரும் காற்று காய்ச்சலை உண்டு பண்ணும் என்ப.

20 ஆலகாலம்—நீலநிறமான தளிர்களையும் பசுவின் முலைக்காம்பு போன்ற பழங்களையுமுடைய ஒருவகை மரத்திலுண்டாவது; இது இமயமலை கிட்கிந்தை கொங்கணம் முதலிய இடங்களில் உண்டாவது.

21 மேடசிருங்கம்—கருங்குவளையி னரும்புபோன்ற வடிவினையுடையது.

22 முத்தை—இது கோரைக்கிழங்கு போன்ற உருவமுடையதும், சுக்காங்கல்போன்ற வடிவினையுடையதும் என இருவகைப்படும்.

23 குட்டம்—இது கீழ்க்காய்நெல்லியின் காய் போன்ற கிழங்கினையுடையது.

[24]பெருநஞ்சு [25]வேல்விதகம் [26]கௌராரத்திரம் [27]பாலகம்மார்க்கடம் [28]ஐமவதம் [29]காலிங்ககம் [30]தாரதகம் [31]அங்கோலசாரம் உட்டிரகம் [32]முதலிய [33]நஞ்சுகள் [34]பேழைகளில் வைக்கப்பட்டனவும் உயிரோடுள்ளனவும் ஆகிய [35]பாம்புகள் புழுக்கள் ஆகிய இத்துணை நஞ்சு வகைகளும்;

உடும்பு வெள்ளுடும்பு வரிவேங்கை முதலை சிங்கம் புலி யானை எருமை கவரிமான் சிம்புள் காண்டாமிருகம் பசு மான் கவையமா ஏனைய காட்டுவிலங்கு நாட்டுவிலங்கு பறவை பாம்பு ஆகிய இவைகளுடைய [36]தோல் எலும்பு பித்தம் நரம்பு பல் கொம்பு குளம்பு வால் இவைகளும்;

எஃகு செம்பு விருத்தம் வெண்கலம் காரீயம் வெள்ளீயம் வைகிருந்தகம் பித்தளை ஆகிய உலோக வகைகளும்;

மூங்கில் பிரம்புகளாலும் மண்ணாலும் ஆகிய பாண்டங்களும்;

---

24 பெருநஞ்சு—இறைச்சி போன்ற நிறமும் முலைக்கண்போன்ற வடிவும் உடையது.

25 வேல்விதகம்—கருமை செம்மை கலந்த நிறமுடையது.

26 கௌராரத்திரம்—கிழங்கிலுண்டாவது.

27 பாலகம்—திப்பிலிபோன்ற வடிவமுடையது.

28 ஐமவதம்—நீண்ட இலைகளை உடையதாய் இமயமலையிலுண்டாவது.

29 காலிங்ககம்—யவம்போன்ற வடிவமுடையதாய்க் கலிங்கதேசத்தில் உண்டாவது.

30 தாரதகம்—தரத நாட்டிலுள்ள ஒரு மரத்திலுண்டாவது.

31 அங்கோலசாரம்—அழிஞ்சின்மரத்தி லுண்டாவது.

32 முதலிய என்றதனால் பிரதீபநம் முதலாகக் கூறப்பட்டவெல்லாங் கொள்க.

33 இங்கே கூறப்பட்ட காலகூடம் முதலிய பதினாறு வகை நஞ்சுகளும் நிலையியற் பொருள்களினின்றும் உண்டாவன. இவற்றிற்குரிய பற்றுக் கோடுகள் பட்டை கிழங்கு இலை மலர் பழம் பயின் வேர் உள்ளீடு தாது வித்து எனப் பத்துவகைப்படும்.

34 பேழைகளில் வைக்கப்பட்டன—மறைவுச்செயல் என்னும் அதிகரணத்திற் கூறப்பட்டபடி பாம்பு முதலியவற்றைப் பக்குவப்படுத்திக் குடம் முதலியவற்றில் இட்டு வைக்கப்படுவன.

35 பாம்பு முதலியன இயங்கியற் பொருள்களினின்றும் உண்டாகும் நஞ்சைக் குறிப்பன.

36 இங்கே கூறப்பட்ட தோல் முதலியவைகள் கவசம் அம்பு உறை முதலியவற்றிற்குப் பயன்படுவனவாம்.

கரி உமி சாம்பல்களும்; காட்டுவிலங்கு நாட்டுவிலங்கு பறவை பாம்பு ஆகிய இவ்வினங்களும்; விறகு புல் வகைகளும் ஆம்.[37]

## சுலோகம்

குப்பியத்தால் பிழைப்பவர்களைக்கொண்டு [38]அகத்தினும் [39]புறத்தினும் எல்லா வகையான பாண்டத் தொழில்களையும் [40]வாழ்க்கைக்கு வேண்டியவற்றையும் [41]நகரக்காவலுக்கு வேண்டியவற்றையும் தனித்தனியாகச் [42]செய்வித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் பதினேழாம் பிரகரணம்
"குப்பியத்தலைவன்" என்னும் முப்பத்தெட்டாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[37] மரவகைகளும் மூங்கில்வகைகளும் கொடிவகைகளும் மரவுரி வகைகளும் கயிற்றுக்குரியவைகளும் ஏடுகளும் மலர்களும் மருந்துவகைகளும் நஞ்சுவகைகளும் தோல் முதலியவைகளும் உலோகவகைகளும் பாண்டங்களும் விலங்கு முதலிய இனங்களும் விறகுவகைகளும் குப்பிய வகைகளாம் எனக்கொள்க.

[38] அகம்—அரணின் உட்பகுதி.

[39] புறம்—அரணிற்கு வெளிப்பட்ட பகுதிகள்.

[40] வாழ்க்கைக்கு வேண்டியவை—கலப்பை உலக்கை வண்டி முதலியன.

[41] நகரக் காவலுக்கு வேண்டியவை—பொறி படை முதலியன.

[42] செய்வித்தற்கு ஏவுதற் கருத்தா குப்பியத்தலைவன்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## பதினெட்டாம் பிரகரணம்—[1] படைக்கலநிலையத் தலைவன்

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

படைக்கலநிலையத்தலைவன் போர்செய்தற்குரியனவும் [2]அரணுக்குரியனவும் பகைவர்நாட்டை அழித்தற்குரியனவும் ஆகிய பொறி படைக்கலம் [3]தடை என்னும் இவற்றையும் பிற கருவிகளையும் அவ்வத்தொழிலில் வல்ல (குடியிற் பிறந்த) காருகர் சிற்பிகள் இவர்களைக்கொண்டு [4]தொழில் அளவு காலம் கூலி பயன் இவற்றை வரையறை செய்துகொண்டு செய்வித்தல்வேண்டும்; அவற்றைத் தன்னிலத்தில் வைத்துக் காத்தல்வேண்டும். [5]அடிக்கடி இடமாற்றத்தையும் வெயில் காற்றுப்படுதலையும் செய்தல் வேண்டும். [6]வெப்பம் தட்பம் புழு இவைகளாற் கேடுறாதபடி வைத்தல்வேண்டும். [7]இயல்பு [8]உருவம் [9]இலக்கணம் [10]அளவு [11]வரவு [12]பெறுமானம் [13]கொள்கலம் இவற்றை ஆராய்ந்தறிதல் வேண்டும்.

---

### 39-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] குப்பிய வகைகளினுட்பட்ட படைக்கலம் முதலியனபற்றி இதன்கட் கூறப்படுதலின் முன்னைப் பிரகரணத்தோடு இதற்குள்ள இயைபு புலனாதலறிக.

[2] அரணுக்குரியன—தன் அரணைக் காத்தற்குரியன.

[3] தடை—இருப்புக்கவசம் முதலின.

[4] தொழிலளவு—செய்யத்தக்க பொறி படை முதலியவற்றின் எண் அமைப்பு முதலியவற்றின் அளவு.

[5] அடிக்கடி—இரண்டு மூன்று நாட்களுக்கொருமுறை.

[6] வெயில் மழை புழுக்குடைதல் முதலியவற்றால் கேடுறாதபடி எண்ணெய் முதலியன பூசிப் பாதுகாத்தல் வேண்டும் என்பது கருத்து.

[7] இயல்பு—வெட்டுதல் குத்துதல் முதலிய தொழிற்றன்மை.

[8] உருவம்—நேர்மை வளைவு முதலியன.

[9] இலக்கணம்—நூலிற் கூறிய அமைப்பு.

[10] அளவு—நீளம் எடை முதலியன.

[11] வரவு—யாண்டிருந்து அடையப்பட்டதென்பது.

[12] பெறுமானம்—விலையினளவு.

[13] கொள்கலம்—உறை முதலியன.

[14]சருவதோபத்திரம் [15]சாமதக்கினீயம் [16]பன்முகம் [17]விசுவாச காதி [18]சங்காடி [19]யாநகம் [20]கொண்டல் [21]வாகு [22]ஊர்த்துவவாகு [23]அருத்தவாகு இவை [24]நிலையியற் பொறிகளாம்.

[25] பாஞ்சாலிகம் [26]தேவதண்டம், [27]சூகரிகை [28]உலக்கைத்தடி

---

[14] சருவதோபத்திரம்—வண்டிக்கால்போன்ற வடிவத்தையும் கூரிய வட்டகையையும் உடையது ; மதிலிலுள்ள கந்தருவப் பதுமையின் கையி லிருப்பதாய் நாற்புறமும் சுழன்று கற்களை வீசுவது.

[15] சாமதக்கினீயம்—நடுத்துளையில் வைக்கப்பட்ட பெரிய அம்புகளை எய்வது.

[16] பன்முகம்—மதிற் சுவரின் மேல் வட்டமாக அமைந்ததும் தோலால் மூடப்பட்டதும் இரண்டு மூன்று அடுக்குகளை உடையதும் வில்லாளிகள் இருத்தற்குரியதும் ஆகிய அட்டாலகத்தில் அமைக்கப்படும் ஒருவகைப் பொறி.

[17] நகரத்தின் வெளிப்புறத்தில்,அமைக்கப்படும் தாழக்கோலாக நின்று பொறியாற் பிரிக்கப்பட்டுப் பகைவரைக் கொல்வது.

[18] பகைவரின் அட்டாலகம் முதலியவற்றைக் கொளுத்துதற் பொருட்டு நீண்ட மரக்கட்டையால் அமைக்கப்படும் தீப்பொறி.

[19] யாநகம்—ஆழிவடிவின்மேல் வைக்கப்பட்டு பலகைகளை இடையி லுடைய கோல்போல் நீண்ட ஒருவகைப் பொறி.

[20] கொண்டல்—தீயணைத்தற்குரிய நீர்ப்பொறி.

[21] வாகு—ஒன்றுக்கொன்று எதிர்முகமாக வைக்கப்பட்டுப் பொறி யியக்கத்தால் பகைவரைக் கொல்லுதற்கு இரண்டு தூண் வடிவில் அமைக் கப்படுவது.

[22] ஊர்த்துவ வாகு—அணிமையில் வரும் பகைவரைக் கொல்லுதற்கு மதிலின் உச்சியில் பெரிய தூண் வடிவில் அமைக்கப்படும் பொறி.

[23] அருத்தவாகு—இஃது ஊர்த்துவவாகுவில் பாதி அளவுடையது.

[24] இப்பத்தும் பிரிந்து செல்லாது, அமைக்கப்பட்ட இடத்திலேயே இருந்து தொழில் புரிவன.

[25] பஞ்சாலிகம்—இடைவெளியின்றி வைரமேறிய மரங்களாற் கூரிய முகத்துடன் அமைக்கப்படுவது ; அகழிவழியாகப் பகைவர் வாராமற் றடைப்படுத்துவது.

[26] தேவதண்டம்—மதிலின் உச்சியில் அடிமுளையின்றித் தூண்வடிவி லமைக்கப்படுவது.

[27] சூகரிகை—நூலினாலும் தோலினாலும் ஆக்கப்பட்டு உள்ளே பஞ்சு மயிர் இவைகளைப் பொதிந்து பெருந்துருத்தி போன்ற வடிவினதாக அமைக் கப்படுவது ; கோபுரம் அட்டாலகம் தேவபதம் என்னும் இவற்றைப் பகை வர் எறியும் கல் முதலியன தர்க்காவண்ணம் அமைக்கப்படுவது ; மதிலைப் பகைவர் பற்றாவண்ணம் மூங்கிலாலும் தோலாலும் பன்றி வடிவிலமைக்கப் படுவ தெனினுமாம்.

[28] உலக்கைத்தடி—கருங்காலிமரத்தாலாயது.

[29]யானைத்தடை [30]ஓலைவிசிறி முற்கரம் [31]துருகணம் கஃத முட்கதை குந்தாலி [32]பெருமுழக்கு [33]உற்காடிமம் [34]உற்பாடிமம் நூற்றுவரைக்கொல்லி முத்தலைவேல் ஆழி [35]இவை இயங்கியற் [36]பொறிகளாம்.

[37]வேல் [38]ஈட்டி [39]குந்தம் [40]ஆடகம் [41]பிண்டிபாலம் சூலம் [42]தோமரம் [43]பன்றிச்செவி [44]கணையம் [45]கற்பணம் [46]அச்சுறுத்தி

---

29 யானைத்தடை—பகைவர்யானையைத் தடுத்தற்குத் தாமுக்கோல்வடிவமாகச் செய்யப்படுவது.

30 ஓலை விசிறி—விசிறிபோற் சுழல்வது.

31 துருகணம்—முற்கரவடிவினது.

32 பெருமுழக்கு—தோலாற் போர்க்கப்பட்ட நான்கு தூண்களையுடையது; பேரொலியுடன் மண்ணையும் கல்லையும் வாரியிறைக்கும் பொறி.

33 உற்காடிமம்—முற்கரவடிவினமைந்த மற்றொரு பொறி.

34 உற்பாடிமம்—தூண் முதலியவற்றைப் பிளத்தற்குப் பருந்து வடிவிலமைக்கப்படுவது.

35 இவை—இப்பதினேழும்.

36 பொறியாவது:—திட்பத்தாலும் சுழற்சியாலும் அழுத்துதலாலும் இயங்குவதாம்.

37 வேல்—இஃது அலரியின் இலைபோன்ற முகமும் ஆவின் முலைக்காம்பு போன்ற அடிப்பாகமும் உடையதாய் நான்குமுழநீளத்தில் முற்றும் இரும்பால் ஆக்கப்படுவது.

38 ஈட்டி — இஃது இருபத்துநான்கங்குலநீளமுடையதாக உள்ளே மரக்கோலை வைத்து இரும்பாலாக்கப்படுவது.

39 குந்தம்—இஃது ஏழு ஆறு ஐந்து முழ நீளங்களில் அமைக்கப்பட்டு முறையே தலை இடை கடையாக எண்ணப்படும்.

40 ஆடகம்—குந்தத்தை ஒத்து மூன்று முட்களையுடையது.

41 பிண்டிபாலம்—குந்தம் போன்ற வடிவமும் பருத்த தலைப் பகுதியும் உடையது.

42 தோமரம் — இஃது அம்புபோன்ற நுனியை உடையது; ஐந்து நாலரை நான்கு முழங்களில் ஆக்கப்பட்டு முறையே தலை இடை கடையாகக் கொள்ளப்படும்.

43 பன்றிச்செவி—பன்றியின் காதுபோன்ற நுனியையுடைய ஈட்டி.

44 கணையம்—இருமருங்கும் மும்மூன்று முட்களும் இடையிற் பிடியுமுடையது; இருபத்துநான்கு இருபத்திரண்டு இருபது அங்குலமுடையனவாகச் செய்யப்பட்டு முறையே தலை இடை கடையெனக் கொள்ளப்படும்.

45 கற்பணம்—தோமரத்தை ஒத்த அளவுடையதாய்க் கையினால் எறியத்தக்க சிறகுகளையுடைய அம்பு; இரண்டேகால் இரண்டு ஒன்றேமுக்காற் பல எடையுள்ளனவாய் முறையே தலை இடை கடையாகக் கொள்ளப்படும். இதனை "இரும்பால் ஆணைநெருஞ்சிமுள்ளாகப் பண்ணியது" என்பர் நச்சினார்க்கினியர். (சீவகசிந்-நாமக-256ம் செய்-உரை)

46 அச்சுறுத்தி—ஈட்டியையொத்த அளவினதாய்க் கூரிய நுனியை உடையது.

முதலியன [47]அலமுகப்படைகள்.

பனை மூங்கில் மரம் [48]கொம்பு இவற்றாலாகிய கார்முகம் கோதண்டம் துரூணம் இவை [49]விற்களாம்.

மஞ்சிக்கற்றாழை எருக்கு சணல் பீர்க்கு மூங்கில் நரம்பு இவை [50]வில் ஞாண்களாம்.

[51]மூங்கில் நாணற்றண்டு வன்மரம் [52]தண்டாசனம் [53]நாராசம் இவை அம்புகளாம். இவற்றின் நுனிகள் துணித்தற்கும் பிளத்தற்கும் புடைத்தற்கும் ஏற்றனவாய் இரும்பு எலும்பு வன்மரம் ஆகிய இவற்றால் அமைக்கப்படும்.

கொடுவாள் வட்டவாள் நெடுவாள் என்னும் இவை வாள் வகைகளாம். காண்டாமிருகம் எருமை யானை இவைகளின் கோடுகளும் வன்மரங்களும் அடிமூங்கிலும் இவற்றின் [54]பிடிகளாம்.

[55]பரசு கோடாலி [56]பட்டசம் மண்வெட்டி குந்தாலி [57]அரிவாள் கோடரி இவை வாள்போன்ற கருவிகளாம். [58]பொறிக்கல் கவண்

---

[47] அலமுகப்படை—கலப்பை நுனி போன்ற கூர்மையான நுனியையுடைய படைக்கலங்கள்.

[48] கொம்பு—விலங்கின்கொம்பு.

[49] வைரமேறிய பனை மூங்கில் மரம் என்னும் இவைகளும் விலங்கின் கொம்புகளும் வில் ஆக்குதற்கு மூலப்பொருள்களாம்; தொழிலுருவ வேற்றுமைகளால் கார்முகம் முதலிய பெயர்களைப் பெற்றனவென்பது கருத்து.

[50] இவற்றுள் மூங்கில் நாண் கோதண்டத்திற்குரியது.

[51] மூங்கில் நாணற்றண்டு வன்மரம் இம்மூன்றும் அம்பு செய்தற்கு மூலப்பொருள்களாம்.

[52] தண்டாசனம்—இஃது இரும்பினாற் செய்து மரக்கோலிற் செருகப்படுவது.

[53] நாராசம்—முற்றும் இரும்பினாலாக்கப்படுவது.

[54] காண்டாமிருகம் முதலியவற்றின் கொம்புகளால் வாட்படைகளுக்குப் பிடி அமைக்கப்படும் என்பது.

[55] பரசு—மழு.

[56] பட்டசம்—இருமருங்கும் மும்மூன்று கூரிய முகங்களையுடையது.

[57] அரிவாள்—மரம் முதலியவற்றை அறுத்தற்குப் பயன்படும் பல பற்களையுடைய வாள்.

[58] பொறிக்கல்—இயந்திரத்தால் எறியப்படும் கல்.

கல் [59]எறிகல் [60]உடைகல் [61]உலக்கல் என்னும் இவைகளும் படைகளாம்.

[62]உலோகவலை [63]உலோகச்சிறுவலை [64]உலோகத்தகடு [65]உலோககவசம் [66]நூற்கவசம் என்னுமிவைகளும் [67]முதலை காண்டாமிருகம் கவயமா யானை எருது இவைகளின் தோல் குளம்பு கொம்புகள் என்னும் இவைகளும் கவசங்களாம். [68]தலைக்காப்பு கழுத்துக்காப்பு அரைக்கை [69]கஞ்சுகம் [70]முழுக்கவசம் [71]பட்டை [72]அராவயிறு இவைகளும் கவசங்களாம். [73]பேடி [74]தோல் [75]யானைச் செவி [76]அடிப்பனை [77]தமனிகை [78]கவாடம் [79]கிடுகு கைத்தடை [80]வலாக

---

[59] எறிகல்—கையாலெறியப்படும் கல்.

[60] உடைகல்—பிற பொருள்களை உடைத்து நுறுக்கும் கல்லாலாகிய யந்திரம்.

[61] உலக்கல்—திரண்ட பெரிய கல்.

[62] உலோகவலை—தலைமறைப்புடன் கூடிய கவசம்.

[63] உலோகச் சிறுவலை—தலையல்லாத உறுப்புக்களுக்குரிய கவசம்.

[64] உலோகத்தகடு—கையில்லாத கவசம்.

[65] உலோககவசம்—கையின்றி மார்பையும் முதுகையும் மறைக்கும் கவசம்.

[66] நூற்கவசம்—பருத்திநூலாற் செய்யப்பட்ட கவசம்.

[67] முதலை முதலியவற்றின் தோல் முதலியவைகளைக் கொண்டு திறமை வாய்ந்த சிற்பிகளால் கவசங்கள் ஆக்கப்படும் என்பது கருத்து.

[68] தலைக்காப்பு—தலைக்கு மாத்திரம் உரியது.

[69] கஞ்சுகம்—முழங்கால் வரையுள்ளது.

[70] முழுக்கவசம்—கணுக்கால் வரையுள்ளது.

[71] பட்டை—கைப்பகுதியின்றி உலோகமல்லாதவைகளால் செய்யப்படுவது.

[72] அராவயிறு—பாம்பின் வயிறுபோலாக்கப்படும் விரலுறை.

[73] பேடி—மரத்தாலும் கொடியாலும் அமைக்கப்படும் கிடுகு.

[74] தோல்—தோற்கிடுகு.

[75] யானைச்செவி—யானையின் செவிபோல் அகன்ற மரமூடி.

[76] அடிப்பனை—பனையாலமைக்கப்படுவது.

[77] தமனிகை—நூலாலாயது.

[78] கவாடம்—மரப் பலகையால் கதவுபோல் செய்யப்படுவது.

[79] கிடுகு—தோல் மூங்கில்களால் செய்யப்படுவது.

[80] வலாககாந்தம்—இது விளிம்பில் இருப்புப்பட்டம் கட்டப்பட்ட கைத்தடியாம்.

காந்தம் இவைகள் [81]தடைக்கருவிகளாம்.

யானை தேர் குதிரை இவற்றை நடாத்துதற்கு ஏற்ற [82]கருவிகளும் அணிகலன்களும் மேற்சேறலுக்குரிய [83]பொருள்களும் உபகரணங்களாம். [84]மாயச்செயல்களும் [85]கரவுச்செயல்களுமாம்.

**சுலோகம்**

குப்பியம் அவற்றின் தொழில் ஆகிய [86]இவற்றின்கண் நிகழும் [87]விழைவு தொடக்கம் முடிவு நடாத்தும்முறை குற்றம் ஊதியம் குறைவு செலவு ஆகிய இவற்றைப் [88]படைக்கலத்தலைவன் அறிதல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் பதினெட்டாம் பிரகரணம்
" படைக்கலத் தலைவன் " என்னும்
முப்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[81] தடைக்கருவிகள்—பகைவர் எய்யும் அம்புகளைத் தடுத்தற்குரிய கேடக வகைகளாம்.

[82] கருவி—சாட்டை தோட்டி முதலியன.

[83] பொருள்கள்—ஈண்டு கவசம் தோமரம் யானைகுதிரைகளுக்குரிய மெய்க்காப்பு இவைகளை உணர்த்தும்.

[84] மாயச்செயல்கள் — சிறுபடையைப் பெரும்படையாகவும் நெருப்பு இல்லாத இடத்தில் நெருப்பு இருப்பதாகவும் காட்டுதல் முதலியன.

[85] கரவுச்செயல்—14-ஆம் அதிகரணத்திற் கூறப்படும் நச்சுப்புகை முதலியவற்றை ஆக்குதலும் அதற்குப் பரிகாரமாகச் செய்யப்படும் எதிர்ச் செயல்களுமாம்.

[86] இவற்றின்கண்—சென்ற அத்தியாயத்திலும் இவ்வத்தியாயத்திலும் கூறப்பட்ட செய்திகளில்.

[87] விழைவு—அரசனது விருப்பம்.

[88] குப்பியத்தலைவனும் அறிந்துகொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை.

### பத்தொன்பதாம் பிரகரணம்—[1]துலைமுதலளவையின் நிலையாராய்தல்

### நாற்பதாம் அத்தியாயம்

அளவுகருவித் தலைவன் அளவுகருவிக்குரிய தொழில்களைச் செய்வித்தல் வேண்டும்.

பத்துக் [2]கூலமாடம் எடையாதல் ஐந்துகுன்றி எடையாதல் ஒரு [3]பொன்மாடகம் ஆகும். பதினாறு பொன்மாடகம் ஒரு [4]பொன் அல்லது கருடம் ஆகும். நான்கு கருடம்கொண்டது ஒரு பலமாம்.

எண்பத்தெட்டு வெண்கடுகெடை ஒரு [5]வெள்ளிமாடகம் ஆகும். அது பதினாறு கொண்டஎடை ஒருதரணம் ஆகும். இருபது சிம்பிப்பழம் எடைகொண்டதும் [6]அது.

இருபது [7]அரிசி எடைகொண்டது ஒரு [8]வைரதரணம். [9]மாடக அளவையை அரை ஒன்று இரண்டு நான்கு எட்டு மாடகங்கள்

---

### 40-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] துலைமுதலளவை—நிறுத்தலளவை முகத்தலளவை முதலிய அளவு கருவிகள். நிலை—ஏற்றத்தாழ்வின்மை. ஆராய்தல்—புதியனவும் பழையனவுமாகிய கருவிகளைச் சோதித்தல். உணவுப்பொருள் விலைப்படுபண்டம் குப்பியம் படைக்கலம் என்னும் இவற்றிற்கு அளவுகருவிகள் இன்றியமையாது வேண்டப்படுவனவாதலால் அவற்றின்பின் இது வைக்கப்பட்டது. இதனாற் பிரகரணவியைபு புலனாதலறிக.

[2] கூலமாடம்—உழுந்து.

[3] பொன்மாடகம்—பொன்னை நிறுத்தற்குரிய அளவு.

[4] பொன் என்பது ஈண்டு ஒருவகை நிறுத்தலளவையைக் குறிக்கும்.

[5] வெள்ளிமாடகம்—வெள்ளியை நிறுத்தற்குரிய அளவு.

[6] அது—தரணம்.

[7] அரிசி—முனைமுறியாத நடுத்தரமான நெல்லரிசி.

[8] வைரதரணம்—வைரத்தை நிறுத்தற்குரிய அளவு.

[9] நிறுத்தலளவைக் கருவிகளின் அமைப்பைப்பற்றிக் கூறத் தொடங்குகின்றார்.

எனவும், பொன் அளவையை ஒன்று இரண்டு நான்கு எட்டு பத்து இருபது முப்பது நாற்பது நூறு பொன்கள் எனவும் [10]இங்ஙனம் கொள்க.

இதனால் தரணங்களும் [11]கூறப்பட்டபடியாம். நிறைக் கற்கள் இரும்பினாலாதல் மகதநாட்டு மலைக்கல்லாலாதல் மேகல நாட்டு மலைக்கல்லாலாதல் அமைக்கப்படுதல் வேண்டும்.

நனைத்தலாலும் அழுக்கேறுதலாலும் எடைமிகாதனவும் [12]வெப்பத்தால் எடைகுன்றுதனவும் ஆகிய [13]பொருள்களாலும் [14]அமைக்கப்படலாம்.

துலைக்கோல் ஆறங்குல நீளமும் ஒருபல எடையும் உடைய கோல் தொடங்கி முறையே [15]எவ்வெட்டங்குல நீளமும் ஒவ்வொரு பல எடையும் மிகுத்துப் பத்துவகைத் துலைக்கோல்கள் அமைத்தல் வேண்டும். கோலின் [16]இருபுறத்தும் உறியலமைக்கலாம்.

முப்பத்தைந்து பலம் எடையுள்ள இரும்பைக்கொண்டு எழுபத்திரண்டங்குல நீளமுள்ளதாகத் [17]திரள்கோலைச் செய்தல்

---

[10] இங்ஙனம் பதின்மூன்கு வகையாகக் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[11] வெள்ளி நிறுத்தற்குரிய தரண அளவை முதலியவைகளையும் ஒன்று இரண்டு நான்கு எட்டு முதலாகப் பொன்னிற்குக் கூறியபடி கொள்க.

[12] வெப்பத்தாலுண்டாம் உலர்ச்சியினால் எடை குறையும் என்பது கருத்து.

[13] பொருள்கள்—சிப்பி சங்கு முதலியன.

[14] நிறைக்கற்கள் அமைக்கப்படலாம் என்பது கருத்து; நிறைக்கல்—படிக்கல்.

[15] இரண்டாவது துலைக்கோல் பதினான்கங்குல நீளமும் இரண்டு பல எடையும் உடையதாகவும், மூன்றுவது இருபத்திரண்டங்குல நீளமும் மூன்று பல எடையும் உடையதாகவும் இங்ஙனமே எவ்வெட்டு அங்குல நீளமும் ஒவ்வொரு பல எடையும் மிகுத்துப் பத்தாவது துலைக்கோல் எழுபத்தெட்டங்குல நீளமும் பத்துப் பல எடையும் உடையதாகவும் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து.

[16] இருபுறத்தும் என்ற உம்மையால் ஒருபுறத்தும் அமைக்கலாம் என்பதாம்; இத்துலைக்கோல்களே வெள்ளி பொன் நிறுத்தற்கும் உரியனவாம்.

[17] திரள்கோல்—துலைத்தட்டுக்கு மேல் திரண்ட வடிவிலமைக்கப்படும் இருப்புக்கோல்; இதுபற்றி இத்துலை திரள்கோல் என்னும் பெயரினதாகும்.

வேண்டும். அக்கோலில் ஐந்துபல எடையுள்ள துலைத் தட்டை அமைத்துச் [18]சமன்செய்தல் வேண்டும். கோலில் கருடம் முதலாகப் பலம் வரையில் ஒவ்வொரு கருடத்திற்கும் ஒரு பலம் முதல் பத்துப் பலம்வரை ஒவ்வொரு பலத்திற்கும் பன்னிரண்டு பதினைந்து இருபது பலங்களுக்கும் [19]வரை கீறுதல் வேண்டும். பின்னர் நூறு வரை ஒவ்வொரு பத்திற்கும் ஒவ்வொரு வரை [20]கீறுதல் வேண்டும். [21]அச்சு எண்களில் குறுக்குவரை கீறுதல் வேண்டும்.

[22]இதனெடையின் [23]இருமடங்கு கொண்ட இரும்பைக் கொண்டு தொண்ணூற்றாறங்குல நீளமுள்ள [24]அளவுகோல் என்னும் துலைக்கோலைச் செய்தல்வேண்டும். அதனுடைய [25]நூறு பல வரையின்பின் இருபது ஐம்பது [26]நூறு என்னும் வரைகளைக் கீறுதல்வேண்டும்.

இருபது [27]துலை ஒரு பாரம்.[28]

பத்துத் தரணம் ஒரு பலம். அப்பலம் நூறு கொண்டது

---

[18] சமன்செய்தல்—துலைக்கோல் ஒருபால் உயர்ந்தும் ஒருபால் தாழ்ந்தும் இராமல் சமனாக இருக்கும்படி அடையாளமிடுதல்.

[19] வரை—கோடு.

[20] காற்பலம் முதல் நூறுபலம் வரை அளவு அறிந்துகோடற்கு இருபத்துநான்குகோடு துலாக்கோலிற் கீறவேண்டும் என்பது கருத்து.

[21] அச்சு எண்—ஐந்து பத்து பதினைந்து முதலிய ஐந்தாந்தானத்தெண்கள்; அவ்வெண்களைக்குறிக்கும் வரைகளை விளக்கமாக அறிந்துகொள்ளுதற்பொருட்டுக் குறுக்குவரை கீறல்வேண்டும் என்பது கருத்து. இக்குறுக்கு வரையை சுவத்திக அடையாளமாகக் கீறல்வேண்டும் என்பது ஒருசாரார் கொள்கை.

[22] இதனெடை—திரள்கோலினெடை.

[23] இருமடங்கு—எழுபது பலம்.

[24] அளவுகோல் என்பது ஒரு பெருந்துலையின் பெயர்.

[25] இதன் கோலில் நூறு நூற்றிருபது நூற்றைம்பது இருநூறு முதலிய பலங்களுக்குரிய கோடுகளைக் கீறல்வேண்டும் என்பது.

[26] ஈண்டு நூறென்பது நூற்றுக்கு மேற்பட்ட நூறுதலின் இருநூறாகும்.

[27] துலை—நூறுபலம் கொண்டது.

[28] இத்துணையும் பொன் வெள்ளிகளுக்குரிய அளவையாகும்; இனி அவையல்லாத பிறபொருள்களுக்குப் பயன்படும் அளவைக் கூறுகின்றார்.

[29]ஊதிய அளவை. [30]ஊதிய் அளவையினின்றும் முறையே ஒவ்வொன்றின் ஐந்தைந்து பலம் குறைந்த அளவு [31]வாணிக அளவு [32]கூலி அளவு [33]உவளகஅளவு (எனப்படும்).

[34]இவற்றிற்குப் பலம் முறையே [35]அரையரைத்தரணம் குறைந்ததாம். [36]இவைகளின் கோல்களுக்குரிய இரும்பும் முறையே இரண்டிரண்டு பலம் குறைவாம். நீளமும் முறையே அவ்வாறங்குலம் குறைவாம்.

இறைச்சி உலோகம் உப்பு மணி இவைகள் தவிர ஏனைய பொருள்கள் மேற்கூறிய [37]இரண்டு கோல்களாலும் நிறுக்கப்படுங்

---

[29] ஊதிய அளவை—அரசன் தனக்கு வருவாயாகவுள்ள பொருளை நிறுத்தற்குரிய அளவு.

[30] ஒரு துலைக்கு நூறு பலமாகவும் தொண்ணூற்றைந்து பலமாகவும் தொண்ணூறு பலமாகவும் எண்பத்தைந்து பலமாகவும்கொண்டு முறையே அவற்றை ஊதிய அளவு வாணிக அளவு கூலியளவு உவளக அளவு எனக் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[31] வாணிக அளவு—கொள்ளல் விற்றற்குரியது.

[32] கூலியளவு—பணிசெய்வார்க்குக் கூலிகொடுத்தற்குரியது.

[33] உவளக அளவு—உவளகத்து மக்கள் மகளிர் முதலியோர்க்குரியது.

[34] இவற்றிற்கு—வாணிக அளவு முதலியவற்றிற்கு.

[35] ஊதிய அளவிற்குப் பத்துத்தரணம் கொண்டது ஒரு பலமாகவும் அப்பலம் நூறுகொண்டது ஒரு துலையாகவும் கொள்ளல்வேண்டும் என்பதூஉம், வாணிக அளவிற்கு ஒன்பதரைத் தரணங்கொண்டது ஒரு பலமாகவும் அப்பலம் நூறுகொண்டது ஒரு துலையாகவும் கொள்ளல்வேண்டும் என்பதூஉம், கூலியளவிற்கு ஒன்பது தரணம் கொண்டது ஒரு பலமாகவும் அப்பலம் நூறு கொண்டது ஒரு துலையாகவும் கொள்ளல்வேண்டும் என்பதூஉம், உவளக அளவிற்கு எட்டுத் தரணம் கொண்டது ஒரு பலமாகவும் அப்பலம் நூறு கொண்டது ஒரு துலையாகவும் கொள்ளல்வேண்டும் என்பதும் கருத்து.

[36] ஊதியக்கோல் முப்பத்தைந்து பலம் எடையும் எழுபத்திரண்டு அங்குல நீளமும் உடையதாம் எனவும், வாணிகக்கோல் முப்பத்துமூன்று பல எடையும் அறுபத்தாறு அங்குல நீளமும் உடையதாம் எனவும், கூலிக்கோல் முப்பத்தொரு பல எடையும் அறுபதங்குல நீளமும் உடையதாம் எனவும், உவளகக்கோல் இருபத்தொன்பது பல எடையும் ஐம்பத்தினன்கங்குல நீளமும் உடையதாம் எனவும் கொள்க.

[37] இரண்டு கோல்கள்—அளவுகோலும் ஊதிய அளவுமாம்.

கால் ஐந்துபலம் [38]பிரயாமமாகும்.

மரத்துலைக்கோலை எட்டுமுழ நீளமும் வரைகளும் நிறைக் கற்களும் உடையதாகவும் [39]மயிற்காலைப்பற்றி நிற்பதாகவும் அமைத்தல் வேண்டும்.

ஒருபடி அரிசியைச் சமைத்தற்கு இருபத்தைந்துபலம் விறகு வேண்டும். [40]இதுவே மிகுதி குறைவுகளுக்கும் வழியாம்.

இவ்வாறு [41]துலைக்கோலும் [42]அளவுங் கூறப்பட்டன.

[43]இருநூறுபல உழுந்துகொண்டது ஓர் ஊதிய அளவைத் [44]தூணியாம். நூற்றெண்பத்தேழரைப் பலங்கொண்டது ஒரு வாணிகத்தூணியாம். நூற்றெழுபத்தைந்துபலம் கொண்டது ஓர் [45]உவளகத்தூணியாகும்.

[46]இத்தூணிகளின் மரக்கால் படி உழக்குகள் தத்தம் தூணியி னின்றும் முறையே ஒன்றற்கொன்று [47]நான்கில் ஒரு கூறுடைய தாகும்.

பதினாறு தூணி ஒரு காரியாம். இருபது தூணி ஒரு குடமாம். பத்துக்குடம் ஒரு சுமையாம்.

---

[38] பிரயாமம்—நூற்றுக்கு ஐந்து விகிதம் அதிகமாகக் கொடுக்கப்படுவது.

[39] மயிற்கால்—மயிற்கால் போன்ற வடிவமுடைய தூண்கள்.

[40] இவ்வளவையே அரிசியின் மிகுதி குறைவுகளுக்கு ஏற்பக்கொள்ளத் தக்கது. இஃது உணவுப்பொருணிலையத் தலைவன் என்னும் பிரகரணத்திற் கூறத்தக்கதாயினும், சிறுபொருளாயினும் மிகுதியாகச் செலவிடலாகாது என்பதைப் புலப்படுத்தற்கு அளவுபற்றிய இப்பிரகரணத்திற் கூறப் பட்டது.

[41] துலைக்கோல் பதினாறு வகைப்படும்.

[42] அளவு—நிறுத்தலளவைக் கருவி ; இது பதினான்கு வகைப்படும்.

[43] இனி முகத்தலளவையைப்பற்றிக் கூறத் தொடங்குகின்றார்.

[44] தூணி—நான்கு மரக்கால் அல்லது பதினாறு படி கொண்டது.

[45] இங்கே கூறிய ஊதியம் வாணிகம் கூலி உவளகம் ஆகிய நான்கையும் பற்றி நிறுத்தலளவையிற் கூறிய குறிப்பிற் காண்க.

[46] இத்தூணிகள்—ஊதியஅளவுத்தூணி முதலியன.

[47] நான்கு உழக்குக்கொண்டது ஒரு படியாகவும் நான்கு படிகொண் டது ஒரு மரக்காலாகவும் நான்கு மரக்கால்கொண்டது ஒரு தூணியாகவும் கொள்ளல்வேண்டும் என்பது.

அளவுகருவி [48]சமவடிவமுடையதாகவும் [49]காற்கூறு தங்குதற்கேற்ற மேற்பரப்புடையதாகவும் உலர்ந்த வன்மரத்தாற் செய்வித்தல் வேண்டும். [50]முழுதும் அகத்துள் அடங்குமாறும் செய்விக்கலாம். [51]நெகிழ்ச்சிப் பொருளுக்கு அகத்துள் அடங்குமாறே செய்வித்தல் வேண்டும்.

கள் மலர் பழம் உமி கரி சுண்ணும்பு நீறு இவைகளுக்கு மேற்பரப்பு [52]இருமடங்காக அமைத்தல்வேண்டும்.

தூணி என்னுங் கருவியின் விலை ஒன்றேகாற்பணம். மரக்காலின் விலை முக்காற்பணம். படியின் விலை ஆறு [53]மாடகமாம். உழக்கின் விலை ஒரு மாடகம் ஆகும்.

நெகிழ்ச்சிப் பொருளிற்குரிய அளவுகருவிகளின் விலை [54]இருமடங்காகும். [55]நிறைக் கற்களின் விலை இருபது பணம் ஆகும். துலைக்கோலின் விலை [56]மூன்றில் ஒரு கூறாகும்.

---

[48] சமவடிவம்—அடியும் நுனியும் ஒத்த அளவு.

[49] இம்முகத்தலளவைக் கருவிகளில் முக்காற்கூறு கருவியின் உள்ளே தங்கும்படியாகவும் காற்கூறு மேற்பகுதியிற்றங்கும்படியாகவும் அமைக்க வேண்டும் என்றபடி.

[50] உழக்கு முதலியவற்றின் மேற்பரப்பிற் கொள்ளத்தக்க பொருளை உள்ளேயே அடங்குமாறு அவற்றைப் பெரிதாகவும் அமைக்கலாம் என்பது கருத்து.

[51] நெகிழ்ச்சிப்பொருள்—நெய் எண்ணெய் முதலியன.

[52] உழக்கு முதலியவற்றின் மேற்பரப்பில் தங்கவேண்டிய நான்கில் ஒரு கூறு இருமடங்கு ஆகவேண்டும் என்னும் இதனுல் ஒருபடி ஐந்துழக்குக் கொள்ளத்தக்கதாக அமைக்கவேண்டும் என்பது போதரும்; மேற்பரப்பில் இருமடங்கு தங்கமாட்டாவாதலால் முழுதும் உள்ளே தங்கும்படி அமைக்க வேண்டும் என்பது கருத்து.

[53] பத்துமாடகம் கொண்டது ஒரு கருடம் அல்லது ஒரு பணம் என்ப.

[54] மேல்பரப்பில் கொள்ளத்தக்க பொருளும் உள்ளடங்கும்படி பெரிதாக இருப்பதாலும் வழுவழுப்பான உயர்ந்த வன்மரத்தால் செய்யப்படுவதாலும் விலை இருமடங்காகும் என்பது கருத்து.

[55] பதினன்கு வகையான நிறுத்தலளவைக் கருவிகள் எல்லாவற்றிற்கும் விலை இருபதுபணம் என்பதாம்.

[56] இருபதில் மூன்றில் ஒரு கூறு என்பது.

நான்கு திங்களுக்கு ஒரு முறை ஆராய்ந்து [57]இலச்சினையிடுதல் வேண்டும். [58]இலச்சினையிடாவிடில் இருபத்தேழேகாற் பணம் தண்டமாகும். இலச்சினையிடும்பொருட்டு நாளொன்றிற்குக் [59]கால் மாடம் விகிதம் அளவுகருவித் தலைவனுக்குக் கொடுத்தல்வேண்டும்.

நெய்க்கு முப்பத்திரண்டில் ஒரு கூறும் எண்ணெய்க்கு அறுபத்துநான்கில் ஒரு கூறும் [60]உருக்குவாசியாகும். நெகிழ்ச்சிப் பொருள்களுக்கு [61]ஐம்பதில் ஒரு கூறு அளவுக்குறையீடாம்.

உழக்கிற் குறைந்த அரை கால் அரைக்கால் உழக்கு அளவு கருவிகளையும் செய்வித்தல்வேண்டும்.

### சுலோகம்

எண்பத்துநான்கு உழக்கு நெய்கொண்டது ஒரு நெய்வாரகம் எனவும், அறுபத்துநான்கு உழக்கு எண்ணெய் கொண்டது ஓர் எண்ணெய் வாரகம் எனவும் ஆம். இவ்விரண்டின் காற்கூறுகள் [62]சிறுகுடம் எனப்படும்.

இரண்டாம் அதிகரணம் பத்தொன்பதாம் பிரகரணம்
" துலைமுதலளவையின் நிலையாராய்தல் " என்னும்
நாற்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[57] நிறுத்தலளவை முகத்தலளவைக் கருவிகளுக்கு அரசியல் இலச்சினை இடல்வேண்டும் என்பது.

[58] இலச்சினை இடாமல் வழங்கப்படின் என்பது.

[59] நான்கு மாதங்களுக்கு மூன்று பணம் ஆகும் என்பதாம்.

[60] மீண்டும் உருக்கி அளப்பதால் குறைவுபடுதல் குறித்து மிகுதியாக வாங்குதல் வேண்டும் என்பது.

[61] எல்லா நெகிழ்ச்சிப்பொருள்களுக்கும் ஐம்பதில் ஒரு கூறு குறையீடாம் என்பது கருத்து.

[62] நெய்ச்சிறுகுடம் எண்ணெய்ச்சிறுகுடம் எனப் பெயர் பெறும்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபதாம் பிரகரணம்—[1]நிலம் பொழுதளவை

## நாற்பத்தோராம் அத்தியாயம்

அளவைத்தலைவன் நிலம் பொழுது ஆகிய இவற்றின் அளவைகளை அறிதல்வேண்டும். எட்டுச் [2]சிற்றணுக்கொண்டது ஒரு [3]தேராழித்துகளாம். அஃது எட்டுக்கொண்டது ஓர் [4]ஈராகும். அஃது எட்டுக்கொண்டது ஒரு [5]பேனிடை. அஃது எட்டுக்கொண்டது ஓர் [6]யவவிடை. எட்டு யவவிடை கொண்டது ஓர் அங்குலம்.

நடுத்தரமான மனிதனுடைய கையின் நடுவிரலின் நடுப்பகுதியினது அகலமும் ஓர் அங்குலமாம்.

நான்கங்குலம் கொண்டது ஒருவிற்கோளாம். எட்டங்குலங் கொண்டது ஒரு விற்பிடியாகும். பன்னிரண்டங்குலம் கொண்டது ஒரு சாண் அல்லது ஒரு [7]நிழலாளளவாகும். பதினான்கங்குலங் கொண்டது சமம் சலம் பரிரயம் அடி என்னும் பெயர்களால் வழங்கப்படும். இரண்டுசாண், ஒரு முழம் அல்லது [8]பிராசாபத்திய முழம் எனப்படும். [9]மரஅளவுகருவியையும் புன்னிலத்தை

---

### 41-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] முன்னைப் பிரகரணத்தில் துலைமுதலியவற்றின் அளவு கூறப்பட்டது; இதன்கண் அளவையினம்பற்றி நில அளவை கால அளவைகள் கூறப்படுதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது. இதனாற் பிரகரண இயைபுண்மையறிக.

[2] சிற்றணுக்கள், கட்புலனுக்குப் புலப்படாதவை.

[3] தேராழித்துகள்—தேர் உருளினின்றும் உண்டாவது; கட்புலனுக்குப் புலப்படும் இயல்பினது.

[4] ஈர்—பேன்முட்டை.

[5] பேனிடை—பேனின் நடுப்பகுதி.

[6] யவவிடை—யவம் என்னும் தானியத்தின் நடுக்கூறு.

[7] நிழலாள் அளவு—இதனைச் சாயாபுருஷப்பிரமாணம் என்பர்.

[8] பிராசாபத்தியம்; பிரசாபதி—பிரமன்.

[9] மரஅளவுகருவி—மரத்துலைக்கோல் முதலியன.

யும் அளத்தற்குரிய முழம் ஒரு விற்கோள் மிக்கதாகும். ஒரு விற்பிடி மிக்கமுழம் [10]கிட்கு அல்லது கஞ்சம் எனப்படும். நாற்பத்திரண்டங்குலம் கொண்டது தச்சனுடைய [11]வாட்டொழிற்குரிய முழமாகும். இஃது அரசனுடைய பாசறை அரண் இவைகளுக்கும் அளவுகருவியாம். ஐம்பத்துநான்கங்குலம் கொண்டது குப்பியப்பொருள் காடு இவைகளுக்குரிய ஒரு முழமாகும். எண்பத்துநான்கங்குலம் கொண்டது [12]ஒருபாகம் ஒருகயிற்றளவு [13]ஓராளாழம் என்னும் பெயர்களால் வழங்கப்படும். நான்கு முழம் கொண்டது ஒருகோல் ஒருவிற்கிடை ஒருநாளி ஓர் ஆளளவை (என்னும் பெயர்களைப் பெறும்). நூற்றெட்டங்குலம் கொண்டது ஒரு [14]கொற்றுவிற்கிடையாம். இது வழி மதில் இவற்றை அளத்தற்குரியதாம். [15]அங்கிவழிபாட்டில் ஆளளவை என்பதும் இது.

[16]அந்தணர் [17]விருந்தினர் இவர்களுக்குக்கொடுக்கும் நிலத்தை அளத்தற்குரிய ஒரு கோல் [18]ஆறு கஞ்ச அளவு கொண்டதாகும். பத்துக்கோல் கொண்டது ஒரு கயிறு ஆகும். இரண்டு கயிறு கொண்டது ஒரு பரிதேசம் ஆகும். மூன்று கயிறு கொண்டது ஒரு [19]நிவர்த்தனம் ஆகும். [20]ஒரு பகுதியில் இரண்டு கோல் மிக்கது

---

10 கிட்கு—முப்பத்திரண்டங்குலம்கொண்ட பெருமுழம்.

11 வாட்டொழில் — வாளால் அறுக்கப்பட்ட மரம் முதலியவற்றை அளத்தல்.

12 பாகம்—இரண்டு கைகளையும் இருமருங்கும் நீட்டிக் கண்ட அளவு.

13 ஓர் ஆள் ஆழம்—கிணறு முதலியவற்றின் ஆழத்தை அளத்தற்குரிய புருடப்பிரமாணம்.

14 கொற்று—மதில்வழி முதலியன அமைக்கும் கொற்றன் தொழில்.

15 வேள்வியில் தீக்கடவுளை வழிபடுதற்கு அமைக்கப்படும் குண்டம் மண்டலம் முதலியவற்றை அளத்தற்குரியது என்பது கருத்து.

16 அந்தணர்—வேள்வி செய்விப்போர் முதலியோர்.

17 விருந்தினர்—புதியராக வந்தவர்கள்.

18 ஆறுகஞ்சம்—எட்டுமுழ நீளம்.

19 நிவர்த்தனம் என்பது நீளத்தினும் அகலத்தினும் முப்பது முப்பது கோல் கொண்ட ஒரு சமசதுர அளவின் பெயராகும்.

20 முப்பத்திரண்டு கோல் நீளமும் முப்பது கோல் அகலமுமுடைய ஒரு நெடுஞ்சதுரம் ஒரு கையாகும் என்பது.

ஒரு கையாகும். இரண்டாயிரம் விற்கிடை கொண்டது ஓர் [21]ஆனெலியாகும். நான்கு ஆனெலி கொண்டது ஒரு [22]யோசனை தூரமாகும். நில அளவை இங்ஙனமாம்.

இனிப் பொழுதளவை (வருமாறு) :—

துடி இலவம் நிமேடம் காட்டை கலை நாழிகை முழுத்தம் முன்பின் பொழுதுகள் பகல் இரவு பக்கம் திங்கள் பருவம் அயனம் யாண்டு யுகம் [23]இவை காலங்களாம்.

[24]நிமேடத்தில் நான்கில் ஒரு கூறு ஒரு துடி.
இரண்டு துடி ஓர் இலவம்.
இரண்டு இலவம் ஒரு நிமேடம்.
ஐந்து நிமேடம் ஒரு காட்டை.
முப்பது காட்டை ஒரு கலை.
நாற்பது கலை ஒரு [25]நாழிகை.

[26]நான்கு பொன்மாட எடையினுல் நான்கங்குல நீளமுடையதாகத் திரட்டப்பட்ட கம்பி நுழைதற்கேற்ற குடத்தின் தொளை வழியாக ஒரு மரக்கால் நீர் ஒழுகும் காலமும் நாழிகையாம்.

---

21 ஆனெலி—பசுவொலிகேட்கும் தொலைவு ; ஈண்டு அத்துணை நீளத்தைக்குறிக்கும் ஓர் அளவாகும் ; இதனைக் குரோசம் என்றும் கூறுப.

22 இரண்டாயிரம் விற்கிடை எண்ணுயிரம் முழமாகும்; அஃது ஆனெலி எனவும் குரோசம் எனவும் பெயர்பெறும் என்பதும், அக்குரோசம் நான்கு அல்லது முப்பத்தீராயிரம் முழம் கொண்டது ஒருயோசனை தூரமாகும் என்பதும் கருத்து.

23 துடிமுதல் யுகம் வரையிலுள்ள இப்பதினேழும் கால அளவையின் கூறுகளாம்.

24 நிமேடம் — மனிதருக்கு இயல்பாக உண்டாகும் கண்ணிமைப் பொழுது ; இதனை ஒரு மாத்திரை என்றும் கூறுவர்.

25 கண்ணிமைப்பொழுது அல்லது மாத்திரைப்பொழுது ஆருயிரம் கொண்டது ஒரு நாழிகையாம் என்பது.

26 நாழிகையின் அளவை மற்றொரு வகையாகக் கூறுகின்ருர். இங்கே கூறிய அளவில் தொளையமைக்கப்பட்ட ஒரு குடத்தில் ஒருமரக்கால் நீர் பெய்து ஒழுகவிடின் அந்நீர் முற்றும் ஒழுகும் காலம் ஒரு நாழிகையாம் என்பது ; இதனை நாழிகைவட்டில் என்று தமிழ்நூல் கூறும்.

இரண்டு நாழிகை ஒரு [27]முழுத்தம் ஆகும். [28]சித்திரைத் திங்களிலும், ஐப்பசித் திங்களிலும் நிகழும் பகலிரவுகள் தனித் தனிப் பதினைந்து முழுத்தம் உடையனவாம்.

[29]அவற்றின் பின்னர் [30]ஆறு திங்களிற் பகலிரவுகள் மூன்று முழுத்தகால அளவு கூடியும் குறைந்தும் வரும்.

[31]நிழல் [32]எட்டாள் நீளமிருந்தால் (முற்பகலில்) [33]பதினெட்டில் ஒரு கூறும், ஆறாள் நீளமிருந்தால் பதினான்கில் ஒரு கூறும், நான்காள் நீளமிருந்தால் எட்டில் ஒரு கூறும், இரண்டாள் நீளமிருந்தால் ஆறில் ஒரு கூறும், ஓராள் நீளமிருந்தால் நான்கில் ஒரு கூறும், எட்டங்குல நீளமிருந்தால் பத்தில் மூன்று கூறும், நான்கங்

---

[27] முழுத்தத்தின்பின் முன்பின் பொழுதுகள் என்றுகூறியது, முற்பகல் பிற்கல் முன்னிரவு பின்னிரவு என்பவற்றைக் குறிக்கும்.

[28] சித்திரைத்திங்கள் முதனாளிலும் ஐப்பசித்திங்கள் முதனாளிலும் பகலிரவுகள் தனித்தனியே முப்பது நாழிகை உடையனவாகும் என்பது.

[29] அவற்றின் பின்னர்—சித்திரைத்திங்களின் முதல்நாளும் ஐப்பசித் திங்களின் முதல்நாளும் ஆகிய அவற்றின்பின்.

[30] சித்திரைத்திங்கள் முதல் ஆறுதிங்கள் பகல்நாழிகை கூடியும், இரவு நாழிகை குறைந்தும் வரும் என்பதும், ஐப்பசித்திங்கள் முதல் ஆறுதிங்கள் பகல்நாழிகை குறைந்தும் இரவுநாழிகை கூடியும் வரும் என்பதும், கூடுதல் முப்பத்துமூன்று நாழிகை வரையும் குறைதல் இருபத்தேழுநாழிகை வரையுமாம் என்பதும், அங்ஙனம் ஏற்படுங்கால் மூன்று முழுத்தகால அளவாகிய ஆறுநாழிகை கூடியும் குறைந்தும் வரும் என்பதும் கருத்து. பகல் முப்பத்துமூன்று நாழிகையாகுங்கால் இரவு இருபத்தேழு நாழிகை ஆகுமாதலால், ஆறுநாழிகை குறைவாதலறிக.

[31] நிழலளவையைக்கொண்டு காலந்துணியுமாறு கூறுகின்றார்.

[32] எட்டாள் நீளமென்பது ஈண்டுப் பன்னிரண்டங்குல நீளமுள்ள எட்டுநிழலாள் நீளமெனக் கொள்ளல்வேண்டும். பன்னிரண்டங்குலம் வெளிப்பட்டிருக்கும்படி ஒருமுளையை நிலத்திலடித்துக் கணக்கிடலாம். பின்வரும் ஆறு நான்கு இரண்டு ஒன்றுஎன்னும் ஆள்நீளங்களையும் நிழலாள் அளவாகவே கொள்ளல்வேண்டும்.

[33] பதினெட்டில் ஒருகூறென்பது:—அத் திங்களுக்குரிய பகல்நாழிகையைப் பதினெண்கூறுபடுத்து அவற்றில் ஒரு கூறு எனக் கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கொள்ளுங்கால் சிறிதுகூடிய ஒன்றரை நாழிகையாம். இங்ஙனமே பிறவற்றிற்குங் கொள்க.

குல நீளமிருந்தால் எட்டில் மூன்று கூறும் [34]கழிந்தனவாம். நிழலில்லாதது நண்பகலாம். பிற்பகலில் இங்ஙனம் [35]எஞ்சியதாகக் கொள்ளல்வேண்டும்.

ஆடித்திங்களில் [36]நண்பகல் நிழலற்றதாக இருக்கும். பின்னர் ஆவணி தொடங்கி ஆறுதிங்கள்வரை நிழல் [37]இரண்டங்குலம் மிகுந்தும் மாசி தொடங்கி இரண்டங்குலம் குறைந்தும் இருக்கும்.

பதினைந்து நாட்கள் கொண்டது ஒரு பக்கம் ஆகும். திங்கள் வளரும் பக்கம் வளர்பிறைப் பக்கமும் தேயும் பக்கம் தேய்பிறைப் பக்கமும் ஆம்.

இரண்டு பக்கம் கொண்டது ஒரு திங்கள்.
முப்பது நாட்கள் கொண்டது ஒரு [38]கூலித் திங்கள்.
[39]அரைநாள் மிக்கது ஒரு சௌரமாதம்.
[40]அரைநாள் குறைந்தது ஒரு சாந்திரமாதம்.
இருபத்தேழு (நாட்கள் கொண்டது) மீன்மாதம்.
முப்பத்திரண்டு (நாட்கள் கொண்டது) [41]மலமாதம்.
முப்பத்தைந்து (நாட்கள் கொண்டது) [42]குதிரைக்காரருக்குரிய ஒரு மாதம் ஆம்.

---

[34] முற்பகலுக்கு மேற்கூறிய நாழிகையைக் கழித்து எஞ்சிய நாழிகையை இருப்பதாகக் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[35] முன்குறிப்பிட்ட நாழிகையைப் பிற்பகலில் எஞ்சியிருப்பதாகக் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[36] நண்பகல் என்பது அவ்வத்திங்களுக்குரிய பகல்நாழிகையின் பாதி அளவைக் குறிக்கும்.

[37] ஆவணிதொடங்கித் தைத்திங்கள்வரை நண்பகலில் நிழல் சிறிது சிறிதாகக்கூடி இரண்டங்குலம்வரை மிகுந்துகாணப்படும் எனவும், மாசி தொடங்கி அங்ஙனம் மிக்க நிழல் சிறிது சிறிதாகக் குறைந்துஆடித்திங்களில் முற்றும் ஒழிந்துவிடும் எனவும் கொள்க.

[38] கூலித்திங்கள்—பணியாளர்க்குக் கூலிகொடுக்கும் நிமித்தம் கணக்கிட்டுக்கொள்ளப்படுவது.

[39] அரைநாள் மிக்கது—முப்பதரைநாள்; இது சூரியகதியைக்கொண்டு கணக்கிடப்படுவது.

[40] அரைநாள் குறைந்தது—இருபத்தொன்பதரைநாள்; இது சந்திர கதியைக்கொண்டு கணக்கிடப்படுவது.

[41] மலமாதம்—நற்காரியங்களுக்கு விலக்கப்பட்ட மாதம்.

[42] குதிரைப்பணியாளர்க்குக் கூலிகொடுத்தற்குரியதென்பது கருத்து.

நாற்பது (நாட்கள் கொண்டது) [43]யானைப் பாகருக்குரிய ஒரு மாதம் ஆம்.

[44]இரண்டு திங்கள் ஒரு பருவம்.

ஆவணியும் புரட்டாசியும் கார்ப்பருவம்.

ஐப்பசியும் கார்த்திகையும் கூதிர்ப்பருவம்.

மார்கழியும் தையும் முன்பனிப் பருவம்.

மாசியும் பங்குனியும் பின்பனிப் பருவம்.

சித்திரையும் வைகாசியும் இளவேனிற் பருவம்.

ஆனியும் ஆடியும் முதுவேனிற் பருவம்.

[45]பின்பனிப்பருவந் தொடங்கி உத்தராயணமாம்.

[46]கார்ப்பருவம் தொடங்கித் தக்கணாயனமாம்.

இரண்டு அயனங்கள் ஓரியாண்டாகும்.

ஐந்தியாண்டு ஒரு யுகமாம்.

## சுலோகங்கள்

(1) ஞாயிறு, நாடோறும் [47]நாளின் அறுபதில் ஒரு கூற்றைக் [48]கவர்ந்தெடுத்தலால் [49]ஒரு பருவத்திற்கு ஒருநாள் மிகும்படி செய்கிறான். திங்களும் அங்ஙனமே ஒரு நாளை மிகும்படி செய்கிறான்.

---

[43] இது யானைப்பாகருக்குரியது.

[44] ஈண்டுத் திங்கள் என்பது இரண்டு பக்கங்களையுடையது.

[45] பின்பனிப்பருவத்தின் தொடக்கம் மாசித்திங்களாகும்; பருவமுறை பற்றி இவ்வாறு கூறினும் முன்பனிப்பருவத்தின் பிற்பகுதியாகிய தைத் திங்கள் தொடங்கி உத்தராயணமாம் என்று கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[46] கார்ப்பருவத்தொடக்கம் ஆவணித்திங்கள் ஆகும்; பருவமுறைபற்றி இவ்வாறு கூறினும், முதுவேனிற் பருவத்தின் பிற்பகுதியாகிய ஆடித் திங்கள் தொடங்கி தக்ஷிணாயனமாம் என்று கொள்ளல்வேண்டும்.

[47] ஞாயிற்றுக்கேற்ப நாளைப் பகலெனவும் திங்களுக்கேற்ப இரவென வும் கொள்ளல்வேண்டும்.

[48] கவர்ந்தெடுத்தல்—நாளொன்றுக்கு ஒரு நாழிகைவிகிதம் குறைத்துக் கோடல்.

[49] பருவம்ஒன்றுக்கு நாள் அறுபதாகவின் சூரியனால் மிகுக்கப்பட்ட பகல்நாழிகை அறுபதாகும். இவ்விரண்டுங்கூட்டப் பருவத்திற்கு இரண்டு நாள் விகிதம் ஆண்டொன்றுக்குப் பன்னிரண்டு நாள் மிகும்.

(2) இங்ஙனம் செய்தலால் [50]இரண்டரையாண்டில் [51]முது வேனிலின் முற் பகுதியில் ஓர் அதிமாதத்தையும் [52]ஐந்தாமியாண்டின் இறுதிப் பருவத்தின் பிற்பகுதியில் ஓர் அதிமாதத்தையும் உண்டாக்குகின்றனர்.

இரண்டாம் அதிகரணம் இருபதாம் பிரகரணம்
"நிலம் பொழுதளவை" என்னும் நாற்பத்தொராம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[50] ஆண்டொன்றுக்குப் பன்னிரண்டு நாட்களாக இரண்டரை ஆண்டிற்கு முப்பதுநாள் மிகும் ஆதலின் அஃதோர் அதிமாதம் ஆகும் என்பது கருத்து.

[51] இங்கே கூறிய மாதம் சாந்திரமாதத்தாற் கொள்ளப்படுதலின் மாசிதொடங்கி அதற்கு முப்பதாம் திங்களாகிய ஆடிக்கு முன்னும், ஆனிக்குப் பின்னும் ஆகிய இடைக்காலத்தில் அதிமாதம் உண்டாகும்; ஆதலின் முதுவேனிலின் முற்பகுதி என்று கூறப்பட்டது.

[52] ஐந்தாமாண்டின் இறுதிப்பருவமாவது; முன்பனிப்பருவமாகும். அதன் பிற்பகுதி தைத்திங்களாதலால் அதற்கும் மாசிக்கும் இடையில் ஓர் அதிமாதம் உண்டாம்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தோராம் பிரகரணம்—[1] உல்குபொருள் தலைவன்

## நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

உல்குபொருட்டலைவன் [2]உல்குபொருட்சாலையையும் [3]கொடியையும் கிழக்கு நோக்கியாதல் வடக்கு நோக்கியாதல் [4]பெரிய வாயிலுக்கருகில் அமைத்துக்கொள்ளல் வேண்டும்.

[5]உல்குபொருள்பெறுவோர் [6]நால்வராதல் ஐவராதல் இருந்து பண்டங்களுடன் வந்த வணிகர்கள் [7]யார் யார் என்றும் எங்கிருந்து வந்தனர் என்றும் எத்துணைப் [8]பண்டம் கொண்டு வந்தனர் என்றும் அவை [9]எங்கு இலச்சினை இடப்பட்டனவென்றும் **வினவி** வரைந்துகொள்ளல் வேண்டும்.

[10]இலச்சினை இடப்படாதவைகளுக்குக் கொடுக்கவேண்டிய

---

### 42-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உல்குபொருள்—கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது; இப்பொருள் வேற்றிடங்களின் தொடர்புடைமையாலும் பல்வகை அளவைகளால் வரையறுக்கப்படும் பல்வகைப் பொருள்களைப்பற்றியதாதலாலும் இது "துலைமுதலளவையின் நிலையாராய்தல், நிலம்பொழுதளவை" என்னும் பிரகரணங்களின்பின் வைக்கப்பட்டது. இது பிரகரண இயைபு.

[2] உல்குபொருட்சாலை—சுங்கம்கொள்ளும் இடம்.

[3] சுங்கம்கொள்ளும் இடம் இதுவெனச் சேய்மையிலிருந்து அறிந்துகொள்ளுவதற்கு நாட்டப்படுவது.

[4] பெரியவாயில்—கோபுரவாயில்.

[5] இவர்கள், உல்குபொருள்தலைவனால் நியமிக்கப்பட்டோர் ஆவர்.

[6] உண்மை மாறுபடாமைகுறித்துத் தனித்தனி வினவி அறிதற்பொருட்டு உல்குபொருள்பெறுவோர் பலராக இருக்கவேண்டும் என்பது கருத்து.

[7] இது குலம் பெயர்களைப்பற்றிய வினவாகும்.

[8] பண்டம்—விற்றற்குரியது.

[9] எல்லைகாவலர் யாரால் முத்திரையிடப்பட்டன என்று ஆராய்தல் வேண்டும் என்பது.

[10] முத்திரையிடாமல் பண்டம்கொணர்வோருக்கு அவற்றின்பொருட்டு எல்லைகாவலர்க்கு இறுக்கவேண்டிய உல்குபொருளளவின் இருமடங்கு தண்டம் விதித்தல்வேண்டும் என்பது. எல்லைகாவலருக்கு இறுக்கவேண்டிய உல்குபொருளின் அளவு பின் கூறப்படும்.

வையின் இருமடங்கு தண்டம் ஆகும்.

பொய்யிலச்சினை பொறிக்கப்பட்டவைகளுக்கு உல்குபொருளின் எண்மடங்கு தண்டம் ஆகும்.

[11]இலச்சினைசிதைந்த பண்டங்களையுடையவர்களைச் சில நாழிகை ஓரிடத்தில் இருத்துதல் தண்டமாம்.

அரசியல்இலச்சினை [12]மாறுபட்டவைகளையும் [13]பெயர் மாற்றம் உடையவைகளையும் கொண்டுவருவாரை ஒன்றேகாற் பணம் தண்டம் இறுக்கும்படி செய்தல் வேண்டும்.

[14]கொடிமரத்தின் அருகில் வந்த பண்டத்தின் அளவையும் விலையையும் வணிகர்கள் [15]தெரிவித்து "இத்துணை அளவுள்ள இப்பொருளை இத்துணை விலை கொடுத்து வாங்குவார் யார்?" என்று கூறல் வேண்டும். மும்முறை கூறப்பட்டவைகளை விரும்பினவர்களுக்குக் கொடுத்தல்வேண்டும். கொள்வோரின் [16]இகலால் விலைமிகலாம். விலைமிக்க பொருளும் உல்குபொருளும் [17]கருவூலத்தைச் சேரும்.

உல்கு பொருளிறுத்தற்கஞ்சிப் பொருளின் அளவு விலைகளைக்

---

[11] பண்டங்களில் இடப்பட்டிருந்த முத்திரை சிதைந்திருந்தால் அப் பண்டம் உடையாரைச் சுங்கச்சாலையின் ஒருபகுதியில் எல்லோரும் காணும் படி சிலநாழிகைவரை இருக்கச்செய்தல் தண்டமாம் என்பது கருத்து; நாழிகையிடம் எனக்கொண்டு சிலநாழிகையளவு குற்றவாளிகளைத் தங்க வைக்குஞ் சிறைச்சாலை என்பாருமுளர்.

[12] மாறுபடுதல்—முத்திரை இடவேண்டிய இடத்தில் இடாமல் வேற்றிடத்திடுதல் முதலியன.

[13] பெயர்மாற்றம்—ஒரு பண்டத்தின் பெயரை மற்றொருபண்டப் பெயராக மாற்றிக்குறித்தல்.

[14] கொடிமரம்—இது சுங்கம்கொள்ளும் இடத்தைக் குறிக்கும்.

[15] தெரிவிப்பது, உல்குபொருட்டலைவனுக்குப் பண்டத்தின் அளவும் விலையும் மாற்றமடையாமற்பொருட்டு; விற்பதற்குமுன்னர்த் தெரிவித்தல் வேண்டும் என்பது.

[16] இகல்—போட்டி.

[17] பண்டத்திற்கு இயல்பாகஏற்பட்ட விலைமாத்திரம் உடையானைச் சாரும் என்பது.

குறைத்துக்கூறின் [18]அவற்றின் மிகுந்த பொருளை அரசன் எடுத்துக்கொள்ளல்வேண்டும். அல்லது உல்குபொருளின் எண்மடங்கு [19]இறுத்தல்வேண்டும்.

[20]பாண்டங்களுள் பொதியப்பட்ட உயர்ந்த பொருளின் தரத்தை இழிவாகக் காட்டி விலையைக் குறைப்பினும், [21]உயர்ந்த பொருளைத் தாழ்ந்த பொருளிற் கரந்து வைப்பினும் [22]அதுவே தண்டனையாம்.

கொள்வோரின் எதிர்ப்பு நேரும் என்னும் அச்சத்தால் பண்டத்தின் விலையை [23]உயர்த்துவோனிடமிருந்து பெறுமானத்தினின்றும் மிகையாக உயர்த்தப்பட்ட விலைப்பொருளை அரசன் எடுத்துக்கொள்ளல் வேண்டும். அல்லது இருமடங்கு உல்கு பொருள் பெறுதல் வேண்டும்.

[24]மறைக்கின்ற தலைவனுக்கு அத்தண்டம் எண்மடங்காகும். ஆதலாற் பண்டங்களை அளந்தாதல் நிறுத்தாதல் எண்ணியாதல் விற்றல் வேண்டும்.

[25]தாழ்ந்த பொருள் [26]விலையின்றிக் கொள்ளும் பொருள்

---

[18] குறைத்துக்கூறிய அளவும் குறைத்துக்கூறிய விலையும் ஆம்.

[19] வணிகன் செலுத்தவேண்டும் என்பது.

[20] பொதிந்துவைக்கப்பட்ட பொருள் உயர்ந்த தரமுடையதாக இருப்பவும், சுங்கநிமித்தம் இழிந்த தரமுடையதெனக்காட்டி விலையைக் குறைப்பினும் என்பது.

[21] மணிமுதலியவற்றைப் பஞ்சுமுதலியவற்றால் மறைத்துவைப்பினும் என்பது.

[22] அது—வணிகன்கூறிய விலையளவின் மிக்கதை அரசன் கவர்ந்து கோடல் அல்லது உல்குபொருளின் எண்மடங்கு இறுத்தல்.

[23] உயர்த்துவோன்—கொள்வோன்.

[24] வணிகனுடைய குற்றத்தை நட்பு கைக்கூலிபெறுதல் முதலிய காரணங்களால் உல்குபொருட்டலைவன் மறைப்பின் அவனுக்கு அவ்வணிகன் அக்குற்றத்திற்கு இறுக்கவேண்டிய தண்டத்தினும் எண்மடங்கு தண்டம் விதிக்கவேண்டும் என்பது.

[25] தாழ்ந்தபொருள்—கரி உமி முதலியன.

[26] விலையின்றிக் கொள்ளும்பொருள்—தொழிலாளர் முதலியோர் உணவிற்குவேண்டிய அளவில் விலையின்றிக்கொள்ளும் உப்பு முதலியன.

இவற்றை [27]ஊகத்தாலும் செய்யலாம்.

உல்குபொருள் கொடாமல் கொடிமரத்தடியைக் கடந்து சென்றூர்க்கு உல்குபொருளின் அளவின் எண்மடங்கு தண்டமாம். [28]வழிச்செல்வோரும் [29]குறுக்கு வழியிற் செல்வோரும் [30]அதனை அறிதல்வேண்டும்.

திருமணம் [31]வரிசை [32]கையுறை வேள்வி [33]கருவுயிர்த்தல் [34]கடவுள்வழிபாடு குடுமிகளைதல் புரிநூற்பூணல் கோதானம் [35]நோன்பியற்றல் இன்னோரன்ன செயல்களுக்குரிய பண்டம் உல்கு பொருள் கொடாமற் செல்லலாம்.

[36]மாறுபட்டுக் கூறுகிறவர்களுக்குக் களவுக்குரிய தண்டம் விதிக்கப்படும்.

உல்குபொருள் செலுத்தப்பட்ட பண்டங்களோடு செலுத்தப் படாத பண்டங்களைக் [37]கொண்டுபோகின்றவனும், [38]ஒரே இலச்

---

[27] ஊகம்—அளத்தல் முதலியன இன்றி இஃது இத்துணை இருக்கலாம் என்று மதிப்பிடுதல்.

[28] வழிச்செல்வோர்—வாணிகவேடம்பூண்டு மறைந்துதிரியும் ஒற்றர்.

[29] குறுக்குவழியிற் செல்வோர்—அரசன் கட்டளைபெற்று புல் விறகு சுமப்போராகவும் ஆயர்களாகவும் குறுக்குவழியில் மறைந்துதிரியும் ஒற்றர்.

[30] அதனை—உல்குபொருள் கொடாமற் செல்வதை.

[31] வரிசை—மணப்பெண்ணுக்குத் தந்தைவீட்டிலிருந்து கொடுக்கப் படும் சீர்வரிசை.

[32] கையுறை—காணிக்கை.

[33] கருவுயிர்த்தல்—மகப்பெறுதல்; அதற்குரிய பொருள் மருந்து முதலியன.

[34] நித்திய நைமித்திகபூசை திருவிழா முதலியன.

[35] நோன்பியற்றுங்கால் தானம் முதலியனவாகக் கொடுக்கும் பொருளை உணர்த்தும்.

[36] திருமணம் முதலியவற்றிற்கு இன்றி, வேறாகக்கொண்டுவரும் பொருளை அத்திருமணம் முதலியவற்றிற்குரிய பொருளாகப் பிறழக் கூறு கின்றவர்களுக்குக் கள்வருக்கு விதிக்கத்தக்க தண்டத்தை விதிக்கவேண்டும் என்பது கருத்து.

[37] கூட்டத்தில் அறியப்படா என்று எண்ணிக்கொண்டு போகின்றவன் என்பது.

[38] ஒன்றுக்கு இலச்சினை இடுவித்து அதனோடு ஒத்த மற்றொன்றைக் கொண்டு போகின்றவன் என்பது.

சினையால் பிறிதொன்றைக் கொண்டுபோகின்றவனும், [39]பொதியைப் பிரித்துக் கவர்ந்துகொள்கின்றவனும், ஆகிய இவ்வணிகர்களுக்கு அப்பண்டமும் அவ்வளவு பொருளுந் தண்டமாம்.

உல்குபொருட்சாலையினின்றும் சாணி, வைக்கோல் எனக் காட்டிக் [40]கவர்கின்றவர்களுக்கு உத்தமசாகசம் தண்டமாம்.

[41]கொண்டுபோகக்கூடாத படைக்கலம் [42]தடை கவசம் உலோகம் தேர் மணி கூலம் விலங்கு இவைகளுள் ஒன்றைக் கொண்டுபோகின்றவனுக்குப் [43]பறைசாற்றியபடி பொருட் பறிமுதலும் தண்டமும் செய்தல் வேண்டும்.

இவைகளுள் ஒன்றைக் கொண்டுவந்தால் உல்குபொருள் இன்றி [44]வெளியிலேயே விற்றல்வேண்டும்.

எல்லைகாவலன், [45]பண்டச் சுமைக்கு ஒன்றேகாற் பணமும் [46]ஒற்றைக் குளம்புடையவைகளுக்கு ஒரு பணமும், பசுக்களுக்கு அரைப்பணமும் [47]சிறிய விலங்குகளுக்குக் காற்பணமும் தோட்

---

[39] இலச்சினை இடப்பட்ட பொதியைப் பிரித்து அதனுள் இருக்கும் பொருளை எடுத்துக்கொண்டு உல்குபொருள் கொடுக்கப்படாத வேறு சில பொருளை அதனுட் பொதிந்து பழைய இலச்சினையையே காட்டி வஞ்சிக்கிறவன் என்பது.

[40] சாணி வைக்கோல்களுக்குள் உயர்ந்த பொருள்களை மறைத்துக் கவர்கின்றவர் என்பது கருத்து.

[41] ஏதாவது ஒரு காரணத்தால் ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்குக் கொண்டுபோகக் கூடாதென்று அரசனாற் கட்டளையிடப்பட்ட படைக்கலம் முதலியன என்பது.

[42] தடை—கவசத்தைப்போல உடற்பாதுகாப்பு நிமித்தம் அணிந்து கொள்ளப்படும் பிறிதொன்று.

[43] அரசன் கட்டளைப்படி 'மீறிக்கொண்டு போகின்றவர்களுக்கு இன்னது தண்டம்' என்று குறிப்பிட்டபடி என்பது.

[44] வெளி—அரணுக்குப்புறம்; வேற்று நகரத்திலிருந்து தடைப்படுத்தப்பட்ட பொருளை ஒருவன் கொண்டுவருவானாயின் அரணுக்கு வெளியிடத்திலேயே அதனை விற்கச்செய்யவேண்டும் என்பது கருத்து.

[45] பண்டச்சுமை—பண்டங்களைச் சுமந்துவரும் வண்டி முதலியன.

[46] ஒற்றைக்குளம்புடையவை—கழுதை குதிரை முதலியன.

[47] சிறிய விலங்கு—ஆடு முதலியன.

சுமைக்கு [48]ஒரு மாடகமும் [49]வழியிறையாகப்பெறுதல் வேண்டும்.

[50]களவுசெய்யப்பட்டவை இழக்கப்பட்டவைஆகிய இவற்றை ஈடுசெய்தல்வேண்டும்.

எல்லைகாவலன் அயல்நாட்டு வாணிகக்குழுக்களை (அவர்கள்) கொண்டுவரும் பண்டங்களின் உயர்வு தாழ்வுகளை ஆராய்ந்து [51]குறிப்புடன் இலச்சினையிட்டுத் தலைவன்பால் [52]உய்த்தல்வேண்டும்.

[53]வைதேககன் என்னும் ஒற்றன் வணிகரின் தொகையை அரசனுக்கு அறிவித்தல்வேண்டும். அச்செய்தியினால் அரசன் உல்குபொருட்டலைவனுக்கு, [54]தான் முழுதும் அறிந்தவன் என்பதை அறிவுறுத்தற்பொருட்டு [55]வணிகரின் தொகையைக் கூறல் வேண்டும். பின்னர் உல்குபொருட்டலைவன் வணிகரை அடைந்து "இவை உயர்ந்தவை; இவை தாழ்ந்தவை; இன்னின்னாருடையவை; [56]மறைத்தல் இயலாது; இஃது [57]அரசனுடைய பெருமையாகும்" என்று கூறக்கடவன்.

---

48 மாடகம், ஈண்டுச் செப்பு மாடகம் ஆகும்.

49 வழியிறை—வழி காவற்பொருட்டுக் கொள்வது.

50 ஒரு வணிகன் கொண்டுவரும் பண்டங்கள் இடைவழியிற் களவு செய்யப்பட்டாலும் அல்லது கொடிய விலங்கு முதலியவற்றால் துன்புற்று இழக்கப்படினும் அதற்கு எல்லைகாவலன் ஈடுசெய்தல் வேண்டும் என்பது.

51 குறிப்பு—கையெழுத் தடையாளம்.

52 விலைப்பண்டங்களையும் அவற்றைக் கொண்டுவந்த வணிகர்களையும் அனுப்புதல்வேண்டும் என்பது; இங்ஙனம் செய்தல் உல்குபொருள்தலைவன் அப்பண்டங்களைக் கவர்ந்துகொள்ளாமைப் பொருட்டாம்.

53 வைதேககன் — வாணிக உருக்கொண்டவன்; வணிகரின் தொகை என்பது ஈண்டு அவர் கொணர்ந்த விலைப்பண்டங்களின் அளவையும் குறிக்கும்.

54 அரசன் நேரிற்காணாத பொருளையும் ஞானக்கண்ணாற் காணும் தெய்விக ஆற்றலுடையவன் என்று உல்குபொருட்டலைவன் அறிந்துகொள்ளுதற் பொருட்டென்பது கருத்து.

55 ஒற்றனால் மறைவி லறிந்துகொண்டபடி என்பது.

56 அரசன் தன் கண்ணாற்காணாத உங்களுடைய பண்டங்களில் உயர்ந்தன இத்துணை தாழ்ந்தன இத்துணை என்று ஞானக்கண்ணாற் கண்டு எங்களுக்கு முன்னரே அறிவித்துளானாதலின் மறைத்தல் இயலாதென்பது கருத்து.

57 இந்நிகழ்ச்சி அரசனது தெய்விக ஆற்றலைப் புலப்படுத்தும் என்பது.

தாழ்ந்தபொருளை [58]மறைப்பவனுக்கு உல்குபொருளின் எண் மடங்கு தண்டமாம். உயர்ந்த பொருளாயின் [59]முழுதும் கவர்ந்து கொள்ளல்வேண்டும்.

சுலோகம்

நாட்டுக்குக் [60]கேடுவிளைப்பனவும், [61]பயனிலாதனவுமாகிய பண்டங்களைத் [62]தடுத்தல்வேண்டும். பயன்மிக்க பண்டங்களையும் [63]பெறுதற்கரிய பண்டங்களையும் [64]வித்துக்களையும் உல்குபொரு ளில்லாதனவாகச் செய்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்தொராம் பிரகரணம்
" உல்குபொருட்டலைவன் " என்னும்
நாற்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[58] அரசனது தெய்விக ஆற்றலைக் கூறக்கேட்டு மறைப்பவன் என்பது.

[59] முழுதும்—மறைக்கப்பட்ட பண்டம் முழுதும்.

[60] கேடுவிளைப்பன—நச்சுப்பொருள்கள் முதலியன.

[61] பயனிலாதன — மிகச்சிறுபயன் விளைப்பன; சுத்தரிக்காய் வெள் ளரிக்காய் முதலியன.

[62] உல்குபொருளை மிகுதிப்படுத்தல் மூலமாக வேற்றிடத்திலிருந்து வாராமற் றடுத்தல்வேண்டும் என்பது.

[63] தன்னாட்டிற் பெற இயலாத பண்டங்கள் என்பது.

[64] வித்துக்கள் கூலம் முதலியவற்றின் உயர்ந்த தரமுள்ள விதைகள்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தொராம் பிரகரணம்—[1]உல்குவரையறை

## நாற்பத்துமூன்றும் அத்தியாயம்

[2]புறத்தது [3]அகத்தது [4]விருந்து என்னும் உல்குபொருள் [5]வெளிப்பாடும் [6]நுழைவும்ஆம்.

[7]நுழைவனவற்றிற்கு விலையின் ஐந்திலொரு கூறுகும்.

மலர் பழம் கீரை வேர் கிழங்கு [8]கொடியிலுண்டானவை [9]வித்து [10]உலர்ந்தமீன் இறைச்சி இவைகளுக்கு [11]ஆறிலொரு கூறு பெறல்வேண்டும்.

---

### 43-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உல்குபொருட்டலைவன் என்னும் முன்னைப் பிரகரணத்தோடு உல்கு வரையறை என்னும் இப்பிரகரணத்திற்குள்ள இயைபு பெயரளவிற் புலனும்.

[2] புறத்தது—தன்னாட்டிலுண்டாம் பண்டங்களைப்பற்றியது.

[3] அகத்தது—அரணுள் அமைந்த உள்ளிடங்களிலுண்டாம் பண்டங்களைப்பற்றியது.

[4] விருந்து—வேற்றுநாட்டிலிருந்து வரும் பண்டங்களைப்பற்றியது.

[5] வெளிப்பாடு—உள்ளிருந்து வெளிப்படவேண்டிய பண்டங்களுக்கு வெளிப்படும் பொருட்டு இறுக்கப்படும் உல்கு.

[6] நுழைவு—புறத்தேயிருந்து அகத்தே வரவேண்டிய பண்டங்களுக்கு உள்ளே நுழைதற்பொருட்டு இறுக்கப்படும் உல்கு ; பண்டங்களைப்பற்றிப் புறத்தது முதலாக மூவகைப்பட்ட உல்கு மீண்டும் இறுக்கும் வகைபற்றித் தனித்தனி இருவகைப்படும் என்பது.

[7] வேற்று நாட்டிலிருந்து தன்னாட்டிற்கும், தன்னாட்டினும் புறத்தே இருந்து அரணகத்திற்கும் புகும் பண்டங்களுக்கு அவற்றின் விலையில் ஐந்தில் ஒருகூறு சுங்கப்பொருளாகும் என்பது கருத்து ; இது பொது விதி. பின்வருவன சிறப்பு விதி.

[8] கொடியிலுண்டாகும் காய்கனிகள்.

[9] வித்து—கூலவிதைகள்.

[10] உலர்ந்த என்னும் அடையை இறைச்சிக்கும் ஏற்றுக.

[11] ஆறிலொருகூறு—பண்டங்களின் பெறுமானத்தில் ஆறிலொருகூறு சுங்க இறையாம் என்பது.

சங்கு வயிரம் மாணிக்கம் முத்து பவழம் [12]மாலை இவைகளுக்கு இவற்றின் தொழில் அளவு காலம் கூலி பயன் இவற்றை அறியும் திறனுடையாரைக்கொண்டு [13]துணிதல்வேண்டும்.

[14]உரிப்பட்டு [15]நார்ப்பட்டு [16]புழுப்பட்டு [17]கவசம் அரிதாரம் மனோசிலை [18]இங்குலிகம் உலோகசாதி தாதுப்பொருள் என்னும் இவற்றிற்கும் சந்தனம் அகில் [19]கார்ப்புப்பொருள் [20]மதுக்குழம்பு என்னும் இவற்றிற்கும் கள் தந்தம் தோல் [21]மரவுரி நார் [22]விரிப்பு போர்வை பட்டு என்னும் இவற்றிற்கும் ஏழகமயிர் ஆட்டுமயிர் என்னும் இவற்றாலாகிய கம்பளங்களுக்கும் [23]பத்து அல்லது பதினைந்தில் ஒருகூறாகும்.

ஆடை [24]நாற்காலுயிர் [25]இருகாலுயிர் நூல் பஞ்சு மணப்பொருள் மருந்து விறகு மூங்கில் [26]மரவுரி தோல் மட்பாண்டம் என்னும் இவற்றிற்கும், கூலம் [27]நேயம் அக்காரம் உப்பு [28]வெறிப்

---

12 மாலை—ஈண்டு இனம்பற்றி முத்துமாலை முதலியவற்றைக் குறிக்கும்.

13 சுங்கவிறை இவ்வளவெனத் துணிதல்வேண்டும் என்பது.

14 உரி—மரப்பட்டை ; இதிலிருந்து எடுக்கப்படும் பருத்த இழைகளால் ஆக்கப்படுவது.

15 நார்ப்பட்டு—நுண்ணிய நூல்களால் ஆக்கப்படுவது.

16 புழுப்பட்டு—பட்டுப்பூச்சியினின்றும் உண்டாம் பட்டுநூலால் ஆக்கப்படுவது.

17 கவசம் என்றது ஈண்டு நூலாலாக்கப்படும் கவசத்தை.

18 இங்குலிகம்—சாதிலிங்கம்.

19 கார்ப்புப்பொருள்—சுக்கு திப்பிலி முதலியன.

20 மதுக்குழம்பு—மதுவுண்டாக்குதற்குரிய பல்வகைப் பொருள்களின் கலவை.

21 இங்கே கூறப்பட்ட மரவுரி நார் என்பன அவற்றின் இழைகளைக் குறிக்கும்.

22 விரிப்பு—பாய் முதலியன.

23 இப்பொருள்களின் விலைமதிப்பில் பத்து அல்லது பதினைந்தில் ஒரு கூறு சுங்கப்பொருளாகும் என்பது.

24 நாற்காலுயிர்—முன் கூறப்படாத முயல் உடும்பு முதலியன.

25 இருகாலுயிர்—கோழி முதலியன.

26 இங்கே கூறிய மரவுரி, மரப்பட்டையை உணர்த்தும்.

27 நேயம்—எண்ணெய் நெய் முதலியன.

28 வெறிப்பொருள்—இங்கே விலைக்குறைவையுடைய கள்ளைக் குறிக்கும் ; முன் கூறியது உயர்விலை மதுவாகும்.

பொருள் சோறுமுதலியன என்னும் இவற்றிற்கும் இருபது அல்லது இருபத்தைந்தில் ஒருகூறாகும்.

[29]உல்குபொருளின் ஐந்தில் ஒருகூற்றையும் [30]நாட்டின் நலத்திற்கேற்ப அளியுடையதாக அமைக்கப்படும் உல்குபொருளையும் [31]வாயிலிற் பெறுதல்வேண்டும்.

[32]பண்டங்களை உண்டாக்குமிடத்தில் விற்றல்கூடாது.

ஆகரங்களினின்றும் [33]மூலப்பொருளையாதல் பண்டங்களையாதல் கொண்டால் அறுநூறு பணம் தண்டம் [34]ஆகும்.

[35]மலர் கனி இவற்றை இவற்றிற்குரிய தோட்டங்களினின்றும் கொண்டால் ஐம்பத்திநான்குபணம் தண்டமாம்.

தோன்றுமிடத்தினின்றும் கீரை வேர் கிழங்கு இவைகளைக் கொண்டால் ஐம்பத்தொன்றேமுக்காற்பணம் தண்டமாம்.

---

[29] இவற்றின் விலைமதிப்பின் இருபதில் ஒருகூறு அல்லது இருபத்தைந்தில் ஒருகூறு சுங்கமாம் என்பது; இதுவும் முன்னர்க் கூறப்பட்ட விகற்பமும் காலம் இடம் நோக்கி அமைத்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

[30] சில விலைப்பண்டங்களுக்கு நாட்டின் நலங்கருதி உல்குபொருள் மிகக் குறைவாக அமைக்கப்படும் என்பதும் அங்ஙனம் குறைக்கப்பட்ட சுங்கப்பொருளை வாயிலிலேயே பெறல்வேண்டும் என்பதும் கருத்து.

[31] வாயில்காவலன் பெற்றுக்கொள்ளவேண்டும் என்பது.

[32] பண்டங்களை அரசியலார் குறித்த இடங்களிலன்றி உண்டாக்குமிடத்தில் வைத்து விற்றலாகாதென்பது கருத்து; பின்வருவனவற்றிற்கும் ஈதொக்கும்.

[33] மூலப்பொருள் என்பதும் பண்டம் என்பதும் ஈண்டு முறையே காரணவடிவமாகவும் காரியவடிவமாகவும் உள்ளன.

[34] இத்தண்டம் கொள்வோரும் விற்போரும் இறுக்கத்தக்கது; பின்வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

[35] மலர் கனி முதலியவற்றை விற்றற்கென அரசியலாரால் குறிக்கப்பட்ட இடத்திலன்றித் தோட்டத்திலேயே வைத்து விற்றால் ஐம்பத்து நான்கு பணம் தண்டம் விதிக்கவேண்டும் என்பது; ஆகரப்பொருள்கள் உயர்ந்தனவாதலால் அவற்றிற்கு மிகுதியான தண்டமும் மலர்கனிகளுக்குக் குறைவான தண்டமும் விதிக்கப்பட்டன என்பது அறியத்தக்கது.

நன்செய் புன்செய்களினின்றும் எவ்வகைக் கூலங்களைக் கொண்டாலும் ஐம்பத்துமூன்றுபணம் தண்டமாம். ஒருபணமும் ஒன்றரைப்பணமும் [36]உழவுத்தண்டமாம்.

### சுலோகம்

[37]இடத்திற்கும் [38]தரத்திற்கும் ஏற்பப் புதியனவும் பழையனவுமாகிய பண்டங்களுக்கு உல்குபொருளை வரையறுத்தல்வேண்டும். [39]கேட்டிற்குத்தக்கவாறு தண்டம் விதித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்தொராம் பிரகரணம்
"உல்குவரையறை" என்னும் நாற்பத்துமூன்றும்
அத்தியாயம் முற்றிற்று.

---

[36] உழவுத்தண்டம் கூலவடிவமாக இறுக்கத்தக்கது; இத்தண்டபணத்தை முன்னர்க்கூறிய ஐம்பத்துமூன்று பணத்தோடு சேர்த்துக் கொள்ளல்வேண்டும் என்பதும், கொள்வோர் ஒருபணமும், விற்போர் ஒன்றரைப்பணமும் கொடுக்கவேண்டும் என்பதும் கருத்து.

[37] இடம்—விற்றற்குரிய இடம்.

[38] தரம்—பண்டங்களின் இயல்பு.

[39] கேடு—மறைவிற் கவர்ந்துகொள்ளுதலால் உண்டாகும் அழிவு.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்திரண்டாம் பிரகரணம்—[1]இழைநெய்தற்றொழிற்றலைவன்

### நாற்பத்துநான்காம் அத்தியாயம்.

இழைநெய்தற்றொழிற்றலைவன் நூல் குப்பாயம் ஆடை கயிறு இவற்றின்தொழிலை [2]அக்குடியிற் பிறந்த திறனுடையாரைக் கொண்டு செய்தல்வேண்டும்.

[3]மயிர் நார் பருத்தி [4]பஞ்சு சணல் மரவுரி இவற்றைக் கைம்பெண் உறுப்பறைமகளிர் கன்னிகை துறவுமகளிர் [5]தண்டஈடு செய்பவர் என்னும் இவர்களையும் வரைவின்மகளிரின் கைத்தாயர் அரசனுடைய வயதுமுதிர்ந்த பணிப்பெண் [6]வழிபாடொழிந்த கோயிற் பணிப்பெண்கள் ஆகிய இவர்களையும்கொண்டு நூற்பித்தல்வேண்டும்.

நூலின் நுண்மை பருமை நடுத்தரம் ஆகிய இவற்றையும் [7]மிகுதி குறைவுகளையும் அறிந்து கூலிவரையறை செய்தல்வேண்டும். நூலின் அளவை அறிந்து எண்ணெய் நெல்லிக்கனி [8]தேய்பொடி இவைகளை இவர்களுக்கு [9]அளித்தல்வேண்டும்.

---

### 44-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உல்குபொருட்குரிய பண்டங்களுள் நூல் ஆடை முதலிய சிறந்தனவாதலால் அதன்பின் இது கூறப்பட்டது. இதனாற் பிரகரண இயைபு புலனுதலறிக.

[2] அக்குடி—அச் சிறப்புத்தொழில் செய்தற்குரிய குலம்.

[3] மயிர்—ஆட்டுமயிர்.

[4] பஞ்சு—இலவம்பஞ்சு.

[5] தண்ட ஈடு செய்பவர்—குற்றநிமித்தம் விதிக்கப்பட்ட தண்டத்திற்கு ஈடாகப் பணிபுரிபவர்.

[6] வழிபாடு—ஆடல் பாடல் முதலியவற்றால் செய்யப்படும் தெய்வ வழிபாடு.

[7] ஒத்த காலத்தில் நூற்கப்படும் மிகுதி குறைவுகளையும் கருதிக் கூலி வரையறை செய்யவேண்டும் என்பது கருத்து.

[8] தேய்பொடி—அழுக்கு ஒழிய உடம்பில் தேய்க்கப்படும் தூள்.

[9] பணிசெய்வோர்க்கு வேலை மிகுதியாலுண்டாகும் சூடு தணிதற்பொருட்டும் உள்ளம் மகிழ்தற்பொருட்டும் ஏனையோரை ஊக்கமுறுத்தற்பொருட்டும் கொடுத்தல்வேண்டும் என்பது.

[10]நாட்களில் [11]கொடை [12]மானம் இவைகளால் [13]தொழிலைச் செய்வித்தல்வேண்டும். [14]நூல் குறையின் பொருளின் மதிப்பிற் கேற்பக் கூலிக்குறைவை ஏற்படுத்தல்வேண்டும்.

தொழில் அளவு காலம் கூலி பயன் என்னும் இவற்றைத் தெரிந்துணர்ந்த காருகர்களால் தொழிலைச் செய்வித்தல்வேண்டும்; [15]நட்புக்கொள்ளல்வேண்டும்

உரிப்பட்டு நார்ப்பட்டு புழுப்பட்டு [16]இராங்கவம் பருத்தி இவற்றை நூற்று நெய்யும்தொழில்களைச் [17]செய்விப்போன் மணப் பொருள் மாலை பிற நன்கொடைப்பொருள் இவற்றைக் [18]கொடுத்துச் சிறப்பித்தல்வேண்டும். [19]பல்வேறுவகையான ஆடை விரிப்பு போர்வை என்னும் இவற்றை [20]ஆக்குவித்தல்வேண்டும்.

நூற்கவசத்தொழிலையும் அத்தொழிலிற் றிறமைவாய்ந்த சிற்பிகளாற் செய்வித்தல்வேண்டும்.

கணவனைப் [21]பிரிந்தமையால் வீட்டைவிட்டு வெளிச்செல்லா

---

10 நாட்கள் — வேலைநாட்களும் உவாநாட்களும் ஆம் (அமாவாசை பௌர்ணமி).

11 கொடை—கூலி கொடுத்தலும் உணவு கொடுத்தலுமாம்.

12 மானம்—அளவும் பெருமையுமாம்.

13 தொழிலாளர் வேலைசெய்யும் நாட்களில் இத்துணைத் தொழிற்கு இத்துணைக்கூலி என்று வரையறை செய்துகொண்டு செய்வித்தல்வேண்டும் என்றுதல், உவா முதலிய சிறப்புநாட்களில் உணவு முதலியவற்றால் மகிழ் வித்துச் செய்வித்தல்வேண்டும் என்றுதல் கொள்க.

14 வரையறுக்கப்பட்ட அளவிற்குக் குறையுமாயின் அப்பொருளின் விலைமதிப்பிற்கு ஏற்பக் கூலியைக் குறைக்கவேண்டும் என்பது.

15 அத்தொழிலில் நேரும் வஞ்சகச்சூழ்ச்சியை அறிந்துகொள்ளும் பொருட்டு அக் காருகர்களோடு நட்புக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

16 இராங்கவம்—மான்மயிரால் ஆக்கப்படுவது ; இரங்கு—மான்.

17 செய்விப்போன்—நெய்தற் றொழிற்றலைவன்.

18 கொடுத்தல்—ஈண்டுத் தொழிலாளர்க்கென்க.

19 மணப்பொருள் முதலியவற்றைக் கொடுத்துச் சிறப்பித்தலால் உண்டாகும் பயனைக் கூறுகின்றார்.

20 ஆக்குவித்தல்—ஆராய்ந்து புதிய புதிய முறையிற் செய்வித்தல்.

21 பிரிவு—ஈண்டுக் கணவன் அயலூருக்குச் சென்றமையால் ஆயது.

தவர்களும் உறுப்பறைமகளிரும் கன்னியரும் ஆகிய [22]தம்மைத் தாமே புரந்துகொள்ளும் மகளிரைத் தன் பணிப்பெண்களைக் கொண்டு கட்டளையிட்டு ஆதரித்துத் தொழிலைச் செய்வித்தல் வேண்டும்.

நூற்சாலைக்குத் தாமேவந்த [23]மகளிர்களுக்கும் விடியற்காலையில் பண்டத்தைப் பெற்றுக்கொண்டு கூலியைக் கொடுப்பித்தல் வேண்டும். [24]நூலை ஆராய்தற்கு மாத்திரம் விளக்குப் பயன்படவேண்டும்.

மகளிரின் முகத்தைக் கூர்ந்துநோக்கினும் [25]வேறுகாரியம் பற்றிப் பேசினும் பூர்வசாகசம் தண்டமாம். கூலிகொடுக்கக் காலந்தாழ்ப்பினும் [26]தொழில்செய்யாத நிலையிற் கூலிகொடுப்பினும் மத்தியமசாகசம் தண்டமாம்.

கூலியைப் பெற்றுக்கொண்டபின்னர்த் தொழில்செய்யாத மகளிர், [27]உண்டும் கவர்ந்தும் ஓடியமகளிர் ஆகிய இவர்களுடைய [28]பெருவிரலைத் துணித்துவிடல்வேண்டும். [29]தொழிலாளருடைய

---

[22] தம்மைத்தாமே புரந்துகொள்ளுதல்—தம் உழைப்பாற் கிடைத்த உணவு முதலியவற்றைக்கொண்டு உயிர்வாழ்தல்.

[23] உம்மையால் தம் பணிப்பெண்கள் அழைத்துவந்த மகளிரையும் கொள்க.

[24] நூல் நூற்றுக்கொண்டுவரும் மகளிரைத் தாழ்க்காது அதிகாலையிலேயே அவர் கொண்டுவந்த பண்டத்தைப் பெற்றுக்கொண்டு கூலியைக் கொடுத்தனுப்பிவிடவேண்டும் ஆதலால் இருள்புலராத அக்காலத்தில் நூலை ஆராய்தற்கு மாத்திரம் சிறிதளவு பயன்படும்படி விளக்கை அமைத்துக் கொள்ளல்வேண்டும் என்பதும், அவ்விளக்கொளி வேறு வகையில் பயன்படுத்தற்கு இயலாத நிலையில் இருக்கவேண்டும் என்பதும் கருத்து.

[25] வேறுகாரியம்—பண்டத்தைப் பெற்றுக்கொண்டு கூலிகொடுத்தல் அல்லாத வேறுகாரியம்.

[26] கைக்கூலி பெற்றுக்கொண்டு தொழில் செய்யாத நிலையில் கூலி கொடுத்தல் என்பது கருத்து.

[27] தொழில் செய்தற்பொருட்டுக் கொடுத்த உணவையுண்டு தொழில் செய்யாமல் வெளிப்பட்டோரும் உள்ள பொருளைக் கவர்ந்துகொண்டு வெளிப்பட்டோரும் ஆகிய மகளிர் என்பது கருத்து.

[28] வலக்கைப் பெருவிரல் நடுவிரல்களின் நுனியைத் துண்டித்தல் எனவும் ஒருசாராசிரியர் கொள்வர்.

[29] தொழிலாளர் என்பது ஈண்டுத் திறமையுடையாரைக் குறிக்கும்.

குற்றத்திற்குத்தக [30]கூலியிலும் தண்டம் விதிக்கலாம்.

கயிறுதிரிப்போர் தோற்றொழிலாளர் என்னும் இவரோடு தான் நட்புக்கொள்ளல்வேண்டும். வார் முதலிய பண்டங்களையும் செய்வித்தல்வேண்டும்.

### சுலோகம்

கவசம் முதலியன அமைத்தற்கும் [31]ஊர்திகளைக் கட்டுதற்கும் வேண்டிய நூல் உரிகளாலாகிய கயிறுகளையும் பிரம்பு மூங்கில் களாலாகிய அகணிகளையும் செய்வித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்திரண்டாம் பிரகரணம்
" இழைசெய்தற் றொழிற்றலைவன் " என்னும்
நாற்பத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

[30] உறுப்பை ஊறுபடுத்தலாகிற தண்டமின்றிக் கொடுக்கவேண்டிய கூலியில் ஓரளவு தண்டம் விதிக்கலாமென்பது கருத்து.

[31] ஊர்தி—தேர் குதிரைகள் முதலியன.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்துமூன்ரும் பிரகரணம்—[1]உழவுத்தொழிற்றலைவன்

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

உழவுத்தொழிற்றலைவன் [2]உழவு, நிலம், [3]மரம் என்னும் இவற்றைப்பற்றிய நூல்களை அறிந்தவனாகவாதல் அறிந்தோரைத் துணைக்கொண்டவனாகவாதல் இருந்து [4]எல்லாவகையான கூலம் மலர் பழம் கீரை கிழங்கு வேர் [5]கொடியிலுண்டாவன மரவுரி பருத்தி இவைகளின் விதைகளை ஏற்றபருவத்தில் தொகுத்துச் சேர்த்தல்வேண்டும்.

[6]தகுந்த நிலத்தில் [7]அடிமை [8]பணியாளர் தண்டஈடுசெய் வோர் இவர்களைக்கொண்டு பலசால் நன்குஉழுது விதைத்தல் வேண்டும்.

உழுதற்குரிய [9]கருவிகள் [10]உபகரணங்கள் எருதுகள் ஆகிய

---

### 45-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] சுங்கத்திற்குரிய பொருள்களுள் உடையும் ஊணும் மிக முக்கிய மானவை. அவற்றுள் உடைக்குரிய நூல் வகைகள் முன்னைப் பிரகரணத்திற் கூறப்பட்டன. உணவிற் கேதுவாகிய உழவுதொழில் இதன்கட் கூறப் படுகின்றது. ஆதலின் பிரகரண இயைபு புலனுதலறிக.

[2] உழவுநூல் செய்தோர் விருத்தபராசரன் முதலியோராவர்.

[3] மரத்தைப்பற்றிய நூல் செய்தோர் அக்கினிவேசியன் முதலியோ ராவர்.

[4] எல்லாவகையான என்னும் அடையை மலர் முதலியவற்றிற்கும் கொள்க.

[5] கொடியிலுண்டாவன—அவரை முதலியன.

[6] தகுதி—இன்னநிலத்தில் இன்னபயிர் செழித்து வளர்ந்து பயன்தரும் என்று ஆராய்ந்து கண்டது.

[7] அடிமையாவார் — வயிற்றுச்சோற்று நிமித்தம் கொள்ளப்பட்டோ ரும், விலைகொடுத்துக் கொள்ளப்பட்டோரும் என இருதிறப்படுவர்.

[8] பணியாளர்—கூலிபெற்றுத் தொழில்புரிவோர்.

[9] கருவிகளாவன—கலப்பை ஏர்க்கால் நுகத்தடி முதலியன.

[10] உபகரணங்கள்—கயிறு அரிவாள் முதலியன.

இவற்றால் [11]இவர்களுக்குத் [12]தடையின்மையைச் செய்வித்தல் வேண்டும். கொல்லன் தச்சன் [13]அகழ்வோன் கயிறுதிரிப்போன் [14]பாம்புப்பிடாரன் முதலிய காருகர்களாலுந் தடையின்மையைச் செய்வித்தல்வேண்டும்.

[15]அவர்களுக்குத் தொழிற்பயன் அழியுமாயின், அழிந்த பயனளவு தண்டமாகும்.

[16]வன்புலங்களுக்குப் பதினாறு தூணியும் [17]மென்புலங்களுக்கு [18]அரைமடங்கு மிகுதியும் [19]மழையின் அளவாம். பலவகைய நாட்டுப்பயிர்த்தொழில்நிலங்களுக்கு ஏற்ப, மழையின் அளவும் பலவகைப்படும். அசுமாகதேயத்திற்குப் பதின்மூன்றரைத்தூணியும், அவந்திநாட்டிற்கு இருபத்துமூன்று தூணியும், மேற்றிசை நாடுகளுக்கு அளவிறந்தும், பனிநாடுகளுக்கும் மருதநிலங்களுக்கும் காலத்திற்கேற்பவும் மழைவேண்டும்.

மழையின் [20]மூன்றிலொருகூறு ([21]மழைக்காலத்தின்) [22]முன்

---

[11] இவர்கள்—அடிமை முதலியோர்.

[12] உழவுத்தொழில் தடைப்படாமல் நிகழ்தற்கு உழுதற்குரிய கருவி முதலியவற்றை உதவிசெய்தல் வேண்டுமென்பது கருத்து.

[13] அகழ்வோன்—மண்வெட்டுவோன்.

[14] விளைநிலத்திற் பாம்பு முதலியவற்றாலுண்டாகும் இடையூறுகளைப் போக்குதற்குப் பாம்புப்பிடாரன் உதவவேண்டுமென்பது கருத்து.

[15] அவர்களுக்கு—காருகர்களுக்கு.

[16] வன்புலம்—நீர்வளமற்ற நிலம்.

[17] மென்புலம்—நீர்வளமுடைய நிலம்.

[18] அரைமடங்கு மிகுதியென்பது எட்டுத்தூணியளவு கூட்ட இருபத்து நான்கு தூணியளவாகும்.

[19] ஒருமுழச் சதுரவளவு அகன்ற வாயினையுடையதும் பதினாறு தூணியளவு கொண்டதுமாகிய பாண்டத்தைக்கொண்டு மழைநீரை அளந்து கொள்ளல் வேண்டுமென்பது கருத்து. ஏனைய அளவுகளுக்கும் இத்தகைய பாண்டத்தில் கீற்று வரையறை செய்து அளந்துகொள்ளல் வேண்டுமென்பது. இந்த அளவு அவ்வந்நிலத்திலுண்டாம் பயிர்கள் விளைந்து முடியுங்காறும் வேண்டுமென்பது.

[20] மூன்றிலொரு கூறென்பது அவ்வந்நிலத்திற்குக் கூறப்பட்ட அளவினின்றுங் கொள்ளத்தக்கது.

[21] மழைக்காலமென்பது பயிர்த்தொழிற்குரிய ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை ஆகிய நான்கு திங்களுமாம்.

[22] அவற்றுள் முன்னும் பின்னுமுள்ளவை, ஆவணியும் கார்த்திகையுமாம்.

னும் பின்னுமுள்ள இரண்டு திங்களினும், எஞ்சிய இருகூறுகள் [23]இடையிலுள்ள இரண்டு திங்களினும், பெய்யப்பெற்ற யாண்டு [24]நல்லியாண்டாகும்.

வியாழனது [25]இடம் [26]செலவு [27]கருவமைதி இவைகளாலும் வெள்ளியின் தோற்றம் மறைவு [28]வழக்கம் இவைகளாலும் ஞாயிற்றின் [29]இயல்புமாறுபாட்டாலும் [30]அஃது உய்த்துணரப் படும்.

[31]ஞாயிற்றால் கூலங்களின் விளைவும் வியாழனால் பயிர்களின் செழிப்பும் வெள்ளியால் மழையும் (அறியப்படும்).

சுலோகம்

(1) [32]ஏழுநாட் பெய்கின்ற மூன்று மேகங்கள், துளிக்கின்ற எண்பது மேகங்கள், வெயிலுடன் கூடிப்பெய்யும் அறுபது மேகங்

---

[23] இடையிலுள்ளன—புரட்டாசியும் ஐப்பசியுமாம்.

[24] நல்லியாண்டு — மக்களுக்கு விளைபொருளால் நன்மைவிளைக்கும் யாண்டு.

[25] இடம்—தங்கியிருக்கும் மேடம் முதலிய இராசிகள்.

[26] செலவு—ஓர் இராசியினின்றும் பிறிதோர் இராசிக்குச் செல்லுதல்

[27] கருவமைதி—மார்கழி முதல் ஆறு திங்களினும் ஏற்படும் குளிர் முதலியவற்றின் தோற்றம் முதலியன. மார்கழியிற் குளிரும் தையிற் பனியும், மாசியிற் காற்றும், பங்குனியில் மேகத்தோற்றமும், சித்திரையிற் காற்றும் மழையும், வைகாசியிற் காற்றும் இடிமின்னலுடன் கூடிய மழையும் தோன்றுமாயின் கருவமைதி யுண்டெனக் கொள்ளப்படும்.

[28] வழக்கம்—ஆடித்திங்களின் பஞ்சமிதிதி முதலிய ஒன்பது திதிகளிற் சஞ்சரித்தல்.

[29] இயல்பு மாறுபாடு—பரிவேடத்துடன் கூடுதல் முதலியன.

[30] அஃது—பின்வரும் நல்லியாண்டு.

[31] ஞாயிறு வியாழன் வெள்ளி யென்னும் இம்மூன்று கோள்களின் இயற்கைநிலையாலும் மாறுபாட்டுநிலையாலும் முறையே நலந்தீங்குகள் அறியப்படுமென்பது கருத்து.

[32] பயிர்த்தொழில் தொடங்கி விளைவு முடியுங்காறும் வேண்டிய மழையினளவு கூறப்படுகின்றது. ஏழு நாள் தொடர்ந்து பெய்கின்ற மூன்று மழைகளும், தூற்றலாகப் பெய்யும் எண்பது மழைகளும், வெயிலொடு கலந்து பெய்யும் அறுபது மழைகளும் பயிர்நலத்திற்கு வேண்டுமென்பது கருத்து.

கள் இவற்றாலுண்டாகும் மழை [33]சமனாகவும் நலமாகவும் அமையும்.

(2) மேகம், காற்று வெயில் இல்லாதநிலையில் [34]மும்முறை விளைவுண்டாமாறு பொழிகின்ற நாட்டிற் பயிர்கள் பயன்தருதல் உறுதியாம்.

ஆதலால், [35]நீர் நிறைவாகவேண்டிய பயிர், நீர் குறைவாக வேண்டிய பயிர் இவைகளை உண்டாக்கல்வேண்டும்.

சாலிநெல் சம்பாநெல் கேழ்வரகு எள் [36]பிரியங்கு சாமை வரகு இவை முன்னர் விதைக்கற்பாலன. பயறு உழுந்து [37]சைம்பியம் இவை நடுக்கூற்றில் விதைக்கற்பாலன. குசும்பை வெண் கடலை கொள்ளு யவம் கோதுமை கடலை காயா கடுகு இவை [38]பின்னர் விதைக்கற்பாலன.

[39]விதைகள் பருவத்திற்கேற்ப விதைக்கற்பாலன.

விதைக்கப்படா [40]தெஞ்சிய நிலத்தைப் பாதிவாரங் [41]கொள் வோர் பயிர்செய்தல்வேண்டும். [42]தம்வலியால் மாத்திரம் உழைப்

---

[33] சமன்—பெயவின்மை மிகுபெயல் இன்றி ஒத்ததாதல்.

[34] மும்முறை விளைவுண்டாதல்—முப்போகம் விளைதல்.

[35] மழையின் மிகுதி குறைவுகளையறிந்து முறையே நீர் மிகுதியாக வேண்டிய பயிர்களையும் நீர் குறைவாகவேண்டிய பயிர்களையும் உண்டாக்கல் வேண்டுமென்பது கருத்து.

[36–37] பிரியங்கு சைம்பியம் என்பன தானிய வகைகள்.

[38] ஈண்டு, முன் நடுக்கூறு பின் என்பன பயிர்த்தொழில் செய்தற்குரிய காலப்பகுதிகளை உணர்த்தும்.

[39] இங்குக் கூறப்பட்டனவும் கூறப்படாதனவுமாகிய கூலவித்துக்கள் உரியபருவத்தில் விதைக்கப்படுமாயின் நன்கு விளையும் என்பது கருத்து.

[40] எஞ்சியநிலம்—உழவுத்தொழிற் றலைவனால் பயிர்செய்யப்படாமல் விட்ட நிலம்.

[41] கொள்வோர், ஏர் வித்து முதலிய உபகரணங்களை யுடையராக இருத்தல்வேண்டுமென்பது.

[42] ஏர் வித்து முதலிய உபகரணங்களைத் தலைவன்பாற் பெற்று உட லுழைப்பளவில் பயிர்த்தொழில் செய்வோர் நான்கிலொரு கூறுதல் ஐந்தி லொரு கூறுதல் விளைபொருளில் வாரங்கொண்டு எஞ்சியவற்றைத் தலைவற் குக் கொடுத்துவிடல் வேண்டுமென்பது கருத்து.

பவர்கள் நான்கில் ஒருகூறுதல் ஐந்தில் ஒருகூறுதல் வாரங்கொள்ளக்கடவர். [43]கேடுநேர்ந்த காலத்தன்றி ஏனைய காலத்தில் உழப்படாத நிலத்திற்குரிய வாரத்தைக் [44]கொடுத்துவிடல்வேண்டும்.

[45]தன் அணையினின்றும் தன் [46]கைச்செயலால் நீர்பாய்ச்சினுல் ஐந்திலொரு கூறும், [47]எருத்தினுல் நீர்பாய்ச்சின் நான்கிலொரு கூறும், வாய்க்கால் வழியாக நீர்பாய்ச்சின் மூன்றிலொரு கூறும் [48]இறை செலுத்தல்வேண்டும்.

[49]யாறு ஏரி குளம் கேணி இவற்றினின்றும் பாய்ச்சினுல் நான்கிலொரு கூறும்.

தொழிலுக்குவேண்டிய நீரின் அளவைக்கொண்டு வயல் [50]பனி வெயில் இவைகளுக்கேற்றவாறு பயிர்செய்வித்தல் வேண்டும்.

சாலிநெல் முதலியவை [51]உயர்ந்தவைகளாம். [52]தோட்டப்

---

[43] கேடு—மிகுபெயல் பெயலின்மை முதலியவற்றுல் உழவுத்தொழிற்கு நேரும் தடை.

[44] எத்தகைய தடையுமில்லாத நிலையில் வாரத்துக்கு ஏற்றுக்கொண்டவன் நிலத்தை உழுது பயிர்செய்யாவிடின் அந்நிலத்துக்குரிய வாரத்தைத் தலைவனுக்குக் கொடுத்துவிடல் வேண்டுமென்பது கருத்து.

[45] தன் அணை—தன் உடலுழைப்பாலும் தன் பொருட்செலவாலும் உண்டாக்கப்பட்ட ஏரி முதலியன.

[46] கைச்செயல்—கையாற் குடம்முதலியவற்றில் நீர் முகந்து பாய்ச்சுதல்.

[47] எருத்து — எருதின்பிடர்; எருதுகளைக்கொண்டு இறைக்கப்படும் ஏற்றநீரைக் குறிக்கும்.

[48] நிலத்திற்கும் நீர்க்குந் தலைவன் அரசனுதலால் இது நிலத்திற்குரிய இறைபோன்ற நீர் இறையாகும்.

[49] உழவன் முயற்சியாலன்றி இயற்கையிலமைந்த நீர்நிலைகள் ஈண்டுக் குறிக்கப்படுகின்றன.

[50] பனி வெயில் இரண்டும் காலத்தைக் குறிப்பன.

[51] சுருங்கிய பொருட்செலவாலும் முயற்சியாலும் மிகுதியான பயனை விளைவித்துச் சிறந்தவுணவாக இருத்தலால் உயர்ந்தவையாயின வென்பது.

[52] தோட்டப்பயிர்—வாழை முதலியன; சுருங்கிய செலவு முயற்சிகளாற் சுருங்கியபயன் விளைப்பதுபற்றி நடுத்தரமென்பது கருத்து.

பயிர்வகை நடுத்தரமாம். [53]இடையூறும் [54]பொருட்செலவும் மிகுதலாற் கரும்பு தாழ்ந்ததாம்.

[55]பழக்கொடிகளுக்கு நீர்நுரை படியுமிடமும், திப்பிலி கொடி முந்திரி கரும்பு இவைகளுக்குப் படுகர்நிலமும், கீரை கிழங்குகளுக்குக் கேணிமருங்கும், இளம்புற்களுக்குச் சிறுவாய்க்கால்விளிம்பும், [56]மணப்பயிர் மருந்துப்பயிர் [57]வேரி [58]குறுவேர் சேப்பங்கிழங்கு முதலிய கிள்ளக்கூடிய பயிர்களுக்கு வரப்புகளும் இடமாம். நிலத்திற் பயிராவனவும் நீர்மருங்கிற் பயிராவனவும் ஆகிய மூலிகைகளை அவ்வவற்றிற்கேற்ற இடங்களிற் பயிர்செய்தல்வேண்டும்.

[59]நெல்விதைகளை ஏழுநாள் பனியால் நனைத்து வெயிலால் உலர்த்தல்வேண்டும். [60]மேந்தோலுடைய கூலங்களுக்கு மூன்று நாள் அல்லது ஐந்து நாட்களாம்.[61]

துளிர்ப்பதற்காக நடப்படுகின்ற [62]போத்தின் வெட்டுவாயில் தேன் நெய் பன்றிக்கொழுப்பு இவைகளைச் சாணத்தோடு கலந்து பூசுதல்வேண்டும். கிழங்குகளுக்குத் தேனும் நெய்யும் கலந்து பூசுதல்வேண்டும். கொட்டைவிதைகளுக்குச் சாணத்தைப்பூசுதல் வேண்டும். மரங்களுக்குத்தோண்டிய குழிகளைச்சுட்டு மாட்டெலும்பு சாணம் இவைகளை ஏற்றகாலத்தில் எருவாக இடுதல் வேண்டும்.

[63]முளைத்த பயிர்களுக்குக் கள்ளிப்பாலும் சிறிய பச்சைமீனுங் கலந்த எருவிடுதல்வேண்டும்.

---

[53] இடையூறு—மக்களாலும் எலி முதலியவற்றாலும் நேர்வன.

[54] பொருட்செலவுமிகுதி, வெட்டுதல் ஆலையிற்பிழிதல் காய்ச்சுதல் முதலிய தொழில்களால் நேர்வது.

[55] பலவகைப் பயிர்களுக்குமுரிய நிலவேறுபாடு கூறுகின்றார்.

[56] மணப்பயிர்—மரு, மருக்கொழுந்து முதலியன.

[57] வேரி—இலாமிச்சை.

[58] குறுவேர்—ஒருவகை மணவேர்.

[59] வித்துக்களைத் தூய்மை செய்யும் முறையைக் கூறுகின்றார்.

[60] மேந்தோலுடைய கூலங்கள்—பயறு உழுந்து முதலியன.

[61] பனியால் நனைத்து வெயிலால் உலர்த்தல்வேண்டுமென்பது.

[62] போத்து—மரக்கொம்பு.

[63] பயிர்களுக்குப் பூச்சி புழு முதலியவற்றால் ஏற்படுங் கெடுதலை யொழிக்கும் உபாயங் கூறுகின்றார்.

**சுலோகம்**

[64]பருத்தி விதையையும் பாம்பின் உரியையுஞ் சேர்த்துப் புகைத்தவிடத்திற் பாம்புகள் இருக்கமாட்டா.

எல்லாவிதைகளையும் விதைக்கும்போது முதற்பிடியைப் [65]பொன்னீரில் நனைத்து விதைத்தல்வேண்டும். பின்வரும் மந்திரத்தையும் ஓதல்வேண்டும்.

(மந்திரம்)

மக்களுக்குத் தலைவனும் கசியப மரபிற் பிறந்தவனும் ஆகிய தேவனுக்கு எப்போதும் வணக்கஞ்செலுத்துகின்றோம். தொடங்கிய இவ்வுழவுத்தெய்வம் கூலங்களாலும் பொருளாலும் எனக்கு நலம்விளைவிப்பதாக.

தோட்டக்காவலர் [66]ஆயர் அடிமை பணியாளர் இவர்களுக்கு உடலின் உழைப்பிற்கேற்ப உணவு ஏற்படுத்தல்வேண்டும். திங்களுக்கு ஒன்றேகாற்பணம் [67]கூலியும் கொடுத்தல்வேண்டும்.

காருகர்களுக்குத் தொழிலிற்கேற்ப உணவும் கூலியும் கொடுத்தல்வேண்டும்.

தவஞ்செய்வோரும் வேதம் ஓதுகின்றவர்களும் கடவுள்வழிபாட்டினிமித்தம் [68]உதிர்ந்த மலர் கனிகளையும் புத்தூண் வேள்வியினிமித்தம் [69]நெல் யவங்களையும் எடுத்துச் செல்லலாம்.

பொறுக்கிப்பிழைப்போர் கூலக்குவியலின் அடியிற் சிந்தியவற்றை எடுத்துக்கொள்ளலாம்.

---

64 பாம்புகளால் கேடு விளையாமைக்கு உபாயங்கூறுகின்றார்.

65 பொன்னீர்—பொன்னிட்ட நீர்.

66 ஆயர்—இடையர்.

67 கூலியும் என்றதனால் உணவுங்கொடுத்தல் வேண்டுமென்பது.

68 மரஞ்செடிகளிலிருந்து மலர் கனிகளைப் பறித்தலால் அவ்வோரறிவுயிர்க்கு ஊறுசெய்வதாக முடியும் என்று உதிர்ந்த மலர் கனிகளை எடுக்க வேண்டுமென்றார்.

69 உதிர்ந்த என்னும் அடைமொழியை நெல் யவங்களுக்குங் கொள்க.

## சுலோகங்கள்

(1) விளைந்த எல்லாப் பயிர்விளைவுகளையும் தகுதியான காலத்தில் (இல்லத்தின் அகத்தே) சேர்த்தல்வேண்டும். அறிஞர்கள் சிறிது வைக்கோலைத்தானும் விளைநிலத்தில் வைத்தலாகாது.

(2) [70]கூலங்குவிக்குமிடம் உயரமாக இருத்தல்வேண்டும். உயர்ந்த களஞ்சியங்களிலும் வைக்கலாம். குவியல்களை ஒன்றோடொன்று தலைநெருங்கினவாகச் செய்தல்கூடாது. அவற்றின் குடுமிகள் [71]நொய்யனவாக இருத்தலாகாது.

(3) அக்களத்தின் [72]மண்டல விளிம்பில் கூலங்களைக் குவித்தல்வேண்டும். களத்தில் வேலைசெய்வோர் தம்பால் [73]தீ இல்லாதவராகவும் [74]நீர் உடையவராகவும் இருத்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்துமூன்றும் பிரகரணம் "உழவுத்தொழிற்றலைவன்" என்னும் நாற்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[70] கூலங்களைக் குவித்துவைக்குமிடம் நீர் முதலியவற்றால் கேடுறாவண்ணம் உயரமாக இருத்தல்வேண்டுமென்பது.

[71] சூறாவளி முதலியவற்றாற் கேடுநேராவண்ணம் இருப்புத்துண்டு கல் முதலியவற்றை உள்ளிட்டு வைக்கவேண்டுமென்பது கருத்து.

[72] மண்டலம்—வைக்கோலிற் பற்றியிருக்கும் நெல்லையுதிர்ப்பதற்குக் கடாவிடும் இடம்.

[73] நெல் முதலியவற்றிற்குக் கேடுநேராவண்ணம் நெருப்பில்லாமலிருத்தல்வேண்டுமென்பது கருத்து.

[74] எதிர்பாராதநிலையில் நெருப்புப்பற்றுமாயின் அதனை அணைத்தற்கு நீருடையராக விருத்தல்வேண்டுமென்பது கருத்து.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்துநான்காம் பிரகரணம்—[1]கள்வினைத்தலைவன்

### நாற்பத்தாரும் அத்தியாயம்

கள்வினைத்தலைவன் கள் அதற்குரிய [2]மூலப்பொருள்களின் இயல்பை அறிந்த குடியிற்பிறந்தவரைக்கொண்டு அரண் நாடு பாசறை ஆகிய இவ்விடங்களில் அவற்றிற்குரிய [3]தொழில்களை விற்றல் கொள்ளல்களுக்கு ஏற்ப [4]ஒருமுகமாகவாதல் [5]பலமுகமாக வாதல் செய்வித்தல்வேண்டும். [6]வேறிடத்திற் [7]செய்வோர் விற் போர் வாங்குவோர் ஆகிய இவர்களுக்கு அறுநூறுபணம் தண்ட மாம். தொழில் செய்வோர்களுக்கு [8]விழிப்பின்மையும் சான்றோர் களுக்கு நெறிப்பிறழ்ச்சியும் வீரர்களுக்கு [9]ஊக்கமும் செய்விக்கும் என்னும் [10]அச்சத்தால் [11]கள்ளைக் கிராமத்தினின்றும் வெளிப்படுத் தலையும் [12]புறத்தே கொணர்தலையும் (தடுத்தல்வேண்டும்).

---

### 46-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசியலுக்கு இன்றியமையாத உழவுதொழில் முன்னர்க் கூறப் பட்டது. உழவுதொழில் புரிவோர்க்கு உணவாகவும், அரசியல் வினைஞ ரால் கண்காணிக்கப்படுவதாகவும் இருத்தல்பற்றிக் கள்வினைத்தலைவன் என் னும் இது அதன்பின்னர்க் கூறப்பட்டது. இதனால் பிரகரண இயைபு புலனாதலறிக.

[2] மூலப்பொருள்—கள் உண்டாக்குதற்குரிய மதுக்குழம்பு.

[3] தொழில்கள்—கள் வடித்தல் முதலியன.

[4] ஒருமுகமாகவாதல்—ஓரிடத்திலாவது.

[5] பலமுகமாகவாதல்—பலவிடங்களிலாவது.

[6] வேறிடம்—அரண் முதலியவற்றில் அரசியலாரால் அனுமதிக்கப் படாத இடம்.

[7] செய்வோர்—கள் உண்டாக்குவோர்.

[8] விழிப்பின்மை—கவனமின்மை.

[9] ஊக்கம்—உரியதல்லாத இடத்தில் அம்பு முதலியவற்றை எய்தல்.

[10] அச்சம்—கள் ஆக்கப்படுமிடத்தினின்றும் வெளிச்செல்லுமாயின் தொழில் செய்வோர் அதனையுண்டு சோர்வடைதலும், சான்றோர் உண்டு ஒழுக்கத்திற் பிறழ்தலும், வீரர் உண்டு தகாத இடத்தில் வீரச்செயலைக் காட்டுதலும் நேரக்கூடும் என்னும் பயம்.

[11] ஒரு கிராமத்தினின்றும் மற்றொரு கிராமத்திற்குக்கொண்டுசெல்லல்.

[12] புறத்தேகொணர்தல்—ஒரு வீட்டினின்றும் மற்றொரு வீட்டிற்காதல் மக்கள் கூட்டத்திலாதல் கொண்டுசெல்லல்.

[13]தூயவர் என்று அறியப்பட்டோர் [14]சிறிதளவு–கால் உழக்கு அரையுழக்கு ஒருழக்கு அரைப்படி [15]ஒருபடியளவு—கொண்டு செல்லலாம்.

[16]குடிக்குமிடத்திலேயே [17]இயக்கமில்லாதிருந்து குடிக்கக் கடவர்.

பண்டஞ்செய்யக் கொடுக்கப்பட்டபொருள் அடைக்கலப் பொருள் ஈட்டுப்பொருள் களவுசெய்தபொருள் வஞ்சித்துக்கவர்ந்த பொருள் [18]முதலிய பொருள்களை யறிதற்பொருட்டுக் குப்பியம் பொன் இவற்றைக்கொணர்வோர் அவற்றிற்கு உரியவரல்லர் என்று தோன்றுங்கால் [19]வேறுகாரணத்தைத் தலைக்கீடாகக் கொண்டு [20]வேறிடத்தில் அவரைப் பிடிப்பித்தல்வேண்டும். [21]மிகையாகச் செலவுசெய்பவனையும் வருவாயின்றிச் செலவுசெய் வோனையும் [22]பிடிப்பித்தல்வேண்டும்.

கெட்டகள்ளைத் தவிர மற்றைக் கள்ளை விலைகுறையவாதல் கடனாகவாதல் கொடுத்தலாகாது.

---

[13] கள்ளை வெளியே கொண்டுபோதற்குச் சிறப்புவிதி கூறுகின்றார்.

[14] சிறிதளவென்பதைப் பின்வரும் அளவையாலறிக.

[15] ஒரு படிக்குமேல் கொண்டுபோதலாகாதென்பது கருத்து.

[16] குடிக்குமிடம்—கள்ளுக்கடை.

[17] களிப்புவெறி தணியுங்காறும் இயங்குதலாகாதென்பது கருத்து.

[18] முதலிய என்றது இரந்துபெற்ற பொருள் முதலியவற்றைக் குறிக் கும்.

[19] வேறு காரணங்காட்டாமல் கள்ளுக்கடையிலேயே வைத்துப் பிடிப் பித்தால், குடிக்கவரும் மற்றைய கள்வர்கள் மேற்குறித்த குப்பியம் முதலிய பொருள்களை நம்பிக்கையில்லாமையால் வேற்றிடத்திற்குக் கொண்டுசெல்வர் என்னுங்கருத்தால் வேறுகாரணத்தைக் காட்டி வேறிடத்திற் பிடிப்பித்தல் வேண்டுமென்று கூறப்பட்டது.

[20] வேறிடம்—கள்ளுக்கடைக்கு அயலதாகிய இடம்.

[21] மிகையாகச் செலவுசெய்தல்—வருவாயளவிற்கு மிகுதியாகச் செல விடல்.

[22] வருவாயின் மிகுதியாகவும், வருவாயின்றியும் செலவு செய்பவன், களவுப்பொருள் முதலியவற்றைக் கொண்டு குடிக்கத் தலைப்படுவன் எனக் கருதி அவனையும் பிடிப்பித்தல் வேண்டுமென்பது கருத்து. பிடிப்பிப்போன் கள்வினைத் தலைவனுவான்.

அக் கெட்டகள்ளை [23]வேறிடத்தில் விற்கச்செய்தல்வேண்டும். அல்லது அடிமைகளுக்கும் பணியாளருக்கும் கூலியாகக் கொடுக்கலாம். [34]ஊர்திகளைக் காத்தற்கும் பன்றி வளர்த்தற்கும் கொடுக்கலாம்.

குடிக்குமில்லத்தைக் [25]குடித்தற்குரிய இடங்களையுடையதாகவும் பல கட்டுகளையுடையதாகவும் தனித்தனிப் படுக்கை இருக்கைகளையுடையதாகவும் மணப்பொருள் மாலை நீர் இவைகளையுடையதாகவும் [26]பருவங்களுக்கேற்ற இன்பமளிப்பதாகவுஞ் செய்வித்தல்வேண்டும்.

அங்குள்ள [27]ஒற்றர்கள் இயல்பாகவும் [28]சிறப்பாகவும் உள்ள [29]செலவுகளையும், [30]அயல்நாட்டினின்றும் வந்தவர்களையும் அறிதல் வேண்டும்.

களிமயக்குற்றவர்களும் உறங்கியவர்களுமாகிய கள்வாங்கியவரிடத்துள்ள அணிகலன் ஆடை பொன் இவைகளை [31]அறிந்துகொள்ளுதல்வேண்டும். அவைகள் [32]கேடுறின், கள்வாணிகர்

---

[23] நல்ல கள் விற்குமிடத்தினின்றும் வேறிடமென்பது கருத்து; கலப்பு உளதுகொல் என்னும் ஐயம் தோன்றுமைப்பொருட்டு.

[24] மேற்கூறிய கூலி சிறியதொழில் செய்வோர் பொருட்டு என்பதைக் கூறுகின்றார். ஊர்தி—ஒட்டகம் எருது முதலியன. அவற்றைக் காப்பாற்றுவோர்க்கும், பன்றி வளர்ப்போர்க்கும் கூலியாகக் கொடுக்கலாம் என்பது கருத்து.

[25] குடிக்குமில்லத்தில் அமைதியாக இருந்து குடிப்பதற்குரிய சிறந்த இடங்கள் என்பது கருத்து.

[26] இளவேனில் முதலிய பருவங்களுக்கு ஏற்ற இன்பமளிக்கும் பொருள்களை உடையதாகவும் என்பது கருத்து.

[27] ஒற்றர்கள்—கள்ளுக்கடைத் தொழில் செய்வோரின் உருக்கொண்டுள்ளவர்.

[28] சிறப்பாகவுள்ள செலவு, முன்னிகழாதது.

[29] செலவு, குடிப்போரைப் பற்றியது.

[30] வேற்றுநாட்டினின்றுங் குடிக்கவந்தவர் என்பது கருத்து.

[31] ஒற்றர்கள் அறிந்துகொள்ளவேண்டுமென்பது.

[32] கேடுறுதல்-களிமயக்கத்தாலும் உறக்கத்தாலும் அணிகலன் முதலியவற்றிற்கு இழப்பு நேர்தல்.

கேடுற்ற அப்பொருளும் அவற்றிற்கு ஒத்த பொருளும் [33]தண்டமாக இறுத்தல்வேண்டும்.

வணிகர், தனித்தனியாகவுள்ள அறைகளில் மேன்மக்கள் போல் தோற்றமுடையவராய்க் குடித்து மயங்கியும் உறங்கியும் கிடக்கும் தம்நாட்டினர் அயல்நாட்டினர் ஆகிய இவர்களுடைய எண்ணங்களை அழகிய உருவமுடைய தம் பணிப்பெண்களைக் கொண்டு [34]அறிந்துகொள்ளல்வேண்டும்.

தோப்பி தேறல் பிழி அரிட்டம் மைரேயம் மது [35]இவைகளைப்பற்றி இனிக் கூறுவாம் :—

ஒருதூணி நீர் அரைமரக்கால் அரிசி மூன்றுபடி மதுக்குழம்பு இவற்றின் கலவை [36]தோப்பி எனப்படும்.

பன்னிரண்டுமரக்கால் மா ஐந்துபடி மதுக்குழம்பு [37]புத்திரக மரத்தின் பட்டை கனிகள் [38]மணக்கூட்டு இவ்வகளின் கலவை [39]தேறல் எனப்படும்.

ஒருதுலை [40]விளம்பழம் ஐந்துதுலை பாகு ஒருபடி தேன் இவை

---

[33] கட்கடையில் குடிப்போருடைய பொருளைப் பாதுகாக்கவேண்டியது கள்வாணிகர் கடமையாதலின் அவற்றை இழக்க நேர்ந்தால் தண்டஞ் செலுத்தல் வேண்டுமென்பது கருத்து.

[34] மேன்மக்களைப்போன்ற தோற்றமுடையவர், கள்வராகவும் பகைவரால் அனுப்பப்பட்டவராகவும் இருத்தல் கூடும் என்னும் ஐயத்தால் அன்னாரெண்ணங்களைப் பெண்களைக்கொண்டு அறிந்துகொள்ளவேண்டுமென்றார். அப்பெண்கள் அழகிய உருவமுடையராக இருப்பின் அவர்பால் ஈடுபட்டு உள்ளக்கருத்தை வெளிப்படுத்துவர் என்பது.

[35] அறுவகைக் கள்ளையும் உண்டாக்கும் முறையைக் கூறத் தொடங்குகின்றார்.

[36] தோப்பி என்பது நெல்லாற் சமைத்த கள் என்பர் அகநானூற்றுக் குறிப்புரையாசிரியர். (அகம். 35).

[37] புத்திரகமரம்—காமரூபம் என்னும் நாட்டிற்றோன்றிச் சிறந்து விளங்குவது.

[38] மணக்கூட்டு—இதன் விளக்கம் பின்வருவது.

[39] இத் தேறல் என்னுங் கள்ளை உண்டாக்குவதற்கு நீரின் அளவு முன் கூறியபடி மாவின் அளவின் எண்மடங்கு மிகுதியாகும் என அறிக.

[40] விளம்பழம் ஈண்டு அதன் சாற்றை யுணர்த்தும்.

களுடைய கலவை பிழி எனப்படும். [41]காற்கூறு மிக்கது தலையாயது. காற்கூறு குறைந்தது கடையாயது.

[42]வேற்றுமைகளுக்கு ஏற்ப [43]மருத்துவரால் தனித்தனி கூறப்பட்ட அளவினையுடைய கலப்பு [44]அரிட்டம் எனப்படும்.

கொதிக்கவைத்த[45]மேடசிருங்கிப்பட்டையின் சாறு வெல்லப்பொடி திப்பிலி மிளகு அல்லது [46]திரிபலை இவற்றின் கலவை [47]மைரேயம் எனப்படும். வெல்லஞ்சேர்ந்த [48]எல்லாவகைக்கும் திரிபலைக்கூட்டு உண்டு.

கொடிமுந்திரிச்சாறு மது எனப்படும். அம்மது [49]காபிசாயனம் [50]ஆரகூரகம் என நாடுபற்றி இருவகைப்படும்.

காய்ச்சியதாதல் காய்ச்சப்பெறுததுஆதல் ஒருதூணி உழுந்துக் கழுநீர், [51]மூன்றிலொருகூறு மிக்க [52]அரிசி, பெருங்குரும்பை [53]முதலியன ஒவ்வொரு கருடம் இவற்றின் கலவை மதுக்குழம்பு எனப்படும்.

---

[41] மேற்கூறிய அளவையும் நான்கிலொருகூறு மிகுதியாகச் சேர்க்கப்படுவது தலையாயது எனவும், நான்கிலொருகூறு குறைவாகச் சேர்க்கப்படுவது கடையாயது எனவும் கொள்ளல்வேண்டும். எனவே முன்னர்க் குறிப்பிட்டது இடையாயது என்பது புலப்படும்.

[42] வேற்றுமைகள்—நோயின் வேறுபாடுகள்.

[43] நோய்களின் வன்மை மென்மைக்கேற்ப மருத்துவராற் கூறப்பட்ட பொருள்களின் கலவை அரிட்டம் எனப்படுமென்பது.

[44] அரிட்டம்—மருத்துவநூலிற் கூறப்படும் சாருயவடிவினதாகிய ஒருவகை மருந்து.

[45] மேடசிருங்கி—ஆடுதின்னுப்பாளையென்று கூறுவர்.

[46] திரிபலை—கடுக்காய் தான்றிக்காய் நெல்லிக்காய்.

[47] மைரேயம்—மிரா என்னும் நாட்டில் உண்டாக்கப்படும் கள்.

[48] எல்லாவகைக்கும்—எல்லாவகைக் கள்வகைக்கும்.

[49] கபிசம் என்னும் நதிக்கரையிலுள்ள நாட்டிலுண்டாவதுபற்றிக் காபிசாயனம் எனப்படும்.

[50] அரசூரம் என்னும் நகரத்திலுண்டாவது பற்றி ஆரகூரகம் எனப்படும்.

[51] மூன்றிலொருகூறு மிகுதி—உழுந்துக்கழுநீரின் அளவும் அதனின் மூன்றிலொருகூறு மிகுதியுமாம்.

[52] அரிசி—ஈண்டு அதன் மாவை யுணர்த்தும்.

[53] முதலியன வென்பதனாற் கொள்ளத்தக்கவற்றைப் பின்னர்க் காண்க.

தோப்பி தேறல் என்னுமிவற்றிற்குப் பங்கம்பாளை வெள்ளி லோத்திரம் யானைத்திப்பிலி ஏலக்காய் வால்மிளகு அதிமதுரம் கொடிமுந்திரிப்பழம் ஞாழற்பூ மரமஞ்சள் மிளகு திப்பிலி என்னும் இவை தனித்தனி ஐந்துகருட அளவு [54]கூட்டுப்பொருள்களாம். அதிமதுரக் கொதிசாற்றோடு கலந்த [55]கடசருக்கரை [56]நிறம்பயப்ப தாகும்.

இலவங்கப்பட்டை கஞ்சாங்கோரை வாயுவிளங்கம் யானைத் திப்பிலி இவை தனித்தனியே ஒவ்வொரு கருடமும் பாக்கு அதி மதுரம் [57]கோரைக்கிழங்கு வெள்ளிலோத்திரம் இவை தனித் தனியே இரண்டிரண்டு கருடங்களும் [58]பிழியின் கூட்டுப் பொருள் களாம். இவற்றின் பத்திலொரு கூற்றை மூலப்பொருளிலே சேர்த் தல்வேண்டும்.

தேறலுக்குக்கூறிய கலவையே [59]வெண்கள்ளுக்குமாம்.

[60]மாங்கள் [61]தீந்தேறல் மதுக்குழம்பு மிகுதியாகச் சேர்க்கப் பட்ட [62]பெருங்கள் [63]மிகைக்கூட்டு இவை கள்ளின் வகைகளாம்.

---

[54] கூட்டுப்பொருள்—மணமுஞ்சுவையும் பயத்தற்குச் சேர்க்கப்படும் பொருள்.

[55] கடசருக்கரை—ஒருவகைக் கொடிப்பழம்; ஈண்டு அதன் சாற்றை யுணர்த்தும். கண்டசருக்கரை எனப் பாடங்கொண்டு கற்கண்டு எனினும் அமையும்.

[56] நிறம் பயப்பது, தோப்பி தேறல் என்னும் கள்வகைகளுக்கு என உணர்க.

[57] முஸ்தா என்னும் மூலத்திற்குக் கோரைக்கிழங்கு எனப் பொருள் கொள்ளப்பட்டது.

[58] பிழி என்னும் கள்வகைக்கு மணமுஞ்சுவையும் உண்டாக்கும் பொருள்களாமென்பது.

[59] வெண்கள் என்பது தேறலின் வேறன்று; கூட்டுப்பொருள் கலவாத நிலையில் அது வெண்கள் எனப்படும்.

[60] மாங்கள்—மாவடுவினின்றும் வடித்தெடுக்கப்படும் சாற்றினாலாவது; (அகநானூறு 37-ஆம் பாடல் பார்க்க).

[61] தீந்தேறல்—வெல்லப்பாகு கலக்கப்பெற்றது. இதனைக் கருப்பஞ் சாற்றினாலுண்டாக்கப்படும் சீது என்றுங் கூறுவர்.

[62] மற்றைக் கள்வகைகளிற் சேர்க்கப்படும் மதுக்குழம்பளவின் மிகுதி யாகச் சேர்க்கப்படுவது பெருங்கள் என்பதாம்.

[63] மணமுஞ் சுவையும் உண்டாக்குதற்பொருட்டுக் கலக்கப்படும் பொருள்கள் மற்றைக் கள்வகைகளினின்றும் மிகுதியாகச்சேர்க்கப்படுவது மிகைக்கூட்டு என்பதாம்.

கடசருக்கரையை வறுத்துப்பொடித்துப் பெருங்குரும்பை புரசு பத்தூரம் ஆடுதின்னுப்பாளை புன்கு [64]பால்மரம் இவற்றின் கொதிசாற்றில் நனைத்து வெள்ளிலோத்திரம் கஞ்சாங்கோரை வாயுவிளங்கம் பங்கம்பாளை கோரைக்கிழங்கு கலிங்கநாட்டு யவம் மரமஞ்சள் கருநெய்தல் பெருஞ்சதகுப்பை நாயுருவி ஏழிலைப்பாலை வேம்பு மலையத்தி இவைகளின் பொடியைப் [65]பாதியளவு சேர்த்து ஓர் [66]இறுக்கிய பிடியளவு பொடியை ஒரு [67]காரியளவுள்ள எவ் வகையான கள்ளிற் போட்டாலும் அது அரசன் பருகுதற்கு ஏற்ற தாகத் தெளிவடையும். ஐந்துபலம் வெல்லப்பாகு சுவைமிகுதி யின்பொருட்டு இதிற் கலத்தல்வேண்டும்.

குடிமக்கள் [68]சிறந்த காரியங்களின்பொருட்டு வெண்கள்ளை யும், மருந்துக்காக அரிட்டத்தையும் [69]பிறவற்றையும் செய்து கொள்ளலாம்.

[70]திருவிழா [71]கூட்டம் விரும்பிய [72]தெய்வவழிபாடு இவை களில் நான்கு நாட்கள் கள் குடிக்கவிடலாம். [73]அந்நாட்களில் [74]அநுமதிபெறுதவர்களுக்கு இவற்றின் [75]முடிவுகாறும் ஒவ்வொரு நாட்கும் உரியதண்டனை விதித்தல்வேண்டும்.

---

[64] பால்மரம்—ஆல் முதலியன.

[65] பாதியளவு—வறுத்துப்பொடித்த கடசருக்கரையின் அரைக்கூறு.

[66] இறுக்கிய பிடியளவு, மிகுதியாகாமைப்பொருட்டு.

[67] காரி—பதினாறு தூணியளவுகொண்டது.

[68] சிறந்த காரியங்கள்—திருமணம் முதலியன.

[69] பிறவற்றையும் என்றதனால் தோப்பிக்கள் முதலியவற்றையுங் கொள்க.

[70] திருவிழா—வசந்தோற்சவம் முதலியன.

[71] கூட்டம்—உறவினர் முதலியோர் ஒன்றுகூடல்.

[72] தெய்வவழிபாடு—குலதெய்வம் முதலியவற்றிற்குச் செய்யப்படும் பூசை.

[73] அந்நாட்கள்—திருவிழாநாட்கள் முதலியன.

[74] கட்குடித்தற்கு அநுமதிபெறுதவர் என்பது.

[75] முடிவு—திருவிழா முதலியவற்றின் முடிவுநாள்,

சிறுவர்களும் பெண்டிர்களும் கள் மதுக்குழம்பு இவற்றின் [76]தொழிலைச்செய்தல்வேண்டும்.

அரசன்பொருளாலன்றி (த் தம்பொருளாற்) கள்செய்வோர், கள் தோப்பி அரிட்டம் மது [77]பழச்சாறு கருப்பங்கள் இவைகளுக்கு நூற்றுக்கு ஐந்துவிகிதம் [78]உல்கு கொடுத்தல்வேண்டும்.

### சுலோகம்

நாடோறும் நிகழும் விற்பனையையும் [79]அளவுக்குறைவையும் அறிந்துகொண்டு அளவு[80]வாசியும் பொருள்வாசியும் ஏற்படுத்தல் வேண்டும். [81]வழக்கத்தையும் ஒட்டி நடத்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்துநான்காம் பிரகரணம்
“ கள்வினைத்தலைவன் ” என்னும் நாற்பத்தாரும்
அத்தியாயம் முற்றிற்று.

---

[76] தொழில்—கள்ளைப் பக்குவஞ் செய்தலும் மதுக்குழம்பை யுலர்த்தலும் முதலியன. இத்தொழில்களைப் பெண்களும் சிறுவர்களும் மேற்கொள்ளவேண்டுமென்றது, அச்சுவையிலீடுபடாதவர்கள் என்பது கருதி.

[77] பனை தெங்கு இவற்றின் சாறு எனினும் அமையும்.

[78] உல்கு—இறைப்பொருள்.

[79] அளவுக்குறைவு—கள்ளை மீண்டும் மீண்டும் அளத்தலானுண்டாகுங் குறைவு.

[80] வாசி—அளவுக்குறைவு முதலியவற்றிற்கு ஈடாகச் சேர்ப்பது. அளவுவாசி பதினாறிலொருகூறும் பொருள்வாசி இருபதிலொரு கூறுமாம்.

[81] மேற்குறிப்பிட்ட வாசி முதலிய திட்டங்களைக் கள்வினைத்தலைவன் தன்விருப்பப்படி செய்யாமல் முன்னைய வழக்கத்தையொட்டிச் செய்ய வேண்டுமென்பது கருத்து.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தைந்தாம் பிரகரணம்—[1] இறைச்சித் தொழிற்றலைவன்

## நாற்பத்தேழாம் அத்தியாயம்

இறைச்சித் தொழிற்றலைவன் [2] துன்புறுத்தாதன என்றறியப் பட்டனவும் [3] அச்சமில்காட்டில் வாழ்வனவும் ஆகிய [4] மிருகம் [5] பசு முதலிய விலங்கு [6] பறவை மீன் என்னும் இவற்றைக் [7] கட்டுதல் கொலைப்படுத்தல் துன்புறுத்தல் செய்யின் உத்தமசாகச தண்டம் விதித்தல்வேண்டும். [8] குடிமக்கள் அச்சமில்காட்டில் வாழ்வன வற்றிற்கு அக்குற்றத்தைச் செய்யின் மத்தியமசாகசம் தண்டமாம்.

[9] கொல்லும் வழக்கமில்லாத மீன்களையும் பறவைகளையும் கட்டுதல் கொலைப்படுத்தல் துன்புறுத்தல் செய்யின் இருபத்தாறே முக்காற்பணம் தண்டம் விதித்தல்வேண்டும். [10] மிருகம் [11] பசுக் களுக்காயின் [12] இருமடங்கு தண்டமாம்.

---

### 47-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] கள்ளும் ஊனும் ஓரினமாதலின் கள்வினைத்தலைவன் என்பதன்பின் இது கூறப்படுகின்றது. இதனால் பிரகரண இயைபு புலனாதலறிக.

[2] துன்புறுத்தாதன—குத்தல் கடித்தல் கீறல் முதலிய செயல்களால் பிறவுயிர்க்குத் துன்பம் செய்யாதன.

[3] அச்சமில்காடு—அரசனாற் பாதுகாக்கப்பட்ட காவற்காடு.

[4] மிருகம்—மான் முதலியன.

[5] பசு—ஆன் எருமை முதலியன.

[6] பறவை—மயில் முதலியன.

[7] கட்டுதல்—வலைகட்டிப் பிடித்தல்.

[8] குடிமக்கள் என்று இங்குக் கூறியதனால் முன்குறிப்பிடப்பட்டோர் இறைச்சித்தொழில்புரிவோர் என்பது புலப்படும்.

[9] கொல்லும் வழக்கம் நீண்டகாலமாக இல்லாத என்பது கருத்து.

[10] கொல்லும் வழக்கம்இல்லாத என்னும் அடைமொழியை ஈண்டும் கூட்டுக.

[11] கட்டுதல் கொல்லுதல் துன்புறுத்தல் செய்யின் என்பது கருத்து.

[12] இருமடங்கு—ஐம்பத்துமூன்றரைப்பணம்.

[13]ஒருவர்க்கு உரிமையில்லாதனவும் துன்புறுத்தும் வழக்க முள்ளவைகளும் ஆகியவற்றிற்கு ஆறிலொன்று பெற்றுக் கொள்ளல்வேண்டும். மீன் பறவை இவற்றிற்குப் [14]பத்தில் ஒரு கூறுதல் சற்று மிகுதியாகவாதல் கொள்ளல்வேண்டும். மிருகம் பசுக்களுக்கு [15]உல்குபொருளாதல் [16]சற்று மிகுதியாகவாதல் கொள்ளலாம்.

[17]பறவை விலங்குகளில் [18]ஆறில் ஒருகூற்றை அச்சமில்காட்டில் உயிருடன் விட்டுவிடல்வேண்டும்.

கடல் ஏரி யாறு குளம் வாய்க்கால் இவைகளிற்றோன்றிய யானை குதிரை மனிதன் எருது கழுதை போன்ற உருவமுடைய மீன்கள் கிரௌஞ்சம் அன்றில் நச்சுக்குருவி அன்னம் சக்கரவாகம் [19]சீவஞ்சீவகம் [20]பிருங்கராசன் சகோரம் குயில் மயில் கிளி மதனம் நாகணவாய்ப்புள் [21]விளையாட்டுப் பறவைகள் ஏனைய மங்கலப் பிராணிகளாகிய [22]பறவைகள் [23]விலங்குகள் என்பன துன்பத்தி னின்றும் கொலையினின்றும் காப்பாற்றற்பாலன. பாதுகாப்பை மீறினல் பூர்வசாகசம் தண்டமாம்.

---

[13] உரிமையாளரை இல்லாதனவும் பிறவுயிர்க்குத் துன்பஞ்செய்வனவு மாகிய மிருகம் முதலியவற்றைக்கொலைசெய்யின் அது கொலைக்குற்றமாகா மையின் தண்டம்விதியாமல் அக்கொலைசெய்யப்பட்ட பிராணியின் பெறு மதியில் அரசற்குரிய ஆறிலொருகூறு இறைப்பொருளாகக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[14] பத்திலொருகூறு, அப்பிராணியின் பெறுமதியில் என்பது.

[15] உல்குபொருள், கொலையுண்டமிருகம் பசு இவற்றின் விலையில் பத்தில் ஒருகூறும்.

[16] சற்றுமிகுதி—அப்பத்தில் ஒருகூற்றினும் சிறிது மிகுதி.

[17] ஈண்டுக்குறிக்கப்பட்ட பறவை விலங்குகள் காவற்காடல்லாத பிற காடுகளிலிருந்து கொள்ளப்பட்டவைகள்.

[18] ஈண்டும் ஆறிலொருகூறு அரசபாகமாகும்.

[19] சீவஞ்சீவகம்—இது சகோரவகைகளில் ஒன்று.

[20] சிறந்த சாதி வண்டு.

[21] விளையாட்டுப்பறவைகள்—கோழிச் சேவல் முதலியன.

[22] பறவைகள்—கருடன் செம்போத்து முதலியன.

[23] விலங்கு—பசு முதலியன.

மிருகம் பசு இவற்றின் இறைச்சியைக் [24]கொன்றவுடனேயே விற்றல்வேண்டும். [25]எலும்புடையதற்கு ஈடுகொடுத்தல்வேண்டும். [26]எடைக்குறைவு ஏற்படின் அக்குறைவின் எண்மடங்கு கொடுத்தல் வேண்டும்

[27]இவற்றுள் கன்று [28]ஆனேறு [29]பசு இவைகள் கொல்லத் தகாதன. இவற்றைக் கொல்பவனுக்கும் (கொல்லும் வழக்கமுடையவைகளைத்) [30]துன்புறுத்திக் கொல்பவனுக்கும் ஐம்பது பணம் தண்டமாம்.

[31]இறைச்சிக் கடையிற் கொல்லப்படாதன, [32]தலை கால் எலும்பு இல்லாதன, தீநாற்றமுடையன, [33]தாமே இறந்த பிராணிகளுடையன ஆகிய இவ்விறைச்சிகளை விற்றல் கூடாது ; விற்பின் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

---

[24] இறைச்சி புதியதாக இருக்கும்பொழுதே விற்றுவிடல்வேண்டும். பழையதாகின் நோய்விளைவிக்கும் என்பது கருத்து.

[25] எலும்புகலந்த இறைச்சியை விற்குங்கால் அதன்கட்கலந்திருக்கும் எலும்பின் அளவிற்குத்தக இறைச்சியை ஈடாக மிகுத்துக்கொடுத்தல் வேண்டும் என்பது கருத்து.

[26] துலாக்கோல் நிறையில் வஞ்சித்துக் குறையக் கொடுக்கப்படின் அக்குறைவின் எண்மடங்கு மிகுதியாகக் கொடுத்தல்வேண்டும் என்பது ; அவ்வெண்மடங்கு மிகுதியில் ஒருகூறு கொள்வோனுக்கும் எஞ்சிய ஏழு கூறு இறைச்சித்தொழிற்றலைவனுக்கும் உரியனவாகும் என்பது ஒருசாராசிரியர் கொள்கை.

[27] இவற்றுள்—கொல்லுதற்கு அநுமதிக்கப்பட்ட மிருகம் பசு என்பவற்றுள்.

[28] ஆனேறு—பொலியெருது.

[29] பசு—கன்றீனும் பருவமுடையது.

[30] துன்புறுத்திக்கொல்லுதல்—சித்திரவதை செய்தல்.

[31] அரசினர் கட்டளை பெறப்படாத இடத்தில் பிராணிகளைக் கொன்றெடுத்த இறைச்சி என்பது.

[32] தலை கால் எலும்பு இல்லாதன — காட்டில் பிராணிகள் கொன்று உண்டெஞ்சிய இறைச்சிகள் ; அவை இன்ன இறைச்சி என்றறியப்படாமையால் விலக்கப்பட்டன.

[33] நோய் முதலியவற்றால் தாமே இறந்த பிராணிகளின் இறைச்சி என்பது.

### சுலோகம்

[34]அச்சமில்காட்டில் வாழும் கொடிய பசு மிருகம் [35]பாம்பு மீன் இவை பாதுகாவலுக்குரிய இடமல்லாத ஏனைய இடங்களில் கட்டுப்பட்டவும் கொலைப்படவும் உரியன.

இரண்டாம் அதிகரணம் இருபத்தைந்தாம் பிரகரணம்
" இறைச்சித் தொழிற்றலைவன் " என்னும் நாற்பத்தேழாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

34 இச்சுலோகத்தால் விலக்குவிதி கூறப்படுகின்றது.

35 ஈண்டு வ்யாளம் என்பது மூலம்; அதற்குப் புலி முதலிய கொடிய விலங்குகள் எனினும் பொருந்தும்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தாறும் பிரகரணம்—[1] வரைவின்மகளிரை நடத்துந்தலைவன்

## நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

வரைவின்மகளிரை நடத்துந்தலைவன் கணிகையர்குடியிற் பிறந்தவளையாதல் [2]அக்குடியிற் பிறவாத வேறொருத்தியையாதல் அழகு இளமை [3]கலை இவற்றையுடையவளாக ஆராய்ந்து [4]ஆயிரம் பணங்கொடுத்துக் கணிகையாக ஏற்படுத்தல்வேண்டும். ஒரு [5]குடிக்குரிய அளவிற் பாதியால் மற்றொருத்தியையும் ஏற்படுத்தலாம்.

அயலூர் சென்றவள் இறந்தவள் இவர்களுடைய குடிக் கடமையை அன்னார் மகளாதல் சகோதரியாதல் [6]ஏற்று நடத்தல் வேண்டும். [7]அல்லது அவ்வவர் தாயர் மற்றொருத்தியையும் ஏற்

---

### 48-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உணவிலும் இன்பத்திலும் விலக்குவிதியாக ஓரளவு மேற்கொள்ளத் தக்கன கள்ளும் ஊனும் வரைவின்மகளிர்ச் சேர்தலும் ஆம். அம்முறையில் ஓரினமாகச் சேர்த்தெண்ணப்படுதலின் இறைச்சித்தொழிற்றலைவன் என்னும் அதிகாரத்தின்பின் இதுவைக்கப்பட்டது. இதனாற் பிரகரண இயைபு புலனாதலறிக.

[2] அக்குடியிற் பிறவாத என்னும் அடைமொழியால் அக்குடிப்பிறப்பு கணிகையர்தொழிற்கு இன்றியமையாததொன்றன்று என்பது போதரும்.

[3] கலை—ஈண்டு ஆடல் பாடல் முதலியன.

[4] புதிதாக அக்குடியை நிலைப்படுத்தற்பொருட்டு ஆயிரம் பணம் கொடுத்தல்வேண்டும் என்பது கருத்து. இஃது ஒரு குடிக்கென்பது.

[5] ஈண்டுக் குடி என்பது அக்குடித்தொழிலையும் அக்குடியை நிலைநிறுத்தற்பொருட்டுக் கொடுக்கப்படும் பொருளையும் உணர்த்தும்; தொழிலை உணர்த்துங்கால் கணிகையரிருவரை நியமனஞ்செய்து அரசனுக்குரிய பணிகளை இருகூறாகக்கொண்டு இருவருஞ்செய்யும்படி ஏற்படுத்தல்வேண்டும் என்பதும் பொருளையுணர்த்துங்கால் ஆயிரம் பணத்தைப் பகிர்ந்து இருவர்க்கும் கொடுத்தல்வேண்டும் என்பதும் போதரும்.

[6] ஏற்று நடத்தல்வேண்டும் என்னுமிதனால் அவர்தம் பொருளையடைதற்கும் உரிமையுண்டென்பது புலப்படும்.

[7] அல்லது—மகளாதல் சகோதரியாதல் இல்லையாயின் என்பது.

படுத்தலாம். [8]அவர்களும் இல்லையாயின் அரசன் எடுத்துக் கொள்ளல்வேண்டும்.

குடை குண்டிகை சிவிறி சிவிகை தவிசு தேர் இவற்றின் [9]தகுதி குறித்து [10]அழகு இளமை அணி இவற்றிற்கேற்ப [11]ஆயிரம் பணம் முதலளித்துக் [12]கடை இடை தலையாய [13]ஏவற்சிலதியராக அக்கணிகையரை நியமித்தல்வேண்டும்.

[14]அழகும் இளமையும் குறைந்துழித் தாயாகச் செய்தல் வேண்டும்.

கணிகையர்க்கு [15]விடுதலைப்பொருள் இருபத்துநாலாயிரம் பணமாம். [16]கணிகைமகனுக்குப் பன்னீராயிரமாம். [17]கணிகை மகன் எட்டாம் யாண்டு தொடங்கி அரசனுக்கு இசைபாடுவோனாகி இருத்தல்வேண்டும்.

---

[8] அவர்களும்—தாய் மகள் சகோதரி என்னுமிவர்களும் தாயால் நியமிக்கப்படும் மற்றொருத்தியும்.

[9] தகுதி—குடைபிடித்தல் முதலிய பணிசெய்தலைப்பற்றியது.

[10] அழகும் இளமையும் அணியும் பணிப்பெண்களுடையன.

[11] ஆயிரம்தொடங்கித் தகுதிக்கேற்ப மேன்மேலும் கொடுத்து என்பது கருத்து.

[12] குடைபிடித்தல் முதலியவாக இங்குக்கூறப்பட்ட தொழில் ஆறனுள் குடைபிடித்தலும் குண்டிகை ஏந்தலும் கடையாயதொழில் எனவும் சிவிறி வீசுதலும் சிவிகைதாங்கலும் இடையாயதொழில் எனவும் தவிசமைத்தலும் தேரணி செய்தலும் தலையாயதொழில் என்வுங் கொள்ளல்வேண்டும்.

[13] ஏவற்சிலதியரின் அழகு இளமை அணி இவற்றின் மிகுதி குறைவு குறித்து அன்னாரைத் தலை இடை கடையாய தொழில்களில் நியமித்தல் வேண்டும் என்பது கருத்து.

[14] ஏவற்சிலதிக்கு அழகும் இளமையும் நீங்கி மூப்புவந்தவிடத்து அவளை இன்பநுகர்ச்சிக்குரிய மகளிர்க்கு அன்னையாக்குதல்வேண்டும் என்பது கருத்து.

[15] விடுதலைப்பொருள்—அரசனுக்குரிய பணிசெய்யும் ஒரு கணிகை இடைக்காலத்தின் தன் பணியை நிறுத்திக்கொள்ளநேரின் அதுகுறித்து அரசனுக்குக் கொடுக்கவேண்டியபொருள்.

[16] கணிகைமகன்—அரசனுக்குரிய பணிசெய்வாளின் புதல்வன். அவன் விடுதலையடைய வேண்டுமாயின் பன்னீராயிரம் பணம் அரசனுக்குக் கொடுத்தல்வேண்டும் என்பது.

[17] அக்கணிகையின் புதல்வன் குறிப்பிட்ட பணம் கொடுக்கவில்லையானால் அவன் செய்யவேண்டிய கடமையைக் குறிப்பிடுகிறார்.

கணிகையின் பணிப்பெண்கள் [18]போகமிழந்தபின்னர் உணவுப் பொருட்சாலையிலாதல் அடுக்களையிலாதல் [19]தொழில் செய்யக் கடவர். [20]தடைப்படுத்தப்பட்டு அங்ஙனம் தொழில் செய்யாதவள் ஒன்றேகாற்பணம் [21]இறுத்தல்வேண்டும்.

கணிகையினுடைய [22]நுகர்ச்சி [23]தாயப்பொருள் [24]ஊதியம் செலவு [25]வரவு இவற்றை [26]எழுதிவைத்தல் வேண்டும். மிகையான செலவுக்கு இடனுய தொழிலைத் தடுத்தல்வேண்டும்.

தாயினிடத்தல்லால் [27]பிறரிடத்து அணிகலன்களைக் [28]கொடுத்துவைத்தால் நாலேகாற்பணம் தண்டமாம்.

தன்னுடைய [29]பொருளை விற்ருலும் ஈடுவைத்தாலும் ஐம்பதேகாற்பணம் தண்டமாம்.

[30]கடுஞ்சொற்கு இருபத்துநான்கு பணமும் [31]கடுந் தண்டத்திற்கு [32]இருமடங்கும் காதறுத்தற்கு ஐம்பதேகாற் பணத்தோடு [33]ஒன்றரைப் பணமும் தண்டமாம்.

---

18 போகமிழத்தல்—இன்பநுகர்ச்சிக்குரிய பருவம் நீங்குதல்.

19 தொழில்—நெற்குத்தல் சமையற் பாண்டங்களைத் தூய்மைசெய்தல் முதலியன.

20 தடைப்படுத்தப்படல்—மற்ருேர் ஆடவனுல் தன் இன்பநுகர்ச்சிப் பொருட்டுப் பணியினின்றும் விலக்கப்படுதல்.

21 இறுத்தல்—கணிகைக்குக் கொடுத்தல்.

22 நுகர்ச்சி—இன்பநுகரும் ஆடவர் கொடுத்தபொருள்.

23 தாயப்பொருள்—தாய்வழி வந்த பொருள்.

24 ஊதியம்—இன்பநுகர்ச்சியல்லாத வேறுவழியிற்கிடைத்த இலாபம்.

25 வரவு—எதிர்காலத்திற் கிடைக்கக்கூடிய பொருள்.

26 அதிகாரியாகிய தலைவன் எழுதிவைத்தல்வேண்டும் என்பது.

27 பிறர்—விடன் நடன் முதலியோர்.

28 பாதுகாப்பின்பொருட்டுக் கொடுத்துவைத்தால் என்பது.

29 பொருள்—ஈண்டு ஆடை பாண்டம் முதலியன.

30 கடுஞ்சொல்—பிறரைப் பழித்துரைத்தல்.

31 கடுந்தண்டம்—பிறரைக் கை கால் முதலிய உறுப்புக்களாலும் தடியினுலும் அடித்தல்.

32 இருமடங்கு—நாற்பத்தெட்டுப் பணம்.

33 ஐம்பதேகாற்பணம் அரசனுக்கும் ஒன்றரைப்பணம் தலைவனுக்கும் கணிகை கொடுத்தல்வேண்டும் என்பது.

காமஞ்சாலா இளமைப்பருவத்தாளை வலிந்துநுகர்ந்தால் உத்தமசாகசமும் மங்கைப்பருவம் எய்தாதாள் விழைவுடையளா யினும் அவளை நுகர்ந்தால் பூர்வசாகசமும் [34]தண்டமாம்.

விருப்பமில்லாத கணிகையை [35]அகப்படுத்தமுயல்பவனுக்கும் [36]விடுதலை செய்விப்பவனுக்கும் [37]புண்படுத்தி அழகினைக் கெடுப்ப வனுக்கும் ஆயிரம் பணம் தண்டமாம். [38]உறுப்புக்களின் சிறப்பிற் குத்தக [39]விடுதலைக்கு விதித்த பணத்தின் இருமடங்குவரை மிகை யாகவும் தண்டம் விதிக்கலாம். [40]ஆயிரம் பணமாதல் தண்ட மாம்.

அரசனுக்குப் [41]பணிசெய்யும் பதவியெய்திய கணிகையைக் [42]கொல்லுபவனுக்கு விடுதலைக்குரிய பணத்தின் [43]மும்மடங்கு தண்டமாம். கணிகையின்தாய் மகள் ஒப்பனைமகளிர் இவர்களைக் [44]கொன்றால் உத்தம சாகசம் தண்டமாம்.

[45]எல்லாக் குற்றங்களுக்கும் முதன்முறையாயின் மேல்விதித்த

---

34 இத்தண்டம் காமுகனாகிய ஆடவன் இறுக்கவேண்டியது.

35 அகப்படுத்தல்—தன் வீட்டிற்கழைத்து வெளிச்செல்லாமல் தடைப் படுத்தல்.

36 விடுதலை செய்வித்தல்—அரசன்பணியை விட்டுவிடத் தூண்டுதல்.

37 புண்படுத்தல்—பல் நகம் முதலியவற்றால் புண்ணுண்டாகச்செய்தல்.

38 புண்பட்ட உறுப்புக்களின் தகுதிக்கேற்ப என்பது; புண்பட்ட கணிகையின் தகுதிக்கேற்ப எனினுமாம்.

39 விடுதலைக்கு விதித்தபணம் இருபத்துநாலாயிரமாதலின் இருமடங்கு நாற்பத்தெண்ணாயிரமாம்; இதற்குமேல் புண்படுத்தியதற்குத் தண்டம் இல்லையென்பது கருத்து.

40 ஆயிரம் பணம் தண்டம் என்பது முன்பின் வைத்து நோக்க முரணா கத் தோன்றுதலால் பொருத்தமில்லை என்பது ஒரு சாராசிரியர் கொள்கை.

41 பணி—குடைபிடித்தல் முதலியன.

42 இதன் மூலத்தை நோக்கத் துன்புறுத்துகின்றவனுக்கு என்றும் பொருள் கொள்ளலாம்.

43 மும்மடங்கு—எழுபத்திராயிரம் பணம்.

44 ஈண்டும் துன்புறுத்தல் என்று பொருள்கொள்ளலாம்.

45 எல்லாக் குற்றங்களுக்கும்—மேற்கூறப்பட்ட குற்றங்கள் எல்லா வற்றிற்கும்.

அளவும் [46]இரண்டாமுறைக்கு [47]இருமடங்கும் மூன்றும் முறைக்கு மும்மடங்கும் நான்காமுறையாயின் [48]விரும்பியவாறும் தண்டம் விதித்தல்வேண்டும்.

அரசனின் கட்டளையுடன்வந்த ஆடவனைச்சேராத கணிகை ஆயிரம் கசையடிக்கு ஆளாதல் அல்லது ஐயாயிரம்பணம் தண்டம் இறுத்தல்வேண்டும்.

[49]பரியம் பெற்றுக்கொண்டபின்னர் வெறுப்பவளுக்குப் பரியப்பொருளின் இருமடங்கு தண்டமாம்.

[50]நோய் [51]ஆண்மைக்குற்றம் இவை காரணமாகஅன்றி வேறு வகையில் இரவுக்குரிய இன்பநுகர்ச்சியைத் [52]தவிரச்செய்யின் பரியத்தின் எண்மடங்கு கொடுத்தல்வேண்டும்.

ஆடவனைக் கொன்றவளை அவனோடு [53]சிதையிலிட்டுக் கொளுத்துதல் அல்லது [54]நீரிற்றள்ளுதல் (தண்டமாம்).

கணிகையின் அணிகலன் பொருள் பரியம் இவற்றைக் கவர்ப வனுக்கு [55]எண்மடங்கு தண்டமாம். கணிகை [56]அவ்வாடவனையும்

---

46 இரண்டாமுறை—முன்செய்த குற்றமே இரண்டாமுறையும் செய் யப்படின்.

47 இருமடங்கு—அவ்வக் குற்றங்களுக்கு விதிக்கப்பட்ட தண்டத்தின் இருமடங்கென்பது.

48 விரும்பியவாறென்பது, நான்குமடங்கு தண்டம் விதித்தல் குற்ற வாளிகளின் உடைமை முழுதும் கவர்ந்துகோடல் நாட்டினின்றும் அவனை வெளிப்படுத்தல் முதலியவற்றைக் குறிக்கும்.

49 பரியம்—பரத்தையர் காமநுகர்ச்சிக்கு ஆடவர்பாற் பெறுங்கூலி.

50 நோயும் ஆண்மைக்குற்றமும் ஆடவன்பால் உள்ளன.

51 ஆண்மைக்குற்றம்—இன்பநுகர்ச்சியில் அவாவின்மை முதலியன.

52 தவிரச்செய்யின்—கதைசொல்லல் முதலிய காரணங்களால் தடைப் படுத்தின்.

53 சிதை—சுடலையிற் பிணம்சுடுதற்கு அடுக்கப்படும் விறகு.

54 நீரிற்றள்ளுதல்—கழுத்திற் பெருங்கல்லைக் கட்டி நீரில் மூழ்குவித்தல்.

55 எண்மடங்கு—கவர்ந்துகொண்டபொருளளவின் எண்மடங்கு.

56 ஆடவன் இன்னான் என்பதையும் இன்பநுகர்ச்சிக்குப் பெறுங் கூலி யின் அளவையும் அதன்மூலம் வரவுபொருளையும் தலைமையதிகாரிக்குத் தெரிவிக்கவேண்டும் என்பது கருத்து.

பரியத்தையும் வரவையும் தெரிவித்தல்வேண்டும்.

ஈண்டுக் கூறியவாற்றால் [57]நடன் கூத்தன் பாணன் இசைக் கருவியாளன் [58]கதைசொல்பவன் ஆடலாசிரியன் [59]கயிற்றுக்கூத்தன் [60]மாயவித்தை செய்வோன் [61]சாரணர் மகளிரைக்கொண்டு பிழைப்போர் ஆகிய இவர்களுடைய மகளிரைப்பற்றியும் [62]கரவில் வியபிசரித்துப் பிழைக்கும் பெண்களைப்பற்றியும் [63]கூறியபடியாம்.

வேற்றுநாட்டிலிருந்து [64]வந்தவர்களுடைய [65]குழு [66]காட்சிக் கூலியாக ஐந்துபணம் [67]கொடுத்தல்வேண்டும்.

வரைவின் மகளிர் ஒரு திங்களுக்கு இரண்டுநாட் பரியத்தைக் [68]கொடுத்தல்வேண்டும்.

---

57 நடன்—அபிநயித்து நடிப்பவன்.

58 கதைசொல்பவன்—அரசன் முதலியோரை மகிழ்விக்க நகைச்சுவை முதலியன தோன்றக் கதைசொல்லிப் பிழைப்பவன்.

59 கயிற்றுக்கூத்தன்—கயிற்றில் ஏறியாடுவோன்; கழைக்கூத்தனுமாம்.

60 மாயவித்தை—இந்திரசாலம், நிழலைப்பற்றி அந்நிழலுக்குடையாரைத் தடைப்படுத்தல் முதலியன. இவ்வித்தையுண்மையைக் கம்பராமாயணம் கடறுவுபடலத்தில் 'காதக்கடுங்குறி கணக்கிறுதிகண்ணுள்' (செய். 77) 'சாயாவரந்தழுவினய்' (செய். 81) என்பவற்றுலும் மணிமேகலையில் உதயகுமரனை வாளால் எறிந்த காதையில் :—

அந்தரஞ் செல்வோர் அந்தரியிருந்த
விந்த மால்வரை மீமிசைப் போகார்
போவாருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன்வயிற்றிடூஉம்
விந்தங்காக்கும் விந்தா கடிகை.

என்பதனுலும் அறிக.

61 சாரணர்—விடன் மல்லன் முதலியோர்.

62 கரவில் வியபிசரித்தல்—சோரநாயகனோடு புணர்தல்.

63 முன்னர்க்கணிகைக்குக் கூறிய விதிகளெல்லாம் ஈண்டுக் கூறிய நடன் முதலியோரின் பெண்டிர்க்கும் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

64 வந்தவர்கள்—நடன் கூத்தன் முதலியோர்.

65 குழு—இசைக்கருவி முதலியவற்றோடு கூடிய கூட்டம்.

66 காட்சிக் கூலி—தங்கள் கலைத்தொழிலை அங்குள்ளார் காண்டற்குக் கொடுக்கப்படும் கூலி.

67 அரசனுக்குக் கொடுக்கவேண்டும் என்பது கருத்து.

68 ஈண்டும் அரசனுக்குக் கொடுக்கவேண்டும் என்பது.

இசைப்பாட்டு இசைக்கருவி கட்டுரைவகை [69]நட்டம் [70]நாட்டியம் எழுத்து ஓவியம் யாழ் குழல் முழவு [71]கண்ணியதுணர்தல் [72]மணக்கலவை மலராய்ந்து தொடுத்தல் உடம்புபிடித்தல் [73]வேசைத்தொழில் [74]கலைகள் என்னும் இவற்றின் அறிவைக் கணிகை [75]பணிப்பெண் [76]விறலி இவர்கட்குப் பயிற்றும் ஆசிரியர்க்கு அரசன் [77]வரவுபொருளிலிருந்து கூலிகொடுத்தல்வேண்டும்.

அரங்கத்தாற் பிழைக்கும் கணிகைமைந்தரை அவ்வரங்கத்தாற் பிழைக்கும் ஏனையோர்க்குத் தலைவராக்குதல்வேண்டும்.

சுலோகம்

[78]சங்கேத மொழிகளையும் வேற்று மொழிகளையும் உணர்ந்த [79]அன்னோர் மகளிரை அவர்தம் உறவினரைக்கொண்டு [80]திட்டஞ் செய்து அரசன் [81]பொறியடக்கமில்லாத தன் பகைவர்பால் அப்பகைவருடைய ஒற்றரைக் [82]கோறற்பொருட்டும் அன்னாரைச் [83]சோர்வுடையராக்கற் பொருட்டும் ஏவல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்தாறும் பிரகரணம்
" வரைவின்மகளிரை நடத்தும்தலைவன் " என்னும்
நாற்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

69 நட்டம்—சொற்பொருள் அவிநயம்.

70 நாட்டியம்—கருத்துப்பொருள் அவிநயம்.

71 கண்ணியதுணர்தல்—பிறர் எண்ணத்தை இங்கிதம் குறிப்புக்களால் உணர்தல்.

72 மணக்கலவை—சந்தனம் முதலிய மணப்பொருள்களைக் கலத்தல்.

73 வேசைத்தொழில்—பிறரை வயப்படுத்தல் முதலியன.

74 கலைகள்—அறுபத்துநான்கு கலைகளுள் ஈண்டுக் கூறப்படாதெஞ்சியவை.

75 பணிப்பெண்—இதற்கு மூலம் "தாஸி" என்பது; இதற்குக் கணிகையல்லாத வேசிப்பெண் என்றுங் கூறுப.

76 விறலி—அரங்கேறி நடிப்பவள்.

77 வரவுப்பொருள் — அரசனுடைய நகரங் கிராமங்களிலிருந்து கிடைத்த ஊதியம்.

78 சங்கேத மொழி—குறிப்பிற் பொருளுணர்த்துஞ் சொல்.

79 அன்னோர் மகளிர்—நடன் முதலியோருடைய பெண்கள்.

80 திட்டஞ் செய்தல்—பொருள் முதலியன கொடுத்து உடம்படச் செய்தல்.

81 பொறியடக்கமுடையராயின் அவரை வெல்ல இயலாதென்பது.

82 கோறல்—வஞ்சித்து நம்பிக்கையுண்டுபண்ணி மறைவிற் கொலைப்படுத்தல்.

83 சோர்வு—தம் காரியத்தில் விழிப்பின்மை.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தேழாம் பிரகரணம்—[1] மரக்கலத்தலைவன்

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

[2]*மரக்கலத்தலைவன் [3]தானீயம் முதலியவற்றிலுள்ள கடலின் அணிமையிற் செல்லும் வழிகளையும் [4]யாற்றுச் சங்கமுக வழிகளையும் ஏரி குளம் யாறு இவற்றைக் கடக்கும் வழிகளையும் அறிந்து கொள்ளல்வேண்டும்.*

[5]*அவற்றின் கரைமருங்குள்ள கிராமத்தினர் [6]வரையறை செய்யப்பட்ட கூலியைக் கொடுத்தல்வேண்டும்.*

*மீன் பிடிப்பவர்கள் [7]ஆறிலொருகூற்றை ஓடக்கூலியாகக் கொடுத்தல் வேண்டும். பட்டினங்களில் விலைப்பண்டங்களுக்கு ஏற்பட்ட [8]உல்குபொருளை வணிகர்கள் கொடுத்தல்வேண்டும்.*

---

### 49-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] *மரக்கலத்தலைவன்—மரக்கலம் நடத்துவோரிடத்தினின்றும் அரசனுக் குரிய உல்குபொருள் கொள்ளும் அதிகாரி. கள்வடித்தல் இறைச்சிவிற்றல் வரைவின் மகளிரை நடத்தல் ஆகிய இத்தொழில்களினின்றும் கொள்ளப் படும் இறைப்பொருள்களோடொப்ப மரக்கலம் நடத்துவோர்பானின்றும் கொள்ளப்படும் இறைப்பொருளும் இறைப்பொருள் தொகுப்போன் செய லாதலின் முன்னவற்றோடு ஓரினமாக எண்ணப்பட்டு இப்பிரகரணம் ஈண்டு வைக்கப்பட்டது. இதனுற் பிரகரணவியைபு புலனுதலறிக.*

[2] *மரக்கலத்தலைவன்—மரக்கல சம்பந்தமான அரசியலதிகாரி.*

[3] *தானீயம்—கிராம வகைகளில் ஒன்று ; இதன் இலக்கணத்தை இருபத் திரண்டாம் அத்தியாயத்திற் காண்க.*

[4] *யாற்றுச்சங்கமுகம்—யாற்றுநீர் கடலொடு கலக்குமிடம்.*

[5] *அவற்றின்—கடல் ஏரி முதலியவற்றின்.*

[6] *அக்கிராமத்து மக்கள் அடிக்கடி தோணியிற் போக்குவரவு செய் கின்றமையால் வரையறுக்கப்பட்ட கூலியை அரசனுக்குக் கொடுத்து வரவேண்டும் என்பது ; இதனுல் வேற்றுநாட்டு மக்கள் அடிக்கடி போக்கு வரவு செய்யாமையால் அங்ஙனம் கூலிகொடுக்க வேண்டாமென்பதும் போதரும்.*

[7] *ஆறிலொருகூறு—கிடைக்கும் மீனின் அளவில் ஆறிலொருகூறு.*

[8] *உல்குபொருள்—ஈண்டுப் பண்டங்களின் விலையளவில் ஐந்தில் ஒரு கூறு அல்லது ஆறிலொரு கூறும்.*

அரசனுடைய ஓடங்களிற் போக்குவரவு [9]செய்வோர் அதற்குரிய கூலியைக் கொடுத்தல்வேண்டும். சங்கு முத்து இவற்றை எடுப்போர் [10]ஓடக்கூலி கொடுத்தல்வேண்டும். [11]தம்முடைய ஓடங்களையும் பயன்படுத்தலாம். [12]இந்நிகழ்ச்சியில் [13]ஆகரத்தலைவனுக்குக் கூறியன மரக்கலத் தலைவனுக்குமாம்.

[14]நகரத்தலைவன் விலைப்பண்டங்களுக்கு நகரத்தில் வரையறுத்த விதிகளை மரக்கலத்தலைவன் [15]மேற்கொள்ளல்வேண்டும்.

திசைமயங்கியாதல் [16]காற்றால் அலைப்புண்டாதல் வந்த வங்கத்தைத் தந்தையைப்போல் [17]பாதுகாத்தல்வேண்டும். நீராற் கேடெய்திய பண்டங்களுக்கு [18]உல்குபொருளில்லாமல் அல்லது அரைக்கூறு விதித்தல் செய்யலாம்.

இங்கே [19]கூறப்பட்ட ஓடங்களை வாணிக நகரங்களுக்கு உரிய காலத்திற் செலுத்தல்வேண்டும்.

---

[9] இவ்வுல்குபொருளை உல்குபொருட்டலைவன் பெற்றுக்கொள்ளல் வேண்டும்; இதனின் வேறாக மரக்கலத்தலைவன் கேட்கலாகாது என்பது.

[10] ஓடக்கூலி இவ்வளவு என்று கூறப்படாமையால் மீன் பிடிப்போருக்குக் கூறியபடி ஆறில் ஒருகூறு கொள்ளல்வேண்டும் என்பது.

[11] சங்கு முத்துக்களை எடுப்போர் தமக்குரிய ஓடங்களையும் பயன்படுத்தலாம் என்னுமிதனால் மீன்பிடிப்பவர் தமக்குரிய ஓடங்களைப் பயன்படுத்தலாகாதென்பது போதரும்.

[12] இந்நிகழ்ச்சியில்—சங்கு முத்து எடுத்தல் மீன்பிடித்தல் முதலிய செய்திகளில்.

[13] ஆகரத்தொழிற் றலைவனைப்பற்றிய செய்திகளை முப்பத்துமூன்றும் அத்தியாயத்திற் காண்க.

[14] நகரத்தலைவன் செயன்முறைகளைப் பின்வரும் ஐம்பத்தேழாம் அத்தியாயத்திற் காண்க.

[15] மேற்கொள்ளல்வேண்டும் என்றதனால் இவ்விதிகளை மீறலாகாதென்பது போதரும்.

[16] காற்று—ஈண்டு மாறுபட்டது.

[17] பாதுகாத்தல்—கேடுவராமற் காத்துச் செல்லவேண்டிய இடத்திற்கு உய்த்தல்.

[18] பண்டங்களின் கேட்டிற்குத்தக்கவாறு விதித்தல்வேண்டும் என்பது கருத்து.

[19] உல்குபொருளில்லாதனவும் அரைக்கூறு விதிக்கப்பட்டனவுமாம்.

இயங்கும் ஓடங்கள் உல்குபொருள்கோடற்குரிய இடத்தைச் சார்ந்ததும் அவற்றிற்கு [20]உல்கு கேட்டல்வேண்டும். [21]கொள்ளைக் கப்பல்களையும் பகைநாட்டை நோக்கிச் செல்லும் கப்பல்களையும் வாணிக நகரவழக்கங்களைக் [22]குலைக்கும் கப்பல்களையும் அழித்தல் வேண்டும்.

[23]கட்டளையிடுவோன் ஓடஞ்செலுத்துவோன் [24]வாட்படையுடையான் கயிறுவலிப்போன் [25]நீர் எற்றுவோன் இவர்களோடு கூடிய பெரிய மரக்கலன்களைப் பனிக்காலம் வெயிற்காலங்களிற் [26]கடப்பதற்குரிய பேரியாறுகளில் செலுத்தல்வேண்டும். கார் காலத்திற் பெருகுஞ் சிறிய யாறுகளில் சிறிய மரக்கலன்களைச் செலுத்தல்வேண்டும்.

அரசனுக்குத் [27]தீங்கிழைப்போர் யாற்றைக்கடப்பர் என்னும் அச்சம் உண்மையால் மரக்கலன்களைத் துறைகளில் கட்டுவித்தல் வேண்டும்.

[28]உரிமையல்லாத காலத்தினும் துறையல்லாத இடத்தினும் யாற்றைக் கடப்போனுக்குப் பூர்வசாகசம் தண்டமாம். உரிய காலத்தினும் துறைவழியினும் கட்டளைபெறாது கடப்பார்க்கு இருபத்தாறேழுக்காற்பணம் [29]கடத்தற் றண்டமாம்.

வலைஞர், விறகு புல் சுமப்போர், மலர்வனம் பழத்தோட்டம்

---

20 உரிய அளவின் மிகுதியாகக் கோடலாகாதென்பது கருத்து.

21 கொள்ளைக்கப்பல்—கொள்ளைக்காரர்களையுடைய கப்பல்.

22 குலைத்தல்—விதியை மீறுதல்.

23 கட்டளையிடுவோன்—ஓடம் செல்லுமிடம் முதலியவற்றைக் குறிப்பிட்டுச் செலுத்துவிக்கும் அதிகாரி.

24 ஓடக்கோல் முதலியவற்றிற்கு வாட்படைவேண்டும் ஆதலால் அஃதுடையானும் ஓடத்திலிருத்தல்வேண்டும் என்பது.

25 நீர் எற்றுவோன்—ஓடத்தில் நிறைந்த நீரை வெளிப்படுத்துவோன்.

26 கடப்பதற்குரிய என்றதனால் நீர்வருவாயில்லாத காலத்திலும் நீர்ப் பெருக்குடையன என்பது போதரும்.

27 தீங்கிழைப்போர்—மறைந்து வஞ்சித்துக் கேடுசெய்வோர்.

28 உரியதல்லாத காலம்—நள்ளிரவு முதலியன.

29 கடத்தல்—விதியை மீறிக்கடத்தல்.

தோப்பு என்னும் இவற்றின் காவலர், ஆயர், [30]ஐயுறப்பட்டோரை யும் [31]தூதுவரையும் பின்தொடர்வோர், படைக்குரிய[32]உபகரணங் கொண்டுசெல்வோர், ஒற்றர் ஆகிய இவர்களுக்குத் தண்டமில்லை.

தம்முடைய [33]கருவிகளாற் கடப்போர்க்கும் [34]வித்து [35]சோறு [36]உபகரணப்பொருள் என்னும் இவற்றை நீர்சூழ்ந்த கிராமத்து மக்களுக்குக் கொண்டு செல்வோர்க்கும் தண்டம் இல்லையாம்.

அந்தணர் துறவோர் சிறுவர் முதியோர் பிணியாளர் [37]கட்டளைகொண்டுசெல்வோர் கருவுற்ற மகளிர் ஆகிய இவர்கள் மரக் கலத் தலைவனின் [38]இலச்சினைமுறியோடு கடந்துசெல்லலாம். உட் புகுதற்குக் கட்டளைபெற்றோரும் [39]வணிகக்குழுவுடன் வரும் அயல் நாட்டினரும் கடந்துவரற்பாலார்.

[40]பிறர் மனைவியையாதல் கன்னியையாதல் பொருளையாதல் கவர்ந்துசெல்வோனையும் ஐயுறப்பட்டோனையும் நடுக்கமுடையோ னையும் [41]மிகுதியான பண்டங்களைச் சுமந்து செல்வோனையும் தலையிலுள்ள மிகுதியான பண்டச்சுமையினால் [42]மறைத்துக்கொள்

---

30 ஐயுறப்பட்டோர்—கள்வர் முதலியோராகச் சந்தேகிக்கப்பட்டோர்.

31 தூதுவரைப் பின்தொடர்வோர் — தூதுசெல்வோரிடத்து எஞ்சிய சில செய்திகளைக் கூறுதற்பொருட்டுப் பின்தொடர்ந்து செல்வோர்.

32 உபகரணம்—படைக்கலம் முதலியன.

33 கருவிகளாற் கடத்தல்—கைகளாலும் தெப்பத்தாலும் தோற்பையா லும் இன்னோரன்ன பிற கருவிகளாலும் யாற்றைக் கடத்தல்.

34 வித்து — நிலங்களில் விதைத்தற்பொருட்டுக் கொண்டுபோகப் படுவது.

35 சோறு—தொழில்செய்வோர்க் குரியது.

36 உபகரணப்பொருள்—தொழிலாளர் குடும்பத்திற்குரியன.

37 கட்டளை—அரசன் ஆணை.

38 கூலிகொடாமற் செல்லலாம் என்பது கருத்து.

39 உட்புகுதற்கு அநுமதிபெற்றுவரும் வாணிகக் கூட்டத்துடன் அநு மதிபெறாமல் சார்ந்துவரும் வேற்றுநாட்டினரும் உட்புகுதலாம் என்பது கருத்து.

40 பிறர் என்னும் இச்சொல்லைப் பின்வரும் கன்னி பொருள் இவற்றிற் கும் ஏற்றுக.

41 மிகுதி—ஓராள் சுமக்கும் அளவின் மேம்பட்டது.

42 மறைத்துக்கொள்ளுதல்—ஈண்டு முகத்தை எனக்கொள்க,

வோனையும், அணிமையிற்கொண்ட [43]துறவுக்குறியுடையோனை யும் [44]அக்குறியில்லாத துறவியையும் [45]புலப்படாத பிணியுடை யோனையும் [46]அச்சமெய்ப்பாடுடையோனையும் [47]விலையுயர்ந்த பொருள் [48]ஓலை [49]படை [50]நெருப்புண்டாக்கும் பொருள் என்னும் இவற்றைக் கொணர்வோரையும் நஞ்சு வைத்திருப்போனையும் [51]தொலைவிலிருந்து வந்தோனையும் [52]இலச்சினைமுறியில்லாது வந்தோனையும் [53]பிடித்துவைத்தல் வேண்டும்.

[54]சிறு விலங்கிற்கும் [55]சுமையுடைய மனிதனுக்கும் ஒரு மாடக மும் தலைச்சுமை தோட்சுமை பசு குதிரை இவற்றிற்கு இரண்டு மாடகமும் ஒட்டகத்திற்கும் எருமைக்கும் நான்கு மாடகமும் [56]சிறிய ஊர்திகளுக்கு ஐந்து மாடகமும் [57]எருதூர்திகளுக்கு ஆறு மாடகமும் [58]வண்டிக்கு ஏழுமாடகமும் [59]ஒருபார எடைச்சுமைக் குக் காற்பணமும் (ஓடக்கூலியாகக்) கொடுத்தல்வேண்டும்.

---

43 துறவுக்குறி—துறவறத்திற்குரிய வேடம்.

44 அணிமையில் துறவறத்திற்குரிய வேடத்தைத் துறந்தோனை என்பது கருத்து.

45 பிணியில்லாத நிலையில் அஃதுடையோன் எனக் காட்டிக்கொள்வோனையும் என்பது கருத்து.

46 அச்சமெய்ப்பாடு—முகம் வெளுத்திருத்தல் முதலிய பயக்குறி.

47 விலையுயர்ந்தபொருள்—மணி பொன் முதலியன.

48 ஓலை—கட்டளைச்செய்தி முதலியன எழுதப்பட்ட திருமுகம்.

49 படை—ஆயுதம்.

50 நெருப்புண்டாக்கும் பொருள்—இதனைப்பற்றி ஔபநிடதம் என்னும் இந்நூலின் பதினான்காம் அதிகரணத்திற் காண்க.

51 நெடுந்தூரம் நடந்ததனால் இளைப்புற்றோன் என்பது.

52 இலச்சினைமுறி—அந்நாட்டு எல்லைகாவலனால் கொடுக்கப்படுவது.

53 பிடித்துவைத்தல்—சிறைக்காப்பில் வைத்தல்; இச்செயலை மரக்கலத் தலைவன் செய்யவேண்டும் என்பது.

54 சிறுவிலங்கு—ஆடு முதலியன.

55 சுமை—ஈண்டுக் கைச்சுமையாகும்.

56 சிறிய ஊர்தி—சிறுவண்டி.

57 எருதூர்தி—காளைமாடு பூட்டிய வண்டி.

58 வண்டி—ஈண்டுப் பெரியவண்டியைக் குறிக்கும்.

59 ஒரு பாரம்—இருபது துலாம்.

[60]இதனுல் [61]பிறபண்டச் சுமைகளுக்கும் [62]கூறியவாறும். பேரியாறுகளுக்கு இருமடங்கு ஓடக்கூலியாம்.

அருகிலிருக்கும் கிராமத்தில் வாழ்வோர் ஓரளவு உணவையும் கூலியையும் [63]கொடுத்தல்வேண்டும்.

நாட்டின் எல்லைகளைக் [64]கடப்பிப்போர், [65]உல்குபொருள் ஓடக்கூலி எல்லைகாவலனுக்கு இறுக்கக்கடவபொருள் இவற்றைப் [66]பெற்றுக்கொள்ளல் வேண்டும். இலச்சினை பெருது கொண்டுசெல்பவனது பண்டத்தையும்[67]உரிமையில்லாக்காலத்துத் துறையல்லாத வழியில் [68]மிக்க சுமையுடன் செல்லுபவனது பண்டத்தையும் கவர்ந்துகொள்ளல்வேண்டும்.

[69]பணியாளரின் குறைவினுலாதல் [70]கருவிகளின் குறைவினுலாதல் செப்பனிடப்படாமையினுலாதல் மரக்கலம் கேடுற்றுழி மரக்கலத்தலைவன் [71]அழிந்தவற்றிற்கும் [72]கேடுற்றவற்றிற்கும் ஈடு செய்தல்வேண்டும்.

---

[60] இதனுல்—ஒரு பார எடைப்பண்டத்திற்குக் கூறப்பட்ட இவ்வளவினுல்.

[61] பிறபண்டங்கள்—எருமை ஒட்டகம் முதலியவற்றில் ஏற்றப்பட்டு வரும் பண்டங்கள்.

[62] பாரம் ஒன்றிற்குக் காற்பண விகிதமாகக் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[63] அணிமையிலுள்ள கிராமத்தார் அரசனுக்குக் கொடுக்கவேண்டிய கூலியின் வேருகச் சிறிதளவு உணவும் கூலியும் ஓடக்காரனுக்குக் கொடுத்தல்வேண்டும் என்பது கருத்து.

[64] கடப்பிப்போர்—ஓடக்காரர்.

[65] உல்குபொருள்—பண்டங்களுக்குரிய இறைப்பொருள்.

[66] வணிகர்களிடத்தினின்றும் பெற்றுக்கொள்ளல்வேண்டும் என்பது.

[67] ஈண்டு அகாலத்திற் செல்பவன் துறையல்லாத வழியிற் செல்பவன் மிக்க சுமையுடன் செல்பவன் என்று தனித்தனியாகவும் கொள்ளலாம் என்பது ஒரு சாராசிரியர் கொள்கை.

[68] மிக்கசுமை—இரண்டாட்பாரம்.

[69] பணியாளர்—ஓடஞ் செலுத்துவோர் முதலியோர்.

[70] கருவிகள்—ஓடத்திற்குரிய உபகரணங்கள்.

[71] அழிந்தவை—அறவே கேடுற்று மூழ்கிப்போன பொருள்.

[72] கேடுற்றவை—நீரால் நனைந்து கேடெய்திய பொருள்.

### சுலோகம்

ஆடித்திங்கட் பௌர்ணமியினின்றும் ஏழாம் நாளுக்கும் கார்த்திகைத்திங்கட் பௌர்ணமியினின்றும் ஏழாம் நாளுக்கும் [73] இடைப்பட்ட காலம் ஓடக்கூலி பெறத்தக்கதாம். [74] தொழில்செய்த நாட்களை அறிவித்தல்வேண்டும். நாடோறும் நாள்வருவாயைக் கொடுத்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்தேழாம் பிரகரணம்
"மரக்கலத்தலைவன்" என்னும் நாற்பத்தொன்பதாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[73] இடைப்பட்டகாலம்—இடைப்பட்ட நான்கு திங்களும்; இக்காலத்தில் மழைபெய்து நீர்ப்பெருக்குண்டாமாதலின் சிற்றாறுகளுக்கு இவ்விதி எனக்கொள்க.

[74] ஓடக்காரர், தாம் தொழில்செய்த நாட்களை மரக்கலத்தலைவனுக்கு அறிவித்து ஓடக்கூலியையும் கொடுத்தல்வேண்டும் என்பது கருத்து.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தெட்டாம் பிரகாரணம்—[1]ஆனினத் தலைவன்

### ஐம்பதாம் அத்தியாயம்

ஆனினத்தலைவன் [2]கூலிபெறுதல் இறைக்குக்கொள்ளுதல் சிறைதவிற்குவிடுதல் பகுதிக்குவிடுதல் நிரையளவுகுறித்தல் இழப்பு கேடு பால்நெய்யாலுண்டாம் பயன் என்னுமிவற்றை அறிதல் வேண்டும்.

பசுக்காவலர் எருமைக்காவலர் கறவையாளர் கடைவோர் [3]வேடர் என்னும் இவர்கள் [4]பொன்னைக் கூலியாகப்பெற்று நூறு நூறு ஆன்களைக் காக்கக்கடவர்.

[5]பால் நெய்களைக் கூலியாகப்பெறின் கன்றுகளைக் கொன்று விடுவர். இது கூலிபெறுதல் எனப்படும்.

கிழப்பசு கறவைப்பசு சூற்பசு [6]கிடேரி பால்மறந்த கன்று இவற்றை [7]ஒத்த அளவினவாக நூறுசேர்த்து ஒருவன் காத்தல்

---

### 50-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] ஆனினம் என்பது உபலக்கணத்தால் எருமை முதலியவற்றையும் அவற்றைக்கொண்டு வாழ்க்கை நடத்துவோரையும் உணர்த்தும்; உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் வார்த்தை மூன்றனுள் உழவும் வாணிகமும் முன்னர்க் கூறப்பட்டன; எஞ்சிய பசுக்காவல் இதன்கட் கூறப்படுகின்றது; வாணிகத்திற்குரிய மரக்கலத்தின் பின் பசுக்காவலைப்பற்றிய இது வைக்கப் பட்டதனால் பிரகரணவியைபு புலனுதலறிக.

[2] கூலிபெறுதல் முதலிய எண்வகைச் செயல்களையும் அவற்றைப்பற்றிய பின்வரும் விளக்கங்களால் அறிந்துகொள்ளலாம்.

[3] வேடர்—பாம்பு புலி முதலிய கொடிய உயிர்களால் நேரும் அச்சத்தைப் பரிகரிப்போர்.

[4] பொன்—உபலக்கணத்தால் கூலம் முதலியவற்றையும் உணர்த்தும்.

[5] பெறுங்கூலி, பால் நெய் முதலியனவாயின் கன்றுகளுக்கு ஊட்டாமற் கொன்றுவிடுவர் என்பது பொன்னைக் கூலியாகப் பெறுதற்கு ஏதுவாம்.

[6] கிடேரி—ஈனுத இளம் பசு.

[7] ஒத்த அளவு—சமமான அளவு; இவ்வைந்து வகையினும் தனித்தனி இருபது இருபதாகக் கொள்ளல்வேண்டும் என்பது.

வேண்டும். எட்டு [8]வாரகம் நெய் [9]வாற்பணம் [10]இலச்சினையிடப் பட்ட தோல் இவற்றை ஆண்டுஇறையாகக் கொடுத்தல்வேண்டும். இஃது இறைக்குக்கொள்ளுதல் எனப்படும்.

பிணியுடையன [11]உறுப்பறை [12]பிறரால் கறக்கப்படாதன [13]வலிந்து கறக்கப்படுவன [14]கன்றிழப்பன இவற்றை ஒத்த அளவி னவாக நூறு சேர்த்துக் காப்பாற்றுகிறவர்கள் அவ்வினத்திற்குரிய [15]ஓரளவு பொருள்கொடுத்தல்வேண்டும். இது சிதைவிற்குவிடு தல் எனப்படும்.

பகை [16]காடு இவற்றிற்கு [17]அஞ்சிச் [18]சேர்ப்பிக்கப்பட்ட ஆன் களைக் [19]காத்தல்முறைக்குப் [20]பத்தில் ஒரு கூறு [21]கொடுத்தல் வேண்டும். இது பகுதிக்குவிடுதல் எனப்படும்.

பாலுண்கன்று பால்மறந்த கன்று [22]பயிற்றத்தக்கன [23]சுமப்

---

[8] வாரகம் என்பது முகத்தலளவையிற் பத்தரை உழக்குக்கொண்ட தாகும்; ஆதலின் எட்டுவாரகம் எண்பத்துநான்குழக்காம் என்க.

[9] வாற்பணம்—பசு கன்று என்ற வேறுபாடின்றி வால்களை எண்ணிக் கொண்டு ஒரு வாலுக்கு ஒருபணம் விகிதம் கணக்கிட்டுக்கொள்வது.

[10] இலச்சினை—அரசியல் முத்திரை.

[11] உறுப்பறை—உறுப்புக் குறைந்தன.

[12] வழக்கமாகப் பால்கறக்கும் ஒருவனேயன்றிப் பிறர் கறப்பதற்கிடந் தராதவை.

[13] காலைக்கட்டுதல் முதலியவற்றால் துன்புறுத்திக் கறக்கத்தக்கன.

[14] கன்றிழப்பன—அகாலத்திற் கன்றீனுவன; சாக்கன்றீனுவனவுமாம்.

[15] ஓரளவு பொருள்—ஈண்டுக் கூறப்பட்ட பிணியுடையவை முதலிய வற்றின் விலையளவின் மூன்றில் ஒரு கூறு அல்லது அவ்வளவிற்கு ஒத்த நெய் முதலியன.

[16] காடு—காட்டில் வாழும் வேடர்.

[17] அச்சம்—பகைவரால் நேரும் கலகத்தாலும் காட்டில்வாழும் வேடர் கள் கவர்ந்துகொள்வர் என்பதனாலும் நேர்வது.

[18] சேர்ப்பித்தல், அரசனுடைய ஆனிரையோடெனக்கொள்க.

[19] காத்தல்முறை—மேய்ப்போனுக்குக் கொடுக்கும் கூலிநியமம்.

[20] பத்திலொருகூறு—பசுவின் பெறுமதியில் என்க.

[21] கொடுத்தல்—பசுக்களையுடையவன் அரசனுக்குக்கொடுத்தல்.

[22] பயிற்றத்தக்கன—தொழிலிற் பயிற்றப்படும் காளைகள்.

[23] சுமப்பன—பொதிவண்டி முதலியவற்றைச் சுமந்திழுக்கும் காளைகள்.

பன பொலிவன முதிர்ந்தன [24]என்பன காளைகளாம். [25]நுகம் சுமை சகடம் இவற்றைச் சுமப்பன பொலிவன [26]இறைச்சிக்குரியன முதுகினாலும் எருத்தினாலும் [27]சுமப்பன என்னும் [28]இவை எருமைக் கடாக்களாம். பாலுண்கன்று பால்மறந்த கன்று கிடேரி சூல்கொண்டன கறப்பன முதிர்ந்தன மலடு என்னும் [29]இவை ஆன்களும் எருமைகளுமாம். [30]இவற்றின் ஆண் பெண் கன்றுகள் ஒருதிங்கள் இரண்டுதிங்கள் [31]அகவையுள்ளன [32]நாகிளங்கன்று எனப்படும்.

[33]ஒருதிங்கள் இரண்டுதிங்கள் நிரம்பப்பெற்றவைகளுக்குக் குறியிடுதல்வேண்டும். ஒருதிங்கள் இரண்டுதிங்களாகத்[34] தங்கியவற்றிற்கும் குறியிடுதல்வேண்டும். [35]குறி [36]அடையாளம் நிறம் கொம்பு இவற்றின் இலக்கணங்களையும் நாகிளங்கன்றுகளையும் கணக்கு ஏட்டில் வரைந்துகோடல்வேண்டும். இது நிரையளவு குறித்தல் எனப்படும்.

கள்ளர்கோட்பட்டது அயல்நிரைபுக்கது [37]காணுதொழிந்தது

---

[24] என்பன—என்னுமிவ்வறுவகைகளும்.

[25] நுகம்—கலப்பை நுகம் முதலியன.

[26] வேறுதொழில் செய்தற்குப் பயன்படாமல் இறைச்சியளவிற்குப் பயன்படும் கடாக்கள் என்பது.

[27] பொதி சுமப்பன என்பது.

[28] இவை—இந்நான்கு வகைகளும்.

[29] இவை—இவ்வேழும் ஆன் எருமைகளின் வகைகளாம்.

[30] இவற்றின்—இவ்வான் எருமைகளின்.

[31] அகவை—வயது.

[32] மூலத்தில் "உபஜா" என்றது நாகிளங்கன்று என்று மொழி பெயர்க்கப்பட்டது.

[33] அந்நாகிளங்கன்றுகளுள் ஒருதிங்கள் நிரம்பியது இரண்டுதிங்கள் நிரம்பியது என்பதை அறிந்துகொள்வதற்குச் சூட்டுக்கோலால் இலச்சினையிடல்வேண்டும் என்பது.

[34] இன்னாருடையன என்று அறியப்பட்டனவும் அறியப்படாதனவுமாகிய ஆன் முதலியன அரசனது நிரையிற் புகுந்து ஒருதிங்கள் இரண்டு திங்கள் தங்கியிருப்பின் அவற்றிற்கும் குறியிடல்வேண்டும் என்பது கருத்து.

[35] குறி—சூட்டுக்கோலாலிடப்படுவது.

[36] அடையாளம்—நெற்றிச்சுட்டி வால்வெள்ளை முதலியவாக இயற்கையினமைந்தன.

[37] காணுதொழிந்தது — காட்டில் தன் நிரையினின்றும் தவறிப் போனது.

என்னும் [38]இவை இழப்பு எனப்படும்.

[39]சேறு சமனில்நிலம் பிணி மூப்பு நீர் உணவு இவற்றாலும் [40]மரம் மலைச்சாரல் கட்டை கல் இவற்றாலும் [41]தெய்வம் கொடிய உயிர் பாம்பு முதலை காட்டுத்தீ இவற்றாலும் இறத்தல் கேடு எனப் படும். [42]சோர்வினால் அழிந்தவற்றிற்கு ஈடுசெய்தல்வேண்டும்.

இவ்வாறு [43]உருப்படிகளின் அளவைக் கணக்கிட்டுக்கொள் ளல்வேண்டும்.

தானே கொன்றவன் கொல்வித்தவன் கவர்ந்தவன் கவர்வித் தவன் ஆகிய [44]இவர் கொலைக்குரியராவர்.

[45]பிறருடைய ஆன்களை அரசிலச்சினையால் உருவமாறுபாடு செய்பவன் பூர்வசாகச தண்டம் இறுத்தல்வேண்டும்.

கள்வராற் கவரப்பட்ட தன்னாட்டு மக்களுடைய ஆன்களை மீட்டுக்கொணர்ந்து [46]கொடுத்து ஆனொன்றுக்கு ஒருபண விழுக் காடு வாங்குதல்வேண்டும். [47]பிறநாட்டு ஆன்களை விடுவிப்பின்

---

38 இவை—இம்மூன்றும்.

39 சேற்றில் அமிழ்ந்தும் பள்ளமான நிலத்தில் வீழ்ந்தும் நோய்ப்பட் டும் மூப்புற்றும் விரைவாக ஓடுகின்ற நீரால் இழுப்புண்டும் உணவின்றியும் இறத்தல் என்பது கருத்து.

40 மரத்தின் வீழ்ச்சியாலும் தாழ்வரைகளினின்றும் நழுவுதலாலும் மரத்தின் பெருங்கிளை வீழ்ச்சியாலும் பெரிய கல்லின் வீழ்ச்சியாலும் இறத் தல் என்பது கருத்து.

41 இடி முதலியவற்றின் வீழ்ச்சியாலும் கொடிய உயிர்களாற் கவரப் பட்டும் பாம்பு கடித்தும் முதலையாற் கவரப்பட்டும் காட்டுத் தீயினால் எரிக் கப்பட்டும் இறத்தல் என்பது கருத்து.

42 பாதுகாப்போருடைய விழிப்பின்மையால் இக்கேடு நேரின் ஈடு செய்தல்வேண்டும் என்பது கருத்து.

43 உருப்படிகள்—ஆன் முதலியன.

44 இவர் என்பது ஈண்டு ஆயரைக் குறிக்கும்.

45 பிறர்—அரசன் அல்லாதார்; அரசனுக்கு உரிமையில்லாத பிற ருடைய ஆன்களை அரசிலச்சினையிட்டு உருவம் மாற்றுதல் அவ் ஆனுடையா னுக்குத் தீங்குசெய்யக் கருதியதாகலின் தண்டம் விதிக்கப்பட்டதென்பது.

46 கொடுத்தல்—ஆனுக்குரியவனிடம் சேர்ப்பித்தல்.

47 வேற்றுநாட்டிலிருந்து கள்வராற் கவரப்பட்டுத் தன்னாட்டிற்கு வந்த ஆன்களை மீட்டுக்கொடுக்கநேரின் ஆனுக்கு உரியவனிடமிருந்து அவ் ஆனின் விலையளவில் பாதி வாங்கல்வேண்டும் என்பது கருத்து.

பாதி [48]வாங்குதல்வேண்டும்.

கன்று முதிர்ந்தது பிணியுடையது என்னும் இவற்றை ஆயர்கள் [49]ஓம்புதல்வேண்டும்.

வேடர்களாலும் நாயுடையவர்களாலும் கள்வரச்சம் கொடியவுயிரச்சம் பகைவரச்சம் போக்கப்பட்டதும் [50]பருவங்களுக்கேற்பப் பிரிக்கப்பட்டதும் ஆகிய காட்டில் மேய்த்தல்வேண்டும்.

பாம்புகளையும் கொடிய விலங்கு முதலியவற்றையும் [51]அச்சுறுத்தற்பொருட்டும் [52]ஆனினத் தொடர்ச்சியை அறிந்துகோடற்கும் [53]மருளுமியல்பினவாகிய ஆன்களுக்கு ஒலிக்கும் மணிகளைக் கட்டுதல்வேண்டும்.

சமனாகவும் அகன்றதாகவும் உள்ள துறையுடையதும் சேறும் முதலையும் இல்லாததும் ஆகிய நீர்நிலையில் [54]இறக்கிப் [55]பாதுகாத்தல்வேண்டும்.

கள்வர் கொடுவிலங்கு பாம்பு முதலை இவற்றாற் பிடிபட்டவற்றையும் பிணி மூப்பால் இறந்தவற்றையும் [56]அறிவித்தல்வேண்டும். [57]இன்றேல் அவற்றின் விலைப்பொருளைக் கொடுத்தல்வேண்டும்.

---

[48] ஈரிடத்தும் வாங்குதல் ஆனினத்தலைவன் செயலாம்.

[49] ஓம்புதல்—கன்றுக்குப் பால் குறையாதூட்டியும் முதிர்ந்த ஆவிற்குத் தளர்வுநீங்க உணவருத்தியும் பிணியுடையதற்கு மருந்துகொடுத்தும் பாதுகாத்தல்.

[50] பருவங்கள்—கார் கூதிர் முதலியன ; பிரிக்கப்படுதல் இன்ன இன்ன பருவத்தில் இன்ன இன்ன காடு புல்லாலும் நீராலும் ஆனினங்களுக்கு நலஞ் செய்யும் என வகுக்கப்படுதல்.

[51] அச்சுறுத்தல்—மணியோசையால் அச்சம் நிகழச்செய்தல்.

[52] ஆனினந் தொடர்ந்து செல்லுதலை மணியோசையால் ஆயர் அநுமானித்து அறிந்துகொள்ளற்கும் என்பது கருத்து.

[53] மருளும் இயல்பினவாகிய ஆன்களின் கழுத்தில் மிக்கொலித்தற்கும் மருட்சிநீங்கப் பயில்தற்கும் மணிகளைக் கட்டுதல்வேண்டும் என்பது.

[54] இறக்குதல் நீராட்டுதற்கும் நீரூட்டுதற்குமாம்.

[55] பாதுகாத்தல்—நீர்நிலையால் உண்டாகும் இடையூறு நேராமல் விழிப்புடன் காத்தல்.

[56] தலைவனுக்கு அறிவித்தல்வேண்டும் என்பது.

[57] இன்றேல்—அங்ஙனம் அறிவியாவிடின்,

[58]காரணத்தாலிறந்த ஆன் எருமை இவற்றின் [59]அடையாளமுடைய தோலையும் வெள்ளாடு செம்மறியாடு இவற்றின் [60]இலச்சினையுடைய செவிகளையும் குதிரை கழுதை ஒட்டகம் இவற்றின் வாலையும் இலச்சினையிடப்பட்ட தோலையும் [61]கொணர்தல்வேண்டும். வால் தோல் மூத்திரப்பை பித்தப்பை நரம்பு பல் குளம்பு கொம்பு எலும்பு என்னும் இவற்றையும் [62]கொணர்தல்வேண்டும்.

[63]சமைக்கப்படாத பச்சிறைச்சியாகவாதல் உலர்ந்த இறைச்சியாகவாதல் விற்றல்வேண்டும்.

மோரை [64]நாய் பன்றிகளுக்குக் கொடுக்கலாம்.

பாலாடையைப் படைவீரரின் உணவிற்கு அளித்தல் வேண்டும்.

திரிந்தபால், [65]ஈரப்பிண்ணாக்கு [66]நனைத்தற்குப் பயன்படும்.

ஆன் விற்பவன் ஓரானுக்குக் காற்பணம் [67]கொடுத்தல் வேண்டும்.

கார் கூதிர் முன்பனி இக்காலங்களில் [68]இரண்டுவேளையும் பின்பனி இளவேனில் முதுவேனில் இப்பருவங்களில் [69]ஒருவேளையும் கறத்தல்வேண்டும்.

---

58 காரணம்—பிணி மூப்பு முதலியன.

59 அடையாளம்—உயிருள்ளபொழுது சூடு முதலியவற்றாற் செய்யப்பட்ட இலச்சினை.

60 வெள்ளாடு செம்மறியாடுகளுக்குச் செவியில் சூட்டிலச்சினையிடுதல் வழக்கம் என்பது புலப்படும்.

61 தலைவனிடம் நம்பிக்கை உண்டாதற்பொருட்டுக் கொண்டுவந்து காட்டல்வேண்டும் என்பது கருத்து.

62 குப்பியப்பொருளாகத் தொகுத்துவைத்தற்பொருட்டுத் தலைவனிடம் கொண்டுவந்து சேர்க்கவேண்டும் என்பது கருத்து.

63 சமைக்கப்படாத என்னும் அடைமொழியை உலர்ந்த இறைச்சிக்கும் கொள்க.

64 நாய் பன்றிகளுக்கு மோர்உணவு நலமளிக்கும் என்பது.

65 ஈரப்பிண்ணாக்கு—சிறிது நெய்ப்புடையது.

66 பசு எருமை முதலியவற்றின் உணவின்பொருட்டு நனைத்தல் என்பது.

67 தலைவனுக்குக் கொடுக்கவேண்டும் என்பது.

68 இரண்டுவேளை—காலை மாலை.

69 ஒருவேளை—இரவு.

[70]இரண்டாம்வேளை கறப்பவனுக்குப் பெருவிரலைத் துணித்தல் தண்டமாம். கறக்குங்காலத்தைத் தாழ்த்துவோனுக்கு [71]அப்பயனழிவு தண்டமாம்.

இதனால் மூக்குக் குத்தல் அடக்கிப் பழக்குதல் [72]நுகம்பூட்டல் கடாவடித்தல் இவற்றிற்குரிய [73]காலங்களும் கூறியவாறும்.

ஒரு தூணி ஆன்பாலில் ஒருபடி நெய்யிருக்கும். எருமைக்கு [74]ஐந்தில் ஒருகூறு மிகும். [75]ஆட்டிற்கு [76]இருகூறு மிகும். [77]எல்லாவற்றிற்கும் கடைந்து காண்டலே துணிவாகும். என்னை? நிலம் நீர் புல் இவற்றின் சிறப்பால் பால் நெய் இவற்றின் மிகுதி உண்டாமன்றே. ஒரு பொலிஎருதோடு மற்றோர் எருதைப் போர் புணர்ப்போர்க்குப் பூர்வசாகசம் தண்டமாம். [78]கொல்விப்பவர்க்கு உத்தமசாகசம் தண்டமாம்.

[79]நிறத்தைப்பற்றிப் பத்துப்பத்தாகக் கொண்டு ஓம்புதல் வேண்டும்.

---

[70] ஒருவேளை கறக்கவேண்டிய காலத்தில் இரண்டாம் வேளையும் கறப்பவனுக்கென்பது. "இந்த நியமம் சிற்சிலவிடங்களில் மாறுபடவும் கூடும். சிலவிடத்தில் முதுவேனிற் காலத்தில் மூன்று முறை கறத்தலும் காணப்படுகின்றது" என்று ஒருசில ஆசிரியர் கூறுவர்.

[71] அப்பயனழிவு—அந்நாளுக்குப் பெறுங் கூலியின் அழிவு.

[72] நுகம் பூட்டல் — அடங்காததொன்றை அடங்கிய ஒன்றனோடு பிணைத்து நுகத்திற்பூட்டல்.

[73] ஈண்டும் அக்காலங்கடப்பின் அப்பயனழிவு தண்டமாம் என்பது கருத்து.

[74] ஐந்தில் ஒருகூறு—ஒரு தூணியளவு பாலில் நெய் ஒருபடியும் அதன் ஐந்தில் ஒருகூறு மிகுதியும் உண்டாம் என்பது கருத்து.

[75] ஆடு—ஈண்டு வெள்ளாடு செம்மறியாடு இரண்டையும் குறிக்கும்.

[76] ஒரு தூணி பாலில் நெய் ஒருபடியும் அதன் ஐந்தில் இரண்டுகூறு மிகுதியும் உண்டாமென்பது.

[77] எல்லாவற்றிற்கும் என்னுமிதனால் மேலே கூறிய நெய்யளவு பெரும்பாலும் என்பது புலப்படும்; சிறுபான்மை மிகுதி குறைவு உண்டாமென்பதும் கொள்ளத்தக்கது.

[78] கொல்வித்தல்—ஓரெருந்தைக் கொண்டெனக் கொள்ளுதல்வேண்டும்.

[79] ஆனினங்களை நிற ஒற்றுமைபற்றி வெள்ளைப்பத்து சிவப்புப்பத்து எனப் பத்துப்பத்தாக வகுத்துக்கொண்டு காத்தல்வேண்டும் என்பது.

[80]மேய்தல்நிலத்திற்கும் நிரையின் [81]தகுதிக்கும் [82]காவற்றிறமைக்குமேற்ப நிரைகள் தங்கும் [83]திசைவரையறை செய்து கொள்ளல் வேண்டும்.

ஆடு முதலியவற்றின் உரோமத்தை [84]ஆறுதிங்கட்கு ஒருமுறை எடுத்துச் சேர்த்தல்வேண்டும்.

[85]இதனால் குதிரை கழுதை ஒட்டகம் பன்றி இவைகளின் கூட்டங்களுக்கும் கூறியவாறும்.

[86]சிறந்த குதிரையைப்போன்ற நடையுடையனவும் மூக்குக் குத்தப்பட்டனவுமாகிய காளைகளுக்குப் புல் [87]அரைப்பாரம் வைக்கோல் இருமடங்கு ஈரப்பிண்ணாக்கு ஒரு துலாம் தவிடு [88]பத்து மரக்கால் உண்ணும் உப்பு ஐந்து பலம் [89]மூக்கிற்கெண்ணை ஒருழக்கு பருகுவதற்கு [90]ஒரு படி. இறைச்சி ஒரு துலாம் தயிர் ஒரு மரக்கால் யவம் அல்லது புழுக்கிய உழுந்து ஒருதூணி. பால் ஒருதூணி [91]அல்லது கள் அரைமரக்கால் [92]நேயப்பொருள் ஒரு படி அக்காரம் பத்துப்பலம் இஞ்சி ஒருபலம் [93]இவை சேரணிக்கும்

---

[80] மேய்தனிலத்திற்கேற்ப என்பது அணிமையிடத்தைக் குறிக்கும்.

[81] தகுதி—ஆனினங்களின் ஆற்றலைப் பற்றியதாகும்.

[82] காவற்றிறமைக்கேற்ப—கள்வர் முதலியோரால் இடையூறு நேரா வாறு காத்தற்கேற்ப.

[83] திசை வரையறை—ஒரு கிராமத்தின் திசைகளில் ஆனினங்கள் தங்குதற்கு இன்னதிசை தகுதிவாய்ந்ததென்னும் வரையறை.

[84] ஆறுதிங்கட் கொருமுறை எடுக்கவேண்டும் என்பது, அவ்வுரோமங்கள் தொழிற்குப் பயன்படுதல் கருதி.

[85] இதனால் — ஆன்முதலியவற்றிற்குக் கூறியனகொண்டு ; கூறியன—கூலிபெறுதல் முதலிய எண்வகைச் செயல்கள்.

[86] சிறந்த குதிரை—வீரிய பலமுடையது.

[87] அரைப்பாரம்—பத்துத்துலாம்.

[88] பத்து மரக்கால்—நாற்பது படி.

[89] ஒருழக்கெண்ணையை மூக்கில் நசியமிடவேண்டும் என்பது.

[90] ஒருபடி என்பது அவ்வளவுள்ள எண்ணெய் அல்லது நெய்யைக் குறிக்கும்.

[91] பால் அகப்படாவிட்டால் கள் வேண்டும் என்பது.

[92] நேயப்பொருள் — எண்ணெய் அல்லது நெய் ; மேற்கூறிய எண்ணெய் நசியமருந்து ; ஈண்டுக் கூறியது ஊட்டும் மருந்து என்க.

[93] இவை என்பது பால் முதலிய நான்கனையும் குறிக்கும்.

மருந்துப் [94]பொருளாம்.

கோவேறுகழுதை [95]ஆனேறு கழுதை என்னும் இவற்றிற்குக் [96]காற்கூறு குறைவாம். எருமை ஒட்டகம் [97]தொழில்செய்யும் எருது என்னும் இவற்றிற்கும் கறவைப்பசுக்களுண்பதற்கும் [98]இருமடங்காம். [99]தொழில்செய்யும் காலத்திற்கும் பயனிற்கும் [100]தக்க முறையிலும் ஏற்பாடு செய்யலாம். எல்லாவற்றிற்கும் புல்லும் நீரும் விரும்பியபடியாம். இங்ஙனம் [101]ஆனினம் கூறப் பட்டது.

### சுலோகம்

[102]நூறுகொண்ட கழுதை குதிரை இவற்றின் கூட்டத்திற்கு [103]ஐந்தும் வெள்ளாடு செம்மறியாடு இவற்றிற்குப் பத்தும் ஆன் எருமை ஒட்டகங்களுக்கு நான்குமாகப் பொலியேறுகளை ஏற் படுத்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்தெட்டாம் பிரகரணம்
"ஆனினத்தலைவன்" என்னும் ஐம்பதாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

94 புல் முதலாக இங்கே கூறப்பட்ட பொருள்களின் அளவு இத்துணை நாளுக்கு என்பது கூறப்படவில்லை ஆயினும் இவ்வுணவுப் பொருள்களையும் அவற்றின் அளவுகளையும் நோக்கும்போது ஒருதிங்களுக்கெனக் கொள்ளு தல் பொருத்தமாகத் தோன்றுகின்றது.

95 ஆனேறு—ஈண்டு மேலே கூறப்பட்ட அத்துணைச் சிறப்பில்லாதது.

96 காற்கூறு என்பது மேலே கூறப்பட்ட புல் முதலிய எல்லா வற்றிற்குமாம்.

97 தொழில்செய்தல்—வண்டி முதலியன இழுத்தல்.

98 இருமடங்கு—மேலே கூறிய புல் முதலியவற்றின் அளவில் இரு மடங்கு.

99 ஈண்டுத் தொழில்செய்யும் எருதிற்கும் கறவைப்பசுவிற்கும் கூறிய இருமடங்கென்னும் அளவு முடிவானதன்று என்னும் கருத்துடையராய் ஆசிரியர் மீண்டுங் கூறுகின்றார். தொழில்செய்யும் காலத்தை எருதிற்கும் பயனைப் பசுவிற்குமாகக் கொள்ளல்வேண்டும். தொழில்—வண்டியிழுத்தல் முதலியன. பயன்—பால் மிகுதியாகக் கறத்தல்.

100 தொழில்மிகுதி பயன்மிகுதி நோக்கி உண்ணுதற்கும் பருகுதற்கும் மேற்கூறிய பொருள்களை இருமடங்கின் மிகுதியாகவும் ஏற்பாடு செய்ய லாம் என்பது கருத்து.

101 ஆனினம்—ஆனினங்களின் சம்பந்தமான விதிகள்.

102 நூறுகொண்ட என்னும் அடையைக் குதிரை வெள்ளாடு செம்மறி யாடு பசு எருமை ஒட்டகம் இவற்றிற்கும் கொள்க.

103 இங்கே கூறப்பட்ட ஐந்து பத்து நான்கு என்னும் எண்கள் அவ்வச் சாதியிலுள்ள பொலியேறுகளை உணர்த்தும்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## இருபத்தொன்பதாம் பிரகரணம்—[1]குதிரைத்தலைவன்

## ஐம்பத்தோராம் அத்தியாயம்

குதிரைத்தலைவன் [2]விற்குமிடத்துள்ளனவும் விலைக்குக் கொள்ளப்பட்டனவும் [3]போரிற் கொள்ளப்பட்டனவும் [4]பிறந்தனவும் துணைக்குவந்தனவும் [5]ஈடுகொள்ளப்பட்டனவும் [6]காலவரையறையிற் கொள்ளப்பட்டனவும் ஆகிய குதிரைகளின் அளவினைக், [7]குலம் வயது [8]நிறம் [9]குறி [10]தொழில் [11]இனம் [12]வரலாறு என்னும் இவற்றைக்கொண்டு எழுதுவித்தல்வேண்டும்.

[13]தாழ்ந்தன உறுப்பறை நோய்கொண்டன இவற்றை [14]அறிவித்தல்வேண்டும்.

---

### 51-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] இதுகாறும் அரசியலங்கங்களுள் அரசுமுதலியவற்றின் வகைவிரிகள் கூறப்பட்டன. இனி அவற்றுள் எஞ்சிய படையியல்பு கூறத்தொடங்கி முதற்கட் சிறப்புநோக்கிக் குதிரையின் இயல்பு கூறத்தொடங்குகின்றார். ஆனினத்தோடு குதிரையும் ஒருபுடை ஒத்ததாதலின் ஆனினத் தலைவன் என்பதன்பின் இப்பிரகரணம் வைக்கப்பட்டது.

[2] விற்குமிடத்துள்ளன—கையுறை முதலியனவாக வந்து விலைப்படுமிடத்திற் சேர்க்கப்பட்ட குதிரைகள்.

[3] போரிற் பகைவரிடமிருந்து கொள்ளப்பட்டன என்பது.

[4] பிறந்தன—அரசனுக்குரிய மூலப்படையாகவுள்ள குதிரைகளினின்றும் தோன்றின.

[5] மற்றொரு பொருட்கீடாகக் கொள்ளப்பட்டன.

[6] காலவரையறை—இத்துணைக் காலத்திற்குப் பயன்படுத்திக்கொள்ளுதல் என்று வரையறுத்துக்கொள்ளல்.

[7] குலம்—ஈண்டுத் தோன்றியநாடு பற்றியது ; நாடு-பாரசீகம் காம்போஜம் முதலியன.

[8] நிறம்—வெண்மை கருமை முதலியன.

[9] குறி—நெற்றிச்சுட்டி வால்வெள்ளை முதலியன.

[10] தொழில்—இழுத்தல் சுமத்தல் முதலியன.

[11] இனம்—தோன்றுமிடம்பற்றிய வகை.

[12] வரலாறு—அரசனிடத்து வந்துசேர்ந்த முறை.

[13] தாழ்ந்தன — தலையின்மேற்கழலை ஒற்றைக்காலில் வேற்றுநிறம் முதலிய குற்றங்களுடைய குதிரைகள்.

[14] ஓரளவு காலம்வரை மாற்றுதற்கும் மருத்துவஞ் செய்தற்கும் அறிவித்தல்வேண்டும் என்பது.

குதிரைக்காரன், கருவூலம் சரக்கறைகளினின்றும் [15]திங்களுக்குரிய வருவாயைப் பெற்றுக்கொண்டு [16]சூழக்கடவன்.

குதிரைகளின் (எண்) அளவிற்கு ஏற்ப நீளமுடையதாகவும் குதிரையின் அளவில் இருமடங்கு அகலமுடையதாகவும் [17]நான்கு வாயில்களையும் நடுவிற் புரளுமிடத்தையும் உடையதாகவும் முன் மண்டபத்தை உடையதாகவும் வாயிலின் இருமருங்கினும் பலகை யிருக்கைகளையுடையதாகவும் [18]குரங்கு மயில் புள்ளிமான் கீரி சகோரப்புள் கிளி நாகணவாய்ப்புள் என்னும் இவைகளாற் சூழப் பட்டதாகவும் குதிரைக்கொட்டிலை அமைத்தல்வேண்டும்.

குதிரையின் நீளத்திற்குத்தகச் சதுரவடிவமும் வழுவழுப்பும் உடைய பலகைகளால் தளமிடப்பட்டதாகவும் [19]இரைக் கொட்டிலையுடையதாகவும் மலம் மூத்திரம் [20]வெளியேறத்தக்க தாகவும் கிழக்குநோக்கியதாகவாதல் வடக்குநோக்கியதாகவாதல் தனித்தனியே இடம் அமைத்தல்வேண்டும். கொட்டிலுக்குத்தகத் [21]திசைகளை மாற்றியும் அமைக்கலாம். பெட்டைக்குதிரை பொலி குதிரை கன்று இவற்றிற்குத் [22]தனியிடம் (அமைத்தல்வேண்டும்).

---

[15] திங்களுக்குரிய வருவாய்—ஒரு திங்களுக்குரிய கூலியும் குதிரைக்குரிய உணவுப் பொருளுமாம்.

[16] சூழ்தல் — குதிரையைப் பாதுகாக்கும் முறையையும் பெற்றுக் கொண்ட பொருளைச் செலவிடுதலையும் ஆலோசித்தல்.

[17] எளிதிற் போக்குவரவு செய்தற்கும் நெருப்பு முதலியவற்றால் அச்சம் நேர்ந்தவிடத்து விரைந்து வெளிச்செல்லுதற்கும் ஏற்ப நான்கு வாயில்கள் வேண்டும் என்பது.

[18] குரங்கு முதலியன சூழ இருத்தல் நஞ்சால் ஏற்படும் தீங்குகளை விலக்குதற்கு என்பது கருத்து.

[19] இரைக்கொட்டில்—புல் முதலியன வைக்குமிடம்.

[20] வெளியேறுதற்குக் குதிரையின் முன்புறம் சற்றுஉயரமாக இருக்க வேண்டும் என்பதாம்.

[21] அரண்மனைக்கு வடகிழக்குத் திசையில் குதிரைக்குக் கொட்டில் அமைத்தல்வேண்டும் என்று முன்னர்(25ஆம் அத்)கூறப்பட்டது; ஆண்டுக் குறிப்பிட்ட இடம் கொட்டிலுக்குப் போதியதாக இல்லையாயின் வேறு திசைகளிலும் அமைக்கலாம் என்பது கருத்து.

[22] ஒன்றை ஒன்று பாராவண்ணம் தனித்தனி இடம் அமைத்தல்வேண்டும் என்பதாம்.

ஈன்றணிமைத்தான பெட்டைக்குதிரைக்கு மூன்று நாள் ஒருபடி நெய்யும் அதன்மேற் பத்துநாள் ஒருபடி சத்துமாவும் [23]நெய்க்கலப்புள்ள குடிநீர்மருந்தும் பின்னர்ப் [24]புழுக்கலும் புல்லும் [25]பருவத்திற் கேற்றனவும் உணவாம்.

கன்றுக்குப் பத்து நாட்களுக்குமேல் ஆறுதிங்கள் வரை [26]நான்கில் ஒருகூறு நெய்கலந்த ஒருழக்குச் சத்துமாவும் ஒருபடி பாலும் உணவாம். [27]அதன் பின்னர் மூன்றியாண்டுகள் வரை திங்கடோறும் (முறையே) [28]அரையரைப்படி மிகுந்த ஒருபடி யவமும் [29]நான்கியாண்டுவரை [30]ஒருதுாணியும் அதற்குமேல் நான்கு அல்லது ஐந்தியாண்டுகள் [31]தொழிலுக்கேற்றபடி [32]முழு அளவும் (உணவாம்).

தலையாய குதிரைமுகம் முப்பத்திரண்டங்குலமும் அம்முக அளவின் [33]ஐந்துமடங்கு நீளமும் கணைக்கால் இருபதங்குலமும் அதன் [34]நான்குமடங்கு உயரமும் உடையதாம். [35]மும்மூன்றங் குலம் குறைந்தன முறையே இடையாயதும் கடையாயதும் ஆம்.

---

[23] நெய்கலந்த மூலிகைக் கொதிசாறு சீரணித்தற்குக் கொடுத்தல் வேண்டும் என்பது.

[24] புழுக்கல்—அவித்த கொள் முதலிய கூலங்கள்.

[25] பருவத்திற்கேற்றன—தட்ப வெப்பகாலங்களுக்கேற்ற புல்வகைகள்.

[26] நான்கில் ஒரு கூறு—கால் உழக்கு.

[27] அதன்பின்னர்—ஆறு திங்களுக்குமேல்.

[28] பிறந்த ஏழாந் திங்களில் ஒருபடியும் அதன்மேல் ஒவ்வொரு திங்களுக்கும் அரையரைப்படி மிகுத்தும் கொடுக்கவேண்டும் என்பதாம்.

[29] மூன்றியாண்டு முடிந்து நான்காமாண்டு தொடங்கி முடியும்வரை என்பது.

[30] ஒரு துாணி என்பது யவத்தைக் குறிக்கும்.

[31] தொழில்—தேரிழுத்தல் போரிற் பயன்படுதல் முதலியன.

[32] முழுஅளவு பின்னர்க் கூறப்படும்.

[33] ஐந்துமடங்கு நூற்றறுபதங்குலம்.

[34] நான்குமடங்கு—எண்பதங்குலம்.

[35] தலையாய குதிரைக்குக் கூறிய முகம் முதலியவற்றின் அளவின் மூன்றங்குலம் குறைந்தது இடையாய குதிரை என்றும் அதனின் மூன்றங் குலம் குறைந்தது கடையாய குதிரை என்றும் கொள்க.

[36]சுற்றளவு நூறங்குலமாம். [37]முறையே ஐந்தில் ஒருகூறு குறைதல் இடையாயதற்கும் கடையாயதற்குமாம்.

தலையாய குதிரைக்குச் சாலிநெல் வீரீகி ய்வம் பிரியங்கு (இவற்றுள் யாதானும் ஒன்று) [38]பாதி உலர்ந்ததாதல் பாதி புழுக்கியதாதல் பயறு உழுந்து இவற்றின் புழுக்கலாதல் இருதூணியளவு (உணவுப்பொருளாம்). ஒருபடி [39]நேயப்பொருள். ஐந்துபல உப்பும் ஐம்பது பலம் [40]இறைச்சியுமாம். ஒரு மரக்கால் [41]சாறுதல் [42]இருமடங்குதயிராதல் உணவு சீரணித்தற்குக்கொடுக்கவேண்டும். ஐந்து பலம் [43]அக்காரமாதல் ஒருபடி கள்ளாதல் இருமடங்கு பாலாதல் [44]குடித்தற் குரியனவாம். நீண்டவழி நடத்தலானுதல் சுமந்ததனுலாதல் [45]சோர்வுற்றவைகளுக்கு ஒருபடி நேயப்பொருள் [46]அநுவாசனமாம். [47]ஒருழக்கு [48]மூக்குமருந்தாம். அரைப்பாரம் இளம்புல்லாதல் இருமடங்கு [49]புல்லாதல் ஆறுமுழச் சுற்றளவுள்ள [50]தாட் [51]கட்டாதல் (உணவாம்).

---

[36] தலையாய குதிரையின் சுற்றளவு நூறங்குலம் என்பதாம்.

[37] இடையாய குதிரைக்கு எண்பதங்குலமும் கடையாய குதிரைக்கு அறுபத்துநான்கங்குலமும் சுற்றளவாம்.

[38] பாதி உலர்தலாவது நனைக்கப்பட்டு அரையளவு ஈரமுடையதாகக் காய்தல்.

[39] நேயப்பொருள், குடித்தற்பொருட்டாம்.

[40] இறைச்சியும் உணவாம் என்பது.

[41] சாறு—ஈண்டு இறைச்சியினின்றும் எடுக்கப்படுவது.

[42] இருமடங்கு—இரண்டு மரக்கால்.

[43] அக்காரம்—வெல்லப்பாகு.

[44] பசியுண்டாதற்பொருட்டுக் குடித்தற்குரிய பொருள்களாம் என்பது கருத்து.

[45] சோர்வுற்ற குதிரைகளுக்கென்பது.

[46] அநுவாசனம்—பசியை உண்டாக்கி உணவை ஏற்றுங்கொள்ளச் செய்யும் மருந்து; இது வயிற்றைச் சீர்செய்தற்குக் கொடுக்கப்படுவது.

[47] ஒருழக்கு நேயப்பொருள் என்பது.

[48] மூக்கை நனைத்துத் தூய்மை படுத்துதற்குரிய மருந்தாம் என்பது கருத்து.

[49] புல் ஈண்டு உலர்ந்தது; இளம்புல் கிடைக்கவில்லையானுல் உலர்ந்த புல்லைப் பயன்படுத்தலாம் என்பது கருத்து.

[50] புல் முதலியவற்றின் அடிப்பாகம்.

[51] கட்டு—ஈண்டு இரண்டு கைகளாலும் எடுத்துச் சேர்க்குமளவு.

[52]இவ்வளவிற் காற்காற்கூறு குறைந்தது முறையே இடையாயவற்றிற்கும் கடையாயவற்றிற்கும் உணவாம். இடையாய தேர்க்குதிரையும் பொலிகுதிரையும் தலையாய குதிரைக்குச் [53]சமமாம். [54]கடையாயவை இடையாயவற்றிற்குச் [55]சமமாம். [56]பெட்டைக் குதிரைகளுக்கும் கலப்பு(சாதி)க் குதிரைகளுக்கும் காற்கூறு குறைவாம். [57]இதிற்பாதி கன்றுகளுக்காம். இங்ஙனம் (உணவுக் கூறு) வகுக்கப்பட்டது.

[58](உணவு) வகைகளைப் பாகஞ்செய்வோன் [59]கயிறுபிடிப்பவன் [60]மருத்துவன் இவர்களும் (உணவிற்) [61]கூறுபெறக் கடவர்.

போர் நோய் மூப்பு தொழில் என்னும் இவற்றால் ஆற்றல் குன்றியவைகள் (உயிர்வாழ்தற்குரிய) [62]உணவுமாத்திரையில் அமையற்பாலன. போருக்குத் தகுதியற்றவைகளை நாடுநகரங்களில் வாழும் மக்களுக்குப் பயன்படும்பொருட்டுப் பொலிகுதிரைகளாக்கிப் பெட்டைக் குதிரைகளுடன் சேர்த்தல்வேண்டும்.

---

[52] தலையாய குதிரைக்குக் கூறிய எல்லா வுணவுப்பொருள்களின் அளவிலும் நான்கில் ஒருகூறு குறைந்த அளவு இடையாய குதிரைகளுக்கும் அவ்வளவின் நான்கில் ஒரு கூறு குறைந்த அளவு கடையாய குதிரைகளுக்கும் உணவாம் என்பது கருத்து.

[53] சமம் என்றதனால் தலையாய குதிரைக்குரிய உணவின் அளவே இடையாய தேர்க் குதிரைக்கும் பொலிகுதிரைக்குமாம் என்பது கருத்து.

[54] கடையாயவை—கடையாய தேர்க் குதிரையும் பொலிகுதிரையும்.

[55] ஈண்டும் சமம் என்றது உணவின் ஒப்புமை கருதியாம்.

[56] தலை இடை கடையாய முத்திறத்துப் பெட்டைக் குதிரைகளுக்கும் அவ்வவற்றின் ஆண்குதிரைகளுக்குக் கூறிய உணவுப் பொருள்களின் காற்கூறு குறைவாம் என்பது கருத்து.

[57] தலை இடை கடையாய பெட்டைக் குதிரைகளுக்குக் கூறப்பட்ட உணவுப்பொருளிற் பாதியளவு அவ்வவற்றின் கன்றுகளுக்காம் என்பது கருத்து.

[58] உணவு—ஈண்டுக் குதிரைக்குரியது.

[59] கயிறு பிடிப்பவன்—குதிரைக்குரிய பணிகள் எல்லாம் செய்பவன்.

[60] மருத்துவன்—குதிரைக்கு மருத்துவஞ் செய்வோன்.

[61] குதிரைக்குரிய உணவுக் கூறுகளைக் கொள்ளுங்கால் அவற்றோடு தமக்குரிய கூறுகளையும் கொள்ளக்கடவர் என்பது.

[62] உணவு—ஈண்டுச் சிறந்ததல்லாதது.

[63]போர்த்தொழிலிற் றகுதிவாய்ந்தவற்றுள் காம்போசம் சிந்து ஆரட்டம் வனாயு ஆகிய இந்நாட்டிற்றோன்றிய குதிரைகள் தலையாயனவாம். வாகிலிகம் பாபேயம் சவ்வீரம் திதலம் ஆகிய இந் நாட்டிற்றோன்றியவை இடையாயனவாம். ஏனைய கடையாயன வாம்.

அவற்றை மிக்க சுறுசுறுப்புள்ளனவும் ஓரளவு சுறுசுறுப் புள்ளனவும் சுறுசுறுப்பில்லாதனவும் என்னும் இவ்விகற்பத் திற்குத் தகப் [64]போர்த்தொழிலிலாதல் சுமத்தற்றொழிலிலாதல் உய்த்தல்வேண்டும்.

குதிரைகளுக்குப் [65]போர்த்தொழிலே சிறப்புடையதாம்.

[66]சுமக்கும் குதிரைகளின் செலவு, [67]வட்டமாகச்செல்லல் மெல்லெனச்செல்லல் தாவிச்செல்லல் [68]தோரணகதியிற்செல்லல் குறிப்பிற்செல்லல் என்னுமிவையாம்.

அவற்றுள் வட்டமாகச்செல்லல்—[69]ஔபவேணுகம் [70]வர்த்த

---

63 போர்த்தொழிலிற் றகுதிவாய்ந்த என்னும் அடையை, இடையாய கடையாய குதிரைகளுக்கும் கொள்ளல்வேண்டும்.

64 மிக்க சுறுசுறுப்புடையவற்றைப் போர்த் தொழிலிலும் அல்லாதவற்றை வண்டி இழுத்தல் சுமைதாங்கல் முதலிய செயலிலும் பயன்படுத்தல் வேண்டும் என்பது.

65 போர்த்தொழிலின் விரிவுகளைச் சாலிகோத்திரம் முதலிய நூல்களிற் காண்க.

66 சுமத்தல்—ஈண்டுப் போர்த்தொழிலல்லாத எல்லாத் தொழிலையும் குறிப்பதாம்.

67 வட்டமாகச்செல்லல்—இதனை "வற்கநம்" என்று முதனூல் கூறும். இது சுக்கிர நீதியில் 'வற்கிதம்' என்று காணப்படுகிறது (சுக்—அத் 4. பிர 7. சுலோ 149)

68 தோரணகதியின் இயல்பினை,

> "முன்னர் ஊன்றிய காற்குறி தன்னில்
> பின்னர்ப்பத மிடுவது தோரணம் என்ப"

(பன்னிருபாட்—276) என்பதனாலறிக.

69 ஔப வேணுகம்—வட்டமிடுதல்.

70 வர்த்தமானகம்—வட்டமாகச் சுழன்று செல்லுதல்.

மானகம் [71]யமகம் [72]ஆலீடபுலுதம் [73]பூர்வகம் [74]திரிகசாலி என்னும் வகைகளை உடையதாம்.

வட்டமாகச்செல்லல் என்னும் செலவே தலையும் செவியும் விகாரமின்றியிருக்குமாறு நிகழின் மெல்லெனச்செல்லல் எனப்படும். அது பதினாறு வகைப்படும்.

அவையாவன :—

[75]பிரகீர்ணகம் [76]பிரகீர்ணோத்தரம் [77]நிடண்ணம் [78]பார்சுவாநுவிருத்தம் [79]ஊர்மிமார்க்கம் [80]சரபக்கிரீடிதம் [81]சரபப்புலுதம் [82]திரிதாளம் [83]பாகியாநுவிருத்தம் [84]பஞ்சபாணி [85]சிங்காயதம் [86]சுவாதூதம் [87]கிலிட்டம் [88]சிலிங்கிதம் [89]பிரும்மிதம் [90]புட்பாபிகீர்ணம் என்பனவாம்.

தாவிச் செல்லலின் வகையாவன :—

குரங்குபோற்றாவுதல் தவளைபோற்றாவுதல் மான்போற்றாவு

---

[71] யமகம்—ஒரேகாலத்தில் மீண்டும் மீண்டும் மண்டலித்துச் செல்லல்.

[72] ஆலீடபுலுதம்—ஒரு காலைச் சுருக்கி மற்றொருகாலை நீட்டித் துள்ளிச் செல்லல்.

[73] பூர்வகம்—உடலின் முற்பகுதியால் வட்டமிடுதல்.

[74] திரிகசாலி—உடலின் பிற்பகுதியால் வட்டமிடுதல்.

[75] பலவகைச் செலவும் கலந்த நடை.

[76] பலவகைச் செலவும் கலந்திருத்தலோடு அவற்றுள் ஒன்று சிறத்தல்.

[77] பின்புறம் அசைவின்றி நடத்தல்; அசைவின்றிப் பின்செல்லலுமாம்.

[78] குறுக்காகச் செல்லுதல்.

[79] உயர்ந்தும் தாழ்ந்தும் நீரின் அலைபோலச் செல்லல்.

[80] சரபப்புள்ளைப்போலச் செல்லல்.

[81] சரபப்புள்ளைப்போலத் துள்ளிச் செல்லல்.

[82] மூன்றுகால்களால் நடத்தல்.

[83] இடசாரி வலசாரியாகத் துள்ளிச்செல்லல்.

[84] மூன்று கால்களை ஒருமுறை யிட்டும் ஒருகாலை இருமுறையிட்டும் செல்லல்.

[85] சிங்கம்போல் நடத்தல்.

[86] நெடுநடையாகச் செல்லல்.

[87] தளர்ந்து நடத்தல்.

[88] உடலின் முன்புறம் தாழநடத்தல்.

[89] உடலின் முன்புறம் உயர நடத்தல்.

[90] நெளிந்து நடத்தல்.

தல் [91]ஒற்றைக்காலிற்ருவுதல் குயிற்செலவு [92]மார்பாற்ருவுதல் [93]கொக்குச்செலவு என்பனவாம்.

தோரணகதியின் வகையாவன :—

பருந்துச்செலவு [94]நீர்ப்புட்செலவு மயிற்செலவு [95]அரையயிற் செலவு கிரிச்செலவு அரைக்கிரிச்செலவு பன்றிச்செலவு அரைப் பன்றிச்செலவு என்பனவாம்.

குறிப்பிற் செல்லலாவது—[96]சங்கேதத்திற்குத்தகச் செல்லுத லாம்.

தேர்க்குதிரைகள், [97]ஆறு ஒன்பது பன்னிரண்டு யோசனை தூரம் செல்லற்பாலன. சுமக்கும் குதிரைகள், [98]ஐந்து ஏழரை பத்து யோசனை தூரம் செல்லற்பாலன.

[99]விக்கிரமம் [100]பத்திராசுவாசம் [101]பாரவாகியம் என்னும் இவை குதிரைநடைகளின் வகைகளாம்.

**விக்கிரமம்** [102]வற்கிதம் [103]உபகண்டம் [104]உபயவம் [105]சவம்

---

[91] மூன்றுகால்களையும் சுருக்கிக்கொண்டு ஒற்றைக்காலால் தாவிச் செல்லல்.

[92] கால்கள் நான்கையும் சுருக்கிக்கொண்டு மார்பினுல் தாவிச் செல்லல்

[93] கொக்கைப்போற் செல்லும் செலவு.

[94] நீர்ப்புள்—அன்னம் முதலியன.

[95] பாதிநடை மயில்போல் நடத்தல் ; பின்வருவனவற்றிற்கும் ஈதொக் கும்.

[96] நடத்துவோனுடைய சமிஞ்ஞைஅறிந்து அதற்கொப்பச் செல்லுதல்.

[97] ஆறு ஒன்பது பன்னிரண்டு யோசனை என்பது முறையே தலைஇடை கடையாய குதிரைகளுக்கு எனக்கொள்க.

[98] ஐந்து ஏழரை பத்தென்பனவும் தலை இடை கடையாய குதிரை களுக்கு எனக்கொள்க.

[99] மெல்ல நடத்தல்.

[100] நடுத்தரமான நடை.

[101] விரைவான நடை.

[102] வற்கிதம்—மேன்மேலும் விரைந்து செல்லல்.

[103] தாவித் தாவிச்செல்லல்.

[104] தொடக்கத்தில் விரைந்து செல்லல்.

[105] இறுதியில் விரைந்துசெல்லல்.

இவை [106]தாரைகதி எனப்படும்.

குதிரைகளின் கட்டுமுறை [107]கருவி இவற்றைத் [108]தகுந்த ஆசிரியர்களும், போர்க்குரிய தேர்க்குதிரைகளுக்கு அணிசெய்தலைப் [109]பாகனும், குதிரைகளின் உடல் [110]மெலிவு [111]பருமைகளுக்கு வேண்டிய பரிகாரத்தையும் பருவத்திற்கேற்ப வகுக்கப்பட்ட உணவுகளையும் மருத்துவனும் [112]அறிவித்தல்வேண்டும்.

கயிறுபிடிப்போன் குதிரைகட்டுவோன் புல்லிடுவோன் பாகஞ் செய்வோன் கொட்டில்காவலன் மயிர்வினைஞன் நச்சுமருத்துவன் இவர்கள் [113]தந்தம் தொழில்களாற் குதிரைகளைப் பேணல் வேண்டும்.

இவர்கள் தொழிலிற் [114]றவறு செய்யின் ஒருநாட் கூலியை இழப்பித்தல்வேண்டும்.

[115]நீராசனம் எடுத்தற்பொருட்டாதல் மருத்துவஞ் செய்தற்

---

106 நேராகத் தொடர்ந்துசெல்லல்.

107 கருவி—வாய் கழுத்து முதுகு கால் முதலியவற்றில் இடத்தக்க கடிவாளம் வார் சேணம் முதலியன.

108 தகுதி—குதிரையைப் பயிற்றும் திறமை.

109 பாகன்—தேர்வலவன்.

110 மெலிவு—இளைப்பு.

111 பருமை—கொழுப்புமிகுதியாலுண்டான தடிப்பு.

112 குதிரைப்பணியாளர்களுக்கு அறிவித்தல் வேண்டும் என்பது.

113 தந்தம் தொழில்களாவன—கயிறுபிடிப்போனுக்குக் குதிரைகளை நிலத்திற் புரளவிடுதல் நீராட்டல் நீரூட்டல் உடம்புதேய்த்தல் முதலியனவும், குதிரைகட்டுவோனுக்குக் கடிவாளமிடுதல் சேணமமைத்தல் முதலியனவும் புல்லிடுவோனுக்குக் காலத்திற்குத்தகப் புல்லாராய்ந்துகொடுத்தல் முதலியனவும் பாகஞ்செய்வோனுக்கு நெல் பயறு கொள் உழுந்து முதலியவற்றைப் புழுக்கலும் கொட்டில்காவலனுக்குக் குதிரைக் கொட்டிலைத் தூய்மைசெய்தல் முதலியனவும் மயிர்வினைஞனுக்குப் பிடர்மயிர் முதலியவற்றைக் காலத்திற்கேற்பக் கொய்தல் முதலியனவும் நச்சுமருத்துவனுக்கு நஞ்சு முதலியவற்றால் ஏற்படும் தீமைகளைப் பரிகரித்தல் முதலியனவுமாம்.

114 தவறு—செய்யவேண்டியவற்றைச் செய்யாமையும் வேண்டாதனவற்றைச் செய்தலுமாம்.

115 நீராசனம்—தெய்வத்தாலும் கண்ணேறு முதலியவற்றாலும் நேருந் தீங்கு நீங்குதற்கும் ஆற்றல் மிகுதற்கும் மந்திரநீர் மலர் விளக்கு முதலியவற்றைக்கொண்டு செய்யப்படும் சாந்திக் கிரியை.

பொருட்டாதல் கட்டிவைக்கப்பட்டுள்ள குதிரையைச் சுமையேற்றிச் செலுத்துபவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

மருத்துவம் மருந்து இவற்றைக் காலந்தவறிச் செய்தமையால் நோய்மிகின் அதனைப் பரிகாரஞ்செய்ய ஏற்படும் செலவின் இருமடங்கு தண்டமாம். [116]அக்குற்றத்தால் [117]மாறுபாடு நிகழின் அவ்வூர்தியின் விலைப்பொருள் தண்டமாம்.

[118]இதனால் ஆனினம் கழுதை ஒட்டகம் வெள்ளாடு செம்மறி யென்னும் இவற்றிற்கும் [119]கூறப்பட்டபடியாம்.

**சுலோகம்**

(1) குதிரைகளை நாளொன்றிற்கு இருமுறை [120]குளிப்பாட்டுதலும் [121]மணப்பொருள் மாலை இவற்றூற் புனைதலும் அமாவாசைதோறும் [122]பூதபலியும் பௌர்ணமிதோறும் [123]வாழ்த்தும் செய்வித்தல்வேண்டும்.

(2) சாந்திசெய்தலிற் பற்றுள்ளவன் ஐப்பசித்திங்கள் நவமி நாளிலும் யாத்திரையின் தொடக்கத்திலும் இறுதியிலும் நோய்வாய்ப்பட்ட அமயத்திலும் ஆரத்தி சுற்றுவித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் இருபத்தொன்பதாம் பிரகரணம்
"குதிரைத்தலைவன்" என்னும் ஐம்பத்தோராம்
அத்தியாயம் முற்றிற்று.

---

116 அக்குற்றத்தால்—மருத்துவத்தாலும் மருந்தாலும் நேரும் குற்றத்தால்.

117 மாறுபாடு—குதிரைக்குநேரும் கேடு.

118 இதனால்—இவ்வத்தியாயத்திற் குதிரைக்குக்கூறப்பட்ட விதியினால்.

119 குதிரையைப்போலவே ஆனினம் முதலியவற்றையும் பேணல் வேண்டும் என்பதும் அங்ஙனம் பேணப்படவில்லையாயின் ஆனினத்தலைவன் முதலியோர்க்குத் தண்டம் விதித்தல்வேண்டும் என்பதும் கருத்து.

120 குளிப்பாட்டுதல், கூதிர் முதுவேனிற்பருவங்களிற் செய்யவேண்டும் என்ப ஒரு சாராசிரியர்.

121 சந்தனம் மாலை முதலியவற்றை நாடோறும் புனையவேண்டும் என்பதாம்.

122 பூதபலி—பூதங்களுக்குச் சாந்தியாகச் செய்யப்படும் வழிபாடு.

123 வாழ்த்து—அந்தணரைக்கொண்டு செய்விப்பது.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## முப்பதாம் பிரகரணம்—[1]யானைத்தலைவன்

## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

யானைத்தலைவன், யானைக்காட்டின் [2]காவலையும் அடக்குந் தொழிலால் அடக்கம் எய்திய களிறு பிடி கன்று இவைகளின் கொட்டில் கட்டுத்தறி படுக்குமிடம் [3]தொழில் உணவு [4]புல் இவற்றின் அளவையும் [5]தொழிலின்கட் பற்றுடைமையையும் [6]கட்டுமுறையையும் [7]கருவிகளையும் [8]போர்க்குரிய அணிகலன்களையும் மருத்துவன் [9]படைவீரன் யானைப்பணியாளன் என்னும் இவர்களின் கூட்டத்தையும் கண்காணித்தல்வேண்டும்.

யானையினுடைய [10]நீளத்தின் [11]இருமடங்கு உயர அகல நீளங்கள் உடையதாகவும் [12]பிடியின் இடத்தால் மிக்கதாகவும் முன் மண்டபத்தையுடையதாகவும் [13]தறித்தடையை உடையதாகவும்

---

### 52-ம் அத்தியாயக் குறிப்புரை

[1] நால்வகைப் படைகளுள் யானையும் ஒன்ருதலால் அவ்வியைபுபற்றிக் குதிரைத்தலைவன் என்னும் பிரகரணத்தின் பின் இது வைக்கப்பட்டது.

[2] காவல்—பிறர் உட்புகாவண்ணம் பாதுகாத்தல்.

[3] தொழில்—போர்ச்செயல் முதலியன.

[4] புல் என்றதனல் இலை காய் கனிகளையும் கொள்ளல்வேண்டும்.

[5] தொழில்—யானைகளை யடங்கப் பயிற்றும் கருமம்.

[6] கட்டுமுறை—தறியிற்கட்டுதல் கழுத்தில் மணிமாலை முதலியன இடுதல் முதலிய தொழில்விதம்.

[7] கருவிகள்—தோட்டி மூங்கிற்கோல் பிரப்பங்கோல் முதலியன.

[8] போர்க்குரிய அணிக்லன்கள்—கவ்சம் தோமரம் முதலியன.

[9] படைவீரன்—யானையை அடக்கி நடத்துவதில் திறமையுடையவன்.

[10] யானையின் நீளம் ஒன்பது முழம் என்று பின்னர்க் கூறப்படும்.

[11] இருமடங்கு—பதினெட்டு முழம்.

[12] பிடியின் இடம் ஆறு முழமாகும்; அதனேடு மிக்க அளவு இருபத்து நான்குமுழ நீளமாகும்.

[13] தறித்தடை—யானைகளை எளிதாகக் கட்டுதற்கும் அக்கட்டு நழுவாமைப்பொருட்டும் தறியின் மேற்பாகத்தில் துலாக்கோல்போல் குறுக்காகச் சேர்க்கப்படும் கட்டை,

கிழக்குநோக்கியாதல் வடக்குநோக்கியாதல் யானைக்கொட்டிலை அமைத்தல்வேண்டும்.

யானையின் நீளத்திற்குத்தகச் சதுரவடிவமும் வழுவழுப்பு முடைய பலகைகளால் தளமிடப்பட்டதாகவும் கட்டுந்தறியை உடையதாகவும் மூத்திரம் [14]இலண்டம் இவைகள் [15]வெளியேறத் தக்கதாகவும் உள்ளஇடத்தை அமைத்தல்வேண்டும். [16]அவ்விடத் திற்கு ஒத்ததாகவும் [17]ஒருபாலுயர்ந்ததுமாகிய படுக்கையைப் போர்யானைகளுக்கும் ஊர்தியானைகளுக்கும் அரணின் உள்ளும் அடக்கத்தக்க கொடிய யானைகளுக்கு அரணின் வெளியேயும் (அமைத்தல் வேண்டும்).

பகலின் [18]எட்டுக் கூறுகளில் முதற்கூறும் ஏழாம் கூறும் நீராட்டுதற்குரிய காலமாம். [19]அவற்றின் பின்னர் உணவுக்குரிய காலமாம். முற்பகல் உடற்பயிற்சிக்குரிய காலமாம். பிற்பகல் குடிநீர்மருந்து ஊட்டுதற்குரிய காலமாம். இரவின் முக்கூற்றில் [20]இரு கூறுகள் துயிலுதற்குரியன. [21]ஒரு கூறு கிடந்தும் நின்றும் அமைதி எய்துதற்குரித்தாம்.

யானைபிடித்தற்குரிய காலம் [22]முதுவேனிற் பருவமாம். [23]இரு பதியாண்டியானை பிடிக்கற்பாலதாம்.

---

[14] இலண்டம்—யானையின் மலம்.

[15] வெளியேறுதற்கு முற்பாகம் சிறிது உயர்ந்ததாக அமைக்கவேண்டும் என்பது.

[16] அவ்விடம்—அக் கட்டுமிடம்.

[17] ஒருபால்—முன்புறப்பாதி.

[18] ஒரு பகலை எண்கூறுக்கக் கூறு ஒன்றுக்கு மூன்றேமுக்கால் நாழிகை அளவாகும்.

[19] அவற்றின் பின்னர் என்பது இரண்டாம் கூறும் எட்டாங்கூறுமாம்.

[20] இருகூறு—இரவின் இருபது நாழிகை.

[21] ஒருகூறு பத்து நாழிகையாதலின் ஐந்து நாழிகை துயில் ஒழிந்து விழித்திருத்தற்கும் மற்றோர் ஐந்து நாழிகை எழுந்து நிற்றற்கும் உரியன வாம் என்பது.

[22] முதுவேனிற் பருவத்தில் வெப்ப மிகுதியால் யானைகளின் ஆற்றல் குறைந்திருக்குமாதலின் அக்காலம் யானைகளை எளிதாகப் பிடிக்கலாம் என் பது கருத்து.

[23] இருபது யாண்டென்பது அவ்வியாண்டிற்குச் சிறிது கூடிய கால அளவையும் உபலக்கணத்தாற் குறிக்கும்.

[24]இளங்கன்று [25]பிடியானைக்குச் சமமான கோடுடையது கோடில்லாதது நோயுடையது கருக்கொண்டது பாலூட்டுவது இவை பிடிக்கத்தகாதன.

ஏழுமுழ உயரமும் ஒன்பதுமுழ நீளமும் பத்துமுழச் [26]சுற்றளவும் நாற்பதியாண்டகவையும் உடையது தலையாயனவாம். முப்பதுயாண்டுடையது [27]இடையாயதும் இருபத்தைந்துயாண்டுடையது கடையாயதுமாம்.

அவற்றிற்கு (இடைகடைகளுக்கு) உணவு [28]காற்கூறு குறைவாம்.

(ஏழு) [29]முழத்திற்கு ஒரு தூணியரிசியும் அரைமரக்கால் எண்ணெயும் மூன்றுபடி நெய்யும் பத்துப்பலம் உப்பும் ஐம்பது பலம் இறைச்சியும் உணவு அறுதற்பொருட்டு ஒரு மரக்கால் [30]சாறு அல்லது இருமடங்கு தயிரும் பத்துப்பலம் அக்காரமும் கள் ஒரு மரக்கால் அல்லது இருமடங்கு பால் ஆகிய குடிநீர் மருந்தும் உடலிற் பூசுதற்பொருட்டு ஒருபடி எண்ணெயும் தலைக்கும் விளக்கிற்கும் தனித்தனி [31]எட்டில் ஒரு கூறும் பசும்புல் இரண்டு பாரமும் இளம்புல் இரண்டேகாற் பாரமும் உலர்ந்தபுல் இரண்டரைப்பாரமும் வேண்டுமளவு தழையும் (உணவாம்).

---

24 இளங்கன்று—பால்குடி மறவாத கன்று.

25 கோடுவளராத பருவமுடையதென்பது கருத்து.

26 சுற்றளவென்பது பருமனைக் குறிக்கும்.

27 இடையாயதும் கடையாயதும் ஆகிய யானைகளின் அளவுகளைப் பின்னர்க் காண்க.

28 தலையாய யானைக்குக் கூறப்படும் உணவின் அளவில் நான்கில் ஒரு கூறு குறைவாக இடையாய யானைக்கும் அதனில் நான்கில் ஒருகூறு குறைவாகக் கடையாய யானைக்குமாம் என்பது கருத்து.

29 இங்கே கூறப்படும் உணவுப்பொருள்களின் அளவு ஏழுமுழ உயரமுள்ள தலையாய யானைக்கு என்று கொள்ளல்வேண்டும்; அங்ஙனமின்றி ஒருமுழ உயரத்திற்குப் பின்வரும் உணவுகளின் அளவைக் கணக்கிட்டுக் கொள்ளல் வேண்டுமென்று உரையாளர் கூறியுள்ளார். அங்ஙனம் கணக்கிடின் உணவுப்பொருள் வேண்டிய அளவிற்கு மிகவும் அதிகமாகக் காணப்படுதலில் அது பொருந்தாதென்பது கருதத்தக்கது.

30 சாறு — இறைச்சியினின்றும் எடுக்கப்படுவது; சாறும் தயிரும் யானைக்குரிய உணவிற் கலத்தற்கு வேண்டும் என்பது.

31 எட்டில் ஒருகூறு என்பது அரைக்காற்படி.

ஏழுமுழ உயரமுள்ள யானைக்குக் கூறிய உணவின் அளவே எட்டுமுழ உயரமுள்ள [32]அத்தியராளம் என்னும் யானைக்குமாம்.

எஞ்சிய ஆறுமுழ ஐந்துமுழ உயரமுள்ள யானைகளுக்கு [33]முழத்திற்கேற்பக் (கணக்கிட்டுக்கொள்க).

இளங்கன்று, [34]விளையாட்டின் நிமித்தம் பிடிக்கப்படலாம். அவ்விளங்கன்றுக்குப் பாலும் பசும்புல்லும் உணவாம்.

[35]குருதியூற்றுடைமை [36]மறைக்கப்படுநிலை [37]மழமழப்புடைய பக்கங்களுடைமை [38]சமமான பகுதிகள் உடைமை [39]மிகையும் குறைவுமாகவுள்ள தசையுடைமை [40]முதுகென்பும் பக்கங்களும் ஒத்திருத்தல் [41]தோணிபோன்ற முதுகுடைமை என்பன யானையின் [42]தோற்ற இயல்புவகைகளாம்.

---

[32] அத்தியராளம் என்பது எட்டுமுழ உயரமுள்ள யானையின் பெயராகும்.

[33] முழத்திற்கேற்ப என்றதனால் ஆறுமுழ யானைக்கு முற்கூறிய உணவளவில் ஏழில் ஒருகூறு குறைவாகவும் ஐந்துமுழ உயரமுள்ள யானைக்கு இரண்டு கூறு குறைவாகவும் இருக்கவேண்டும் என்பது கருத்து ; ஏழுமுழ உயரமுள்ள யானை தலையாயது என்று கூறியமையால் ஆறுமுழ உயரமும் ஐந்துமுழ உயரமும் உள்ள யானைகள் முறையே இடையாயதும் கடையாயதுமாம் என்பது புலப்படும். உயரங்களின் குறைவுக்கேற்ப நீளத்திலும் சுற்றளவிலும் குறைவு கணக்கிட்டுக் கொள்ளல்வேண்டும்.

[34] விளையாட்டின் நிமித்தம் என்றதனால் தொழினிமித்தம் பிடித்தலாகாது என்பது போதரும்.

[35] குருதியூற்றுடைமை—என்புதோலளவிலுள்ள பருவத்தில் இரத்தமூறும் முதனிலை.

[36] மறைக்கப்படுநிலை — சிறிது தசைவளர்ச்சியால் என்பு மறையும் நிலை.

[37] தசை வளர்ந்து உடலின் பக்கங்கள் ஒளிபொருந்திய நிலை.

[38] உறுப்புகளும் தசையும் ஒத்திருக்கும் நிலை.

[39] உறுப்புகளும் தசையும் பருத்திருக்கவேண்டிய இடத்தில் பருத்தும் குறைந்திருக்கவேண்டிய இடத்தில் குறைந்தும் இருக்கும் நிலை.

[40] முதுகெலும்புக்குச் சமமாக அதனிருமருங்கும் ஒத்திருக்கும் நிலை.

[41] முதுகின் இருமருங்கும் உயர முதுகென்பு தாழ்ந்திருக்கும் நிலை.

[42] இங்கே கூறப்பட்ட எழுவகை நிலைகளும் இளங்கன்று முதல் கிழப் பருவம் வரை உள்ளனவாய் அழகுசெய்வனவாம்.

## சுலோகம்

தலை இடை கடையாய யானைகளுக்கும் [43]கலப்பு யானைகளுக்கும் [44]தோற்றநிலைகளுக்கும் பருவத்திற்கும் (பெரும்பொழுது) ஏற்பத் [45]தொழிற்பயிற்சி செய்வித்தல் வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் முப்பதாம் பிரகரணம்
"யானைத்தலைவன்" என்னும் ஐம்பத்திரண்டாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[43] கலப்புயானைகள்—தலை இடை கடையாய யானைகளுள் ஒன்று, ஏனைய இருவகை யானைகளோடு கலந்ததனாலுண்டான யானைகள். அவை ஒன்பது வகைப்படும்.

[44] தோற்றநிலைகள்—முற்கூறப்பட்ட எழுவகைகளுமாம்.

[45] தொழில்—போர்செய்தலும் இரதமிழுத்தலும் சுமந்து செல்லலுமாம்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

### முப்பதாம் பிரகாணம்—யானைத்தலைவன் :—[1]யானைப்பயிற்சி

### ஐம்பத்துமூன்றும் அத்தியாயம்

[2]அடக்கத்தக்கது போர்க்குரியது ஊர்தற்குரியது கொடியது ஆகிய இவற்றைப்பற்றிய தொழிலின் தொகை நான்காம்.

[3]எருத்தேற்றமுடையது [4]தறிக்கட்டுடையது [5]பிடிக்குமிடம் உற்றது [6]பயம்பில் வீழ்ந்தது [7]யானைக்குழுவுட்புக்கது என அடக்கத்தக்கயானை ஐந்து வகைப்படும். அதற்குரிய 'பணிகள் [8]இளங் கன்றிற்குள்ளபடியாம்.

[9]நிலவெளியிற்றுருவுதல் [10]நிலத்திற்றுருவுதல் [11]செல்லுதல்

---

### 53-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] யானைத்தலைவன் என்னும் பிரகரணத்தின் ஒரு கூறு யானைப்பயிற்சி என்பதாகும். யானையைப்பற்றிய செய்தியையே இரண்டு பிரிவாகக் கூறுதலின் பிரகரணம் ஒன்றாகவும் அத்தியாயம் இரண்டாகவும் வகுக்கப் பட்டன.

[2] அடக்கத்தக்கது முதலியவாக யானைகள் நான்கு வகைப்படும் என்பதும் அவை செய்யும் தொழிலின் முறைகளும் அவற்றிற்குச் செய்யும் பணி முறைகளும் நந்நான்கு வகைப்படும் என்பதும் கருத்து.

[3] அடக்குமுறை ஐந்தனுள் இறுதி தொடங்கித் தொடக்கம்வரை முறையே கூறுகின்றார்; பிடரின்கண் ஏறுதற்குரிய நிலையை அடைந்த தென்பது கருத்து.

[4] தறியிற் கட்டப்படும் நிலையுடையது.

[5] பிடித்தற்கேற்ற இடத்தை எய்தியது.

[6] பயம்பு—யானை படுக்குங் குழி; யானை வீழ்தற்குரியதாகத் தோண்டப்பட்டு புல் முதலியவற்றால் மறைக்கப்பட்ட குழி.

[7] பழக்கப்பட்ட பெண்யானைகளுடன் சேர்ந்து விளையாடும் நிலையில் அக்குழுவுட் புக்கது.

[8] இளங்கன்றிற்குரியன—பால் பசும்புல் கருப்பங்கழி முதலியன.

[9] நிலவெளியிற்றுருவுதல்—பின்னுமுன்னுமுள்ள உறுப்புகளை வளைத்தலும் நிமிர்த்தலும் கொடி கொள்ளி மூங்கில் கயிறு முதலியவற்றை அமைத்துத் தாண்டுதலும் ஆம்.

[10] நிலத்திற்றுருவுதல் — படுத்தலும் இருத்தலும் வரையறைக்கோடு பள்ளம் ஒத்ததல்லாத நிலம் என்னுமிவற்றைக் கடத்தலுமாம்.

[11] செல்லுதல்—நேராகவும் வளைந்தும் குறுக்காகவும் வட்டமாகவும் நிமிர்ந்தும் நடத்தல்.

[12]கொலைகோள் [13]யானைப்போர் [14]நகர்சிதைத்தல் [15]போர் இவ் வேழும் போர்க்குரிய யானையின் செயலாம். [16]பட்டைத்தோலிடு தல் [17]கழுத்தணிகட்டுதல் [18]குழூஉத்தொழில்பயிற்றல் இவை அதற்குரிய பணிச்செயலாம்.

[19]வழியொழுகுவது [20]வேற்றியானையுடன் சுமப்பது [21]தோரண நிலையுடையது [22]செலவிற்றேர்ந்தது [23]கோலாற்செலுத்தப்படுவது குத்துக்கோலாற் செலுத்தப்படுவது [24]கருவியின்றிச் செலுத்தப் படுவது. [25]தேடற்றொழில் வல்லது என ஊர்தியானை எண்வகைப்

---

12 கொலைகோள் — துதிக்கை கோடு உடல் என்னுமிவற்றால் தேர் குதிரை காலாள் என்னும் இப்படைகளைக் கொல்லுதலும் பிடித்தலுமாம்.

13 யானைப்போர்—உணவிடப்பட்ட இடைவேதிகையின் இருமருங்கி னும் நின்று தம்மிற் குறைந்ததும் ஒத்ததுமாகிய யானைகளோடு செய்யும் போர்.

14 நகர் சிதைத்தல்—கோட்டைவாயில் மதில் அகழி முதலியவற்றை அழித்தல்.

15 போர்—இரவிலும் பகலிலும் மக்களோடு செய்யும் போர்.

16 பட்டைத் தோல்—யானையின் முதுகில் விரிக்கப்படும் தோல்.

17 கழுத்தணி—கழுத்துச் சங்கிலி முதலியன.

18 குழூவென்பது கிரிசரம் முதலிய கூட்டத்தை உணர்த்தும்; யானை நூலிற் கூறப்பட்டபடி உடலின் முற்கூறு உயர்ந்திருத்தல் பிற்கூறு உயர்ந் திருத்தல் இருகூறும் ஒத்திருத்தல் முதலிய அமைப்புக்களைக்கொண்டு கிரி சரம் வனசரம் நதிசரம் என்னும் மூவகையுள் இஃது இன்ன குழூவைச் சார்ந்ததென அறிந்து அக்குழூவிற்குரிய தொழிலிற் பழக்குதல்.

19 வழியொழுகுவது—உடலின் முற்கூறு உயர்ந்தும் தாழ்ந்தும் பிற் கூறு உயர்ந்தும் தாழ்ந்தும் செல்லுதல் முதலிய யானைச்செலவெல்லாவற் றையும் ஒத்து மேற்கொள்வது.

20 தனித்தன்றி வேற்றுயானையுடன் கூடிச் சுமப்பதென்பது.

21 ஓரேபக்கத்தில் எல்லாத் தொழிலையும் செய்வது.

22 பலவகையான நடையிலும் திறமை வாய்ந்ததென்பது.

23 கோலால் தட்டிய அளவில் தொழில் செய்வது.

24 கோல் குத்துக்கோல் முதலியவின்றிக் காலால் தட்டிச் சங்கேதம் செய்த அளவிற் றொழில் செய்வது.

25 பழக்கப்பட்ட பொருள்களில் ஏவினல் குறிப்பிட்ட பொருளைச் சங்கேதத்தாலறிந்து கொண்டுவர வல்லதென்பது.

படும். [26]எளிதிற்செய்தல் [27]குறைவினை [28]சங்கேதத்தின் நடத்தல் இவை அதற்குச் செய்யவேண்டிய பணிச்செயல்களாம்.

கொடிய யானையின் தொழில் [29]ஒன்றே. அதற்குரிய பணிச் செயல் [30]ஒறுத்தடக்குதலாம். [31]பயிற்சியில் மாறுபாடுடையது [32]சிறையிடப்பட்டது [33]குறும்புசெய்வது மதங்கொண்டது [34]மதத்தால் மயங்கியது [35]மதத்தின் காரணம்அறியப்படாதது (இவை [36]அதன் வகைகளாம்).

கொடிய யானை, [37]செயலால் வெறுக்கத்தக்கதாம். [38]கொலைத் தொழில் வல்லது [39]அலைக்குமியல்பினது [40]குறும்புடையது [41]எல்

---

26 எளிதிற் செய்தல்—விசேட ஆராய்ச்சியின்றிச் செய்தல். அஃது உடல் பருத்திருப்பின் மெலிவித்தலும் மெலிந்திருப்பின் பருக்கச் செய்தலும் சீரண ஆற்றல் குறைந்திருப்பின் மிகுவித்தலும் இயற்கைநிலையிலிருப்பின் அதனைப் பாதுகாத்தலும் என நான்குவகைப்படும் என்பர்.

27 குறை வினை—உடற்பயிற்சியில்லாத குறையைப் பரிகரித்து அப் பயிற்சியில் ஈடுபடுத்தல்.

28 குறிப்பிற் பயிற்றல் என்பது.

29 ஒன்றே என்பது ஈண்டுக் கொடியதொழிலைக் குறிக்கும்.

30 ஒறுத்தடக்குதல் ஒன்றே அதற்குச்செய்யவேண்டிய செயலாகும் என்பது.

31 தொழின்முறையிற் பழங்குங்கால் விபரீதமாக நடந்துகொள்வது.

32 தொழின்முறைக்குப் பயன்படாமை குறித்துச் சிறையிடப்பட்ட தென்பது கருத்து.

33 தன் விருப்பப்படி நடப்பது.

34 மதக்களிப்பாலும் உணவின்குற்றத்தாலும் கலக்கமுடையதென்பது.

35 எப்பொழுதும் மதக்களிப்புடையதாக இருத்தலால் அதற்குரிய காரணம் இன்னதென அறியப்படாததென்பது.

36 அதன்—கொடிய யானையின்.

37 செயல்—ஈண்டுக் கொடியதாம்.

38 கொலைத்தொழில் ஒன்றேவல்லது; இதற்குரியகுற்றங்கள் பதினெண் வகைப்படும் என்ப.

39 அலைத்தல் ஏனைய பிராணிகளை அச்சுறுத்தி ஓட்டுதல்; இவ்வி யானையைப் பற்றிய குற்றங்கள் பதினைந்துவகைப்படும் என்ப.

40 குறும்பு—கொலை அலைத்தல் முதலியன. இவ்வியானையைப்பற்றிய குற்றங்கள் முற்கூறிய இரண்டிற்குமுரிய பதினெட்டும் பதினைந்தும் என்ப.

41 இவ்வியானை மேற்கூறிய குற்றம் முப்பத்துமூன்றனோடு சிறப்பாகப் பத்தொன்பது குற்றங்களும் உடையதென்பது ; கொலைத்தொழில் வல்லது முதலிய யானைகளைப்பற்றிய குற்றங்களின் இலக்கணம் இன்னவென யானை நூலில் அறியத்தக்கனவாம்.

லாக் குற்றமுமுடைய கொடியது (இவை அதன் வகைகளாம்).

அவற்றின் கட்டுமுறையும் கருவிகளும் [42]யானைப்பாகன் கூறிய வாறேயாம். கட்டுதற்குரிய பொருள்களாவன—தறி [43]கழுத்தணி பட்டைத்தோல் [44]காலீடு [45]தளை [46]மீக்கயிறு என்பனவாம். கருவிக ளாவன—தோட்டி மூங்கிற்கோல் [47]பொறி முதலியனவாம். அணி கலன்களாவன—[48]கொடி [49]உடுமாலை விரிப்பு [50]கம்பலம் [51]முதலி யன. போரணிகலன்களாவன—கவசம் தோமரம் அம்பருத்தூணி [52]பொறி முதலியனவாம்.

[53]மருத்துவன் யானைப்பாகன் [54]ஏறுபவன் [55]நூல்வல்லான் யானைகாவலன் [56]பணியாளன் பாகஞ்செய்வோன் புல்லிடுவோன் கால்தளைப்பவன் [57]கொட்டில்காவலன் படுக்கையமைப்போன் முதலியோர் பணிசெய்யும் குழுவினர் ஆவர்.

மருத்துவன் கொட்டில்காவலன் பாகஞ்செய்வோன் என்னு மிவர்கள் ஒருபடி சோறு ஒருகை நேயப்பொருள் இரண்டு பலம்

---

[42] யானையைப் பயிற்றுவதிற் றிறமைவாய்ந்த பாகன் கூறியபடியே செய்யவேண்டும் என்பது.

[43] கழுத்திற் கட்டப்படும் சங்கிலி முதலியன.

[44] காலீடு—கால் மிதித்தேறுதற்குத் தூங்கவிடும் கயிறு.

[45] தளை—காற்சங்கிலி.

[46] மீக்கயிறு—மேலே கட்டுதற்குரிய கயிறு; வயிற்றைச்சுற்றிக் கட்டு தற்குரியதுமாம்.

[47] பொறி—படைக்கல நிலையத் தலைவன் என்னும் 39-ஆம் அத்தியாயத் திற் கூறப்பட்ட பாஞ்சாலிகம் முதலியன.

[48] கொடி—துகிற்பதாகை.

[49] உடுமாலை—நக்ஷத்திரவடிவான மாலை.

[50] பலவகை வண்ணங்களமைந்தது.

[51] முதலியன என்றதனால் சங்கு மணி முதலியனவும் கொள்க.

[52] பொறி—போர்க்குரிய பலவகை யந்திரங்கள்.

[53] மருத்துவன்—யானை வயித்தியன்.

[54] ஏறுபவன்—நூல்பயின்று யானையேற்றமறிந்தவன்.

[55] நூல்—யானை நூல்.

[56] பணியாளன்—ஈண்டு உடம்புபிடித்தல் எண்ணெய்தேய்த்தல் நீராட் டல் முதலிய செய்பவன்.

[57] கொட்டிலைக்கழுவுதல் பாதுகாத்தல் முதலிய தொழில்புரிவோன்.

அக்காரம் உப்பு இவற்றைக் [58]கொள்ளக்கடவர். மருத்துவன் அல்லாத ஏனையோர் பத்துப்பலம் இறைச்சியும் (கொள்ளக்கடவர்).

நடை நோய் தொழில் மதம் மூப்பு என்னும் இவற்றால் வாட்டமுற்ற யானைகளுக்கு மருத்துவர் மருத்துவஞ் செய்தல்வேண்டும்.

இடந் தூய்மைசெய்யாமை புல்லிடாமை தரையிற் படுப்பித்தல் [59]தகாத இடத்திற் புடைத்தல் [60]பிறரை ஏற்றுதல் [61]தகாத காலத்திற் செலுத்துதல் [62]தகுதியில்லாத நிலத்துய்த்தல் [63]துறையில்லாவிடத் திறக்குதல் மரஞ்செறிந்த காட்டிலுய்த்தல் என்னுமிவ்வெல்லாம் [64]ஒறுத்தற்குக் காரணங்களாம். [65]இவர்களுடைய உணவு கூலிகளினின்றும் தண்டம் இறுப்பித்தல் வேண்டும்.

### சுலோகம்

(1) நான்கு திங்களுக்கு ஒருமுறை [66]பருவச்சந்திகளில் (ஒவ்வொன்றாக) மூன்று [67]ஆலத்தி எடுத்தலும் அமாவாசைதோறும் பூதபலியும் பௌர்ணமிதோறும் [68]முருகன் வழிபாடும் செய்தல் வேண்டும்.

---

[58] ஈண்டுக்கூறிய சோறு முதலியவற்றை யானைக்குக் கொடுக்கப்படும் உணவினின்றும் எடுத்துக்கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[59] தகாத இடம்—யானையின் உறுப்புகளுள் அடிக்கத்தகாத பகுதி.

[60] பிறர்—ஏறத்தகாதவர்.

[61] தகாத காலம்—வரையறுக்கப்படாத காலம்.

[62] தகுதியில்லாத நிலம்—மேடு பள்ளம் சேற்றுநிலம் முதலியன.

[63] துறை—நீர்த்துறை.

[64] ஒறுத்தல், யானைப்பணியாளரையும் யானைத் தலைவனையும் என்பது.

[65] இவர்கள் என்பது பணியாளரையும் யானைத்தலைவனையும் குறிக்கும்.

[66] பருவச்சந்திகளாவன—கார்த்திகை பங்குனி ஆடித் திங்கள்களில் நிகழும் பௌர்ணமிகள்.

[67] யானைகளுக்கு ஆற்றல் மிகவும் தீங்கு நீங்கவும் ஆலத்தி எடுத்தல் வேண்டும் என்பது.

[68] முருகன் படைத்தலைவனாதலின் அவனைப்பற்றிய வழிபாடுவேண்டும் என்பது.

(2) [69]ஆற்றுச்சார்பிற்றோன்றிய யானைகளுக்கு இரண்டரை யாண்டினும் [70]மலைச்சார்பிற்றோன்றிய யானைகளுக்கு ஐந்தாண்டினும் கோட்டின் அடிச்சுற்றளவின் இருமடங்கு விட்டு எஞ்சிய பகுதியைத் துணித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் முப்பதாம் பிரகரணம்
"யானைத்தலைவன்—யானைப்பயிற்சி" என்னும் ஐம்பத்து
மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

[69] ஆற்றுச்சாற்பிற் றோன்றியது—நதிசரம்.

[70] மலைச்சார்பிற் றோன்றியது—கிரிசரம்; இனம்பற்றி வனசரத்தையும் ஈண்டுக் கொள்ளல்வேண்டும்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## முப்பத்தொன்று, முப்பத்திரண்டு, முப்பத்துமூன்றும் பிரகரணங்கள்—[1]தேர்த்தலைவன்-காலாட்படைத்தலைவன் படைத்தலைவன்றொழின்முறை

## ஐம்பத்துநான்காம் அத்தியாயம்

[2]குதிரைத்தலைவனுக்குக் கூறியவாற்றால் தேர்த்தலைவனுக்கும் கூறப்பட்டபடியாம்.

[3]இவன் [4]தேர்த்தொழில்களைச் செய்வித்தல்வேண்டும்.

தேர் [5]பத்தாள் உயரமும் பன்னிரண்டு ஆள் அகலமும் உடையதாம். [6]அதனினின்றும் முறையே [7]ஆறு ஆள் அகலம் வரை

---

### 54-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] நால்வகைப் படைகளுள் குதிரைப்படை யானைப்படைகளோடு தேர்ப்படை காலாட்படை என்னும் இவையும் ஒத்த இனமாதலின், "யானைத்தலைவன்" என்னும் பிரகரணத்தின் பின் "தேர்த்தலைவன்" "காலாட்படைத்தலைவன்" என்னும் பிரகரணங்களும் இவற்றோடு இயைபுடைமையின் இவற்றின்பின் "படைத்தலைவன் தொழின்முறை" என்னும் பிரகரணமும் வைக்கப்பட்டன ; இவ்வத்தியாயம் மூன்று பிரகரணங்களைத் தன்னுட்கொண்டதாம்.

[2] 'குதிரைத்தலைவன்' என்னும் பிரகரணத்தில் தேர்க்குதிரைகளுக்குக் கூறிய கொட்டிலமைத்தல் உணவுகொடுத்தல் தொழில்பயற்றல் நடத்தற்குரிய வழியை ஏற்படுத்தல் கட்டுமுறை கருவிகளைத்தொகுத்துவைத்தல் பணியாளரையமைத்தல் ஆலத்திளடுத்தல் என்னும் இன்னோரன்ன எல்லாச் செயல்களையும் தேர்த்தலைவனும் மேற்கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[3] இவன் — தேர்த்தலைவன் ; குதிரைத்தலைவனின் செயல்களின்றும் இவனுக்குச் சிறப்பாகவுள்ள தொழிலைக் கூறுகின்றார்.

[4] தேர்த் தொழில்கள்—தேர் அமைத்தல் தேர் அலங்கரித்தல் முதலியன.

[5] ஒரு நிழலாள் உயரம் பன்னிரண்டங்குலம்கொண்ட ஒரு சாணும் என்பது முன்னர் (41-ஆம் அத்.) கூறப்பட்டது. பத்து நிழலாள் உயரம் ஐந்துமுழமாகும். ஆகவே ஐந்துமுழ உயரமும் ஆறுமுழ அகலமும் ஆம் என்பது.

[6] அது—பத்தாள் உயரமும் பன்னிரண்டு ஆள் அகலமும் உள்ள தேர்.

[7] ஆறாள் அகலம் வரை குறைதலாவது—முறையே பன்னிரண்டினின்றும் பதினொன்று—பத்து—ஒன்பது—எட்டு—ஏழு—ஆறு ஆள் அகலம் வரை அமைதல்.

ஒவ்வோர் ஆள் அளவு அகலத்திற் குறையுமாற்றால் [8]தேர் எழு வகைப்படும்.

[9]தெய்வத்தேர் [10]மங்கலத்தேர் போர்த்தேர் [11]யாத்திரைத்தேர் [12]பகையரணை முற்றுகையிடுந்தேர் பயிற்றற்குரியதேர் ஆகிய [13]இவற்றைச் செய்வித்தல்வேண்டும்.

அம்பு வில் [14]படைக்கலம் கவசம் [15]கருவி இவற்றின் அமைப்புக்களையும் [16]வலவன் தேரூர்வோன் இவர்களுடையதும் பரியினதுமாகிய தொழிலூக்கத்தையும் [17]தொழில் முற்றும்வரை பணியாளர்களுக்கும் கூலியாட்களுக்கும் உரிய உணவு கூலி இவற்றையும் [18]தக்கோரைப் [19]புரத்தலையும் செய்கையையும் [20]பொருள் கொடுத்தல் பெருமைப்படுத்தல்களையும் [21]அறிதல்வேண்டும்.

---

[8] இங்ஙனம் குறைந்தஅளவுகளைக் கணக்கிடத் தேர் எழுவகைப்படுதல் அறிக ; ஈண்டுக்கூறிய அகலக்குறைவுகளுக்கேற்ப உயரத்தையும் அமைத்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து ; இவ்வெழுவகையுள் முன்னதைத் தலையாயது என்று கூறுவர்.

[9] பயன்படுத்தும் வகையால் தேர்களின் பெயர்வேறுபாடு கூறப்படுகின்றது; தெய்வத்தேர்—திருவிழா முதலிய காலங்களில் தெய்வ உருவத்தை எழுந்தருளப்பண்ணித் திருவீதிகளில் உலாப்போதற்குரியது.

[10] திருமணம் முதலிய நிகழ்ச்சிகளில் மணமக்கள் ஏறி ஊர்வலம் செய்தற்குரியதென்பது.

[11] யாத்திரைத் தேர்—வழிச்செல்லற்குரியது.

[12] பகைவருடைய அரண்களைச் சிதைத்தழிக்குங்கால் பயன்படுத்துந் தேர் என்பது.

[13] இவற்றை—இப்பெயர் உடையவைகளை.

[14] படைக்கலம்—தோமரம் முதலியன.

[15] கருவி—குதிரைக் கடிவாளம் முதலியன.

[16] வலவன்—சாரதி.

[17] தொழில்—தேரமைத்தல் அலங்கரித்தல் முதலியன.

[18] தக்கோர்—தமக்குரிய தொழிலிற்றிறமை படைத்தவர். குதிரையின் உள்ளமறிதல் தேர்நடத்துதல் முதலிய பயிற்சிகளை உபதேசிக்கும் ஆசிரியருமாவர்.

[19] புரத்தல்—பகைவரால் தீங்குநேராமற் காத்தல்.

[20] பொருள்கொடுத்தலும் பெருமைப்படுத்தலும் தேர்த்தொழிலாளர்க்கென்பது.

[21] அறிதல்—தேர்த்தலைவன் அறிந்து செய்யவேண்டும் என்பது ; இவ்வளவில் தேர்த்தலைவனைப்பற்றிய செய்தி முற்றிற்று. இனிக் காலாட்படைத்தலைவன்செயல் கூறப்படும்.

[22]இதனால் காலாட்படைத் தலைவனுக்கும் கூறியபடியாம். [23]இவன் [24]மூலப்படை கூலிப்படை [25]நாட்டுப்படை துணைப்படை பகைப்படை [26]காட்டுப்படை [27]இவற்றின் மறமிகுதி குறைவுகளை [28]அறிதல்வேண்டும். [29]தாழ்நிலப்போர் [30]நிலப்போர் [31]தெரிநிலைப் போர் [32]மறைவுப்போர் [33]சுரங்கப்போர் [34]மிசைநிலைப்போர் பகற் போர் இராப்போர் என்னும் இவற்றின் [35]பயிற்சிநிலையையும் தொழிலின்கண் விழிப்பு விழிப்பின்மைகளையும் அறிதல்வேண்டும்.

படைத்தலைவன் [36]எல்லாவகைப் போர் முறையினும் படைக்

---

[22] தேர்த் தலைவனுக்குக் கூறிய அம்பு வில் படைக்கலம் முதலியன அமைத்தலும் தொழிலாக்கமும் உணவுக் கூலிகளும் தக்கோரைப் புரத்தல் பொருள்கொடுத்துப் பெருமைபடுத்தல் முதலியனவும் காலாட்படைத் தலைவனுக்கும் பொருந்தும் என்பது.

[23] இவன்—காலாட்படைத் தலைவன்.

[24] எப்பொழுதும் மூலமாக அமைக்கப்பட்ட படை.

[25] நாட்டுப்படை—நாட்டிலுள்ள படை.

[26] காட்டுப்படை—காடுகாவலனால் அமைக்கப்பட்ட படை.

[27] இவற்றின்—இவ்வறுவகைப் படையின்.

[28] இன்ன இன்ன இடங்களுக்கு இன்ன இன்ன படைகளைப் பயன் படுத்தலாம் என்பது குறித்துக் காலாட்படைத்தலைவன் அறிந்துகொள்ள வேண்டும் என்பது.

[29] தாழ் நிலம்—புல்லும் நீரும் உள்ள இடம்.

[30] நிலம், ஈண்டு நீரற்ற நிலத்தைக் குறிக்கும்.

[31] தெரிநிலை—எல்லோரும் காணத்தக்க நிலை.

[32] மறைவுப் போர் — வஞ்சகப் போர். இதன் விரிவுகளைப் போரைப் பற்றிய பத்தாம் அதிகரணத்திற் காண்க.

[33] சுரங்கப்போர்—நிலத்தைத்தோண்டி அங்கிருந்து செய்யும் போர்.

[34] மிசைநிலைப் போர் — மதில் முதலியவற்றில் ஏறிநின்று செய்யும் போர்.

[35] காலாட்படைகளுக்குத் தாழ்நிலப்போர் முதலியவற்றிலுள்ள பயிற்சிநிலை முதலியவற்றை அப்படைத்தலைவன் அறிந்துகொள்ளல்வேண் டும் என்பது கருத்து. இவ்வளவில் காலாட்படைத்தலைவன் என்னும் பிரகரணம் முற்றிற்று.

இனிப் படைத்தலைவன்தொழின்முறை என்னும் பிரகரணம் கூறப் படும். இதுகாறும் நால்வகைப் படைகளுக்கும் தனித்தனியாகவுள்ள தலைவரைப்பற்றிக் கூறினார். இனி அந்நான்கிற்கும் பொதுவாகவுள்ள படைத்தலைவன்செயன்முறை கூறப்படுகின்றது.

[36] எல்லாம் என்பது தாழ்நிலப்போர் முதலியவற்றைக் குறிக்கும்; இவ்வடையைப் பின்வரும் படைக்கலம் கல்வி என்பவற்றிற்கும் கொள்ளல் வேண்டும்.

கலன்களினும் [37]கல்வியினும் வல்லவனாகவும் யானை குதிரை தேர் என்னும் இவற்றை [38]நடத்துவதிற் புகழ்பெற்றவனாகவும் நால் வகைப் படைகளின் செயல்களைப் பற்றுக்கோடாகவுள்ள [39]அத் தொழின்முறைகளை அறிந்தவனாகவும் இருத்தல்வேண்டும்.

(தன்) [40]நிலம் [41]போர்க்காலம் பகைப்படை [42]கூடியதுபிரித் தல் [43]பிரிந்ததுபொருத்தல் [44]சேர்ந்ததுபிரித்தல் [45]பிரிந்ததுகோறல் அரணழித்தல் [46]மேற்சேறற்குரிய காலம் என்னும் இவற்றைத் தெரிந்துகோடல் வேண்டும்.

### சுலோகம்

படைகளைப் பயிற்றுதலில் வல்ல தலைவன் [47]இருத்தல் செல் லல் [48]தாக்குதல் என்னும் இவற்றின் பொருட்டு இசைக்கருவி [49]குறியீடு கொடி என்னும் இவற்றால் அணிவகுப்பிற்குரிய சங்கே தத்தைக் [50]கற்பித்துக்கொண்டு உணர்த்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் முப்பத்தொன்று, முப்பத்திரண்டு, முப்பத்துமூன்றும் பிரகரணங்கள் "தேர்த்தலைவன்-காலாட்படைத் தலைவன்-படைத்தலைவன்தொழின்முறை" என்னும் ஐம்பத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

37 கல்வி—ஈண்டு ஆன்வீட்சிகீ முதலியன.

38 நடத்துதல்—யானையேற்றம் குதிரையேற்றம் முதலியவற்றைப் பயின்று அவற்றைப் போர்முறையிற் பயன்படுத்தல்.

39 அத்தொழின்முறைகளாவன — குதிரைத் தலைவன் முதலிய நால் வகைப் படைத்தலைவர்களின் தொழின்முறை.

40 நிலம்—படைப் பயிற்சிக்குத் தகுதியான இடம்.

41 போர்க்காலம்—தெரிசிலைப்போர் முதலியனசெய்தற்குஏற்ற பருவம்.

42 கூடியது—ஒன்றுசேர்ந்த பகைப்படையின் அணிவகுப்பு.

43 பிரிந்தது பொருத்தல்—பகைவரால் வேறுபடுத்தப்பட்ட தன் படை களை ஒன்றுசேர்த்தல்.

44 சேர்ந்தது பிரித்தல்—ஒருவருக்கொருவர் துணையாகக் கூடிய பகைப் படையை வேறுபடுத்தல்.

45 அங்ஙனம் வேறுபட்ட படைகளை அழித்தல் என்பது.

46 மேற்சேறல்—போர்குறித்துப் பகைவனை நோக்கிச் செல்லுதல்.

47 இருத்தல்—பகைப் படைகளை நோக்கிச் செல்லாதிருத்தல்.

48 தாக்குதல்—பகைப்படையொடு பொருதல்.

49 குறியீடு—சங்கு சக்கரம் முதலிய அடையாளங்கள்.

50 கற்பித்துணர்த்தல்—வாச்சிய ஒலிகளின் சிறப்பு இயல்புகளைக் கேட் டும் கொடி முதலியவற்றின் சிறப்பியல்புகளைக் கண்டும் இருத்தல் செல்லல் முதலிய செயல்களைத் தன் படைகள் மேற்கொள்ளுதற் பொருட்டுக் கற்பித் துக்கொண்டு குறித்துத் தெரிவித்தல்.

## இரண்டாம் அதிகாரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## முப்பத்துநான்கு, முப்பத்தைந்தாம் பிரகாணங்கள்—
## [1]இலச்சினைத்தலைவன்-புன்னிலத்தலைவன்

### ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்

[2]இலச்சினைத்தலைவன் [3]ஒரு மாடகத்திற்கு இலச்சினையைக் கொடுக்கக்கடவன்.

இலச்சினையைப் பெற்றவன் [4]நாட்டினுட்புகவும் [5]வெளியேற வும் உரியவனுவான்.

[6]இலச்சினையில்லாத தன்னுட்டினன் பன்னிரண்டு பணம் [7]இறுத்தல்வேண்டும். [8]பொய்யிலச்சினையுடையவன் பூர்வசாகச தண்டம் இறுக்கவேண்டும். [9]அயல்நாட்டினனுயின் உத்தமசாகச தண்டமாம்.

---

### 55-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] இலச்சினை—விலைப்பண்டம் பத்திரம் முதலியவற்றில் இடுதற்குரிய முத்திரை. இதனியல்பு உல்குபொருட்டலைவன் என்னும் பிரகரணத்திற் கூறப்பட்டது, அதற்குரிய தலைவன்செயல் ஈண்டுக் கூறப்படுகின்றது. நால்வகைப்படைகளுமுடைய அரசியுலுக்கு இன்றியமையாதாகலின் அவற் றின்பின் இலச்சினைத்தலைவன் என்னும் இப்பிரகரணம் வைக்கப்பட்டது.

[2] நகரத்தின் உட்புகுவோர் வெளிச்செல்வோர் என்னும் இவர்கள் கள்வரல்லர் பகைவருடைய ஒற்றரல்லர் என்னும் நம்பிக்கையுண்டா தற்பொருட்டுச் சிறுபொருள் பெற்றுக்கொண்டு இலச்சினையை அத் தலைவன் கொடுக்கவேண்டும் என்பது கருத்து.

[3] ஒரு மாடகம் என்பது சிறு நாணயமாகும். இதனியல்பை 40ஆம் அத்தியாயத்திற் காண்க.

[4] நாடு—தன் அரசனது.

[5] வெளியேறல்—அந்நாட்டினின்றும் வெளிப்படுதல்.

[6] இலச்சினை பெருமல் உட்புகுதல் வெளியேறுதல் செய்யின் என்பது.

[7] அயல்நாட்டினன் இலச்சினைபெருமல் உட்புகுதல் வெளியேறுதல் செய்வானுயின் இத்தண்டத்தினும் சிறிது மிகுதியாக இறுக்கவேண்டும் என்பது கருத்து.

[8] இக்குற்றம் புரியும் அயல்நாட்டினனுக்கு வேருகத் தண்டம் விதித் திருப்பதால் இது தன்னுட்டினனுக்கென்பது போதரும்.

[9] அயல்நாட்டினன் பொய்யிலச்சினை யுடையானுயின் என்பது. இவ் வளவில் ‘ இலச்சினைத்தலைவன் ’ என்னும் பிரகரணம் முற்றிற்று.

[10]புன்னிலத்தலைவன் [11]இலச்சினையைப் பார்வையிடல் வேண்டும்.

[12]அஞ்சுதற்குரிய இடங்களிற் புன்னிலத்தை ஏற்படுத்தல் வேண்டும். கள்வராலும் கொடிய உயிர்களாலும் ஏற்படும் அச்சங் காரணமாகப் பள்ளநிலம் காடு இவற்றை [13]ஆராய்ந்துகொள்ளல் வேண்டும்.

நீரற்ற நிலத்தில் கேணி [14]அணைக்கட்டு [15]சிற்றூற்று என்னும் இவற்றையும் மலர்ப்பொழில் பழத்தோட்டம் [16]இவற்றையும் ஏற்படுத்தல்வேண்டும்.

வேட்டுவரும் நாய்க்கூட்டமுடையோரும் காடுகளில் [17]சுற்றித் திரிதல்வேண்டும். கள்வரும் பகைவரும் வரக்கண்டால் மலையிலும் மரத்திலும் ஏறிக்கொண்டவராகவாதல் விரைந்துசெல்லும்

---

10 இனிப் புன்னிலத்தலைவன் என்னும் பிரகரணம் கூறப்படும். புன்னிலமாவது ஆனினம் முதலியன மேய்தற்குரிய நிலமாம். இலச்சினைத் தலைவனால் தண்டிக்கத்தக்க இலச்சினைபெறாதாரும் பொய்யிலச்சினையுடையாரும் பெரும்பாலும் நேர்வழியில் செல்லாமல் புன்னிலங்களிலுள்ள குறுக்குவழியாகச் செல்லக்கூடுமாதலால் அன்னாரைப் புன்னிலத் தலைவன் தானேயாதல் தன் பணியாளரைக் கொண்டாதல் பிடித்து இலச்சினைத் தலைவன்பாற் சேர்ப்பிக்கவேண்டும். ஆதலால் இலச்சினைத்தலைவன்என்னும் பிரகரணத்தின் பின் இது வைக்கப்பட்டது; இதனாற் பிரகரண இயைபு புலனாதலறிக. இவ்வியைபால் இவ்விரண்டு பிரகரணங்களையும் தன்னுட் கொண்டது இவ்வத்தியாயம் ஆகும்.

11 புன்னிலம் வழியாகச் செல்வோர் முத்திரையுடையரா? இல்லையா? என்பதை ஆராய்ந்து அறியவேண்டும் என்பது கருத்து.

12 அஞ்சுதற்குரிய இடங்கள்—கள்வர், பகைவர், ஒற்றர் என்னும் இவர்களுடைய போக்குவரவு நேர்தற்குரிய நிலங்கள்; இத்தகைய நிலம் உழவுக்குரியதாயினும் அஃதில்லாததாயினும் அவ்விடத்தில் புன்னிலம் அமைத்தல்வேண்டும் என்பது கருத்து.

13 ஆராய்தல்—கள்வரும் கொடிய விலங்குகளும் அவ்விடத்தில் இருக்கக்கூடும் என்னும் ஐயுறவால் அடிக்கடி பரிசோதிக்கவேண்டும் என்பது.

14 அணைக்கட்டு—நீர்தேங்குதற்குரிய கம்மாய் ஏரி முதலியன.

15 சிற்றூற்று—அவ்வப்போது தோண்டி உபயோகப்படுத்துஞ் சிறு கிணறுகள்.

16 உம்மையால் தண்ணீர்ப்பந்தரும் நிறுவவேண்டும் என்பது.

17 கள்வர் பகைவர் முதலியோர் உட்புகாமலும் புகுந்திருப்பின் அறிந்து கொள்ளுதற்கும் நாற்புறமும் சுற்றிப்பார்க்கவேண்டும் என்பது கருத்து.

ஊர்தியையுடையவராகவாதல் அவர் காணுவாறு மறைந்திருந்து [18]சங்கு பறை என்னும் இவற்றை முழக்குதல்வேண்டும்.

காடுகளில் பகைவர் [19]வழங்குதலை [20]இலச்சினையுடைய வீட்டுப் புறாக்களாலாதல் [21]புகை நெருப்புக்களின் [22]வரிசையினாலாதல் [23]அரசனுக்கு அறிவித்தல்வேண்டும்.

### சுலோகம்

பயன்மரக்காடு யானைக்காடு இவற்றிற் கிடைக்கும் [24]பயன்படுபொருள் [25]வழிக்கூலி [26]கள்வரிற்காத்தல் [27]வாணிகக்குழு உய்த்தற்கூலி ஆனிரை காத்தற்கூலி [28]கொள்ளல் விற்றல் என்னும் இவற்றையும் கண்காணித்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் முப்பத்துநான்கு, முப்பத்தைந்தாம் பிரகரணங்கள்
" இலச்சினைத்தலைவன்-புன்னிலத்தலைவன் " என்னும்
ஐம்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[18] கள்வர் முதலியோரின் வரவை எல்லைகாவலர் முதலியோர்க்கு அறிவித்தற்பொருட்டுச் சங்கு முதலியவற்றை ஒலிக்கவேண்டும் என்பது.

[19] வழங்குதல், வேட்டை முதலியன குறித்து.

[20] இலச்சினை, ஈண்டு அதனையுடைய ஓலையைக் குறிக்கும்.

[21] பகலில் புகையினாலும் இரவில் நெருப்பினாலும் அறிவித்தல்வேண்டும் என்பது.

[22] வரிசையினால் அறிவித்தலாவது காட்டினின்றும் தானீயம் என்னும் தலைநகரம் வரை ஒவ்வொரு குரோசத்திற்கும் பணியாளர் ஒவ்வொருவராக நின்று புகை நெருப்புக்களைக் கண்டவுடன் முதலில் நிற்பவன் இரண்டாமவனுக்கும் அவன் மூன்றாமவனுக்குமாக இங்ஙனம் பரம்பரையாகப் புகை நெருப்புக்களையுண்டாக்கி அறிவித்தல்.

[23] அரசன்—தானீயம் என்னும் தலைநகரத்திலிருக்கும் அரசியல் வினைஞன்.

[24] பயன்படுபொருள் — குப்பியத்தலைவன் யானைத்தலைவன் என்னும் இவர்களால் கொள்ளப்பட்டனபோக எஞ்சிய புல் விறகு கரி முதலியன.

[25] வழிக் கூலி—காட்டுவழியைக் கடத்தற்கு வழிப்போக்கர்களிடத்தினின்றும் பெறுங் கூலி.

[26] கள்வராற்றுன்பம் நேராமல் காத்தற்குப்பெறுங் கூலி.

[27] வாணிகக் கூட்டத்தார்க்குப் பொருட்கேடு அச்சம் நேராமல் துணையாகச் செல்லுதற்குப் பெறுங் கூலி.

[28] புல் விறகு கரி முதலியவற்றைக்கொண்டு விற்றல் என்பது.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## முப்பத்தாறு, முப்பத்தேழாம் பிரகரணங்கள்—
## [1]நாட்டுவருவாய்த் தலைவன்செயல்-இன்னிலை-வாணிகத் தவக்குறியினராக ஒற்றரை அமைத்தல்

### ஐம்பத்தாறும் அத்தியாயம்

நாட்டுவருவாய்த்தலைவன் நாட்டை நான்குகூறாகப் பிரித்துத் [2]தலை இடை கடையென வகுத்து [3]இறையிலியினதும் [4]படைக்கல விறை [5]கூலவிறை [6]ஆனிறை [7]பணவிறை [8]குப்பியப்பொருளிறை [9]ஊழியவிறை என்னும் இவ்வாற்றால் இறை இறுக்கும் கிராமங்க

---

### 56-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] நாட்டுவருவாய் என்பது உபலக்கணத்தால் அரண் சுரங்கம் அணை காடு என்னும் இவற்றினாலும் வாணிகத் தொழிலாலும் கிடைக்கும் ஊதியப்பொருளையும் குறிக்கும்; செயல்—எல்லாநாடுகளிலுமுள்ள வருவாய் நிலையங்களைப்பற்றி ஆராய்தல். இதுகாறும் ஒவ்வொரு பொருட்குமுரிய தலைவனைப்பற்றிக் கூறினர்; இனி எல்லாவகைப் பொருட்குமுரிய தலைவனைப் பற்றிக் கூறத்தொடங்குகின்றார்; இதனாற் பிரகரண இயைபு புலனாதலறிக.

[2] குடிகளின் மிகுதி குறைவு குறித்தும் வளத்தின் மிகுதி குறைவு குறித்தும் தலை இடை கடையென வகுக்கப்படும் என்பது கருத்து.

[3] இறையிலி—இறைப்பொருளின்றித் தானமாகக் கொடுக்கப்பட்டது.

[4] படைக்கலவிறை — இறைப்பொருளாகப் படைக்கலங்களை ஆக்கிக் கொடுக்கும் கிராமம்.

[5] கூல விறை — இறைப்பொருளாகத் தானியங்களைக் கொடுக்கும் கிராமம்.

[6] இறைப்பொருளாகப் பசுக்களைக் கொடுக்கும் கிராமம்.

[7] பணவிறை—இறைப்பொருளாகப் பொன் வெள்ளி நாணயங்களைக் கொடுக்கும் கிராமம்.

[8] இறைப்பொருளாகக் குப்பியப் பொருள்களைக் கொடுக்கும் கிராமம்.

[9] இறைப்பொருளுக்குப் பணிசெய்யும் கிராமம்,

ளினதும் ஆகிய [10]அளவைகளை [11] இஃது [12]இத்தகையது என்று எழுதுதல்வேண்டும்.

[13]அவனது ஆணைபெற்ற [14]கோபன் என்பவன் [15]ஐந்து கிராமங்களையாதல் பத்துக்கிராமங்களையாதல் கண்காணிக்கக்கடவன்.

[16]எல்லையை அறுதியிடுதலால் கிராமத்தின் அளவையும் [17]உழு நிலம் [18]உழா (துபயன்றரு) நிலம் [19]வறுநிலம் [20]கழனி [21]உபவனம் [22]தோட்டம் [23]சிறுமரக்கா [24]காடு [25]மனையிடம் [26]கடவுண்மரம்

---

[10] அளவை—இன்ன இன்ன கிராமம் இன்ன இன்ன இறை இறுப்பது எனத் தனித் தனியாகவும் ஒரேவகையான இறை இறுப்பன பலவாயின் அவற்றைத் தொகுதியாகவும் எல்லாவற்றையும் கூட்டியும் கணக்கிட்டுக் கொள்ளல்.

[11] ஒன்றாயின் இஃது இத்தகையதென்றும் பலவாயின் இவை இத்தகையன என்றும் எழுதுதல்வேண்டும் என்பது.

[12] இத்தகையது அல்லது இத்தகையன என்பது படைக்கலம் முதலியவற்றால் ஓராண்டிற்கு இத்துணை வருவாய் தரத்தக்கது அல்லது தரத்தக்கன என்பதைக் குறிக்கும்.

[13] அவன்—நாட்டுவருவாய்த்தலைவன்; நான்கு கூறாக வகுக்கப்பட்ட நாட்டின் ஒவ்வொரு கூற்றிலுமுள்ள கிராமங்களைப் பிரித்துக் கண்காணிக்கும் முறையைக் கூறுகின்றார்.

[14] கோபன் என்பது கண்காணிக்கும் பதவியற்றி வந்தபெயர்.

[15] தலையாய கிராமங்களாயின் ஐந்தும் கடையாய கிராமங்களாயின் பத்தும் எனக் கொள்ளல்வேண்டும்; இங்ஙனம் கொள்ளவே இடையாய கிராமங்களாயின் ஆறுமுதலாகக் கொள்ளல்வேண்டும் என்பது போதரும்.

[16] எல்லையை அறுதியிடுதலாவது — ஒரு கிராமத்தின் நான்கெல்லை இனையவென்று மலை ஆறு முதலியனகொண்டு வரையறுத்தல்.

[17] உழுது நெல் முதலியன விளைவிக்கும் வயல்.

[18] உழாமற் குளநெல் விளைவிக்கும் வயல்.

[19] பயிரிடப்படாத நிலம்.

[20] கழனி என்பது பொதுவாக வயல் நிலத்தைக் குறிக்கும்.

[21] உபவனம்—இல்லத்தை அடுத்து உண்டாக்கப்படும் மலர்வனம்.

[22] வாழைத்தோட்டம் முதலியனவாம்.

[23] சிறிய மரங்களையுடைய சோலை.

[24] கிராமத்தில்வாழும் மக்களுக்குப் பயன்படும் பெருமரங்கள் செறிந்த காடு.

[25] குடியிருத்தற்குரிய இடம்.

[26] கிராம தேவதைகள் அதிட்டித்து நிற்கும் மரம்.

திருக்கோயில் அணைக்கட்டு சுடலை [27]அறக்கோட்டம் தண்ணீர்ப் பந்தர் புண்ணியதலம் புன்னிலம் [28]வழியிடம் என்னும் இவற்றைக் கணக்கிடுதல்முகமாக நிலத்தின் அளவையும் [29]அதனால் [30]எல்லைக் கும் நிலத்திற்கும் உள்ள தொலைவு [31]காடு [32]வழி [33]அளவு [34]தானம் [35]விலைக்குக்கொண்டது [36]உதவியது இறையிலி ஆகிய இவற்றை யும் [37]இறையிலா வீடு இறையுடைய வீடு இவற்றையும் கணித்து எழுதல்வேண்டும்.

[38]அவற்றுள், நாற்பாற் குலத்தினர் இத்துணையர் உழவர் ஆயர் வணிகர் காருகர் தொழிலாளர் அடிமை இவர்கள் [39]இத் துணையர் எனவும், [40]இருகாலுயிர் நாற்காலுயிர் [41]இத்துணைய எனவும் பணம் ஊழியம் உல்கு [42]தண்டம் ஆகிய வருவாய் [43]இத் துணைய எனவும் கணக்கிடுதல்வேண்டும்.

குடும்பங்களிலுள்ள மகளிர் ஆடவர் என்னும் இவர்களுடைய

---

[27] அறக்கோட்டம்—சோறு வழங்குமிடம்.

[28] வழியிடம்—வண்டி செல்லுதற்கும் மக்கள் நடந்து செல்லுதற்கும் உரிய நடைவழி.

[29] அதனால்—உழுநிலம் முதலியவற்றின் எண்களைக் கணக்கிடுதலால்.

[30] எல்லை—மலை ஆறு முதலியன.

[31] காடு—ஈண்டுப் பயன்படாத வனம்.

[32] ஈண்டு வழி என்பது, உழுநிலம் தோட்டம் முதலியவற்றிற்குச் செல் லும் நடைவழியைக் குறிக்கும்.

[33] அளவென்பது, ஈண்டு உழுநிலம் முதலியவற்றின் அளவைக் குறிக்கும்.

[34] தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்.

[35] விலைகொடுத்துக் கொள்ளப்பட்ட நிலம்.

[36] உதவியது—பயிர்த்தொழில் செய்வார்க்கு உதவியாக விடப்பட்டது.

[37] இறையிலாவீடு—வீட்டிற்குரிய அரசிறை கொடாமல் மக்கள் குடி யிருக்கும் வீடு.

[38] அவற்றுள்—அவ்வில்லங்களில்.

[39] இத்துணையர் வாழ்கின்றனர் என்பது.

[40] இருகாலுயிர்—கோழி புறு முதலியன.

[41] இத்துணைய வாழ்கின்றன என்பது.

[42] தண்டம்—தண்டமாக வாங்கப்பட்ட பொருள்.

[43] இத்துணைய எனவும்—ஓராண்டிற்கு இவ்வளவு வருகின்றன எனவும்.

[44]இளமை மூப்பு தொழில் [45]வரலாறு [46]வரவு செலவு இவற்றின் அளவைத் [47]தெரிந்துகொள்ளல்வேண்டும்.

[48]இங்ஙனம் நாட்டின் நான்கில் ஒரு கூற்றைத் [49]தானிகன் என்பான் கண்காணித்தல்வேண்டும்.

கோபன் தானிகன் என்னும் [50]இவர்களிடங்களிலுள்ள கீழ் அதிகாரிகள் [51]தொழில்புரிதலையும் [52]பலிகொள்ளுதலையும் செய்தல் வேண்டும்.

---

[44] இளமை மூப்பென்பன அவ்வப் பருவமுடையாரைக் குறிக்கும்.

[45] வரலாறு—தேசாசாரம் சாதியாசாரம் முதலியன.

[46] வரவு செலவு என்பன ஒவ்வொரு குடும்பத்திற்கு முரியவை.

[47] கோபன் தெரிந்துகொள்ளல் வேண்டும் என்பது.

[48] இங்ஙனம்—மேற்கண்டவாறே.

[49] தானிகன் என்பான் நாட்டின் நான்கில் ஒருகூற்றைக் கண்காணிப்போன்.

[50] இவர்கள் ஆட்சிக்குட்பட்ட இடங்களில் என்பது.

[51] தொழில்—பகைகளைதல் முதலியன.

[52] பலி கொள்ளுதல்—அரசிறை கோடல்; கோடல் என்னும் சொல்லாற்றலால் தாமே கொடாதவரிடத்தினின்றும் வலிந்து வாங்குதல் என்பது போதரும். "பலி" என்னும் மூலத்திற்கு ஆற்றலுடையார் எனப் பொருள்கொண்டு அரசிறை கொள்ளுதற்குத் தடைசெய்பவர் எனவும் அவர்களைத் தானிகன் கோபன் என்னுமிருவர்க்கும் அடங்கி நடக்கும்படி செய்யவேண்டும் எனவும் ஒருசாரார் கூறுப.

இவ்வளவில் நாட்டுவருவாய்த் தலைவன்செயல் என்னும் பிரகரணம் முற்றிற்று. இனி இன்னிலை வாணிகத் தவக்குறியினராக ஒற்றரையமைத்தல் என்னும் பிரகரணம் கூறப்படும். முதல் அதிகரணம் பதினோராம் அத்தியாயத்தில் ஒற்றரையமைத்தல் என்பதுபற்றி விளக்கமாகக் கூறப்பட்டுளது. ஆண்டுக் காபடிகன் உதாத்திதன் கிருகபதிகன் வைதேககன் தாபதன் என ஒற்றரை ஐந்து வகைப்படுத்துக் கூறியுள்ளார். அவ்வைவருகை ஒற்றருள் சிறப்புப்பற்றிக் கிருகபதிகன் முதலிய மூவரும் இங்கே கூறப்பட்டனர் எனினும் அரசியல்வினைக்கு அவரோடு ஒத்தவராதலின் ஏனையிருவரும் உபலக்கணத்தால் கொள்ளப்படுவர். கிராமத்திலும் நாட்டிலும் நிகழும் செய்திகளை மறைவாக அறிந்துகோடற்கும் நாட்டுத்தலைவன் விரும்பியபடி கோபன் தானிகன் என்னும் இவர்களுடைய செயல்முறைகளை ஆராய்ந்தறிதற் பொருட்டும் நாட்டுத்தலைவன் செயலுக்கு ஒற்றரையமைத்தல் அங்கமாகும். ஆதலின் நாட்டு வருவாய்த்தலைவன் என்பதன்பின் இப் பிரகரணம் வைக்கப்பட்டது. இதனால் பிரகரணவியைபு புலனாதலறிக.

நாட்டு வருவாய்த்தலைவனால் நியமனஞ்செய்யப்பட்ட இன்னிலையினரின் [53]உருக்கொண்டவர்கள் தாம் ஏவப்பட்டிருக்கின்ற கிராமங்களிலுள்ள [54]நிலம் வீடு குடி இவற்றின் [55]அளவினை அறிந்துகொள்ளுதல் வேண்டும். [56]அளவினாலும் விளைவினாலும் நிலத்தையும் [57]இறை இறையின்மைகளால் வீடுகளையும் [58]சாதி தொழில் இவற்றால் குடிகளையும் அக்குடிகளினுடைய [59]இயங்கு பொருளின் அளவையும் வருவாய் செலவுகளையும் அறிதல் வேண்டும். [60]வெளியேறினவர்கள் [61]உள் நுழைந்தவர்கள் இழிந்தவர்களாகிய [62]ஆடவர் [63]பெண்டிர் என்னும் இவர்களுடைய போக்குவரவின் காரணங்களையும் [64]ஒற்றர்களுடைய செயல்களையும் அறிந்துகொள்ளுதல் வேண்டும்.

---

[53] உருக்கொண்ட ஒற்றர்கள் என்பது.

[54] நிலம்—விளைநிலம்.

[55] அளவு—நிலம் வீடு குடி என்னும் இவை தனித்தனி இவ்வளவு என்னும் அளவு.

[56] நீள அகலங்களின் அளவு இத்துணை எனவும் விளைபொருளின் அளவு இத்துணை எனவும் கணக்கிட்டு அதனால் நிலவளவை அறிந்துகொள்ளல் வேண்டும் என்பது.

[57] இறையுள்ளன இத்துணைய இறையில்லாதன இத்துணைய என்று கணக்கிட்டு அதனால் வீடுகளின் அளவை அறிந்துகொள்ளல் வேண்டும் என்பது.

[58] அந்தணர் அரசர் முதலிய சாதியினர் இத்துணையர் அவர்தம் தொழில்கள் இன்ன எனக் கணக்கிட்டு அதனாற் குடிகளின் அளவை அறிந்துகொள்ளல் வேண்டும் என்பது.

[59] ஒவ்வொரு குடும்பத்தினும் மக்கள் இத்துணையர் ஆடுமாடுகள் இத்துணைய என்னும் அளவினையும் அக் குடும்பத்தினரின் வரவு செலவுகளையும் அறிந்துகொள்ளல் வேண்டும் என்பது.

[60] தம் பார்வையிலுள்ள கிராமத்தினின்றும் வேற்றிடத்தில் தங்குவதற்குச் சென்றவர்களும் இங்கு ஓரிடத்தில் தங்குதற்கு வந்து மீண்டும் வேற்றிடத்திற் றங்குதற்குச் சென்றவர்களும் வெளியேறினவர் ஆவார்கள்.

[61] வேற்றிடத்தினின்றும் இங்கே தங்குதற்கு வந்தவர்களும் வேற்றிடத்தில் தங்குதற்குச் சென்று மீண்டும் இங்கே திரும்பினவர்களும் உள் நுழைந்தவர் ஆவார்கள்.

[62] ஆடவர்—நடன் விடன் முதலியோர்.

[63] பெண்டிர்—ஆடல்மகள் வியபிசாரமுடையவள் முதலியோர்.

[64] ஒற்றர்—ஈண்டுப் பகைவராலுய்க்கப்பட்டோர்.

இங்ஙனமே [65]வணிக உருவினர் தம் நாட்டிலுள்ள [66]ஆகரம் [67]அணை [68]காடு [69]தொழில் [70]நிலம் என்னும் இவற்றிலுண்டான அரசனுக்குரிய விலைப்பொருள்களின் அளவையும் பெறுமானத்தையும் அறிந்துகொள்ளல் வேண்டும். வேற்றுநாட்டிற் றோன்றினவும் [71]நீர்வழியாகவும் நிலவழியாகவும் வந்தனவும் [72]உயர்ந்தனவும் [73]தாழ்ந்தனவும் ஆகிய விலைப்பண்டங்களைக் கொள்ளல் விற்றல்களிலும் (அவற்றின் அளவு பெறுமானங்களை அறிதல் வேண்டும்). [74]உல்குபொருள் [75]வழியிறை [76]உய்த்தற்கூலி [77]குழூஉக்கூலி மரக்கலக்கூலி [78]கூறு [79]உணவுச்செலவு [80]அங்காடிக்கூலி இவற்றின் அளவையும் அறிந்துகொள்ளல் வேண்டும்.

இங்ஙனமே நாட்டு வருவாய்த்தலைவனால் நியமிக்கப்பட்ட [81]தவவுருவினர் உழவர் ஆயர் வணிகர் [82]தலைவர் என்னும் இவர்களுடைய தூய்மை தூய்மையின்மைகளை அறிதல்வேண்டும். [83]பழைய கள்வர் உருவினராகிய [84]மாணுக்கர்கள் கோயில் [85]சதுக்

---

[65] வணிக உருவினராகிய ஒற்றர் என்பது.

[66] ஆகரத்திலுண்டாகும் பொருள்—வயிரம் மணி முதலியன.

[67] அணைக்கட்டிலுண்டாகும் பொருள்—மீன் முதலியன.

[68] காட்டிலுண்டாகும் பொருள்—மரம் முதலியன.

[69] தொழில்—ஈண்டுப் பலவகைத் தொழில்களையும் குறிக்கும்.

[70] நிலத்திலுண்டாகும் பொருள்கள்—நெல் முதலிய கூலங்கள்.

[71] கலத்தினும் காலினும் தந்நாட்டிற்குவந்த பொருள்கள் என்பது.

[72] உயர்ந்தன—மணி பொன் முதலியன.

[73] தாழ்ந்தன—காய் கனி முதலியன.

[74] உல்குபொருள்—பண்டங்களுக்கு இறையாய பொருள்.

[75] வழியிறை—இஃது எல்லைகாவலனுக்குக் கொடுக்கவேண்டியது.

[76] உய்த்தற் கூலி — வாணிகத் தொழிலாளர்களை அவ்வவர் செல்லவேண்டிய இடத்திற்குத் துணைபுரிந்து செலுத்தியதாற் பெறுங்கூலி.

[77] குழூஉக்கூலி—காவற் கூட்டத்திற்குக் கொடுக்குங் கூலி.

[78] கூறு—கூட்டுத் தொழில்புரிந்தோர் பகிர்ந்துகொள்ளும் பொருள்.

[79] உணவுச் செலவு—தொழிலாளர் முதலியோர்க்கும் எருது முதலியவற்றிற்கும் உணவின் நிமித்தம் உண்டாகிய செலவுப்பொருள்.

[80] அங்காடிக் கூலி — கடைத்தெருவிலுள்ள வீடுகளினின்றும் கிடைக்கும் கூலி.

[81] தவவுருவினராகிய ஒற்றர் என்க.

[82] தலைவர்—கோபன் தானிகன் முதலியோர்.

[83] பழைய கள்வர்—நெடுநாள் களவுத்தொழிலிற் பழகியவர்கள்.

[84] மாணுக்கர்—தவவுருவினராகிய ஒற்றர்களின் மாணவர்.

[85] சதுக்கம்—நான்கு தெருக்களும் ஒன்றுகூடும் இடம்.

கம் [86]பாழிடம் கேணி யாறு [87]நீர்த்தொட்டி புண்ணிய நீர்த்துறை முனிவரிருக்கை [88]காடு மலைக்காடு பெருங்காடு இவ்விடங்களி லிருந்து கள்வர் [89]பகைவரைச் சார்ந்தார் தறுகண்மறவர் என்னும் இவர்களின் [90]வருகை இருப்பு செல்கைகளின் [91]பயனை அறிதல் வேண்டும்.

**சுலோகம்**

இங்ஙனம் நாட்டு வருவாய்த்தலைவன் நாட்டை விழிப்புடன் [92]கண்காணிக்கக் கடவன். [93]ஒற்றர்களும் நன்கு [94]ஆராய்ந்தறிதல் வேண்டும். அவ்வொற்றர்களையும் [95]அவ்வவ்வுருக்கொண்ட பிற ஒற்றர் ஒற்றியறிதல் வேண்டும்.

*இரண்டாம் அதிகரணம் முப்பத்தாறு, முப்பத்தேழாம் பிரகரணங்கள் "நாட்டுவருவாய்த் தலைவன்செயல்-இன்னிலை-வாணிகத் தவக்குறியினராக ஒற்றரை அமைத்தல்" என்னும் ஐம்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.*

---

86 பாழிடம்—மாந்தர் வழங்காத இடம்.

87 நீர்த்தொட்டி, கேணிக்கு அருகிலுள்ளது.

88 காடு என்பது ஈண்டுத் தவம்புரிதற்குரிய வனத்தையுணர்த்தும்.

89 பகைவரைச் சார்ந்தோர்—நஞ்சிடுதல் முதலிய கொடுந்தொழில் புரிவோர்.

90 இன்னகாலத்தில் இன்ன இடத்தில் வந்தனர் இருந்தனர் சென்றனர் என்பது.

91 பயன்—வருதல் இருத்தல் செல்லுதலால் விளைவது.

92 கோபன் தானிகன் என்னுமிவர்களைத் துணையாகக்கொண்டு கண் காணிக்கவேண்டும் என்பது.

93 ஒற்றர்கள்—நாட்டுவருவாய்த்தலைவனுல் நியமிக்கப்பட்ட இன்னிலை உருவினர் முதலியோர்; உம்மையால் கோபன் தானிகன் என்பாரும் ஆராய்ந்தறியவேண்டும் என்பது.

94 நாட்டை ஆராய்ந்தறிதல்வேண்டும் என்பது.

95 இன்னிலை உருவினனுகிய ஓர் ஒற்றன் அவ்வுருக்கொண்ட மற்ருேர் ஒற்றனையும் வாணிக உருவினன் அவ்வுருக்கொண்ட மற்ருேர் ஒற்றரையும் அவ்வண்ணமே ஏனைய உருவினரும் அவ்வவ் வுருக்கொண்ட ஒற்றரையும் ஒற்றியறிதல்வேண்டும் என்பது கருத்து; அரசியல் வினைஞர் பெரும்பாலும் பொருளாசையால் அரசனுடைய பொருட்குக் கேடும் குடிகளுக்குத் துன்பமும் விளைக்கக்கூடும் என்னும் எண்ணத்தால் அவர்தம் செயல்களை நாட்டு வருவாய்த்தலைவன் நாடோறும் விழிப்புடனிருந்து மேற்கூறியவாறு ஒற்றர்களைக்கொண்டு ஒற்றியறிந்துகொள்ளல்வேண்டும் என்பதாம்.

## இரண்டாம் அதிகரணம்—தொழிற்றலைவர் செயன்முறை

## முப்பத்தெட்டாம் பிரகரணம்—[1]நகரத்தலைவன்செயல்

## ஐம்பத்தேழாம் அத்தியாயம்

[2]நாட்டுவருவாய்த் தலைவனைப்போல் நகரத்தலைவன் நகரத்தைக் கண்காணித்தல்வேண்டும். கோபன் [3]பத்துக்குடியையாதல் இருபது குடியையாதல் நாற்பது குடியையாதல் கண்காணித்தல் வேண்டும். [4]அவன் [5]அக்குடிகளிலுள்ள மகளிர் ஆடவர்களுடைய சாதி குலம் பெயர் தொழில் இவற்றால் மக்களின் தொகையையும் வரவு செலவுகளையும் அறிந்துகொள்ளல் வேண்டும்.

[6]இங்ஙனமே தானிகன் என்பான் அரணகத்து நான்கிலொரு கூற்றைக் கண்காணித்தல் வேண்டும்.

அறக்கோட்டத் தலைவர்கள் [7]பாசண்டிகளையும் வழிப்போக்கர்

---

### 57-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அரசியற்கு முற்கூறப்பட்டபடி பலவகை நெறிகளாலும் வரும் பொருள்களைப் பாதுகாத்தல் அவ்வருவாய்க்குரிய இடத்தைப் பற்றியதாகலானும் அவ்விடங்களுட் சிறந்தது தானீயமென்னும் தலைநகரம் ஆதலானும் அந்நகரப் பாதுகாப்பு இதன்கட் கூறப்படுதலானும் இஃது இவ்வதிகரணத் திறுதியில் வைக்கப்பட்டது. இதனுற் பிரகரண வியைபு புலனுதலறிக.

[2] நாட்டுவருவாய்த்தலைவன் நாட்டை நான்கு கூறுக்கிக் கோபன் தானிகன் என்னுமிவர்களைத் துணைக்கொண்டு கண்காணித்தல் போல நகரத்தலைவனும் தானீயம் என்னும் நகரத்தை நான்குகூறுக்கித் தனக்குள் கோபன் தானிகன் என்னும் இவர்களைத் துணைக்கொண்டு கண்காணித்தல் வேண்டும் என்பது.

[3] தலையாய குடிகளாயின் பத்துக்குடிகளையும் இடையாயதாயின் இருபது குடிகளையும் கடையாயதாயின் நாற்பது குடிகளையும் என்பது கருத்து.

[4] அவன்—கோபன்.

[5] அக்குடிகள்—கண்காணிப்பிற்கு உட்பட்ட குடிகள்.

[6] இங்ஙனம் பத்துக்குடிகள் முதலியவற்றிலுள்ள ஆடவர் மகளிரின் தொகை வரவு செலவுகளைக் கோபன் கண்காணித்தல் போல அரணுக்குட்பட்ட தானீயம் என்னும் நகரத்தின் நான்கில் ஒரு கூற்றிலுள்ள ஆடவர் மகளிரின் தொகைகளையும் அவர்தம் வரவுசெலவுகளையும் தானிகன் கண்காணிக்கவேண்டும் என்பது ; தானீயமென்னும் நகரத்தின் நான்கில் ஒரு கூற்றைக் கண்காணிப்பவன் தானிகன் என்று கூறப்படுவான்.

[7] பாசண்டர்—வேதத்திற்குப் புறம்பான சமயக்கொள்கையாளர்,

களையும் [8]அறிவித்துத் தங்கும்படி செய்தல்வேண்டும். [9]தந்நம்பிக்கைக்குரிய துறவிகளையும் வேதியர்களையும் (தாமே) தங்கும்படி செய்தல்வேண்டும்.

காருகர்களும் சிற்பிகளும் தம்முடைய தொழிலிடங்களில் [10]தம்மைச் சார்ந்தவர்களை இருப்பித்தல் வேண்டும். வணிகர்கள் தம்முள் [11]ஒருவரையொருவர் தந்தொழிலிடங்களில் (இருப்பித்தல் வேண்டும்). [12]காலம் இடம் இவற்றைக்கடந்து பண்டங்களை [13]விற்பவனையும் [14]தனக்குரியதல்லாததை விற்பவனையும் [15]அறிவித்தல்வேண்டும்.

கள்விற்போர் பக்குவஞ் செய்யப்பட்ட இறைச்சியை விற்போர் சோறுவிற்போர் வரைவின்மகளிர் ஆகிய இவர்கள் [16]தமக்கு அறிமுகமானவர்களை [17]இருக்கச்செய்யவேண்டும். [18]மிகையாகச் செலவுசெய்வோரையும் [19]தகாதசெயல்செய்வோரையும் [20]அறிவித்தல்வேண்டும்.

---

[8] அறிவித்தல்—கோபனுக்கென்பது.

[9] அறக்கோட்டத் தலைவர் தாமே ஆராய்ந்து அறியப்பட்ட துறவிகளையும் வேதியர்களையும் என்பது; இங்ஙனம் கூறியது அன்னார் தங்குதலாற் குற்றம் நேரின் அதற்கு அறக்கோட்டத் தலைவர்களே பொறுப்பாளிகளாவார்கள் என்பதைப் புலப்படுத்தும்.

[10] தம் நம்பிக்கைக்குரியவர்களை என்பது கருத்து.

[11] வாணிகத் தொழில்களுள் எத்தொழிலை எவன் மேற்கொண்டுள்ளானோ அத்தொழிலையுடையவனையே தன்தொழில் நிலையத்தில் இருப்பித்தல் வேண்டும் என்பது கருத்து.

[12] காலம் இடம் என்பன அரசியலாரால் விற்பதற்கு அறுதியிடப்பட்டன.

[13] விற்பவன் என்பது புதிதாக வந்தவனைக் குறிக்கும்.

[14] தான் விற்றற்குரியதல்லாத பொருளை என்பது.

[15] நகரத்தலைவனுக்கு அறிவித்தல்வேண்டும் என்பது.

[16] தமக்கு அறிமுகமாதல்— தம்மோடொத்த தொழின்முறையால் அறியப்படுதல்.

[17] தம்மிடத்தில் இருப்பித்தல்வேண்டும் என்பது.

[18] வரவிற்கு மேற்பட்டும் வரவை அறிந்துகொள்ளாமலும் செலவு செய்வோர் என்பது.

[19] தகாத செயல்—அளவின் மிகக் கட்குடித்தல் முதலியன.

[20] கோபனுக்கும் தானிகனுக்கும் அறிவிக்கவேண்டும் என்பது.

மருத்துவன், [21]மறைவாகப் புண்ணிற்கு மருத்துவஞ் செய்து கொள்பவனையும் வீட்டுத்தலைவன், [22]கேடுவிளைக்கும் உணவுப் பொருளை [23]ஆக்குவோனையும் கோபன் தானிகன் என்னும் இவர் களுக்கு அறிவித்து [24]விடுதலைபெறக்கடவர்; [25]இன்றேல் [26]ஒத்த குற்றமுடையோராவர்[27].

[28]போனவர்களையும் [29]வந்தவர்களையும் [30]அறிவித்தல் வேண் டும். இன்றேல் [31]இரவுக்குற்றத்தை அடைவான். [32]குற்றமற்ற இரவுகளில் மூன்று பணம் தண்டம் இறுத்தல்வேண்டும்.

---

[21] மறைவாக மருத்துவஞ் செய்துகொள்ளலாவது—ஒருவன் தகாத செயலை மேற்கொண்டதனால் தனக்கு நேர்ந்த வாட்புண் முதலியவற்றைப் பிறர் கண்டால் தன் குற்றம் வெளிப்படும் என்று அஞ்சி மருத்துவனிடம் மறைவில் வைத்தியம் செய்துகொள்ளல்.

[22] கேடுவிளைக்கும் பொருள்களாவன-நோய் மரணம் முதலியவற்றைச் செய்வன.

[23] ஆக்குதல் என்பது ஈண்டு திரட்டுதல் தேடுதல்களைக் குறிக்கும்.

[24] விடுதலை பெறுதலாவது — இங்கே குறிப்பிட்ட குற்றவாளிகளை அரசியலதிகாரிகளுக்குத் தெரிவிக்குமுகமாகத் தூய்மையடைதல்.

[25] இன்றேல்—அதிகாரிகளுக்குத் தெரியாவிட்டால்.

[26] ஒத்த குற்றம்—மேற்குறிப்பிட்ட குற்றவாளிகளின் குற்றங்களோடு சமானமான் குற்றம்.

[27] இப்பகுதிக்கு மறைவாக மருத்துவஞ் செய்துகொள்வோரையும் கேடுவிளைக்கும் உணவுப்பொருளை ஆக்குவோரையும் அவர் குடியிருக்கும் வீட்டுத்தலைவனும் மருத்துவனும் கோபன் தானிகன் என்னுமிருவருக்கும் அறிவிக்கவேண்டும் என்றும் பொருள் கொள்வர்.

[28] போனவர்கள்—தம்மில்லத்திலிருந்து ஒரு காரியநிமித்தம் வேற்றிடம் சென்றவர்கள்.

[29] வந்தவர்கள்—வேற்றிடத்தினின்றும் ஒரு காரியநிமித்தம் வந்து தம் இல்லத்துட் புகுந்தவர்கள்.

[30] இல்லத்தலைவன், கோபன் தானிகன் என்னும் இவர்களுக்கு அறி விக்கவேண்டும் என்பது.

[31] இரவுக்குற்றம் — இரவில் வெளிச்சென்றவராலும் உட்புகுந்தவ ராலும் செய்யப்படும் களவு முதலிய குற்றம்; அக்குற்றம் நேரின் அதற்கு இல்லத்தலைவனும் பொறுப்பாளியாவான் என்பது கருத்து.

[32] இரவிற் களவு முதலிய குற்றங்கள் நேர்ந்தில எனினும் சென்றவர் களையும் வந்தவர்களையும் அறிவியாத குற்றத்திற்குத் தண்டம் இறுக்க வேண்டும் என்பது. குற்றம் நிகழாதபொழுதும் தண்டம் விதித்தற்குக் காரணம் நிகழ்ச்சியை அறிவிப்பதில் எப்பொழுதும் தவறலாகாதென்பது பற்றி.

[33]பெருவழிகளிலும் சிறுவழிகளிலும் செல்வோர் நகரத்தின் [34]அகத்தினும் புறத்தினும் உள்ள கோயில் புண்ணியதலம் காடு சுடுகாடு என்னும் இவற்றில் [35]புண்ணுடையவன் [36]வெறுக்கத்தக்க கருவிகளையுடையவன் மிகையான பண்டங்களையுடையவன் அச்ச முற்றவன் [37]மிகையாகத் துயில்பவன் [38]வழிச்செலவாற் களைப்புற்றவன் [39]புதியவன் ஆகிய இவர்களைப் [40]பிடித்தல்வேண்டும்.

இங்ஙனமே [41]உள்ளிடத்திலுள்ள பாழ்வீடு தொழிற்சாலை கள்விற்குமிடம் சோறுவிற்குமிடம் பக்குவஞ் செய்யப்பட்ட இறைச்சிவிற்குமிடம் சூதாடுமிடம் பாசண்டர்களிருப்பிடம் என்னும் இவ்விடங்களில் [42]ஆராய்ந்து தேடவேண்டும்.

முதுவேனிற் பருவத்தில் பகலின் நான்கு கூறுகளுள் [43]இடையிருகூறுகளில் [44]நெருப்புத் தடையைச் செய்தல்வேண்டும்.

---

33 பெரிய தெருவழிகளில் செல்லும் வாணிக வுருவினர் முதலிய ஒற்றர்களும் சிறிய புன்னில வழிகளிற் செல்லும் புல் விறகு முதலியவற்றையுடைய இடையர்உருவினர் முதலிய ஒற்றர்களும் என்பது.

34 அகநகரத்திலுள்ள கோயில் புண்ணிய தலங்களிலும் நகர்ப்புறத்தேயுள்ள காடு சுடுகாடுகளிலும் என்பது.

35 வாட்படை முதலியவற்றாலுண்டாகிய புண்ணுடையவன் என்பது.

36 வெறுக்கத்தக்க கருவிகள்—களவு முதலியவற்றிற்குப் பயன்படும் கருவிகள்.

37 இரவில் மிகுதியான அலைச்சலால் நேர்ந்த விழிப்பின் காரணமாக ஏற்பட்ட மிகுதுயில் என்பது.

38 நீண்ட வழிநடத்தல் என்பது.

39 புதியவன்—அறிமுகமில்லாதவன்.

40 மேற்குறிப்பிடப்பட்டவர்கள் குற்றவாளிகளாக இருக்கக்கூடும் என்னும் ஐயத்தினால் அவர்களைப் பிடித்து நகர்த்தலைவனிடம் சேர்க்க வேண்டும் என்பது கருத்து.

41 உள்ளிடம்—தலைநகரத்தின் அகநகரம்.

42 புண்ணுடையவன் முதலியோரை முற்கூறப்பட்ட ஒற்றர்கள் தேடிப்பிடிக்கவேண்டும் என்பது கருத்து.

43 இடையிருகூறுகள்—இரண்டாம் மூன்றும் கூறுகள்.

44 மிகுதியான தீப்பொறிகளை வெளிப்படுத்தி எரிதற்கேதுவான பெரிய அக்கினிகாரியங்களைத் தடைப்படுத்தல் வேண்டும் என்பது கருத்து. இத்தடை புல் இலை முதலியவற்றால் வேய்ந்த மேன்மூடலையுடைய இல்லம் முதலியவற்றிற்குக் கேடுவிளைக்கும் என்பதுபற்றிச் செய்யப்படுவதாம்.

[45]நெருப்பின் நிமித்தம் அரைக்காற்பணம் தண்டமாம். (இன்றியமையாதாயின்) [46]வெளியிடத்திற் பக்குவஞ்செய்யலாம்.

[47]ஐந்து நாழிகைக்குக் காற்பணம் (நெருப்புத் தண்டமாம்).

[48]குடம் [49]தொட்டி [50]ஏணி [51]கோடாலி [52]முறம் [53]தோட்டி [54]கோத்திழுக்கும் கருவி [55]தோற்பை என்னும் இக்கருவிகளை [56]வைத்திராவிடினும் (காற்பணம் தண்டமாம்).

வைக்கோல் கடப்புல் இவற்றால் வேயப்பட்ட கூரைகளை [57]அகற்றுதல் வேண்டும். [58]நெருப்பினால் தொழில் செய்வோரை

---

[45] மேலே குறிப்பிட்டபடி விலக்கப்பட்ட காலங்களில் அக்கினிகாரியம் செய்யப்படின் அரைக்காற்பணம் தண்டம் என்பது.

[46] விலக்கப்பட்ட காலங்களில் உணவு பக்குவஞ்செய்யவேண்டியது அவசியமாக நேர்ந்தால் இல்லத்தை அடுத்துள்ள மேன்மூடவில்லாத இடத்திற் செய்யலாம் என்பது கருத்து.

[47] ஐந்து நாழிகை என்பது ஒரு பகலின் நான்கு கூறுகளுள் இரண்டாங் கூற்றினிறுதியும் மூன்றாங்கூற்றின் தொடக்கமுமாகிய பன்னிரண்டரை நாழிகைக்குமேல் பதினேழரை நாழிகை வரையிலுள்ள காலத்தைக் குறிக்கும். இஃது உச்சிப்பொழுதாதலின் காற்பணம் தண்டமும் மற்றை நேரங்களாயின் அரைக்காற்பணம் தண்டமும் என அறிந்துகொள்ளல் வேண்டும்.

[48–49] நீர் நிறைந்தகுடம். நீர் நிறைந்த மரத்தொட்டி; இவ்விரண்டும் நெருப்புப்பற்றினால் அணைத்தற்கு வேண்டும் என்பது.

[50] ஏணி, உயரமான இடத்தில் நெருப்புப்பற்றினால் ஏறி அணைத்தற்கு வேண்டும் என்பது.

[51] கோடாலி, நெருப்புப்பிடித்த மரக்கட்டை முதலியவற்றைப் பிளத்தற்கு வேண்டும் என்பது.

[52] முறம், நெருப்புப்பற்றின இடத்தில் அதைத் தணிக்க முயல்வார்க்கு எதிர்ப்படும் புகை பரவாமற் றடுத்தற்கு வேண்டும் என்பது.

[53] தோட்டி—நெருப்பினாற் பற்றப்பட்ட பொருள்களை இழுத்தற் பொருட்டு மேற்கொள்ளப்படும் கருவி.

[54] நெருப்புப்பற்றிய வீட்டின் மேன்மூடலிலுள்ள புற்கற்றை முதலியவற்றைக் கோத்திழுத்தற்கு உரிய கருவி.

[55] தோற்பை என்பது நீரிறைத்தற்குரியது.

[56] இங்கே கூறப்பட்ட நீர் நிறைந்த குடம் முதலியவற்றை எப்பொழுதும் சித்தமாக வைத்திருக்கவேண்டும்; அப்படிச் செய்யாவிடின் காற்பணம் தண்டமாம் என்பது.

[57] முதுவேனிற் காலத்தில் எடுத்துவிடவேண்டும் என்பது.

[58] நெருப்பினால் தொழில் செய்வோர்—கொல்லன் கன்னான் முதலியோர்.

யெல்லாம் [59]ஓரிடத்திலேயே இருப்பித்தல் வேண்டும். வீடுகளுக் குரியவர்கள் இரவில் வெளியிடங்களுக்குச் செல்லாமல் தம் வீட்டு முகப்புவாயிலிலேயே இருத்தல்வேண்டும். தேரோடும் வீதிகளி லும் [60]சதுக்கங்களிலும் [61]வாயில்களிலும் [62]அரசனுடைய கட் டிடங்களிலும் [63]ஆயிரம் [64]குடம் [65]இருத்தல்வேண்டும்.

[66]தீப்பற்றிய வீட்டை விரைந்து அணைக்க முயலாத வீட்டுத் தலைவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [67]வாடகை கொடுத்திருப்பவனுக்கு ஆறு பணம் தண்டமாம். [68]விழிப்பின்மை யால் தீப்பற்றுமாயின் ஐம்பத்துநான்கு பணம் தண்டமாம்.

[69]தீயிட்டவன் தீயாற் கொல்லப்படுதல் வேண்டும்.

தேர்வீதிகளில் குப்பையிடின் அரைக்காற்பணம் தண்டமாம். [70]சேற்றுநீரைத் தேங்கச்செய்யின் காற்பணம் தண்டமாம். [71]அரச வீதியாயின் இருமடங்காம்.

---

[59] தீயினாற் றீங்கு நேராதபடி அமைக்கப்பட்ட அகன்ற கட்டிடத்தி லிருந்து தொழில் புரியும்படி செய்யவேண்டும் என்பது.

[60] சதுக்கம்—நான்கு தெருக்கள் கூடுமிடம்.

[61] வாயில் ஈண்டு மதில்வாயில்களை உணர்த்தும்.

[62] அரசனுடைய கட்டிடங்களாவன—நிதியறை குப்பியப் பொருட் சாலை பண்டசாலை விலைப்பண்டம்வைக்குமிடம் யானைக்கூடம் குதிரைச் சாலை முதலியன.

[63] ஆயிரம் என்பது ஈண்டுப் பன்மையைக் குறிக்கும்.

[64] குடம்—நீர் நிறைந்த குடம்.

[65] பல நீர்க்குடங்களை வைக்கவேண்டும் என்பது நெருப்பினாற் றீங்கு நேராமைப் பொருட்டு.

[66] தீப்பற்றிய வீடு யாருடையதாயினும் என்பது.

[67] வாடகை கொடுத்துக் குடியிருப்பவன் நெருப்பணைக்க முயலவில்லை யானால் பாதியளவு தண்டம் என்பது கருத்து.

[68] வீடு யாருடையதாயினும் ஒருவனது சோர்வினால் நெருப்புப்பற்று மாயின் என்பது.

[69] ஒரு வீட்டில் தீவைத்தவன் அப்பொழுதே பிடிக்கப்படுவானாயின் அவனை அத்தீயில் வீழ்த்திக் கொல்லவேண்டும் என்பது கருத்து; காலங் கடந்து பிடிக்கப்படுவானாயின் அவனுக்கும் அதுவே தண்டம் என்பது பின்னர் (4-ஆம் அதிகரணத்திற்) கூறப்படும்.

[70] தேர் வீதியில் என்பதை ஈண்டும் கூட்டுக.

[71] அரசவீதியிற் குப்பையிடினும் சேற்றுநீரைத் தேங்கச்செய்யினும் முற்கூறிய தண்டங்களின் இருமடங்கு தண்டமாம் என்பது கருத்து.

[72]புண்ணியதலம் [73]நீர்நிலை கோயில் அரசன்கட்டிடங்கள் இவற்றில் மலங்கழிப்பின் முறையே [74]ஒன்றற்கொன்று ஒவ்வொரு பணம் மிகுதியாகத் தண்டமிறுத்தல் வேண்டும். மூத்திரம்விடிற் [75]பாதியாம்.

[76]மருந்து [77]நோய் அச்சம் [78]இவை காரணமாயின் தண்டமில்லையாம்.

பூனை நாய் கீரி பாம்பு இவற்றின் பிணங்களை நகரத்தினுட் போகட்டால் மூன்று பணம் தண்டமாம். கழுதை ஒட்டகம் கோவேறுகழுதை குதிரை பசு என்னும் இவற்றின் [79]பிணங்களுக்கு ஆறு பணம் தண்டமாம். மனிதப் பிணங்களுக்கு ஐம்பது பணம் தண்டமாம்.

பிணத்தை [80]மாறுபட்ட வழியினலாதல் [81]பிணவாயில் அல்லாத வேறு வாயிலாலாதல் வெளியேற்றின் பூர்வசாகசம் தண்டமாம். [82]வாயில்காவலனுக்கு இருநூறு பணம். சுடலையல்லாத

---

[72] அரசவீதி என்பதை ஈண்டுங்கூட்டுக.

[73] நீர்நிலை—ஊருணி முதலியன.

[74] மலங்கழித்தல் அரசவீதியிலாயின் ஒருபணமும் புண்ணியதலமாயின் இரண்டு பணமும் என இங்ஙனம் முறையே ஒவ்வொரு பணம் கூட்டித் தண்டம் இறுக்கவேண்டும் என்பது.

[75] பாதி என்பது, அரசவீதியாயின் அரைப்பணமும் புண்ணிய தலமாயின் ஒருபணமும் என இங்ஙனம் முறையே அரையரைப்பணங் கூட்டித் தண்டம் இறுக்கவேண்டும் என்பதை யுணர்த்தும்.

[76] மருந்து—ஈண்டு மலக்கழிவின் பொருட்டு.

[77] நோய்—வயிற்றுப்போக்கு மூத்திரநோய் முதலியன.

[78] இவை காரணமாக அரசவீதி முதலியவற்றில் மலமூத்திரம் கழிக்க நேரின் தண்டமில்லை என்பது கருத்து.

[79] பிணங்களை நகரத்தில் போகட்டால் என்பது.

[80] மாறுபட்ட வழி—பிணத்தைக்கொண்டு போதற்கெனக் குறிக்கப் பட்ட வழியின் வேருன வழி.

[81] பிணவாயில்—பிணத்தை வெளிப்படுத்தற்கென வரையறை செய்யப் பட்ட வாயில்.

[82] வரையறை செய்யப்படாத வாயில்வழியாகப் பிணம் வெளிப்படுங்கால் தடைப்படுத்தாத வாயில்காவலனுக்கு இருநூறுபணம் தண்டம் விதிக்கவேண்டும் என்பதாம்.

பிற இடங்களில் [83]இட்டாலும் சுட்டாலும் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

இரவின் முற்பகுதி பிற்பகுதிகளில் [84]ஆறுநாழிகை விட்டு [85]யாமவாச்சியம் முழக்குதல்வேண்டும். வாச்சியவொலி கேட்கப் பட்டபின்னர் இரவின் [86]முன்பின் யாமங்களில் அரசமாளிகைக்கு அணிமையில் (வழங்குவோர்க்கு) ஒன்றேகாற்பணம் [87]அகாலதண்டமாம். [88]நள்ளியாமமாயின் [89]இருமடங்காம். [90]வெளிப்புறமாயின் நான்குமடங்காம்.

[91]இடத்தினலும் [92]அடையாளத்தாலும் [93]பழையசெயலாலும்

---

[83] இடுதல்—புதைத்தல்; குழந்தையுடல் அனாதைப்பிணம் முதலிய வற்றிற்கு இது.

[84] இரவின் முதல் யாமத்தின் முதல் ஆறு நாழிகைக்குப் பின்னரும் இறுதி யாமத்தின் பின் ஆறுநாழிகைக்கு முன்னரும் யாமவாச்சியம் முழக் குதல் வேண்டும் என்பது கருத்து.

[85] இரவில் மக்கள் வழங்குதலைத் தடைப்படுத்தற்கு ஒலிக்கப்படும் வாச் சியம் 'யாமவாச்சியம்' எனப்படும்.

[86] முதல் யாமத்தில் ஆறு நாழிகைக்குப்பின் ஏழரை நாழிகை வரை யிலும் இறுதி யாமத்தின் தொடக்கத்தில் ஒன்றரை நாழிகையளவிலும் என்பது.

[87] அகாலதண்டம்—உரியதல்லாத காலத்திற் போக்குவரவு செய்ததற்கு உரியதண்டம் என்பது.

[88] இரண்டாவதும் மூன்றுவதுமாகிய யாமங்களில் அரசமாளிகைக்கு அணிமையில் வழங்குவோர்க்கு இரண்டரைப்பணம் தண்டமாம் என்பது கருத்து.

[89] இங்கே கூறியது அகநகர்க்கு என்க.

[90] நகர்க்கு வெளியே அணிமையிலுள்ள நாற்புறங்களிலும் மேற்குறிப் பிட்ட வாச்சியவொலி கேட்கப்பட்ட பின்னர் மக்கள் வழங்குவராயின் அவர்க்கு அகால தண்டமாக ஐந்து பணம் விதித்தல்வேண்டும் என்பது.

[91] இடத்தினல் ஐயுறுதல்—மற்றொருவன் வீட்டுத்தோட்டத்தில் ஒரு வன் திரிதலைக்கண்டு இவன் களவு முதலிய தகாத செயலில் தலைப்பட் டிருக்கக்கூடும் என்று சந்தேகித்தல்.

[92] அடையாளத்தால் ஐயுறல்—ஒருவன் தன் தலைமறைய முக்காடிட்டும் சுவர்நிழல் முதலியவற்றில் மறைந்திருக்கவும் கண்டால் இவனும் அத்தகை யனே என்று சந்தேகித்தல்.

[93] பழைய செயலால் ஐயுறுதல்—முன்னர்க் களவுத்தொழில் முதலிய வற்றில் தலைப்பட்டிருந்த ஒருவனை அச்செயல்பற்றிச் சந்தேகித்தல்.

ஐயுற்றுப் பிடிக்கப்பட்டவனை [94]வினவுதல் வேண்டும்.

அரசனின் இல்லங்களிற் [95]புகுந்தாலும் நகர [96]அரண்களில் ஏறினாலும் மத்தியமசாகசம் தண்டமாம்.

[97]கருவுயிர்த்தல் மருத்துவம் [98]பிணம் [99]விளக்குடன் செல்லல் [100]நகரவாச்சியம் [101]காட்சி [102]நெருப்பு இக்காரணம் உடையாரும் [103]இலச்சினையுடையாரும் [104]பிடிக்கத்தகாதவர்கள் ஆவார்கள்.

[105]வழங்குதற்குரிய இரவுகளிலும் [106]மறைந்துதிரிவோர் [107]மாறுபட்ட வேடமுடையோர் துறவிகள் தடி எறிபடை இவற்றைக் கையில் வைத்திருப்போர் இவர்கள் [108]குற்றம் நாடித் தண்டிக்கத்தக்கவர் ஆவர்.

[109]தடுக்கத்தகாதவர்களைத் தடுப்பவர்களும் தடுக்கத்தக்கவர்

---

94 வினவுதல்—நீ யார்? எங்கிருந்து வந்தாய்? யாரைச் சார்ந்தவன்? எதன்பொருட்டு இங்கே வந்தனை? என்று கேட்டல்.

95 அனுமதியின்றிப் புகுதல் என்பது.

96 அரண்—மதில் முதலியன.

97 கருவுயிர்த்தல் என்பது அங்நிலையுடையார்க்குப் பணிசெய்தலைக் குறிக்கும்.

98 பிணத்தை வெளியேற்றல் காரணம் என்பது.

99 விளக்கொளியில் தன்னை வெளிப்படுத்திக்கொண்டு செல்லுதல் காரணம் என்பது.

100 நகரத்து மக்கள் அறிந்துகொள்ளுதற்கு யாமங்களில் முழக்கப்படும் வாச்சியவொலி காரணம் என்பது.

101 அரசன் கட்டளைப்படி நடக்கும் நாடகம் முதலியவற்றைக் காண்டல் காரணம் என்பது.

102 யார்வீட்டில் நெருப்புப் பற்றினாலும் அதனை அணைக்கச்செல்லுதல் காரணம் என்பது.

103 அமைச்சன் நகரத்தலைவன் முதலியோருடைய முத்திரைகொண்டு செல்வோரும் என்பது.

104 இரவில் அகாலத்திலும் பிடிக்கத்தகாதவர் என்பது கருத்து.

105 வழங்குதற்குரிய இரவுகள்—எல்லா மக்களும் சஞ்சரித்தற்குரிய திருவிழாநாட்களின் இராக்காலங்கள்.

106 மறைதல்—முக்காடு முதலியவற்றாலாவது.

107 மாறுபட்ட வேடம் — ஆண் பெண்ணுருக்கோடலும் பெண் ஆணுருக்கோடலுமாம்.

108 ஆராய்ந்து குற்றங் காணப்படின் என்பது.

109 தடுக்கத்தகாதவர்கள்—கட்டளைபெற்று அகாலத்தில் போக்குவரவு செய்வோர்.

களைத் தடாதவர்களுமாகிய [110]காவலர்களுக்கு அகாலதண்டத்தின் [111]இருமடங்கு தண்டமாம்.

பணிப்பெண்ணை வலிந்து புணர்பவனுக்குப் பூர்வசாகசம் தண்டமாம். [112]பணிப்பெண்ணல்லாத பெண்டிரையாயின் மத்தியமசாகசம் தண்டமாம். [113]உரிமைகொண்ட மகளிரையாயின் உத்தமசாகசம் தண்டமாம். குலமகளிரையாயின் [114]கொலைத் தண்டமாம்.

அறிவுடைப்பொருள் அறிவில்பொருள்களால் ஏற்பட்ட [115]இரவுக்கேட்டை [116]அறிவியாதவனும் [117]விழிப்பில்லாதவனும் ஆகிய நகரக்காவலனுக்குக் கேட்டிற்குத்தகத் தண்டமாம்.

நீர்நிலை வழி நிலம் சுருங்கைவழி [118]துணைமதில் மதில் (ஏனைய) [119]அரண்கள் இவற்றைக் கண்காணித்தலும் [120]இழக்கப்பட்டன [121]மறக்கப்பட்டன [122]அகன்றன இவற்றை [123]ஓம்புதலும் இன்றியமையாக் கடமைகளாம்.

[124]பிறந்தநாளினும் [125]நிறையுவாக்களினும் சிறார் மூப்பினர்

---

[110] காவலர்—நகரப் பாதுகாப்பாளர்.

[111] இரண்டரைப்பணம் தண்டம் என்பது.

[112] பணிப்பெண் அல்லாதவர்—விலைமாதர்.

[113] பணிப்பெண்ணாயினும் கணிகையாயினும் ஒருவனால் தனக்குரிய மனைவியாகக் கொள்ளப்பட்டவள்.

[114] ஈண்டுக்கூறிய பணிப்பெண் முதலியோரை வலிந்துபுணரும் நகரக் காவலர்க்கு இத்தண்டங்கள் விதிக்கப்பட்டன என்பது.

[115] இராப்பொழுதில் மக்கள் விலங்கு முதலிய அறிவுடைப் பொருள் களாலும் காற்று மழை முதலியவற்றாலும் நேருந் தீங்கென்பது.

[116] அறிவித்தல், மேலதிகாரிகளுக்கென்பது.

[117] விழிப்பின்மை, கட்குடி முதலியவற்றால் நேருவது.

[118] துணைமதில்—மதிலுக்கு ஆதாரமாகவுள்ளது.

[119] அகழி முதலியன.

[120] ஒருவன் இழந்த அணிகலன் முதலியன என்பது.

[121] ஒருவன் மறந்துவிட்ட பொருள்கள்.

[122] அகன்றன — ஒருவனுக் குரியனவாயிருந்து தாமே நீங்கின பசு முதலியன.

[123] நீர்நிலை முதலியவற்றைப் பழுதுபடாமற் பாதுகாத்தலும் இழக்கப் பட்டன முதலியவற்றை உரியவர்களிடம் சேர்ப்பித்தலும் வேண்டும் என்பது.

[124] பிறந்தநாள் என்பது ஆண்டுதோறும் அரசன் பிறந்த நாளில் நிகழும் விழாவைக் குறிக்கும்.

[125] நிறையுவா—பௌர்ணமி.

நோயாளர் ஆதரவற்ருேர் ஆகிய இவர்களுக்குச் சிறைவீடு செய்ய லாம். [126]அறவோர் [127]உடன்படிக்கைக்குட்பட்டுக் குற்றத்திற் கீடாக விடுதலைப்பொருள் [128]கொடுக்கலாம்.

## சுலோகங்கள்

(1) சிறைப்பட்டவர்களை நாடோறுமாதல் ஐந்துநாட்கு ஒரு முறையாதல் [129]தொழிலாலும் [130]உடற்றண்டத்தாலும் [131]பொருட் பேற்றருளாலும் [132]குற்றஈடு [133]செய்தல்வேண்டும்.

(2) [134]புதியநாட்டைக் கைக்கொள்ளும் காலத்தினும் இள வரசன் முடிசூட்டுவிழாக் காலத்தினும் [135]மகப்பேறெய்திய காலத் தினும் சிறைவீடு செய்தல்வேண்டும்.

இரண்டாம் அதிகரணம் முப்பத்தெட்டாம் பிரகரணம்
“நகரத்தலைவன் செயல்” என்னும் ஐம்பத்தேழாம்
அத்தியாயம் முற்றிற்று.

“தொழிற்றலைவர்செயன்முறை” என்னும்
இரண்டாம் அதிகரணம் முற்றிற்று.

---

[126] அறவோர் என்பது ஈண்டு எதிர்பாராத நிலையில் நேர்ந்த மாறு பட்ட செயலால் சிறைப்பட்ட நல்லோரைக் குறிக்கும்.

[127] உடன்படிக்கை—நேர்ந்த குற்றத்திற்குத் தக்க பொருளைத் தண்ட மாகக் கொடுத்தால் சிறைவீடு பெறலாம் என்னும் நிபந்தனை.

[128] கொடுத்துச் சிறைவீடு பெறலாம் என்பது கருத்து.

[129] தொழில்—சுமையெடுத்தல் வண்டி இழுத்தல் முதலியன.

[130] உடற்றண்டம்—கசையடி முதலியன.

[131] பொருளைப் பெற்றுக்கொண்டு தயைசெய்தல் என்பது. இது சிறைப்பட்ட நல்லோர்க்கு.

[132] சிறைப்பட்டவர்களின் குற்றங்களுக்குத் தக மேற்குறிப்பிட்டபடி நாடோறுமாதல் ஐந்துநாட் கொருமுறையாதல் தொழில்செய்தல் முதலிய வற்ருல் குற்றநீக்கத்திற்கு ஈடுசெய்துகொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[133] இச்சுலோகத்தின் முற்பாதிக்குச் சிறைப்பட்டவர்கள் உடல்நல முடையரா? அல்லது நோய்வாய்ப்பட்டவரா? என்று நாடோறுமாதல் ஐந்துநாட் கொருமுறையாதல் பரிசோதித்தல் வேண்டுமென்று பொருள் கூறுவாருமுளர்.

[134] பகை வென்றமையால் கிடைத்த புதிய நாடென்பது.

[135] அரசன் மகப்பேறெய்திய காலத்தில் என்பது.

# மூன்றும் அதிகாரணம்—[1]அறநிலையாட்சி

## முதற்பிரகாரணம்—[2]வழக்கியல்நிறுத்தல்

## இரண்டாம் பிரகாரணம்—வழக்குரைவரைதல்

## ஐம்பத்தெட்டாம் அத்தியாயம்

---

### 58-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] முன்னைய இரண்டு அதிகரணங்களுள் முறையே 'பயிற்சிபகர்தல்' என்பதில் அரசனும் வினைசெய்வாரும் கற்கவேண்டிய நூல்களைப்பற்றியும், கற்கும் முறைமையும், 'தொழிற்றலைவர் செயன்முறை' என்பதில் அங்ஙனம் கற்ற அரசியல்வினைஞர் தாம் மேற்கொள்ளும் காரியங்களை எப்படிச் செய்வேண்டும் என்பதும் கூறப்பட்டன. இங்ஙனங் கூறுமுகமாக அரசியலுறுப்புக்களின் அமைப்புக்களும் புலப்படுத்தப்பட்டன. இனி கல்வி நிருவாகம் முதலியவற்றையும் அரசியலுறுப்புக்களையும் உடைய அரசன் வருணச்சிரமதருமம் முதலியவற்றைப் பாதுகாக்குமுகமாக மேற்கொள்ள வேண்டிய அரசியலறத்தைக் கூறத் தொடங்குகின்றார். இதனால் அதிகரண இயைபுண்மை புலனாதலறிக. அறம்—வருணச்சிரமதருமம் முதலியன. அறநிலை என்பது ஈண்டு அறத்தின் வழிநிற்றல்; அதனை அறிந்துகோடலும் அதனைப் பின்பற்றி யொழுகுதலுமாம். ஆட்சியாவது—மக்களை அறத்தினின்றும் வழுவாதொழுகச் செய்தலும் அங்ஙனம் வழுவாதொழுகுவார்க்குத் தீங்குகள் நேராமற் பாதுகாத்தலுமாம். முதலதிகரணம் பத்தாம் அத்தியாயத்தில் 'அறவுபதையால் தூய்மையுடையோரை அறச்செயல்களிலும், சிறுபகைகளைதல் முதலியவற்றிலும் நியமித்தல்வேண்டும்' என்றும், பத்தொன்பதாம் அத்தியாயத்தில் 'ஒருபகலை எண்கூறுபடுத்து இரண்டாங் கூற்றில் நாடுநகரங்களிலுள்ள குடிமக்களின் செயல்களைக் கண்காணித்தல் வேண்டும்' என்றும் கூறப்பட்டன. அவ்வதிகாரியாவார் யாவர்? எத்துணையர்? எவ்வெவ்விடங்களில் அவர்கள் இருந்து செயலாற்றல் வேண்டும்? என்பனபற்றி இவ்வதிகரணத்திற் கூறத் தொடங்குகின்றார்.

[2] வழக்கு—மணம், தாயபாகம், முதலியவற்றைப்பற்றிப் பன்னிரண்டு வகைகளாகப் பின்னர்க் கூறப்படுவது; அவ்வழக்கியலை நிறுத்தலாவது :— அவ்வழக்குக்களில் எத்தகைய வழக்குக்கள் ஏற்று நடத்தற்பாலன? எத்தகைய வழக்குக்கள் ஏலாது விலக்கற்பாலன? என்பதை வரையறுத்தல். நாட்டின்கண் மக்கள்பால் நிகழும் வழக்குக்களைத் தீர்த்து முறைசெய்தல் அரசன்கடமைகளுள் முதன்மையானதாகலானும், அவ்வழக்குக்களின் இயலறிந்தாலன்றி அதனையறிந்து தீர்த்தல் இயலாதாகலானும் 'அறநிலையாட்சி' என்னும் இவ்வதிகரணத்தின் தொடக்கத்தில் 'வழக்கியல் நிறுத்தல்' என்னும் இப்பிரகரணமும் இதனுடன் பெரிதும் தொடர்புடைமையின் இதனையடுத்து 'வழக்குரை வரைதல்' என்னும் என்னும் பிரகரணமும் வைக்கப்பட்டன. இவ்வாற்றால் இவ்வத்தியாயம்

[3]அறங்கூறவையத்தார் [4]நாட்டின் எல்லை [5]சங்கிரகணம் [6]துரோணமுகம் [7]தானீயம் என்னும் இவ்விடங்களில் [8]மூவர் மூவராகக் கூடியிருந்து வழக்கைப்பற்றிய காரியங்களை நடத்துதல் வேண்டும்.

[9]மறைவுபட்டது வீட்டினுள் நிகழ்ந்தது இரவில் நிகழ்ந்தது

---

இரண்டு பிரகரணங்களைக் கொண்டதாயிற்று. இனி வழக்குக்கள் நடத்துவதற்குத் தானீயம் முதலிய நகரங்களே இடமாதலின் நகரத்தலைவன் செயன்முறையின்பின் அந்நகரத்தில் நிகழ்தற்பாலவாகிய வழக்குக்களைப்பற்றிக் கூறுதல் முறையாதலின், மேலைப்பிரகரணத்தோடு இப்பிரகரணங்களுக்குள்ள இயைபு புலனுதலறிக.

[3] அறங்கூறவையத்தார் — அறவுபதையால் ஆராயப்பட்டு வழக்கு ஆராயும் தொழிலில் அரசனால் நியமிக்கப்பட்டவர்.

[4] நாட்டின் எல்லை—இரண்டு நாடுகள் ஒன்றுகூடும் சந்தி.

[5] சங்கிரகணம்—பத்து ஊர்களைத் தன்னுட்கொண்டு நடுவண் அமைந்த பேரூர்.

[6] துரோணமுகம்—நானூறு ஊர்களைத் தன்னுட்கொண்டு நடுவண் அமைந்த பேரூர்.

[7] தானீயம் — எண்ணூறு ஊர்களைத் தன்னுட்கொண்டு நடுவண் அமைந்த தலைநகரம். நாட்டின் எல்லை முதலிய இவற்றின் இயல்பை இரண்டாம் அதிகரணம் 'நாடமைத்தல்' (அத். 22) என்னும் பிரகரணத்திற் காண்க.

[8] மூவர் மூவராக—நாட்டின் எல்லை முதலிய நான்கிடங்களினும் தனித்தனி மூன்று மூன்று பேராக.

[9] இனி ஏற்றுக்கொள்ளாமல் விலக்கற்பாலனவாகிய வழக்குக்களைக் கூறுகின்றார். மறைவுபட்டது என்பது மறைவாகக் கொடுக்கப்பட்டதும் கொள்ளப்பட்டதுமாகிய பொருள்களைப்பற்றி நிகழும் வழக்குக்களைக் குறிக்கும். அவை தலைவன் மறைவு, இடம் மறைவு, காலமறைவு, தொழில் மறைவு, பொருள் மறைவு முதலியவாகப் பலவகைப்படும். இவற்றுள் தலைவன்மறைவு என்பது ஒரு தலைவனுடைய பொருளை அவன் அநுமதியின்றிப் பிறனொருவன் மறைவிற் பயன்படுத்திக்கொள்ளுதலைப் பற்றிய வழக்காகும். இடமறைவு என்பது காணுத ஒருவனைச் சான்றுகக்கொண்டு நிகழும் வழக்கென்பதாம். காலமறைவு என்பது காலவரையறையைக் கடந்தனவாகிய கடன்கோடல் முதலியவற்றைப்பற்றிய வழக்காம். தொழில்மறைவு என்பது ஒருவன் வேற்றுநாட்டிலிருக்குங்கால் அவனைப் பிரமாண பத்திரத்தில் குறிக்கப்பட்டவனுகக் கொண்டு கடன் கேட்டலைப் பற்றிய வழக்கென்பதாம். பொருள்மறைவு என்பது நேரிற் காணப்படாத நிலையில் இயங்கியற் பொருள்களை விற்றல் கோடல்களைப்பற்றிய வழக்கென்பதாம்.

காட்டில் நிகழ்ந்தது [10]வஞ்சத்தால் நிகழ்ந்தது [11]மறைவில் நிகழ்ந்தது ஆகிய இவ்வழக்குக்களை [12]விலக்கிவிடுதல் வேண்டும். [13]தொடுப்போர் தொடுப்பிப்போர்களுக்குப் பூர்வசாகசம் தண்டமாம். [14]கேட்போருக்குத் தனித்தனிப் [15]பாதி தண்டமாம். [16]வஞ்சகரல்லராயின் [17]பொருளிழத்தல் [18]அளவில் அமையும்.

[19]மறைவாக ஈடுவைத்துக் கடன்கொண்டது [20]தடைகூறத்

---

[10] வஞ்சத்தால் நிகழ்ந்தது—ஒருவனை ஏமாற்றிக் கடன்பத்திரத்தில் கையெழுத்திடச் செய்தல் முதலியனபற்றி நிகழும் வழக்காகும்.

[11] மறைவில் நிகழ்ந்தது—கொடுத்தவனும் வாங்கினவனும் தவிர ஏனையோரால் அறியப்படாமல் நிகழ்ந்ததுபற்றிய வழக்கு.

[12] ஈண்டுக் கூறப்பட்ட வழக்குக்களைக் கொணரும்பொழுதே ஏற்றுக் கொள்ளாமல் விலக்கிவிடவேண்டும் என்பது கருத்து. ஏற்றுக்கொண்ட பின்னர் இவ்வழக்கு விலக்கற்பாலது என்று அறிந்தால் அப்பொழுதே விலக்கிவிடல் வேண்டும் என்பதுங் கொள்க.

[13] தொடுப்போர் தொடுப்பிப்போர் என்பன ஈண்டு முறையே விலக்கற்பால வழக்குக்களைத் தொடுக்கும் வழக்காளிகளையும் அங்ஙனம் தொடுக்கும்படி தூண்டினோரையும் குறிக்கும்.

[14] கேட்போர் என்றது அறங்கூறுவோரை என்க.

[15] பாதி—பூர்வசாகச தண்டத்தின் அளவிற்பாதி. விலக்கற்பாலனவாகிய வழக்குக்களை ஏற்று நடத்தும் அறங்கூறுவோரும் தண்டம் இறுக்க வேண்டும் என்பது கருத்து.

[16] விலக்கற்பாலதாகிய வழக்கினை அறியாது மேற்கொண்டு நடத்தினவர் வஞ்சகமற்ற நல்லோராயின் என்பது.

[17] பொருள்—ஈண்டு அவ்வழக்கு வென்றக்கால் கிடைக்கக்கூடியது.

[18] அப்பொருளிழவே அவர்களுக்குத் தண்டமாக அமையும்; வேறு தண்டம் விதித்தல் வேண்டா என்பது.

[19] இனி மேற்கூறியவற்றிற்குச் சில புறனடைவிதிகள் கூறுகின்றார். மறைவாக ஈடுவைத்துக் கடன் கொள்ளலாவது—ஈடாகக் குறித்த வீடு, தோட்டம் முதலியவற்றைக் கண்கூடாகக் காட்டாமல் ஈடாகவைத்துக் கடன் கொள்ளுதலாம்.

[20] இன்னானுடைய பொருளை இன்னான் கொடுக்கல்வாங்கல்செய்தல் குற்றமாகாது என்று உலகத்தாரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்கு என்பது கருத்து. ஒரு பொருளுள்ளானுக்கு உலகத்தவரால் அறியப்பட்டு அமைந்த செயலாளனை ஈண்டுக் குறிக்கும்.

தகாதது ஆகிய இவை [21]மறைவுபட்டனவாயினும் ஏற்று நடத்தற்பாலன.

[22]தாயம் [23]ஒப்புவித்தல் [24]அடைக்கலம் [25]திருமணம் இவற்றைப் பற்றினவும் [26]வெளிச்செல்லும் இயல்பினரல்லாத மகளிர் [27]மயக்கமில்லாத அறிவுடைய பிணியாளர் இவர்களுடையனவுமாகிய வழக்குக்கள் வீட்டினுள் நிகழ்ந்தனவாயினும் நடத்தற்பாலனவாம்.

[28]கொள்ளை [29]உட்புகுத்தல் [30]பூசல் திருமணம் [31]அரசன்ஆணை இவற்றால் நேர்ந்தனவும் [32]முன்னிரவில் தொழில்செய்வோருடையனவும் ஆகிய வழக்குக்கள் இரவில் நிகழ்ந்தனவாயினும் நடத்தற்பாலன.

---

[21] முன்னது பொருள்மறைவினும் பின்னது தலைவன்மறைவினும் அடங்குமென்பது கருத்து.

[22] ஞாதியர் தம்முள் தாயப்பொருளைப் பிரித்துக்கோடல் பற்றிய வழக்கென்பது கருத்து.

[23] ஒப்புவித்தல்—அணிகலன் முதலியன செய்தற்பொருட்டுப் பொன் முதலியவற்றைக் கொடுத்தல்; ஒரு பேழையுள் அடங்கிய பொருள்களின் வடிவம், அளவு முதலியவற்றைக் கண்கூடாகக் காட்டி அப்பேழையை ஒப்புவித்தலுமாம்.

[24] பேழையுள் இருக்கும் பொருள்களை இன்னவென்று கூறாமல் பேழையை இலச்சினையிட்டு ஒப்புவித்தலைப்பற்றிய வழக்கு என்பது.

[25] திருமணம் என்பது சீதனம் முதலியவற்றைப் பற்றிய வழக்குக்களைக் குறிக்கும்.

[26] வீட்டைவிட்டு வெளியிற் செல்லாத வழக்கத்தை இயல்பாகவுடைய குலமகளிர் என்பது.

[27] இதனால் அறிவுமயங்கிய பிணியாளர் வழக்குக்கள் நடத்தற்பாலன அல்ல என்பது போதரும். இவை வீட்டினுள் நிகழ்ந்ததன்பாற்படும்.

[28] கொள்ளை—பிறர்பொருளை வலிந்து கவர்தல்.

[29] உட்புகுத்தல்—பிறர்பொருளை மறைவாகக் கவர்ந்து தன் வீட்டினுட் சேர்த்தல்.

[30] பூசல்—கடுஞ்சொல் முதலியவற்றால் ஏற்படும் கலகம்.

[31] அரசன்ஆணை என்பது ஈண்டு அரசனுடைய கட்டளைபெற்று நகரத்தைக் காவல் செய்வோரின் தொழிலைக் குறிக்கும்.

[32] முன்னிரவில் தொழில் செய்வோர்—கணிகையர், கள்விற்போர் முதலியோர்.

வணிகர் ஆயர் [33]துறவோர் வேட்டுவர் [34]ஒற்றர் ஆகிய இவர்களுள் காட்டில் வழங்குவோருடைய வழக்குக்கள் காட்டில் நிகழ்ந்தனவாயினும் நடத்தற்பாலன.

வஞ்சத்தால் நிகழ்ந்துழியும் [35]கரந்தொழுகுவோர்களைப் பற்றியதாயின் நடத்தற்பாலதாம்.

மறைவில் நிகழ்ந்ததாயினும் [36]களவுமணம் பற்றியதாயின் நடத்தற்பாலதாம்.

[37]இவற்றின் வேறுயவற்றை நடத்துதல் ஆகாது.

[38]சுதந்தரமின்றித் [39]தந்தையின் வயப்பட்ட மகன் [40]மகன்வயப்பட்ட தந்தை [41]குலத்தின் விலக்கப்பட்ட சகோதரன் [42]தாயபாகம்

---

[33] துறவோர்—துறவற நெறியில் ஒழுகுவோர்; காட்டில் மனைவியோடிருந்து நோன்பியற்றும் வானப்பிரத்தர்களைக் குறிக்கும்.

[34] ஒற்றர்—மறைந்து திரிவோர்.

[35] கரந்தொழுகுதல்—தாழ்ந்த பொருள்களை உயர்ந்த பொருள் எனக் காட்டி ஏமாற்றுதல். தாழ்ந்த செம்பு முதலியவற்றைப் பொன் முதலியனவாகக் காட்டி ஏமாற்றுதல் என்பது கருத்து.

[36] களவுமணம்—கந்தருவமணம். தலைவனும் தலைவியும் பிறரறியாவாறு தம்முள் மணந்துகோடலே கந்தருவமணம். அத்திருமணம் செய்துகொண்டோர் அதுபற்றிக் கொண்டுவரும் வழக்கு ஏற்று நடத்தற்பாலது என்பது கருத்து.

[37] இவற்றின் வேறுயவை—ஈண்டுக் கூறப்பட்ட சிறப்புவிதியில் அடங்காத மறைவுபட்டன முதலிய வழக்குக்கள். இத்தகைய வழக்குக்களை நடத்தலாகாது என்பதை வலியுறுத்தற் பொருட்டு அநுவதித்தார்.

[38] சுதந்தரமின்மையைப் பின் குறிக்கப்பட்டோர்க்கும் ஏற்றபெற்றி கொள்க.

[39] வழக்கு நடத்தும் தகுதியுடைய தந்தையின் அடங்கிய மைந்தன் என்பதாம்.

[40] வழக்கு நடத்தும் தகுதி மகனிடத்து உளதாக வழக்கியற்பருவம் கடந்த தந்தை என்பதாம்.

[41] இழிசெயல்களால் குலத்தினின்றும் விலக்கப்பட்ட சகோதரன் என்பது.

[42] தாயப்பொருளைப் பாகஞ் செய்துகொள்ளாத நிலையில் தமையன் தலைமையின் கீழடங்கிய இளைய சகோதரன் என்பது கருத்து.

பெருத தம்பி [43]கணவனையாதல் மகனையாதலுடைய பெண் [44]அடிமையாளன் [45]ஈடுபடுத்தப்பட்டோன் [46]வழக்கியல்பருவம் அடையாதவன் [47]வழக்கியல்பருவம் கடந்தவன் [48]பதிதன் துறவி [49]உறுப்பறை [50]விதனமுடையோன் ஆகிய இவர்கள் தொடுக்கும் வழக்குக்கள் [51]அதிகாரவுரிமைபெற்ற வழக்குக்கள் அல்லாத விடத்து நடத்தற்பாலன அல்லவாம்.

[52]அதிகாரவுரிமை பெற்றவற்றுள்ளும் [53]பெருஞ்சினமுடை

---

[43] குடும்பத்தைப் போற்றும் திறமையுடைய கணவனையாதல் மகனையாதல் உடையவள் என்பது கருத்து.

[44] அடிமையாளன்—பரம்பரையாக அடிமைத்தொழில் புரிவோன்.

[45] ஈடுபடுத்தப்பட்டோன் — பொருளுக்கு ஈடாக அடிமைப்பட்டுத் தொழில்புரிவோன். இவர்கள் அனைவரும் சார்புடையோர் என்பது கருத்து.

[46] வழக்கியல்பருவம் அடையாதவன் — வழக்குத் தொடுத்தற்கேற்ற பதினாட்டைப் பருவத்தை அடையாத இளைஞன்.

[47] வழக்கியல்பருவங் கடந்தவன்—எழுபதாண்டு கடந்தவன். எனவே பதினாண்டிற்கும் எழுபதியாண்டிற்கும் இடைப்பட்ட வயதுடையோர் அனைவரும் வழக்கு நடத்தும் தகுதி வாய்ந்தவர் என்பது பெற்றாம்.

[48] பதிதன்—மாபாதகங்களைச் செய்வோன்.

[49] உறுப்பறை—ஈண்டு ஊமை செவிடர் குருடர் முதலியோரைக் குறிக்கும். கால் கை குறைந்தோர் வழக்குநடத்துதல் கூடாதென்பது பொருந்தாமையின் என்க.

[50] விதனமுடையோன்—எழுவகைப்பட்ட விதனங்களுள் ஒன்றேனும் பலவேனுமுடைய கீழ்மகன். எழுவகைப்பட்ட விதனங்களாவன :—

" வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொரு
ளீட்டங்கட் காமமோ டேழு "

என்பதாம்.

[51] ஒருவன் நடத்தவேண்டிய வழக்கை மற்றொருவன் அவனது உரிமையை ஏற்று அவன்பொருட்டு நடத்தும் வழக்கு அதிகாரவுரிமைபெற்றதாகும். ஈண்டுக் கூறப்பட்டோர் அவ்வதிகாரவுரிமைபெற்ற வழக்குக்களைக் கொண்டுவந்தால் அவற்றை ஏற்று நடத்தலாம் என்பது கருத்து. இங்ஙனம் கூறினாராயினும் இளைஞர், உறுப்பறை முதலிய சிலர் வழக்கு நடத்தல் பொருந்தாமையின் ஏற்றபெற்றி கொள்ளல்வேண்டும்.

[52] இனி அதிகாரவுரிமைபெற்று வழக்குக்களைக் கொணரவும் தகுதியற்றவரைக் கூறுகின்றார்.

[53] பெருஞ்சினமுடையோன்—சினமிகுதியால் கொலை முதலிய பெருந்தீங்குகளையும் செய்யும் இயல்புடையவன்.

யோன் [54]துயருடையவன் [55]கழிகண்ணோட்டமுடையோன் [56]பித்தன் தண்டனேயடைந்தோன் இவர்களாற் கொணரப்படும் வழக்கை நடத்துதல் கூடாது. [57]தொடுப்போர் [58]தொடுப்பிப்போர் [59]கேட்போர் ஆகிய இவர்களுக்குத் தனித்தனியே [60]முன்னர்க் கூறப்பட்ட தண்டமாம்.

[61]தத்தம் [62]மரபு [63]இடம் [64]காலம் என்னும் இவற்றைப் பற்றித் தம் செயன்முறைகளால் ஆக்கப்பட்டனவும் [65]வழக்க

---

[54] துயரமுடையவன் அதிகாரவுரிமைபெற்று வழக்குநடத்துதற்கு மனவெழுச்சி யின்மையால் இயலாதவனுவான் என்பது கருத்துப்போலும்.

[55] கழிகண்ணோட்டம்—அளவிறந்த உவகை. இதனே,

"இவறலு மாண்பிறந்த மானமு மாணு
உவகையும் ஏதம் இறைக்கு" (432)

என்னும் திருக்குறளானும், "பிறரும் சினனே காமங் கழிகண் ணோட்டம் (பதிற்றுப் பத்து பாட்டு 22) என்றிவற்றை அறந்தருதிகிரிக்கு வழியடையாகுந் தீது என்ருர்" என்னும் உரைக்குறிப்பானும் உணர்க.

[56] பித்தன்—பயித்தியம் பிடித்தவன்.

[57] தொடுப்போர்—பெருஞ்சினமுடையோன் முதலாயினேர்.

[58] தொடுப்பிப்போர் — பெருஞ்சினத்தன் முதலாயினரிடத்துத் தம் வழக்குரிமையை ஒப்புவித்துத் தொடுக்கும்படித் தூண்டினேர்.

[59] கேட்போர்—அறங்கூறுவோர் ; கேட்கப்படுவோர் எனக்கொண்டு சான்று கூறுவோரையுங் குறிக்கும் என்ப.

[60] தொடுப்போர் தொடுப்பிப்போர்களுக்குத் தனித்தனி பூர்வசாகச தண்டமும், கேட்போருக்கு அதிற் பாதி தண்டமும் ஆம் என்பது கருத்து.

[61] இதுகாறும் நடத்தக்கூடாத வழக்குக்களேக் கூறி அவற்றுள்ளும் நடத்தற்பாலன இவையெனச் சில புறனடைவிதியும் கூறினர். இனி ஈண்டுக் கூறப்படாதனவாகிய நடத்தவேண்டிய வழக்குக்களின் இயல்புகளேக் கூறத் தொடங்குகின்ருர்.

[62] மரபு—சாதி.

[63] இடம்—காடு முதலியன.

[64] காலம்—இரவு பகல் முதலியன ; ஏற்று நடத்தும் வழக்குக்களேச் சாதிக்கும் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப வுள்ளனவா என்று ஆராய்ந்து கொள்ளல் வேண்டும் என்பது கருத்து. பொதுவாகவுள்ள நீதிநூல்விதி சாதியின் வழக்கத்தாலும் இடங்களின் வேற்றுமையாலும் இராப்பகல் நிகழ்ச்சிகளாலும் ஒரோவழி வேறுபடுமாதலின் அவ்வேறுபாடு அறிந்து அவ்வவ்வழக்குக்களே நடாத்தல் வேண்டும் என்பது கருத்து.

[65] வழக்க ஒழுக்கம்—தத்தம் சாதி சமயத்திற்குரிய வழக்கங்களும் ஒழுக்கங்களும்.

ஒழுக்கங்களுக்கு ஒத்த [66]வழக்கியல் நிரம்பினவும் [67]தூயசான்றுகளை யுடையனவும் [68]உருவம் [69]இலக்கணம் [70]அளவு [71]பண்பு ஆகிய [72]இவை [73]தெளியப்பட்டனவும் ஆகிய வழக்குக்கள் அனைத்தும் நடத்தற்பாலனவாம்.

[74]கொள்ளல் [75]ஈடு இவற்றைத்தவிர ஏனைய நிகழ்ச்சிகளைப் பற்றிய பத்திரங்களுள் (காலத்தாற்) [76]பிற்பட்டதே நம்பத்தக்க தாம்.

---

[66] வழக்கியல் நிரம்பலாவது — பகலில் நிகழ்ந்தது, பெருந்தெருவில் நிகழ்ந்தது என்பனபோலக் கூறப்படும் காலம் இடங்களின் இயைபும் வழக்காளி எதிர்வழக்காளி சான்றுகூறுவோர் ஆகிய இவர்களது ஒருங்கியைபும் முதலாய வழக்கு ஆராய்ந்து கோடற்குரிய இவ்வெல்லாம் நன்கு நிரம்பியதாக அமைதல்.

[67] சான்று:—ஒரு நிகழ்ச்சியில் கண்டறிந்தவற்றை அறங்கூறுவோர் முன்னிலையில் கூறுதல்; அச்சான்று கூறுவார்க்குரிய தூய்மையாவது, நேரில் காணாததொன்றைக் கூறுதல் முதலிய குற்றமிலராயிருத்தல்.

[68] உருவம்—வடிவம்; அது வழக்குத் தொடர்புள்ள பொருளின் வடிவத்தைக் குறிக்கும்.

[69] இலக்கணம்—வேறுபாடறிந்துகோடற்கு ஏதுவான அடையாளங்கள்.

[70] அளவு—மாடம் குன்றி முதலிய நிறுத்தலளவைகளும் மரக்கால் தூணி முதலிய முகத்தலளவைகளும் அங்குலம் சாண் முதலிய நீட்டலளவைகளும் ஒன்று பத்து முதலிய எண்ணலளவைகளுமாம்.

[71] பண்பு—வெண்மை கருமை ஒளியுடைமை முதலியன.

[72] இவை—உருவம் முதலிய இந்நான்கும்.

[73] தெளியப்பட்டன—கண்கூடாகக் காணப்பட்டன.

[74] மேலே கூறிய வழக்குக்கள் எல்லாம் பத்திரங்களை ஆதாரமாக வுடையன ஆதலால் ஒரு பொருளையே குறிப்பனவாகிய, காலத்தால் முற்பட்டதும் பிற்பட்டதுமாகிய இரண்டு பத்திரங்களுள் முரண்பாடு தோன்றுமாயின் செய்யற்பாலது யாது? என்பதை விளக்குகின்றார்; கொள்ளல் — விலை கொடுத்தாதல், தானமாகவாதல் நிலம் முதலிய பொருள்களை ஒருவன் தனக்குரியவாகக் கோடல். விற்றலும் தானமாகக் கொடுத்தலும் இதனாற் பெறப்படும்.

[75] ஈடு—ஒரு பொருளை ஒரு பொருளுக்கு ஈடாக வைத்தல்.

[76] முற்பட்டது பிற்பட்டது என மேற்கூறிய இரண்டு பத்திரங்களுள் காலத்தால் முற்பட்ட பத்திரத்தில் நிகழ்ந்துள்ள குற்றங்களைப் போக்குதற் பொருட்டே பிற்பட்ட பத்திரம் எழுதப்பட்டிருக்க வேண்டுமாகலான் அப் பிற்பட்ட பத்திரமே மேற்கொள்ளுதற் குரியது என்பதாம். இனி

[77]ஆண்டு [78]பருவம் திங்கள் [79]பக்கம் நாள் [80]கரணம் [81]இடம் [82]கடன் இவற்றையும் கடன்கொடுத்தல் கடன்கோடற் றொடர்புடைய [83]வழக்காளி எதிர்வழக்காளிகளின் நாடு ஊர் சாதி குலம் பெயர் தொழில் ஆகிய இவற்றையும் வரைந்துகொண்டு வழக்காளி எதிர்வழக்காளி ஆகிய இவர்களை வினவிய வினுக்களைப் [84]பொருளிற்கேற்ப [85]நிரலாக வரைதல் வேண்டும். வரைந்தவற்றை [86]ஆராய்தல் வேண்டும்.

---

கொள்ளல் ஈடு என்னும் இவற்றைப்பற்றிய பத்திரங்களோவெனில் இவ்விரு நிகழ்ச்சிகளுக்குமுரிய பத்திரங்கள் தோன்றியபோதே அப்பத்திரங்களால் சுட்டப்பட்ட பொருள்கள் வேறொருவன் வயமாகிவிடுகின்றன. ஆதலால் அவற்றைப்பற்றிப் பின்னர் எழுதப்படும் பத்திரங்களினும் காலத்தால் முற்பட்ட பத்திரங்களே இவ்விரு வழக்குக்களினும் வலியுடைய என்பதாம். "எல்லா வழக்குக்களிலும் பிற்பட்ட பத்திரமே வலியுடையதாகும். கொள்ளல் தானம் ஈடு இந்நிகழ்ச்சிகளில் முற்பட்டதே வலியுடையதாகும்" என்பர் யாஞ்ஞவல்கியர். இவ்வளவின் 'வழக்கியல் நிறுத்தல்' என்னும் பிரகரணம் முற்றிற்று.

[77] இனி எஞ்சிநின்ற 'வழக்குரைவரைதல்' என்னும் பிரகரணம் கூறப்படும். வழக்குரை வரைதலாவது—வழக்காளி எதிர்வழக்காளி என்னும் இவர்களுடைய மொழிகளைக் காலம் இடம் சாதி முதலிய வரிசையின் அமைத்து ஏட்டில் வரைந்து கோடலாம். ஆண்டு என்பது ஈண்டு அரசன் திருமுடி சூட்டிக்கொண்ட காலம்தொடங்கிக் கணக்கிடப்படும் அரசயாண்டெனக் கொள்க. இது சகவாண்டு போல்வது. கலியுகாதி முதலியனவுமாம்.

[78] பருவம்—கார் கூதிர் முதலியன.

[79] பக்கம்—வளர்பிறை தேய்பிறை.

[80] கரணம்—பவகரணம் முதலியன ; திதியளவிற் பாதியாகும்.

[81] இடம்—தானீயம் துரோணமுகம் முதலியன.

[82] கடன்—வட்டியின் நிமித்தம் கொடுக்கப்பட்ட பொருள்.

[83] இவனை முதனூல் 'வேதகன்' என்று கூறும்; வேதகன் என்பது அறிவிப்போன் என்னும் பொருட்டு. பிறரால் தனக்கு நேர்ந்த துன்பத்தை அறங்கூறுவோர்க்கு அறிவிப்போன் என்பது கருத்து.

[84] வினவப்பட்ட பொருள்களின் வன்மைமென்மைக்கு ஏற்ப என்பது.

[85] நிரலாக—சிறப்புள்ளனவும் இல்லனவுமாகிய மொழிகளை முறையே முன்னும் பின்னுமாக.

[86] ஆராய்தல், குறைவையும் மிகுதியையும் ஒழுங்குசெய்தற்கு என்க.

[87]எழுதிய பகுதியை விடுத்துப் பிறிதொன்றைத் தொடர்தல், [88]முன்னர்க் கூறியவற்றிற்குப் பின்னர்க் கூறுவன இயையாமை, எதிர்வழக்காளியினுடைய குற்றமற்ற மாற்றத்தைக் குற்றங்கூறி [89]வாளாவிருத்தல், [90]சான்றுகூறுவோரைக் (இத்துணையர் எனக்) கூறிப் பின்னர்க் 'காட்டுக' என்றபொழுது காட்டமாட்டாமை, [91]சான்றுகூறுவோர்குறைதல் அல்லது தகுதியில்லாதாரைச் சான்றுகாட்டுதல், [92]சான்றென ஒருவனைக்கூறி வேறொருவனைக் காட்டுதல், [93]அருகில் இருந்து சான்றுகூறுவோன் உண்மை கூறுமிடத்து அதனை மறுத்து வெளியேறுதல், சான்றுகூறுவோருடைய சொற்களால் ஏற்பட்ட முடிவை ஏலாமை, [94]பேசத்தகாத இடத்தில் சான்றுகூறுவாரோடு மறைவிற் பேசுதல் ஆகிய இவை தோல்விக்குக் காரணங்களாம்.

---

[87] இனி வழக்குக்களின் தோல்விக்குரிய காரணங்களைக் கூறுகின்றார். எழுதிக்கொடுத்த செய்தியின் ஒருபகுதியை விடுத்துப் பின்னர் வேறொரு பகுதியைத் தொடர்ந்து கூறுதல்; அவையாவன :—'என்னை இன்னான் கடுஞ்சொல்லால் வைதான்' என முன்னர் எழுதிக்கொடுத்துப் பின்னர் வாய்மொழியால் கூறும்பொழுது 'தடியாற் புடைத்தான்' என முரணைக் கூறுதல் போல்வன எனக்கொள்க.

[88] 'எனக்கு இவன் பசு பொன் கூலம் ஆகிய இவற்றைக் கொடுக்க வேண்டும்' என்று முன்னர்க்கூறிப் பின்னர் அவற்றை முழுதுங் கூறாமல் பொன் மட்டுமே கொடுக்கவேண்டும் என்று கூறுதல் போல்வன.

[89] வாளாவிருத்தல்—'இது தவறு' என்பது மாத்திரங்கூறி அதற்குக் காரணங் கூறாதிருத்தல்.

[90] சான்றுகூறுவோர் இத்துணையர் என முன் உறுதிகூறிப் பெயர்களைக் குறிப்பிடச் சொல்லியபொழுது இயலாமலிருத்தல் என்பது.

[91] நால்வர் சான்றுகூறுவோர் உளர் என்று கூறி இருவரைமட்டும் காட்டுதல்; அல்லது தன் மாமன் மைத்துனன் உடன்பிறந்தான் முதலிய சான்று கூறத் தகாதவர்களைச் சான்று கூறுவோராகக் காட்டல்.

[92] பெயரளவில் சான்றாக ஒருவனைக்கூறி மற்றொருவனைக் கொணர்தல் என்பது.

[93] தன் வழக்கிற்குச் சான்று கூறுவோன் தான் 'கண்டவற்றைக் கண்டாங்குக்கூற, அவனுரை தவறென்று கூறி மறுத்துவிட்டு வெளியே போய் விடுதல்.

[94] பேசத்தகாத இடம்—அறங்கூறவையம் முதலியன

[95]தோல்வித்தண்டம் [96]ஐந்து மடங்காகும். [97]தானே வழக்கு மொழிந்து தோல்வியெய்தின் பத்து மடங்கு தண்டமாம். [98]ஆட்கூலி [99]எட்டில் ஒருகூறும். [100]ஆற்றுணவிற்கு விலைக்கேற்பக் கொடுத்தல்வேண்டும். [101]இவ்விரண்டும் தோற்றவன் கொடுக்கக் கடவன்.

பூசல் வன்செய்கை வாணிகக்குழு ஆகிய [102]இவற்றைத் தவிர வேறுவழக்குத் தொடுக்கப்பட்டவன் [103]மாற்றுவழக்குத் தொடுத்தல் கூடாது. [104]தொடுக்கப்பட்டவனிடத்திலும் வேறுவழக்குத் தொடுத்தல் கூடாது.

தொடுத்தவன் [105]எண்ணித்துணிந்தவன் ஆகலானும் தொடுக்

---

[95] தோல்வித்தண்டம் — மேலே கூறப்பட்டபடி சான்றுகூறுவோர் காரணமாக வழக்கில் தோல்வியடைந்தவனுக்கு விதிக்கப்படும் தண்டம்.

[96] வழக்கில் வென்றால் தனக்குக் கிடைக்கும் பொருளளவின் ஐந்து மடங்கென்பது கருத்து; பின்வரும் பத்துமடங்கென்பதற்கும் இவ்வாறே கூறிக்கொள்க. வழக்கை நிகழ்ந்தபடி நடத்தாமல் கற்பித்துக்கொண்டு நடத்த முயல்வோர்க்கு இத்தண்டம் என்பது கருத்து. நிகழ்ந்தபடி நடத்திச் சான்று முதலியன வலியிழந்த காரணத்தால் தோல்வி யெய்தினார்க்கு இத்தண்டம் ஏற்படாதெனக் கொள்ளல்வேண்டும்.

[97] சான்று கூறுவோரில்லாமல் ஒருவன் தானே கற்பிதமாக வழக்கு மொழிந்து தோற்றால் என்பது கருத்து.

[98] ஆட்கூலி—வழக்கு ஆராய்வோர்பால் தொழில் செய்வோர்களுக்குக் கொடுக்கக்கடவ கூலி.

[99] எட்டில் ஒருகூறு— ஈண்டுத் தகுதிபற்றி ஒரு காருடத்தில் எட்டில் ஒரு கூறெனக் கொள்க.

[100] ஆற்றுணா—சான்று கூறுவோர் நீதிமன்றத்திற்கு அழைக்கப்பட்டு வருங்காலும் போகும்போதும் வழியிடை உண்ணும்பொருட்டுக் கொண்டு செல்லும் கட்டுச்சோறு முதலிய உணவு; இவ்வுணவுக்காகும் அரிசி முதலிய பொருள்களின் விலைக்கேற்பக் கொடுத்தல்வேண்டும் என்பது கருத்து.

[101] இவ்விரண்டும்—ஆட்கூலி, ஆற்றுணச்செலவு என்னும் இரண்டும்.

[102] இந்நிகழ்ச்சிகளில் மாற்றுவழக்குத் தொடுக்கலாம் என்பது கருத்து.

[103] மாற்றுவழக்கென்பது வழக்காளியின்பேரில் எதிர்வழக்காளி தொடுக்கும் வழக்கு.

[104] ஒருவனால் வழக்குத் தொடுக்கப்பட்டவன்பேரில் வேறொருவன் அதே அமயத்தில் வழக்குத் தொடுத்தல் கூடாது என்பது கருத்து.

[105] எண்ணித்துணிதல் — இஃது இத்தகையது, இதனை இவ்வாறு செய்துமுடித்தல் வேண்டும் என்று முன்னரே ஆராய்ந்து துணிதல்.

கப்பட்டவன் [106]அங்ஙனம் இலன் ஆகலானும் [107]தொடுக்கப்பட்டவன் விடையைக் குறித்துத் தொடுத்தவன் அன்றே மறுத்துக் கூறல்வேண்டும். இன்றேல் தோல்வியடைந்தவன் ஆவான்.

அப்பொழுதே விடைகூற முடியாத எதிர்வழக்காளிக்கு (விடைகூற) மூன்றுநாள் முதல் ஏழுநாள் வரை அவகாசம் கொடுத்தல்வேண்டும். [108]இக்காலஎல்லைக்கு [109]மேற்படின் [110]மூன்று பணமுதல் பன்னிரண்டு பணம்வரை தண்டமாம். [111]மூன்று பக்கங்களுக்குப் பின்னரும் மாற்றங்கூறுதவனுக்குத் [112]தோல்வித் தண்டம் விதித்து அவனுடைய [113]உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத கருவிகளைத்தவிர [114]ஏனைய பொருள்களிலிருந்து, வழக்கு மூலம் தொடுத்தவன்வேண்டிய பொருளை ஈடுசெய்தல் வேண்டும். [115]ஒளிந்துமறையும் எதிர்வழக்காளிக்கும் [116]இத்தண்டமேயாம்.

---

[106] அங்ஙனம் இலன்—அவ்வாறு எண்ணித் துணிந்திலன்.

[107] எதிர்வழக்காளி கூறிய விடையைத் தக்க ஏதுக்களால் மறுத்துத் தன்பக்கத்தை வலியுறுத்தற்குரிய மறுப்புரையை நாட்கடவாமல் அப்பொழுதே வழக்காளி கூறல்வேண்டும் என்பதும் அங்ஙனம் உடனே மறுத்துக் கூறவில்லையாயின் அவன் தோல்வியடைந்தவனாகக் கருதப்படுவான் என்பதும் கருத்து.

[108] இக்கால எல்லை—இவ்வெழுநாள் எல்லை.

[109] மேற்படுதலாவது—ஏழு நாட்களுக்குமேல் நாற்பத்தைந்து நாட்கள் வரையாகும்.

[110] மூன்று பணத்திற்குக் குறையாமலும், பன்னிரண்டு பணத்திற்கு மேற்படாமலும் தண்டம் ஆம் என்றது எதிர்வழக்காளி காலந்தாழ்ந்தமைக்குக் கூறும் காரணத்தின் தகுதி குறித்தாம்.

[111] மூன்று பக்கம்—நாற்பத்தைந்து நாட்கள்.

[112] தோல்வித்தண்டம்-வழக்கிடப்பட்ட பொருளளவின் ஐந்துமடங்கு விதிக்கப்படும் தண்டம்.

[113] உயிர்வாழ்தற்குரிய உழவு முதலிய தொழில்களுக்கு வேண்டிய கலப்பை மண்வெட்டி குந்தாலி முதலிய கருவிகள் என்பது கருத்து.

[114] ஏனைய பொருள்கள்—கூலமும் பொன்னும் இரும்பினாலும் மரத்தாலும் ஆக்கப்பட்ட பாண்டங்களும் அவற்றில் உள்ளனவுமாம்.

[115] வழக்காளியைக் கண்ட அளவில் ஓடி மறையும் எதிர்வழக்காளி என்பது.

[116] இத்தண்டம் — மேற்கூறப்பட்டபடி மாற்றங் கூறுதவனுக்குரிய தண்டமென்பது; வழக்காளியைக் கண்ட அளவில் ஓடி மறையும் எதிர்வழக்காளியும் மாற்றங் கூறுதவனாதலின் இத்தண்டத்திற் குரியவனாவான்;

தொடுத்தவனுக்கு [117]ஒளியும் அளவே தோல்வியாம்.

[118]இறந்தவன் அல்லது இடையூறுக்கு ஆளானவன் என்னும் இவர்கள்பொருளுக்குச் சான்றுகூறுவோரால் [119]துணியப்பட்டவர் [120]உரியர் ஆவர்.

[121]தொடுத்தவன் தண்டம் இறுத்துப் (தொடுக்கப்பட்டவனைப்) பணியாளனாக்கிக்கொள்ளலாம். அல்லது [122]அவன் விரும்பியவண்ணம் [123]ஈடுகொள்ளலும் ஆம். [124]அந்தணன்அல்லா

---

அஃதாவது ஓடி மறைந்தவன் ஏழு நாட்களுக்குமேல் நாற்பத்தைந்து நாட்களுக்குள் வெளிப்பட்டு மாற்றங் கூறுவிடில் மூன்றுபணமுதல் பன்னிரண்டு பணம் வரை தண்டமும் நாற்பத்தைந்து நாட்களுக்கு மேலும் வெளிப்பட்டு மாற்றங்கூறவில்லையானால் தோல்வித்தண்டத்துடன் தன் உடைமையிலிருந்து வழக்கின்மூலம் வாதி வேண்டிய பொருளையும் இறுத்தல்வேண்டும் என்பது கருத்து.

[117] ஒளிதல்—தொடுத்தவன் மறைந்துகொள்ளுதல்; தொடுக்கப்பட்டவனைக் காண்டலும் தொடுத்தவன் ஒளிவானாயின் அதுவே அவன் தோல்வியுற்றவன் என்பதை அறிவுறுத்தும் என்பது கருத்து.

[118] இறந்தவன் அல்லது இடையூறுடையோன் என்பன வழக்காளி எதிர்வழக்காளி ஆகிய இருவரையுங் குறிக்கும்.

[119] துணியப்பட்டவர்—இப்பொருளுக்கு உரிமையுடையோர் அல்லது இறுக்கும் கடமையுடையோர் இவர் எனச் சான்றுகூறுவோரால் குறிக்கப்பட்ட வழக்காளி எதிர்வழக்காளிகளின் மக்கள் முதலிய உறவினர்.

[120] உரியராதல்—வென்ற பொருளைப் பெறுதற்கும், தோற்றபொருளை இறுத்தற்கும் உரிமையுடையராதல்.

[121] எதிர்வழக்காளி வழக்கில் தோற்றுத் தண்டம் இறுக்க இயலாதவனாயின் அவனுக்கு விதித்த தண்டத்தை வழக்காளியே அரசியலார்க்குக் கொடுத்துவிட்டு அப்பொருளுக்கீடாகத் தோல்வியுற்றவனைத் தனக்குப் பணியாளனாக ஏற்படுத்திக்கொள்ளலாம் என்பது கருத்து.

[122] அவன்—தோல்வியுற்ற எதிர்வழக்காளி.

[123] ஈடுகொள்ளல் — வழக்காளிவிருப்பத்திற்கேற்ப எதிர்வழக்காளி தன் உறவினருள் ஒருவனைத் தனக்கு ஈடாகப்பணிசெய்ய ஏற்பாடுசெய்யின் ஏற்றுக்கொள்ளல்; வழக்காளி விரும்பினால் எதிர்வழக்காளி தனக்கு ஈடாக மற்றொருவனைப் பணிபுரியச் செய்யலாம் என்பது கருத்து.

[124] அந்தணன் என்றதனால் அரசர் முதலியோருள் தவமுடையோரையுங் கொள்ளல்வேண்டும்;

> "அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
> செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள் 30)

என்னும் பொய்யில்புலவர் பொருளுரைப்படி அறவோரைக் கொள்ளுதல் பொருத்தமாகும். அந்தணனாயின் பணிபுரிவித்துக்கொள்ளல் ஆகாதென்பது கருத்து.

தானைக் [125]காப்பிட்டுக்கொண்டு [126]பணிசெய்வித்துக் கொள்ளல் வேண்டும்.

### [127]சுலோகங்கள்

(1) இவ் [128]வரசதருமம் நால்வகைப்பட்ட [129]வருணாச்சிரமங்களையுடைய உலகியலாசாரத்தை ஓம்புமாற்றால் [130]அழியும் நிலையிலுள்ள எல்லா தருமங்களையும் செழித்தோங்கச் செய்கிறது.

(2) வழக்குப்பொருள், அறம் வியவகாரம் உலகியல் அரசன்ஆணை என்னும் இந்நான்கு கால்களையுடையதாம். [131]முன்னைய மூன்றினும் [132]பின்னையது [133]வலியுடைத்தாம்.

---

[125] காப்பு—தீமையைப் பரிகரித்தற்பொருட்டுத் தலையில் ஐயவி அப்புதல் ; ஐயவி—வெண்சிறுகடுகு.

[126] பணிசெய்வித்துக்கொள்ளல் — ஈண்டுத் தோல்வியுற்றவனையாதல் அவனுக்கு ஈடாகக் கொள்ளப்பட்டவனையாதல் பணியாளனாக்கல் ; இதனாற் கூறியது பணிபுரிபவன் வேதனமின்றித் தொழில்செய்யும் கடமை பொருதவனாகி ஏவுவோனை ஓரோவழிப் பில்லிசூனியங்களால் துன்புறுத்த முயலவுங்கூடும் ஆதலின் ஏவுவோன் தன்னைப் பாதுகாத்துக்கொள்வதில் விழிப்புடையவனாக இருக்கவேண்டும் என்பது புலப்படுத்தவாறும்; வெண்சிறு கடுகு பேய்பிசாசங்களால் நேரும் துன்பத்தைத் தடுத்துவிடும் என்பதை 'நெய்யோடையவியப்பி' (திருமுருகாற்றுப்படை அடி 228) என்பதனாலும் அறிக.

[127] வழக்குக்களை நன்கு ஆராய்ந்தறிதல் உலகநன்மைக்கு ஏற்றது என்பதைப் பின்வரும் சுலோகங்களாற் கூறுகின்றார்.

[128] அரசதருமம்—ஈண்டு அரசன் வழக்கியலை நன்கு ஆராய்ந்து நடத்துதலைக் குறிக்கும்.

[129] வருணம்—அந்தணர் முதலிய நான்கு வருணங்கள் ; ஆச்சிரமம்—பிரமசரியம் முதலிய நான்குமாம்.

[130] அறம் ஓம்பாத விடத்துத் தானே அழியும் என்பதாம்.

[131] முன்னைய மூன்று—அறம் வியவகாரம் உலகியல் ஆகிய மூன்று.

[132] பின்னையது—அரசன் ஆணை.

[133] வலியுடைத்து—முன்னைய மூன்றையும் நோக்க இதுவே மேற்பட்டு நிற்கும் ; அறம் முதலியவற்றின் இயல்பைப் பின்வரும் சுலோகத்தால் அறிக.

(3) இவற்றுள் [134]அறம் உண்மையின்கண்ணும் [135]வியவகாரம் சான்றுகூறுவோர்கண்ணும் [136]உலகநடை மக்கட்கூட்டத்தின்கண்ணும் நிலைபேறுடையனவாம். ஆணை அரசன் கட்டளையாம்.

(4) அறநெறியால் குடியோம்பும் மன்னனுடைய [137]அறக்கடமை துறக்கத்திற்கு ஏதுவாம். அங்ஙனம் காவாதவனுக்கும் பொய்த்தண்டம் விதிப்பவனுக்கும் [138]நிரயமாம்.

(5) தன் மகனேயாயினும் தன் பகைவனேயாயினும் இருபாலாரிடத்தும் ஒத்தமுறையில் குற்றத்திற்குத் தக அரசனால் விதிக்கப்பட்ட தண்டமே மண்ணுலகையும் விண்ணுலகையும் [139]புரக்கவல்லதாம்.

(6) [140]அறம் வியவகாரம் உலகநடை நான்காவதாகிய நீதி

---

[134] அறம் உண்மையில் நிலைப்பது என்றதனால் வழக்குப்பொருளின் உண்மைதெளிதலே அறம் என்பது பெறப்படும்.

[135] வழக்குப்பொருளின் துணிவு சான்றுகூறுவோர்பால் நிலைப்பது என்றதனால் சான்று ஆட்சி ஆவணம் இவ்வெல்லாவற்றாலும் துணிய வேண்டும் என்பது போதரும்.

[136] உலகநடை—நூல்களானன்றி மக்களுடைய வழக்க ஒழுக்கங்களால் அறியப்படுவது ; ஆதலால் அதற்கு நிலையிடம் மக்கட்கூட்டம் என்பது.

[137] அறக்கடமை—படைக்கலம் பயின்று உயிரோம்பல் ; தன்னால் நிகழ்வன முதலிய ஐவகைப்பயங்களும் வாராமற் காத்துக் குடியோம்பலுமாம் இதனை,

> " மாநிலங் காவலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்
> தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
> ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
> ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ "
>
> (பெரியபுராணம்-திருநகரச்சிறப்பு-செய். 36)

என்பதனாலும் அறியலாம்.

[138] நிரயம்—நரகம் ; இங்ஙனம் வழக்கை ஆராய்ந்தறிதல் மறுமைப் பயனுக்குக் காரணமாதல் கூறப்பட்டது.

[139] புரக்கவல்லது—இரண்டுலகத்தினும் இன்பத்தைத் தந்து தண்டம் விதிப்பவனைக் காப்பாற்றவல்லது என்பது கருத்து.

[140] இச்சுலோகத்தில் நன்கு ஆராய்ந்து நடத்தப்பட்ட வழக்கினால் ஏற்படும் சிறந்த இம்மைப்பயனைக் கூறுகின்றார். ஈண்டுக்கூறிய அறமுதலியன முன்னர்க்கூறிய வழக்குப்பொருளின் நான்கு பாதங்களுமாம்.

என்னும் இவற்ருல் ஆட்சிபுரிபவன் நாற்புறமும் கடலாற் சூழப் பட்ட நிலத்தை வென்றடிப்படுத்துவன்.

(7) [141]ஒரு பொருளில் அறநூலிற்கும் உலகநடைக்கும் அரசன்ஆணையும் வியவகாரமும் முரண்பட்டவிடத்து [142]அறநூலைக் கொண்டே அப்பொருளைத் துணிதல்வேண்டும்.

(8) உலகநடையோடு [143]அறநூல் முரணுமிடத்து உலக நடையே ஏற்கத்தக்கதாகும். [144]ஆண்டு அறநூற்றுணிபு [145]வலி யிழந்திருத்தலின்.

(9) [146]குற்றக்காட்சி, [147]தன்மொழி, வழக்காளி எதிர்வழக்

---

141 இதன்கண் 'முன்னைய மூன்றினும் பின்னையது வலியுடைத்தாம்' என்று முன்னர்க் கூறியதற்கு ஒரு புறனடை கூறுகின்ருர். ஒரு பொருளில்—ஒரு வழக்குப்பற்றிய பொருளில்.

142 இத்தகையவிடங்களில் அறநூலே பிரமாணமாகும்; அரசன் கட்டளையாதல் சான்று முதலியனவாதல் ஏற்கற்பாலன அல்ல என்பது கருத்து.

143 அறநூல்—மநுதருமம் முதலியன.

144 ஆண்டு—அறநூலும் உலகநடையும் மாறுபட்ட இடத்து.

145 வலியிழத்தலாவது—'தகர்ந்துகிடக்கும் அணையின் பக்கத்தில் குந்தாலியுடன் நிற்பவனைக் கண்டால் இவனே இவ்வணையைத் தகர்த்தவன் ஆதல்வேண்டும் என்று கொள்க' என அறநூல் விதித்திருந்தாலும் குந்தாலியுடன் நின்றவன் சிறுவனுக இருக்குமிடத்து 'இச்சிறுவன் இவ்வணையைத் தகர்த்திருக்க வியலாது' என்று அறியும் உலகியலறிவே அவ்விதியொடு முரணுமாயினும் கொள்ளத்தக்கதாகவின் ஈண்டு அறநூல்விதி ஆற்றல் குன்றியிருத்தல்.

146 சான்று முதலியவற்றை யல்லாமல் வழக்கைத் துணிதற்குரிய வேறு ஐந்து கருவிகள் கூறுகின்ருர்; குற்றக்காட்சியாவது—வீடு தீப்பற்றி எரியும் போது அதன் அருகில் கையில் கொள்ளியுடன் நிற்பவனைத் 'தீயிட்டவன்' என்று காணுதலும் உடம்பில் வெட்டப்பட்டுப் புதுக்குருதி நிலத்திற் சோரச் சாய்ந்துகிடப்பவனுடைய பக்கத்தில் புலராத குருதி தோய்ந்த வாளுடன் ஒருவன் நிற்பானுயின் 'இவனே வெட்டியவன்' எனக் காணுதலும் போல்வன.

147 தன்மொழி—குற்றஞ் செய்தவன், தானே செய்ததாக்கூறி ஒப்புக் கொள்ளுதல்.

காளிகளின் [148]வினவிடை ஒப்பு, [149]காரணம், [150]சூளுறவு இவை பொருளைத் துணிதற்குக் கருவிகளாம்.

(10) [151]முன்கூறியதற்குப் பின்கூறியது முரணுதல் சான்று கூறுவோரை [152]நம்பாமைக்குக் காரணம் உண்டாதல் [153]சிறைக் காவலன் கையினின்றும் தப்புதல் என்னும் இவற்றால் தோல்வி துணியப்படும்.

மூன்றும் அதிகரணம் 1—2-ஆம் பிரகரணங்கள்
'வழக்கியல் நிறுத்தல்' 'வழக்குரை வரைதல்' என்பன அடங்கிய
ஐம்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[148] 'வழியில் வண்டி யோட்டுவோன் வண்டியுருளையை யேற்றியமை யால் என்கால் முறிந்துவிட்டது' என்று ஒருவன் வழக்குக் கொணர்ந்தா னாக, எதிர்வழக்காளியை அறங்கூறுவோர் 'நீ ஏன் அங்ஙனம் செய்தாய்'? என்று வினவ அவன் அச்சத்தினால் வாய்வாளாவிருந்தான். அப்போது அறங்கூறுவோர் வழக்காளியை நோக்கி 'இவன் ஊமைகொல்' என வினவ அதற்கு மாற்றமாக வழக்காளி 'இல்லை இல்லை' இவன் வண்டி ஓட்டி வரும்போது 'ஒதுங்கிப்போ ஒதுங்கிப்போ' என வண்டியிலுள்ளார் பலர் செவியினும்பட உரத்துக் கூவினான். இப்போதுதான் ஊமைபோலக் காணப்படுகிறான், இவன் ஊமையில்லை என்றான். இம்மாற்றத்திலிருந்து எதிர்வழக்காளி தன் வண்டியின் பக்கம் வந்த வழக்காளியை ஒதுங்கிச் செல்லும்படிக் கூறினான் என்றும், இங்ஙனம் நிகழ்ந்ததற்கு வழக்காளியின் விழிப்பின்மையே காரணமாதலின், எதிர்வழக்காளி குற்றமுடையவன் அல்லன் என்றும் முடிவுசெய்தல்போல்வன ; இம்முடிவிற்கு அறங்கூறுவோரின் வினவிற்கு வழக்காளியின் விடை ஒப்பாதல் காண்க.

[149] காரணம் என்பது தகுதியான காரணங்காட்டுதல் என்பதைக் குறிக்கும். அஃதாவது :—'இவன் பிறன்மனை நயந்தான்' என ஒருவன் வழக்குத்தொடர எதிர்வழக்காளி தான் பேடியாதலை அறங்கூறுவோர் அறியக்காட்டுதல்.

[150] சூளுறவு—தெய்வம் மகவு முதலியவற்றின்பேரில் ஆணையிடுதல் ; உபலக்கணத்தால் தெய்வமுன்னிலையில் நின்று உறுதிகூறலுமாம்.

[151] இதன்கண் தோல்விக்குரிய காரணங்களைக் கூறுகின்றார் ; எங்கே உண்டாய் ? எங்கே படுத்திருந்தாய் ? என்பனபோன்ற கேள்விகளை நிகழ்த்தி அவற்றிற்கு விடையிறுக்கச் செய்யுங்கால், முன்பின் முரணுகக் கூறுதல்.

[152] நம்பாமைக்குக் காரணம் — வழக்காளிக்குச் சுற்றத்தானாகவாதல் அவன்பால் உதவிபெறும் நிலையினனாகவாதல் போல்வன.

[153] விலங்கிடுவோர் சிறைகாப்போர் முதலியோரிடத்திருந்து மறை வாகத் தப்பியோடுதல் என்பது கருத்து.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## மூன்றும் பிரகாரணம்—[1]மணவியல்—[2]மணஅறம், சீதனவிதி, பின்மணப்பொருள்

## ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம்

*மணத்தை முதலாகக்கொண்டது [3]வழக்காம்.*

---

### 59-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] பிரமம் முதலிய எண்வகைமணங்களின் இயல்பும், அவற்றைச் சார்ந்த சீதனவிதி முறைகளும், ஒருத்தியை மணஞ்செய்துகொண்ட கணவன் அவளைவிட்டு வேறு ஒருத்தியை மணஞ்செய்துகொள்ள நேர்ந்த பொழுது முதல் மனைவிக்குக் கொடுக்கவேண்டிய பொருளளவும் ஆகிய இச் செய்திகள் இப்பிரகரணத்திற் கூறப்படும். ஆதலின் இது 'மணவியல்' என்னும் பெயர்த்தாயிற்று. முன்னைய பிரகரணங்களில் வழக்குக்களைப் பற்றி மேற்கொள்ளும் முறைமை கூறப்பட்டது. இனி வழக்குக்களைக் கூறத் தொடங்குகின்றார். வழக்குநடத்தும் உரிமை இல்லறத்தார்க்கே ஆதலானும், அவ்வில்லறத்திற்கு மணம் இன்றியமையாச் சிறப்பினதாகலானும், அம் மணத்தைப்பற்றிய வழக்கே ஏனையவற்றினும் முக்கியமாதலானும், மண இயல்புகளை இப்பிரகரணத்தில் மூன்று அத்தியாயங்களாற் கூறுவான் முற்பட்டு, முதல் அத்தியாயத்தில் மண அறம், சீதனவிதி, பின் மணப்பொருள் என்னும் இவற்றின் இயல்புகளைக் கூறத் தொடங்குகின்றார். இதனால் முன்னைப் பிரகரணத்தோடு இதற்கு இயைபுண்மை புலனாதலறிக. ஈண்டுக் கடன்கோடல் முதலியவைபற்றி நிகழும் வழக்குக்களுள் யாது முன்னர்க் கூறத்தக்கது? என்று ஆராயுங்கால் 'கடன்கோடல் பற்றியதே முக்கியமாகும்' என்று மநுவும், 'நிலம், மனைபற்றியது' என்று வெள்ளியும், 'அடைக்கலப்பொருள் பற்றியது' என்று வியாழனும் கூறுவர். இல்லறத்தார்க்கே வழக்கு நடத்தும் உரிமை யுண்மையாலும், அவ்வில்லறத்திற்கு மணமே காரணமாதலானும், மண இயல்புபற்றிய வழக்கே ஏனையவற்றினும் முக்கியமாகும் எனக்கொண்டு, மண இயல்புபற்றிய பிரகரணமே முதற்கட் கூறப்பட்டதென்னுங் கருத்துடையர் கௌடலியர் என்க.

[2] மணஅறம் என்றது மணத்தின் வகைகளையும், அவற்றின் இயல்புகளையும் குறிக்கும். இவ்வத்தியாயத்தின் முதலில் இதனைத் தொடங்குகின்றார்.

[3] வழக்கு—சாதியொருமை ; எல்லா வழக்குக்களும் மணத்தை மூலமாகவுடையன என்பது முன்னர்க் கூறப்பட்டது.

பெண்ணை அலங்கரித்துத் தானம்செய்தல் [4]பிரமமணம் எனப்படும்.

[5]உடனிருந்து அறமியற்றல் பிராசாபத்தியம் எனப்படும்.

ஆவும் ஆனேறும் [6]கோடல் ஆரிடம் எனப்படும்.

---

[4] இதன் இயல்பை "........பிரமமாவது—ஒத்த கோத்திரத்தானைய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியம் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்தும் பூப்பு எய்தாமை அணி கலன் அணிந்து தானமாகக் கொடுப்பது;

> " கயலேர மருண்கண் கன்னிப் பூப்பெய்தி
> யயல்பே ரணிகலன்கள் சேர்த்தி—யியலி
> னிரவொத்த வந்தணர்க்கு நீரிற் கொடுத்தல்
> பிரமமணம் என்னும் பெயர்த்து "

(தொல்-பொரு-92-ஆம் சூத்திர உரை)

என்னும் தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் முதல் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறிய விரிவுரையானும், எடுத்துக்காட்டானும் நன் குணரலாம். ஏனைய ஏழு மணங்களும் இங்ஙனமே எடுத்துக்காட்டப்படும். அவற்றுட் பெரும்பாலன இந்நூற் கருத்தோடொத்தும் சிறுபான்மை மாறு பட்டும் வருவனவற்றை ஆராய்ந்துகொள்க.

[5] 'உடனிருந்து அறமியற்றுக' என்று கூறி மந்திரத்துடன் கன்னியைக் கொடுத்தல் என்பது கருத்து.

"பிராசாபத்தியமாவது–மகட்கோடற்குரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம் மகட்கீந்து கொடுப்பது "

> " அரிமதர் உண்கண் ஆயிழை யெய்துதற்
> குரியவன் கொடுத்த ஒண்பொரு ளிரட்டி
> திருவின் றந்தை திண்ணிதிற் சேர்த்தி
> அரியதன் கிளையோ டமைவரக் கொடுத்தல்
> பிரித லில்லாப் பிராசா பத்தியம் "

(தொல்-பொரு-சூ-92-நச்சினார்க்கினியர் உரை)

'பெற்றுக்கொண்ட பரிசத்து இரட்டி தம் மகட்கீந்து கொடுப்பது' என் னும் கருத்து இளம்பூரணர் உரையிலும் இறையனார் களவியல் உரையிலும் குறிக்கப்படவில்லை.

[6] மணமகனிடத்திருந்து ஆவும் ஆனேறும் பெற்றுக்கொண்டு பெண் ணைத் தானஞ்செய்வது ஆரிடமணம் எனப்படும் என்பது கருத்து. இனி 'ஆரிடமாவது தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச்செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும்

வேள்வியினிடையே [7]வேட்பிப்போனுக்கீதல் தெய்வம் எனப் படும்.

தலைவனும் தலைவியும் [8]தம்முள் இயைவது கந்தருவம் எனப்படும்.

---

இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற் கொடுப்பது ;

"தனக்கொத்த வொண்பொருள் தன்மகளைச் சேர்த்தி
மனைக்கொத்த மாண்புடையாற் பேணி—யினக்கொத்த
வீரிடத்தாவை நிறீஇ யிடை யீவதே
ஆரிடத்தார் கண்ட மணம்"

என்பது நச்சினார்க்கினியம்.

நச்சினார்க்கினியர் ஆவும் ஆனேறுமாகிய இரண்டன் இடை நிறீஇக் கொடுப்பதென்ற அளவிற் கூறினர். பின் அவ்விரண்டனையும் பெண்ணின் தந்தை பெற்றுக்கொள்ளவேண்டும் என்று குறிக்கவில்லை. கௌதம தரும சூத்திரம், மநு முதலிய அறநூல்களில் ஆவும் ஆனேறும் ஆகிய இரண்டனை யும் மணமகனிடத்தினின்று பெற்றுக்கொண்டு பெண்ணைக் கொடுக்க வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. இக்கொள்கையைத் தழுவி, தொல் காப்பியப் பொருளதிகாரத்து 'இன்பமும் பொருளும்' என்னும் சூத்திரத் திற்கு முதலில் உரைகண்ட இளம்பூரணர் 'ஆரிடமாவது ஒன்றுனும், இரண்டானும் ஆவும் ஆனேறும் வாங்கிக்கொடுப்பது' என்று கூறியுள் ளார். வடமொழியில் ஒருசார் அறநூலாசிரியர் மணமகனிடத்தினின்றும் ஆவும் ஆனேறும் பெற்றுக்கொண்டு, பின்னர்க் கன்னியைத் தானம் செய்யும்போது அவற்றையும் மணமகனுக்குக் கொடுத்துவிடல் வேண்டும் என்றும் கூறியுள்ளார். இக்கருத்தும் 'ஆவும் ஆனேறும் வாங்கிக் கொடுப்பது' என்னும் இளம்பூரணர் உரைத்தொடரில் அமைந்துகிடத்தல் உய்த்துணர்ந்துகொள்க. இக்கருத்துக்கேற்ப இறையனார் களவியலுரைப் பாடபேதத்தில் 'அவற்றோடு நீரிற்கொடுப்பது' என்று காணப்படுகின்றது. இவ்வுரைப்பாடம் பொருத்தமாகவுள்ளது.

[7] வேட்பிப்போன் — வேள்வித்தலைவன்பால் தக்கிணை பெற்று வேள் வியை நடத்துவிப்போன். இம்மணத்தின் இயல்பினை 'தெய்வமாவது :— பெருவேள்வி வேட்பிக்கின்றுழி பலருள் ஒத்த ஒருவற்கு அவ்வேள்வித்தீ முன்னர்த் தக்கிணையாகக் கொடுப்பது.

"நீளி நெடுநகர் நெய் பெய்து பாரித்த
வேள்வி விளங்கழன் முன்னிறீஇக்—கேள்வியாற்
கை வைத்தாம் பூணுளைக் காமுற்றுற்கீவதே
தெய்வ மணத்தார் திறம்"

(தொல்-பொரு-சூ-92-உரை)

என்னும் இவற்றானும் உணர்க.

[8] தம்முள் இயைவதாவது :—கொடுப்பாரும், அடுப்பாரும் இன்றித் தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டுத் தம்முள் மனம் ஒத்துப் புணர்வது. 'கந்தருவமாவது :—கந்தருவகுமாரரும், கன்னியரும் தம்முள்

[9]பரியம் பெறுதல் ஆசுரம் எனப்படும்.

[10]வலிதிற் கொள்வது இராக்கதம் எனப்படும்.

---

எதிர்ப்பட்டுக்கண்டு இயைந்தது போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

“ அதிர்ப்பில் பைம்பூணாரும் ஆடவரும் தம்முள்
எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப—கதிர்ப்பொனியாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்தருவர் கண்ட கலப்பு ”

(தொல்–பொரு-சூ-92–உரை)

என்பவற்றானும் ் மணத்தின் இயல்பை அறிக.

[9] ஈவோன், தனக்கும் பெண்ணிற்கும் பரியப்பொருள் பெற்றுக் கொண்டு பெண்ணை ஈதல். இதன் இயல்பை நச்சினார்க்கினியர் ‘கொல் லேறுகோடல் திரிபன்றி எய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்;

“ முகையவிழ் கோதையை முள்ளெயிற்றரி வையைத்
தகைநலம் கருதும் தருக்கினர் உளரெனின்
இவையிவை செய்தாற் கெளியன் மற்றிவளெனத்
தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித்
தன்னவை யாற்றிய வளவையிற் றயங்கல்
தொன்னிலை அசுரந் துணிந்தவாறே ”

(தொல்–பொரு–சூ-92–உரை)

என்று கூறுவர்.

கொல்லேறுகோடல் முதலிய வினைசெய்தாற்கே யன்றித் தக்க பொருள் கொடுப்பவனுக்கும் பெண்ணைக்கொடுத்தல் ஆசுரமாகும் என்பது ‘இன்னதொரு பொருள் தந்தான் இவளை யெய்தும்’ என்னும் களவிய லுரைப் பகுதியால் அறியலாம். பெறுதற்கரிய பொருள் தருதல், கொல் லேறுகோடல் முதலிய அரிய வினைசெய்தல் என்னும் இவ்விரண்டினையும் கருதியே இம்மணத்திற்குப் பெயர் ‘அரும்பொருள் வினைநிலை’ என்று பண்டைத் தமிழ்ச் சூத்திரம் ஒன்றிற் காணப்படுகின்றது.

[10] வலிதிற் பெண்ணைக் கவர்தல் இராக்கதமணம் எனப்படும் என்ற வாறு. இதனை ‘தலைமகடன்னினும் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது’;

“ மலிபொற் பைம் பூணை மாலுற்ற மைந்தர்
வலிதிற் கொண்டாள்வதே என்ப—வலிதிற்
பராக்கதம் செய்துழலும் பாழிமிர் தோள்
இராக் கதத்தார் மன்றலியல்பு ”

(தொல்–பொரு–சூ–92–உரை)

என்பவற்றானும் உணர்க.

[11]துயில்வாளை வெளவுதல் பைசாசம் என்பபடும்.

(இவற்றுள்) [12]முன்னைய நான்கும் [13]தந்தையைத் தலைமையாக வுடைமையின் [14]அறத்தின்பாற்பட்டனவாம். [15]எஞ்சியவை தாய் தந்தையர் இருவரையும் [16]தலைமையாக உடையன. என்னை?

---

[11] பெண் துயிலுங்கால் சேர்வது. இதனை 'மூத்தோர், களித்தோர், துயின்றோர் புணர்ச்சியும், இழிந்தோளை மணஞ்செய்தலும், ஆடைமாறுதலும் பிறவுமாம்.

"எச்சாக் கெளியரியைந்த காவலர்
பொச்சாப் பெய்திய பொழுது கொளமையத்து
மெய்ச்சார் பெய்திய மிகுபுகழ் நண்பின்
உச்சாவார்க்குதவாக் கேண்மை
பிசாசர் பேணிய பெருமைசால் இயல்பே".
"இடைமயக்கஞ் செய்யாவியல்பின னீங்கி
யுடைமயக்கி யுட்கறுத்தல் என்ப—உடைய
துசாவார்க்குதவாத வூனிலா யாக்கைப்
பசாசத்தார் கண்ட மணப்பேறு"

(தொல்-பொரு-சூ-92-உரை)

என்பவற்றானும் உணர்க. ஈண்டுக் கூறிய பிரமம் முதலிய எண்வகைமணங்களும் வடநூல்வழக்கு. தமிழ்நூலார் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என முத்திறப்படுத்து, முறையே ஒருதலைக்காமம், ஒத்தகாமம், ஒவ்வாக் காமம் என்பர். ஒத்தகாமம் அன்பின் ஐந்திணை என்னும் கந்தருவமணம் ஒன்றே. ஏனையவற்றுள் ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் மூன்றும் கைக்கிளையின்பாலும், பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் நான்கும் பெருந்திணையின்பாலும் அடங்கும். இதனை,

"முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே
பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே"

(தொல்-பொரு-சூ-105)

என்னும் சூத்திரத்தானுணர்க.

[12] முன்னைய நான்கும் — முன்னர்க் கூறப்பட்ட பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் இந்நான்கும்.

[13] தந்தையைத் தலைமையாக வுடைமையாவது, பெண்ணின் தந்தையினது உடன்பாடுபெற்று நிகழ்தல்.

[14] முன்னைய நான்கும் அறத்தின்பாற்பட்டன எனவே, பின்னைய நான்கும் அறத்தின்பாற்படாதன என்பது பாரிசேடத்தாற் கொள்க.

[15] எஞ்சியவை—கந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் இந்நான்கும்.

[16] ஈண்டுத் தலைவர் ஆதல் கந்தருவ முதலிய நால்வகை மணத்தினும், மகளிருடைய சீதனத்தைப் பெற்றுக்கொள்ளுதற்கு அவ்வவர் தந்தை தாயார் உரியராதல் பற்றியாம். இதனைப் பின்னுள்ள ஏதுவாக்கியத்தால் அறிக.

பெண்ணிற்குக்கொடுக்கும் [17]பரியப்பொருளைப் பெறுதற்கு அவ்விருவரும் உரியராதலின் என்க. அவ்விருவருள் ஒருவரில்லையானல் [18]மற்றொருவர் உரியர் ஆவர்.

[19]இரண்டாவது பரியம் பெண்ணுக்கே உரியதாம். [20]எல்லோரும் அன்புடைமை பற்றி (ப்பெண்ணிற்கு) அணிபவை [21]தடுத்தற்குரியனவல்ல.

[22]வாழ்விற்குரியனவும், பூணற்குரியனவும் சீதனம் ஆகும்.

---

[17] பரியப்பொருள்—கந்தருவ முதலிய நால்வகை மணங்களுள் ஆசுர மணத்தில் மணம் நிகழ்தற்கு முன்னரும், ஏனைய மூன்றிலும் மணம்நிகழ்ந்த பின்னரும் மணமகனிடத்தினின்றும் பெறும் பொருள். பிரம முதலிய நான்கு மணங்களும் கன்னியாதானமாதலின் பரியப்பொருள் பெறுதல் இல்லையென்பது.

[18] மற்றொருவர் உரியராதல்—சீதனத்தைப் பெறுதற்குத் தந்தையிறந்த பின்னர்த் தாய் உரியவள் ஆவாள், அல்லது தாய் இறந்தபின்னர்த் தந்தை உரியவன் ஆவான் என்பது கருத்து. இதுகாறும் மணஅறத்தின் இயல்பு கூறப்பட்டது. இனிச் சீதனவிதிபற்றிக் கூறத்தொடங்குகின்றார். சீதன விதியாவது, சீதனப்பொருளுக்கு உரியாரின்னாரென்பதும், அதனைச் செலவிடுமுறை முதலியனவுமாம்.

[19] மணமகளைப் பெறும்பொருட்டு அவள் தாய்தந்தையர்க்கு மணமகனால் கொடுக்கப்படும் பரியப்பொருள் முதற்பரியமாகும் என்பதும், அங்ஙனமல்லாமல் மணமகன் தன்விருப்பத்தால் மணமகளுக்குக் கொடுக்கும் பொருள் இரண்டாவது பரியமாகும் என்பதும், அப்பொருள் அப்பெண்ணுக்கேயன்றி அவள் தாய்தந்தையர்க்கு உரியதாகாது என்பதும் கருத்து.

[20] எல்லோரும் என்றது மணமகனேயன்றி மற்றை உறவினர் முதலியோரையும் குறிக்கும்.

[21] அணியப்பட்ட அணிகலன் முதலியவற்றை அப்பெண் தனக்கே உரிமையாக்கிக்கொள்ளலாம் என்பதும், அவள் உரிமை பாராட்டுங்கால் அவள்கணவன் முதலியோர் தடைசெய்தல் கூடாதென்பதும் கருத்தாம்.

[22] மணப்பெண்ணிற்குரியனவாக மேற்குறிப்பிட்ட பொருள் சீதனம் என்னும் பெயரோடு இருவகைப்படும் என்று கூறுகின்றார். சீதனம் உயிர் வாழ்தற்கு உரியனவும், அழகிற்கு அணிந்துகோடற்குரியனவும் என இருவகைப்படும் என்பதாம். அவற்றுள் உயிர்வாழ்தற்குரியன, நிலம் பொன் முதலியன ; அணிதற்குரியன, அணிகலன் ஆடை முதலியன எனக்கொள்க.

வாழ்விற்கு ஏற்படுத்தப்படும் சீதனத்தின் [23]பேரெல்லை [24]இரண்டாயிரமாகும். [25]பூணற்குரிய சீதனத்திற்கு எல்லையின்றாம்.

மனைவி தன்வாழ்வின் பொருட்டும், மகன், மருகி இவர்களைப் பேணும்பொருட்டும் [26]வேற்றிடத்திருக்குங்கால் [27]உயிர்வாழ்தற்கு வழியில்லாத நெருக்கடியிலும் [28]அதனைச் செலவிடுதல் குற்றமாகாது.

[29]தடைசெய்துகொள்ளல், நோய், வற்கடம், அச்சம் இவற்றைப் பரிகரித்தற்பொருட்டும், அறஞ்செய்தற்கும் கணவன் ([30]செலவிடுதல் குற்றமாகாது). [31]அறத்திருமணம் புரிந்துகொண்ட கணவன் மனைவியர் இருவரும் [32]இரண்டு மகவுகளைப் பெற்றவர்களாய் மூன்றாண்டுகள்வரை தாம் ஒருங்கியைந்து [33]செலவிடப்பட்டது [34]கேட்டற்குரியதன்று. கந்தருவமணமாதல் ஆசுரமண

---

23 பேரெல்லை—உயர்ந்த அளவின் முடிவு.

24 இரண்டாயிரம் காருடம் எனக்கொள்க; இவ்வளவின் மேற்படக் கூடாதென்பதாம். நிலமாயின் இரண்டாயிரம் காருடம் மதிப்புள்ளது பேரெல்லையாம் என்க.

25 அணிகலன் முதலியவற்றிற்கு அளவின்றென்பது.

26 கணவன் அயல்நாட்டிலிருக்கும்பொழுது என்பது கருத்து.

27 உயிர்வாழச் சீதனத்தையல்லாமல் வேறு நிலம், பொருள்கள் இல்லாத இடுக்கட்பொழுதில் என்பது.

28 அதனை—சீதனத்தை.

29 தடைசெய்துகொள்ளல் — 'இப்பொழுது கொடாமல் அப்புறம் செல்லலாகாது' என்றுகூறித் தடைசெய்து பொருளை வலிதிற்கொள்ளல். இது கடன்கொடுத்தோர் முதலியோரால் நேர்வது.

30 சீதனத்தைச் செலவிடுதல் குற்றமாகாதென்க.

31 அறத்திருமணம்—பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம் ஆகிய இந்நான்குமாம். எனவே இவற்றுள் யாதானும் ஒரு மணத்தை மேற்கொண்ட கணவன்மனைவியர் என்பது கருத்து.

32 இரண்டு மகவுகள் என்பதற்கு மூலம் 'மிதுனம்' என்றிருத்தலால் ஓர் ஆணும், ஒரு பெண்ணும் எனக்கொள்ளல் வேண்டும்; இரண்டு ஆண், அல்லது இரண்டு பெண் என்பாரும் உளர்.

33 செலவிடப்பட்டது—சீதனம்.

34 அச்சீதனத்தைக் கணவன் அவ்வாறு செலவிட்டால் அதனை மனைவி 'கொடு' என்று கேட்டல் கூடாதென்பதாம்.

மாதல் புரிந்துகொண்டு (மேற் கூறப்பட்ட) [35]இருவகையானும் செலவிடப்பட்டதை வட்டியுடன் [36]கொடுப்பித்தல் வேண்டும். இராக்கதமணமாதல் பைசாசமணமாதல் புரிந்துகொண்டு அநுபவ நிமித்தம் செலவிடப்பட்டதை [37]களவுகொள்ளப்பட்ட பொருளாகக் (கருதிக்) கொடுத்தல்வேண்டும்.

[38]மணஅறம் இங்ஙனமாம்.

கணவன் இறந்தபின்னர் [39]அறத்தை விரும்பும் இயல்புடையவள் அப்பொழுதே கழிக்கப்பட்ட தன் அணிகலன்களையும் [40]எஞ்சிய சீதனத்தையும் அடையக் கடவள். (அங்ஙனம்) அடைந்த பின்னர் வேறுகணவனை மணந்தாளாயின் அவ்விருவகைப் பொருளையும் வட்டியுடன் [41]கொடுக்கச் செய்யவேண்டும். [42]குடும்பத்தை விரும்புகின்றவள் [43]மறுமணக் காலத்தில் மாமன், கணவன் ஆகிய

---

[35] இருவகை—தடைசெய்துகொள்ளல் முதலியனவாகக் கூறப்பட்ட வகையும், இருவரும் ஒருங்கியைந்து மூன்றாண்டுகள் செலவிட்ட வகையுமாம்.

[36] கொடுப்பித்தலுக்கு அறங்கூறுவோர் ஏவுதற் கருத்தாவர்.

[37] இராக்கதமணம், பைசாசமணம் ஆகிய இரண்டனுள் ஒன்றாற் சேர்ந்த கணவன்மனைவியருள் மனைவிக்குரிய சீதனத்தை எவ்வாற்றானும் கணவன் செலவிடல் கூடாதென்பதும், செலவு செய்வானாயின், அப்பொருளளவு பொருளைக் களவுசெய்தவனுக்கு விதிக்கப்படும் தண்டமும் விதித்து, அப்பொருளை மனைவிக்குக் கொடுப்பித்தல் வேண்டும் என்பதும் கருத்தாகக் கொள்க.

[38] மணஅறத்தின் இயல்பு ஈண்டுக் கூறப்பட்டபடியாம் என்பது; இதற்குரிய மூலம் சீதனவிதிபற்றிய தொடக்கத்திற்கு முன் இருத்தல் வேண்டும். 18-ஆம் குறிப்பு முடிவில் காண்க.

[39] ஈண்டு அறம் என்றது கணவனுக்கும், தனக்கும் மறுமையில் நன்மையைத்தரும் கைம்மைநோன்பு முதலியவற்றையாம்.

[40] எஞ்சியது—கணவனும், தானும் ஒருங்கியைந்து அதுகாறும் செலவிட்டு எஞ்சியது.

[41] கொடுக்கச்செய்தல்—முதற் கணவனுடைய ஞாதிகளுக்குக் கொடுக்கும்படி செய்தல்; கொடுப்பித்தற்கு அறங்கூறுவோர் ஏவுதற்கருத்தா ஆவர்.

[42] குடும்பத்தை விரும்புகின்றவள் என்பதற்குக் குடும்ப விருத்தியின் பொருட்டு மகப்பேற்றைக்கருதித் தன் கொழுந்தனோடு சேர்ந்து வாழ்பவள் என்பது கருத்து.

[43] மறுமணக்காலம்—கைம்மையடைந்தவள் இவ்வளவுகாலம் சென்று மறுமணம் செய்துகொள்ளலாம் என்று வரையறை செய்யப்பட்ட காலம்.

இருவராலும் கொடுக்கப்பட்ட பொருளைப் [44]பெறுதற்கு உரிய ளாவள். மறுமணத்திற்குரிய காலம் [45]நெடும்பிரிவிற் கூறுவாம்.

[46]மாமனுடைய உடன்பாடின்றி மறுமணம் செய்துகொள்ப வள், மாமன் கணவன் ஆகிய இருவராலும் கொடுக்கப்பட்ட பொருளுக்கு உரிமையற்றவள் ஆவாள். [47]பிறனொருவனாற் கவர்ந்துகொள்ளப்பட்டவளுடைய [48]உறவினர் [49]முன்னையுறவின ரிடத்தினின்றும் பெற்ற பொருளைக் கொடுத்துவிடல்வேண்டும்.

[50]முறைப்படியே வந்தடைந்த ஒருத்தியை ஏற்றுக்கொண்ட வன் அவளுடைய சீதனத்தை [51]ஓம்புதல்வேண்டும்.

வேறுகணவனை மணந்தவள் முதற்கணவனுடைய [52]தாயப்

---

[44] இது முன்னதற்குச் சிறப்புவிதி.

[45] நெடும்பிரிவு—இதன் இயல்பை அறுபத்தொன்றும் அத்தியாயத்திற் காண்க.

[46] மாமன் — கணவனுடைய தந்தை; அவன்சம்மதம்பெற்று மறு மணம் செய்துகொண்டால், மாமன் கணவன் இருவராலும் கொடுக்கப் பட்ட பொருளுக்கு உரிமையுடையவள் ஆவாள் என்றும், அவன்சம்மதம் இல்லாமல் மறுமணம் செய்துகொண்டால் அப்பொருளுக்கு உரிமையற்ற வள் ஆவாள் என்றும் கொள்க. இதனால் அக்காலத்தில் கைம்மையுற்ற மருகியை மாமன் உடன்பட்டு மறுமணம் புரிவித்த வழக்கமுண்மை புலனா தல் அறிக.

[47] மணஞ்செய்துகொண்ட முதற்கணவன் உயிருடன் இருக்கும் பொழுது மற்றொருவனாற் கவர்ந்துகொள்ளப்பட்டவள் என்பது கருத்து.

[48] உறவினர்—கவர்ந்துகொண்ட கணவனும், அவனைச் சார்ந்தோரும் ஆவர்.

[49] முன்னையுறவினர்—முதலில் மணம் செய்துகொண்ட கணவன், மாமன் முதலியோர். அவர்கள் முதலில் சீதனமாகக்கொடுத்திருந்த பொரு ளைக் கவர்ந்துகொண்டவன் அவர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்பது.

[50] அறநூலிற் கூறிய முறைப்படி கொழுந்தன் முதலியோருள் ஒருவனை மறுமணம் செய்துகொண்டவள் என்பது கருத்து.

[51] ஓம்புதல்—சீதனத்தைப் பாதுகாத்தல்; இதனால் அவன் சீதனத் தைச் செலவிடல் கூடாது என்பது போதரும்.

[52] தாயப்பொருள்—முதற் கணவனுடைய பாட்டன், தந்தை முதலி யோர் வழிவந்த பொருள்.

பொருளுக்கு உரிமையற்றவள் ஆவாள். [53]அறநிலையுடையளாயிற் செலவிடலாம்.

மகப்பேறுடையவள் வேறுகணவனை மணந்தால் சீதனத்திற்கு உரிமையற்றவள் ஆவாள். அச் சீதனத்தை மக்கள் அடைதல் வேண்டும்.

[54]மக்களைப் பாதுகாக்கும்பொருட்டு வேறுகணவனை மணந்தவள் அம்மக்களின் நிமித்தம் (சீதனத்தைப்) [55]பெருக்குதல் வேண்டும்.

[56]பல கணவன்மார்களை மணந்து பல மக்களையும் உடையவளின் சீதனம் அம்மக்களுக்கு [57]அவ்வவர் தந்தையாற் கொடுக்கப்பட்ட முறையில் உரிமையுடையதாம்.

வேறுகணவனை மணந்தவள் தன் விருப்பப்படியே செலவு செய்தற்குரிய [58]சீதனத்தையும் மக்களுக்கு உரியதாக்குதல் வேண்டும்.

[59]மகப்பேறில்லாதவளாய்க் [60]கணவனுடைய பாயலை ஓம்பு

---

[53] அறநிலையுடைமை—கற்பொடு பொருந்தி மறுமைக்காம் கைம்மை நோன்பு முதலிய அறங்களை மேற்கோடல்.

[54] கணவனை யிழந்தமையால் வறுமையில் வருந்தும் மக்களைப் பாதுகாக்கும் நிமித்தம் மறுமணம் செய்துகொண்டவள் என்பது கருத்து.

[55] பெருக்குதல்—வட்டிக்குக் கொடுத்தல் முதலியவற்றால் என்க; எனவே செலவுசெய்தல் கூடாது என்பதாம்.

[56] ஈண்டுப் பல கணவன்மார்களை ஒருவன் இறந்தபின் ஒருவனாக மணந்துகொண்டவள் என்பது கருத்து.

[57] ஒரு கணவனோடு இருந்தபொழுது பிறந்த பிள்ளைக்கு அக்கணவனாற் கொடுக்கப்பட்ட சீதனம் உரியது என்பது கருத்து.

[58] இச்சீதனம் முதற்கணவனின் தந்தையாகிய மாமன் உடன்பட்டுத் தந்ததும், மறுமணக்கணவன், மாமன் முதலியோர் தந்தவையும், தன் தந்தை முதலியோர் தந்தனவுமாம். அவற்றைத் தன் விருப்பப்படியே செலவு செய்யலாமாயினும் தனக்கு மக்கள் இருப்பின் அம்மக்களுக்கே உரிமைப்படுத்தவேண்டும் என்பது கருத்து.

[59] மகப்பேறும் இன்றிக் கணவனை யிழந்தவள் என்பது கருத்து.

[60] கணவனுடைய பாயலை ஓம்புகின்றவள் என்பது கற்புடையவள் என்பதைக் குறிப்பால் உணர்த்தும்.

இன்றவள் [61]சான்றோர் அணிமையிலிருந்து தன் [62]ஆயுள்காறும் சீதனத்தை நுகரக்கடவள். என்னை? [63]சீதனம் இடுக்கண் நேர்ந்துழி உதவுதற்பொருட்டாகலான். [64]பின்னர் ஞாதியர்க்கு உரியதாம்.

கணவன் உயிருடனிருக்க இறந்தவளது சீதனத்தை அவளுடைய ஆண்மக்களும், பெண்மக்களும் [65]பகுத்துக்கொள்ளல் வேண்டும். ஆண்மகன் இல்லையாயின் பெண்மகளுக்காம். பெண்ணும் இல்லையாயின் கணவனுக்காம்.

[66]பரியப்பொருள், பிறந்தவீட்டிலிருந்து கொணர்ந்த பொருள், சுற்றத்தார் வழங்கிய பிறபொருள் ஆகிய இவற்றைச் சுற்றத்தார் கொள்ளக்கடவர்.

[67]சீதனவிதி இங்ஙனமாம்.

[68]மகப்பேறில்லாதவள், புதல்வர்ப்பேறில்லாதவள், மலடி,

---

[61] சான்றோரணிமையிலிருத்தல், கற்புநிலையைக் காத்தற்பொருட்டும் அவர்களின் அறவுரைகளால் மனம் செம்மையுறுதற்பொருட்டும் பிறர் அயிராமைப் பொருட்டும் ஆம்.

[62] ஆயுள்காறும் நுகர்தலாவது, சீதனத்தை முதலாக வைத்து அதன் ஊதியத்தை மாத்திரம் நுகர்தல்.

[63] இந்த ஏதுவினுல் முன்னைச் சொற்றொடரிலுள்ள சீதனம் என்பது அதன் ஊதியத்தைக் குறிக்கும். ஈண்டுச் சீதனம் மூலப்பொருளாகும்.

[64] பின்னர்—அவள் இறந்ததன் பின்பு. ஞாதியர்—கணவனுடைய தாயத்தார்கள்.

[65] பகுத்தல்—சமமாகப் பிரித்துக்கோடல்.

[66] அறத்தின்பாற்படாத ஆசுரம் முதலிய மணங்களில் இங்குக் கூறப்படுகின்ற பரியம் முதலியவற்றிற்கு உரியவள் இறந்தபின்னர் அவை அவள் கணவன் முதலியோர்க்கு உரியனவாகாவென்பதும், அவளுடைய தந்தை, உடன்பிறந்தார் முதலிய சுற்றத்தார்களுக்கே உரிய என்பதும் கூறுகின்றார்.

[67] சீதனவிதி மேலே கூறியபடியாம் என்பது கருத்து.

[68] இனி பின்மணப்பொருள் பற்றிக் கூறுகின்றார். பின்மணமாவது முதன் மனைவி உயிருடனிருக்கும்பொழுதே இரண்டாந்தாரமாக வேறொருத்தியை மணத்தல்; அங்ஙனம் இரண்டாவதாகச் செய்துகொள்ளப்படும் மணத்தின் நிமித்தம் செலவிடப்படும் பொருள் பின்மணப்பொருளாகும். ஈண்டு மகப்பேறில்லாதவள் என்பதற்கு ஒரு மகவீன்று, மீண்டும் கருத்

என்னும் இவர்களுக்கு எட்டியாண்டும், [69]சாமகப்பெறுவா ளுக்குப் பத்தியாண்டும், [70]பெண்மகவே பெறுவாளுக்குப் பன்னி ரண்டியாண்டும் [71]எதிர்பார்த்தல் வேண்டும்.

[72] அதன்பின்னர் மகப்பேற்றை விரும்புவோன் இரண்டாவ தாக ஒருத்தியை மணந்துகொள்ளலாம். [73]இதனைக்கடப்பின் [74]பரியம், சீதனம், பின்மணப்பொருளிற் பாதி இவற்றைக் கொடுத்தல் வேண்டும். [75]இருபத்துநான்கு பணம் வரை தண்டமு மாம்.

[76]பரியத்தையும், சீதனத்தையும், அவையில்லையாயின் அவற்

---

தரிக்கப்பெறாதவள் என்றும், புதல்வர்ப் பேறில்லாதவள் என்பதற்கு பெண் மகவு ஒன்றீன்று, பின் பிணி முதலியவை காரணமாக, ஆண்மகவில்லா தவள் என்றும், மலடி என்பதற்குக் கருத்தரிக்கும் இயல்பில்லாதவள் என்றும் பொருள் கொள்க.

[69] பிறந்தவுடன் இறக்கும் குழவிகளையாதல், வயிற்றிலேயே இறந்து பிறக்கும் குழவிகளையாதல் பெறுபவள் எனக்கொள்க.

[70] அடிக்கடி கருத்தரித்தும் பெண்மகவே பெறுபவள் என்பது.

[71] எதிர்பார்த்தல் வேண்டும் — மகப்பேறில்லாதவள் முதலிய மூவர்க் கும், இனி மகவு பிறக்குமா என்றும், சாமகப் பெறுவாளுக்கு இனி மகவு பிறந்து இறவாது உயிர்வாழுமா என்றும், பெண்மகவே பெறுபவள், இனி ஆண்மகவைப் பெறுவாளா என்றும், இங்ஙனம் மகப்பேற்றை எதிர் பார்த்தல் வேண்டும் என்பது கருத்து.

[72] அதன்பின்னர் — மேற்கூறிய எட்டுயாண்டு முதலிய எல்லையின் பின்னர்.

[73] இதனைக் கடப்பின்—இக் காலவரையறையைப் பொறாது முன்னரே இரண்டாம் மணம் செய்துகொள்ளின்.

[74] பரியமும், சீதனமும் முதல் மனைவிக்கு முன்னர்க் கொடுக்கப் பட்டன ; அவற்றோடு இரண்டாம் மணத்தின் பொருட்டுச் செலவான தொகையிற் பாதியும் சேர்த்து முதல் மனைவிக்குக் கொடுக்கவேண்டும் என்பது கருத்து.

[75] காலவரையறையைக் கடந்ததற்குரிய தண்டம் இருபத்துநான்கு பணம் வரை விதிக்கலாம் என்பது.

[76] பரியமும், சீதனமும் முதன் மனைவிக்குரியவைகளே. அவையில்லாத வளாக இருப்பின், அவற்றிற்குத்தக ஓரளவு பொருளும், பின்மணப் பொருளும், உயிர்வாழ்க்கைக்கு வேண்டிய அளவு பொருளும் கொடுத்து விட்டு மேன்மேலும் பல மகளிரை மணக்கலாம் என்பது கருத்து.

றின் அளவு பொருளையும், பின்மணப்பொருளையும் உயிர்வாழ் தற்குப்போதிய ஓரளவு பொருளையும் கொடுத்தபின் பல மகளிரை யும் மணந்துகொள்ளலாம். என்னை ? [77]மகப்பேற்றின் நிமித்தமே மகளிராதலின் என்க.

இவர்களுக்குப் [78]பூப்பு ஒரே சமயத்தில் நிகழின் [79]மணந்து கொண்ட முறைப்படியாதல், [80]முதலில் மணஞ்செய்துகொள்ளப் பட்டவளையாதல், [81]உயிருடன்வாழும் மகவினையுடையவளையாதல் முதலிற் கூடுதல்வேண்டும்.

பூப்புக் காலத்தை [82]மறைத்தாலும் கூடாதிருந்தாலும் தொண்ணூற்றாறு பணம் தண்டமாம். மகப்பேறுடையவளையும், [83]நோன்பு மேற்கொண்டிருக்கும் மலடியையும், சாமகப் பெறுவா

---

[77] முதலில் மணஞ்செய்து கொள்ளப்பட்ட மனைவி மகப்பேறில்லாதவ ளாயின், அவள் பிறப்புப் பயனற்றதாகும். ஆதலின் அவளை விலக்கிவிடுதல் நியாயமே ஆகும் என்பது இதனாற் போதரும்; இது முன்னதனை வலியுறுத் தற்குரிய ஏதுவாகும்.

[78] பூப்பு நிகழ்தல்—இருதுமதியாதல்.

[79] மணந்துகொண்ட முறைப்படி—பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் இம் முறைப்படி; இவை முறையே முதன் மணம், இரண்டாமணம் என்பன வாதிய எண்ணுப் பெயரானும் குறிக்கப்படும். எனவே பல மனைவிகள் ஒரே காலத்தில் பூப்புடையவராயின் மணந்துகொண்ட வரிசையால் அவரோடு கூடல்வேண்டும் என்றது பிரம முறைப்படி மணந்தவளை, முதல் மனைவி என்றும், பிராசாபத்திய முறையில் மணந்தவளை இரண்டாம் மனைவி என்றும் இங்ஙனம் வரிசைப்படுத்தி, அம்முறைப்படியே கூட வேண்டும் என்று கூறியபடியாம்.

[80] ஒரே மணமுறையில் பல மகளிரை மணந்தவன் காலத்தால் முதலில் மணக்கப்பட்டவளை முதலில் கூடவேண்டும் என்பதாம்.

[81] உயிருடன் வாழும் நன்மகவைப் பெறும் இயல்புடையவள் மணத்தா லாதல், காலத்தாலாதல் பிற்பட்டவளாயினும் முதலில் கூடத்தகுந்தவள் என்பது கருத்து.

[82] மறைத்தலையும், சேராதிருத்தலையும் மகளிர்க்கேற்றுக; மறைத்தலை மகளிர்க்கும், சேராதிருத்தலை ஆடவர்க்கும் கோடலும் பொருந்தும்.

[83] நோன்புமேற்கோடல் மகப்பேற்றின் பொருட்டாம். அங்ஙனம் நோற்பாளை அந்நோன்புவிதிக்கு மாறாகப் புணர்தல் கூடாது என்பது கருத்து.

ளேயும், பூப்பொழிந்தவளேயும் [84]விருப்பமில்லாதபொழுது [85]புணர்தல் கூடாது. [86]விருப்பமற்ற கணவனும் [87]சேர்தல் கூடாது. தொழுநோயுடையவளேயும், பித்துடையவளேயும் புணர்தல் கூடாது, மகளிராயின் [88]இத்தகையவரை மகப்பேறு பொருட்டுச் சேரலாம்.

### சுலோகம்

[89]இழிந்தநிலேயடைந்தவன், [90]அயல்நாடுசென்றவன், [91]அரசத் துரோகி, [92]உயிர்க் கொலேஞன், [93]பதிதன், பேடி என்னும் இக் கணவன்மார்கள் விலக்கத் தக்கவர் ஆவர்.

மூன்றும் அதிகரணம் மூன்றும் பிரகரணத்தில்
'மணஅறம், சீதனவிதி, பின்மணப்பொருள்' என்பன அடங்கிய
ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[84] விருப்பமில்லாதபொழுது என்னும் அடையை, மகப்பேறுடையவள் முதலிய நால்வர்க்கும் கூட்டுக.

[85] கணவன் விருப்பமுடையனுயினும் புணர்தல் கூடாது என்பது.

[86] விருப்பமற்ற கணவன் என்றது மேலே கூறப்பட்ட நால்வகை மனேவியரிடத்தும் விருப்பமற்ற கணவன் என்றபடியாம்.

[87] மனேவி விருப்பமுடையவளாயினும் சேர்தல் கூடாது என்பது கருத்து.

[88] இத்தகையவர்—தொழுநோய் உடையவரும், பித்தரும் ஆகிய ஆடவர்.

[89] குடிப் பிறப்பிற்குப் பொருந்தாத தீய ஒழுக்கங்களால் இழிந்தவன் என்பது.

[90] வேற்றுநாடு சென்று பல ஆண்டுகளாகச் செய்தி அறிவியாதவன் என்பது.

[91] அரசத் துரோகி—அரசனுக்குத் தீங்கு விளேக்கும் விண்ஞன்; அரசனிடத்திலிருந்து தகாத முறையில் பொருள் கொள்வோன் எனினு மாம்.

[92] உயிர்—ஈண்டு மக்களுயிர்.

[93] பதிதன்—மாபாதகம் செய்து விலக்கப்பட்டவன்,

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## மூன்றும் பிரகரணம்—[1]மணவியல்—[2]பணிசெயல், [3]குடியோம்பப் பணித்தல், [4]கொடுமை, வெறுப்பு விலக்கியனமேற்கோடல், [5]உதவியைத்தடுத்தல்.

### அறுபதாம் அத்தியாயம்

பன்னிரண்டு ஆண்டு கடந்த பெண்களும், பதினாறு ஆண்டு கடந்த ஆடவரும் பணிபுரியும் தகுதியை அடைகிறார்கள். [6]அதன் பின்னர்ப் பணிபுரியாவிடின் மகளிர்க்குப் பன்னிரண்டு பணமும் ஆடவர்க்கு [7]அதனிரட்டியும் தண்டமாம்.

குடும்பப் பணியில் ஈடுபட்டவளுக்குக் [8]காலங் குறிக்கப் படாதபொழுது [9]மக்களுக்கும், [10]உபகரணங்களுக்கும் ஏற்ப ஊண்

---

#### 60-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] இப்பிரகரணத்தின் முதலத்தியாயத்தில் மணவறம், சீதனவிதி, பின் மணப்பொருள் என்னும் இவை விளக்கப்பட்டன. இனி இவ்வத்தியாயத்தில் மணம் புரிந்துகொண்ட மகளிர்ஆடவர்களைப்பற்றிய பணிசெயல் முதலிய செய்திகள் விளக்கப்படுதலின் முன் அத்தியாயத்தோடு இதற்கு இயைபுண்மை புலனுதலறிக.

[2] பணிசெயல்—மணம் புரிந்துகொண்டவர்கள் தத்தம் கடமையைச் செய்தல்.

[3] குடியோம்பப் பணித்தல்—குடும்ப நலத்தைப் பாதுகாக்கச் செய்தல்; இஃது ஒரு குடும்பத்தைப் பொறுத்து நடத்தும் உரிமையைக் கணவன், மாமன் முதலியோரிடத்தினின்றும் பெற்றுக்கொண்டவளைப் பற்றியது.

[4] கொடுமை—கடுஞ்சொல், கடுந்தண்டம்.

[5] உதவியைத் தடுத்தல்—இன்னார் இன்னார் தமக்குள் ஒருவருக்கொருவர் உதவிபுரிந்துகொள்ளுதல் கூடாது எனத் தடைசெய்தல்.

[6] மகளிர்க்குக் கூறிய பன்னிரண்டாண்டிற்குப் பின்னரும், ஆடவர்க்குக் கூறிய பதினாறாண்டிற்குப் பின்னரும் என்பது கருத்து.

[7] அதனிரட்டி—இருபத்துநான்குபணம். இத்துணையும் பணிபுரிதலைப் பற்றிய செய்தி கூறப்பட்டது.

[8] காலங் குறிக்கப்படாதபொழுது — இன்று இத்துணை வாங்கப்பட்டது, இன்று இத்துணை செலவு செய்யப்பட்டது என வரவு செலவுக் காலங் குறிப்பிடாதபொழுது.

[9] மக்களுக்கும்—போற்றப்படவேண்டிய குடும்பத்து மக்களுக்கும்.

[10] உபகரணங்கள்—பாண்டம் முதலியன.

உடைகளுக்கு வேண்டிய அளவினுதல் சிறிது மிகுதியாகவாதல் [11]சிறப்பக் கொடுத்தல்வேண்டும். காலங் குறிக்கப்பட்டபொழுது [12]அவற்றையே [13]கணக்கிட்டுக் கொடுத்தல்வேண்டும். பரியம், சீதனம், [14]பின்மணப்பொருள் இவற்றைப் [15]பெருதபொழுது [16]பகுதியைக் கொடுத்தல்வேண்டும்.

மாமன்வீட்டிலிருப்பவளாதல், [17]பாகம்பெற்றவளாதல் கணவனை [18]வழக்குத் தொடர உரிமையற்றவளாவாள். குடியோம்பப் பணித்தல் [19]இவ்வாரும்.

[20]அம்மணமே, முழு அம்மணமே, [21]உறுப்பறையே, [22]இழிந்

---

[11] சிறப்பக்கொடுத்தல்—பெறுவோரை மதித்துக் கொடுத்தல்.

[12] அவற்றை — மேலே கூறப்பட்ட ஊண் உடைக்கு வேண்டிய அளவாகக் கொடுக்கப்படுவனவற்றை.

[13] கணக்கிடுதல் — நாள் ஒன்றுக்கு இவ்வளவென்று கணித்துத் துணிதல். காலங் குறிக்கப்பட்ட பொழுது கணக்கிட்டுக் கொடுத்தல் வேண்டும் என்பதும், காலங் குறிக்கப்படாதபொழுது கணக்கிடாமற் கொடுக்கவேண்டும் என்பதும் கருத்து.

[14] பின்மணப்பொருள் — முதன் மனைவியை விட்டு மேலும் மணம் செய்துகொள்ளுவதன் நிமித்தம் முதன் மனைவிக்குக் கணவனால் கொடுக்கப் படும் பொருள்.

[15] பரிய முதலியவற்றைப் பெற்றுக்கொள்ளுதற்கு உரிமையுடையவள் பெறாமல் இருப்பாளாயின் என்பது.

[16] பகுதி—கூறு ; ஊண் உடைகளுக்கு வேண்டிய அளவில் ஐந்தில் ஒரு கூறு எனவுங் கூறுவர். இங்ஙனம் கொடுப்பது தலைவனுடன் பகை கொண்டு விலகியிருப்பவளுக்கென்க. இங்கே கூறப்படுகின்றவள் கணவன், தந்தை, மாமன் முதலியோருள் ஒருவரது ஆட்சியுட்பட்டிருப்பவள். கொடுப்பவர், கணவன் தந்தை முதலியோருள் ஒருவராவர்.

[17] பாகம்—கணவனாற் பிரித்துக் கொடுக்கப்பட்ட பாகம்.

[18] வழக்குத் தொடர்தல்—ஊண் உடைகளின் நிமித்தம் தன்கணவன் பொருள் தரவேண்டுமென்று அறங்கூறுவோர் அவையத்து முறையிடுதல்.

[19] இவ்வாரும்—ஈண்டுக் கூறப்பட்டபடியாம்.

[20] நற்குணமில்லாத மனைவியைத் திருத்தும் பொருட்டுக் கணவன் இழைக்கும் கொடுமையைப் பற்றிக் கூறுகின்றார். அம்மணமே முதலிய இவ்வைந்தும் வசைமொழிகள். அம்மணமே என்றது அறிவுத் திருத்தம் இல்லாமையால் ஆடையில்லாதவளையொப்ப உள்ளவளே என்னும் பொருளது.

[21] உறுப்பறையே—அங்கவீனம் உடையவளே.

[22] இதுவும் பின்னதும் அவளுடைய தந்தைதாயரை இழித்துக் கூறிய படியாம்.

தவன் மகளே, இழிந்தவள் மகளே, என்னும் இன்னேரன்ன வசைச் சொற்களால் வைது [23]நல்வழிப்படுத்தல்வேண்டும். [24]மூங்கிற்கோல், கயிறு, கையாகிய இவற்றுள் ஒன்ருல் முதுகில் மும்முறை புடைக்கலாம். [25]இவ்வரையறையைக் கடந்தால் [26]கடுஞ்சொற்கும், கடுந்தண்டத்திற்கும் உரியதண்டத்திற் பாதிதண்டமாம்.

[27]கணவனுடைய பரத்தமையைப் பொருத குற்றமற்றவள் கொடுமையை மேற்கொள்ளுங்காலும் [28]மேற்கூறியவாறேயாம்.

---

[23] நல்வழிப்படுத்தல்—ஒழுக்கமுறைகளை உபதேசித்துத் திருத்துதல். இங்ஙனம் வைது கடுஞ்சொற் கூறல் நல்வழிப்படுத்தற்பொருட்டென்பது கருத்து.

[24] இனி கடுஞ்சொற் கூறி நல்வழிப்படுத்தவியலாதவிடத்துச் செய்ய வேண்டிய கடுந்தண்டத்தைக் கூறுகின்ருர்.

[25] இவ் வரையறை — மேற்கூறியவைபோன்ற கடுஞ்சொற்களால் வைதல், மூங்கிற்கோல் முதலியவற்ருல் மும்முறை முதுகிற் புடைத்தல் என்னும் இவ்விதி. இதனைக் கடத்தலாவது—மேலே கூறப்பட்டனபோன்ற கடுஞ்சொற்களானன்றி மிக இழிவான வசைமொழிகளால் வைதலும், மூங்கிற்கோல் முதலியவற்றுனன்றிப் பெரும்தடி முதலியவற்ருல் புடைத்தலும், மூங்கிற்கோன் முதலியவற்ருல் புடைக்குங்காலும் முதுகின் அன்றி வேறிடத்துப் புடைத்தலும், முதுகினும் மூன்றுமுறை புடைத்தலன்றி மிகையாகப் புடைத்தலுமாம்.

[26] ஒரு சாத்தனை ஒரு கொற்றன் கடுஞ்சொற்களால் வைததற்கும் அல்லது அடித்து ஒறுத்ததற்கும் விதிக்கப்படும் தண்டத்தின் அளவிற் பாதி தண்டம் என்க; அத்தண்டங்கள் மேலே எழுபத்தைந்து, எழுபத்தாரும் அத்தியாயங்களிற் கூறப்படும். அவற்றை ஆண்டுக் காண்க. இது காறும் கணவன்கொடுமை கூறியபடி.

[27] இனி கற்புடையவள் தன்கணவன் பரத்தையரிடத்துத் தொடர்புடையவனுக, அதுகண்டு பொருது, அத்தொடர்பை அகற்ற அவன்பாற் செய்யத்தகுந்த கொடுமைக்கு வரையறை கூறுகின்ருர்.

[28] மேற்கூறியவாறேயாம் என்பது மனைவிக்குக் கணவன் இழைக்கத் தகுந்தனவாகக் கூறப்பட்ட கடுஞ்சொல், கடுந்தண்டம் முதலியவெல்லாம் கணவனைத் திருத்தும்பொருட்டு மனைவியும் மேற்கொள்ளலாம் என்றபடியாம்.

[29]தண்டம் கூறியவாறேயாம். [30]கொடுமை இங்ஙனமாம்.

[31]கணவனை வெறுத்து ஏழு பூப்புவரை இன்பநிலை குறித்து அவனை நெருங்காமலிருக்கும் மனைவி [32]அதன்பின் அப்பொழுதே தன் அணிகலன்களைக் கழற்றி வைத்துவிட்டு மற்றொரு பெண்ணோடு கூடியிருக்கும் அவனை அடையக்கடவள்.

மனைவியை வெறுத்த கணவன் [33]தவப்பெண், [34]சீதனத்தைப் பேணுதற்குரியவன், ஞாதியர் என்னும் இவர்தம் இல்லங்களுள் ஒன்றில் [35]தமியளாயிருக்கும் அவளை [36]இரங்கிச் [37]சார்தல் வேண்டும்.

---

[29] தண்டம்—வரையறை கடந்தக்கால் விதிக்கப்படும் தண்டம். கணவனுக்காயின் 'பாதி' என்று மேற்கூறியவர், மகளிர்க்கு 'தண்டம் கூறியவாறேயாம்' என ஈண்டு விதந்து கூறியதனால் மகளிர்க்குத் தண்டம் பாதியன்று; மேல் 75-76-ஆம் அத்தியாயங்களில் அக்குற்றங்களுக்குக் கூறிய தண்டம் முழுதுமேயாம் என்று கொள்ளல்வேண்டும் என்பது கருத்து

[30] கொடுமை இழைப்பதற்கு விதி ஈண்டுக் கூறியபடியாம் என்பது.

[31] கணவன், தன்னை வெறுக்கும் மனைவியை ஏழு பூப்புவரை எதிர்பார்த்தல் வேண்டும் என்பது கருத்து. இங்ஙனம் எதிர்பார்த்தல் மகளிர் மனம் மாறுபடும் இயல்புடையதாகலானும், காம உணர்ச்சி மகளிர்க்கு மென்மெல மலரும் இயல்புண்மையாலும், நாளடைவில் மனம் கனிந்து அவள் தன்னை விரும்பக்கூடும் என்பது பற்றியாம்.

[32] அதன்பின் அவள் அறிவுதிருந்திக் கணவனை நெருங்குவாளாயின், மீண்டும் அவனை வெறுமலிருத்தலை நம்புதற்கு ஏதுவாகத் தன் அணிகலன்களைக் கழற்றிக் கணவனிடத்து வைத்துவிட்டு, அவன் மற்றொரு பெண்ணோடு கூடியிருக்கும் நிலையில் பரிதபித்து அவனை அடையவேண்டும் என்பது. மனைவி கணவனை வெறுத்ததற்கு இது தண்டமாம்

[33] தவப்பெண்—தூய்மையும் அமைதியுமுடையளாய் நோன்பியற்றுபவள்.

[34] சீதனத்தைப் பேணுதற்குரியவன் என்றது அவ்வுரிமையை உடைய நெருங்கிய அவள் உறவினனைக் குறிப்பதாம். இவரில்லங்கள் ஒன்றனுள் இருத்தல் கற்பொழுக்கத்தைப் போற்றும்பொருட்டும், கணவன் ஐயுறுமைப் பொருட்டுமாம்; வேறுபிறரில்லத்திருத்தல் கூடாது என்பதாம்.

[35] வேறு ஆடவன் தொடர்பின்றித் தனித்திருத்தல்வேண்டும் என்பது கருத்து.

[36] இங்ஙனம் தமியளாயிருத்தல் கணவன் இரக்கத்திற்கு ஏதுவாகும் என்பதும், இங்ஙனம் அன்றிப் பிறர்மனையினுதல், பிறருடன் கூடியாதல் இருந்தால் கணவனால் விடத்தகுந்த குற்றமுடையவள் ஆவாள் என்பதும் கருத்து.

[37] சார்தல்—அவள் தூயநிலையும், தனிநிலையும் கண்டு கணவன் பச்சாத்தாபத்தோடு அவளையடைதல்.

புணர்ச்சியுண்மைக்குரிய [38]அடையாளம் தன்பாற் காணப் படும்பொழுதும் புணர்ந்திலேன் எனமறைப்பவனும், [39]ஒற்றுதற்கு வந்த தோழியின்பால் பொய் கூறுபவனும், பன்னிரண்டு பணம் தண்டம் இறுத்தல்வேண்டும்.

[40]விருப்பமில்லாத கணவனுடைய வெறுக்கின்ற மனைவியும், [41]மனைவியினுடைய கணவனும் விடுதலைபெறத் தகாதவர்கள் ஆவர்.

மனைவியின் குற்றங்காரணமாக விடுதலையை விரும்பும் கணவன் [42]வாங்கியவற்றை அவளுக்குக் கொடுத்துவிடல் வேண்டும்.

கணவனின் குற்றங்காரணமாக மனைவி விடுதலையை விரும்பினால் வாங்கினவற்றை அவளுக்குக் [43]கொடுத்தல்வேண்டா. [44]அறத் திருமணம் புரிந்துகொண்டவர்களுக்குள் விடுதலை இல்லையாம். வெறுப்பு [45]இவ்வாறும்.

---

[38] பற்குறி, நகக்குறி முதலியன.

[39] கணவனியல்பை அறிதற்கு ஒற்றுக விடுக்கப்பட்ட தோழி என்க.

[40] கணவன் தன்னைப் பிரிய விரும்பாத நிலையில் தான் அவனை வெறுக்கின்ற மனைவி என்க.

[41] மனைவி கணவனை விட்டுப்பிரிய விருப்பமில்லாத நிலையில் அவளை வெறுக்கின்ற கணவனும் என்க; எனவே கணவன்மனைவியருள் ஒருவருக்கு விடுதலைபெற விருப்பமில்லாதபொழுது மற்றவர் வெறுப்புடையாராயினும் விடுதலைபெற உரியராகார் என்பதும், இருவரும் ஒருவரையொருவர் வெறுப்பின் விடுதலைபெறலாம் என்பதும் கருத்தாதலறிக.

[42] வாங்கியவை — மனைவியினிடத்தினின்றும் பெற்ற சீதன முதலிய எல்லாப் பொருளுமாம்.

[43] சீதன முதலியவற்றைக் கொடாமலே விடுதலைபெறலாம் என்பது.

[44] அறத் திருமணம்—பிரமம் முதலிய நான்குமாம்; அறத் திருமணம் புரிந்துகொண்டோர்க்கு விடுதலையில்லை எனவே, அறத்தின்பாற்படாத ஆசுரம், கந்தருவம், இராக்கதம், பைசாசம் என்னும் நான்கு மணமுறைகளில் ஒன்றனாற் சேர்ந்தோர்க்கே மேற்கூறப்பட்ட விடுதலைவிதியென அறிக.

[45] ஈண்டுக் கூறப்பட்டபடியாம்,

[46]செருக்குடைய ஆடலினும், [47]களியாட்டினும் ஒரு பெண் [48]தடுக்கப்பட்டபின்னரும் தலைப்படின் மூன்றுபணம் தண்டம் இறுத்தல்வேண்டும். பகலில் [49]பெண்காட்சி, [50]விளையாட்டு என்னும் இவற்றிற்றலைப்படின் ஆறுபணம் [51]தண்டமாம். [52]ஆண் காட்சி, [53]விளையாட்டு என்னும் இவற்றிற்றலைப்படின் பன்னிரண்டு பணமாம். இரவில் [54]இருமடங்காம்.

[55]துயிலுங்காலும், மயங்கியிருக்குங்காலும், [56]வெளிச்சென்றாலும், கணவனுக்கு வழிகொடாதிருந்தாலும் பன்னிரண்டு பணமாம். [57]இரவில் வெளியேற்றின் [58]இருமடங்காம்.

மகளிரும், ஆடவரும் புணர்ச்சிநிமித்தம் [59]காமக்குறும்புகள்

---

[46] இனி விலக்கியனமேற்கோடலைப்பற்றிக் கூறுகின்றார் — செருக்குடைய ஆடல்—செருக்குடைமையாற் கூத்தாடல் முதலியன; எனவே இத்தகைய ஆடல்கள் குலமகளிர்க்குத் தகுந்தனவல்ல என்பது போதரும்.

[47] களியாட்டம்—கள்ளுண்டாடுதல்.

[48] கணவனால் தடுக்கப்பட்ட பின்னரும் என்பது; இதனைப் பின்னரும் ஏற்புழி இயைத்துக் கொள்ளல்வேண்டும்.

[49] பெண்காட்சி—பெண்டிரால் நிகழ்த்தப்படும் கூத்து முதலிய காட்சி.

[50] விளையாட்டு—உய்யானமுதலியவற்றில் நிகழும் மகளிர் விளையாட்டு.

[51] இத்தண்டம், கணவனாற் றடுக்கப்பட்ட பின்னரும், இவற்றிற்றலைப்படும் மகளிர்க்காம்.

[52] ஆண்காட்சி—ஆடவர்களால் நிகழ்த்தப்படும் கூத்து முதலியன.

[53] விளையாட்டு — ஈண்டு ஆடவர்விளையாட்டு; அவ்விளையாட்டிற் பெண்டிர் கலந்துகோடல் குற்றம் என்பது.

[54] தடுக்கப்பட்ட பெண் இரவில் பெண்காட்சி விளையாட்டுக்களில் தலைப்படின் பன்னிரண்டு பணமும், ஆண்காட்சி விளையாட்டுக்களில் தலைப்படின் இருபத்துநான்கு பணமும் தண்டம் என்பது கருத்து.

[55] கணவன் துயிலும்பொழுதினுதல், கள்ளுண்டு மயங்கியிருக்கும் பொழுதினுதல் என்க.

[56] வெளிச்செல்லலும், வழிகொடாதிருத்தலும் மனைவியின் செயலாம்; வழிகொடாதிருத்தலாவது—கதவைத் தாழிட்டுக்கொண்டு திறவாமலிருத்தல் முதலியன.

[57] எக்காரணத்தை முன்னிட்டேனும் கணவனை வீட்டினின்றும் வெளியேற்றுதல்.

[58] இருமடங்கு—இருபத்துநான்கு பணம்.

[59] காமக்குறும்புகள்—கண் முதலிய உறுப்புக்களால் காமக்குறிப்பைப் புலப்படுக்குஞ் செயல்கள்.

செய்துகொண்டாலும், மறைவில் [60]அருவருப்பான பேச்சுகள் பேசிக்கொண்டாலும் மகளிர்க்கு இருபத்துநான்கு பணமும்; ஆடவர்க்கு [61]இருமடங்கும் தண்டமாம்.

தலைமயிரைப் பிடித்தாலும், ஆடைமுடிச்சினை அவிழ்த்தாலும், பல்லாலும், நகங்களாலும் ஊறுசெய்தாலும் [62]பூர்வசாகசம் தண்டமாம். ஆடவர்க்கு [63]இருமடங்காம்.

[64]ஐயுறத்தக்க இடத்தில் [65]பேசிக்கொண்டிருந்தாலும் [66]பணத்திற்கு ஈடாகக் கசையடி தண்டமாம். அப்பெண்களைக் [67]கிராமத்

---

60 அருவருப்பான பேச்சு—இடக்கரான மொழிகளாற் பேசும் பேச்சு.

61 இருமடங்கு—நாற்பத்தெட்டுப் பணம்.

62 பூர்வசாகச தண்டம் — இருநூற்றைம்பது பணம். ஆடவர்க்கு இருமடங்கு என்றமையால் இது மகளிர்க்கென்பது.

63 இருமடங்கு — ஐந்நூறு பணம்; இத்தண்டம் மத்தியம சாகச தண்டம் எனப்படும்.

64 ஐயுறத்தக்க இடம்—மக்கள் வழங்காத மறைவிடம்.

65 வெறும் பேச்சுமாத்திரம் நிகழ்ந்தாலும் என்பது.

66 எத்துணைப்பணம் தண்டமாக விதிக்கப்பட்டனவோ அத்துணைக் கசையடி என்பது கருத்து.

67 மகளிரைக் கிராமத்தின் நடுவண் நிறுத்திக் கிராமத்து மக்கள் காணும்படி புலையனால் ஐந்து கசையடி அடிப்பித்தல் வேண்டும் என்றது, இக்குற்றத்தைச் செய்ய ஏனைய மகளிர் அஞ்சுதற் பொருட்டும், குற்றம் செய்தவள் நாணுதற்பொருட்டுமாம். ஒழுக்கத்தினிழுக்கிய மகளிர்க்கு இத்தகைய கடுந்தண்டம் விதிக்கப்பட்ட செய்தியை,

"என்னிகந் தொரீஇயின ளிளமையிற் கணவன்
தன்னிகந் தொரீஇயான் றகேள ளுகக்
கொண்டோற் பிழைத்த தண்டம் தூக்கி
வடிக்க ணிட்டிகைப் பொடித்துக ளட்டிக்
குற்றம் கொல்லும் எங்கோப் பிழைப்பிலனென
முற்றந் தோறும் மூதூ ரறிய
நெய்தற் புலையன் நெறியிற் சாற்றிப்
பைதற் பம்பை இடங்கண் எருக்கி
மணக்குடம் பூட்டி மாநீர் யமுனை
இடைக்கயத் தழுந்த விடீஇய செல்வுழி"

(உஞ்சை-சாங்கியத்தாய், வரி-152-161)

என்னும் பெருங்கதையானும் அறிக.

தின் நடுவண் நிறுத்தி அவர்தம் இருமருங்கினும் புலையன் ஐந்து கசையடி கொடுத்தல்வேண்டும். [68]பணத்தை ஈடாகக்கொடுத்துக் கசையடியினின்றும் விடுதலைபெறலாம்.

[69]விலக்கியனமேற்கோடல் இங்ஙனமாம்.

[70]தடுக்கப்பட்டுள்ள மகளிரும் ஆடவரும் ஒருவருக்கொருவர் உபகரித்துக்கொள்ளும் நிகழ்ச்சியில் [71]சிறிய பொருள்களுக்குப் பன்னிரண்டு பணமும், [72]பெரிய பொருள்களுக்கு இருபத்துநான்கு பணமும், [73]பொன்னுக்கு ஐம்பத்துநான்கு பணமும் மகளிர்க்குத் தண்டமாம். [74]ஆடவர்க்கு அவற்றினிரட்டியாம். [75]சேரத்தகாதவர்களுக்கு [76]அதிற் பாதியாம்.

[77]இங்ஙனமே தடுக்கப்பட்ட ஆடவர்களுக்குள் உதவிசெய்து

---

[68] ஓர் அடிக்கு ஒரு பணம் வீதம் கொடுத்துக் கசையடியினின்றும் விடுதலை பெறலாம் என்பது கருத்து.

[69] விலக்கியனமேற்கோடல் இங்குக் கூறப்பட்டபடியாம் என்பது கருத்து.

[70] இனித் தடையைப்பற்றிக் கூறுகின்றார். ஒருவருக்கொருவர் உதவி செய்துகோடல் கூடாதென அறங்கூறுவோர் அல்லது குடும்பத்தலைவரால் தடுக்கப்பட்டுள்ள ஆடவர்மகளிர்கள் என்பது கருத்து.

[71] மாலை, சாந்தம் முதலியன.

[72] ஆடை, அணிகலன் முதலியன.

[73] உதவியபொருள் பொன்னாயின் என்பது.

[74] சிறிய பொருளை உதவினால் இருபத்துநான்கு பணமும், பெரிய பொருளை உதவினால் நாற்பத்தெட்டுப் பணமும் பொன் முதலியவற்றை உதவினால் நூற்றெட்டுப் பணமும் ஆடவர்க்குத் தண்டமாம் என்பது.

[75] சேரத்தகாதவர்—உடன்பிறந்தாராகிய ஆடவர்மகளிர்கள்.

[76] சிறியபொருள் முதலியவற்றிற்கு முறையே மகளிர்க்கும், ஆடவர்க்கும் தனித்தனி மேலே விதித்த தண்டத்தில் அரைமடங்கு தண்டமாம் என்பது. உடன் பிறந்தோர்கள் இயல்பாகவே ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளற்கு அன்புடைமை காரணமாயினும், இச்செயல் மேன் மேலும் தொடர்ந்து நிகழுமாயின் பிறழ்ச்சியான எண்ணங்களையுண்டு பண்ணக்கூடும் என்பது பற்றித் தடுக்கப்பட்டு இத்தண்டம் விதிக்கப்பட்டதெனக் கொள்க.

[77] தடுக்கப்பட்ட ஆடவர்மகளிர்க்கு விதித்த தண்டமே தடுக்கப்பட்ட இரண்டு ஆடவர்கள் தம்முள் உதவிசெய்துகொண்டதற்கும் ஆம் என்பது கருத்து.

கோடற்கும் ஆம். [78]உதவியைத் தடுத்தல் இவ்வாறும்.

**சுலோகம்**

**இராசத்துரோகம், [79]விலக்கியனமேற்கோடல், [80]தாமே வெளிப்படல் ஆகிய இச்செயல்களால் மகளிர் சீதனம், [81]கொண்டு வந்தபொருள், பரியம் ஆகிய இவற்றின் உரிமையை இழந்தவர் ஆவர்.**

மூன்றும் அதிகரணம் மூன்றும் பிரகரணத்தில் ' பணிசெயல், குடியோம்பப்பணித்தல், கொடுமை, வெறுப்பு, விலக்கியன மேற்கோடல், உதவியைத்தடுத்தல் ' என்பன அடங்கிய அறுபதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

78 உதவியைத் தடுத்தல் ஈண்டுக் கூறியபடியாம் என்பது.

79 விலக்கியனமேற்கோடல் — செருக்குடைய கூத்து, களியாட்டம் முதலியவற்றிற் றலைப்படல்.

80 கணவனிடமிருந்து தாமே விலகி வெளியேறுதல்.

81 கொண்டுவந்த பொருள்—மகளிர், தம்தந்தையின் இல்லத்திருந்து கொண்டுவந்த பொருள்.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## மூன்றும் பிரகரணம்—மணவியல்—[1]வெளியேறுதல், [2]பின்தொடர்தல், [3]சிலநாட்பிரிவு, [4]பலநாட்பிரிவு

## அறுபத்தொன்றும் அத்தியாயம்

கணவன்வீட்டினின்றும் வெளியேறின [5]மனைவிக்குக் ([6]கணவனுடைய) குற்றமில்லாதவிடத்து ஆறு பணம் தண்டமாம். [7]தடுக்கப்பட்டவளாயின் பன்னிரண்டு பணமாம். [8]அயல்வீடு சென்றவளுக்கு ஆறு பணமாம்.

அயல்வீட்டானுக்கு [9]இடங்கொடுத்தல், [10]துறவிகளுக்கு ஐயம்

---

### 61-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] இவ் வத்தியாயத்தில் முன்னைய இரண்டத்தியாயங்களினும் கூறப்பட்ட மணவியலில் எஞ்சிய 'வெளியேறுதல்' முதலியசெய்திகள் கூறப்படுதலின் அத்தியாய இயைபுண்மை யறிக. வெளியேறுதல்—மனைவி கணவன்பால் ஏற்பட்ட வெறுப்பால் வீட்டைவிட்டு வெளிப்பட்டுச் செல்லுதல்.

[2] பின்தொடர்தல் — கணவனைவிட்டு அயலானோடு பின்தொடர்ந்து செல்லுதல்.

[3] சிலநாட் பிரிவு — விரைவில் திரும்புவதாகச் சொல்லி வேற்றிடம் சென்று தங்குதல்.

[4] பலநாட் பிரிவு—நெடுநாட்சென்று வருவதாகச் சொல்லி வேற்றிடம் சென்று தங்குதல்.

[5] மனைவி — ஈண்டுப் பணிபுரியும் பருவமடைந்தவள். பணிபுரியும் பருவம் மகளிர்க்குப் பன்னீராண்டகவையின்மேல் என 60-ஆம் அத்தியாயத்திற் கூறப்பட்டுள்ளது.

[6] கணவன்குற்றத்தால் மனைவி வெளிப்படின் தண்டம் இன்று என்பதும் இதனாற் போதரும்.

[7] தடுக்கப்படுதல் — வெளியேறுதல் கூடாதெனக் கணவனாற் றடை செய்யப்படுதல்.

[8] அயல்வீடு சென்றவளுக்கு ஆறுபணம் தண்டமாம் என்க. இவ் வரி சில பிரதிகளிற் காணப்படவில்லை.

[9] இடங் கொடுத்தலாவது—தன்னோடு பேசுதல் முதலியவற்றிற்கு உடன்பட்டு வசதியளித்தல்.

[10] துறவி—தண்டம் விதிக்கப்பட்டமையால் ஈண்டு ஒழுக்கத்தினிழுக்கிய பாசண்டன் முதலியோராவர்.

இடுதல், [11]வணிகனிடமிருந்து விலைப்பொருள் கொள்ளல் ஆகிய இவற்றிற்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [12]தடுக்கப்பட்டவர்களுக்குப் [13]பூர்வசாகசம் தண்டமாம். [14]வேறு இல்லங்களுக்குச் சென்றவளுக்கு இருபத்துநான்கு பணம் தண்டமாம்.

[15]இடுக்கண்நேர்ந்துழியல்லது பிறன்மனைவிக்கு இடம் கொடுத்தால் நூறுபணம் தண்டமாம். [16]தடுத்தபின்னுதல், [17]அறியப்படாமலாதல் நேரிற் குற்றமில்லையாம்.

[18]கணவனுடைய குற்றங்காரணமாக அவனுடைய ஞாதியர், [19]நன்னிலையிலிருப்போன், கிராமத்தலைவன், [20]சீதனம்பேணு

---

[11] வணிகன்—ஈண்டு தீயொழுக்கமுடைய வணிகனைக் குறிக்கும்.

[12] தடுக்கப்பட்டவர்—அயல் வீட்டானுக்கு இடம்கொடுத்தல் முதலியன செய்தல் கூடாது எனக் கணவன் முதலியோரால் தடைசெய்யப்பட்ட மகளிர்.

[13] பூர்வசாகச தண்டம் இருநூற்றைம்பது பணமாம்.

[14] வேறு இல்லம்—கணவன் வீட்டிற்கு அடுத்த வீடல்லாத வேறு வீடுகள் ; அடுத்த வீடு அயல்வீடு என்பதனுற் பெறப்பட்டுள்ளது. (குறிப்பு-8-ல் காண்க)

[15] இடுக்கண்—ஆபத்து ; இதன்கண் ஆடவனுக்குத் தண்டம் கூறுகின்றார். தடுக்கமுடியாத துன்பம் நேர்ந்தவிடத்து ஒரு பெண் அயலான் வீட்டிற்குச் செல்வாளாயின் அப்பொழுது அவளுக்கு இடம்கொடுத்த அவ்வயலான் குற்றமுடையவன் ஆகான் என்பதும், அவளுக்குத் துன்பம் நேராதவிடத்து இடம் கொடுத்தால் அது குற்றமாம் என்பதும் கருத்து.

[16] ஒருவன் அயலான்மனைவியைத் தன் வீட்டிற்கு வரக்கூடாது எனத் தடைசெய்த பின்னரும் அவள் வருவாளாயின் அவன் குற்றமுடையவன் ஆகான் என்பது கருத்து.

[17] ஒருத்தி தன் வீட்டினுள் நுழைந்ததை அவ்வீட்டுக்குரியவன் அறியாமலிருந்தால் அவன் குற்றமற்றவன் ஆவான் என்பது.

[18] கணவன்வெறுப்புக் காரணமாக வெளிச்செல்ல வேண்டியது அவசியமாக நேர்ந்தவிடத்து கற்புடைய பெண் யார் யாரைப் பற்றுக்கோடாகக் கொள்ளலாம் என்பதைக் கூறுகின்றார்.

[19] நன்னிலையிலிருப்போன்—ஒழுக்கமுடைமை காரணமாக நன்கு மதிக்கப்பட்டவன் ; மணவினை நடத்திவைத்தவன் என்றுங் கூறுப.

[20] வெளியேறியவளுடைய சீதனத்தைப் பாதுகாக்கும் பொறுப்புடையவன்.

வோன், [21]தவமகள், [22]ஞாதியர் என்னும் இவர்களுடைய இல்லங்களுள் ஆடவரில்லாத யாதானும் ஒன்றன்கண் போந்திருத்தல் குற்றமாகாது என்பர் [23]ஆசிரியர்.

[24]ஞாதியரின் இல்லத்தில் ஆடவர் இருப்பினும் குற்றமின்று. கற்புடைய பெண்ணிற்கு [25]எங்ஙனம் குற்றமுண்டாம்? [26]அதனை யறிதல் எளிது என்பர் கௌடலியர்.

[27]இறத்தல், நோய், துன்பம், [28]கருவுயிர்த்தல் என்னும் இவை காரணமாக ஞாதியரின் இல்லத்துக்குச் செல்லுதலைத் [29]தடுத்தல் கூடாது.

[30]இக் காரணங்களில் தடுப்பவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [31]அவ்விடத்தும் [32]மறைந்திருப்பவள் சீதனத்தை

---

[21] தவமகள்—ஐயமேற்றுண்டு தவம் புரிபவள்.

[22] ஞாதியர்—ஈண்டுத் தன் தந்தைவழி ஞாதியரைக் குறிக்கும்.

[23] ஆசிரியர்—இந்நூலாசிரியரின் ஆசிரியர்.

[24] ஈண்டுத் தன் ஆசிரியர் கொள்கைகளைத் தழுவிக்கொண்டு அவற்றுள் ஒன்றனுக்குப் புறனடை கூறுகின்றார். ஞாதியர்—ஈண்டுக் கணவன்வழி ஞாதியரும், தந்தைவழி ஞாதியரும் ஆவார்.

[25] கற்புடைய மகளிர்க்கு அழுக்கற்ற உள்ளமுடைமையால் எக்காரணத்தாலும் குற்றம் நேராது என்பது கருத்து.

[26] கணவன் முதலியோரால் எளிதில் அறியக்கூடும் என்னும் அச்சங் காரணமாக அக்குற்றம் நேராமல் தற்காத்துக்கொள்ளவும் கூடும்; ஆதலால் ஞாதியர் இல்லம் ஆடவர் இருப்பினும் அமையும் என்பது கருத்து.

[27] மேலே கணவன்வீட்டைவிட்டு வேறில்லங்களுக்கு மகளிர் செல்லுதல் கூடாது என வகுத்த விதிக்கு ஒரு புறனடை கூறுகின்றார்—மகளிர் தம் சுற்றத்தாருள் யாரேனும் இறந்துவிடின் அது குறித்தும், தமக்கு நோய்நீக்கங் குறித்தும், துன்பம் நேர்ந்துழி அதனை யொழித்தற்கும், பிள்ளைப்பேறுகுறித்தும் ஞாதியரில்லத்திற்குப் போதலைத் தடைப்படுத்தலாகாது என்பது கருத்து.

[28] கருவுயிர்த்தல்—மகப்பெறுதல்.

[29] கணவன் முதலியோர் தடுத்தல் கூடாது என்பது.

[30] இறப்பு முதலிய காரணங் கருதி ஞாதியரின் இல்லம் செல்லுதலைத் தடுப்பவனுக்கு என்பது.

[31] அவ்விடத்தும்—அஞ் ஞாதியரில்லத்தின் கண்ணும்.

[32] ஞாதியரில்லத்துக்குச் சென்று மீண்டுவாராமல் யாதானும் ஒரு காரணத்தால் ஆண்டே மறைந்து தங்குபவள் என்பது கருத்து.

[33]இழக்கக்கடவள். ஞாதிகள் அவளை [34]மறைத்துக்கொண்டால் [35]எஞ்சிய பரியத்தை இறுக்கக்கடவர். [36]வெளியேறுதல் இங்ஙனமாம்.

[37]கணவன்வீட்டிலிருந்து வெளியேறி வேற்றூருக்குச் சென்றால் பன்னிரண்டு பணம் தண்டமிறுத்தலோடு [38]ஒப்புவிக்கப்பட்ட அணிகலன்களையும் இழந்துவிடக்கடவர். குடும்பத்தைப் புரத்தல் நிமித்தமாதல், [39]பூப்புக்காலத்திலாதல் செல்லுதலன்றி ஏனைய காலங்களில் [40]உடன்செல்லத்தகுந்த ஆடவருடன் சென்றாலும் இருபத்துநான்கு பணம் தண்டம் இறுத்தலோடு [41]அறச்செயலை

---

[33] கணவன் தானே கைப்பற்றிக்கொள்ளலாம் என்பது கருத்து.

[34] மறைத்துக்கோடல் — வஞ்சித்து மறைவாகத் தம் இல்லத்தில் இருக்கச் செய்தல்.

[35] எஞ்சிய பரியம்—கணவனிடத்திருந்து மகளிர் பெற்ற பரியத்தில் அதுகாறும் கணவனாற் பற்றப்பட்டு எஞ்சித் தம்மிடத்திருக்கும் பொருள். அவற்றைக் கணவனுக்கே கொடுத்துவிடவேண்டும் என்பது கருத்து. இறுக்கக் கடவர் என்றதனால் மகளிரிடத்தினின்றும் வாங்கி ஞாதிகள் கொடுத்துவிடவேண்டும் என்பது. எனவே ஞாதியரின் இல்லத்துக்குச் சென்று மீண்டுவாராது ஒழிந்த மனைவியின் சீதனத்தையும் அவள் பொருட்டுக் கொடுத்த பரியத்தையும் கணவன் பெறக்கடவன் என்பதாம்.

[36] வீட்டைவிட்டு மகளிர் வெளியேறுதல் மேற்கூறியபடியாம் என்பது.

[37] இனிப் பின்தொடர்தலைக் கூறுகின்றார். கணவனது உடன்பாடு பெறாமலேயே மனைவி அயலூர் சென்றால் என்க.

[38] இனித் தான் வெளியேறுவதில்லை என்பதனைக் கணவன் நம்பும் பொருட்டு மனைவியால் முன்னரே அவன்பால் ஒப்புவிக்கப்பட்ட அணிகலன்கள் என்க.

[39] பூப்புக் காலம் என்றது ஈண்டுப் பூப்புப்புறப்பாடு நிகழ்ந்து நீராடிய பின்னர் நிகழும் பன்னிரண்டு நாட்களையும் குறிப்பதாம். அக் காலம் கருவாய்க்குங் காலமாதலின் அதனை யடைந்த ஒருத்தி அக்காலத்தே தன் கணவன் அயலூரில் இருப்பானாக அவனைப் புணர்தல்நிமித்தம் உடன் செல்லத்தக்கானொருவனைத் துணைக்கொண்டு தன் கணவன்பாற் செல்லல் குற்றமன்று என்பது கருத்து.

[40] உடன் செல்லத் தகுந்தோர்—உடன் பிறந்தான் முதலிய நெருங்கிய சுற்றத்தார்.

[41] அறச் செயலாவன—கணவனால் செய்யப்படும் வேள்வி முதலிய நற்செயல்கள் எல்லாவற்றினும் உடன் இருந்து செய்தல் முதலியன. (மணிமேகலை-பெருங்கதை பார்க்க)

இழந்தவளும் ஆவாள். [42]ஒத்த உயர்வுடைய ஆடவனுக்குப் பூர்வ சாகசமும், [43]இழிந்தவனுக்கு [44]மத்தியமும் தண்டமாம். உறவின னுக்குத் தண்டமில்லையாம். [45]தடுக்கப்பட்டிருப்பின் பாதி தண்ட மாம்.

[46]வழி, [47]வழிக்குச் சேய்மையிலுள்ள இடம், மறைவிடம் இவற்றிற் [48]செல்லுதல் புணர்ச்சிநிமித்தமாம் என அறிதல் வேண்டும்.

[49]ஐயுறப்பட்டோனுடனும், [50]தடுக்கப்பட்டோனுடனும் கூடி வழிச்செல்லுதல் [51]உடன் இயைதல் என அறிக.

---

[42] ஒத்த உயர்வுடையவன்—உருவானும், திருவானும், பருவத்தானும், பிறவாற்றானும் ஒத்த உயர்வுடையவன். இவன் உடன்சென்றால் பூர்வ சாகசதண்டம் இறுக்கக் கடவன் என்பதாம். பூர்வசாகசம் இறுநூற் றைம்பது பணமாம்.

[43] இழிந்தவன்—உருவம் முதலியவற்றால் தாழ்ந்தவன். இவன் உடன் செல்லின், மத்தியமசாகச தண்டம் இறுத்தல் வேண்டும் என்க.

[44] மத்தியம சாகச தண்டம் ஐந்நூறு பணமாம்.

[45] தடுக்கப்பட்டவன்—கணவன் முதலியோரால் உடன் செல்லலாகாது என்று முன்னரே தடைசெய்யப்பட்டவன்; தடுக்கப்பட்டவன் உறவின னயின் பாதி தண்டம் என்க. எனவே உருவம் முதலியவற்றால் ஒத்த உறவினனயின் பூர்வசாகசதண்டத்திற் பாதியாகிய நூற்றிருபத்தைந்து பணமும், இழிந்தவனயின் பூர்வசாகச தண்டமும் இறுத்தல்வேண்டும் என்றபடியாம்.

[46] மறைவு என்னும் அடையை வழிக்குங் கூட்டுக.

[47] வழிக்கு நெடுந்தொலைவிலுள்ள மக்கள் வழக்கற்ற இடம் என்க.

[48] செல்லுதல்—ஈண்டு ஒருவன்மனைவி பிறனொடு செல்லுதலைக் குறிக் கும்.

[49] ஐயுறப்பட்டவன்—இவன் பிறன்மனையாளுடன் புணர்ச்சிவிருப்ப முடையவனகலாம் எனக் கணவன் முதலியோரால் ஐயுறப்பட்டவன்.

[50] கணவனல் தடைசெய்யப்பட்டவன்.

[51] உடன் இயைதல்—ஈண்டு ஒருவன்மனைவி அயலானுடன் இயைந்து போதலைக்குறிக்கும். இதனைச் 'சங்கிரகணம்' என்று முதனூல் கூறும். உடனியைதலுக்கு நான்காம் அதிகரணம் எண்பத்தொன்பதாம் அத்தியாயத் தில் கூறப்பட்டபடி ஆடவர், மகளிர் ஆகிய இருபாலார்க்கும் விதிக்கப்பட்ட தண்டம் விதித்தல்வேண்டும் என்பது கருத்து.

[52]கூத்தன், பாணன், பர்தவன், வேடன், ஆயன், கள்விற்போன் என்னும் இவர்தம் பெண்டிரும் [53]வெளிச் சேறற்கு உடன்பட்டோரின் மகளிரும் பின்றொடர்தல் குற்றமின்றாம். [54]தடுக்கப்பட்டிருந்தும் அழைத்துச்செல்லும் [55]ஆடவனுக்கும், உடன்போகும் பெண்ணிற்கும் [56]அத்தண்டத்திற் பாதியாம். [57]பின்றொடர்தல் இங்ஙனமாம்.

[58]சிலநாட் பிரிந்திருக்கும் சூத்திரர், வணிகர், அரசர், பார்ப்பனர் என்னும் இவ்வகுப்பினருடைய மனைவிமார் மகப்பேறில்லாதவராயின் (முறையே) [59]ஒவ்வோராண்டு மிக்க காலமும், மகப்பேறுடையராயின் [60]மேலும் ஒவ்வோரியாண்டு மிகுதியாகவும் [61]வாழ்க்கைப்பொருள் பெற்றுள்ளவராயின் இருமடங்கு காலமும்

---

[52] கூத்தன்முதலியோரின் மனைவிமார்கள் அயலானோடு பின்றொடர்ந்து வழிநடத்தல் குற்றமாகாது என்பது.

[53] வெளிச்சேறற்கு உடன்பட்டோர்—தம் மகளிரை வெற்றிலை, மாலை முதலியன விற்பது குறித்து அவர் வெளிச்செல்லுதற்கு உடன்பட்ட பாகடை விற்போர், மாலைதொடுப்போர் முதலியோராவர்.

[54] தடுக்கப்பட்டிருந்தும் — தம் பெண்டிரை உடன் செல்லலாகாது என்றும், அயலானை அழைத்துச் செல்லலாகாது என்றும் மேற்கூறப்பட்ட கூத்தன் முதலிய கணவன்மாரால் தடுக்கப்பட்ட பின்னரும் அழைத்தேகின் என்க.

[55] ஆடவன்—அழைத்துச்செல்லும் அயலான்.

[56] அத்தண்டம்—உடன் இயைதலுக்கு விதிக்கப்பட்ட தண்டம்.

[57] பின்தொடர்தல் இங்குக் கூறப்பட்டபடியாம் என்பது.

[58] இனிச் சிலநாட்பிரிவுபற்றிக் கூறுகின்றார் :—விரைவில் திரும்பி விடுவேன் என்று கூறி அயல்நாடு சென்ற சூத்திரர் முதலியோர் என்பது.

[59] சூத்திரன் மனைவி ஓரியாண்டும், வணிகன் மனைவி இரண்டியாண்டும், அரசன் மனைவி மூன்றியாண்டும், பார்ப்பனன் மனைவி நான்கியாண்டும் திரும்பிவருதலை எதிர்பார்த்திருத்தல் வேண்டும் என்பது கருத்து. இங்ஙனம் எதிர்பார்த்தல் கணவனாற் குறிப்பிடப்பட்ட காலஎல்லை கடந்த பின் எனக் கொள்ளல்வேண்டும்.

[60] மேலும் ஒவ்வோர் யாண்டு என்பது மகப்பேறில்லாத மனைவியர்க்குக் குறிக்கப்பட்ட யாண்டினும் மிகுதியாக எனக்கொள்ளல்வேண்டும்.

[61] கணவனால் உயிர்வாழ்தற்கு இன்றியமையாப்பொருள் கொடுக்கப்பட்ட மகளிராயின், மகப்பேறில்லாச் சூத்திரன்மனைவி முதலியோர் இரண்டியாண்டு முதலியனவாகவும், மகப்பேறுடைய சூத்திரன்மனைவி முதலியோர் நான்கியாண்டு முதலியனவாகவும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும் என்பதாம்.

எதிர்பார்த்திருத்தல் வேண்டும். வாழ்க்கைப்பொருள் பெறாத மகளிரை [62]நன்னிலைக்கண் உள்ளாரும், [63]மேலும் நான்கு அல்லது எட்டியாண்டுகள் ஞாதியரும் புரக்கக்கடவர். [64]அதன்பின் கொடுக்கப்பட்டவற்றைப் பெற்றுக்கொண்டு விட்டுவிடல் வேண்டும்.

கல்விவயிற் பிரிந்த பார்ப்பனனை மகப்பேறில்லாதாள் பத்தியாண்டும், மகப்பேறுடையவள் பன்னீரியாண்டும், அரசியல்வினைஞனை ஆயுள்காறும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும். [65]ஒத்த குலத்தவனோடு கூடி மகப்பேறு அடைந்தவள் பழிக்கப்படாதவள் ஆவாள். உறவினர்குடும்பம் பொருணிலை யிழந்திருக்குங்கால் [66]நன்னிலையிலுள்ளவர்களால் விடப்பட்டு இடுக்கட்பட்டிருக்கும் பெண் தன் உயிர்வாழ்க்கையின்பொருட்டுத் தன் விருப்பப்படி மறுமணம் செய்துகொள்ளலாம்.

[67]அறத்திருமணங்களுள் ஒன்றனால் மணக்கப்பட்ட [68]கன்னி சொல்லாமற் பிரிந்து அயல்நாடு சென்ற கணவனின் செய்தி அறியப்படாதவிடத்து ஏழு பூப்புக்காறும், அறியப்பட்டவிடத்து ஓரியாண்டும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும். சொல்லித் தெரி

---

[62] நன்னிலைக்கண் உள்ளார் இன்னார் என்பதை 19-ஆம் குறிப்பிற் காண்க. அவர்கள் புரக்கவேண்டிய காலம், கணவன் வருகையைக் குறித்து எதிர்பார்க்கப்படவேண்டியனவாக முன் குறிக்கப்பட்ட காலம்.

[63] எதிர்பார்க்கப்படவேண்டிய காலம் வரை கணவன் வரவில்லையானால் அவன்பக்கத்து ஞாதியர் பாதுகாக்கவேண்டும் என்பது கருத்து.

[64] ஞாதியர் பாதுகாக்கவேண்டும் என்று குறிக்கப்பட்ட காலத்தின் பின்னரும் கணவன் வரவில்லையானால் கணவன் முதலியோரால் கொடுக்கப்பட்டுள்ள சீதன முதலியவற்றை ஞாதியர் வாங்கிக்கொண்டு அவள் விரும்பினால் அவள் பிறந்தகத்து உறவினர்பக்கல் அவளை விட்டுவிடலாம் என்பது கருத்து.

[65] மேலே கூறப்பட்ட கால எல்லையின் பின்னர்க் குலம் முதலியவற்றால் ஒத்த மற்றொருவனோடு கூடி மகப்பேறடைதல் குற்றமும், பழியும் ஆகாது என்பது கருத்து.

[66] நன்னிலையிலுள்ளவர்கள் காக்கவேண்டிய காலம் வரை பாதுகாத்து விட்டபின் என்பது கருத்து.

[67] அறத்திருமணம்—பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் இந்நான்குமாம்.

[68] கன்னி என்பது ஈண்டு மணம்புரியப்பட்டும் புணர்ச்சிபெறாதவளைக் குறிக்கும்.

வித்துச் சென்றவனுடைய செய்தி அறியப்படாவிடத்து ஐந்து பூப்புக்காறும், அறியப்பட்டவிடத்து பத்துப் பூப்புக்காறும் எதிர் பார்த்திருத்தல் வேண்டும். [69]ஒருபகுதி பரியம் கொடுத்தவனுடைய செய்தி அறியப்படாவிடத்து மூன்று பூப்புக்காறும் அறியப்பட்டவிடத்து ஏழு பூப்புக்காறும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும். பரியம் (முழுதும்) கொடுத்தவனுடைய செய்தி அறியப்படாதவிடத்து ஐந்து பூப்புக்காறும், அறியப்பட்டவிடத்து பத்துப் [70]பூப்புக்காறும் ஆம். [71]அதன் பின்னர் அறங்கூறுவோரின் [72]உடன்பாடுபெற்று விரும்பியபடி மறுமணம் செய்துகொள்ளலாம். என்னை? பூப்புக்காலம் [73]பயன்படாதொழிதல் [74]அறக்கொலையாம் எனக் கௌடலியர் கருதுகின்றார் ஆகவின்.

[75]தொலைவிற் பிரிந்தவன், [76]துறந்தவன், இறந்தவன் என்னும் இவர்மனைவிமார் ஏழு பூப்புக்காறும், [77]மகப்பேறுடையராயின் ஓரியாண்டும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும். பின்னர்க் கணவனுடன் பிறந்தானை [78]அடையலாம். அவர் பலராயவழி [79]அடுத்த

---

[69] பரியத்தின் ஒரு கூற்றைப் பெண்ணின் இல்லத்தாரிடம் கொடுத்து, எஞ்சிய பகுதியைப் பின்னர்க் கொடுப்பதாக உறுதிகூறிச் சென்றவன் என்க.

[70] பூப்புக்காறுமாம் — எதிர்பார்க்கவேண்டும் காலஎல்லையாம் என முடிக்க.

[71] கூறப்பட்ட காலம் கடந்தபின்னர்.

[72] உடன்பாடுபெறுதல், வேறுகணவனை மணத்தற்கு என்க.

[73] பயன்படாமை—கருக்கொள்ளுங்காலத்தை ஆடவன் கூட்டமின்மையால் வறிதாக்கல்.

[74] புதல்வர்ப் பேற்றினால் அடையத்தக்க அறத்திற்குக் கேடுண்டாதலின் 'அறக்கொலை' என்றார். இதுகாறும் 'சிலநாட்பிரிவு' கூறியபடியாம்.

[75] இனிப் 'பலநாட் பிரிவு' பற்றிக் கூறுவர்.

[76] துறந்தவன், இறந்தவன் என்னும் இவரின் மனைவிமார் ஏழு பூப்புக்காறும் எதிர்பார்த்திருத்தல் வேண்டும் என்றது அவர் கருவுற்றிருக்கின்றனரோ, இலரோ என்னும் ஐயம் தீர்தற் பொருட்டுப் போலும்.

[77] ஈண்டு மகப்பேறுடையராயின் என்றமையால், மேலே கூறிய விதி அஃதிலாதார்க்கு என்பது பெற்றாம்.

[78] மகப்பேறு குறித்து அடையலாம் என்பது.

[79] அடுத்தவன்—காலத்தால் கணவனுக்கு அடுத்துப் பிறந்தவன்.

வனையாதல், [80]அறவோனையாதல், [81]புரக்கும் ஆற்றலுடையவனை யாதல், [82]இளைஞனையாதல், மனைவியில்லாதவனையாதல் (அடையலாம்). உடன்பிறந்தார் இல்லாதவழி [83]உடன்பிறவாதவனையாதல், [84]ஞாதியையாதல், குலத்திற் றோன்றியவனையாதல், [85]குலத்துட் டோன்றியவருள்ளும் நெருங்கியவனையாதல் அடையலாம். [86]இதுவே முறையாகும்.

சுலோகம்

[87]இஞ் ஞாதியர்களையன்றிப் பிறனை மணந்தாலும், கள்ளக் கணவனுடன் கூடியிருந்தாலும், அக் கள்ளக்கணவன், மணந்து கொண்டவள், [88]கொடுத்தவன், மணந்தவன் ஆகிய இவர்கள் உடன்இயைதலுக்குரிய தண்டம் இறுக்கக்கடவர்.

மூன்றும் அதிகரணம் மூன்றும் பிரகரணத்தில்
'வெளியேறுதல், பின்தொடர்தல், சிலநாட்பிரிவு, பலநாட்பிரிவு'
என்பன அடங்கிய அறுபத்தொன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

---

80 அடுத்தவன் அறவோனாக இல்லாமலிருந்தால் என்பது.

81 எல்லோரும் அறவோராக இருப்பின், அவருள் பாதுகாக்கும் ஆற்றலுடையவனை அடையலாம் என்பது.

82 எல்லோரும் பாதுகாக்கும் ஆற்றலுடையவராயின், அவருள் இளைஞனையாதல், மனைவியில்லாதவனையாதல் அடையலாம் என்பது.

83 உடன் பிறவாதவனை என்றது ஒரு வயிற்று உடன் பிறவாதவனாயினும், முறைமையால் சகோதரன் ஆவானை என்க. கணவனுடைய சிற்றன்னை முதலியோர் வயிற்றில் பிறந்தவன் எனக் கொள்க.

84 ஞாதியர், கணவனை நெருங்கியோர் எனவும், குலத்திற் பிறந்தவன், கணவன்குலத்திற் பிறந்தவன் எனவும் கொள்க.

85 குலத்திற் பிறந்தோர் பலராய வழி, அவருள் நெருங்கியவனை மணத்தல் வேண்டும் என்பது.

86 இங்குக் கூறியவாறு மணஞ்செய்துகோடலே முறையாகும் என்றபடி.

87 இஞ் ஞாதியர்—மேலே கணவனுடன் பிறந்தோர் முதலியோராகக் கூறப்பட்ட தாயத்தார்கள்.

88 கொடுத்தவன்—பெண்ணைப் புரக்கும் உரிமைபூண்ட தந்தை, உடன் பிறந்தான் முதலியவர்களுள் ஒருவன்.

## மூன்றாம் அதிகாரணம்—அறநிலையாட்சி

## நான்காம் பிரகரணம்—[1]தாயபாகம்–[2]தாயமுறை

## அறுபத்திரண்டாம் அத்தியாயம்

தாய்தந்தையர் [3]சிறப்புடையராய் உயிருடனிருக்கப் புதல்வர் [4]தலைவராகார். [5]தந்தைக்குப் பின்னர்ப் புதல்வர்கள் [6]தந்தையின் பொருளைப் பகுத்துக்கொள்ளக்கடவர். தந்தையின் பொருளை முதலாகக்கொண் டீட்டப்படாமல் [7]தன்னுலீட்டப்பட்ட பொருள் பகுத்துக்கொள்ளத்தக்கதன்று.

[8]தந்தைவழிப் பொருளைப் பாகஞ் செய்துகொள்ளாதவரின்

---

### 62-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] தாய பாகம் — குடும்பப் பொதுப் பொருளைப் பகுத்துக்கோடல். தாயம்—குடும்பப் பொதுப்பொருள். மணஞ்செய்துகொண்டோர் தாய பாகஞ் செய்துகொள்ளுதற்குரிய தகுதியை அடைவதானும், மணத்தின் பின் நிகழவேண்டிய இல்லறத்திற்கு இன்றியமையாப் பொருளைப் பொது உரிமையானன்றிச் சிறப்புரிமையாகக் கோடல்வேண்டுமாகலானும் மணம் பற்றிய வழக்கையடுத்துச் சிறப்புடையது பொருள்பற்றிய வழக்காதலானும், 'மணவியல்' என்னும் பிரகரணத்தின் பின் இது வைக்கப்பட்டது. இதன் சிறப்பு நோக்கி இதனை 'தாயமுறை', 'பகுதிக் கூறு', 'புதல்வர் வகை' என்னும் மூன்றுவகைப்படுத்து மூன்று அத்தியாயங்களிற் கூறுவான் தொடங்கி முதற்கண் 'தாயமுறை' கூறுகின்றார். இதனுற் பிரகரண வியைபு புலனுதலறிக.

[2] தாயமுறை—தாயப்பொருளைப் பகுக்கும் விதம்.

[3] சிறப்பு—பொருளைப் பேணும் தகுதி.

[4] தலைவராகார்—குடும்பப் பொருளுக்குரிமையுடையராகார்.

[5] தந்தை இறந்த பின்னரென்பது.

[6] தந்தையின் பொருள்—தந்தையாலீட்டப்பட்ட பொருள்.

[7] தன்னுலீட்டப்பட்ட பொருள்—சகோதரர்களுள் ஒருவன் குடும்பப் பொதுப் பொருளை முதலாகக் கொள்ளாமல் தன் முயற்சியினுல் தனித் தீட்டிய பொருள். அங்ஙனம் ஈட்டப்பட்ட பொருளில் மற்றைச் சகோதரர்க்குப் பாகம் இன்று என்பதாம். எனவே ஒருவன் தந்தையின் பொருளை முதலாகக் கொண்டு தேடிய பொருளில் அவன்சகோதரர் தந்தையீட்டிய பொருளிற் போலப் பாகம்பெறும் உரிமையுடையராவர் என்பதும் பெற்றும்.

[8] தந்தையின் பொருளைத் தம்முட் பகுத்துக்கொள்ளாமற் பொதுவின் வைத்து இறந்துபோன மக்களுடைய மக்கள் முதலாயினோர் என்பது கருத்து.

புதல்வர், பெயரர் முதலியோர் நான்கு தலைமுறைவரை [9]பகுதிக்கூறு பெறக்கடவர். [10]அதுகாறும் பிண்டத்தொடர்புண்டாம். [11]அத் தொடர்பு அற்றோர் எல்லோரும் [12]தம்முட் சமமாகப் பாகம் செய்துகொள்ளக்கடவர்.

[13]தாயப்பொருள் இல்லாதவரும், தாயப்பொருளைப் பகுத்துக் கொண்டவரும் ஒருங்குகூடி வாழ்வாராயின் (தம்பால் உள்ள பொருளை) மீண்டும் பகுத்துக்கொள்ளக்கடவர். [14]பொருளைப் பெருக்கியவன் இரண்டுகூறு கொள்ளல்வேண்டும்.

---

[9] பகுதிக் கூறு பெறக்கடவர் என்றது அங்ஙனம் இறந்தவர் பலருள் ஒரு சிலர்க்கு மக்கள் பலராகவும், மற்றொரு சிலர்க்கு மக்கள் சிலராகவும் இருப்பாராயின், அவரெல்லோரும் தந்தைவழிப் பொருளைச் சமமாகப் பாகஞ் செய்துகொள்ளாமல் தத்தம் தந்தையர்க்குரிய பாகத்தை முதலிற் பகுத்துக்கொண்டு அவற்றைப் பின்னர்த் தம்முட் சமமாகப் பகுத்துக் கொள்ளல் வேண்டும் என்னும் பொருட்டாம். அஃதாமாறு — இரண்டு தந்தையருக்குரிய மக்கள் அறுவராக அவருள் நால்வர் ஒரு தந்தையின் மக்களும், இருவர் ஒரு தந்தையின் மக்களுமாயவழி முறையே தத்தம் தந்தைக்குரிய இரண்டு கூற்றினுள் ஒரு கூற்றை நால்வரும், பிறிதொன்றை இருவருமாகப் பாகஞ் செய்துகொள்ளுதல். இங்ஙனமே நான்கு தலைமுறை காறும் பகுத்துக்கோடல் வேண்டும் என்பது கருத்து.

[10] மேற் கூறியவாறு பாகஞ் செய்துகொள்ளற்குக் காரணம் கூறுகின்றார்—காரணமாவது :—இறந்தவனுக்கு நான்கு தலைமுறைகாறும் பிண்டத் தொடர்பு உண்டு என்பது.

[11] அத்தொடர்பு—பிண்டத் தொடர்பு ; பிண்டத்தொடர்பு அற்றோர்—நான்கு தலைமுறைக்குப் பின் வந்தோர்.

[12] பிண்டத் தொடர்பு அற்றவராகிய நான்குதலைமுறைக்குப் பிற்பட்டோர் நான்குதலைமுறைகாறும் பகுத்துக்கொள்ளப்படாத தாயப் பொருளைப் பகுத்துக்கொள்ளநேர்ந்தால் பிண்டத் தொடர்புடையோர் போலன்றி அக்காலத்து உயிர்வாழும் அச்சந்ததிமக்கள் அனைவரும் சமமாகப் பாகம் செய்துகோடல் வேண்டும் என்பது கருத்து.

[13] தாயப்பொருள் இல்லாதவர்களாகிய சகோதரர்கள் கூடிவாழ்ந்தால் அவர்கள் ஈட்டிய பொருளைச் சமமாகப் பாகஞ்செய்து கோடல் வேண்டும் என்றும், முன்னர்த் தாயப்பொருளைப் பாகஞ்செய்துகொண்ட சகோதரர் கள் பின்னரும் கூடி வாழ்வாராயின், அவர் கூடி வாழும்பொழுது ஈட்டப் பட்டு வந்த பொருளை மீண்டும் தம்முட் பாகம் செய்துகோடல் வேண்டும் என்றும் கொள்க.

[14] பொருளைப் பெருக்கியவன்—தாயப்பொருள் இல்லாத சகோதரருள் ஆதல், பாகஞ் செய்தபின்னரும் ஒன்று சேர்ந்து வாழும் சகோதரருளாதல், தன்முயற்சியால் பொருளைப் பெருக்கியவன்; இவன் தானீட்டிய பொருளைச்

[15]மகப்பேறில்லாதவனுடைய பொருளைக் கூடிவாழும் உடன் பிறந்த ஆடவர் கொள்ளுதல்வேண்டும். [16]கன்னியர்க்குமாம்.

[17]மகப்பேறுடையவனின் பொருளை அவனுடைய ஆண்மக்களும், [18]அறத்திருமணம் புரிந்துபெற்ற பெண்களும், [19]அவருமில ரேல் [20]உயிருடன் வாழும் தந்தையும், அவனுமிலனேல் உடன் பிறந்தாரும், [21]அவர்தம் மக்களும் அடையக்கடவர்.

[22]தந்தையற்ற பல [23]உடன்பிறந்தோரும், அவருடைய மக்க

---

சகோதரருடன் பாகம் செய்துகொள்ளுங்கால், தன் கூறேயன்றியும் சிறப்பாக ஒரு கூறும் பெறக்கடவன் என்பது கருத்து. இனி உடன் பிறந்தார் பலராயின் பெருக்கிய அப்பொருளை இருகூறு செய்து, ஒரு கூற்றைப் பெருக்கியவனும், மற்றொரு கூற்றைப் பகுத்து, எஞ்சிய சகோதரர் அனைவரும் கொள்ளல்வேண்டும் என்பது கருத்தாகக்கொள்வாரு முளர். இங்ஙனம் கூறுவோர்கொள்கைக்கு 'துவியம்சம்' என்னும் மூலத் திற்கு 'இரண்டில் ஒருகூறு' எனப் பொருள்கொள்ளல் வேண்டும். இது பொருந்துமாவென்பது ஆராயத்தக்கது.

15 மகப்பேறில்லாது இறந்தவனுடைய பொருள் அவனுடன் பிறந்து கூடிவாழும் ஆடவர்க்குரியதென்பதாம்.

16 உடன் பிறந்த கன்னியர் இருப்பின், அவரது திருமண முதலியவற் றிற்கு அப்பொருளைப் பயன்படுத்தலாம் என்பது கருத்து.

17 மகப்பேறுடையவன் இறந்தபின்னர் அவன்பொருளை அவனுடைய ஆண்மக்கள் அடைதல்வேண்டும் என்பது கருத்து.

18 ஆண்மக்களிலரேல் அறத் திருமணம் புரிந்துபெற்ற பெண்மக்கள் அடையலாம் என்பது. இதனுல் ஆண்மக்கள் அறத்திருமணம் அல்லாத மணமுறையில் தோன்றினவராயினும் தந்தையின் பொருளுக்கு உரியராவர் என்பது போதரும்.

19 அவருமிலரேல்—அப் பெண்மக்களும் இலராயின்.

20 உயிருடன் வாழும் தந்தை — அம்மக்களின் தந்தைக்குத் தந்தை; பாட்டன் என்க. என்றதனுல் ஈண்டுச் சுட்டிய பொருள் தந்தை தானே ஈட்டிய பொருள் என்பது பெற்றும்.

21 உடன் பிறந்தார் இல்லையாயின் அவர்தம் மக்களும் எனக் கொள்க.

22 தந்தையற்ற என்னும் அடையை மக்களுக்கும் கூட்டுக.

23 உடன் பிறந்தோர்—ஒரு தந்தைக்கு ஒரு தாய் வயிற்றிற் றோன்றிய வரும், பல தாயர் வயிற்றிற்றோன்றியவரும் ஆவார்.

ளும் தந்தையின் [24]ஒருகூற்றை அடையக்கடவர்.

[25]பல தந்தையர்க்கு ஒருதாயின் வயிற்றுதித்தவர்கள் (தந்தம்) தந்தைக்குரிய தாயப்பொருளுக் குரியராவர்.

[26]கடன்கொண்டவனுடைய தந்தை, உடன்பிறந்தோர், மக்கள் என்னும் இவர்களுள் முதல்வன் இருக்க ஏனையோரையும், [27]அண்ணன் இருக்கத் தம்பியையும் ([28]கடன் கொடுத்தவர்கள்) தொடர்தலாகாது.

---

[24] தந்தையற்ற உடன்பிறந்தோர் தந்தையின் பொருளைச் சமமாகக் கூறு செய்துகொள்ளல் வேண்டும் என்பதும், அவர்தம் மக்கள் அவரவர் தந்தையின் கூற்றைப் பகுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதும் கருத்து. இனித் தந்தையற்ற சகோதரருட் சிலர் இறந்தாராக எஞ்சிய சகோதரரும், இறந்தவர்தம் மக்களும் தம்முட் பாகம் செய்துகொள்ள நேர்ந்தவிடத்தும் அம்முறையே கொள்ளல்வேண்டும் என்பதுமாம். இறந்த தந்தைக்கு மக்கள் இருவராக, அவருள்ளும் ஒருவன் இறந்தனாக, அவன்மக்களிருவ ரிருப்பாராயின், பொதுப்பொருளை இருகூறுபடுத்து, ஒரு கூற்றை உயிருட னிருப்பவனும், மற்றொரு கூற்றைச் சமமாகப் பகுத்து இறந்தவன் மக்கள் இருவரும் கொள்ளல்வேண்டும் என்பது.

[25] ஒருத்தி ஒருவர்பின்னொருவராகப் பலகணவன்மாரை மணந்தாளாக, அவரனைவர்க்கும் தனித்தனி அவளது வயிற்றிற்றோன்றிய சகோதரர்கள் தத்தம் தந்தையர்க்குரிய தாயப்பொருளை அடைதல்வேண்டும் என்பது கருத்து.

[26] தந்தையும், அவன் மக்களும் கூடிவாழுங்கால் அம்மக்களுள் ஒருவன் பல புதல்வர்களையுடையவனாக இருந்து குடும்ப நிமித்தம் கடன்வாங்கி இறந்துவிட்டானாகக் கடன் கொடுத்தவர்கள் செய்யத்தக்கது யாது என்பதைக் கூறுகின்றார்.

[27] இறந்தவனுடைய மக்களுள் மூத்தவன் இருக்க இளையவனைத் தொடர்தல் ஆகாது என்பது.

[28] கடன் வாங்கினவன் இறந்துவிட்டானாக, அவனுடைய தந்தை, உடன் பிறந்தார், மக்கள் என்னும் இவர்களுள் தந்தை உயிருடன் இருக்கும்போது உடன்பிறந்தார் முதலியோரையும், தந்தையில்லாமல் உடன் பிறந்தார் இருக்கும்போது அவன்மக்களையும், மக்களுள்ளும் மூத்தவன் இருக்கும்போது இளையோரையும் கடன்கொடுத்தவர்கள் வழக்குத் தொடர்தல் ஆகாது என்பதும், முற்பட்டோரையே தொடர்தல்வேண்டும் என்பதும் கருத்து.

[29]தந்தை உயிருடன் இருந்து பாகம் பிரிக்குங்கால் ஒருவனுக்கு [30]ஏற்றத்தாழ்வு செய்தலாகாது. [31]காரணம் இன்றி ஒருவனைக் கூறு பெறாதவனாகச் செய்தல் கூடாது. தந்தையின் பொருள் இல்லாதபொழுதும் மூத்தோன் [32]தீயொழுக்கமில்லாத இளை ஞரைப் புரக்கக்கடவன்.

[33]வழக்கியற்பருவம் அடைந்தவர்கள் பகுத்துக்கோடற்குத் தகுதியுடையவர் ஆவர். வழக்கியற்பருவம் அடையாதவருடைய பாகப்பொருளில் [34]கடன் கழித்து எஞ்சிய பொருளை [35]அப்பருவம் அடையுங்காறும் [36]தாயின் உறவினரிடத்தாதல், [37]கிராமப் பெரி யோரிடத்தாதல் வைத்திருத்தல் வேண்டும். [38]அயலூர் சென்றவ னுடைய பொருளிற்குமாம்.

---

[29] தந்தை யிறந்த பின்னரே மக்கள் அவன்பொருளுக்கு உரியராவார் என்று முன்னர் விதிக்கப்பட்டது. தந்தை உயிருடன் இருக்கும்போது பாகஞ்செய்துகொள்ளுவதைப்பற்றிக் கூறுகின்றார்.

[30] தந்தை தன்மக்களுக்குத் தன்பொருளைத் தானே கூறுசெய்து கொடுக்கலாம் என்பதும், அங்ஙனம் கூறுசெய்யுங்கால் தன்மக்கள் அனை வர்க்கும் சமனாகக் கூறுசெய்து கொடுத்தல் வேண்டுமேயன்றி அவருள் ஒருவனுக்குக் கூடுதலாகவோ, குறைவாகவோ கூறுகொடுத்தல் கூடாது என்பதும் கருத்தாகக் கொள்க.

[31] காரணம் இன்றி என்றதனால் காரணம் இருப்பின் தந்தை தன் மக்களுள் ஒருவற்குக் கூறு கொடாமையும் பொருந்தும் என்பது பெற்றாம்; கூறுகொடாமைக்குரிய காரணம் பதிதன், பேடிமுதலியோராகப் பின்னர்க் கூறப்படுவோருள் ஒருவனாதல்.

[32] 'தீயொழுக்கமில்லாத' என்றமையால் இளைஞர் தீயொழுக்கமுடைய ராயபொழுது அவரை மூத்தவன் புரக்கும் கடப்பாடுடையவன் அல்லன் என்பது பெற்றாம்.

[33] வழக்கியற் பருவம் அடைந்தவர்கள் பதினாறாண்டு அகவையின் மேற் பட்ட ஆடவரும், பன்னீராண்டு அகவையின் மேற்பட்ட மகளிரும் என்க. அப் பருவம் எய்தியவர் தாயப்பொருளைப் பகுத்துக்கோடற்குத் தகுதி வாய்ந்தவர் ஆவார் என்பதாம்.

[34] கடன்—குடும்பப் பொதுவில் கடன் ஏற்பட்டிருக்குமாயின் அதில் பாகம்பெறுவோனுக்குரிய கூறு.

[35] அப்பருவம்—வழக்கியற் பருவம்.

[36] தாயின் உறவினர்—மாமன் முதலியோர்.

[37] தாயின் உறவினர் இல்லையாயின் அல்லது இருந்தும் நம்பத்தகாத வராயின் கிராமப் பெரியோரிடத்து ஒப்புவிக்கவேண்டும் என்பதாம்.

[38] அயலூர் சென்றவனுடைய பொருளிற்கும் இவ்விதியாம் என்க.

மணம்புரிந்து கொண்டவர்களுக்குச் [39]சமனாக மணம்புரிந்து கொள்ளாதவர்களுக்கு மணச்செலவிற்கும், [40]கன்னியர்க்கு மணம் செய்துகொடுப்பதற்கும் உரியபொருளைக் கொடுத்தல்வேண்டும்.

[41]கடனாக வாங்கிய பொருளிலும் கடனாகக்கொடுத்த பொருளிலும் பாகம் சமனாம்.

பொருளற்றவர்கள் நீர்ப்பாண்டங்களையும் பகுத்துக்கொள்ளல் வேண்டும் என்பர் ஆசிரியர். [42]உள்ள பொருள்களே பகுக்கற்பாலன, இல்லதற்கில்லை ஆகலின் இது தவறு என்பர் கௌடலியர்.

[43]பொதுப்பொருள் இத்துணை [44]இதிற்கூறு இத்துணை எனச்

---

[39] மணம் புரிந்துகொண்ட சகோதரனுக்கு மணத்தின் பொருட்டுச் செலவான பொருளுக்குச் சமனான பொருளை மணமாகாத சகோதரனுக்குத் தனியே கொடுத்தல் வேண்டும் என்பது கருத்து.

[40] கன்னியர்—மணம் பெறாத மகளிர்; இவர்க்கும் பின்னர் மணம் செய்துகொடுத்தற்கு வேண்டிய பொருளைக் கொடுத்தல்வேண்டும் என்பது.

[41] ஒரு குடும்பத்தில் தந்தை கடனாகவாங்கிய பொருளிலும், கடனாகக் கொடுத்த பொருளிலும் மக்களுக்குச் சமமான கூறு உண்டு என்பது.

[42] நீர்ப் பாண்டமும் பொருளே யாகலானும், அஃதுடையாரைப் பொருளற்றவர் எனக்கூறல் 'மாறுகொளக் கூறல்' என்னும் குற்றமாம் என்பது. மேலும், வேறுபொருள் இல்லாத ஏழையர்களே நீர்ப்பாண்டம் முதலிய எளிய பொருள்களையும் பகுத்துக் கொள்ளற்பாலார், ஏனைய செல்வர்கள் அத்தகைய எளிய பொருள்களைப் பகுத்துக்கொள்ளற்பாலார் அல்லர் எனப் பெறப்படுவதால், அங்ஙனம் செல்வர் பகுத்துக்கொள்ள வேண்டாமைக்குக் காரணம் காண்டல் அரிதாகலின் குற்றமாம் என்பதும், பொருள் அனைத்தும் பகுக்கற்பாலன என்பதன்கண்ணே நீர்ப்பாண்டமும் பகுக்கற்பாலன என்னும் விதி பெறப்படுதலின், அதனை விதந்தோதல் கூறியதுகூறலாய் முடியும் என்பதும் கௌடலியர் கொள்கை. ஆதலின் 'இது தவறு' என்றார் என்க.

[43] இதன்கண் சந்ததி இல்லாதவராய் இறந்தொழிந்தவரது பொருளைத் தாயத்தார்கள் பகுத்துக்கொள்ளுமாற்றைக் கூறுகின்றார்; சந்ததியின்மையால் தாயத்தார்க்குக் கிடைத்த பொருளின் முழு அளவு இத்துணை எனக் காட்டல்வேண்டும் என்பது கருத்து.

[44] அப் பொதுப்பொருளைப் பகுக்கவேண்டிய கூறுகள் எத்தனை என்பதும், அக் கூறுகளின் தனித்தனி யளவு எத்துணை என்பதும் நன்றாக விளக்கிக் கூறுதல் வேண்டும் என்பது.

[45]சான்றுவாரிடத்தில் விளக்கிக்கூறிப் பகுத்துக்கோடல்வேண்டும். [46]ஏற்றத்தாழ்வாகப் பகுக்கப்பட்டது, [47]ஒருவர்பால் ஒருவர் கவர்ந்தது, [48]மறைந்தது, [49]அறியப்படாமல் உண்டானது என்னும் இவற்றை [50]மீண்டும் பகுத்துக்கோடல் வேண்டும். [51]தாயத்தார் இல்லையாயின் [52]மகளிர் வாழ்விற்கும், [53]இறுதிக்கடன் செய்தற்கும் வேண்டிய அளவை விடுத்து எஞ்சிய பொருளை வேந்தன் அடையலாம். வேதியன்பொருளாயின் அங்ஙனம் அடைதலாகாது. [54]அதனை [55]மும்மறை ஓதியவனுக்கு அளித்தல்வேண்டும்.

---

45 சான்றுவார்—கிராமப் பெரியோர்.

46 ஏற்றத் தாழ்வு—கூறுகள் ஒன்றற்கொன்று சமமின்மை.

47 பொதுவாக இருக்குங்கால் தாயத்தார் தம்முள் ஒருவர்க்கொருவர் மறைவாகக் கவர்ந்த பொருள் என்பது.

48 மறைந்தது—காலமிடங்களால் மறைவுபட்டது.

49 அறியப்படாமல் உண்டானது — இறந்தவனுக்கு உரியதென்று முன்னர் அறியப்படாமலிருந்து பின்னர் வெளிப்பட்ட பொருள்.

50 ஏற்றத்தாழ்வாகப் பகுக்கப்பட்டது முதலியவற்றை அறிந்த பின்னர் அவற்றை மீண்டும் பகுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

51 இனித் தாயத்தாரும் இல்லாதவழி அப்பொருளிற்குரியார் யார் என்பது பற்றிக் கூறுகின்றார்.

52 மகளிர்—இறந்தவனுடைய மனைவி.

53 இறந்தவனைக் குறித்துச் செய்யவேண்டிய கன்மங்கள் என்பது.

54 அதனை—வேதியன்பொருளை.

55 தாயத்தாரும் இல்லாத நிலையில் வேதம் ஓதும் ஓர் அந்தணனுடைய பொருளை அவன் இறந்தபின்னர் மற்றோர் அந்தணனுக்குக் கொடுத்துவிடல் வேண்டும் என்பதும், மற்றையோர்பொருளாயின், அப்பொருளுக்குரியவனுடைய ஈமக்கடன் முதலியவற்றிற்கு வேண்டிய பொருளையும், கைம்மை மகளிர் இருப்பின், அவர் ஆயுள்காறும் உண்ணவும், உடுக்கவும் வேண்டிய பொருளையும் விடுத்து எஞ்சிய பொருளை அரசன் எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதும் கருத்து. இதனை,

"உறுபொருளும் உல்குபொருளும் தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன்பொருள்" (756)

என்னும் திருக்குறளில் பரிமேலழகர் 'உறுபொருள்' என்பதற்கு 'உடையாரின்மையிற்றானே வந்துற்ற பொருள்' எனப் பொருள்கூறி 'உறுபொருள்—வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்திற்கிடந்து பின் கண்டெடுக்கப்பட்டதூஉம், தாயத்தார் பெறாததூஉம்' என விரித்துரைக்குமாற்றானறிக.

[56]பதிதன், பதிதன்பாற் றோன்றியவன், பேடி [57]ஆகிய இவர்கள் கூறுபெறத் தகாதவர் ஆவர். மூடன், பித்தன், குருடன், தொழுநோயுடையவன் ஆகிய இவர்களும் [58]என்க. இவர்களுக்கு [59]மணம் நிகழ்ந்திருப்பின் [60]இவர்கள்போலல்லாத மக்கள் கூறு பெறக் கடவர். பதிதனல்லாத [61]ஏனையோர் ஊண் உடை பெறற்பாலார்.

## சுலோகம்

[62]இவர்கள் மணம்புரிந்துகொண்டு [63]மகப்பேறு இல்லாதவராக இருப்பின் [64]உறவினர் [65]மகவுகளைத் தோற்றுவித்தல் வேண்டும். அவர்களுக்குக் கூறும் கொடுத்தல்வேண்டும்.

மூன்றும் அதிகரணம் நான்காம் பிரகரணத்தில்
"தாயமுறை" என்னும் அறுபத்திரண்டாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[56] இதன்கண் கூறுபெறத் தகாதவர் இன்னர் இன்னர் எனக் கூறுகின்றார். பதிதன்—மாபாதகன்.

[57] ஆகிய இவர்கள்—ஆகிய இம்மூவரும்.

[58] இவர்களும் கூறுபெறத் தகாதவர் என்க எனக் கூட்டுக.

[59] ஈண்டு 'பார்யார்த்தே சதி' என்பது மூலம். இதற்கு 'மனைவியின் பொருள் இருப்பின்' எனவும் கூறலாம்.

[60] இவர்கள் போலல்லாத மக்கள்—இங்குக் கூறப்பட்ட மூடன் முதலியோருக்குப் பிறந்தும் தம் தந்தையரைப்போல் மூடன் முதலியோராக இல்லாத நன்மக்கள்.

[61] ஏனையோர் — பதிதன்மகனும், பேடியும், மூடன் முதலியோரும், மூடன் முதலியோர்பால் தோன்றி மூடன் முதலியோராக இருக்கும் மக்களும் ஆகிய இவர்கள்.

[62] இவர்கள்—மூடன் முதலியோர்.

[63] மகப்பேறின்மைக்குக் காரணம் வீரிய ஆற்றல் இல்லாமை.

[64] உறவினர்—மூடன் முதலியோரின் உறவினர்.

[65] மகவுகளைத் தோற்றுவித்தல் மூடன் முதலியோரின் மனைவியரிடத்தென்க. இதனை மகாபாரதத்தில் பாண்டுமன்னன் முதலியோரின் வரலாற்றானுமுணர்க.

## மூன்ரும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## நான்காம் பிரகரணம்—தாயபாகம்-[1]பகுதிக்கூறு

## அறுபத்துமூன்ரும் அத்தியாயம்

[2]ஒரு மனைவியின் புதல்வருள் [3]மூத்தோன்கூறு பார்ப்பனர்க்கு ஆடுகளும், அரசர்க்குக் குதிரைகளும், வணிகர்க்கு ஆன்களும், சூத்திரர்க்குச் செம்மறிகளும் ஆகும்.

[5]அவர்களுள் [6]நடுவன்கூறு [7]குருடுபோன்றவையும், இளையோன்கூறு [8]பல வண்ணமுடையவையுமாம்.

---

### 63-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] பகுதிக்கூறு—தாயப்பொருளை உடன்பிறந்தவர்கள் மூத்தோன் கூறு முதலியனவாகப் பகுத்துக் கோடல்; மூத்தோன் கூறு—சேட்டபாகம்.

[2] இதனல் பல மனைவியரின் மக்களுக்கு இந்நியமம் இல்லை என்பது கருத்து.

[3] மூத்தோன் கூறு – உடன் பிறந்தாருள் முன்பிறந்தவனுக்கு மட்டும் கொடுத்தற்குரிய சிறப்புப் பொருள்கள். அவை நான்குவகுப்பினருக்கும் முறையே ஆடு முதலியனவாம்.

[4] ஆடுகள்—பார்ப்பனக் குடும்பத்துள்ள ஆடுகள் முழுதுமாம். வேள்விக்குப் பயன்படுதல் கருதிப் பார்ப்பனர்க்கு ஆடுகளும், போர்க்குச் சிறந்தனவாதல்பற்றி அரசர்க்குக் குதிரைகளும், வாணிகத்திற்குரியவாதல்பற்றி வணிகர்க்குப் பசுக்களும், உழவுத் தொழிற்குரியவாதல்பற்றிச் சூத்திரர்க்குச் செம்மறிகளும் மூத்தோன் கூருயினவென்பது கருத்து. சூத்திரனுக்குச் செம்மறி சிறப்புடையன என்றது உழவுத் தொழிலுக்கு எருவிடுதல் முதன்மையானது என்பதும், அவ்வெருவை இடுதற்குச் செம்மறியாடு தலை சிறந்தது என்பதும் கருதிப் போலும். எரு முதன்மையானது என்பதை ‘ ஏரினும் நன்ருல் எருவிடுதல் ’ (குறள்-1038) என்பதனுனும் அறிக.

[5] அவர்களுள்—பார்ப்பனன் முதலிய நால்வருடைய மக்களுள்.

[6] நடுவன் என்றது தலையாயவனும், கடையாயவனும் என்னும் இருவர்க்கும் இடைப்பிறந்த உடன்பிறந்தோர் அனைவரையும் குறிக்கும்.

[7] குருடும், அதுபோன்ற முடம் முதலிய உறுப்பறைகளும் எனக் கொள்க.

[8] ஆடு, குதிரை, பசு, செம்மறி என்னும் இவற்றுள் ஒவ்வொன்றும் கருமை முதலிய பலநிறக் கலப்புடையனவாக இருப்பின், அவற்றை இளையோன் கூருகக் கொடுத்தல்வேண்டும் என்பதாம். மேற் கூறப்பட்ட விலங்குகளுள் ஓரே வண்ணமுடையது உயர்ந்தது என்பதும், வண்ணக் கலப்புடையது உறுப்பறையினும் தாழ்ந்தது என்பதும் கருத்து.

[9]நாற்காலுயிர் இல்லையாயின் மணியொழிந்த ஏனைய பொருள்களிற் பத்தில் ஒன்று மூத்தோன்கூறும். [10]என்னை ? (அவன்) பிதிர்க்கடன் என்னும் [11]கயிற்றால் கட்டுண்டிருப்பவனாதலான் என்க என்பது [12]வெள்ளியாசிரியரின் பகுக்கும்முறையாம்.

[13]தந்தையின் உபகரணப் பொருள்களுள் ஊர்தியும், அணிகலனும் மூத்தோன்கூறும். படுக்கையும், இருக்கையும் [14]வெண்கல உண்கலமும் நடுவன்கூறும். [15]கருங்கூலமும் இருப்புப்பாண்டமும், [16]வீட்டிற்குரிய உபகரணங்களும் [17]மாட்டுவண்டியும் இளைஞன்கூறும். எஞ்சியபொருள் ஒன்றேனும், பலவேனும் சமனாகக் கூறுசெய்து கோடல்வேண்டும்.

தாயபாகம் மகளிர்க்கு இல்லை. (ஆனால்) [18]தாயின் உபகரணப் பொருள்களில் மகளிர் வெண்கலவுண்கலமும் அணிகலமும் பெறக்கடவர்.

---

9 நாற்காலுயிர்—ஆடு முதலியன.

10 உடன்பிறந்தோருள் மூத்தோன் மிகுதியாகக் கூறுபெறுதற்குக் காரணம் கூறுகின்றார்.

11 கழுத்திற் கயிற்றால் கட்டப்பட்டவன் அக்கட்டினின்றும் தப்புதற்கு இயலாதவாறு போல, பிதிர்க்கடனாற்றும் செயலிலிருந்து மூத்தோன் தப்புதற்கு இயலாது என்னும் கருத்தால் பிதிர்க் கடனைக் கயிறாக உருவகித்தார். எனவே அக்கடன் செய்தல்நிமித்தமே மூத்தோன் மிகுதியாகக் கூறு பெறுதற்கு உரியவனாகின்றான் என்றபடியாம்.

12 வெள்ளியாசிரியர் — சுக்கிராச்சாரி. இவர் பொருணூலாசிரியர்களுள் ஒருவர். இவரது நூல் கௌடலியர்பொருணூலுக்கு முதனூலாகியவற்றுள் ஒன்று. இது வெள்ளியாசிரியரின் பகுக்கும்முறை என்று கூறி, அதனை விலக்காமையால், இம்முறை கௌடலியருக்கும் உடன்பாடு என்பது விளங்கும்.

13 இனி மற்றொரு வகையால் மூத்தோன்கூறு முதலியன பகுக்கும் வகை கூறுகின்றார்.

14 வெண்கல உண்கலம்—வெண்கலம் என்னும் உலோகத்தாற் செய்யப்பட்ட உண்ணுதற்குரிய பாண்டம்.

15 கருங்கூலம்—எள்ளு, வரகு முதலியன.

16 வீட்டுக்குரிய உபகரணம் — உரல், உலக்கை, அடுக்களைக்குரிய பாண்டம் முதலியன.

17 மாட்டுவண்டி—மாடு பூட்டிய வண்டி.

18 தாயின் உபகரணம்—ஆடை, அணிகலன், பெட்டி, உண்கலம் முதலியன. இவற்றுள் மகளிர்க்கு உண்கலமும், அணிகலமும் உரியன எனவே எஞ்சியன ஆடவர்க்காம் என்பது பெற்றாம்.

மூத்தோன் [19]மக்கட்டன்மை யற்றவனுயின், [20]மூத்தோன் கூற்றில் மூன்றில் ஒன்றையும், தகாதசெயலுடையவனுகவாதல், [21]அறச்செயலைவிட்டவனுகவாதல் இருப்பின் நான்கில் ஒன்றையும் அடையக்கடவன். [22]தன் விருப்பப்படி நடப்பவனுயின் [23]எல்லா வற்றையும் இழத்தல்வேண்டும்.

[24]இதனுல் நடுவனுக்கும் இளையவனுக்கும் கூறப்பட்டபடி யாம். [25]இவர்களுள் [26]மக்கட்டன்மையுடையவன் மூத்தோன் கூற்றிற் பாதி பெறக்கடவன்.

---

[19] மக்கட்டன்மை—பெருமை, சான்ருண்மை முதலிய குணங்க ளுடைமை.

[20] மக்கட்டன்மையற்றவன் மூத்தவனுயின், அவனுக்குரிய மூத்தோன் கூறு முழுவதும் பெறும் உரிமையற்றவனுவான்; அக்கூற்றில் மூன்றில் ஒன்றே பெறக்கடவன் என்பது கருத்து.

[21] அறச்செயல்—தத்தம் வருணத்திற்கு அறநூல்களால் விதிக்கப்பட்ட ஒழுக்கம்.

[22] தன் விருப்பப்படி நடப்புவன்—நன்மை, தீமை நாடாது, தன் மனஞ்சென்ற வழியெல்லாம் செல்லும் கயவன்.

[23] எல்லாவற்றையும் என்றது ஈண்டு மூத்தோன்கூறு அனைத்தையும் என்றவாறு. மூத்தோன் பொதுக்கூறு பெறுதற்கு இது தடையாகாது என்பது.

[24] மூத்தோன் மக்கட்டன்மையற்றவனுயின் தனக்குரிய மூத்தோன் கூற்றில் மூன்றில் ஒன்றையும், அவன் தகாத செயலில் தலைப்பட்டவனுக வாதல், அறச்செயலை விட்டவனுகவாதல் இருப்பவனுயின் நான்கில் ஒன்றை யும் அடையவேண்டும் எனவும், விரும்பியவாறே நடப்பவனுயின் எல்லா வற்றையும் இழக்கவேண்டும் எனவும் கூறியவாறே, நடுவனும் இளைஞனும் மக்கட்டன்மையற்றவராயின் அவர்க்குரிய நடுவன்கூறு இளைஞன்கூறு களில் மூன்றில் ஒன்றையும், அன்னுர் தகாத செயலில் தலைப்பட்டவராக வாதல், அறச் செயலை விட்டவராகவாதல் இருப்பின் நான்கில் ஒன்றையும் அடையவேண்டும் எனவும், அவர் விரும்பியவாறே நடப்பவராயின், எல்லா வற்றையும் இழந்துவிடவேண்டும் எனவும் கொள்ளல் வேண்டும் என்பது.

[25] இவர்களுள்—நடுவன், இளைஞன் என்னும் இவர்களுள்.

[26] மூத்தோன் மக்கட்டன்மையற்றவனுயவழி, நடுவனுதல், இளைஞ னுதல் அத்தன்மையுடையோனுக விருப்பின், அவ்வவர்க்குரிய கூற்றினேடு மூத்தோனுக்குரிய கூற்றிற் பாதியும் பெறக்கடவர் என்பதாம்; இது காறும் கூறியவை பார்ப்பனன் முதலிய நால்வேறு வகுப்பினருள் ஒருவ னுக்கு ஒரே மனைவியின்பால் தோன்றிய மக்களுக்குரிய விதியென்க.

[27]சடங்கு செய்யப்பட்டவள், [28]சடங்கு செய்யப்படாதவள் என்னும் வேறுபாடும், [29]கன்னிநிலையினள், [30]அஃதல்லாத நிலையினள் என்னும் [31]வேறுபாடும் இல்லாதவிடத்துப் பல மகளிர்பால் தோன்றியவருள்ளும், ஒருத்திபால் இரட்டையாகப் பிறந்த இருவருள்ளும் முன்னர்த் தோன்றியவனே மூத்தோன் ஆவான்.

[32]சூதன், [33]மாகதன், [34]விராத்தியன், [35]இரதகாரன் ஆகிய

---

[27] இனி, அந் நால்வேறு வகுப்பினருள் ஒருவனுக்குப் பல மனைவியர்பாலும் தோன்றிய மக்களுள் மூத்தவனுந்தன்மை, யார்க்குரியதென்பதைக் கூறுகின்றார். சடங்கு செய்யப்பட்டவள்—பிரமம் முதலிய அறத்திருமணம் நான்கனுள் ஒன்றனுல் முறையின் மணக்கப்பட்டவள்.

[28] சடங்கு செய்யப்படாதவள் — அறத்திருமணம் அல்லாத கந்தருவ முதலிய நான்கனுள் ஒன்றனுல் மணந்துகொள்ளப்பட்டவள்.

[29] கன்னி நிலையினள்—மணம் செய்தற்கு முன்னர் வேற்றுடவனோடு புணர்ப்பில்லாதவள்.

[30] அஃதல்லாத நிலையினள்—மணம் செய்தற்கு முன்னர் வேற்றுடவனோடு கூட்டமுடையவள் ; மறுமணம் செய்துகொண்டவளாகலாம்.

[31] இவ்வேறுபாடுடைய தாயர்வயிற்றில் தோன்றியவருள் மூத்தோன் இவன் எனக்கூறுதலின், அவ்வேறுபாடுடைய தாயர்பால் தோன்றியவருள் மூத்தோன், இளையோன் என்பது பிறப்பானன்றிச் சிறப்பாற் கொள்ளப் படும் என்பது பெற்றும். அஃதாமாறு :—ஒருவனுக்குச் சடங்கு செய்யப் பட்டவளும், சடங்கு செய்யப்படாதவளுமாகிய இரண்டு மனைவியருளராக, அவருள் சடங்குசெய்யப்பட்டவளின் மகன் சடங்குசெய்யப்படாதவளின் மகனுக்குப் பிறப்பால் இளையவன் ஆயினும் சிறப்பால் மூத்தோன் எனக் கொண்டு, அவனை மூத்தோன் கூற்றிற்குரியனுக்குதலும், இங்ஙனமே ஒருவனுக்குக் கன்னிநிலையினளாக மணக்கப்பட்டவள், அஃதல்லாத நிலையினளாக மணக்கப்பட்டவள் என்னும் இரு மனைவியர்பாலும் தோன்றிய மக்களுள், கன்னிநிலையினளாக மணக்கப்பட்டவளின் மகன் மற்றையவளின் மகனுக்குப் பிறப்பால் இளைஞனயினும், சிறப்பால் மூத்தோன் எனக் கொண்டு சிறப்புக் கூற்றிற்குரியனுக்குதலுமாம்.

[32] சூதன்—அரச குலத்தானுக்குப் பார்ப்பனப் பெண்பால் பிறந்தவன்.

[33] மாகதன்—வணிகனுக்கு அரசகுலப் பெண்பாற் பிறந்தவன்.

[34] விராத்தியன்—உபநயனம் செய்துகொள்ளாமல் மணந்துகொண்ட பார்ப்பனனுக்கு ஒத்த குலப் பெண்பால் பிறந்தவன்.

[35] இரதகாரன்—இல்லமியற்றும் தொழில் செய்யும் ஒரு வகைக் கலப்புச் சாதியினன் ; இவன் வைணியருள் ஒரு வகையினன் ; இவனைப்பற்றிய விளக்கம் அடுத்த அத்தியாயத்திற் காண்க. இனி, இரதகாரன் வணிகப் பெண்ணிற்கும் அரசகுலத்தவனுக்கும் பிறந்தவனாகிய 'மாகிட்டியன்' என்பானுக்கும், சூத்திரப் பெண்ணிற்கும் வணிகனுக்கும் பிறந்த 'கரணி' என்பவளுக்கும் பிறந்தவன் என்பர் நிகண்டுகாரர்.

இவர்களுக்கு [36]ஆண்மைக்கேற்பக் கூறும். ஏனையோர் அவனைப் பின்பற்றி வாழக்கடவர். [37]ஆண்மை யில்லையெனின் சமன்கூறு செய்துகொள்ளக் கடவர். [38]இவ்வாறேயாம்.

[39]நான்கு வருணத்து மக்களுள்ளும் [40]பார்ப்பனியின் மகன் நான்குகூற்றையும், அரசகுலப் பெண்ணின் மகன் மூன்றுகூற்றையும், வணிகப்பெண்ணின் மகன் இரண்டுகூற்றையும், சூத்திரப் பெண்ணின் மகன் ஒருகூற்றையும் பெறக்கடவர்.

[41]இதனால் அரசனுக்கும் வணிகனுக்கும் முறையே மூன்று வருணத்து மக்கட்கூறும், இரண்டு வருணத்து மக்கட்கூறும் கூறப்பட்டபடியாம்.

---

36 ஆண்மை — தலைவனாக இருந்து ஆட்சிபுரியும் தன்மை; சூதன் முதலியோருள் ஆண்மைமிக்கோன் தந்தையின் பொருள் முழுதும் எடுத்துக்கொண்டு, உடன் பிறந்தாரைப் போற்றிவரக் கடவன் என்பதாம். பின்பற்றுதல்—சார்ந்து ஒழுகுதல்.

37 சூதன் முதலியோருள் ஒருவனுக்கும் ஆண்மை இன்றேல், எல்லோரும் சமனாக் கூறு கொள்ளல்வேண்டும் என்பதாம்.

38 இவ்வாறேயாம்—ஈண்டுக் கூறியவாறே கூறுது ஒழிந்த பல மனைவிமார்பால் தோன்றிய கலப்புச்சாதிமக்களுக்கும் உய்த்துணர்ந்துகொள்க என்றபடியாம்.

39 ஒரு பார்ப்பனனுக்குப் பார்ப்பனி முதலிய நான்கு வகுப்பு மகளிரும் மனைவியராக அவர்கள்பால் தோன்றிய மக்களுள் என்க.

40 தாயப்பொருளில் மூத்தோனுக்கு மூத்தோன்கூறு கழித்து, எஞ்சியவற்றைப் பத்துக்கூறுபடுத்து பார்ப்பனியின் மகன் முதலியோர் முறையே நான்கு, மூன்று, இரண்டு, ஒன்றாகக் கூறுசெய்து கொள்ளவேண்டும் என்பதாம்.

41 இதனால்—ஈண்டு மேலே கூறியவாற்றால். அஃதாவது—அரசனுக்கு அரசகுலப் பெண் முதலிய மூவரிடத்தும் தோன்றிய மக்களுள் மூத்தோன் கூறு நிற்க, எஞ்சிய பொருளை ஆறுகூறுபடுத்து, அரசகுலப் பெண்ணின் புதல்வன் மூன்று கூறும், வணிககுலப் பெண்ணின் புதல்வன் இரண்டு கூறும், சூத்திரகுலப் பெண்ணின் புதல்வன் ஒரு கூறுமாகப்பகுத்துக் கொள்ளலும், வணிகனுக்கு வணிகப்பெண் முதலிய இருவர்பால் தோன்றிய மக்களுள், மூத்தோன்கூறு நிற்க, எஞ்சிய பொருளை மூன்றுகூறுபடுத்து, வணிககுலப் பெண்ணின் புதல்வன் இரண்டு கூறும், சூத்திரப் பெண்ணின் மகன் ஒரு கூறுமாகப் பகுத்துக்கொள்ளலும் வேண்டும் என்பது கருத்து.

பார்ப்பனனுக்கு [42]அடுத்தவள்பால் தோன்றியவன் சமன்கூறு பெறக்கடவன். [43]அரசனுக்கும், வணிகனுக்கும் அரைக்கூறும். [44]மக்கட்டன்மையுடையோராயின் சமன்கூறு பெறக்கடவர்.

[45]ஒத்தவள், ஒவ்வாதவள் என்னும் இவர்களுடைய ஒரே மகன் அனைத்திற்கும் உரியவனாவான். அவன் உறவினரையும் புரத்தல்வேண்டும்.

[46]பார்ப்பனனுடைய பொருளாயின் [47]பாரசவன் மூன்றில்

---

[42] அடுத்தவள்—பார்ப்பனனுக்கு அடுத்த வகுப்பினளாகிய அரசகுலப் பெண். பார்ப்பனனுக்குப் பார்ப்பனமனைவியினிடத்தும், அரசகுல மனைவியினிடத்தும் ஒவ்வொரு புதல்வர் உளராக, ஏனைய வணிககுல மனைவி சூத்திரகுல மனைவியாகிய இருவரிடத்தும், மக்கள் இலராயின் மேற் கூறப் பட்டவர்கள் மூத்தோன்கூறு நிற்க எஞ்சியவற்றைத் தம்முள் சமனாகக் கூறுசெய்துகொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[43] அரசனுக்குத் தன் குலத்தவளிடத்தும், வணிகப் பெண்ணிடத்தும் ஒவ்வொரு புதல்வர் உளராக, சூத்திர மனைவியின்பால் மக்கள் இலராயின், மேற் கூறப்பட்ட புதல்வர்கள் மூத்தோன்கூறொழித்து, முறையே இரண்டுகூறும், ஒருகூறும் கொள்ளக்கடவர். இங்ஙனமே வணிகனுக்கு வணிகப்பெண்ணிடத்தும் சூத்திரப்பெண்ணிடத்தும் தோன்றிய 'இரண்டு புதல்வர்களும் மூத்தோன்கூறொழிய முறையே இரண்டுகூறும் ஒருகூறு மாகப் பகுத்துக்கொள்ளவேண்டும் என்பதாம்.

[44] அரசனுக்கு வணிகப் பெண்ணின்பால் தோன்றிய புதல்வனும், வணிகனுக்குச் சூத்திரப் பெண்ணின்பால் தோன்றிய புதல்வனும் மக்கட் டன்மை சிறந்தவராயின், முறையே அரசகுலப் பெண்ணின் மகனோடும், வணிககுலப் பெண்ணின் மகனோடும் சமனான கூற்றையும் பெறக்கடவர் என்பதாம்.

[45] குலத்தால் ஒத்தவளும் ஒவ்வாதவளும் என்க. ஒருவனுக்கு ஒத்த வளும் ஒவ்வாதவளும் ஆகிய இரண்டு மனைவியர் இருக்க, அவருள் யாரிடத் துத் தோன்றியவனாயினும் ஒரே மகனாயின் அவன் இருவருக்கும் மகனாதலோடு, தாயப்பொருள் அனைத்திற்கும் உரியவனுமாவான். அவன் தன் தந்தையால் பாதுகாக்கப்படவேண்டிய உறவினரை யெல்லாம் புரத்தல் வேண்டும் என்பதுமாம்.

[46] ஒரே மகனைக் குறித்து மேலே கூறிய விதிக்கு ஒரு புறனடை கூறு கின்றார். தந்தை பார்ப்பனனாயின், அவனுக்குச் சூத்திரப் பெண்பால் தோன்றிய ஒரே மகன் தந்தையின் பொருள் அனைத்தையும் பெறுதற்கு உரியனாகான் என்பதும், அம்மகன் தன் பார்ப்பனத் தந்தையின் பொருளில் மூன்றில் ஒரு கூற்றையே கொள்ளல்வேண்டும் என்பதும், எஞ்சிய இரு கூற்றையும் இன்னின்னார் கொள்ளல் வேண்டும் என்பதுமாம்.

[47] பாரசவன் — பார்ப்பனனுக்கும், சூத்திரப் பெண்ணிற்கும் பிறந் தவன்.

ஒருகூறு பெறுதல்வேண்டும். இரண்டுகூற்றை ஞாதியராதல், நெருங்கிய குலத்தவனாதல் [48]பிதிர்க்கடன் இறுக்கும்பொருட்டு அடைதல்வேண்டும். [49]அவர் இலராயின் தந்தையின் ஆசிரியனாதல், மாணாக்கனாதல் அடையக்கடவர்.

### சுலோகம்

[50]இவனுடைய [51]மனைவியினிடத்தில் [52]ஏவப்பட்ட தாயின் உறவினனாதல், ஒத்த கோத்திரத்தானாதல் [53]'க்ஷேத்திரஜன்' என்ற மகனைத் தோற்றுவித்தல் வேண்டும். [54]அப்பொருளை அவனுக்குக் கொடுத்தல்வேண்டும்.

மூன்றாம் அதிகரணம் நான்காம் பிரகரணத்தில்
" பகுதிக்கூறு " என்னும் அறுபத்துமூன்றாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[48] பாரசவன் தன்தந்தைக்குரிய இறுதிக்கடன் இறுக்கும் உரிமையற்றவனாவான் என்பதும், பாரசவன்தந்தைக்கு ஞாதி முதலியோரே இறுதிக்கடன் இறுத்தல் வேண்டும் என்பதும், அக்கடன் இறுக்கும் பொருட்டே இங்ஙனம் தாயப்பொருள் கூறு செய்யப்படும் என்பதும் இதனாற் பெற்றாம்.

[49] அவர்—ஞாதியர் முதலியோர்.

[50] ஞாதியர் முதலிய நால்வரும் இலராயின் செயற்பாலதனைக் கூறுகின்றார் ; ஈண்டு இவன் என்றது பாரசவனுடைய தந்தையாகிய பார்ப்பனனைக் குறிக்கும்.

[51] ஈண்டுப் பார்ப்பனனுடைய மனைவியருள் பார்ப்பன மனைவியினிடத்தில் எனக் கொள்க.

[52] ஏவப்பட்ட—பெரியோர்களால் ' இங்ஙனம் செய்க ' எனக் கட்டளையிடப்பட்ட.

[53] க்ஷேத்திரஜன் — ஒருவன் மனைவியினிடத்து ஏவப்பட்ட பிறனொருவன் கூடிப்பெற்ற மகன்.

[54] அப்பொருள்—பாரசவனுக்கு உரியது ஒன்று நீங்க, எஞ்சிய அவ்விரு கூற்றின் பொருள்.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## நான்காம் பிரகரணம்—தாயபாகம்—[1]புதல்வர்வகை

## அறுபத்துநான்காம் அத்தியாயம்

பிறன்மனைவியினிடத்து [2]வித்தியவிதை [3]நிலத்தையுடைய வனுக்கு உரியதாகும் என்பர் ஆசிரியர்.

[4]தாய் தோற்பை (மாத்திரையே ஆகலான்) வித்தியவனுக்கே மகவு உரியதாம் என்பர் ஒரு சாரார்.

[5]இரண்டும் உண்மையேயாம் என்பர் கௌடலியர்.

---

### 64-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] முன்னைய அத்தியாயத்தில் தாயப்பொருளைக் கூறுசெய்யும் விதம் கூறப்பட்டது. அக் கூறுகளைக்கொள்ளுதற்குரியராகிய தாயத்தாரின் வகைகளையறிந்துகொள்ளுதற் பொருட்டுப் புதல்வரின் வகைகள் இவ் வத்தியாயத்திற் கூறப்படும். அத்தியாய இயைபு இதனுற் புலனுதல் அறிக. இனி, முன்னைய அத்தியாயத்தின் இறுதியிற் கூறப்பட்ட 'க்ஷேத்திரஜன்' என்பாளுெடு இனம்பற்றி ஏனையோரையும், அவர்களுள் ஏற்றத்தாழ் வுடையார் இன்னுர் இன்னுர் என்பதையும் இவ்வத்தியாயத்தில் கூறுவான் தொடங்குகின்றுர் எனினுமாம்.

[2] வித்தியவிதை—இடக்கரடக்கல்—மகவைக் குறிக்கும்.

[3] நிலம்—வித்து முளைத்தற்கு இடமாதலின், ஈண்டு ஆகுபெயரால் மனைவியைக் குறிக்கும். எனவே நிலத்தையுடையவன் என்றது அவள் கணவனை என்க. ஒருவன்மனைவியைப் பிறனொருவன் புணர்ந்து மகப் பெற்றுல், அம்மகவு புணர்ந்தவனுக்கே உரியதாகாது; அவள் கணவனுக்கே உரியதாம் என்பது கருத்து.

[4] தாய் மகப்பேற்றிற்குக் கருத்தரிக்கும் அவ்வளவே துணையாவாள். தந்தையே அதற்குச் சிறந்தவன் ஆதலின் வித்தியவனுகிய தந்தைக்கே மகவு உரித்தாதல் வேண்டும் என்பது ஒரு சாரார் கொள்கை என்க.

[5] இரண்டும் உண்மையேயாம்—நிலமும், வித்தும் சேர்ந்தே விளைவுண் டாதலின் நிலம் சிறந்ததென்பார் கொள்கையும் வித்துச் சிறந்ததென்பார் கொள்கையும் ஆகிய இரண்டும் உண்மையாகும் என்றபடியாம். எனவே அவ்விரண்டும் தம்முட் சமமுடைய என்பது போதரும். ஆகலின் நில முடையவனுக்கும் வித்தியவனுக்கும் விளைவு (மகவு) சமனுன உரிமை யுடையது என்பது கௌடலியர் கொள்கையாம் என்க.

[6]மணக்கப்பட்டவளிடத்துத் தனக்குத் தோன்றியவன் 'ஔரசன்' எனப்படுவான். [7]புத்திரிகையின் புதல்வன் அவனுக்குச் சமனும். ஏவப்பட்ட ஒத்த கோத்திரத்தானுலாதல் [8]பிற கோத்திரத்தானுலாதல் [9]நிலத்திற்றோன்றிய புதல்வன் 'க்ஷேத்திரஜன்' எனப்படுவான். [10]பிறப்பித்தவனுக்கு வேறு மகவில்லையாயின் க்ஷேத்திரஜனே [11]இரண்டு தந்தையர்க்கும், [12]இருகோத்திரத்திற்கும், இருவர்க்குமியற்றக்கடவ [13]கடனுக்கும், இருவர் பொருளுக்கும் உரியவனுவான். உறவினருடைய இல்லத்தில் [14]மறைவிற்றோன்றியவன் 'கூடசன்' எனப்படுவான். அவன் க்ஷேத்திரஜ

---

[6] இனி, மக்களைப் பிறப்புப்பற்றி வகைப்படுத்தத் தொடங்குகின்றார்; ஒருவன் விதிப்படி மணந்த தன் மனைவியோடு கூடிப்பெற்ற மகன் 'ஔரசன்' என்று கூறப்படுவான் என்பது.

[7] ஒருவன் தன் மகளை மணம்செய்து கொடுக்குங்கால் 'இவளிடத்துத் தோன்றும் புதல்வன் எனக்குப் புதல்வனுக வேண்டும்' என்று உறுதி செய்துகொண்டு மணமகனுக்குக் கொடுக்கப்பட்ட அம்மகள் 'புத்திரிகை' எனப்படுவாள் என்பதும், அவள்பாற் றோன்றியவன் ஔரசனுக்குச் சமனுவான் என்பதும் கருத்து. பாண்டியமன்னனின் மகள் சித்திராங்கதை என்பாளைத் தீர்த்தயாத்திரையின் பொருட்டு மதுரைக்கு வந்த அருச்சுனனுக்கு மணம்செய்து கொடுத்தபோது, பாண்டியனுக்கு வேறு மகவின்மையால் சித்திராங்கதையைப் புத்திரிகையாகக்கொண்டு அவள் வயிற்றிற்றோன்றியவனுக்கே தன் அரசியலை ஈந்தான் என்னும் மாபாரதக் கதையை ஈண்டு நினைக்க.

[8] ஒத்த கோத்திரத்தான் தகுதியில்லாதவனுக இருப்பின் பிற கோத்திரத்தானைக் கொள்ளலாம் என்பது கருத்து.

[9] நிலம்—ஈண்டு ஏவினவன் மனைவியைக் குறிக்கும்.

[10] பிறப்பித்தவன் — மற்றொருவன் மனைவியிடத்து ஏவப்பெற்று 'க்ஷேத்திரஜன்' என்பானைப் பிறப்பித்தவன்.

[11] இரண்டு தந்தையர் — தாயின் கணவனும், தன்னைப் பிறப்பித்தவனும் என்க.

[12] தன் தாயின் கணவன்கோத்திரமும், தன்னைப் பிறப்பித்தவன் கோத்திரமுமாம்.

[13] கடன்—இறுதிக் கடனும், பிதிர்க்கடனும் ஆம்.

[14] ஒருவன்மனைவி தன் உறவினரின் இல்லத்தில் இருக்குங்கால், அவள் தன்கணவன் உடன்பாடின்றிப் பிறன் ஒருவனை மறைவிற் புணர்ந்து ஈன்ற மகனைக் 'கூடசன்' என்பர் என்க. கூடம்—மறைவு.

னுக்குச் சமனுவான். [15]உறவினரால் கைவிடப்பட்டவன் 'அபவித்தன்' ஆவான். அவன் [16]சடங்கியற்றியவனுக்கு மகனுவான். [17]கன்னியின்புதல்வன் 'கானீனன்' எனப்படுவான். [18]கருவோடு மணக்கப்பட்டவளின்மகன் 'சகோடன்' எனப்படுவான். [19]மறுமணம் புரிந்துகொண்டவளின் மகன் [20]'பௌனர்ப்பவன்' எனப்படுவான்.

[21]ஔரசன் என்னும் புதல்வன் [22]தந்தை, உறவினர் என்னும் இவர்தம் தாயப்பொருளுக் குரியவனுவான். [23]பிறர்க்குப் பிறந்தவர் [24]சடங்கியற்றியவனுடையவற்றிற்கன்றி [25]உறவினருடையவற்றிற்கு உரியராகார். தாய்தந்தையரால் [26]நீரொடு கொடுக்கப்

---

15 உறவினர்—தாய் தந்தையர் முதலியோர்; அவரால் கைவிடப்பட்டவனுக்கு 'அபவித்தன்' என்பது பெயர் என்க.

16 சடங்கு—சாதகன்மம், பெயரீடு, மயிர்களைதல், நூலீடு முதலியன.

17 கன்னி—மணமாகாதவள்.

18 கருவோடு மணக்கப்பட்டவள்–மணமாகுமுன் ஒருவனுடன் சேர்ந்து கருக்கொண்டு, அதன் பின்னர் மற்றொருவனால் மணக்கப்பட்டவள்.

19 மறுமணம் புரிந்துகொள்ளும் மகளிர், புணர்ச்சியில்லாத நிலையிற் கணவன் இறக்க, வேறு கணவனை விதிப்படி மணந்தவளும், முதற் கணவனை வெறுத்து விலக்கி மற்றொருவனை யடைந்தவளும், கணவன் இறந்தபின்னர் ஒத்த கோத்திரத்தான் அல்லது ஒத்த குலத்தவனை மறுமணம் செய்துகொண்டவளும் என மூவகையினராவர்.

20 மறுமணம் செய்துகொண்டவள் 'புனர்ப்பூ' எனப்படுவாள் ஆதலின் அவள்புதல்வன் 'பௌனர்ப்பவன்' ஆவான்.

21 ஔரசன்—மணம் செய்துகொண்ட தந்தைக்குப் பிறந்தவன்.

22 தந்தையும் தந்தையினுடைய உறவினரும் ஆகிய இவர்களுடைய பொருளுக்கு ஔரசன் உரியவன் ஆவான் என்க.

23 பிறர்க்குப் பிறந்தவர் — ஔரசனல்லாத க்ஷேத்திரஜன் முதலியோர்.

24 பிறப்புச் சடங்கு முதலியன இயற்றிய சொந்தத் தந்தையினுடைய பொருளுக்கு மாத்திரம் உரிமையுடையராதலே யன்றி, ஔரசனைப்போலத் தந்தையின் உறவினருடைய பொருளுக்கும் உரியராகார் என்பது கருத்து.

25 உறவினருடையவற்றிற்கு—உறவினருடைய தாயப் பொருளிற்கு.

26 நீரொடு கொடுத்தல்—மறைமொழியோடு நீர் பெய்து கொடுத்தல். இதனால் அவன் பெயர்க்காரணம் புலனாதல் அறிக.

பட்டவன் 'தத்தன்' என்று கூறப்படுவான். அவன் [27]அவனுக்குச் சமனுவான்.

[28]தானேயாதல், உறவினர்வாயிலாகுதல் மகனுக வந்தடைந்தவன் 'உபகதன்' எனப்படுவான். [29]புதல்வனுகக் கற்பித்துக் கொள்ளப்பட்டவன் 'கிருதகன்' எனப்படுவான். விலைக்குக் கொள்ளப்பட்டவன் 'கிரீதன்' எனப்படுவான் [30]என்க.

[31]ஔரசன் தோன்றியபின்னர் சவர்ணர் மூன்றில் ஒருகூற்றிற் குரியவர் ஆவார். அசவர்ணர் ஊண் உடை மாத்திரையே பெறற்பாலார்.

[32]பார்ப்பனனுக்கும் அரசனுக்கும் அடுத்தவள்பால் தோன்றியவர் சவர்ணரும் [33]ஒன்றிடையிட்டவள்பால் தோன்றியவர் அசவர்ணரும் ஆவர்.

---

[27] அவனுக்கு—ஔரசன் என்பானுக்கு. எனவே தந்தை, உறவினர் என்னும் இருபாலார்பொருளுக்கும் தத்தன் உரியவன் ஆவான் என்பது கருத்தாதலறிக.

[28] ஓரிளைஞன் ஒருவனிடத்துத் தானே சென்று 'நான் உனக்கு மகனுவேன்' எனக் கூறி வந்தடைந்தவனும், தன் உறவினரால் ஒருவனிடத்து 'இவன் உன் மகனுகுக' எனக்கூறி, உறவினரால் ஒப்புவிக்கப்பட்டு வந்தவனும் 'உபகதன்' என்னும் பெயர்க்குரியர் என்க.

[29] யாரேனும் ஓரிளைஞனை ஒருவன் தன் குடும்பத்திற் சேர்த்துத் தன் புதல்வன் இவனே எனக்கொண்டு வளர்க்கப்பட்டவன்.

[30] இவ்வளவில் புதல்வர்வகை என்னும் செய்தி முடிவுற்றது என்பது கருத்து.

[31] ஒருவன் க்ஷேத்திரஜன் முதலிய மக்களை முன்னர் உடையவனுயிருந்து, பின்னர் ஔரசனைப் பெறுவானுயின், அந்த க்ஷேத்திரஜன் முதலியோருள் சவர்ணர் என்பார் மூன்றில் ஒருகூறு பெறல்வேண்டும் என்பதும், எஞ்சிய இரு கூறும் ஔரசன் கொள்ளல்வேண்டும் என்பதும், க்ஷேத்திரஜன் முதலியோர் அசவர்ணராயின் ஆயுள்காறும் உண்டியும் உடையும் பெற்றமையக்கடவர் என்பதும் கருத்து.

[32] இனி சவர்ணர் அசவர்ணர் எனக் கூறப்பட்டவர் இன்னின்னுர் எனக் கூறுகின்றுர். அவருள் பார்ப்பனனுக்கு அரசகுலப் பெண்பால் தோன்றியவனும், அரசனுக்கு வணிகப் பெண்ணிடத்தே தோன்றியவனும் சவர்ணர் ஆவர் என்பதாம்.

[33] ஒன்றிடையிட்டவள்—ஒரு வகுப்பிடையிட்டு, அடுத்த வகுப்பில் தோன்றியவள். எனவே, பார்ப்பனனுக்கு வணிகப் பெண்ணிடத்துத் தோன்றியவனும், அரசனுக்குச் சூத்திரப் பெண்ணிடத்திற் றேன்றியவனும் அசவர்ணர் ஆவர் என்றபடியாம்.

[34]பார்ப்பனனுக்கு வணிகப்பெண்ணிடத்துத் தோன்றியவன் 'அம்பட்டன்' எனப்படுவான். [35]சூத்திரப் பெண்ணின்பால் தோன்றியவன் 'நிடாதன்' அல்லது 'பாரசவன்' எனப்படுவான். அரசனுக்குச் சூத்திரப்பெண்ணிடத்துத் தோன்றியவனை 'உக்கிரன்' என்ப.

[36]வணிகனுக்காயின் சூத்திரனேயாம். [37]இவர்களுள் [38]விரத முறை தவறியவனுக்கு [39]ஒத்த குலத்தவளிடத்துத் தோன்றியவன் 'விராத்தியன்' எனப்படுவான். [40]அநுலோமர் இங்ஙனமாவர். [41]சூத்திரனுக்குத் தோன்றியவர் [42]ஆயோகவன், க்ஷத்தன், சண்டாளன் எனப்படுவார்.

வணிகனுக்குத் தோன்றியவர் [43]மாகதன், வைதேககன் எனப் படுவார். அரசனுக்குத் [44]தோன்றியவன் சூதன் எனப்படுவான்.

---

34 இனி அநுலோமரைப்பற்றிக் கூறுகின்றார்.

35 பார்ப்பனனுக்குச் சூத்திரப் பெண்ணின்பால் தோன்றியவன் என்க.

36 வணிகனுக்குச் சூத்திரப் பெண்ணிடத்தில் தோன்றியவனாயின் சூத்திரன் என்றே கொள்ளல்வேண்டும் என்பதாம்.

37 இவர்களுள்—பார்ப்பனன் முதலிய மூவருள்.

38 விரதமுறை தவறுதலாவது :— இரு பிறப்பாளர்க்குக் கூறிய நூலீடு முதலிய சடங்குகளின்றி மணம்செய்துகோடல் முதலியன.

39 ஒத்த குலத்தவள்—பார்ப்பனன் முதலியோருக்கு அவ்வம் மரபுப் பெண்.

40 உயர்ந்த வகுப்புஆடவர்க்கும், தாழ்ந்த வகுப்புப் பெண்டிர்க்கும் தோன்றும் அநுலோமர்கள் இங்குக் கூறியபடி ஆவார் என்பதாம்.

41 இனிப் பிரதிலோமரைப் பற்றிக் கூறுகின்றார்.

42 சூத்திரனுக்கு வணிகப் பெண்ணிடத்துத் தோன்றியவன் 'ஆயோகவன்' எனவும், அரசகுலப் பெண்ணிடத்துத் தோன்றியவன் 'க்ஷத்தன்' எனவும், பார்ப்பனப் பெண்ணிடத்துத் தோன்றியவன் 'சண்டாளன்' எனவும் படுவர் என்பதாம்.

43 வணிகனுக்கு அரசகுலப் பெண்ணிடத்துத் தோன்றியவன் 'மாகதன்' எனவும், பார்ப்பனப் பெண்ணிடத்துத் தோன்றியவன் வைதேககன் எனவுங் கொள்க.

44 அரசனுக்குப் பார்ப்பனியிடத்துத் தோன்றியவன் என்க.

[45]பௌராணிகளுகிய சூதனும், மாகதனும் வேருவர். அந்தணர் அரசர்களினும் [46]முறையே சிறந்தோரும் ஆவர்.

மேலே கூறப்பட்ட [47]பிரதிலோமர்கள் அரசன் தனக்குரிய [48]அறத்தின் வழுவுதலாற் றோன்றியவராவர்.

[49]உக்கிரனுக்கு நிடாதப்பெண்ணிடத்துப் பிறந்தவன் 'குக்குடகன்' ஆம். [50]மாறுபடிற் 'புற்கசன்' ஆம். அம்பட்டனுக்கு வைதேகிகை என்பாளிடத்துப் பிறந்தவன் 'வைணன்' எனப் படுவான். [51]மாறுபடிற் 'குசீலவன்' என்ப.

க்ஷத்தை என்பாளிடத்து உக்கிரனுக்குப் பிறந்தவன் 'சுவபாகன்' எனப்படுவான். ஈண்டுக் கூறப்பட்டவரும், [52]பிறரும்

---

[45] பிருதுச் சக்கரவர்த்தியின் வேள்விநிலத்தில் தோன்றிய பௌராணிகளுகிய சூதனும், மாகதனும் பிரதிலோமசூதன் மாகதன் ஆகிய இவர் தாமோ என்னும் ஐயத்தைப் பரிகரிக்கத் தொடங்குகின்ருர்; புராணப் பிரசங்கஞ் செய்யும் 'உரோமகருடன்' என்னும் வேருெரு பெயரையுடைய சூதன் பிரதிலோம சூதனினும் வேருவான் என்பதும், அவனுடன் வைத்துப் பேசப்படும் மாகதனும் அங்ஙனமே பிரதிலோம மாகதனினும் வேருவான் என்பதும், பெயர் ஒற்றுமையால் மயங்கலாகாது என்பதும் கருத்து. இவ் வேறுபாட்டை விஷ்ணுபுராணம் முதல் அமிசம் மூன்ரும் அத்தியாயத்திலும், அக்கினிபுராணம் முதல் அத்தியாயத்திலும் கூர்ம புராணம் முதல் அத்தியாயத்திலும் விளக்கமாகக் காணலாம்.

[46] சூதன் அந்தணரினும், மாகதன் அரசரினும் சிறந்தவர் என்பது கருத்து.

[47] பிரதிலோமர்கள்—மேலே ஆயோகவன் முதலாகக் கூறப்பட்டவர்.

[48] அறம்—ஈண்டு வருணச்சிரம தருமத்தைக் காப்பாற்றுதல்.

[49] இனி, அந்தராள வகுப்பினரைப்பற்றிக் கூறத் தொடங்குகின்ருர். உக்கிரன்—அரசனுக்குச் சூத்திரப் பெண்ணிடத்துப் பிறந்தவன். நிடாதப் பெண்—பார்ப்பனனுக்குச் சூத்திரப் பெண்ணிடத்துப் பிறந்தவள்.

[50] நிடாதனுக்கு உக்கிரப் பெண்ணிடத்துப் பிறந்தவன் புற்கசன் எனப்படுவான் என்பதாம்.

[51] வைதேககனுக்கு அம்பட்டப்பெண்ணிடத்துப் பிறந்தவன் குசீலவன் எனப்படுவான் என்பதாம்.

[52] பிறர்—ஈண்டுக் கூருதொழிந்த அநுலோம பிரதிலோம ஆடவர் மகளிர்க்குத் தோன்றியவர்கள். இவர்கள் அநுலோமருமாகாது, பிரதிலோமருமாகாது இடைநிகராய ஓர் வகுப்பிற் படுதலின் 'அந்தராளர்' எனப்பட்டார். அந்தராளர்—இடைப்பட்டோர்,

'அந்தராளர்' எனப்படுவார். வைணனே [53]தொழில்பற்றி 'இரதகாரன்' எனப்படுவான்.

[54]இவர்கள் [55]தம்வகுப்பில் மணத்தல்வேண்டும்.

[56]உயர்ந்தவன் தாழ்ந்தவளை மணத்தலும் முன்னோர் ஒழுகியவாற்றான் ஒழுகுதலும் தனக்குரிய அறத்தை நிறுவுதலாம். [57]சண்டாளனல்லாதார் [58]சூத்திரனை ஒப்பார் எனக் கோடலுமாம்.

[59]இவ்வாறு அமைக்கும் அரசன் துறக்கத்தையும் [60]மாறுபட்டவன் நரகத்தையும் அடைவர்.

[61]அந்தராளர் அனைவர்க்கும் கூறு [62]சமனும்.

### சுலோகம்

நாடு, சாதி, குழூஉ, ஊர் என்னும் [63]இவற்றின் வழக்க ஒழுக்கங்களுக்குத் தக தாயபாகம் பகுக்கப்படல்வேண்டும்.

மூன்றும் அதிகரணம் நான்காம் பிரகரணத்தில்
"புதல்வர்வகை" என்னும் அறுபத்துநான்காம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[53] வைணசாதியிற் பிறந்தவன் இரதமியற்றுதல் முதலிய தச்சுத்தொழில் செய்தல்காரணமாக இரதகாரன் எனப்பட்டான் என்பது கருத்து.

[54] இவர்கள்—அந்தராளர்கள்.

[55] அம்பட்டன் அம்பட்டப் பெண்ணையும், நிடாதன் நிடாதப் பெண்ணையும் மணத்தல்போல்வன தம் வகுப்பில் மணத்தல் என்க. அன்றி அம்பட்டன் நிடாதையை மணத்தல் போல்வன தாழ்ந்தவளை மணத்தலாம். இவ்விரண்டு மணமும் இவர்களுக்கு அறத்திற்கியைந்தனவாம்.

[56] அம்பட்டன் நிடாதையை மணத்தல் போல்வன.

[57] சண்டாளன் அல்லாத அந்தராளர்.

[58] சூத்திரனை ஒப்பார் எனவே சூத்திரர்க்கு வகுத்த அறம் இவர்களுக்குமாம் என்றபடியாம்.

[59] இவ்வாறு—மேலே விதித்தபடி.

[60] மாறுபட்டவன்—மேற்கூறிய விதிபிறழ அரசு நடத்திய வேந்தன்.

[61] அந்தராள வகுப்பினராகிய ஆடவர் மகளிர் ஆகிய அனைவருக்கும் என்பதாம்.

[62] சமன்கூறு எனவே இவர்களுள் மூத்தோன்கூறு முதலிய கூறுகள் இல்லை என்றவாறும்.

[63] இவற்றின் வழக்க ஒழுக்கம்—நாடு முதலியவற்றில் தொன்றுதொட்டு வழங்கிவரும் வழக்கநெறி.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## ஐந்தாம் பிரகரணம்—[1]நிலவழக்கு—[2]மனைநிலம்

## அறுபத்தைந்தாம் அத்தியாயம்

நிலத்தைப்பற்றிய வழக்குக்கள் [3]அடுத்துள்ள நிலங்களைப் பிரமாணமாகக்கொண்டு துணியத்தக்கன.

இல்லம், [4]வயல், [5]உபவனம், [6]எல்லைக்கட்டு, ஊருணி, [7]நீர்நிலை என்னும் இவ்வெல்லாம் [8]நிலமாம்.

ஒவ்வோரில்லத்திற்கும் [9]எல்லைக்கோடிகளில் கம்பத்தை நட்டு, இருப்புக்கம்பியை இணைத்துக்கட்டுதல் [10]எல்லைக்கட்டாகும்.

---

### 65-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] நிலம் என்பது ஈண்டு இல்லம், உபவனம், வயல் முதலியவற்றைக் குறிக்கும். இவற்றைப்பற்றிய வியவகாரம் நிலவழக்காகும். மனையிடம், உபவனம், வயல் முதலியன தாயபாகமாகக் கொண்டு கூறு செய்யப்பட்டாலும், எப்பொழுதும் அவை சேர்ந்திருக்கும் நிலையிலேயே உள்ளமையால் அடிக்கடி அவற்றைப்பற்றிய வழக்கு நேர்தல் இயல்பு. அவ்வழக்குக்களை ஆராய்ந்து துணிந்து ஒழுங்கு செய்தல் இப்பிரகரணத்திற் கூறப்படுவதாகும். இது தாயபாகத்தை ஒட்டி நிகழ்வதால் அதன்பின் வைக்கப்பட்டது. இதனுற் பிரகரண இயைபு புலனுதலறிக.

[2] இப் பிரகரணம் மனைநிலம், நிலவிலை, புன்னிலவயல்வழித்தடை என்னும் மூன்று அத்தியாயங்களைத் தன்னுட்கொண்டது. இம்மூன்றனுள் முதலாவதாகிய மனைநிலத்தைப் பற்றிய செய்திகள் இதன்கட் கூறப்படும்.

[3] பக்கத்து நிலங்களின் எல்லைகளைக்கொண்டு இன்னதெனத் துணிய வேண்டும் என்பது கருத்து.

[4] வயல்—நன்செய்; இது இனமாகிய புன்செய்க்குமாம்.

[5] உபவனம்—இன்பவிளையாட்டுநிமித்தம் அமைக்கப்படும் இளமரச் சோலை.

[6] இஃது இன்னது என்பதைப் பின்னர்க் காண்க.

[7] நீர் நிலை—ஏரி, குளம் முதலியன.

[8] நிலம் என்று இங்கே குறிக்கப்பட்டதை முதனூல் ‘ வாஸ்து ’ என்று கூறும்.

[9] எல்லைக்கோடி—அவ்வவ்வில்லங்களுக்கென அளவிட்டமைத்த வரம்பு.

[10] இவ் வெல்லைக்கட்டு நிலையியற் பொருளுக்குத் தலைவனுகிய எல்லை காவலனுல் அமைக்கப்படுவது.

[11]எல்லைக்கட்டுவெளியைக் கடவாமல் இல்லம் அமைத்தல் வேண்டும்.

[12]முன் இல்லாதவிடத்துப் பிறனுடைய [13]சுவரில் நின்றும் [14]இரண்டுமுழம் அல்லது மூன்று அடி விட்டு [15]அடிப்படையமைக்கலாம்.

[16]பத்துநாள் வரை மகப்பெற்றவளுக்காக அமைக்கப்படும் பள்ளத்தையன்றி, நீர் மலங்கழிக்குமிடம், [17]தூம்பு, கிணறு என்னும் இவற்றை இல்லத்திற்குப் பொருத்தமான இடத்தில் அன்றி [18]வேற்றிடத்தில் அமைத்தலாகாது. [19]இதனை மீறி நடந்தால் பூர்வசாகசம் தண்டமாம்.

[20] இதனால் [21]மங்கலகாரியங்களில் விறகுவெட்டுமிடம், [22]கழுவுநீர்ஒழுகும்வழி இவற்றிற்கும் [23]கூறப்பட்டபடியாம்.

---

11 எல்லைக்கு உட்பட்ட நிலத்திலேயே வீடு கட்டவேண்டும் என்பது.

12 எல்லைகாவலனால் எல்லைக்கட்டு முன் அமைக்கப்படாத இடத்தில் என்பது.

13 சுவர்—வீட்டுச் சுவர்.

14 இரண்டு முழம் அல்லது மூன்றடியளவுள்ள இடைவெளியை விட்டென்பது.

15 அடிப்படை—தன் வீட்டுச் சுவர்க்குரியது.

16 கருவுயிர்த்தவளைத் தூய்மை செய்தலால் உண்டாம் கழிவுநீர் தங்குதற்கு ஒரு பள்ளம் தோண்டிப் பத்துநாள்வரை பயன்படுத்திப் பின்னர் நல்ல மண்ணையிட்டு அக்குழியைத் தூர்த்துவிடல்வேண்டும் என்பதும், அக்குழியை இன்ன இடத்தில் என்பதின்றி, வாய்ப்பான ஓரிடத்தில் அமைத்துக்கொள்ளலாம் என்பதும் கருத்து.

17 தூம்பு—வீட்டில் கழிவுநீர் செல்லும் மதகு.

18 வேற்றிடம்—அயல் வீட்டிற்குத் தீங்கு விளைத்தற்குக் காரணமான இடம்.

19 இதனை—இங்கே கூறப்பட்ட விதியை.

20 இதனால்—கருவுயிர்த்தவளுக்குக் கூறிய விதியினால்.

21 மங்கல காரியம்—திருமணம் முதலிய விசேடங்கள்.

22 கழுவுநீர்—கைகால் கழுவுதலாலும், அடுக்களையில் அரிசி முதலியன களைதலாலும் வெளிப்படும் நீர்.

23 திருமணம் முதலிய விசேட காரியங்களில் அக்காரியங்கள் முடியும் வரை விறகு வெட்டுமிடம், கழுவுநீர் ஒழுகும் வழி இவற்றை விருப்பப்படி அமைத்துக்கொள்ளலாம் என்பது கருத்து.

மூன்றடி அல்லது ஒன்றரை முழம் [24]விட்டு [25]நிலத்தினுள்ளே தடையின்றி [26]நீர் வடியுமாறு தூம்பினையும், [27]அங்ஙனமே அந்நீர் வீழுமிடத்தையும் அமைத்தல்வேண்டும். இதனைக்கடந்து செய்யின் ஐம்பத்துநான்குபணம் தண்டமாம்.

ஓரடி அல்லது ஒருமுழம் [28]விட்டு வண்டி, [29]நாற்கால்விலங்கு, அடுப்பு, நீர்த்தொட்டி, திரிகை, உரல் என்னும் இவற்றிற்கு இடம் அமைத்தல்வேண்டும். [30]இதனைக் கடந்து செய்யின் இருபத்து நான்குபணம் தண்டமாம்.

எல்லாவகையான மனைக்கட்டுகளிலும் [31]சாலைகள் [32]ஒன்றனோடொன்று நெருக்கமாக அமைக்க நேரின், ஒருமுழம் எட்டங்குலமாதல் மூன்றடியாதல் [33]இடைவெளி விடல்வேண்டும். [34]அவற்றின் [35]கூரைமுனைகளுக்கு இடையே நான்கு அங்குலம் வெளி விட்டாவது, ஒன்றன்மேலொன்று அமையும்படியாவது செய்தல் வேண்டும். [36]சிதைவு திருத்தற்பொருட்டு இடைவெளியில் ஒரு முழம் எட்டங்குல அளவில் [37]அரிய சிறு வாயில்வழி யமைத்தல்

---

24 விடுதல்—அயல் வீட்டுச் சுவரினின்றும் இடைவெளி விடுதல்.

25 நிலம்—தனக்குரியது.

26 நீர்—கழிவுநீர்.

27 தூம்புக்குக் கூறியபடி அயல்வீட்டுச் சுவரினின்றும் மூன்றடி அல்லது ஒன்றரை முழம் இடைவெளி விட்டு நீர்விழுமிடத்தை அமைத்தல் வேண்டும் என்பது.

28 விடுதல்—ஈண்டும் அயல்வீட்டுச் சுவரினின்றும் இடைவெளி விடுதல்.

29 நாற்கால் விலங்கு—ஆடு, மாடு, குதிரை, யானை முதலியன.

30 இதனை—இவ்விதியை.

31 சாலை—இல்லத்தின் ஒரு பகுதி.

32 ஒன்றனோடொன்று—தன்வீட்டுப் பகுதியும், அயல்வீட்டுப் பகுதியும்.

33 தன் வீட்டுச் சுவர்க்கும், அடுத்த வீட்டுச் சுவர்க்கும் இடையில் வெளிவிடல் வேண்டும் என்பது.

34 அவற்றின்—சாலைகளின்.

35 கூரை—மேன்மூடல்.

36 சிதைவு திருத்தல்—நெருங்கியிருக்கும் இரண்டு இல்லங்களிலும் பழுது ஏற்படின் திருத்தம் செய்தல்.

37 அருமை—ஈண்டு மக்கள் எளிதிற் போக்குவரத்து செய்தற்கு இயலாமை.

வேண்டும். வெளிச்சத்தின்நிமித்தம் மேற்பாகத்தில் சிறு [38]பலகணி அமைத்தல்வேண்டும். இல்லத்திற்குரியவர் ஒற்றுமைப்பட்டு தம் விருப்பப்படியும் [39]செய்துகொள்ளலாம். விருப்பமின்றேல் தவிர்த்துவிடல் வேண்டும்.

[40]வீட்டுத் தாழ்வாரங்களில் மூடத்தகுந்த மேற்பாகத்தையும், [41]சிறு சுவர்களையும் [42]கடம் என்னும் புல்லால் மழையாற் கேடு நேராமைப்பொருட்டு வேய்தல்வேண்டும். இதனைக்கடப்பின் பூர்வ சாகசம் தண்டமாம்.

அரசவீதி, பெருந்தெரு என்னும் இவை[43]யல்லாத இடங்களில் [44]இடையூருக வாயில்வழி, பலகணி இவற்ருல் தடையுண்டாக்கினும் [45]ஆம்.

[46]பள்ளம், படிக்கட்டு தூம்பு, [47]மேற்றளப்படி, [48]ஒதுக்கிடம் என்னும் இவற்ருல் பொதுமக்களுக்கு இடையூறுசெய்யினும் [49]அநுபவத்திற்குத் தடைசெய்யினும் பூர்வசாகசம் தண்டமாம்.

பிறருடைய சுவர்க்கு நீரினுல் கேடுவிளைப்பின் பன்னிரண்டு

---

38 பலகணி—சாளரம்.

39 மேலே கூறிய இடைவெளிமுதல் பலகணிவரை உள்ளவற்றைக் கூறப்பட்டபடியும், வேருகவும் செய்துகொள்ளலாம் என்பது.

40 வீட்டினுட்புறமும், வெளிப்புறமுமுள்ள தாழ்வாரம் என்பது.

41 சிறுசுவர்—வீட்டுத் தோட்டம் முதலியவற்றில் அமைக்கப்படுவது.

42 கடப்புல்—வீட்டுமேற்கூரைகளில் பரப்புதற்குரிய ஒருவகைப் புல்; மழை, வெய்யில் முதலியவற்ருல் விரைந்து கெடாதது.

43 அல்லாத இடங்களில் என்றதனுல் அரசவீதி, பெருந்தெரு என்னும் இவற்றிற்கு எதிராக வாயில்வழி, பலகணிகளின் அமைப்புப் பிறர்க்குத் தடையாக ஏற்படினும் குற்றம் இன்ரும் என்பது பெற்ரும்.

44 பிறவீட்டுமக்களுக்கு இடையூருக என்பது.

45 பூர்வசாகசம் தண்டமாம் என்பது.

46 பள்ளம்—கழிவுநீர் தங்குதற்கு அமைப்பது.

47 மேற்றளப்படி — மேன்மாடிக்கு ஏறுதற்பொருட்டு அமைக்கப் படுவது.

48 ஒதுக்கிடம்—நீர் மலங்கழிக்குமிடம்.

49 அநுபவம்—மற்றையோர் தமக்குரிய நிலங்களை அநுபவித்தல்.

பணம் தண்டமாம். மலமூத்திரங்களால் [50]கேடுவிளைப்பின் [51]இரு மடங்காம்.

மழைபெய்யும்பொழுது [52]சலதாரையைத் திறந்துவிடல் வேண்டும். [53]இன்றேல் பன்னிரண்டுபணம் தண்டமாம்.

[54]தடுக்கப்பட்டும் விலகாமலிருக்கின்றவனுக்கும் ஆம். கடுஞ் சொல், களவு, [55]வன்செயல், [56]கவர்ந்துகொள்ளல், [57]உடல் தூய்மையின்மை என்னும் இவை [58]யல்லாதவிடத்து அடிமை யாளை [59]விலக்கினவனுக்கும் [60]ஆம். [61]தானே விலகி வெளிப்படு பவன் எஞ்சிய ஆண்டுக்குள்ள விலைத்தொகையைக் கொடுத்து விடல் வேண்டும்.

---

[50] கேடு—பிறர்சுவர்க்கென்பது.

[51] இரு மடங்கு—இருபத்துநான்கு பணம் தண்டமாம் என்பது.

[52] சலதாரை—கழிவுநீர் வழியும் சாக்கடை.

[53] மழை பெய்யும்பொழுது சாக்கடையைத் திறவாமலும் பெய்யாத பொழுது திறந்தும் விடின் தண்டமாம் என்பது.

[54] இனி விலைகொடுத்து அடிமையாகக் கொள்ளப்பட்டவனைப் பற்றிக் கூறுகின்றார்; 'இத்துணைநாள் நீ என்னிடத்திருந்து பணிசெய்தல் வேண்டும்' என்று தலைவனால் அறுதியிடப்பட்ட காலம் முடிவடைந்ததும், 'இனி நீ இங்கிருத்தல் வேண்டாம்' என்று விலக்கப்பட்டும் விலகாமலிருக் கும் அடிமையாளுக்கும் மேற்குறிப்பிட்ட பன்னிரண்டு பணம் தண்டமாம் என்பது.

[55] ஒன்றையும் எதிர்பாராது செய்யும் பலாத்காரச் செயல்.

[56] கவர்ந்துகொள்ளல்—மகளிரைப் பற்றிக்கோடல்.

[57] உடல்தூய்மையின்மை — அடிமையாளின் உடம்பு நீராடுதல் முதலியவற்றால் கழுவப்படாதிருத்தல்.

[58] அல்லாதவிடத்து என்றதனால் அடிமையாள் இவற்றையுடையவனாக இருப்பானாயின், அறுதியிட்ட காலத்திற்கு இடையே விலக்கிவிடலாம் என்பது போதரும்.

[59] விலக்கினவன்—விலைகொடுத்து அடிமைகொண்டவன்.

[60] பன்னிரண்டு பணம் தண்டமாம் என்பது.

[61] தலைவனால் விலக்கப்படாமல் அறுதியிட்ட காலத்திற்கு இடையே தானே விலகிக்கொள்ளும் அடிமையாளன், வேலைசெய்யவேண்டிய எஞ்சிய காலத்திற்குரிய விலைத்தொகையைத் தலைவனுக்குத் திருப்பிக்கொடுத்து விடல் வேண்டும் என்பது.

[62]பொதுவாகவுள்ள இல்லத்தில் உதவிசெய்யாதவனுக்கும், வீட்டின் [63]பொதுஅநுபவத்தைத் தடைசெய்பவனுக்கும் பன்னிரண்டுபணம் தண்டமாம். [64]கேடுவிளைவிப்பவனுக்கு இருமடங்காம்.

### சுலோகம்

[65]வீட்டுவாயில், முற்றம், [66]ஒதுக்கிடம், அடுக்களை, [67]குற்றுமிடம் என்னும் இவையும், எல்லா [68]வெளிநிலங்களும் [69]பொதுவான அநுபவத்திற்குரியவைகளாம்.

மூன்றும் அதிகரணம் ஐந்தாம் பிரகரணத்தில்
"மனைநிலம்" என்னும் அறுபத்தைந்தாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

62 இருவர்க்குப் பொதுவாகவுள்ள ஒரு வீட்டில் ஒருவனது அநுபவத்திற்கு உதவிசெய்யாத மற்றொருவனுக்கென்பது கருத்து.

63 இருவர் பொதுவாக அநுபவிக்கவேண்டிய பகுதியில் ஒருவனை அநுபவிக்கவொட்டாமல் தடைசெய்யும் மற்றொருவனுக்கென்பது.

64 கேடுவிளைத்தல்—பொதுவாகவுள்ள இல்லப் பகுதிக்கென்பது.

65 பொதுவாகவுள்ள ஒரு வீட்டில் இருவர் குடியிருந்தால், பொதுவாக அநுபவிக்கவேண்டிய பகுதிகளை இச்சுலோகத்திற் குறிப்பிடுகிறார்.

66 ஒதுக்கிடம்—நீர் மலங்கழிக்குமிடம்.

67 உரல், உலக்கை வைத்து நெல் முதலியன குற்றுமிடம்.

68 வெளி நிலங்கள்—வீட்டிற்கு அடுத்துள்ளவை.

69 இங்கே கூறப்பட்ட பகுதிகள் பொதுஅநுபவத்திற்குரியவை என்றதனால், மற்றைய பகுதிகள் பிரிக்கப்பட்டுச் சிறப்பான அநுபவத்திற்குரியவையாம் என்பது போதரும்.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## ஐந்தாம் பிரகரணம்—நிலவழக்கு–[1]நிலவிலை

## அறுபத்தாரும் அத்தியாயம்

ஞாதியர், அயல்வீட்டுக்காரர், [2]பொருளாளர் என்னும் இவர்கள் [3]முறையே மனைநிலம் முதலியவற்றை விலைக்குக்கொள்ளுதற்குத் [4]தகுதியுள்ளவர் ஆவர். [5]அதன்பின்னர் வெளியிடத்துள்ள [6]பிறர் ஆவர்.

[7]அணிமையிலுள்ள நாற்பது வீட்டிற்குரியவர்கள் வீட்டின் முன்னிலையில் [8]நின்று வீட்டை விற்பதாகக் [9]கூறல்வேண்டும்.

---

### 66-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] மனைநிலம் என்னும் முன் அத்தியாயத்தில் இல்லம் அமைக்கும் முறை முதலியன கூறப்பட்டன. இவ் வத்தியாயத்தில் அவ் வில்லம் முதலியவற்றை விலைகொடுத்துக் கொள்ளல் விற்றல் முதலிய செய்திகள் கூறப்படுதலின் அத்தியாய இயைபுண்மையறிக.

[2] பொருளாளர்—கடன் கொடுப்போர்.

[3] முறையே என்றதனுல் முன்னவர் இல்லையாயின், பின்னவர் கொள்ளுதற்குரியர் என்பது பெறப்படும்.

[4] ஒருவனுடைய வீடு அல்லது மனைநிலத்தை விற்கநேர்ந்தால், ஞாதியர் முதலியோர்க்குக் கூறிய முறைப்படியே விற்கவேண்டுமேயன்றி, அவரிருக்கப் பிறர்க்கு விற்ருல், அவருக்குத் தீங்கு செய்ததாக முடியும் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது.

[5] ஞாதியர் முதலியோர் இல்லையாயினும், இருந்தும் விலைகொடுத்துப் பெறுதலில் அவர்க்கு விருப்பமில்லையாயினும் என்பது.

[6] பிறர் விலைகொடுத்துப்பெறுதற்குத் தகுதியுடையவர் ஆவர் என்பது.

[7] அணிமை—விற்கப்படும் வீட்டிற்குப் பக்கம்.

[8] நின்று—பக்கத்துள்ள நாற்பது வீட்டுக்காரர்களோடு கூடி நின்றென்பது.

[9] ஒரு வீட்டை விற்க முயலும்போது அவ்வீட்டிற்குரியவன் பக்கத்துள்ள நாற்பது வீட்டுக்காரர்களுக்கும் அறிவித்து அவர்கள் அறியும்படி தன் வீட்டின் முன்னிலையில் நின்று விற்பதாக வெளிப்படுத்துக் கூறவேண்டும் என்பது கருத்து.

[10]பக்கத்துள்ள ஊர்ப்பெரியோர்களிடத்தில் [11]நன்செய், புன்செய், உபவனம், எல்லைக்கட்டு, ஊருணி, நீர்நிலை என்னும் இவற்றின் எல்லைகளைக்காட்டி, அவ்வெல்லைக்குட்பட்ட அநுபவப்பகுதிகளையும் [12]தெரிவித்தல்வேண்டும். "இன்னவிலைக்குக் கொள்ளுவோன் யாவன்?" என்று உரத்த குரலில் [13]மூன்றுமுறை கூறப்பட்டவற்றைத் தடையில்வழிக் கொள்ளுவோன் விலைகொடுத்துக் கொள்ளல்வேண்டும்.

[14]எதிரிடையால் விலை [15]உயர்த்தப்படுமானால் உயர்த்தப்பட்ட விலையை [16]உல்குபொருளோடு [17]கருவூலத்திற் சேர்ப்பித்தல்வேண்டும். [18]அவ்வுல்குபொருளை விலையுயர்த்தியவன் கொடுத்தல் வேண்டும்.

[19]உரியவனல்லாதவன் விலைகூறின் இருபத்துநான்குபணம் தண்டமாம். [20]ஏழுநாள் வரை வரவில்லையானால் விலைகூறினவன்

---

[10] வீடு விற்பதைப்பற்றிச் சொல்லிவிட்டுப் பின் பிற நிலம் முதலியவற்றைப்பற்றிக் கூறுகின்றார்; பக்கத்துள்ள ஊர்ப்பெரியோர்கள் — தன் வீட்டிற்குப் பக்கத்துள்ள அவ்வூர்ப் பெரியோர்கள்.

[11] நன்செய் முதலியன விற்றற்குரியவை.

[12] விற்கப்படும் நிலப்பகுதிகளின் எல்லைகள் இவை, அவ் வெல்லைக்குட்பட்ட அநுபவப் பகுதிகள் இவை என்று விளக்கமாகத் தெரிவித்தல் வேண்டும் என்பது.

[13] மூன்று முறை தெரிவிக்குங்காறும் ஞாதியர் முதலியோரால் தடை ஏற்படாதவிடத்துக் குறிப்பிட்ட விலைக்குக் கொள்ளுவோன் விலைகொடுத்துக் கொள்ளக்கடவன் என்பது கருத்து.

[14] எதிரிடை—விலைக்குக் கொள்ளுவோர் ஒருவரையொருவர் எதிர்க்கு முகமாக.

[15] விற்பவன் குறித்த விலையினும் அதிகப்படுமானால் என்பது.

[16] உல்குபொருள்—விலைப்பண்டங்கட்கு இறையாய சுங்கப் பொருள்.

[17] கருவூலம்—ஈண்டு அரசனுடையது.

[18] அவ்வுல்கு பொருள்—உயர்த்தப்பட்ட விலைக்குரியது.

[19] நிலத்திற்குரியவனல்லாதவன் என்பது.

[20] இன்ன விலைக்குப் பெறுவேன் என்று உடன்பட்டுச் சென்றவன் ஏழுநாள் வரை பத்திரப்பதிவிடத்திற்கு வரவில்லையானால், விலை கூறினவன் அந்நிலத்தை மற்றொருவனுக்கு விற்றுவிடலாம் என்பது கருத்து.

விற்றுவிடலாம். விலைகூறினவன் [21]மீறின் [22]மனைநிலமாயின் இரு நூறுபணம் தண்டமாம். [23]பிறபொருளாயின் இருபத்துநான்கு பணம் தண்டமாம். [24]நிலவிலை இங்ஙனம் கூறியபடியாம்.

[25]இரண்டு சிற்றூர்களின் [26]எல்லைவழக்கை அடுத்துள்ள ஐந்துசிற்றூர்களாதல், பத்துச்சிற்றூர்களாதல் [27]ஒன்றுகூடி [28]இயற்கையும் [29]செயற்கையுமாகிய எல்லைகளால் துணிதல் வேண்டும்.

[30]உழவன், ஆண்டுமுதிர்ந்த ஆயன், முன் அநுபவமுடையவன், எல்லைகளை [31]நன்கறிந்த உள்ளூரான் என்னும் இவருள் பலராதல், ஒருவனாதல் எல்லைவரையறையை நன்றாக அறிந்து கொண்டு [32]உருமாற்றமுடையராய் எல்லையைக்காட்டல்வேண்டும். குறிப்பிடப்பட்ட எல்லையைக் காட்டவில்லையாயின் ஆயிரம்பணம்

---

[21] மீறுதலாவது — உடன்பட்டவனை ஏழுநாள் வரை எதிர்பாராது பிறனொருவனுக்கு விற்றுவிடல்.

[22] விலைகூறப்பட்ட பொருள் என்பது.

[23] பிறபொருள்—நாற்கால் விலங்கு முதலியன.

[24] மனைநிலங்களை விற்கும் முறை இவ்வாறும் என்பது.

[25] இனி, எல்லைவழக்கைப்பற்றிக் கூறுகின்றார்.

[26] எல்லைவழக்கு—எல்லைமாற்றத்தால் ஏற்படும் வழக்கு.

[27] ஐந்து சிற்றூர்கள் அல்லது பத்துச் சிற்றூர்களிலுள்ள வழக்கியலறிந்த பெரியவர்கள் ஒன்றுகூடி என்பது கருத்து.

[28] இயற்கை—மலை, ஆறு, காடு முதலிய நிலையியற் பொருள்கள்.

[29] செயற்கை—கரி சாம்பல் முதலியன.

[30] எல்லையைத் துணிதற்கு அடுத்தஊர்ப்பெரியோர் இல்லையானால் செயற்பாலது இன்னது எனக் குறிப்பிடுகிறார். உழவன், இடையன் முதலியோர் அடிக்கடி நிலஎல்லைகளைக் காண்பவராதலின், அவர் அறிந்து தெரிவிக்கவேண்டும் என்று குறிப்பிட்டது பொருத்தமே.

[31] நன்கறிதல்—அழிந்துபோன எல்லையிடத்தைப் பிறழாமல் அறிதல்.

[32] எல்லையைக் காட்டுங்கால் பெண்களுக்குரிய செந்நிறமான ஆடை, மாலை, அணிகலன் முதலியவற்றை மேற்கோடல் வேண்டும் என்பது கருத்து. இங்ஙனம் உருமாற்றிக்கொள்ளுதல் எல்லைகாட்டினவன் இன்னான் என்பது வெளிப்படாமைப்பொருட்டு.

தண்டமாம். [33]துணியப்பட்டபின் எல்லையைக் [34]கவர்ந்துகொள்வோருக்கும், எல்லை [35]வரம்பைச் சிதைப்பவர்களுக்கும் [36]அதுவே தண்டமாம்.

எல்லையும் [37]ஆட்சியும் [38]அறியப்படாதநிலையில், அவ்வெல்லைக்குட்பட்ட நிலத்தை அரசன் [39]உதவியாமாறு பகுத்தல்வேண்டும்.

நிலவழக்கைப் பக்கத்துள்ள ஊர்ப்பெரியோர்கள் துணிதல் வேண்டும். அவர்களுக்குக் கருத்து [40]இரண்டுபடின், [41]பலர், தூய்மையுடையோர், மதிக்கப்பட்டோர் என்னும் இவர்களின் கருத்துக்கேற்பத் துணியலாம். [42]நடுவாகவும் கொள்ளலாம். [43]அவ் விரண்டும் ஏற்றுக்கொள்ளப்படவில்லையானால் அந்நிலத்தையும், உரியவனில்லாத நிலத்தையும் அரசன் எடுத்துக்கொள்ளலாம். [44]உதவியாமாறும் பகுக்கலாம்.

---

[33] துணியப்பட்டபின் — எல்லை இன்னதென்று நிச்சயித்து அறியப்பட்டபின்.

[34] கவர்ந்துகோடல் — எல்லையின் அடையாளத்தை மாற்றி உட்பட்ட நிலத்தை அபகரித்துக்கொள்ளுதல்.

[35] வரம்பைச் சிதைத்தலாவது, வரம்பிலுள்ள மரம் முதலியவற்றை அழித்தலாம்.

[36] அது—ஆயிரம்பணம்.

[37] ஆட்சி—அநுபவம்.

[38] எல்லையும் சிதைந்து அநுபவமும் இன்னருடையது என்று அறியப்படாத நிலையில் என்பது கருத்து.

[39] அந்நிலத்தை எப்பகுதியோடு சேர்த்தால் மக்களுக்கு உதவியாக இருக்குமோ அப்பகுதியில் சேர்த்தல்வேண்டும் என்பது.

[40] தீர்மானிப்பதில் கருத்துவேறுபாடு ஏற்படுமாயின் என்பது.

[41] கருத்துவேறுபாடுடைய அக்குழுவில் பலர் ஒன்றுபடுதல், தூய்மையுடையோர் நன்கு மதிப்புடையோர் ஒன்றுபடுதல் எவ்வாறோ, அவ்வாறே அவ்வழக்கைத் துணிதல்வேண்டும் என்பது கருத்து.

[42] கருத்துவேறுபாடு ஒத்த அளவில் இருக்குமானால், வழக்குப்பொருளைச் சமனாகப்பிரித்துக் கொடுத்துவிடலாம் என்பது கருத்து.

[43] அவ்விரண்டும்—பலர் ஒன்றுகூடித் துணிதல், ஒத்த அளவாகத் துணிதல் என்னும் இருவகையும்.

[44] உரியவனில்லாத நிலத்தை அன்னான் தாயபாகத்திற்குரியவர் பொருட்டும் பிரித்துக் கொடுத்துவிடலாம் என்பது கருத்து.

நிலத்தை வலிந்து கவர்ந்தவனுக்கு [45]திருட்டுக்குரிய தண்டமாம். [46]காரணத்தை முன்னிட்டுக்கொள்ளப்படின் [47]உழைப்பையும், [48]பயனையும் [49]அளந்து கணக்கிட்டு மிகுதிப்படுவதைக் கொடுத்துவிடல் வேண்டும். எல்லையை [50]அழித்துவிடின் பூர்வ சாகசம் தண்டமாம். எல்லையை [51]வேறுபடுத்தின் இருபத்து நான்குபணம் தண்டமாம்.

இதனால் தவவனம், புன்னிலம், பெருவழி, சுடலை, திருக்கோயில், வேள்விச்சாலை, அறச்சாலை என்னும் இவற்றைப்பற்றிய வழக்குக்களுக்கும் [52]கூறப்பட்டபடியாம். எல்லைநிலை இங்ஙன்மாம்.

[53]எல்லா வழக்குக்களும் பக்கத்து நிலங்களின் நிமித்தமாக

---

[45] அதனைத் திருடினவனுக்கு விதிக்கப்படும் தண்டம் இவனுக்குமாம் என்பது.

[46] காரணம்—கடன்கொடுத்தல் முதலியவற்றிற்கு ஈடாதல்.

[47] உழைப்பு—நிலத்தைக்கொண்டவன் அதனைப் பண்படுத்தல் முதலியவற்றால் ஏற்படுவது.

[48] பயன்—அந்நிலத்தினின்றும் கிடைப்பது.

[49] அந்நிலத்தினின்றும் உண்டாகிய பயனில் உழைப்பிற்குரிய பகுதியைக் கழித்து எஞ்சியது வரவேண்டிய கடனளவிற்கு மேற்பட்டுக் காணப்படுமானால், அம்மிகுதியை நிலமுடையானுக்குக் கொடுத்துவிடல் வேண்டும் என்பது. அஃதாமாறு—ஒருவன் மற்றொருவனுக்குக் கடனாகக்கொடுத்த நூறு ரூபாய்க்கு ஈடாகக் கடன் வாங்கினவனது நிலத்தைக் கொள்ளுவானானால், அந்நிலத்தைப் பண்படுத்தி விளைபொருள் உண்டாக்கவேண்டும் என்பதும், அவ்விளைபொருள் நூற்றைம்பது ரூபாய் விலைமதிக்கத்தக்கதாயிருப்பின், கடனுக்காக ரூபாய் நூறும், உழைப்பிற்காக ரூபாய் இருபத்தைந்தும் போக எஞ்சிய ரூபாய் இருபத்தைந்தை நிலமுடையானுக்கு நிலத்துடன் கொடுத்துவிடல் வேண்டும் என்பதும் போல்வனவாம்.

[50] எல்லைவரம்பைக் கெடுத்து அவ்வெல்லைக்குட்பட்ட நிலத்தையும் கவர்ந்துகொள்ள ஒருவன் முயன்றால் என்பது.

[51] வேறுபடுத்தல் என்பது எல்லையைப் பிறிதோரிடத்தில் மாற்றியமைத்து, பிறநிலத்தின் ஒருபகுதியைக் கவர்ந்துகொள்ள முயல்வதைக் குறிக்கும்.

[52] இல்லம் முதலியவற்றின் எல்லைவழக்குக்களுக்கு மேலே கூறப்பட்ட விதிகளையே தவவனம் முதலியவற்றிற்கும் கொள்ளல்வேண்டும் என்பது.

[53] அடுத்துள்ள நிலங்களுள் ஒன்றனால் ஒன்றுக்கு இடையூறு நேருங்கால் அவ்விடையூற்றைப் பரிகரித்துக்கொள்ளும் பொருட்டு வழக்குக்கள் நிகழும் என்பது கருத்து.

நிகழ்வனவாம். [54]புன்னிலம் [55]செப்பனிட்டநிலம், வயல், தோட்டம், [56]களம், இல்லம் [57]ஊர்திநிலையம் என்னும் இவற்றுள் [58]முன்னதற்குப் பின்னதனால் ஏற்படும் இடையூறு ஏற்றுக்கொள்ளத் தக்கதாம்.

[59]மறைக்காடு, [60]சோமவனம், தெய்வநிலையம், வேள்விச்சாலை, அறச்சாலை என்னும் இவை [61]யல்லாதவைகள் செப்பனிட்ட நிலங்களாகும்.

பள்ளம்தோண்டுதல், வாய்க்கால்வெட்டுதல், [62]வயலாக்கல் என்னும் இவற்றால் பிறன்வயல்நிலத்தில் வித்திய வித்துக்களுக்குக் கேடுவிளைப்பின் [63]கேட்டிற்குரிய விலையைக் கொடுத்துவிடல் வேண்டும். வயல், தோட்டம், எல்லைக்கட்டு என்னும் இவற்றுள்

---

[54] வழக்குக்குரிய நிலங்களுள் ஒன்றனால் பிறிதொன்றுக்கு இடையூறு ஏற்படுமாயின், அப்பொழுது செய்யவேண்டியது இன்னதென்பதைக் கூறுகின்றார்.

[55] செப்பனிட்ட நிலம்-செடிகொடிகளில்லாமல் வெட்டிப் பண்படுத்தப் பட்ட நிலம்.

[56] களம்—தானியங்களைப் புடைத்து எடுக்குமிடம்.

[57] ஊர்திநிலையம்—குதிரை எருதுகளுக்குரிய கொட்டில்.

[58] இங்கே கூறப்பட்ட புன்னில முதலியவற்றுள் முறையே முன்னர்க் கூறியதற்குப் பின்னர்க்கூறியது சிறந்ததாகும் ஆதலின் பின்னது திருத்தம் அடையுங்கால் அதனால் முன்னதற்கு இடையூறு விளையுமாயின் அது விலக்கத்தக்கதன்று என்பது கருத்து. எடுத்துக்காட்டாக செப்பனிட்ட நிலத்தைக்குறித்துப் புன்னிலத்திற்கு இடையூறு உண்டாகுமாயின், அதனை ஏற்றுக்கொள்ளலாம் என்பதைக் கொள்ளலாம். இங்ஙனமே ஏனையவற்றிற்கும் கொள்க.

[59] மறைக்காடு—வேதமோதும் காடு.

[60] சோமவனம்—சோமப்பூண்டுகளை உண்டாக்கி வளர்த்தற்குரிய காடு.

[61] மேலே செப்பனிட்ட நிலங்கள் என்று கூறப்பட்டவற்றுள் இங்கே கூறிய மறைக்காடு முதலியனவும் அடங்குமாயினும் இவையல்லாத செப்பனிட்ட நிலங்களையே வயல்களுக்குத் தகுதியாகச் செய்யலாம் எனவும், மறைக்காடு முதலியவற்றை அழித்து வயல்நிலங்களாக்கலாகாது எனவும் கொள்ளல்வேண்டும்.

[62] செப்பனிட்ட நிலத்தை வயலாகச்செய்தல் என்பது.

[63] கேட்டிற்குரிய விலை—கேடெய்திய தானியத்திற்குரிய விலை.

[64]ஒன்றற்கொன்று கேடுவிளையச் செய்யின் [65]கேட்டின் அளவிற்கு இருமடங்கு தண்டமாம்.

பின்னர் உண்டாகிய [66]கீழ்க்குளத்து நீரை [67]மேற்குளத்துப் பாய்ச்சல்நிலத்திற்குப் பாய்ச்சலாகாது. [68]மூன்று யாண்டுகள் உழவுத்தொழிலுக்குப் பயன்படாமை யில்லாதவிடத்து, மேற் குளத்து நீரினால் கீழ்க்குளத்தை நிரப்புவதில் தடையேற்பட லாகாது. இவ்விதியைக் கடப்பின் [69]பூர்வசாகச தண்டமும் குளத்தை [70]வறிதாக்கலுமாம்.

ஐந்தாண்டுகள் அநுபவியாமல்விட்ட ஏரியினது உரிமை [71]இடையூறில்வழி இழக்கப்பட்டதாகும்.

புதியனவாக [72]உண்டாக்கப்பட்ட ஏரி குளங்களுக்கு ஐந்து

---

64 ஒன்றற்கொன்று—ஒன்றை உண்டாக்கும் நிமித்தம் மற்றொன்றிற்கு.

65 கேட்டின் அளவு—கேடடைந்த பயனளவு.

66 ஈண்டுக் கீழ்க்குளம் மேற்குளம் என்பன முறையே பள்ளமான இடத்திலும் மேட்டுநிலத்திலும் உண்டாக்கப்பட்டவை.

67 மேற்குளத்துப் பாய்ச்சல்நிலமாவது, மேட்டு நிலத்திலுள்ள குளத்து நீரைக்கொண்டு விளைவிக்கும் நிலமாகும். பின்னர் என்று கீழ்க் குளத்திற்குக் கொடுக்கப்பட்ட அடையினால் இதற்கு 'முன்னர்' என்னும் அடையை இயைத்து, முன்னர் உண்டாகிய மேற்குளம் எனக்கொள்ளல் வேண்டும். முன்னர் ஏற்பட்ட மேற்குளத்துநீர்ப்பாய்ச்சலுக்குரிய நிலங் களுக்குப் பின்னர் ஏற்பட்ட கீழ்க்குளத்து நீரைப் பாய்ச்சினால், கீழ்க் குளத்துநீர்ப்பாய்ச்சலுக்கென அமைக்கப்பட்ட நிலங்களுக்கு நீர் போதா மல் விளைவு குன்றும் எனக்கருதி இவ்வாறு கூறப்பட்டதுபோலும்.

68 மூன்று யாண்டுகள் பயன்படாமை யில்லாதவிடத்து என்றதனால், பயன்படாமையுள்ளவிடத்து மேற்குளத்து நீரைக்கொண்டு கீழ்க்குளத்தை நிரப்புதலாகாது என்பது கருத்து.

69 மேற்குளம் ஒருவனுக்கும், கீழ்க்குளம் மற்றொருவனுக்கும் உரியன வாக, மேற்குளத்து நீரைக்கொண்டு கீழ்க்குளத்தை நிரப்புவதில் தடை யேற்படுமாயின், மேற்குளத்துக்குரியவனுக்குத் தண்டம் என்பது கருத்து.

70 வறிதாக்கல்—மேற்குளத்திலுள்ள நீர் முழுதையும் வெளிப்படுத்தி விடுதல்

71 இடையூறில்வழி என்றதனால், அநுபவிப்பதற்கு இடையூறு நேர்ந்த விடத்து உரிமை இழக்கப்பட்டதாகாது என்பது போதரும்.

72 குடிமக்களால் உண்டாக்கப்பட்ட என்பது.

ஆண்டு அரசிறையும், [73]சிதைவுகுறித்து விடப்பட்டவற்றிற்கு நான்குயாண்டு அரசிறையும், [74]நன்கு திருத்தியமைக்கப்பட்டவற்றிற்கு மூன்றியாண்டு அரசிறையும், [75]செப்பனிட்ட நிலத்திற்கு இரண்டு யாண்டு அரசிறையும், [76]ஒழிக்கத்தக்கனவாம். [77]ஈடுபடுத்தற்கும், விற்றற்கும் உரியனுவான்.

[78]கிணற்றுப்பாய்ச்சல், ஆற்றுப்பாய்ச்சல், ஏரிப்பாய்ச்சல், குளத்துப்பாய்ச்சல் என்னும் இவற்றால் விளையும் வயல், உய்யானம், [79]தோட்டம் என்னும் இவற்றை [80]உயர்ந்தசாதிப் பயிரிடுதற்கும், மிகுதியான கூறுகொள்ளுதற்கும் ஏற்ற முறையில் ஒப்படைக்கலாம். [81]உதவிக்குத்தகப் பிறர்க்கும் கொடுக்கலாம்.

---

[73] வெள்ளம் முதலியவற்றால் கேடெய்திய நிலங்கள் அநுபவியாமல் விடப்பட்டு, மீண்டும் புதிதாக உழவுத்தொழிற்குப் பயன்படுத்தப்படுமாயின் என்பது கருத்து.

[74] நன்கு திருத்தியமைக்கப்பட்டவை—செடிகொடி நிறைந்த காடுகளை அழித்துப் புதியனவாக அமைக்கப்பட்ட வயல்நிலங்கள்.

[75] செப்பனிட்டவை—இயற்கையாகவே புல் முதலியன இல்லாமையால் எளிதாகப் பண்படுத்தப்பட்ட நிலங்கள்.

[76] மேலே குறிப்பிட்ட நான்கு பகுதிகளுக்கும் முறையே ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு ஆண்டுகளுக்குரிய உல்குபொருளைக் குடிகளிடத்தினின்றும் அரசன் வாங்கலாகாது என்பதாம்.

[77] மேலேகுறிப்பிட்ட ஏரி, குளம், நிலம் முதலியவற்றை உண்டாக்கினவனே ஈடுசெய்தற்கும், விற்றற்கும் உரியனுவான் என்பது கருத்து.

[78] கிணற்றுப்பாய்ச்சல் — கிணற்றுநீரைப் பாய்ச்சி விளைவிப்பது. ஏனையவற்றிற்கும் இஃதொக்கும்.

[79] தோட்டம்—வாழைத்தோட்டம் முதலியன.

[80] உயர்ந்தசாதிப் பயிரிடுதற்கும், நிலமுடையவர்க்கு விளைபொருளில் மிகுதியானகூறு கொடுத்தற்கும் எவன் உடன்படுகின்றானே, அவனிடம் பயிர்த்தொழிற்கு மேற்குறிப்பிட்ட நிலங்களை ஒப்படைக்கலாம் என்பது கருத்து.

[81] உயர்ந்தசாதிப் பயிரிடுதல் மிகுதியாகக் கூறுபெறுதலில்லாமல் உழவுத்தொழிலில் ஊக்கமாத்திர முள்ளவரிடத்தும் விளைபொருளில் இத்துணைக்கூறு தரவேண்டும் என்று வரையறை செய்துகொண்டு நிலத்தை விடலாம் என்பது கருத்து.

[82]விலைக்குக்கொண்டும், [83]குத்தகையாகப்பெற்றும், [84]ஈடாக வாங்கியும், [85]வாரத்திற்குப்பெற்றும், [86]ஒப்பந்தம் செய்துகொண்டும் அநுபவிப்பவர்கள் [87]இவற்றிற்கு [88]உதவிபுரிதல் வேண்டும். உதவிசெய்யவில்லையானால் [89]குறைவுபாட்டிற்கு இருமடங்கு தண்டமாம்.

### சுலோகம்

[90]முறைதவறி ஏரி குளங்களினின்றும் நீரைப் பாய்ச்சுகின்றவனுக்கும், பிறருடைய முறையில் அறியாமையால் நீர்ப்பாய்ச்சலைத் [91]தடைப்படுத்துகின்றவனுக்கும் ஆறுபணம் தண்டமாம்.

மூன்றும் அதிகரணம் ஐந்தாம் பிரகரணத்தில்
"நிலவிலை" என்னும் அறுபத்தாறும்
அத்தியாயம் முற்றிற்று.

---

[82] விலைக்குக்கொள்ளல் முதலியவற்றால் அநுபவிக்கப்படுவன வயல் தோட்டம் முதலியன.

[83] குத்தகையாகப்பெறுதல்—ஒரு நிலம் விளைந்தாலும், விளையாவிட்டாலும், ஆண்டொன்றிற்கு இவ்வளவு நிலமுடையானுக்குக் கொடுத்துவிடுவேன் என்று உறுதிசெய்துகொண்டு பெறுதல்.

[84] ஈடாக வாங்குதல்—ஓரளவு பொருள்கொடுத்து அதற்கீடாக அநுபவித்துக்கொள்ளுதல் என்று பெறுதல்.

[85] வாரத்திற்குப்பெறுதல் — விளைந்துவரும் பயனில் இத்துணைக்கூறு பெற்றுக்கொள்ளுதல் என்று பேசிக்கொண்டு வாங்குதல்.

[86] ஒப்பந்தம்—முன்னை வழக்கப்படி கொடுப்பதென்று பேசிக்கொண்டு பெறுதல்.

[87] இவற்றிற்கு—ஏரி, குளம் முதலியவற்றிற்கு.

[88] உதவிபுரிதலாவது—சிதைந்தபகுதிகளைச் செப்பனிடுதற்கு உதவுதல்.

[89] குறைவுபாடு—செப்பனிடாமையால் குறைவுபடும் விளைபொருள்.

[90] முறை தவறுதல்—ஒருவன் தனக்குரிய முறையில் வேறுபடுதல்.

[91] தடைப்படுத்துதல்—பிறர்நிலங்களுக்கு முறைப்படி பாயும் நீரைத் தடைப்படுத்தல்.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## ஐந்தாம் பிரகரணம்—நிலவழக்கு-[1]புன்னிலவயல்வழித்தடை

## ஆறும் பிரகரணம்—[2]கட்டுப்பாடு கடவாமை

## அறுபத்தேழாம் அத்தியாயம்

உழவுத் தொழிற்குரிய நீர்செல்லும் [3]வழக்கமான வழியைத் தடைப்படுத்துவோனுக்கும் [4]வழக்கமில்லாததைச் செய்தவனுக்கும் பூர்வசாகசம் தண்டமாம்.

ஏரி, கிணறு, அறச்சாலை, கடவுண்மரம், திருக்கோயில் என்னும் இவற்றை [5]வேற்றுநிலத்தில் அமைப்பவனுக்கும் [6]தொன்று தொட்டுள்ளதும் அறத்தின்பொருட்டு ஏற்பட்டதுமாகிய ஏரியைச் [7]சிதைவுற்று விடப்படாத நிலையில் ஈடாக வைத்தல் விற்றல் செய்

---

### 67-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] புன்னில வயல்வழித்தடை—புன்னிலங்களுக்கும் வயல்களுக்கும் உரிய வழிகளையும், பிறவழிகளையும் தடைப்படுத்தல். முன்னை அத்தியாயத்தில் நிலவிற்பனை, நிலங்களின் எல்லைவரையறை முதலியன கூறப்பட்டன. இவ்வத்தியாயத்தில் அந்நிலங்களுக்குச் செல்லும் நீர்நெறியாகிய வாய்க்கால் வழிகளையும், மக்களும் விலங்குகளும் செல்லுதற்குரிய வழிகளையும் தடைப்படுத்திக் கேடுவிளைவித்தற்கு உரிய தண்டவிதிகள் கூறப்படுகின்றன. இதனால் அத்தியாய இயைபுண்மை யறிக.

[2] இவ்வத்தியாயத்தில் ஐந்தும் ஆறுமாகிய பிரகரணங்கள் இரண்டு அடங்கியுள்ளன. ஆறும்பிரகரணத் தொடக்கத்தில் பிரகரண இயைபைப் பற்றிய குறிப்பு வெளிப்படுத்தப்படும்.

[3] வழக்கம்—தொன்றுதொட்டுள்ளது.

[4] வழக்கமில்லாதது—முன்னர் இல்லாமல் புதிதாக ஏற்படுத்தல்.

[5] வேற்றுநிலம்—ஏரி கிணறு முதலியன அமைத்தற்கு உரியவல்லாத நிலம். பிறர்க்குரிய நிலமென்று கொள்வாருமுளர். ஒருவன் தனக்குக் கிணறு ஒன்று வெட்டக்கருதினால் அதற்குத் தகுதியான இடத்திலன்றி, மற்றொருவன் இல்லத்திற்கு இடையூறு விளைக்கத்தக்க இடத்தில் அமைத்தலாகாது என்பது கருத்து. ஏரி முதலியவற்றிற்கும் இஃதொக்கும்.

[6] தொன்றுதொட்டுத் தன் முன்னோர்களால் அறத்தின்பொருட்டு ஏற்படுத்தப்பட்டதென்பது.

[7] சிதைவுற்று விடப்படாத நிலையில் என்றதனால் அந்த ஏரி சிதைந்து பயன்படுத்தப்படாமல் கைவிடப்பட்ட நிலையில் ஒருவன் அதனை விற்றல் முதலியன் செய்யலாம் என்பது போதரும்.

பவனுக்கும் செய்விப்பவனுக்கும் மத்தியமசாகசம தண்டமாம்.[8]சான்றுவார்க்கு உத்தமசாகசம் தண்டமாம்.

[9]உரியவனில்லாத நிலையில் ஊரிலுள்ளவராதல் [10]அறவோராதல் [11]செப்பனிடல் வேண்டும்.

வழியின் அளவு [12]அரணுள்அமைத்தலிற் கூறப்பட்டது. [13]சிறுவிலங்குவழி மக்கள்வழங்கும் வழிகளைத் தடைப்படுத்துபவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [14]பெருவிலங்கு [15]வழியாயின் இருபத்துநான்கு பணமும், யானைவழி வயல்வழியாயின் ஐம்பத்துநான்கு பணமும், ஏரிவழி காட்டுவழியாயின் அறுநூறு பணமும், சுடலைவழி கிராமவழியாயின் இருநூறு பணமும், [16]துரோணமுக வழியாயின் ஐந்நூறு பணமும், [17]தானீயவழி நாட்டுவழி புன்னிலவழிகளாயின் ஆயிரம் பணமும், இவ்வழிகளைக் [18]குறைவுபடுத்தின் கூறப்பட்ட தண்டத்தின் நான்கில் ஒருகூறும் [19]உழவுசெய்யின் முற்கூறப்பட்ட அளவும் தண்டமாம்.

உழவுத்தொழிற்குரிய காலத்தில் [20]நிலத்தைக் கொடாத நில

---

[8] சான்றுதல்—ஈடுசெய்தல், விற்றல் முதலியவற்றிற்கு என்க.

[9] உரியவன்—உண்டாக்கினவன் அல்லது அவன்வழித்தோன்றல்.

[10] அறவோர்—அறவொழுக்கமுடையோர்; இவர் வேற்றூரில் உள்ளவராவர்.

[11] செப்பனிடல்—ஏரி, கிணறு முதலியவற்றை என்க.

[12] அரணுள் அமைத்தல் என்பது இரண்டாம் அதிகரணம் நான்காம் பிரகரணமாகும்.

[13] சிறுவிலங்கு—ஆடு முதலியன.

[14] பெருவிலங்கு—பசு குதிரை முதலியன.

[15] தடைப்படுத்தப்பட்டது பெருவிலங்குவழியாயின் தடைப்படுத்தினவனுக்கு இருபத்துநான்குபணம் தண்டமாம் என்பது. பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்ளல்வேண்டும்.

[16] துரோணமுகம் என்பது நானூறு கிராமங்களுக்குத் தலைநகரமாகும்.

[17] தானீயம் என்பது எண்ணூறு கிராமங்களுக்குத் தலைநகரமாகும்.

[18] குறைவுபடுத்தல்—வழியின் ஒருகூற்றைக் கவர்ந்துகொண்டு சுருங்கச் செய்தல்.

[19] வழியிடங்களில் உழுதால் அவற்றைத் தடைப்படுத்தினவனுக்குரிய தண்டமாம் என்பது.

[20] நிலத்தைப் பயிர்த்தொழில் செய்தற்பொருட்டு உழவனிடம் கொடுப்பதாக உறுதிசெய்துகொண்டபடி உரியகாலத்திற் கொடாத நிலமுடையானுக்கென்க.

முடையானுக்கும் [21]குற்றம் [22]இடையூறு [23]பொறுக்கலாற்ருத நோய் என்னும் இவை [24]யில்வழிப் [25]பயிரிடாமல் விடும் உழவனுக்கும் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

[26]இறையிறுப்போர் இறையிறுப்போரிடத்தும் [27]பிரமதாயத்தார் பிரமதாயத்தாரிடத்தும் ஈடுசெய்தல் விற்றல்செய்தல் வேண்டும். இன்றேல் பூர்வசாகசம் தண்டமாம். [28]இறையிலியாகிய கிராமத்தை வாங்கும் இறையிறுப்போனுக்குமாம்.

இறை இறுக்கப்படும் கிராமத்தை வாங்குவோனுக்கு [29]இல்லம் தவிர [30]எல்லாப் பொருள்களிலும் உரிமையுண்டு. [31]அதனையும் அவனுக்குக் கொடுக்கலாம்.

---

[21] குற்றம்—நிலத்தின்பாலுள்ளது.

[22] இடையூறு—கள்வர் முதலியோரால் நேர்வது

[23] அருவருக்கத்தக்க தொழுநோய் முதலியன. இஃது உழவனைக் குறித்துக் கூறியது.

[24] இல்வழி என்றதனுல் குற்றம் முதலியன உள்வழி பயிரிடாமல் விடலாம் என்பது போதரும்.

[25] உறுதி செய்துகொண்டபடி பயிரிடாமல் விடும் உழவன் என்க.

[26] ஒரு நிலத்திற்கு அரசிறை செலுத்துவோர் அந்நிலத்தை விற்றல் முதலியன செய்ய நேர்ந்தால், அங்ஙனம் அரசிறை செலுத்துவோர்க்கே விற்றல்வேண்டுமல்லது அரசிறை செலுத்தாத பிரமதாயத்தார்க்கு விற்றலாகாது என்பது.

[27] பிரமதாயம் — அந்தணர் முதலியோருக்கு அரசனுல் விடப்பட்ட இறையிலிநிலம். அந்நிலத்தை ஈடுசெய்தல் விற்றல் முதலியன செய்ய நேருங்கால், அத்தகைய தகுதியுடையாருக்கே விற்றல்வேண்டும் என்பது.

[28] பிரமதாயமாகவுள்ள கிராமத்தை இறையிறுக்கும் தகுதியுடையோன் விலைகொடுத்தாதல், ஈடாகவாதல் வாங்குவானுயின் அவனுக்கும் பூர்வசாகசம் தண்டம் என்பது.

[29] இல்லம்—விற்பவனுடையது.

[30] விற்கும்பொழுது விளைந்திருக்கும் கூலம் முதலியவற்றிற்கும், உழவுத்தொழிற்குரிய ஆடுமாடு முதலியவற்றிற்கும் விலைகொடுத்துப் பெறும் உரிமையுண்டென்பது. ஒரு கிராமத்தை விற்குங்கால், அப்பொழுது விளைந்திருக்கும் கூலம் முதலிய பொருள்களையும், உழவுத்தொழிற்குரிய அக்கிராமத்து ஆடுமாடு முதலியவைகளையும் கிராமத்தை விலைக்குக் கொள்வோனிடமே விற்றல்வேண்டுமன்றிப் பிறர்க்கு விற்றலாகாது என்பது கருத்து.

[31] அவ்வில்லத்தையும் உரியவன் விற்க விரும்பினுல், கிராமத்தை வாங்கினவனுக்கே விற்கவேண்டும் என்பது.

[32]கொள்ளத்தகாத நிலத்தை உழவுசெய்யாத உரியவனிடத்தி னின்றும் மற்றொருவன் பெற்றால் ஐந்து ஆண்டுகள் அநுபவித்துப் பின் [33]உழைப்பளவிற்குரியதைப் பெற்றுக்கொண்டு திருப்பிக் கொடுத்துவிடல் வேண்டும்.

[34]வேற்றூரிலிருக்கும் பிரமதாயத்தார் [35]அநுபவிப்பதற்கு உரிமையுள்ளவர் ஆவர்.

[36]கிராம காரியநிமித்தம் செல்லுகின்ற கிராமத்தலைவனை உழவர் முறைப்படி பின்தொடர்தல் வேண்டும். பின்தொடர்ந்து செல்லாதவர் ஒன்றரைப்பணம் [37]யோசனமாகக் கொடுத்தல் வேண்டும்.

திருடல் பிறர்மனைநயத்தலில்லாத ஒருவனை ஒரு கிராமத்தி னின்றும் வெளிப்படுத்தும் கிராமத்தலைவனுக்கு இருபத்துநான்கு பணமும், [38]அக்கிராமத்தவர்க்கு உத்தமசாகசமும் தண்டமாம். [39]வெளிப்படுத்தப்பட்டவன் [40]உட்புகுந்தால் [41]உட்புகுதற்குக் கூறியபடியாம்.

---

[32] கொள்ளத்தகாத நிலம் — செப்பனிடப்படாமையால் வறிதாகக் கிடப்பது.

[33] செப்பனிடுதலாலும், கிணறு குளம் அமைத்தலாலும் ஏற்பட்ட செலவுபொருளைப் பெற்றுக்கொண்டு திருப்பிக்கொடுத்துவிடல் வேண்டும் என்பது.

[34] வேற்றூர்—இறையிலிநிலமுள்ள ஊருக்கு வேறாக உள்ளது.

[35] நிலவருவாயை அநுபவிக்கலாமே ஒழிய நிலத்தை விற்பதற்கு உரிமை யுடையர் ஆகார் என்பது கருத்து.

[36] ஒரு கிராமத்தின் பொதுநலங்குறித்து அக்கிராமத்தலைவன் வேற் றூர்க்குச் செல்ல நேர்ந்தால், அக்கிராமத்தில் வாழும் குடிமக்கள் தனித் தனியே முறையாக அத்தலைவனுக்கு உதவிசெய்தற்பொருட்டு உடன் போதல் வேண்டும் என்பது கருத்து.

[37] யோசனம்—ஒருயோசனை தூரத்திற்குக் கொடுக்கப்படுவது. உடன் போகாதவர் ஒருயோசனை தூரத்திற்கு ஒன்றரைப்பணம் விகிதம் கிராமத் தலைவனுக்குக் கொடுத்தல்வேண்டும் என்பது.

[38] அக்கிராமத்தவர் அக்குற்றமில்லாத ஒருவனை அங்ஙனம் வெளிப் படுத்தின் இத்தண்டமென்பது.

[39] வெளிப்படுத்தப்படுதல் களவு முதலிய குற்றத்தால் என்க.

[40] மீண்டும் தடையை மீறி ஊருட்புகுந்தால்.

[41] வரலாகாது என்று தடுக்கப்பட்ட ஒருவன் மற்றொருவன் வீட்டுள் புகுந்தால் அதற்கு அவனுக்கு விதிக்கப்படுந்தண்டம் இவனுக்குமாம்.

ஒரு கிராமத்தின் நாற்புறத்தும் [42]நூறுவிற்கிடை இடைவெளியுள்ளதாகக் [43]கம்பங்களால் உதவியரண் அமைத்தல் வேண்டும்.

பசுமேய்ச்சற்பொருட்டுப் [44]புன்னிலம் மேட்டுநிலம் வனம் என்னும் இவற்றை விட்டு [45]உதவிபுரிதல் வேண்டும்.

புன்னிலத்தில் மேய்ந்துவிட்டு ஓடும் [46]ஒட்டகம் எருமை என்னும் இவற்றிற்குக் காற்பண விகிதமும் எருது குதிரை கழுதை என்னும் இவற்றிற்கு அரைக்கால்பண விகிதமும் ஆடு முதலிய சிறுவிலங்குகளுக்கு வீசம்பண விகிதமும் [47]வாங்குதல்வேண்டும்.

மேய்ந்துவிட்டு ஓடாமலிருப்பவற்றிற்கு [48]இருமடங்கும் [49]தங்கியிருப்பவற்றிற்கு நான்கு மடங்கும் தண்டமாம். [50]ஊர் எருது கோயில்எருது ஈன்று பத்துநாட்களுக்கு மேற்படாத பசு கிழஎருது பொலிஎருது என்னும் இவற்றிற்குத் தண்டம் இன்றாம்.

பயிரை மேய்ந்தால் கேடடைந்த பயிரினால் விளையக்கூடிய பயனைக் [51]கணக்கிட்டு இருமடங்கு கொடுக்கச்செய்தல் வேண்டும்.

---

[42] ஒரு கம்பத்திற்கும் மற்றொரு கம்பத்திற்கும் இடையே நூறு விற்கிடை தூரம் இடைவெளி இருக்கவேண்டும் என்பது.

[43] கம்பங்கள்—கல்லினாலும் மரத்தினாலும் ஆக்கப்பட்டவை.

[44] புன்னிலம்—புல்லும் நீரும் நிறைந்த இடம்.

[45] கிராமத்து மக்களுக்கு அரசன் உதவிபுரிதல் வேண்டும் என்பது.

[46] ஈண்டு ஒட்டகம் முதலாகக் கூறப்பட்டவை குறிப்பிட்ட புன்னிலத்தில் மேய்தற்கு உரிமையில்லாத வேற்றூரிலுள்ளனவாம் என்று கொள்ளல் வேண்டும்.

[47] புன்னிலத்தலைவன் ஒட்டகம் முதலியவற்றிற்குரியவரிடமிருந்து வாங்குதல்வேண்டும் என்பது.

[48] மேய்ந்துவிட்டு ஓடிய ஒட்டகம் முதலியவற்றிற்குக் கூறப்பட்ட தண்டத்தின் இருமடங்கென்பது.

[49] தங்கியிருத்தல்—இரவிலும் அவ்விடத்திலே யிருத்தல்.

[50] ஊர் எருது முதலியன வேற்றூரில் உள்ளனவாயினும், அவைகள் மேய்ந்தால் தண்டம் விதித்தலாகாது என்பது.

[51] கணக்கிடுதல்—அப்பயிருள்ள நிலமுழுவதிலும் விளைந்துவரும் வருவாயளவினின்றும் கேடடைந்த பயிரளவிற்கு உள்ள ஈவை ஆராய்ந்தெடுத்தல்.

[52]அறிவியாமல் மேயவிட்ட உரியவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [53]அவிழ்த்துவிட்டவனுக்கு இருபத்துநான்கு பணம் தண்டமாம். [54]காப்பாளனுக்கு அரைமடங்கு தண்டமாம். தோட்டத்தில் மேயவிட்டாலும் [55]அத்தண்டத்தையே விதித்தல் வேண்டும். வேலியைப் பிரித்துவிடினும் வீடு களம் [56]குவியல் இவற்றிலுள்ள கூலங்களை மேயவிட்டாலும் [57]இருமடங்கு தண்டமாம். [58]கேட்டிற்கு ஈடுசெய்பவும் வேண்டும்.

[59]அச்சமில் காட்டு விலங்குகளும் [60]பிடித்து வளர்க்கப்படும் விலங்குகளும் [61]மேயுமானால் உரியவனுக்குத் தெரிவித்துக் கொலை நிகழாவாறு ஓட்டிவிடல் வேண்டும்.

[62]அவ்விலங்குகளைக் கயிற்றினாலும் சாட்டையினாலும் விலக்குதல் வேண்டும். [63]வேறுவகையினால் அவற்றைத் துன்புறுத்தினால்

---

[52] புன்னிலத்தலைவனுக்கு அறிவியாமல் பசு முதலியவற்றைப் பயிர் நிலங்களில் மேயவிடின், அப்பசுக்களை உடையவனுக்குத் தண்டமாம் என்பது. இனி பசுக்களை உடையவனுக்கு அறிவியாமல் நிலத்திற்கருகில் கட்டி மேய்ப்பவனுக்கு இத்தண்டம் விதிக்கப்படும் எனினுமாம். பயிரழிவினால் ஏற்படும் விளைபொருளைக் கணக்கிட்டு அதற்கு இருமடங்கு இறுக்கப்படும் தண்டத்தினும் இது வேறாகும் என்பது கருத்து.

[53] கட்டிவைத்து மேயவிடாமல், அவிழ்த்துவிட்டு மேய்ப்பவனுக்கு இத்தண்டம் என்பது.

[54] காப்பாளன்—நிலத்தைப் பாதுகாப்பவன்.

[55] அத்தண்டம்—பயிரை மேயவிட்டதற்குக் கூறிய தண்டம்.

[56] குவியல்—தானியக்குவியல்.

[57] இருமடங்கு—பயிரை மேயவிட்டதற்குக் கூறிய தண்டத்தின் இருமடங்கு.

[58] மேயவிட்டதால் ஏற்படும் கூலம் முதலியவற்றின் அழிவிற்குத்தக விலையும் கொடுத்தல்வேண்டும் என்பது கருத்து. இவ்விதி எல்லாவற்றிற்குமாம்.

[59] அச்சமில்காடு—முனிவர் தவம்புரியும் வனம். அதனால் அங்கு வாழும் விலங்குகளுக்கு அச்சம் நேராது என்பது கருத்து.

[60] இவை வீட்டில் வைத்து வளர்க்கப்படும் விலங்குகளாகும்.

[61] மேய்தல்—பயிரை மேய்தல்.

[62] அவ்விலங்குகள்—அச்சமில் காட்டு விலங்குகளும், வீட்டு விலங்குகளும்.

[63] வேறுவகையாகத் துன்புறுத்தல்—கயிறு சாட்டைகளல்லாத கருவிகளால் துன்பஞ்செய்தல்,

[64]கடுந்தண்டத்திற்குரிய தண்டமாம்.

[65]எதிர்ப்பனவும் [66]குற்றஞ்செய்தனவுமாகியவற்றை [67]எல்லா வகையான உபாயங்களாலும் அடக்கலாம். [68]வயல்வழித்தடை கூறியபடியாம்.

[69]கிராம காரியத்தை உடன்பட்டுச் செய்யாத உழவனிறுக்கும் தண்டத்தைக் [70]கிராமத்தவரே கொள்ளல்வேண்டும். அக்காரியத்தைச் செய்யவில்லையானால் [71]அதற்குரிய கூலியின் இருமடங்கு தண்டமாம். [72]ஈவுப்பொருள் கொடுக்கவில்லையானால் அந்த ஈவின் இருமடங்கும் உண்டாட்டு முதலிய நிகழ்ச்சிகளில் [73]உண்ணத்தக்கதும் [74]பருகத்தக்கதும் கொடுக்கவில்லையானால் அக்கூற்றின் இருமடங்கும் தண்டமாம்.

---

[64] கடுந்தண்டத்திற்குரிய தண்டத்தை மூன்றும் அதிகரணம் எழுபத்தாறும் அத்தியாயத்திற் காண்க.

[65] எதிர்ப்பன—மேயுங்கால் தடுப்பவனை எதிர்த்துப்பாயும் விலங்குகள்.

[66] குற்றம் செய்தன—முன்னர் மனிதரைத் துன்புறுத்திய விலங்குகள்.

[67] கட்டிவைத்தல் ஓரிடத்து அடைத்துவைத்தல் முதலிய உபாயங்களாலென்பது.

[68] 'புன்னில வயல்வழித்தடை' என்னும் பகுதி இவ்வளவில் முடிவுற்றதென்பது. 'நிலவழக்கு' என்னும் பிரகரணமும் முடிவுபெற்றது.

[69] இனி, 'கட்டுப்பாடு கடவாமை' என்னும் ஆறும் பிரகரணம் தொடங்கப்படுகின்றது. நிலவழக்கு முதலியவற்றில் பொதுமக்கள் வரையறுத்துக்கொண்ட கட்டுப்பாடு கடவாமலிருத்தல் இன்றியமையாதது ஆகலின் 'நிலவழக்கு' என்னும் பிரகரணத்தின்பின் 'கட்டுப்பாடு கடவாமை' என்னும் பிரகரணம் வைக்கப்பட்டது. இதனால் பிரகரண இயைபு புலனாதலறிக. கிராமகாரியம்—கிராமத்து மக்களுடைய பொதுக்காரியம்.

[70] கிராமத்தவரே என்றதனால், அத்தண்டப்பொருள் அரசனைச்சாராது என்பது போதரும்.

[71] அதற்குரிய கூலி—அக்காரியத்தைச் செய்தலால் தனக்குக் கிடைக்கும் கூலி.

[72] பொதுக்காரிய நிமித்தம் மற்றெல்லோரும் கொடுக்கின்றபடி ஒருவன் கொடுக்கவில்லையானால், அவன் கொடுக்கவேண்டிய ஈவுத்தொகைக்கு இருமடங்கு தண்டம் என்பது.

[73] உண்ணத்தக்கது—சிற்றுண்டி முதலியன,

[74] பால், மோர் முதலியன,

[75]காட்சிகளுக்குரிய [76]கூறு கொடாதவன் தமருடன் [77]காண்டலாகாது. மறைந்துநின்று [78]கேட்டலும் [79]காண்டலும் செய்தாலும் எல்லோருக்கும் நலம்பயக்கும் காரியத்தில் தடைசெய்தாலும் [80]கூற்றில் இருமடங்கு கொடுத்தல்வேண்டும்.

எல்லோருக்கும் நலம்பயக்கும் செய்தியைச் சொல்லுகின்ற [81]ஒருவனுடைய கட்டளையைச் செய்தல்வேண்டும். செய்யவில்லையானால் பன்னிரண்டு பணம் தண்டமாம். [82]ஒன்றுகூடி அவனைக் கொன்றுவிடுவார்களானால் அவர்க்குத் தனித்தனியே [83]முன்னைக் குற்றத்தின் இருமடங்கு தண்டமாம். நேரே கொலைசெய்தோருக்குச் [84]சிறப்புத்தண்டமாம்.

[85]இவருள் தலைமை [86]அந்தணன் முதலாக வரையறுக்கத் தக்கது. உண்டாட்டுக்களில் இவருள் [87]பார்ப்பனன்பொருட்டுக் கருத்தறியாமல் விதித்தலாகாது. கூறு தரின் அடையலாம்.

---

75 காட்சி—கூத்து, பாட்டு முதலியன.

76 கூறு—பொதுமக்களால் வகுக்கப்பட்ட பொருட்கூறு.

77 அக்காட்சிகளைப் பார்க்கக்கூடாதென்பதாம்.

78 கேட்டல்—இசை முதலியவற்றை.

79 காண்டல்—கூத்து முதலியவற்றை.

80 தான் கொடுக்கவேண்டிய கூற்றின் இருமடங்கு தண்டமாகக் கொடுத்தல்வேண்டும் என்பது.

81 சொல்பவன் ஒருவனானாலும் அவன் சொல்வது மற்றெல்லோருக்கும் நலம்பயக்கும் செய்தியாயின் அதனை மற்றையோர் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பது.

82 மற்றெல்லோரும் பொறாமை காரணமாக ஒன்றுகூடி அந்நல்லோனைக் கொன்றுவிடுவாராயின் என்பது.

83 எல்லோருக்கும் நலம்பயக்கும் செய்தியைச் செய்யாமைக்குரிய தண்டத்தின் இருமடங்காகிய இருபத்துநான்கு பணம் தண்டம் என்பது.

84 சிறப்புத்தண்டம்—மேற்குறிப்பிட்ட தண்டத்தின் விசேட தண்டம்.

85 இவருள்—பொதுமக்களுள்.

86 அந்தணன் முதலாக என்றதனால், அந்தணருள் தகுதியுடையோன் இல்லையாயின் அரசகுலத்தவருள்ளும், அங்ஙனமே மற்றைக் குலத்தோருள்ளும் தகுதியுடையானைத் தலைவனாகத் தெரிந்தெடுக்கலாம் என்பது கருத்து.

87 உண்டாட்டு முதலிய விசேடங்களில் கூறுபொருள் விதிக்குங்கால், பார்ப்பனனுக்கு அவன் உடன்பாடு அறியாமல் விதித்தலாகாது என்பதும், அவனாக அக்கூறுபொருள் கொடுத்தால் பெற்றுக்கொள்ளலாம் என்பதும் கருத்து.

[88]இதனால் தேசம் சாதி குலம் என்னும் இவற்றின் குழுக்களுக்கும் கட்டுப்பாடுகடவாமை [89]கூறியபடியாம்.

### சுலோகம்

நாட்டுநலங்குறித்து எல்லைக்கட்டுக்களையும் வழியிடங்களில் [90]சீர்திருத்தங்களையும் கிராமங்களுக்கு அழகையும் பாதுகாவலையும் செய்கின்ற [91]அன்னார்க்கு அரசன் விரும்பத்தக்க நலன்களைச் செய்தல்வேண்டும்.

மூன்றும் அதிகரணம் ஐந்தாம் பிரகரணத்தில்
புன்னிலவயல்வழித்தடை, ஆறும் பிரகரணம்
கட்டுப்பாடுகடவாமை என்பன அடங்கிய
அறுபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

[88] இதனால் — ஈண்டுக் கிராமத்திற்குக் கூறிய கட்டுப்பாடுகடவாமை பற்றிய விதியினால்.

[89] இங்கே கூறப்பட்ட விதியைக்கொண்டு தேசக்குழு முதலியவற்றிற்கும் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[90] சீர்திருத்தம்—மக்கள் எளிமையில் போக்குவரத்துச் செய்தற்கு உரியவாறு செப்பனிடுதல்.

[91] அன்னார்—கிராமப்பொதுநலன்களை மேற்கொண்ட கூட்டத்தார்.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## ஏழாம் பிரகரணம்—[1]கடன்கோடல்

## அறுபத்தெட்டாம் அத்தியாயம்

நூறுபணத்திற்கு நியாயமான [2]திங்கள்வட்டி ஒன்றேகால் பணமாகும். [3]வாணிகத்திற்காயின் ஐந்து பணமும் [4]காட்டில் வழங்குவோர்க்காயின் பத்துப்பணமும் [5]கடலில் வழங்குவோர்க் காயின் இருபது பணமுமாம்.

[6]அதற்குமேல் [7]செய்பவனுக்கும் [8]செய்விப்பவனுக்கும் பூர்வ சாகசம் தண்டமாம். சான்றுவாருள் தனித்தனியே [9]அரையளவு தண்டமாம்.

---

### 68-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] கடன்கோடல் என்பது கடனுகக்கொடுத்த பொருளை வட்டியுடன் வாங்குதல் எனவும், வட்டியுடன் கொடுப்பதாகப் பேசிக் கடன் வாங்குதல் எனவும் பொருள்படும். தாயபாகம் என்னும் நான்காம் பிரகரணத்தில் கடனுகக் கொடுக்கப்பட்டதும் வாங்கப்பட்டதும் சமனுகக் கூறுசெய்து கொள்ளத்தக்கன என்று கூறப்பட்டுள்ளது. பின்னர் அத் தாயபாகத்தைச் சார்ந்த நிலவழக்கையும் அதற்கு இன்றியமையாத கட்டுப்பாடுகடவாமை யையும் ஐந்து ஆறும் பிரகரணங்களில் கூறி இப்பிரகரணத்தில் கடன் கோடல் கூறப்படுகின்றது. இதனுல் பிரகரண இயைபு வெளியாதலறிக.

[2] மாதம் ஒன்றிற்கு நூற்றிற்கு ஒன்றேகால் விகிதம் வட்டி என்பது ஈடாகவும் ஒற்றியாகவும் வைக்கப்படும் பொருண்மேலது.

[3] பண்டங்களை விற்றல் கொள்ளல் முதலியன செய்யும் வாணிகரிடம் கொடுக்கும் கடனுச்கு மாதம் ஒன்றுக்கு நூற்றிற்கு ஐந்து விகிதம் வட்டி என்பது.

[4] செல்லுதற்கரிய காட்டுப்பிரதேசங்களில் விலைப்பண்டங்களைக் கொண்டு விற்பவருக்குக் கடன் கொடுத்தால் பத்துப்பணம் வட்டி என்பது.

[5] கடல்வழிச்சென்று வாணிகம் புரிவோர்க்குக் கடன் கொடுப்பின் இரு பது பணம் வட்டியாம் என்பது.

[6] அதற்குமேல்—மாதம் ஒன்றுக்கு நூற்றிற்கு இருபது வட்டிக்குமேல்.

[7] செய்பவன்—வட்டி வாங்குவோன்.

[8] செய்விப்பவன்—வட்டி வாங்கும்படி தூண்டுபவன்.

[9] அரையளவு—பூர்வசாகச தண்டத்தின் பாதியளவு.

அரசன் [10]தம் நலங்களில் [11]நாட்டம் செலுத்தவில்லையானல் கடன்கொடுப்போரும் வாங்குவோரும் [12]ஒழுகலாற்றைப் பார்த்துக் கொள்ளல் வேண்டும்.

[13]தானியத்திற்கு வட்டி பயிர்விளையுமளவும் அரைக்கூறுகும். [14]அதன்பின் விலையாகச் செய்யப்பட்டு வளர்ச்சியடையும். [15]சேர்க்கப்பட்ட வட்டி தொடக்கத்தினின்றும் பாதியாம். [16]நெருங்குதலில்லையாயின் ஓராண்டிற்குரியது கொடுக்கத்தக்கது.

[17]அயலூர் சென்று நெடுநாள் இருந்தவனும், ஊக்கமற்றவனும் கூலப்பொருளின் விலையளவின் இருமடங்கு கொடுத்தல் வேண்டும்.

---

[10] தம் என்பது கடன்கொடுப்போரையும் வாங்குவோரையும் குறிக்கும்.

[11] விதனங்களாலும் பகைவராலும் நலியப்பட்டுக் குடிமக்களின் நலங்களைப் பாதுகாவாவிடின் என்பது.

[12] ஒருவர்க்கொருவர் நடந்துகொள்ளும் முறையைக் கண்காணித்துக் கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

[13] தானிய ரூபமான வட்டி வாங்குதற்பொருட்டுக் கொடுக்கப்பட்ட தானியத்திற்குப் பயிர்விளைந்துவரும் காலம் வரை கொடுக்கப்பட்ட அளவிற் பாதியளவு வட்டியாம் என்பது கருத்து.

[14] தானிய விளைவுகாலத்தின் பின் அரையளவு தானிய வட்டியுடன் கூடிய மூலதானியத்திற்கு விலையளவை யறுதியிட்டு அதற்கு இத்துணை வட்டி என்று வரையறுத்துக்கொண்டு பெருக்கிக்கொள்ளலாமேயன்றி மேலும் தானிய ரூபமான வட்டி வாங்கலாகாது என்பது கருத்து.

[15] தானிய ரூபமான வட்டியுடன் கூடிய மூலதானியத்திற்கு அறுதியிடப்படும் விலையே தொடக்கமாகும். அதற்கு வரையறை செய்து கொள்ளப்படும் வட்டியானது அத்தொடக்கப் பொருளில் பாதியளவிற்கு மேல் வளர்ச்சியடையாது என்பது கருத்து.

[16] தானிய ரூபமான வட்டியை வாங்குதற்குரிய காலத்தில் நெருங்கிச் சென்று வாங்காமல் மிகுதியான காலங்கடந்து வாங்க முயன்றால் ஓராண்டிற்குரிய தானியவட்டி மாத்திரம் கிடைக்குமேயன்றி மேலும் கடந்த காலத்திற்குக் கிடைக்கமாட்டாது என்பது கருத்து.

[17] கடன்வாங்கினவன் அயலூருக்குப்போய் நெடுநாள் இருந்துவிட்டாலும் அல்லது வாங்கினதைக் கொடுக்கவேண்டுமென்று நினையாமல் சோர்வடையவிட்டாலும் வாங்கின தானியத்தின் விலையளவில் இருமடங்கு செலுத்தல்வேண்டும் என்பதும், பல ஆண்டுகள் கடந்தாலும் இருமடங்குக்குமேல் கொடுக்கவேண்டியதில்லை என்பதும் கருத்து.

வட்டியைப் பேசிக்கொள்ளாமல் [18]வற்புறுத்துகின்றவனுக்கும் [19]மிகுதியாகச் சொல்கின்றவனுக்கும் [20]விலையை வட்டியுடன் சேர்த்துச் சொல்விப்பவனுக்கும் [21]மூலப்பொருளின் நான்கு மடங்கு தண்டமாம். [22]குறைவை (மிகுதியாகச்) சொல்விப்பவனுக்குப் [23]பொய்யாகக் கூறப்பட்டதின் நான்குமடங்கு தண்டமாம். [[24]அதனில் மூன்றிலொருகூற்றை வாங்கினவனும் எஞ்சியதைக் கொடுத்தவனும் செலுத்தல் வேண்டும்.]

[25]பெருவேள்வி நோய் [26]குருகுலம் இவற்றுள் ஒன்றால் [27]தடைப்பட்டவனும் [28]இளைஞனும் [29]தகுதியற்றவனுமாகிய இவர்க்குக் கொடுக்கப்பட்ட கடனுக்கு [30]வளர்ச்சியின்று. [31]விடு

---

18 வற்புறுத்துதல்—வட்டி தரவேண்டும் என்று நெருக்கிக்கூறல்.

19 மிகுதியாகச் சொல்லுதல்—வட்டியைக் குறையப்பேசிக்கொண்டு மிகுதியாகக் கூறுதல்.

20 கொடுக்கப்பட்ட கூலத்தின் விலையை வட்டியுடன் சேர்த்து மூலப்பொருள் என்று சான்றுகூறுவாரைச் சொல்லும்படி செய்கின்றவனுக்கும் என்பது.

21 மூலப்பொருள்—முதலில் கடனாகக் கொடுக்கப்பட்ட தானியத்தின் விலைப்பொருள்.

22 குறைவாகக்கொடுத்து மிகுதியாகச் சொல்லும்படி சான்றுகூறுவாரைத் தூண்டியவனுக்கென்பது.

23 பொய்யாகக் கூறப்பட்டது எவ்வளவோ அவ்வளவின் நான்கு மடங்கு என்பது.

24 இப்பகுதிக்கேற்ப மூலம் உள்ளதாயினும் இக்கருத்துப் பொருத்தமாகத் தோன்றவில்லை. 'அத்தண்டத்தில் மூன்றில் ஒருகூற்றைக் கடன் வாங்கினவனுக்குக் கொடுக்கவேண்டும்' என்றிருப்பது பொருத்தமாகத் தோன்றுகிறது. காரணம்:—கொடுத்தவன் பொய்கூறி வாங்கினவனைத் துன்புறுத்தியதாம் என்க.

25 பெருவேள்வி—பன்னிரண்டு யாண்டு முதலாகச் செய்யப்படும் 'தீர்க்க சத்திரம்' என்னும் யாகம்.

26 குருகுலம்—கல்விநிமித்தம் ஆசிரியனிடத்தில் தங்குதல்.

27 தடைப்படுதல்—கடன்கொண்டபின் பெருவேள்வி முதலியவற்றில் தலைப்படுதல்.

28 இளைஞன்—வழக்கியற் பருவமடையாதவன்.

29 தகுதியற்றவன்-பருவமடைந்தும் உலகியலறியும் தகுதியில்லாதவன்.

30 வளர்ச்சி—வட்டி.

31 கடன்வாங்கிய பொருளை உரியகாலத்தில் திருப்பிக் கொடுக்குங்கால் ஏற்றுக்கொள்ளாதவனுக்கு இத்தண்டம் என்பது.

தலை செய்யும் கடனை ஏற்றுக்கொள்ளாதவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [32]காரணங்கூறின் வட்டியின்றிப் [33]பிறனொருவனிடத்தில் வைத்துவிடல் வேண்டும்.

[34]இளமை முதுமை நோய் விதனம் அயல்நாட்டுவாழ்க்கை நாட்டுப்பிறழ்ச்சி அரசியற்கலக்கம் என்னும் இவையல்லாதவிடத்துப் பத்து ஆண்டுவரை பொருட்படுத்தப்படாத கடன் திருப்பிப் பெறத்தகாததாகும்.

இறந்தவன்புதல்வர் [35]பொருளுக்குரிய ஞாதியர் [36]கூட்டுக் கடனாளி [37]பிணையாளன் என்னும் இவர்கள் [38]கடனைக் கொடுத்தல் வேண்டும். [39]வேறான பிணை பயனின்று. [40]இளைஞன்பிணையும் பயனற்றதாம். தாயப்பொருளுக்குரிய புதல்வரும் பேரரும் ஞாதியரும் [41]காலமிடங்களின் வரையறையின்றிக் கொடுத்தல்வேண்டும்.

[42]வாழ்க்கை [43]திருமணம் [44]நிலம் இவற்றைப்பற்றிய பிணை

---

[32] காரணம்—அங்ஙனம் ஏற்றுக்கொள்ளாமைக்குப் பொருத்தமான காரணம்.

[33] பிறனொருவன்—அப்பொருளைப் பாதுகாத்தற்குத் தகுதியான மற்றொருவன்.

[34] இளமை முதலிய ஏழு காரணங்களாலும் பத்து ஆண்டுகள் வரை பொருட்படுத்தாமல் விட்டகடனைப் பின்னர்த் திருப்பிப்பெறலாம் என்பதும் இக்காரணங்களல்லாதவிடத்துப் பத்து ஆண்டுகளுக்கு மேல் கடன் திருப்பிப்பெற இயலாது என்பதும் கருத்து.

[35] பொருள்—இறந்தவனுடையது.

[36] கூட்டுக்கடனாளி—சேர்ந்து கடன் வாங்கினவன்.

[37] பிணையாளன்—ஜாமீன்காரன்.

[38] கடன்—இறந்தவன் கொடுக்கவேண்டிய கடன்.

[39] பொருட்பற்றிய பிணையன்றிக் காட்சி முதலிய பிணைகள் கடன் கொடுத்தற்கு உரியனவாகா என்பது.

[40] இளைஞன்—வழக்கியற் பருவம் அடையாதவன்.

[41] இன்ன காலத்தில் இன்ன இடத்தில் என்னும் வரையறையில்லாமல் எக்காலத்தும் எவ்விடத்தும் கடனைக் கொடுக்கக் கடமைப்பட்டவர் என்பது.

[42] வாழ்க்கைப்பிணை—ஒருவர் உயிர்வாழ்தற்குத் திங்கள்தோறும் அல்லது ஆண்டுதோறும் இத்துணைப் பொருள் கொடுத்துவருதல் என்பதற்குரிய பிணை.

[43] திருமணப்பிணை—சீதனம் முதலியவற்றைப் பற்றியது.

[44] நிலப்பிணை—நிலத்தை வாங்கல் விற்றல் முதலியவற்றைப் பற்றியது.

களுக்குப் புதல்வரும் பேரரும் காலமிடங்களின் வரையறை யின்றிப் [45]பொறுப்பாளராவர்.

[46]பல கடன்களும் ஒன்றுகூடுங்கால் [47]வெளிச்செல்லாத நிலை யில் ஒருவனை இருவர் ஒரே காலத்தில் வழக்குத் தொடர்தல் ஆகாது.

[48]அப்பொழுதும் வாங்கிய வரிசைப்படியாதல் [49]அரசர் அந் தணர் பொருளையாதல் முதலில் கொடுத்தல்வேண்டும்.

கணவன்மனைவி தந்தைமக்கள் பிரிவுசெய்துகொள்ளப்படாத உடன்பிறந்தார் என்னும் இவருள் ஒருவர்பால் ஒருவர் கடன் வாங்கியிருந்தால் வழக்குத்தொடர இயலாது.

[50]உழ்வரும் அரசியல்வினைஞரும் [51]தொழில்புரியுங்காலத்தில் பிடிக்கத்தக்கவர் அல்லர். [52]இடையன் வாரத்திற்கு உழுபவன் என்னும் இவர்தம் மகளிரல்லாதவிடத்துக் கணவன்பட்ட கடனை [53]ஏற்றுக்கொள்ளாத பெண்ணும் [54]ஆம்.

---

[45] தந்தை இறந்தபின் மக்களும் பேரரும் பொறுப்பாளர் ஆவர் என்பது.

[46] பலரிடத்தும் வாங்கிய கடன்களும் ஒரே காலத்தில் கொடுக்க நேர்ந் தால் என்பது.

[47] கடன்வாங்கினவன் தன் நாட்டைவிட்டு அயல்நாட்டுக்குப் புறப் படாமலிருக்கும் நிலையில் என்பது.

[48] அப்பொழுதும்—பல கடன்களையும் ஒரே சமயத்தில் கொடுக்க நேருங்காலும்.

[49] அரசன்பொருளும் அந்தணன்பொருளும் பின்னர் வாங்கப்பட்டன வாயினும் அவற்றை முன்னர்க் கொடுத்தல்வேண்டும் என்பது.

[50] கடன் கொடுத்தவரால் வழக்குத் தொடரப்பட்ட கடனாளிகளைப் பிடிக்கும் முறைபற்றிக் கூறுகின்றார்.

[51] தத்தம் தொழிலைச் செய்துகொண்டிருக்குங் காலத்தில் கடன்நிமித் தம் பிடிக்கத்தக்கவர் அல்லர் என்பது.

[52] இடையன் வாரத்திற்கு உழுபவன் என்னும் இவருடைய பெண்கள் சிறப்புரிமையுடையராதலின் அவர்கள் ஏற்றுக்கொள்ளாத நிலையிலும் அவர்தம் கணவன்மார்பட்ட கடனுக்காக அப்பெண்களையும் வழக்குத் தொடர்ந்து பிடிக்கலாம் என்பது கருத்து.

[53] ஏற்றுக்கொள்ளாத பெண்—யான் கொடுப்பேன் என்று உடன் படாத பெண்.

[54] கடன்நிமித்தம் வழக்குத்தொடர்ந்து பிடிக்கத்தகாதவளாம்என்பது.

மனைவிபட்ட கடன்நிமித்தம் [55]வாழ்க்கைக்கு வேண்டியதைச் செய்யாமல் அயலிடம் சென்ற காரணத்தால் அவள்கணவன் [56]பிடிக்கத்தக்கவனுவான்.

[57]உடன்படுதல் சிறந்தது. [58]உடன்பாடின்றேல் நம்பிக்கை யுடையவர் [59]தூய்மையுடையவர் [60]ஏற்றுக்கொள்ளப்பட்டவர் எனக் குறைந்த அளவு [61]சான்ருவார் மூவரைக்கொண்டு துணிதல் வேண்டும். கடனைக்குறித்து [62]இருதிறத்தாராலும் உடன்படப் பட்ட [63]இருவர் சான்ருதலுமாம். ஒருவனே சான்ருதல் கூடாது.

[64]மைத்துனன் உதவியாளன் [65]அண்டிப்பிழைப்பவன் கடன் கொடுத்தவன் கடன்கொண்டவன் பகைவன் உறுப்பறையன் தண்டிக்கப்பட்டோன் என்னும் இவர்கள் [66]விலக்கத்தக்கவர் ஆவர்.

[67]தத்தம் இனத்தவரல்லாதவிடத்து வழக்கிடுதற்கு இயலா

---

[55] மனைவி உயிர்வாழ்தற்கு வேண்டிய பொருட் சௌகரியங்களைச் செய்யாமல் கணவன் அயலிடம் சென்றுவிட்டானுயின் என்பது,

[56] மனைவிபட்ட கடனை ஏற்றுக்கொள்ளாமலிருந்தாலும் அக்கடனிமித் தம் பிடிக்கத்தக்கவன் ஆவான் என்பது.

[57] வழக்குத் துணிதற்குரிய கருவிமுறையைக் கூறுகின்ருர். கடன் கொடுத்தவன் அறிவித்தபடி கடன்கொண்டவன் உடன்படுதல் வழக்குத் துணிதற்குச் சிறந்த கருவியாகும் என்பது.

[58] உடன்பாடின்றேல்—வழக்காளி சொல்லுகிறபடி எதிர்வழக்காளி உடன்படவில்லையானுல்.

[59] தூய்மையுடையவர்—உள்ளும்புறமும் பரிசுத்தமுடையோர்.

[60] ஏற்றுக்கொள்ளப்பட்டவர் — வாதிப்பிரதிவாதிகளால் உடன்படப் பட்டோர்.

[61] சான்று என்பதனுல் இனமாகிய ஆவணம் முதலியவற்றையுங் கொள்ளல்வேண்டும்.

[62] இருதிறத்தார்—வழக்காளியும் எதிர்வழக்காளியுமாவர்.

[63] இவ்விருவர் கூறும் சான்றும் வழக்குத் துணிதற்குக் கருவியாம் என்பது.

[64] சான்ருதற்குத் தகுதியில்லாதவர் இன்னுர் எனக் கூறுகின்ருர்.

[65] அண்டிப்பிழைப்பவன்—வழக்காளிகளுள் ஒருவனைப் பொருள்நிமித் தம் அணுகி உயிர்வாழ்பவன்.

[66] சான்றுகூறுதற்குத் தகுதியற்றவர் ஆவர் என்பது.

[67] பின் விலக்கப்படுவோர் தத்தம் இனத்தவராயின் சான்றுகூறு தற்குத் தகுதியுடையவர் ஆவர் என்பது கருத்து.

தவர் என [68]முன்னர்க் கூறப்பட்டவரும் அரசன் பார்ப்பனன் கிராமப்பணியாளன் குட்டநோயன் உடற்புண்ணுடையோன் [69]பதிதன் சண்டாளன் இழிதொழிலுடையோன் குருடன் செவிடன் ஊமன் [70]வலியவந்து சொல்லுவோன் என்னும் இவரும் மகளிரும் அரசியல்வினைஞரும் அங்ஙனமே விலக்கத்தக்கவர் ஆவர்.

[71]கொடுமை களவு [72]வலிந்துபற்றல் ஆகிய இந்நிகழ்ச்சிகளில் பகைவன் மைத்துனன் உதவியாளன் என்னும் இவரல்லாதாரும் [73]மறைவான நிகழ்ச்சிகளில் [74]அரசரும் துறவொழுக்கமுடையோரும் அல்லாத தனிமையானபெண் தனிமையான ஆடவன் அருகிலிருந்து கேட்டவன் அருகிலிருந்து கண்டோன் ஆகிய இவர்களும் சான்றாகலாம்.

பணியாளர்க்குத் தலைவரும் மாணாக்கர்களுக்கு வேட்பிப்போரும் ஆசிரியரும் புதல்வர்களுக்குத் தாய்தந்தையரும் [75]வற்புறுத்தப்படாத நிலையில் சான்றாகலாம். [76]அவர்களுக்கு மற்றையோரும் ஆம். [77]இவர்களுள் ஒருவரையொருவர் வழக்குத்

---

[68] முன்னர்க் கூறப்பட்டவர்—கணவன் மனைவி, தந்தை மகன், பிரிவு செய்துகொள்ளப்படாத உடன்பிறந்தோர் என்பவராவர்.

[69] பதிதன்—கன்மசண்டாளன்.

[70] வலியவந்து சொல்லுவோன்—'யான் சான்றாவேன்' என்று தானே கூற முன்வருவோன்.

[71] இனி சான்று கூறுதற்குரியார் இன்னார் எனக் கூறுகின்றார். கொடுமை—கொடுஞ்செயல்.

[72] வலிந்துபற்றல்—இணக்கமில்லாத மகளிரைக் கவர்தல்.

[73] மறைவான நிகழ்ச்சி — பிறர்க்கு வெளிப்படாவாறு தனிமையில் நிகழும் காரியங்கள்.

[74] பின்னர்க் கூறப்பட்டோர் அரசரும் துறவொழுக்கமுடையோரும் ஆயின் சான்றாதல் ஆகாது என்பது கருத்து.

[75] வற்புறுத்தப்படாதநிலை — பிறரால் வற்புறுத்தப்படாமல் தாமே விரும்பி முன்வருதல்.

[76] தலைவர்க்குப் பணியாளரும், வேட்பிப்போருக்கும் ஆசிரியருக்கும் மாணாக்கரும் தாய்தந்தையர்க்குப் புதல்வரும் வற்புறுத்தப்படாத நிலையில் சான்றாகலாம் என்பது கருத்து.

[77] இவர்களுள்—தலைவர் பணியாளர் முதலியோருள்,

தொடர நேர்ந்தவிடத்துத் [78]தலையாயார் தோல்வியடையின் [79]பத்து மடங்கும் [80]கடையாயார் தோல்வியடையின் [81]ஐந்து மடங்கும் கொடுத்தல்வேண்டும். சான்றுதலைப்பற்றிய செய்தி இவ்வாறும்.

[82]பார்ப்பனரை [83]நீர்க்குடம் நெருப்பு இவற்றின் முன்னிலையில் வைத்துச் சான்றாக ஏற்றுக்கொள்ளல் வேண்டும். [84]ஆண்டுப் பார்ப்பனனை நோக்கி 'உண்மையைச் சொல்லுக' என்றும் அரசகுலத்தவனையும் வணிககுலத்தவனையும் தனித்தனி நோக்கி 'மாறுபடக்கூறுவாயானால் உனக்கு வேள்விப்பயனும் [85]ஒப்புரவறத்தின் பயனும் உண்டாகா. ஓடு கையிலேந்தி ஐயமேற்பதன் நிமித்தம் பகைவர் இல்லத்தை அடைவாய்' என்றும் சூத்திரனை நோக்கி 'மாறுபடக்கூறுவாயானால் பிறந்தது முதல் இறக்கும் வரை நீ செய்த புண்ணியத்தின் பயன் அரசனையும் [86]அரசனது பாவத்தின் பயன் உன்னையும் சாரும். [87]தண்டமும் பற்றும். நீ [88]கண்டதும் கேட்டதும் பின்னர் உள்ளவாறு அறியப்படும். [89]ஒன்றுகூடிச் சூழ்ந்து உண்மையை வெளிப்படுத்துக' என்றும் கூறல்வேண்டும்.

---

[78] தலையாயார்—தலைவர் ஆசிரியர் தாய்தந்தையர்.

[79] வழக்குப்பொருளளவின் பத்து மடங்கு வென்றவர்க்குத் தோல்வியடைந்தவர் கொடுக்கவேண்டும் என்பது.

[80] கடையாயார்—பணியாளர் மாணவர் புதல்வர்.

[81] வழக்குப்பொருளளவின் ஐந்து மடங்கு வென்றவர்க்குத் தோல்வியடைந்தவர் கொடுக்கவேண்டும் என்பது.

[82] சான்றுவாரைக் குறித்து வினவும் முறையைக் கூறுகின்றார்.

[83] நீர் நெருப்புக்களின் முன்னிலையில் பார்ப்பனர் பிறழக்கூறமாட்டார் என்பதுபற்றி இவ்வாறு கூறப்பட்டது.

[84] ஆண்டு—நீர் நெருப்புக்களின் முன்னிலையில்.

[85] ஒப்புரவறம் — மக்களெல்லோருக்கும் பொதுவாகப் பயன்படும் கிணறு குளம் முதலியன அமைத்தல்.

[86] அரசன் பிறந்தது முதல் இறக்கும் வரை செய்த பாவத்தின் பயன் என்பது.

[87] தண்டம்—பொய் கூறியதன் நிமித்தம் அது வெளிப்பட்டதும் அரசனால் ஏற்படுவது.

[88] நீ நேரில் கண்டதும் கேட்டதும் எங்கள் முயற்சியால் பின்னர் அறிந்துகொள்ளப்படும் என்பது.

[89] சான்றாக வினவப்படுவோர் மூவர் ஆதலின் ஒன்றுகூடி எனப்பட்டது. 'ஆண்டுப் பார்ப்பனனை நோக்கி' என்பது தொடங்கி 'உண்மையை வெளிப்படுத்துக' என்பதுகாறும் உள்ள பகுதிகளின் மூலம் ஈண்டு

[90]வெளிப்படுத்தவில்லையானால் [91]ஏழு நாட்களுக்குமேல் [92]பன்னிரண்டுபணம் தண்டமும் [93]மூன்று பக்கங்களுக்குமேல் [94]வழக்குப் பொருளையும் கொடுத்தல்வேண்டும்.

சான்றுகூறுவோர் வேறுபடுவாராயின் பலரும் தூய்மையுடையோரும் ஏற்றுக்கொள்ளப்பட்டாரும் [95]எவ்வாறு எண்ணுகின்றனரோ அவ்வாறு துணிதல்வேண்டும். [96]நடுவாகவும் கொள்ளலாம். [97]அப்பொருளை அரசனும் கொள்ளலாம். சான்

---

மொழிபெயர்க்கப்பட்டபடி இருந்தாலும் மூலவாக்கியங்கள் ஓரோவிடங்களில் சிதைந்திருப்பதாகக்கொண்டு திருத்தி இயைத்துப் பின்வருமாறு கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். வருமாறு :—'ஆண்டுப் பார்ப்பனனை நோக்கி உண்மையைக் கூறுக பிறழக் கூறுவாயானால் உனக்கு வேள்விப்பயன் உண்டாகாது எனவும், அரசகுலத்தவனை நோக்கி உண்மையைக் கூறுக பிறழக்கூறுவாயானால் ஒப்புரவறத்தின் பயன் உனக்கு உண்டாகாது எனவும், வணிககுலத்தவனை நோக்கி உண்மையைக் கூறுக பிறழக்கூறுவாயானால் ஓடு கையிலேந்தி ஐயமேற்பதன் நிமித்தம் பகைவர் இல்லத்தை அடைவாய் எனவும், சூத்திரனை நோக்கி உண்மையைக் கூறுக பிறழக்கூறுவாயானால் பிறப்புமுதல் இறப்புவரையுள்ள உன் புண்ணியப் பயன் அரசனையும் அரசனது தீவினைப்பயன் உன்னையும் அடையும் எனவும் கூறல்வேண்டும். பிறழக்கூறுவீராயின் நீவிர் கண்டதும் கேட்டதும் பின்னர் உள்ளவாறு அறியப்படும். ஆதலின் பொய் கூறியதற்குரிய தண்டமும் உம்மைப் பற்றும். நீவிர் ஒன்றுகூடிச் சூழ்ந்து உண்மையை வெளிப்படுத்துங்கள் என்றும் கூறல்வேண்டும் என்பதாம்.

90 சான்றுகூறுவோர் உண்மையை வெளிப்படுத்தவில்லையானால் என்பது.

91 ஏழுநாள் என்றதனால் உண்மையைக் கூறுதற்கு ஏழுநாள் அவகாசம் கொடுக்கவேண்டும் என்பது போதரும்.

92 தாழ்க்கும்நாள் ஒவ்வொன்றிற்கும் பன்னிரண்டு பணவிகிதம் என்பது கருத்து.

93 மூன்றுபக்கம்—நாற்பத்தைந்து நாட்கள்.

94 குறிப்பிட்ட தண்டத்துடன் வழக்குப்பொருளைக் கொடுத்தல் வேண்டும் என்பது.

95 எல்லோரும் ஒருங்கியைந்து எப்படிக் கருதுகின்றனரோ அவ்வழியே துணிதல்வேண்டும் என்பது.

96 மேற்கூறிய முத்திறத்தார் எண்ணங்களும் வாதிப்பிரதிவாதியாகிய இருவர்பக்கத்தும் சமனாக இருக்குமாயின் ஏதாவது ஒருபக்கத்தை அறங்கூறவையத்தார் துணியலாம் என்பது கருத்து.

97 மேற்கூறிய இருவகையான தீர்ப்புக்களுக்கும் இடனில்லாதபொழுது வழக்குப்பொருளை அரசன் அடையலாம் என்பது.

ருவார் வழக்குப்பொருளைக் [98]குறையக் கூறுவாராயின் வழக்காளி [99]மிருதியின் ஐந்து மடங்கு [100]செலுத்தல் வேண்டும். [101]மிருதி யாகக் கூறுவாராயின் அம்மிருதியை அரசன் கொள்ளலாம். வழக் காளியின் சோர்வினால் [102]மாறுபடக் கேட்கப்பட்டு மாறுபட எழுதப்பட்டதையும் [103]இறப்பினால் ஏற்பட்ட கலக்கத்தையும் நன்றாக ஆராய்ந்து [104]சான்றுகூறுவாரது நம்பிக்கையைப் பொறுத்தே துணிதல்வேண்டும்.

தனித்தனியாக வினவுங்கால் [105]சான்று கூறுவாருடைய பிறழ்ச்சிகளில் இடம் காலம் காரியம் என்னும் இவற்றிற்கு முறையே பூர்வ மத்தியம உத்தமசாகசம் தண்டங்களாம் என்பர் [106]ஔசனசர்.

[107]பொய்ச்சான்றுகூறுவோர் பொய்யாக எவ்வளவு கூறி னரோ உண்மையை எவ்வளவு மறைத்தனரோ அவ்வளவின்

---

98 குறையக்கூறுதல் — வாதியினால் விரும்பப்பட்ட பொருளளவிற் குறையக் கூறுதல்.

99 மிருதி—வழக்காளியால் விரும்பப்பட்ட அளவில் சான்றுவார்கூறிய அளவுகழித்து எஞ்சியபகுதி.

100 அரசனுக்குத் தண்டமாகச் செலுத்தவேண்டும் என்பது.

101 வழக்காளியால் விரும்பப்பட்ட அளவின் அதிகமாகச் சான்றுவார் கூறுவாராயின் அம்மிருதியை அரசன் கொள்ளலாம் என்பது.

102 வழக்காளிகூறியதை எழுத்தாளன் மாறுபடக்கேட்டு மாறுபட எழுதியதையும் என்பது.

103 எழுத்தாளனது உறவினர்மரணம் முதலியவற்றால் அவன்மனம் கலக்கமுற்றிருப்பதையும் என்பது.

104 மேற்கண்ட பிறழ்ச்சியான நிகழ்ச்சிகளில் சான்றுகூறுவாருடைய நம்பிக்கையைப்பொறுத்து வழக்கைத் துணிதல்வேண்டும் என்பது.

105 சான்றுகூறுவார் பிறழக்கூறுவாராயின் அப்பிறழ்ச்சி இடத்தைப் பற்றியதாயின் பூர்வசாகச தண்டமும் காலத்தைப்பற்றியதாயின் மத்தியம சாகசதண்டமும் காரியத்தைப்பற்றியதாயின் உத்தமசாகச தண்டமும் ஆம் என்பது.

106 ஔசனசர் — சுக்கிராச்சாரியரின் பரம்பரையினர்; உசனஸ்— சுக்கிரன்.

107 எவ்வளவு பொருள் பொய்ம்மையாகக் கூறப்பட்டதோ உண்மை யாகவுள்ள பொருளில் எவ்வளவு மறைத்துக் கூறப்பட்டதோ அப்பொரு ளளவின் பத்து மடங்கு தண்டமாகச் செலுத்தல்வேண்டும் என்பது மநு வின் வழிப்பட்டோர் கொள்கையாம்.

பத்து மடங்கு தண்டமாகக் கொடுத்தல்வேண்டும் என்று கூறுவர் மானவர்.

[108]பிடிவாதமாகப் பொய்ம்மை கூறுவார்க்குச் சித்திரவதை தண்டமாம் என்பர் [109]வியாழன்வழிப்பட்டோர்.

[110]துருவமாகச் சான்றுவாரே வினுவத்தக்கவர் ஆவர். அல்லாதார் அங்ஙனமாகார் என்பர் கௌடலியர். [111]வினுவுதற்கில்லார் இருபத்துநான்கு பணமும் [112]துருவமல்லாதார் அதனில் பாதியும் தண்டம் இறுத்தல்வேண்டும்.

### சுலோகம்

[113]காலத்தாலும் இடத்தாலும் அணிமையிலுள்ளவர்களைச் சான்றுகச் [114]செய்தல்வேண்டும். சேய்மையிலுள்ளவர்களையும் [115]வாராதவர்களையும் நீதிமன்றத்தலைவன் கட்டளைப்படி அழைப்பித்தல்வேண்டும்.

மூன்றும் அதிகரணம் ஏழாம் பிரகரணம் " கடன்கோடல் "
என்னும் அறுபத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

108 கூறுவது பொய்ம்மை என்று அறிந்தும் கூறுவார்க்கு இத்தண்டம் என்பது கருத்து.

109 வியாழன் வழிப்பட்டோர்—பிருகற்பதியின் வழியினர்.

110 துருவம்—உண்மையை உறுதியாகத் தெளிந்து கூறுதல். அணிமையிலுள்ள நாற்பது இல்லங்களுக்குத் தலைவராதலுமாம்.

111 வினுவுதற்கில்லார் — வினுவுதற்கு அழைக்கப்பட்டும் வாராத துருவச் சான்றுவார்.

112 துருவச் சான்றுகாதவர் அழைக்கப்பட்டும் வரவில்லையாளுல் பன்னிரண்டு பணம் தண்டம் இறுத்தல்வேண்டும் என்பது.

113 சான்றுவார் ஒரு நிகழ்ச்சியை அணிமையான இடத்திலிருந்து அணிமையான காலத்தில் கண்டவராக இருத்தல்வேண்டும் என்பது கருத்து.

114 வழக்காளி தானே அழைத்துவந்து சொல்லுவித்தல் வேண்டும் என்பது.

115 வாராதவர்கள்—அணிமையிலிருந்தும் அழைக்கப்பட்டும் வாராதவர்கள்.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## எட்டாம் பிரகாணம்—[1]அடைக்கலப்பொருளியல்

## அறுபத்தொன்பதாம் அத்தியாயம்

[2]கடனைப்பற்றிய விதியால் [3]அடைக்கலப் பொருளிற்கும் கூறப்பட்டபடியாம். [4]பகைப்படையாலும் [5]காட்டில் வாழ்வோராலும் அரணிற்கும் நாட்டிற்கும் கேடுண்டாய காலத்தும் கள்வரால் கிராமத்திற்கும் வாணிகக்குழுவிற்கும் ஆனிரைக்கும் கேடுநேர்ந்தவிடத்தும் [6]வஞ்சகத்தால் அழிவுநேர்ந்தவிடத்தும் ஊர்நடுவண் நெருப்பாலும் [7]நீராலும் கேடுநேர்ந்தவிடத்தும் சிறிதளவு எடுக்கப்பட்டும் சிறிதளவு எடுக்கப்படாமலுமுள்ள [8]வெளிப்படுத்தத்தக்க

---

### 69-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அடைக்கலப்பொருள் விவாதத்திற்கு இடனாகுங்கால் கடனாகவுள்ள பொருளைப்போலக் கருதப்பட்டு வழக்கிடத்தக்கதாகலின் கடன்கோடலின் பின் இது வைக்கப்பட்டது. இதனால் பிரகரண இயைபுண்மை யறிக.

[2] கடன்கொண்டவன் தானும் தன் புதல்வர் முதலியோரும் அதனைத் திருப்பிக்கொடுத்தற்கு உரியராவர் என்பதும் அதுபற்றி வழக்கு ஏற்படுமாயின் சான்று முதலியவற்றைக்கொண்டு துணிதல்வேண்டும் என்பதும் கடனைப்பற்றிய விதியாகும். அவ்விதியே அடைக்கலப்பொருளிற்குமாம் என்பது கருத்து.

[3] அடைக்கலப்பொருள் என்பது உபலக்கணத்தால் ஈட்டுப்பொருள் கட்டளைப்பொருள் ஒப்படைப்பொருள் என்னும் இவற்றையும் குறிக்கும். கட்டளைப்பொருள் ஒப்படைப்பொருள் இவற்றின் இயல்பை இவ்வத்தியாயத்தின் 51, 52-ஆம் குறிப்புக்களிற் காண்க.

[4] இனி அடைக்கலப்பொருள் இன்ன இன்ன நிகழ்ச்சிகளில் திருப்பிக்கொடுக்கத்தக்கதன்று என்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

[5] காட்டில் வாழ்வோர்—வேடர் முதலியோர்.

[6] பிறருடைய வஞ்சகச் செயலால் அடைக்கலப்பொருளுக்கு அழிவு நேர்ந்தவிடத்தும் என்பது.

[7] நீரால் கேடு நேர்தல்—வெள்ளப்பெருக்கினால் அழிவுண்டாதல்.

[8] வெளிப்படுத்தத்தக்க குப்பியப்பொருளாவது :—38-ஆம் அத்தியாயத்தில் கூறப்பட்ட பெயர்க்கத்தக்கதும் பெயர்க்கத்தகாததுமாகிய குப்பியப்பொருள்களுள் பெயர்க்கத்தக்கது. அப்பொருள் நெருப்பினாலும் நீரினாலும் கேடடைந்தவிடத்து அஃதடைக்கலப் பொருளாயினும் திருப்பிக்கொடுக்கத்தக்கதன்று என்பது கருத்து. ஈண்டு வெளிப்படுத்தத்தக்க

குப்பியப்பொருளையும் [9]நெருப்புச்சுடரால் தடைநேர்ந்தவிடத்தும் [10]தோணிஇயக்குவோன் உயிர்பிழைத்திருப்ப அத்தோணி மூழ்கிய விடத்தும் திருடப்பட்டவிடத்தும் அடைக்கலப்பொருள் திருப்பிக் கொடுக்கத்தக்கதன்று.

அடைக்கலப்பொருளை [11]அநுபவிப்பவன் காலஇடங்களுக் கேற்ப [12]அநுபவக்கூலியும் பன்னிரண்டு பணம் தண்டமும் செலுத்தல்வேண்டும். அநுபவநிமித்தம் வைக்கப்பட்ட பொருள் பிறராற் கவரப்பட்டாலும் அழிந்துபோனாலும் [13]திருப்பிக்கொடுத்தல் வேண்டும். இருபத்துநான்கு பணம் [14]தண்டமுமாம். [15]வேறுவகையாக வெளிப்பட்டாலுமாம். [16]இறந்தவன் துன்பத்தில் மூழ்கினவன் என்னும் இவரிடத்தில்நின்றும் அடைக்கலப் பொருள் திருப்பிப்பெறத்தக்கதன்று.

---

குப்பியப்பொருள் என்றமையால் வெளிப்படுத்தத்தகாத குப்பியப் பொருட்கு நீர்நெருப்புக்களால் அழிவுநேர்ந்தால் அதுபற்றிக் குற்றம் நேராது என்பது பெறப்படும்.

9 நெருப்புச்சுடரால் அடைக்கலப்பொருள் வைக்கப்பட்ட இடத்தை அடைதற்குத் தடை உண்டாயபொழுதும் என்பது.

10 நீரில் செலுத்தப்படும் தோணி கவிழ்ந்துவிட்டாலும் பிறரால் கவரப் பட்டாலும் அதன்கண் உள்ள அடைக்கலப்பொருள் அத்தோணி இயக்கு வோன் உயிர்பிழைத்திருப்பினும் அவனால் திருப்பிக்கொடுக்கத்தக்கதன்று என்பது.

11 அப்பொருட்குரியவனது உடன்பாடில்லாமல் அநுபவிப்பவன் என்பது.

12 அநுபவக்கூலியைப் பொருட்குடையானுக்கும் அவன் அநுமதியின்றி அநுபவித்த குற்றத்திற்குரிய தண்டத்தை அரசனுக்கும் கொடுத்தல் வேண்டும் என்பது.

13 திருப்பிக்கொடுத்தல் அப்பொருளின் பெறுமதியை என்க.

14 இத்தண்டம் அப்பொருட்குக் கேடுவிளைத்தவனுக்கென்பது.

15 அப்பொருளை அநுபவியாமலே வெளிப்படுத்திவிடினும் இருபத்து நான்கு பணம் தண்டமாம் என்பது.

16 அடைக்கலப்பொருளை ஏற்றுக்கொண்டவன் அப்பொருளைக்கெடுத்து இறந்துவிடுவானாயினும் துன்பத்தில் மூழ்கினானாயினும் முறையே அவன் மக்களிடத்தினின்றும் அவனிடத்தினின்றும் அடைக்கலப்பொருள் திருப்பிப் பெறத்தக்கதன்று என்பது கருத்து.

[17]ஈடுவைத்தல் விற்றல் மறைத்துவிடல் என்னும் இவற்றைச் செய்தவனுக்கு [18]நான்குமடங்கும் ஐந்தில் ஒருகூறும் தண்டமாம். [19]மாற்றிவிடினும் வெளிப்படுத்திவிடினும் விலையளவு தண்டமாம்.

[20]இதனால் ஈட்டுப்பொருளை அழித்தல் அநுபவித்தல் விற்றல் ஈடுவைத்தல் கவர்தல் என்னும் இவற்றிற்கும் [21]விதி கூறப்பட்டபடியாம்.

[22]அநுபவிக்கப்படும் ஈடு [23]அழிவிலதாகும். இதன் மூலப்பொருளுக்கு [24]வட்டியின்று. [25]அநுபவமில்லாத ஈடு அழிவுடையதாம். [26]உடன்பாடில்வழி இதன் மூலப்பொருள் வட்டியுடையதாம்.

---

[17] அடைக்கலப்பொருளை ஈடுவைத்தல் முதலியன செய்தவனுக்கென்பது.

[18] அடைக்கலப் பொருளளவின் நான்கு மடங்கு அப்பொருட்குரியவனுக்கு இழப்பீடாகவும் அந் நான்குமடங்கில் ஐந்தில் ஒருகூறு அரசனுக்குத் தண்டமாகவும் செலுத்தல்வேண்டும் என்பது.

[19] அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருளை மாற்றிவிட்டாலும் பிறிதோரிடத்தில் விலக்கிவைப்பினும் அப்பொருளின் விலையளவு தண்டம் இறுத்தல்வேண்டும் என்பது.

[20] இதனால்—அடைக்கலப் பொருளுக்குக் கூறிய விதியினால்.

[21] அடைக்கலப்பொருளை அழித்தல் முதலியன செய்தவனுக்கு விதிக்கப்பட்ட தண்டங்களே ஈட்டுப்பொருளை அழித்தல் முதலியன செய்தவனுக்கும் ஆம் என்பது கருத்து.

[22] அநுபவித்தல் — ஈட்டுப் பொருளினின்றும் வருவாயை நுகர்தல். ஒரு பசுவை ஈடாகப்பெற்றால் அதன் பாலைக்கறந்து அநுபவித்தல் போல்வது.

[23] அழிவிலதாதல் — குறிப்பிட்ட கால எல்லை கடந்தும் நாசமடையாமை. காலவரையறையின்றி எப்பொழுதாயினும் பொருளைப் பெற்றுக்கொண்டு உடைமையைத் திருப்பிக் கொடுத்துவிடுதல்.

[24] பயன் அநுபவிக்கப்படுவதால் வேறாக வட்டி இல்லை என்பது. வட்டியில்லாமல் பயன் அநுபவிக்கப்படும் ஈடு, இக்காலத்தில் 'ஒற்றி' என்று வழங்கப்படும்.

[25] பயன் அநுபவிக்கப்படாத ஈடு, குறிப்பிட்ட கால எல்லை கடந்தால் திருப்பிப்பெறத் தகாததாகும் என்பது.

[26] ஈட்டுடைமைக்குரியவன் பயனை அநுபவிக்கும்படி ஈடுபெற்றவனுக்கு அநுமதி கொடுக்கவில்லையானால் அந்த ஈட்டின்பேரில் கொடுக்கப்பட்ட பொருளுக்கு வட்டியுண்டென்பது கருத்து. பயனை அநுபவிக்கும்படி உடன்பாடுபெற்றும் அநுபவிக்கவில்லையானால் அது கடன் கொடுத்தவனுடைய குற்றமாதலின் அப்பொருளுக்கு வட்டி இல்லை என்று கொள்ளல் வேண்டும்.

[27]தன்பால் வந்தவனுக்கு ஈட்டுடைமையைத் [28]திருப்பிக் கொடாவிட்டால் பன்னிரண்டுபணம் தண்டமாம். ஈடுபெற்ற வன் [29]அணிமையில் இல்லையானால் ஈட்டுக்குரிய பொருளை அவ்வூர்ப் பெரியோர்களிடத்தில் கொடுத்துவிட்டு ஈட்டுடைமை யைத் திருப்பிப் பெறக்கடவன். உரியகாலத்தில் பொருள் கொடுக்கப்பட்டு விடுதலைபெற்ற ஈட்டுடைமை [30]வட்டியில்லாமல் [31]அவனிடத்திலேயே [32]கவரப்படாமலும் [33]அழிவில்லாமலுமிருத் தற்குரிய [34]கருவிகளுடன் வைக்கப்படலாம். உடைமைக்கு [35]அழி வுண்டாம் என்னும் அச்சம் காரணமாக நீதிபதிகளின் அநுமதி பெற்று [36]உரியவன் முன்னிலையில் [37]உயர்ந்த விலைக்கு அவ்வுடை மையை விற்றுவிடலாம். ஈட்டுடைமையைப் பாதுகாப்பவன் [38]கருத்துக்கேற்பவும் செய்யலாம்.

---

27 தன் என்பது ஈடுபெற்றவனைக் குறிக்கும். ஈட்டுடைமையைத் திருப்பிப்பெறுதற்குரிய காலத்தில் உரியபொருளுடன் வந்து அப்பொருளைச் செலுத்தினவனுக்கென்பது.

28 உரியபொருளைப் பெற்றுக்கொண்டு உடைமையைத் திருப்பிக் கொடுக்க மறுத்தால் என்பது.

29 அணிமையிலில்லாமை — அயல்நாடு முதலியவற்றிற்குச் சென் றிருத்தல்.

30 திருப்பிப்பெறவேண்டிய ஈட்டுடைமை மீண்டும் முன் ஈடு பெற்றவ னிடத்தே வைக்கப்படுதலால் அதற்கெனக் குறிப்பிட்ட பொருள் பெறப் பட்டதாயினும் உடைமையை வைத்திருத்தல்பற்றி அப்பொருட்கு வட்டி யின்றென்பது கருத்து.

31 அவனிடத்தில்—முன் ஈடு பெற்றவனிடத்தில்.

32 கவரப்படுதல் — உடைமைக்குரியவன் அணிமையிலில்லாமையால் பிறரால் அபகரிக்கப்படுதல்.

33 அழிவு—பாதுகாக்கப்படாமையால் ஏற்படும் கேடு.

34 கருவி—காவலாளை நியமித்தல் முதலியன.

35 அழிவு—பசு முதலியவற்றிற்குப் பருவமுதிர்ச்சி முதலியவற்றால் நேரும் கேடுபோல்வது.

36 உரியவன்—ஈட்டுடைமைக்கு உரியவன்.

37 உயர்ந்தவிலை என்றதனால் உடைமையின் மதிப்பிற்குச் சற்று மேற் பட்ட விலை கிடைக்குமானால் விற்றுவிடலாம் என்பது கருத்து.

38 கருத்துக்கேற்றல்—விற்றுவிடுதல் அல்லது வைத்துப் பாதுகாத்தல் என்னும் இரண்டனுள் ஒன்று.

[39]நிலையியற்பொருள் [40]முயற்சியால் நுகரத்தக்கதும் [41]பயனுகை நுகரத்தக்கதும் ஆம். [42]ஊதியக்கூற்றால் [43]கொடுத்த பொருளைக் குறையாமல் [44]நேர்செய்து ஈட்டுடைமையைத் திருப்பிக் கொடுத்து விடல் வேண்டும்.

[45]உடன்பாடில்லாமல் ஈட்டுடைமையை அநுபவிப்பவன் [46]ஈட்டுப்பொருளிலிருந்து அநுபவக்கூலியையும் ([47]அரசனுக்குரிய) கூற்றையும் [48]கொடுத்தல்வேண்டும். [49]எஞ்சியவெல்லாம் அடைக்கலப் பொருட்குக் கூறியபடியாம்.

[50]இதனால் [51]கட்டளைப்பொருள் [52]ஒப்படைப்பொருள் இவ்விரண்டிற்கும் விதி கூறப்பட்டபடியாம். ஒப்படைப் பொருளைக்

---

[39] நிலையியற்பொருள்—நிலம் மரம் முதலியன.

[40] முயற்சியால் நுகரத்தக்கது — ஈடுவாங்கினவன் முயன்று பயன் பெறத்தக்கது.

[41] ஈட்டுடைமைக்காரன் முயற்சியால் பயனுண்டாக்க அதனை ஈடு பெற்றவன் அநுபவிப்பது.

[42] ஊதியக்கூறு—ஈடாகப் பெற்ற பொருளைக்கொண்டு வாணிகம் செய்து அதனாற் கிடைக்கும் ஊதியத்தில் இவ்வளவு கூறு உடைமைக்காரனுக்குக் கொடுப்பதென்று வரையறுத்துக்கொள்வது.

[43] கொடுத்தபொருள்—ஈட்டுடைமைக்காகக் கொடுக்கப்பட்டபொருள்.

[44] நேர்செய்தல்—தீர்த்துவிடுதல்.

[45] ஈட்டுடைமைக் குரியவனுடைய அநுமதியில்லாமல் என்பது.

[46] ஈட்டுப்பொருள்—ஈட்டுடைமைக்காகக் கொடுக்கப்பட்ட பொருள்.

[47] அரசனுக்குரியகூறு—உடன்பாடுபெறுமல் அநுபவித்ததன் நிமித்தம் அரசனுக்கு இறுக்கவேண்டிய தண்டம்.

[48] ஈட்டுடைமைக்காகத் திருப்பிப்பெறவேண்டிய பொருளில் அநுபவக் கூலியையும் அரசனுக்குரிய தண்டத்தையும் கழித்து எஞ்சியதைப்பெற்றுக் கொள்ளவேண்டுமேயன்றி முழுவதையும் பெற இயலாது என்பது கருத்து.

[49] இதற்குச் சொல்லப்படாத ஏனைய விதிகளெல்லாம் அடைக்கலப் பொருளுக்குக் கூறியபடி கொள்ளல்வேண்டும் என்பது.

[50] ஈட்டுக்குக்கூறிய விதியினால் என்பது.

[51] கட்டளைப்பொருள்—ஒருவனிடத்தில் கொடுக்கும்படி சொல்லி மற்றொருவன் கையில் கொடுக்கப்படுவது.

[52] ஒப்படைப்பொருள் — இத்துணைத்தூரம் வரை வழியிற் பாதுகாத்துத் திருப்பித்தரல் வேண்டும் என்று ஒருவனிடத்தில் ஒப்படைக்கப் படுவது.

கைவசப்படுத்திக்கொண்டு வாணிகக்குழுவோடு சென்றவன் குறிப்பிட்ட இடத்தை அடைதற்கு இடையில் கள்வரால் பொருள் கவரப்பட்டு [53]விடுதி பெறுவானாயின் அந்த ஒப்படைப்பொருள் திருப்பிக்கொடுக்கத்தக்கதன்றாம். இடைவழியில் [54]இறந்து விடுவானாயின் அவனுடைய ஞாதிகள் அப்பொருளைத் திருப்பிக் கொடுக்கவேண்டியதில்லை. மற்றைய விதிகள் அடைக்கலப் பொருட்குக் கூறியபடியாம்.

[55]இரவலாகவும் [56]வாடகைக்காகவும் கொண்ட பொருளை [57]வாங்கியபடியே திருப்பிக் கொடுத்தல்வேண்டும் விலங்கு முதலியவற்றின் அச்சத்தாலும் கள்வர்பயத்தாலும் [58]காலம் இடங்களால் தடைப்பட்டவிடத்தும் கொண்டபொருள் கவரப்பட்டு அல்லது அழிந்துவிடுமானால் அது திருப்பிக் கொடுக்கத்தக்க தன்று. எஞ்சியவிதி அடைக்கலப் பொருளுக்குக் கூறியபடியாம்.

இனி [59]பணியாளர் விற்பனைசெய்யுமாறு கூறப்படுகின்றது. பணியாளர் [60]காலம் இடங்களுக்கேற்ப விலைப்பண்டத்தை விற்று விற்பனையிலிருந்து கிடைக்கும் விலைப்பொருளையும் ஊதியத்தையும் [61]கொடுத்துவிடல் வேண்டும். எஞ்சியவிதி அடைக்கலப் பொருளுக்குக் கூறியபடியாம்.

---

53 பொருளைக் கள்வரிடத்தில் பறிகொடுத்துத் தான்மாத்திரம் விடுதலை பெறுவானாயின் என்பது.

54 ஒப்படைப் பொருளைக்கொண்டு செல்பவன் இறந்துவிடின் என்பது.

55 இரவற்பொருள்—மீண்டு தருவதாகக்கூறி அநுபவிமித்தம் ஒருவனிடத்தினின்றும் பெற்றுக்கொண்ட பொருள்.

56 வாடகை—அநுப்விப்பதற்காகக் கொடுக்கப்படும் கூலி.

57 வாங்குங்கால் அப்பொருள் எப்படியுள்ளதோ அப்படியே திருப்பிக் கொடுக்கவேண்டும் என்பது.

58 காலம் இடங்களால் உண்டாம் தடை—இத்துணைக் காலம் வரை அல்லது இவ்விடத்தினின்றும் வேற்றிடம் பெயர்தலாகாது என்று அரசியல் முதலிய காரணங்களால் ஏற்படுவது.

59 ஒருவனுடைய பொருளை அவனுடைய பணியாளர் விற்பனைசெய்யும் முறையைக் கூறத்தொடங்குகின்றார் என்பது.

60 காலம் இடங்களுக்கேற்ப என்பது, காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்திய விலைப்படி எனவும் தலைவனால் வரையறுக்கப்பட்ட காலம் இடங்களைக் கடவாமல் எனவும் பொருள்தரும்.

61 தலைவனுக்குக் கொடுத்துவிடல்வேண்டும் என்பது.

[62]காலம் இடங்களைக் கடத்தலால் குறைவு ஏற்படின் குறிப்பிட்ட காலத்திலுள்ள விலைப்படி விலைப்பொருளையும் ஊதியத்தையும் [63]கொடுத்தல்வேண்டும்.

[64]தம்முட் பேசிக்கொண்டபடி விற்கப்படின் [65]இரண்டையும் அடையமாட்டார். விலைத்தொகையை மாத்திரம் [66]கொடுத்தல் வேண்டும். விலையின் வீழ்ச்சியால் குறைவு ஏற்படின் [67]குறைவுக்குத்தக நிரப்பிக் கொடுத்தல்வேண்டும்.

[68]கொண்டு விற்றல் செய்பவர் நம்பிக்கைக்கு உரியராய் அரசனால் [69]தடைப்படுத்தப்படாதவராய் இருப்பின் விலங்கு முதலியவற்றின் அச்சத்தாலும் கள்வர்பயத்தாலும் விலைப்பண்டம் கவரப்பட்டு அல்லது அழிந்துவிடுமானால் [70]விலைத்தொகையையும் கொடுத்தல்வேண்டும் என்பதில்லை. [71]காலம் இடங்களால் வேறுபட்ட விலைப்பண்டங்களுக்குக் குறைவையும் செலவையும் கழித்துக்கொண்டு விலையளவையும் ஊதியத்தையும் கொடுத்தல்

---

[62] விலைப்பண்டங்களைத் தலைவன்குறிப்பிட்ட காலம் இடங்களைக் கடந்து விற்றமையால் ஊதியக்குறைவு ஏற்படின் என்பது.

[63] தலைவனுக்குப் பணியாளர் கொடுத்தல்வேண்டும் என்பது.

[64] தம்முட் பேசிக்கொள்ளல்—இன்ன விலைக்கு விற்கவேண்டும் என்று தலைவரும் பணியாளரும் பேசிக்கொள்ளுதல்.

[65] விலைத்தொகையும் கிடைக்கும் ஊதியமுமாகிய இரண்டையும் தலைவர் அடைதற்கு உரியரல்லர் என்பது.

[66] தலைவர்க்குப் பணியாளர் கொடுத்தல்வேண்டும் என்பதும் ஊதியத்தைப் பணியாளரே எடுத்துக்கொள்ளலாம் என்பதும் கருத்து.

[67] அக்குறைந்த அளவை நிறைத்துத் தலைவர்க்குக் கொடுத்தல் வேண்டும் என்பது.

[68] கொண்டுவிற்றல்—பிறருடைய விலைப்பண்டத்தை ஏற்றுக்கொண்டு விற்பனை செய்தல்.

[69] தடைப்படுத்தப்படாமை — எக்காரணத்தை முன்னிட்டும் அரசியலாரால் தடைசெய்யப்படாமை.

[70] ஊதியமேயன்றி விலைப்பண்டத்தின் விலையும் கொடுக்கவேண்டும் என்பதில்லை என்பது.

[71] கால நீட்சியாலும் தொலைவிடத்தாலும் விலைப்பண்டங்களுக்கு ஏற்படும் குறைவையும் கூலி முதலிய செலவையும் விலைத்தொகையிலிருந்து கழித்துக்கொண்டு எஞ்சிய தொகையையும் ஊதியத்தையும் தலைவர்க்குக் கொண்டுவிற்பவர் கொடுத்தல்வேண்டும் என்பது.

வேண்டும். [72]பண்டமாற்றுத் தொகுதியில் தனித்தனி கூறுண்டு. எஞ்சியவிதி அடைக்கலப் பொருளுக்குக் கூறியபடியாம். இதனால் பணியாளர்செய்யும் விற்பனைக்கும் விதி கூறியபடியாம்.

அடைக்கலப் பொருளுக்குக் கூறிய விதியே [73]பணிப்பொருளுக்குமாம். [74]ஒருவனால் தரப்பட்ட பணிப்பொருள் மற்றொருவனிடம் கொடுக்கப்படின் அஃது இழக்கப்பட்டதாகும். பணிப்பொருள் [75]கவரப்படுமாயின் [76]பண்டை ஒழுக்கமும் பணிப்பொருளாளன் தகுதியும் [77]பிரமாணமாகும். பொற்கொல்லர் [78]தூய்மையற்றவராக அவர்பால் [79]சான்று முதலியன இல்லாமற் கொடுக்கப்பட்ட பணிப்பொருளை [80]மறைப்பாராயின் பணிப்பொருளாளன் சுவர்மறைவிலிருக்கும் சான்றுகூறுவார் அறிந்துகொள்ளுமாறு [81]மறைவில் அவரை வணங்கித் தெரிவிக்குமாறு செய்தல்வேண்டும். அல்லது காட்டில் வைத்து [82]உண்டாட்டினால் மகிழ்வித்தும் தெரிவிக்கச் செய்யலாம்.

---

[72] ஒரு பண்டத்தை வேற்றுநாட்டில் விற்று அங்கிருந்து பிறிதொரு பண்டம் விலைக்கு வாங்கிக்கொண்டு வரப்படுமாயின் அவ்விரண்டானும் ஏற்படும் ஊதியத்தில் கொண்டுவிற்பவருக்குக் கூறு உண்டென்பது கருத்து.

[73] பணிப்பொருள்—அணிகலன் முதலியன செய்தற்பொருட்டுப் பொற்கொல்லனிடத்துக் கொடுக்கப்பட்ட பொன் முதலியன.

[74] அணிகலன் செய்வதற்காக ஒருவன் தந்த தங்கம் முதலியவற்றை அறியாமையால் பிறனொருவனிடம் திருப்பிக் கொடுப்பின் கொடுத்த பொற்கொல்லன் அதனை இழந்ததாகக்கொண்டு முன் தந்தவனுக்கு ஈடுசெய்தல் வேண்டும் என்பது கருத்து.

[75] கள்வர் முதலியோரால் கவரப்பட்டுவிட்டதாகப் பொற்கொல்லன் தெரிவிப்பானாயின் என்பது.

[76] பொற்கொல்லனது பண்டை ஒழுக்கம் என்பது.

[77] இருவர் நிலைமையும் அறிந்து உண்மை துணியத்தக்கது என்பது கருத்து.

[78] தூய்மையற்றவர்—பொய்கூறுவோர்.

[79] சான்று எழுத்து முதலியன இல்லாமல் நம்பிக்கையாகக் கொடுக்கப்பட்டதென்க.

[80] மறைப்பாராயின்—தரவில்லை என்று கூறுவாராயின்.

[81] மறைவில்—தனித்த இடத்தில்.

[82] உண்டாட்டு—கள் முதலியவற்றால் செய்யும் விருந்து.

[83]ஆண்டுமுதிர்ந்தவனாகவோ நோயுடையவனாகவோ உள்ள ஒரு வணிகன் மறைவில் பொற்கொல்லன்கையில் அடையாள மிடப்பட்ட பணிப்பொருளைக் கொடுத்துவிட்டுச் [84]சென்றுவிடுவானாயின் பின்னர் அவன்புதல்வனாதல் உடன்பிறந்தவனாதல் அவ்வணிகன்கட்டளைப்படி பொற்கொல்லனை அடைந்து அப்பணிப் பொருளைத் தரும்படி கேட்டல்வேண்டும். கொடுப்பின் தூய்மையுண்டு. [85]இன்றேல் அப் [86]பணிப்பொருளையும் திருட்டுக்குரிய தண்டத்தையும் இறுக்கக்கடவன்.

துறவறத்தில் விருப்பமுடையவனாக நம்பத்தக்க ஒருவன் அடையாளமிடப்பட்ட பணிப்பொருளைப் பொற்கொல்லன் கையில் கொடுத்துவிட்டுப்போய்ப் பின் காலங்கடந்து வந்து தரும்படிக் கேட்டல்வேண்டும். கொடுப்பின் தூய்மையுண்டு. இன்றேல் அப்பணிப்பொருளையும் திருட்டுக்குரிய தண்டத்தையும் இறுக்கக்கடவன். அல்லது [87]அடையாளத்தையறிந்து அப்பொருளைத் திருப்பியடைதல் வேண்டும். சிற்றினத்தைச் சேர்ந்த அறிவிலான் ஒருவன் [88]அரசனிடத்துச் சேர்ப்பிக்கும் விருப்பமுடையவனுக்கஞ்சி இரவில் [89]சிறந்த பணிப்பொருளைப் பொற்கொல்லன் கையில் கொடுத்துப் போதல்வேண்டும். பின்னர் அவன் [90]சிறைக்கூடத்திருந்து [91]இவனைத்தரும்படிக் [92]கேட்டல்வேண்டும்.

---

[83] பொற்கொல்லனது பண்டை ஒழுக்கத்தை அறிந்துகொள்ளுதற்கு உபாயம் கூறுகின்றார்.

[84] சென்றுவிடுதல் என்பதற்கு இறத்தல் என்று உரையாசிரியர் கூறுவர்.

[85] இன்றேல்—கொடுக்கவில்லை என்று மறுத்தால்.

[86] பணிப்பொருளை உரியவனுக்கும் தண்டத்தை அரசனுக்கும் கொடுத்தல் வேண்டும் என்பது கருத்து. பின் வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

[87] தன்னுலிடப்பட்ட அடையாளத்தை யறிந்தென்பது.

[88] அவ்வறிவிலானிடத்துள்ள சிறந்த பணிப்பொருளை அரசனிடத்துச் சேர்ப்பிக்கவேண்டும் என்று கேட்கும் அமைச்சன் முதலியோர்க்கு அஞ்சி என்பது கருத்து.

[89] சிறந்த பணிப்பொருள்—இரத்தினங்கள் அழுத்தப்பட்ட உயர்ந்த பணிகள்.

[90] அரசனிடத்துச் சேர்ப்பிக்கக்கேட்டதை மறுத்த குற்றத்திற்காகச் சிறைப்பட்டவன் என்க.

[91] இவனை—பொற்கொல்லனை.

[92] தான் சிறைவிடுதி பெறும்பொருட்டுத் திருப்பித்தரவேண்டும் என்று கேட்டல்வேண்டும் என்பது.

கொடுப்பின் தூய்மையுண்டு. இன்றேல் அப்பணிப்பொருளையும் திருட்டுக்குரிய தண்டத்தையும் செலுத்தல்வேண்டும்.

[93]அடையாளத்தினுல் பொற்கொல்லனுடைய இல்லத்தி லுள்ள [94]மக்களிடத்தில் [95]இரண்டையும் தரும்படிக் கேட்டல் வேண்டும். ஒன்று கொடாவிட்டாலும் [96]முன்னர்க் கூறிய படியாம்.

[97]அவனுடைய [98]அநுபவப் பொருள்களைப்பற்றி [99]வினுவுதல் வேண்டும். அதற்கு [100]அவன் கூறுகின்ற செய்தியையும் வழக் காளியின் பொருட்குரிய [101]தகுதியையும் ஏதுக்களால் [102]உய்த் துணர்தல் வேண்டும்.

[103]இதனுல் [104]தனித்த கூட்டத்திற்கும் கூறப்பட்டபடியாம்.

---

93 பெற்றுக்கொண்ட பணிப்பொருள் முதலியவற்றைத் திருப்பிக் கொடாமல் பொற்கொல்லன் இறந்துவிடுவானுயின் செய்யத்தக்கது இன்ன தென்பதைக் கூறுகின்றூர்.

94 மக்கள்—மனைவி மக்கள் முதலியோர்.

95 இரண்டு—பணிப்பொருள்களுள் சிறந்தனவும் அல்லாதனவும்.

96 பணிப்பொருளையும் அதன் திருட்டுக்குரிய தண்டத்தையும் செலுத் தல்வேண்டும் என்பது கருத்து.

97 உண்மை பொய் என்பவற்றைத் துணிதற்பொருட்டு அறங்கூற வையத்தார் செய்யவேண்டியதைக் கூறுகின்றூர். அவனுடைய—பணிப் பொருளை மறைப்பவனுடைய.

98 அநுபவப்பொருள்—அவன் இல்லத்திலுள்ள பொருள்.

99 வினுவுதல்—இன்ன இன்ன பொருள்கள் எவ்வாறு உனக்குக் கிடைத் தன என்று கேட்டல்.

100 அவன்—பொற்கொல்லன்.

101 தகுதி—இப்பொருளை யானே தந்தேன் என்று சொல்லுகின்றவ னுடைய நிலை.

102 அறங்கூறவையத்தார் ஊகித்தறியவேண்டும் என்பது.

103 இதனுல் பணிப்பொருளை மறைத்ததற்குக் கூறப்பட்ட விதியினுல்.

104 கந்தருவ முறைமையால் ஒருவனும் ஒருத்தியும் தனிமையில் மணந்து கொண்ட செய்தி மறைக்கப்பட்டவிடத்து அதன் உண்மை பொய்களைத் துணிதற்கும் விதி கூறப்பட்டதாகக் கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

## சுலோகம்

[105]ஆதலால் சான்றுடன் கூடியதாகவும் வெளிப்படையாகவும் தன்னைச் சார்ந்தவரிடத்தாதல் பிறரிடத்தாதல் [106]காலம் இடம் அளவு வண்ணம் இவற்றை நன்கு [107]தெளிவுறுத்திக் காரியத்தைச் செய்தல்வேண்டும்.

மூன்றும் அதிகரணம் எட்டாம் பிரகரணம்
அடைக்கலப்பொருளியல் என்னும் அறுபத்தொன்பதாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

105 ஆதலால்—பொருளை மறைக்க நேர்வதாலும் அதன் உண்மை பொய் துணிதற்கு இயலாமையாலும்.

106 பொருள்கொடுக்கப்பட்ட காலமும் இடனும் அப்பொருளின் அளவும் அதன் நிறமும் என்பது.

107 பொருண்மறைத்தலைப் பரிகரித்தற்பொருட்டும் மறைவை அறிந்து கொள்ளுதற் பொருட்டும் தெளிவுறுத்தல்வேண்டும் என்பது.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## ஒன்பதாம் பிரகாரணம்—[1]அடிமைப்பணியாளர் இயல்பு

### எழுபதாம் அத்தியாயம்

சிறந்த வாழ்க்கையும் வழக்கியற்பருவம் எய்தாமையும் உடைய [2]உதரதாசனல்லாத சூத்திரனை விற்றல் அல்லது ஈடு வைத்தல் செய்யும் [3]உறவினனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [4]வணிகனாயின் [5]இருமடங்கும் அரசனாயின் மும்மடங்கும் பார்ப்பனனாயின் நான்குமடங்கும் ஆம். [6]உறவினனல்லாதவனுக்கு ([7]முறையே) பூர்வ மத்தியம உத்தம சாகச தண்டங்களும் கொலைத்தண்டமும் ஆம். [8]கொள்வோனுக்கும் சான்றோர்க்கும் அங்ஙனமே.

---

### 70-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] அடிமையாளர்—ஒரு தலைவனுக்குக் குடிவழியாக அடிமைப்பட்டுப் பணிபுரிபவர். பணியாளர் — கூலிபெற்று உழவு பசுக்காவல் முதலிய தொழில்புரிவோர். இயங்கியற்பொருள் நிலையியற்பொருளாகிய இரண்டனுள் ஒருவனுக்குரிய நிலையியற்பொருள் பிறனொருவனிடத்தில் அடைக்கலமாக வைக்கப்படின் அதனை விற்றல் முதலிய செய்திகள் முன்னைப் பிரகரணத்திற் கூறப்பட்டன. இப் பிரகரணத்தில் ஒருவனுக்குரிய இயங்கியற்பொருளாகிய அடிமைப் பணியாளர்களை உரியவன் விற்றல் முதலிய செய்திகள் கூறப்படுதலின் பிரகரண இயைபு புலனாதலறிக.

[2] உதரதாசன் — வயிற்றுப் பிழைப்பிற்கு வழியற்றிருக்கும்போது ஊணும் உடையும் கொடுத்து ஒருவனால் காப்பாற்றப்படுபவன்.

[3] உறவினன் — விற்கப்படுபவனுக்கு உறவினனாகிய அம்மரபினன் என்பது.

[4] விற்கப்படுபவன் வணிகனாயின் என்பது.

[5] இருமடங்கு—இருபத்துநான்கு பணம். பின் வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

[6] உறவினனல்லாதவன் — விற்கப்படுபவனுக்கு உறவினனல்லாத வேற்று மரபினன் என்பது.

[7] வேற்று மரபினனால் விற்கப்படுபவன் சூத்திரனாயின் விற்றவனுக்குப் பூர்வசாகச தண்டமும், வணிகனாயின் மத்தியமசாகச தண்டமும், அரசனாயின் உத்தமசாகச தண்டமும், பார்ப்பனனாயின் கொலைத்தண்டமும் ஆம் என்பது.

[8] விலைக்குக் கொள்வோனுக்கும் அதற்குச்சான்றாக உள்ளார்க்கும் இம்முறைப்படியே தண்டம் என்பது கருத்து.

[9]மிலேச்சர்கள் தம்மைச்சார்ந்த மக்களை விற்றல் ஈடுவைத்தல் குற்றமாகாது. [10]உயர்ந்தோருக்கு அடிமைத்தன்மை அறவே இன்று.

[11]ஆயினும் [12]குடிக்கு இடுக்கண் நேர்ந்தவிடத்தும் உயர்ந்தோர் பலர்க்கும் துன்பம் நேர்ந்தவிடத்தும் உயர்ந்தோன் ஒருவனை [13]ஈடாகவைத்து விடுவித்தற்குரிய பொருள் கைக்கு வந்ததும் முதலில் சிறுவனையாதல் [14]உதவிபுரிந்தவனையாதல் விடுவித்துக் கொள்ளல் வேண்டும்.

[15]தானே ஈடானவன் ஒருமுறை வெளிப்பட்டுவிடுவானாயின் ஈட்டழிவுடையனாவன். பிறனால் ஈடுவைக்கப்பட்டவன் [16]இரு முறையும் வேற்றுநாட்டுக்குச் செல்ல விரும்பும் [17]இருதிறத்தாரும் [18]ஒருமுறையும் (வெளிப்படுவாராயின் ஈட்டழிவுடையராவர்).

[19]பொருளைக்கவர்ந்த [20]அடிமையாளனுக்கு உயர்ந்தோன்

---

[9] மிலேச்சர்—ஈட்டி வாள் முதலிய கருவிகளுடன் காட்டில் வாழும் இழிந்த மாக்கள்.

[10] உயர்ந்தோர்—குடிப்பிறப்பு முதலியவற்றால் சிறந்த மேன்மக்கள்.

[11] ஆயினும்—உயர்ந்தவன் அடிமையாதல் இல்லையாயினும்.

[12] குடி—அவ்வுயர்ந்தோன் பிறந்தகுடி.

[13] நேர்ந்த இடுக்கணை ஒழித்தற்குவேண்டிய பொருணிமித்தம் ஈடாக வைத்தென்பது. ஈடாக வைத்து என்றதனால் விற்றல் கூடாது என்பது போதரும்.

[14] உதவி—தான் பிறந்தகுடிக்கும் உயர்ந்தோர் பலர்க்கும் நலம்செய்தல் கருதித் தானே ஈடாதற்கு ஒருப்படுதல்.

[15] பொருளைப் பெற்றுக்கொண்டு தன்னையே ஈடுபடுத்திக்கொண்டவன் பொருளாளனுக்குத் தெரிவியாமல் ஒருமுறை வெளிப்பட்டுப் போய்விடுவானானால் அவ்வளவில் ஈட்டுரிமையைக் கெடுத்தவனாவான் என்பதும் அப்பொழுதே அந்த ஈட்டுக்கடன்பொருளை உரியவனுக்குச் செலுத்திவிடவேண்டும் என்பதும் கருத்து.

[16] இரண்டுமுறை வெளிப்பட்டுப் போய்விடுவானானால் ஈட்டழிவுடையனாவான் என்பது.

[17] இருதிறத்தார் — தானே ஈடானவனும் பிறனால் ஈடுவைக்கப் பட்டவனும்.

[18] ஒருமுறை வெளிப்பட்டாலும் ஈட்டழிவுடையராவர் என்பது.

[19] பொருள்—தலைவனுடையது.

[20] அடிமையாளன்—உதரதாசன்,

பொருளைக் கவர்ந்தவனுக்கு விதிக்கப்படும் தண்டத்திற் பாதி தண்டமாம். [21]வெளியேறினவன் இறந்தவன் [22]விதனமுடையோன் என்னும் [23]இவர்களைப்பற்றிய ஈட்டுப்பொருளை ஈடுவைத்தவன் அடையக்கடவன்.

ஈடாக வைக்கப்பட்டவனைப் பிணம் மலம் மூத்திரம் எச்சில் என்னும் இவற்றை எடுக்கச்செய்யினும் [24]மகளிரை ஆடையில்லாதவனைக் குளிப்பாட்டச்செய்யினும் தடியாற் புடைப்பினும் வலிந்துபுணரினும் [25]ஈட்டுப்பொருள் அழிவெய்தியதாகும். செவிலித்தாய் பணிப்பெண் [26]உழத்தி [27]குற்றேவன்மகள் என்னும் இவர்களுக்கும் [28]விடுதலைசெய்விப்பதாகும். உயர்ந்தகுடியிற் பிறந்தவன் [29]ஏவலாளனுயின் [30]அவன் வெளியேறுதலில் தடையின்று.

---

[21] தன்னை ஈடாகப் பெற்றவனுடைய குற்றங்காரணமாக வேற்று நாட்டுக்குச் சென்றவன் என்பது.

[22] விதனம்—கட்காமம் சூது முதலியன.

[23] இவர்களை ஈடாகவைத்து வாங்கியபொருளை ஈடுபெற்றவனுக்குக் கொடாமல் ஈடு வைத்தவனே எடுத்துக்கொள்ளலாம் என்பது கருத்து.

[24] மகளிர்—ஈண்டு ஈடாக வைக்கப்பட்டவர்.

[25] ஈட்டு நிமித்தம் கொடுக்கப்பட்ட பொருளைத் திரும்பிப்பெறுமலே ஈடு வைக்கப்பட்டோரையும் இழந்துவிடநேரும் என்பது.

[26] உழத்தி—உழவுத்தொழில் செய்யும் பெண்.

[27] குற்றேவல்—படுக்கைவிரித்தல் விசிறிவீசுதல் முதலியன.

[28] ஈண்டுக்கூறிய செவிலித்தாய் முதலியோரைப் பிணம் எடுத்தல் முதலியவற்றிலும், ஆடையில்லாதவனைக் குளிப்பாட்டுதல் முதலியவற்றிலும் ஈடுபடுத்தின் அச்செயல்கள் காரணமாக ஈட்டுப்பொருளைத் திருப்பிக் கொடாமலே விடுதலைபெறலாம் என்பது கருத்து.

[29] ஏதாவது ஒரு நெருக்கடியான காரணம்பற்றித் தானே ஏவலாளாயின் என்பது.

[30] அவன் ஏவற்றொழில் செய்ய விருப்பமில்லாமல் வெளிச்செல்ல நினைப்பானுயின் தடைப்படுத்த இயலாது என்பது; இதன் மூலத்தை 'ஃஸிவு ஜாத' எனக்கொண்டு வேறுவகையாகவும் உரைப்பர். அக்கருத்து வருமாறு:—அடிமைப்பெண் ஒருத்தியின் கணவன் அவளுக்குக் கிடைக்கும் வேதனத்தைக்கொண்டே தானும் அத்தலைவனுக்கு அடிமைத்தொழில் செய்துவருங்கால் இடையே அவளோடு கூடி மகவை உண்டாக்கின் அடிமைக்குரிய கால எல்லை முடிவடைவதற்கு முன்னரே அன்னர் வெளிப்பட்டு விடலாம் என்பது. இக்கருத்துப் பொருத்தமானதாகத் தோன்றவில்லை.

ஈடாக வைக்கப்பட்ட செவிலித்தாய் [31]விருப்பமில்லாத நிலையில் [32]தன்வயப்பட்டவளாயின் அவளைச் சேர்ந்தவனுக்குப் பூர்வ சாகசம் தண்டமாம். கணவன்வயப்பட்டவளாயின் [33]மத்தியம சாகசம் தண்டமாம். ஈடுபடுத்தப்பட்ட கன்னிகையைத் தானேயாதல் மற்றொருவனைக் கொண்டாதல் [34]கெடுத்தவன் ஈட்டுப் பொருளை இழத்தலோடு [35]பரியமும் அதற்கு இருமடங்கு [36]தண்டமும் செலுத்தல்வேண்டும்.

[37]தன்னை விற்றவனுடைய புதல்வனை உயர்ந்தவனாக அறிதல் வேண்டும். தலைவனுடைய காரியங்களுக்குத் தடையில்லாத நிலையில் தன்னாலீட்டப்பட்ட பொருளையும் தந்தைவழித் தாயத்தையும் [38]ஒருவன் அடையலாம். ஈட்டுப்பொருளைத் திருப்பிக்கொடுத்தலால் உயர்ந்த நிலையை அடையலாம். [39]இதனால் [40]உதரதாசனுக்கும் ஈடாக வைக்கப்பட்டவனுக்கும் விதி கூறியபடியாம்.

[41]இவனுக்கு [42]விடுதலைப்பொருள் [43]பேசிக்கொண்ட வரையறைப்படியாம்.

---

31 விருப்பம்—தலைவனோடு கூடுதற்கென்பது.

32 தன்வயப்படுதல்—கணவன்வயப்படாமை.

33 இத்தண்டம் அவள் விருப்பமில்லாதநிலையில் சேர்ந்தவனுக்கென்பது.

34 கெடுத்தல்—கற்பழித்தல்.

35 பரியம்—அக்கன்னிகையை மணஞ்செய்துகொடுக்குங்கால் கொடுக்கப்படும் கன்னியாசுல்கம்.

36 பரியத்தைப் பெண்ணுக்கும் அதனிருமடங்கு தண்டத்தை அரசனுக்கும் செலுத்தல்வேண்டும் என்பது.

37 ஒருவன் தன்னை அடிமையாக விற்றுக்கொண்டால், அவன் அடிமைப்படுதற்கு முன் அவனுக்குப்பிறந்த மகனும் அடிமையாதல் இல்லை என்பது.

38 ஒருவன்—அடிமையானவன்.

39 இதனால்—அடிமையாகத் தன்னை விற்றவனுக்குக் கூறிய விதியினால்.

40 உதரதாசன்—இவ்வத்தியாயத்தின் 2-ஆம் குறிப்பைப் பார்க்க.

41 இவனுக்கு—தன்னை விற்றுக்கொண்டவனுக்கு.

42 விடுதலைப்பொருள்—விடுதலை அடையவேண்டுமாயின், அதற்காகக் கொடுக்கவேண்டிய பொருள்.

43 தன்னை விற்குங்காலத்தில் இத்துணைப்பொருள் தந்து விடுதலைபெறுதல் என்று தம்முட் பேசிக்கொண்டபடியாம் என்பது.

[44]தண்டம் விதிக்கப்பட்டவன் [45]பணிசெய்தலால் தண்டத்தை நேர்செய்யலாம்.

[46]போரிற் பிடிக்கப்பட்ட உயர்ந்தவனொருவன் தொழிலிற்கும் காலத்திற்கும் ஏற்பக் குறிப்பிடும் தொகையில் பாதிகொடுத்து விடுதலை பெறலாம்.

[47]தன்வீட்டிற் பிறந்தவன், [48]தாயபாகத்தில் வந்தவன், தானே அடைந்தவன், விலைக்கு வாங்கப்பட்டவன் என்னும் அடிமையாட்களுள் ஒருவன் எட்டு யாண்டுகளுக்குக் குறைந்தவனாகவும் உறவினரை இல்லாதவனாகவும் இருப்பின் அவனை [49]விருப்பமில்லாத நிலையில் இழிந்த தொழிலில் ஏவுதல் அயலிடத்தில் விற்றல் ஈடுபடுத்தல் செய்தவனுக்கும் கருப்பவதியாகிய அடிமைப்பெண்ணைக் கருவுயிர்த்தற்குரிய நலங்களைச் செய்யாமல் விற்றல் ஈடுவைத்தல் செய்தவனுக்கும் [50]அன்னாரை விலைக்குக் கொண்டவர்க்கும் அதற்குச் சான்றாவார்க்கும் பூர்வசாகசம் தண்டமாம்.

உரியபொருளைப் பெற்றுக்கொண்டு அடிமையாளனை [51]விடுவியாதவனுக்குப் பன்னிரண்டுபணம் தண்டமாம். [52]காரணமின்றி

---

44 ஈண்டுத் தண்டம் விதிக்கப்பட்டவன் பணியாளன் என்க.

45 தண்டப்பணம் இறுக்க வழியில்லையாயின் வேலைசெய்து நேர்செய்யலாம் என்பது கருத்து.

46 போரிற் பகைவனிடத்தினின்றும் பிடிக்கப்பட்ட ஒருவன் உயர்ந்தவனாயின் இத்துணைநாள் இன்ன இன்ன வேலைகள் செய்யவேண்டும் என்று வரையறுத்துக்கொண்டபடி வேலைசெய்யாமல் விடுதலைபெற எண்ணினால் அவ் வேலைக்கும் காலத்திற்கும் தக அறுதியிடப்பட்ட பொருளில் பாதியளவு கொடுத்துவிட்டு விடுதலைபெறலாம் என்பது கருத்து.

47 பரம்பரையடிமையாக இருந்து தலைவன்வீட்டிற் பிறந்தவன் என்பது.

48 தாயப்பிரிவிலிருந்து வந்தவன் என்பது.

49 விருப்பமில்லாமை — இழிதொழில்செய்தற்கும் விற்கப்படுதல் ஈடுபடுத்தப்படுதற்கும் விருப்பமின்மை.

50 அன்னார்-சிறுவனாகிய அடிமையாளனும் கருப்பவதியாகிய அடிமைப்பெண்ணும்.

51 விடுவியாதவன்—விடுதலைசெய்யாத தலைவன்.

52 காரணமின்றி ஓரடிமையாளனைத் துன்புறுத்தினும் பன்னிரண்டு பணம் தண்டமாம் என்பது.

ஒருவனைத் தகையினுமாம். அடிமையாளனுடைய பொருளுக்கு அவன்ஞாதிகளும் அவரில்லையாயின் [53]தலைவனும் உரியராவர்.

ஆண்டானுக்கு அடிமைப் பெண்ணிடத்து மகன் பிறந்தானுயின் அவன் தாயுடன் அடிமையினின்றும் விடுதலையடைந்தவனுவான். [54]அப்பெண் [55]இல்லத்திருந்து குடும்பத்தையும் பொருளையும் கண்காணிப்பவளாயின் அவளுடைய தாய் உடன்பிறந்தவன் உடன்பிறந்தவள் என்னும் இவர்களும் அடிமையிலிருந்து [56]விடுதலைபெற்றவராவர்

விடுவிக்கப்பட்ட அடிமையாளனை அல்லது அடிமைப் பெண்ணைத் [57]தாமே உடன்பட்டுச் சொல்லாதவிடத்து மீண்டும் விற்றல் ஈடுவைத்தல் செய்பவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். இதுகாறும் அடிமையாளனைப்பற்றிய விதி கூறப்பட்டது.

[58]பணியாளர் செய்யும் தொழிலை அருகில் இருந்து [59]அறிந்து கொள்ளல் வேண்டும். பேசிக்கொண்டபடி வேதனம் [60]அடையக் கடவர். பேசிக்கொள்ளப்படாதகூலி [61]தொழிலுக்கும் காலத்திற்கும் ஏற்பப் பெறத்தக்கது. [62]கூலி பேசிக்கொள்ளப்படாதநிலையில் உழவன் தன் உழைப்பால் செய்யப்பட்ட பயிர்த்தொழில்

---

[53] தலைவன்—அடிமைகொண்டவன்.

[54] அப்பெண்—அந்த அடிமைப்பெண்.

[55] இல்லத்திருந்து—ஆண்டான் இல்லத்திருந்து.

[56] இதனால் ஒரு தலைவனுக்குக் குடிமுழுதும் அடிமையாயினரைப் பற்றியது இவ்விதி என்பது பெறப்படும்.

[57] அந்த அடிமையாளன் அல்லது அடிமைப்பெண் என்னும் இவர்கள் தம்மை விற்பதற்கும் ஈடுவைப்பதற்கும் உடன்பட்டுச் சொல்லின் அவ்வாறு செய்தலில் குற்றமின்றென்பது பெறப்படும்.

[58] இனி பணியாளரின் இயல்பைக் கூறத்தொடங்குகின்றார்.

[59] தலைவன் அறிந்துகொள்ளவேண்டும் என்பது.

[60] பணியாளர் அடையக்கடவர் என்பது.

[61] இன்னதொழிலைச் செய்துமுடித்தால் இவ்வளவு கூலி எனவும் இத்துணைக்காலம் வேலைசெய்தால் இவ்வளவு கூலி எனவும் கொண்டு அவற்றிற்கேற்பப் பெறலாம் என்பது.

[62] செய்யும் பணிக்குக் கூலி பேசிக்கொள்ளப்படவில்லையானால் பணியாளர் செய்யும்தொழிலின் வருவாயினின்றும் ஓரளவு கூறுகப் பெற்றுக் கொள்ளலாம் என்பதைக் கூறுகின்றார்.

விளைவிலும் இடையன் பசுக்காத்தலால் உண்டாம் நெய் முதலிய வருவாயிலும் வணிகன் பண்டமாற்றுத் தொழிலால் கிடைக்கும் ஊதியத்திலும் தனித்தனியே பத்தில் ஒருகூறு வேதனமாக அடையக்கடவர். பேசிக்கொள்ளப்பட்ட கூலி [63]அவ்வாறே அடையத்தக்கது.

[64]காருதன் [65]சிற்பி பாடுவோன் மருத்துவன் [66]கதைசொல்லுவோன் பணிசெய்வோன் முதலிய விரும்பியவாறு தொழில்செய்யும் குழுவினர் அத்தொழில்புரியும் அவ்வினத்து மற்றையோரைப் போலச் செய்தல்வேண்டும். அத்தொழிலில் திறமையுடையோர் வரையறுத்தபடி வேதனம் பெறக்கடவர். [67]சான்று கூறுவோர் பிரமாணமாதலுமாம். சான்றுவார் இல்லையாயின் எவ்விடத்தில் தொழில்நிகழ்ந்ததோ [68]அவ்விடத்திலேயே கேட்டறிதல் வேண்டும்.

[69]கூலியைக் கொடுக்கவில்லையானால் பத்தில் ஒருகூறுதல் ஆறு பணமாதல் தண்டமாம். [70]மறைத்துக் கூறுவானாயின் பன்னிரண்டு பணமாதல் ஐந்தில் ஒருகூறுதல் தண்டமாம்.

---

[63] மேற்கூறிய பத்தில் ஒருகூற்றில் மிகவும் மிகுதியாக அல்லது குறைவாகப் பேசிக்கொண்டபடி அடையத்தக்கது என்பது.

[64] காருகர்—பொற்கொல்லர் முதலியோர்.

[65] சிற்பிகள்—தச்சர் முதலியோர்.

[66] தலைவன் அருகிலிருந்து காலப்போக்கு நிமித்தம் கதைசொல்லி மனக்கிளர்ச்சி முதலியவற்றை உண்டுபண்ணுவோன் என்பது.

[67] தலைவர்க்கும் பணியாளர்க்கும் முரண் ஏற்படுமாயின், சான்றுவார் சொல்லுகிறபடி வேதனத்தைத் துணிதல்வேண்டும் என்பது கருத்து.

[68] தொழில் நிகழ்ந்தவிடத்திலுள்ள பிறரிடம் அத்தொழிலைப்பற்றிய செய்திகளை விளக்கமாகக்கேட்டுக் கூலியைத் துணிந்துகொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

[69] தலைவன் கூலிகொடுக்கவில்லையானால் அக்கூலியையும் கொடுக்கச்செய்து மேலும் அக்கூலியளவில் பத்தில் ஒருகூறுதல் ஆறுபணமாதல் தண்டமும் இறுக்கச் செய்தல்வேண்டும் என்பது.

[70] கூலியைப் பெற்றுக்கொண்டு பெறவில்லை என்று மாறுபடக்கூறும் பணியாளனுக்குப் பன்னிரண்டுபணமாதல் அக்கூலியளவில் ஐந்தில் ஒருகூறுதல் தண்டமாம் என்பது. முன்னது தலைவனைப்பற்றியது எனவும் பின்னது பணியாளனைப்பற்றியது எனவும் அறிக.

ஆற்றுப்பெருக்கு நெருப்புச்சுடர் களவு கொடியவிலங்கு என்னும் இவற்றால் தகையப்பட்டுத் துன்புறுவோர் தம்மைக் காப்பாற்றினோர்க்குத் தம்மையும் தம் உடைமைகளையும் மக்களையும் மனைவியரையும் கொடுப்பதாகக் கூறி [71]விடுதிபெறுவாராயின் [72]திறமையுடையோரால் துணியப்பட்ட வேதனத்தைக் கொடுக்கக் கடவர். இதனால் துன்பம் எய்திக் [73]கழிவிரக்கமுடைய பிறர் எல்லோர்க்கும் விதி கூறியபடியாம்.

### சுலோகம்

விலைமகளிர் [74]கூட்டத்திற்குரிய ஏதுக்களால் போகக்கூலி பெறக்கடவர். [75]மிகுதியாகக் கூலிகேட்பினும் கெட்ட எண்ணத்தால் [76]மாறுபட நடப்பினும் தண்டிக்கப்படுவர்.

மூன்றும் அதிகரணம் ஒன்பதாம் பிரகரணம்
" அடிமைப்பணியாளர் இயல்பு " என்னும் எழுபதாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

[71] இவர் பேசிய துன்பவுரைகளைக்கேட்டு உதவிபுரிவோரால் அந்த இடரினின்றும் விடுவிக்கப்படுவாராயின் என்பது.

[72] விடுவிக்கப்பட்டபின் தாம் கூறியபடி செய்யமுடியாமைக்கு இரங்குவாராயின் இடுக்கட்பொழுதுகூறியபடி தம் மனைவிமக்கள் முதலிய பொருள்களைக் கொடுக்கவேண்டியதில்லை என்பதும் உதவிசெய்தவர்க்கு இத்துணை வேதனம் கொடுக்கலாம் என்று திறமையுடையோர் துணிந்தபடி கொடுக்க வேண்டும் என்பதும் கருத்து.

[73] கழிவிரக்கம்—கழிந்ததற்கு இரங்குதல்; இடுக்கட்பொழுது அத்துன்பம் பொறாதநிலையில் கூறியபடி விடுதலையடைந்தபின் செய்யமுடியாமைக்கு வருந்துதல் என்பது.

[74] கூட்டத்திற்குரிய ஏது—புணர்ச்சிக்குரிய அடையாளம்.

[75] வரையறுக்கப்பட்ட அளவிற்கு மேலாக என்பது.

[76] மாறுபடநடத்தல் — ஆடவன் விருப்பத்திற்கு ஒவ்வாத முறையை மேற்கொள்ளுதல்.

## மூன்ரும் அதிகாரணம்—அறநிலையாட்சி

### பத்தாம் பிரகாணம்—[1]கூடித்தொழில்புரிதல்

### எழுபத்தோராம் அத்தியாயம்

கூலியைப் பெற்றுக்கொண்டு வேலைசெய்யாத பணியாளனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [2]அழைத்துத் தடைசெய்தலாலுமாம்.

[3]ஆற்றலின்மை இழிசெயல் நோயுடைமை துன்பம் என்னும் இந்நிகழ்ச்சிகளில் இரங்குதல் அல்லது பிறனொருவனைக்கொண்டு செய்வித்தல் வேண்டும். அன்றி [4]அவன் செலவில் தலைவன் பிறன் ஒருவனைக்கொண்டும் செய்வித்துக்கொள்ளலாம்.

---

#### 71-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] கூடித்தொழில்புரிதல் — பலர் ஒன்றுகூடித் தொழில்செய்தல் அங்ஙனம் செய்பவர் பிறர்க்குரிய தொழிலைச் செய்பவர் எனவும் தமக்குரிய தொழிலைச் செய்பவர் எனவும் இருதிறப்படுவர். இவருள் முன்னையோர் இயல்பு ‘பணியாளர் இயல்பு’ என்னும் முன்னைப்பிரகரணத்திற் கூறப்பட்டது. தமக்குரிய தொழிலைச் செய்பவராகிய பின்னையோரின் இயல்பு இப்பிரகரணத்திற் கூறப்படும். இதனால் பிரகரண இயைபு விளக்கமாதல் அறிக. முன்னைப்பிரகரணத்திற் கூறப்பட்ட பணியாளர் இயல்பில் எஞ்சிய பகுதியும் தொடர்ச்சிபற்றி இதன்கட் கூறப்படும். அப்பணியாளருள் நாடோறும் கூலிபெற்றுக்கொள்வது என்னும் நியமமின்றிப் பணிசெய்வோரைப்பற்றிய விதிகள் முன்னைப் பிரகரணத்திற் கூறப்பட்டன. இப்பிரகரணத் தொடக்கத்தில் நாடோறும் கூலிபெற்றுக்கொண்டு பணிசெய்பவரைப்பற்றிய விதிகள் கூறப்படுகின்றன.

[2] கூலியைப் பெற்றுக்கொண்டு வேலைசெய்யாதவனை வலிந்து கூப்பிட்டாதல் வேறொரு காரியத்தில் புகாமல் தடைப்படுத்தியாதல் பணி செய்வித்துக்கொள்ளலாம் என்பது கருத்து.

[3] பணியாளன் தொழில் செய்தற்பொருட்டு வேதனத்தைப் பெற்றுக்கொண்டபின் அத்தொழில் செய்தற்குரிய வலியிழந்திருக்கும் நிலையிலும் அத்தொழில் தன் தகுதிக்கு இழிந்ததாக இருப்பினும் நோயினாலும் எதிர்பாராத நிலையில் நேரும் துன்பத்தாலும் பீடிக்கப்பட்டிருப்பினும் அத்தொழில் செய்ய இயலாமை குறித்து இரக்கங்கொள்ளக் கடவன் என்பது கருத்து. இரங்குதல் என்றதனால் தொழில் செய்யாமையால் குற்றமுடையன் ஆகான் என்பது போதரும்.

[4] அவன்செலவில்—அப்பணியாளனுடைய பொருட்செலவில்,

'[5]நீ என்னையன்றிப் பிறனொருவனைப் பணிசெய்ய நியமித்தல் ஆகாது'. 'யான் உன்னிடத்தன்றிப் பிறர் எவர்க்கும் பணிசெய்வதில்லை' என்று உறுதிசெய்துகொண்டபடி பணிபுரியச் செய்யாத தலைவனுக்கும் [6]பணிபுரியாத பணியாளனுக்கும் பன்னிரண்டு பணம் தண்டமாம். கூலியைப் பெற்றுக்கொண்டு தலைவனுக்குச் செய்யவேண்டிய [7]பணி நிறைவேறாத நிலையில் [8]உடன்பாடின்றி மற்றோரிடத்தில் பணிசெய்தலாகாது.

[9]வந்தடைந்தவனைப் பணிபுரியச் செய்யாவிடின் செய்யப்பட்டதாகவே கொள்ளல்வேண்டும் என்பர் ஆசிரியர்.

[10]செய்யப்பட்டதற்கே கூலியுண்டு; செய்யப்படாததற்கின்று. [11]தலைவன் சிறிதளவாவது செய்வித்துக்கொண்டு மேலும் செய்வித்துக்கொள்ளவில்லையானால் அவன்பணி செய்யப்பட்டதாகவே கொள்ளலாம். ஆதலின் [12]அது பொருந்தாது என்பர் கௌடலியர். [13]காலம் இடங்களைக் கடந்துசெய்யினும் செய்யவேண்டிய காரியத்தை மாறுபடச்செய்யினும் தலைவனுக்கு [14]உடன்பாடில்லாத

---

[5] இது தலைவனும் பணியாளனும் செய்துகொள்ளும் ஒப்பந்த முறையில் பணியாளன் கூற்றாகக்கொண்டு கூறியது.

[6] உறுதி செய்துகொண்டபடி என்பதை ஈண்டுங் கூட்டுக.

[7] பெற்ற கூலிக்குரிய பணி என்பது.

[8] உடன்பாடு—தலைவன் சம்மதம்.

[9] தலைவனும் பணியாளனும் செய்துகொண்ட ஒப்பந்தப்படி பணி செய்ய வந்தவனைத் தலைவன் பணிசெய்யும்படி செய்யவில்லையானால் அது செய்யப்பட்டதாகவே கொள்ளல்வேண்டும் என்பதும், அப்பணிநிமித்தம் முன்னர்க் கொடுக்கப்பட்ட வேதனம் தீர்ந்துவிட்டதென்பதும் கருத்து.

[10] முன்னர்க்கூறிய ஆசிரியர்கொள்கையைக் கௌடலியர் மறுத்துக் கூறத் தொடங்குகின்றார்.

[11] ஒரு வேலையைச் சிறிதளவு செய்யச்செய்து எஞ்சியதைச் செய்யும்படி ஏவவில்லையானாலும் முழுதும் செய்யப்பட்டதாகவே கொள்ளலாமன்றிப் பணிசெய்ய வந்தடைந்தானாயினும் சிறிதேனும் செய்யாத நிலையில் கூலி கொடுப்பது பொருந்தாதென்பது கௌடலியர் கொள்கை என்க.

[12] அது—முன்னர்க்கூறிய ஆசிரியர் கொள்கை.

[13] உறுதி செய்துகொண்டபடி குறிப்பிட்ட காலத்தைக் கடந்தாதல் இடத்தை மாற்றியாதல் செய்யினும் என்பது.

[14] பிறழச்செய்ததைத் தலைவன் உடன்படவில்லையானால் என்பது.

நிலையில் அச்செயல் செய்யப்பட்டதாக ஏற்றுக்கொள்ளத்தக்க தன்று. உறுதிசெய்துகொண்ட அளவிற்கு மிகுதியாகப் பணி செய்யப்படின் [15]அவ்வுழைப்பை [16]வறிதாக்கலாகாது.

இதனால் [17]கூலிக்குழுவிற்கும் விதி கூறப்பட்டபடியாம். அக் கூலிக்குழுவினரது [18]ஒப்பந்தம் ஏழுநாள்வரை இருக்கலாம். அதன் பின் மற்றொரு கூலிக்குழுவை அமைத்துத் [19]தொழில்முடிவையும் [20]அறிந்துகொள்ளல் வேண்டும். தலைவனுக்கு அறிவியாமல் அக் குழு [21]ஒருவனை விலக்கவோ சேர்க்கவோ கூடாது. இவ்விதியைக் கடப்பின் இருபத்துநான்கு பணம் தண்டமாம். அக்குழுவினின் றும் [22]விலகினவனுக்குப் பாதி தண்டமாம். பணியாளரைப்பற்றிய செய்தி இவ்வாறும்.

[23]கூலிக்குழுவினரும் கூடித் தொழில்புரிபவரும் தம்முட் பேசிக்கொண்டபடியாதல் [24]ஒத்த அளவாகவாதல் வேதனத்தைப் பங்கிட்டுக்கொள்ளக் கடவர்.

---

15 அவ்வுழைப்பு—அங்ஙனம் மிகுதியாகச் செய்ததனால் உண்டாவது.

16 வறிதாக்கலாகாது என்றதனால் அவ்வுழைப்பிற்குத்தக ஓரளவு வேதனம் கொடுத்தல்வேண்டும் என்பது போதரும்.

17 கூலிக்குழு—ஒன்றுசேர்ந்து கூலி பெற்றுக்கொண்டு பிறர்க்குப் பணி செய்யும் பணியாளர்குழு.

18 ஒரு தலைவனுக்கு வேலைசெய்வதாகப் பேசிக்கொள்ளும் ஒப்பந்தம் ஏழு நாட்களுக்கு மேற்படலாகாது என்பது கருத்து.

19 தொழில் முடிவு—முன்னுள்ள கூலிக்குழுவால் செய்யப்பட்டதும் பின்னுள்ள கூலிக்குழுவால் செய்யப்படவேண்டியதுமாகிய செயலின் அளவு.

20 தலைவன் அறிந்துகொள்ளல்வேண்டும் என்பது.

21 ஒருவனை—அக்குழுவிலுள்ள ஒருவனை.

22 தலைவனின் உடன்பாடின்றி விலகினவன் என்பது.

23 இதுமுதல் கூடித்தொழில்புரிபவருடைய இயல்பு கூறப்படுகின்றது. வேதனத்தைப் பிரித்துக்கொள்வதில் கூடித்தொழில்புரிவோர்க்கு உள்ள படியே கூலிக்குழுவினர்க்கும் பொருந்தும் என்பதுபற்றி முன்னர் முடிக்கப் பட்ட கூலிக்குழுவினரைப்பற்றி மீண்டும் கூறப்பட்டது.

24 பேசிக்கொள்ளப்படவில்லையானால் சமனாகப் பிரித்துக்கொள்ள வேண்டும் என்பது.

உழவுத்தொழிலாளரும் வாணிகஞ்செய்வோரும் முறையே பயிர்த்தொழில் வாணிகத்தொழில் என்னும் இவற்றைத்தொடங்கி முடிப்பதற்கு இடையில் [25]நோய்வாய்ப்பட்டவனுக்கு அவன்செய்த தொழிலளவிற்குள்ள கூற்றைக் கொடுத்துவிடல் வேண்டும். [26]மற்றொருவனை நியமிப்பின் முழுக்கூறும் கொடுத்தல்வேண்டும். [27]கொள்ளப்பட்ட விலைப்பண்டங்கள் [28]வெளியேற்றுதற்குரிய நிலையில் நோய்வாய்ப்பட்டவனுக்குரிய கூற்றை அப்பொழுதே கொடுத்துவிடல் வேண்டும். என்னை? வழியில் [29]பாதுகாப்பும் அழிவும் நேர்தல் இயல்பு ஆதலின்.

[30]தொழில் தொடங்கியபின் [31]நலமுடையனுயிருந்து விலகுவானுயின் பன்னிரண்டு பணம் தண்டமாம். [32]விலகுவதிலும் விருப்பப்படி உரிமையின்று.

[33]கள்வனை அபயமளித்துத் தொழிலில் கூறுகொடுப்பதாகச் சொல்லிப் பிடித்தல்வேண்டும். [34]அவனுக்குரிய கூற்றையும்

---

[25] நோய்வாய்ப்பட்டு அத்தொழில் செய்ய இயலாமலிருக்கும் நிலையில் அதுவரை அவன் செய்த தொழிலுக்குரிய வருவாயின் கூற்றைக் கொடுத்துவிடல் வேண்டும் என்பது.

[26] நோய்வாய்ப்பட்டவன் தனக்காக அத்தொழிலில் மற்றொருவனை நியமிப்பின் என்பது.

[27] இது வாணிகத்தொழிலாளர்க்கு மாத்திரம் கூறியது.

[28] வேற்றிடத்துச்சென்று வாணிகம் செய்வதற்காக வெளியேற்றுதல். வண்டி முதலியவற்றில் ஏற்றி வெளிப்படச்செய்தல் என்க.

[29] விலைப்பண்டங்களுக்குப் பாதுகாப்பும் அழிவும் நேர்தல் இயல்பாதலின் என்பது முன்னதற்கு ஏதுவாகும்.

[30] கூடித்தொழில்புரிவோர் ஒரு தொழிலைத் தொடங்கியபின் என்பது.

[31] நலமுடையனுய்—நோய் முதலியன இல்லாமல்.

[32] அங்ஙனம் தண்டத்தைச் செலுத்தி விலகுவதிலும் அக்கூட்டத்தார் உடன்பாடின்றி அவன் விருப்பப்படி உரிமையில்லை என்பது கருத்து.

[33] கூடித்தொழில்புரிபவர் திருடராயின் அவரை வெளிப்படுத்தித் தண்டிக்கும் உபாயத்தைக் கூறுகின்றார். திருடர் பலரும் கூடி அத்தொழில் செய்தனராக அவருள் ஒருவனையறிந்து அவனுக்குரிய கூற்றைக் கொடுப்பதாகவும் தண்டனையில்லாமல் செய்வதாக அபயமளித்தும் அவனைக்கொண்டு மற்றைய திருடர்களைப் பிடித்தல்வேண்டும் என்பது கருத்து.

[34] மற்றைய திருடர்களைப் பிடித்தற்கு உதவிசெய்த திருடனுக்குப் பேசிக்கொண்டபடி அபயத்தையும் அளித்துக் கூறும் கொடுத்தல்வேண்டும் என்பது.

அபயத்தையும் அளித்தல்வேண்டும். [35]மீண்டும் திருட்டுத்தொழில் செய்வானுயினும் [36]வேற்றிடம்செல்வானுயினும் அவனை நாட்டை விட்டு விலக்கல்வேண்டும். [37]பெருங்குற்றம் செய்யின் [38]பழிக்கத் தக்கவனுக் [39]குரியதைச் செய்தல்வேண்டும்.

[40]வேட்பிப்போர் தனித்தமுறையில் தமக்குக் கிடைக்கும் பொருளல்லாத பேசிக்கொண்ட பொதுக்கூலியைச் சமனுகப் பிரித்துக்கொள்ளல் வேண்டும்.

[41]அக்கினிட்டோமம் முதலிய வேள்விகளில் [42]தீக்கையின்பின் வேட்பிப்போன் நோய்வாய்ப்படின் ஐந்தில் ஒருகூறும் [43]சோமப் பூண்டை விலைக்குக் கொண்ட பின்னராயின் நான்கில் ஒருகூறும் [44]நடுவண் உள்ள உபசத்தில் [45]பிரவர்க்கிய உத்துவாசனத்தின் [46]பின்னுயின் மூன்றில் ஒருகூறும் நடுவண் உள்ள உபசத்து முடிந்த

---

35 உதவிசெய்த கள்வன் மீண்டும் திருட்டுத்தொழிலிற் புகுவானுயினும் என்பது.

36 வேற்றிடம் சென்று திருடுவானுயினும் என்பது.

37 பெருங்குற்றம்—கொலை முதலியன.

38 பழிக்கத்தக்கவன்—தகாதகொடுஞ்செயலைச் செய்தமையால் எல்லோராலும் நிந்திக்கத்தக்கவன்.

39 உரியது—மறைவிற் கொல்லுதல்.

40 வேட்பிப்போர்—வேள்வி செய்விப்போர்.

41 இனி அக்கினிட்டோமம் முதலிய வேள்விகளைத் தொடங்கி முடித்தற்கு இடையில் வேட்பிப்போன் நோய்வாய்ப்படின் அவ்வேள்வியின் அக்கிரியைகளுள் அவன் செய்துமுடித்த அளவிற்கேற்பத் தக்கிணைக்கூறு கொடுத்தலைப்பற்றிக் கூறுகின்றார்.

42 வேள்வித்தலைவன் தீக்கை செய்துகொண்ட பின் வேட்பிப்போன் நோய்வாய்ப்படின் அவ்வேள்வியில் பெறும் தக்கிணைப்பொருளில் ஐந்தில் ஒருகூறு பெறக்கடவன் என்பது.

43 சோமப்பூண்டை விலைக்குக்கொண்டபின் நோய்வாய்ப்படின் என்பது.

44 வேள்வியில் ‘உபசத்து’ என்பது ஒரு கிரியாவிசேடம். அது வேள்வியின் தொடக்கம், நடு, இறுதியாகிய மூன்று இடங்களிலும் செய்யப்படுவது. அவற்றுள் நடுவண் உள்ள உபசத்தில் என்பது.

45 பிரவர்க்கிய உத்துவாசனம் என்பதும் ஒரு கிரியாவிசேடம்.

46 பின்னர் வேட்பிப்போன் நோய்வாய்ப்படின் என்பது. பின்வரும் இடங்களிலும் இவ்வாறே கொள்க.

பின்னுயின் அரைக்கூறும் [47]சுத்தியத்தில் [48]பிராதசவனத்தின் பின்னுயின் முக்காற்கூறும் அடையக்கடவன். [49]மாத்தியந்தின சவனத்தின்பின்னுயின் முழுவதும் அடையக்கடவன். என்னை ? [50]தக்கிணை முழுவதும் அடையப்பட்டதாகலின். பிருகற்பதிசவனம் அல்லாத ஏனைய சவனங்களிலெல்லாம் தக்கிணை [51]கொடுக்கப்பட்டனவாம். இதனல் [52]பலநாட்களுக்குரிய தக்கிணைகளுக்கும் விதி கூறப்பட்டபடியாம்.

நோய்வாய்ப்பட்டவர்கள் செய்யவேண்டிய கன்மங்களைப் பத்துநாட்கள் வரை [53]எஞ்சிய பணியாளராவது [54]தனக்கு வேண்டிய பிறராவது செய்யலாம்.

[55]கன்மம் முடிவடையாத நிலையில் வேள்வித்தலைவன் நோய் வாய்ப்படின் வேட்பிப்போர் அக்கன்மத்தை முடித்துவிட்டுத் தக்கிணையைப் பெற்றுக்கொள்ளக் கடவர்.

கன்மம் முடிவடையாத நிலையில் வேள்வித்தலைவனை விட்டுச் சென்ற வேட்பிப்போனுக்கும் வேட்பிப்போனை விட்டொழித்த வேள்வித்தலைவனுக்கும் பூர்வசாகசம் தண்டமாம்.

## சுலோகங்கள்

*1—2.* [56]நூறு பசுக்களையுடையவனுயிருந்தும் அக்கினிகாரியம் செய்யாதவனும் ஆயிரம் பசுக்களை உடையவனுயிருந்தும்

---

47 அக்கினிட்டோமவேள்வி செய்யப்படும் நாட்கள் பலவற்றுள் சோமப் பூண்டைப் பிழிந்து சாறு எடுக்கும் நாள் ‘சுத்தியம்’ எனப்படும்.

48 பிராதசவனம் என்பது காலையில் செய்யப்படும் வேள்விக்கிரியை.

49 மாத்தியந்தினசவனம்—பகலில் செய்யப்படும் சவனக்கிரியை.

50 மேலதற்கு ஏதுக்கூறியவாறு.

51 அவ்வப்போது தக்கிணை கொடுக்கப்பட்டனவாம் என்பது.

52 பலநாட்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய தக்கிணையை நடந்த நாட்களுக்குக் கணக்கிட்டுக்கொள்ளவேண்டும் என்பது.

53 அக்குழுவில் நோய்வாய்ப்பட்டவனல்லாத மற்றைய பணியாளர் என்பது.

54 தனக்கு— தலைவனுக்கு.

55 கன்மம்—ஈண்டு வேள்வி.

56 வேள்வித்தொழில் முடிவடையாத நிலையில் வேள்வித்தலைவனும் வேட்பிப்போனும் ஒருவரையொருவர் விலக்கலாகாது என்பதற்கு இது

வேள்விசெய்யாதவனும் கட்குடிப்பவனும் சூத்திரப்பெண்ணை மணஞ்செய்து கொண்டவனும் பிரமகத்தியுடையானும் குருவின் மனைவியைச் சேர்ந்தவனும் [57]இழிந்ததானம் பெறுவோனும் களவுத்தொழிலை யுடையவனும் இழிந்தவனை வேட்பிப்போனும் ஆகிய இவர்கள் [58]கன்மத்திற்குக் குற்றம் நேரும் என்னும் துணிவினுல் தம்முள் ஒருவரையொருவர் விலக்குதல் குற்றமாகாது.

மூன்றும் அதிகரணம் பத்தாம் பிரகரணம்
“ கூடித்தொழில்புரிதல் ” என்னும் எழுபத்தோராம்
அத்தியாயம் முற்றிற்று.

---

புறனடை விதியாகும். இவ்விதி வேள்விக்குரியாரைப் பற்றியதாகும். அக்கினிகாரியம் செய்தற்குரிய பால் நெய் முதலியவற்றிற்குக் குறைவில்லாத நிலையிலும் அது செய்யாதவன் என்பது.

[57] இழிந்த தானம் என்பது இழிந்த பொருளைத் தானமாகப் பெறுதல். இழிந்தவனிடத்துத் தானம் பெறுதல் என்னும் பொருளுடையதாகும்.

[58] தலைவன் அல்லது வேட்பிப்போன் என்னும் இருதிறத்தாருள் ஒருவன் இக்குற்றமுடையனுயினும் அவ்வேள்விக்கன்மம் பிழைபடும் என்பது கருத்து.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## பதினோரம் பிரகாரணம்—[1]விற்றுக்கொண்டு மாறுபடல்

## எழுபத்திரண்டாம் அத்தியாயம்

[2]குற்றமுடையதாதல் இடையூறுவிளைதல் பொறுத்தற்கியலாமை என்னும் இவை யில்வழி [3]விற்ற பண்டத்தைக் கொடாதவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

[4]விலைப்பண்டத்தின் குற்றமே குற்றமாம். அரசனாலும் கள்வராலும் நெருப்பினாலும் நீரினாலும் ஏற்படும் [5]தீங்கு இடையூறாகும். [6]பல நற்குணங்களின் குறைவும் துன்பமுற்றவனால் செய்யப்படுதலும் பொறுத்தற்கியலாமையாகும்.

---

### 72-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] விற்றுக்கொண்டு மாறுபடல்—பொருள் வாங்கிக்கொண்டு பண்டத்தை விற்றலும் பொருள் கொடுத்துக்கொள்ளலுமாகிய இந்நிகழ்ச்சிகளில் மாறுபாடு செய்தல். 'கூடித் தொழில்புரிதல்' என்னும் முன்னைப் பிரகரணத்தில் வாணிகத் தொழிலைப்பற்றிய செய்தி முக்கியமாகக் கூறப்பட்டது. அத்தொழிலில் விலைக்குக்கொள்ளல், விற்றல் நிகழுங்கால் மாறுபாடு செய்யப்படின் அதற்குரிய தண்டவிதி முதலியன இப்பிரகரணத்திற் கூறப்படுதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது. இதனால் பிரகரண இயைபுண்மையறிக.

[2] குற்றமுடையதாதல் முதலியன இன்னவென்பதைப் பின்னர்க் காண்க.

[3] விற்பதாக விலைபேசி முடிக்கப்பட்ட பண்டத்தை என்பது.

[4] குற்றம் முதலிய மூன்றனையும் விளக்கமாகக் கூறுகின்றார். விற்பதாக உறுதிசெய்துகொள்ளப்பட்ட விலைப்பண்டத்தில் காணப்படும் குற்றமே குற்றமாம் என்பது.

[5] விற்பதாக உறுதிசெய்யப்பட்ட பண்டத்திற்கு ஏற்படும் தீங்கு என்பது.

[6] விலைப்பண்டம் மிகுதியான குணக்குறைவு உள்ளதாயினும் துன்பம் காரணமாகக் கலங்கின மனத்தையுடையவனால் செய்யப்பட்டதாயினும் அது பொறுத்தற் கியலாமையாகும் என்பது.

[7]வணிகர்க்கு ஒருநாளும் உழவர்க்கு மூன்றுநாளும் பசுக்காவலர்க்கு ஐந்துநாளும் உயர்ந்த வருணத்தார்க்கும் கலப்புச்சாதியினர்க்கும் [8]வாழ்க்கைக்குரிய பொருள்விற்பனையில் ஏழுநாளும் மாறுபடுதல் கூடும்.

காலந்தாழ்க்காது விற்கக்கூடிய [9]பண்டங்கள் [10]பிறிதோரிடத்தில் விற்க முடியாமையை அறிந்து அதற்கு முரணுகாமல் மாறுபடலாம். இவ்விதியைக் கடப்பின் இருபத்துநான்கு பணமாதல் விலைப்பண்டத்தளவில் பதின்மடங்காதல் தண்டமாம்.

[11]குற்றமுடையதாதல் இடையூறுவிளைதல் பொறுத்தற்கியலாமை என்னும் இவையில்வழி [12]கொண்ட பண்டத்தை ஏற்றுக்கொள்ளாதவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [13]விற்றவனுக்குக்கூறிய மாறுபடல் கொண்டவனுக்கும் ஒத்ததாம்.

முதல் மூன்று வருணத்தாருக்கும் திருமணத்தில் [14]கைப்பிடித்

---

[7] விலைப்பண்டத்தைக் கொள்ளுதற்கும் கொடுத்தற்கும் உறுதி செய்துகொண்டு அப் பண்டக்குற்றம் முதலியவற்றால் பேசியதற்கு மாறுபட நேருமாயின் அதற்குரிய கால அளவை அறுதியிட்டுக் கூறத்தொடங்குகின்றார். வணிகராயின் மாறுபடுதற்கு அவகாசம் ஒருநாள் என்பது. பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

[8] வாழ்க்கைக்குரிய பொருள்—விளைநிலம் முதலியன.

[9] பண்டங்கள்—மலர் பால் முதலியன. இவற்றை விற்பதற்குக் காலம் தாழ்ப்பின் அப்பண்டம் கெட்டுவிடும் என்பதை நோக்கி இவ்வாறு கூறினர்.

[10] காலம் தாழ்ப்பின் பிறிதோரிடத்தில் கொண்டுசென்று விற்க இயலாது என்பதை அறிந்து அதற்கேற்பச் சிறிதுகாலம் வரை மாறுபடலாம் என்பது கருத்து.

[11] குற்றமுடையதாதல் முதலியவற்றை நான்கு முதலிய குறிப்புக்களிற் காண்க.

[12] விலைக்குப் பெற்றுக்கொள்வதாக உறுதிபேசிக் கொள்ளப்பட்ட பண்டத்தை நியாயமாக மாறுபடுதற்கு உட்பட்டு ஏற்றுக்கொள்ளாதவனுக்குத் தண்டம் என்பது.

[13] விற்றவன் மாறுபடுதற்குரிய கால அளவு முதலியவற்றை மேலே காண்க.

[14] கைப்பிடித்தல்—திருமணத்தில் மணமகன் மணமகளின் கையைப் பற்றுதல். இது 'பாணிக்கிரகணம்' என்னும் சடங்காகும்.

தல் [15]நிறைவேறும்வரை விட்டுநீக்கல் பொருந்தும். சூத்திரர்க்குப் [16]புணர்ச்சி நிகழும் வரையாம். கைப்பிடித்தல் நிறைவேறிய பின்னும் [17]உடனியைதற்குக் குற்றம் காணப்படுமாயின் மணமக்கள் ஒருவரையொருவர் விட்டுநீங்கலாம். [18]மகப்பேறுடையார்க்கு அறவே இல்லை.

கன்னியிடத்துள்ள உடனியைதற்குரிய குற்றத்தைத் தெரிவியாமல் [19]கொடுத்தவனுக்குத் தொண்ணூற்ருறு பணம் தண்டமாம். பரிசம் சீதனம் இவற்றையும் [20]திருப்பிக்கொடுத்தல் வேண்டும்.

மணமகன்குற்றத்தைத் தெரிவியாமல் மணம் செய்துகொள்பவனுக்கும் [21]செய்விப்போர்க்கும் [22]இருமடங்கு தண்டமும் பரிசம் சீதனங்களின் இழப்பும் ஆம்.

குட்டம் [23]நோய் தூய்மையின்மை என்னும் இவற்றையுடைய இருகால் நாற்கால் பிராணிகளை முறையே ஊக்கம் உடல்நலம் தூய்மை என்னும் இவற்றையுடையனவாகக் கூறின் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

[24]நாற்காற் பிராணிகளுக்கு மூன்று பக்கங்கள் வரையும் மக்களுக்கு ஓராண்டு வரையும் விட்டுநீக்கல் பொருந்தும். தூய்மை

---

[15] கைப்பிடித்தற்கு முற்பட்ட நிலையில் எக்காரணத்தை முன்னிட்டும் மணமக்கள் இருவரும் மணத்தை நிறுத்திவிட்டுப் பிரிந்துவிடலாம் என்பது கருத்து.

[16] புணர்ச்சி நிகழ்வதற்கு முற்பட்டநிலையில் விட்டுநீங்கலாம் என்பது.

[17] உடனியைதல்–புணர்தல்; குற்றம்–பேடு, அலித்தன்மை முதலியன.

[18] குழந்தைபெற்ற மணமக்களுக்கு விட்டுநீங்கல் இல்லை என்பது.

[19] கொடுத்தவன்—கன்னியைக்கொடுத்த அவள் தந்தை.

[20] மணமகனுக்குத் திருப்பிக் கொடுத்தல்வேண்டும் என்பது.

[21] செய்விப்போர்—மணமகன் தந்தை முதலியோர்.

[22] இருமடங்கு—நூற்றுத் தொண்ணூற்றிரண்டு பணம்.

[23] நோய்—குட்டமல்லாத பிறநோய்.

[24] விலைக்குக் கொள்ளப்பட்டாலும் நாற்காற் பிராணிகளின் நலம் தீங்குகளை அறிந்துகொள்ளுதற்கு நாற்பத்தைந்து நாளும் மக்களியல்பை அறிந்துகொள்ளுதற்கு ஓராண்டும் அவகாசம் வேண்டுமாதலின் அக்கால எல்லைகளுக்குள் விடுதலை செய்யலாம் என்பது கருத்து.

தூய்மையின்மைகளை அறிந்துகொள்ளுதற்கு அத்துணைக்காலம் வேண்டும்.

### சுலோகம்

[25]கொடுக்கல் வாங்கல்களில் கொடுப்போர் வாங்குவோர்க்குக் கேடு நேராவண்ணம் அறங்கூறவையத்தார் [26]மாறுபடுத்தலைச் செய்யலாம்.

மூன்றும் அதிகரணம் பதினேராம் பிரகரணம்
" விற்றுக்கொண்டு மாறுபடல் " என்னும் எழுபத்திரண்டாம்
அத்தியாயம் முற்றிற்று.

---

25 விலைபெற்றுக்கொண்டு கொடுத்தலும் விலைகொடுத்து வாங்குதலும் என்பது.

26 மாறுபடுத்தல்—விற்கப்பட்ட பொருளைத் திருப்பிப்பெறச் செய்தல்.

மூன்றாம் அதிகாரணம்—அறநிலையாட்சி

## 12, 13, 14-ஆம் [1]பிரகரணங்கள்—[2]நல்கியதை நல்காமை, உரிமையில்லாதவன் விற்றல், உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபு.

## எழுபத்துமூன்றாம் அத்தியாயம்

[3]கடன்கொண்டதைக் கொடாமைக்குரிய விதியே நல்கியதை நல்காமைக்கும் [4]கூறப்பட்டபடியாம்.

---

### 73-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] 12, 13, 14 ஆகிய இம்மூன்று பிரகரணங்களையும் தன்னுட்கொண்டது இவ்வத்தியாயம்.

[2] மூன்று பிரகரணங்களுள்ளும் முதலாவது 'நல்கியதை நல்காமை' என்பது. 'உனக்கு யான் இன்னதைத்தருவேன்' என்று வாக்குறுதி செய்யப்பட்டதைச் சொல்லியபடி கொடாமை என்பது இதன் பொருள். 'விற்றுக்கொண்டு மாறுபடல்' என்னும் முன்னைப் பிரகரணம் வாணிகத் தொழிலில் கொடுக்கல் வாங்கலைப்பற்றிய மாறுபாட்டைக் குறிப்பதாகும். இது அறம் முதலிய கொடைகளில் நிகழும் மாறுபாட்டைக் கூறுதலின் இப்பிரகரணம் அதன்பின் வைக்கப்பட்டது. இரண்டாவது 'உரிமையில்லாதவன் விற்றல்' என்பது. ஒரு பொருளை விற்றல் முதலியன செய்தற்கு உரிமையில்லாதவன் விற்றல் என்பது பொருள். சொல்லளவிற் கூறி மாறுபடுதலைப்பற்றியது முன்னைப் பிரகரணம். இது செயலளவில் மாறுபடுதலைப் பற்றியதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது. மூன்றாவது 'உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபு' என்பது. ஓர் உடைமை நியாயப்படி இன்னானுக்கு உரியதாகும் என்று துணிதல் என்பது இதன்பொருள். ஒரு பொருளுக்கு உரிமையில்லாதவன் அதனை விற்பானாயின், அதற்குரிய தண்டம் முதலியன முன்னைப் பிரகரணத்திற் கூறப்பட்டன. இஃது அங்ஙனம் மாறுபட விற்கப்பட்ட உடைமைக்கு நியாயமாக இன்னான் உரியவன் என்று துணிதலைப்பற்றிக் கூறுதலின் அதன்பின் வைக்கப்பட்டது. இங்குக் கூறியவாற்றால் இப்பிரகரணங்களின் இயைபுண்மை விளக்கமாதல் அறிக.

[3] கடன்கோடலைப் பற்றிய விதியை 68-ஆம் அத்தியாயத்திற் காண்க.

[4] கடன்கொண்டதைத் திருப்பிக் கொடுக்கவில்லையானால், சான்று முதலியனகொண்டு துணிதல்போல நல்கியதை நல்காமைக்கும் கொள்ள வேண்டும் என்பது.

[5]வழக்கிடுதற்கு இயலாத நிலையில் [6]கொடுக்கப்பட்டது [7]மாறுபடுதலின்கண்ணே நிலைபெறுவதாகும். [8]எல்லாப் பொருள்களையும் மக்களையும் மனைவியையும் தன்னையும் கொடுத்து மாறுபடுபவனுக்குத் திருப்பிக்கொடுத்துவிடல் வேண்டும். [9]தகுதியற்றவர்க்கும் [10]நற்செயல்நிமித்தம் [11]தீயவர்க்கும் செய்த [12]அறக்கொடையும் நன்மை செய்யாதவர்க்கும் தீமை செய்பவர்க்கும் கொடுக்கும் [13]பொருட்கொடையும் [14]தகுதியில்லாதவர்க்குக் கொடுக்கும் [15]இன்பக்கொடையும் [16]அங்ஙனமே. [17]கொடுப்போர்க்கும் வாங்குவோர்க்கும் கேடு நேராவண்ணம் திறமையுடையோர் மாறுபடுத்தலைச் செய்யலாம்.

[18]அடித்தொறுத்தல் பழித்துரைத்தல் கேடுவிளைத்தல் என்னும் இவை காரணமாக உண்டாம் அச்சத்தால் நிகழும் அச்சக்

---

[5] வழக்கிடுதற்கு இயலாத நிலையாவது சான்று முதலியன இல்லாமை.

[6] கொடுக்கப்பட்டது — கொடுப்பதாக வாக்குறுதி செய்யப்பட்டது. இப்பகுதியில் 'கொடுக்கப்பட்டது' என்று பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

[7] வாக்குறுதிசெய்தபடி கொடாமல் மறுத்துவிடலாம் என்பதுகருத்து.

[8] இங்கே கூறப்பட்ட பொருள்கள் ஒருவனுக்கு எதிர்பாராத நிலையில் கேடு நேர்ந்தவிடத்து அக்கேட்டினின்றும் உய்வதுகுறித்துக் கொடுப்பதாகக் கூறப்பட்டனவாகலின் பின்னர் மறுத்துவிடலாம் என்பது கருத்து.

[9] தகுதி—அறக்கொடை பெறுதற்குரியது.

[10] நற்செயல்—பசுக்காவல் முதலிய புண்ணியச்செயல்.

[11] தீயவர்—கள்வர், பிறர்மனைநயப்போர் முதலியோர்.

[12] அறக்கொடை—அறம்பொருள் இன்பங்களுள் அறத்தின்பொருட்டுச் செய்யப்படும் தானம்.

[13] பொருட்கொடை — பொருள்வளர்ச்சியின் நிமித்தம் கொடுக்கப்படுவது.

[14] தகுதி—ஈண்டு இன்பநுகர்தற்குரியது.

[15] இன்பக்கொடை—காமநிமித்தம் கொடுக்கப்படுவது.

[16] அங்ஙனமே—மேற்கூறியபடி கொடாமல் மறுத்துவிடலாம் என்பது.

[17] மேற்கண்ட நிகழ்ச்சிகளில் இருதிறத்தார்க்கும் கேடுநேராவண்ணம் நிபுணர்களாகிய பெரியோர் மாறுபடுதலை ஆராய்ந்து முடிவுசெய்யலாம் என்பது கருத்து.

[18] ஒருவன் தன்னை மற்றொருவன் அடித்தொறுத்தல் முதலியன செய்யக்கூடும் என்று அஞ்சிக் கொடுக்கும் கொடை அச்சக்கொடையாகும்.

கொடையையும் பிறரைத் துன்புறுத்தற்பொருட்டுச் செய்யும் [19]வெகுளிக்கொடையையும் கொடுத்தவனுக்கும் ஏற்றுக்கொண்டவனுக்கும் திருட்டுக்குரிய தண்டமாம். அரசனுடைய கொடைக்கு மிகுதியாகச் செய்யப்படும் [20]மகிழ்ச்சிக்கொடைக்கு உத்தமசாகசம் தண்டமாம்.

[21]பிணைக்கடன் தண்டம் பரிசங்களின் [22]எச்சம் சூதுக்கடன் கள்ளுக்கடன் [23]காமக்கொடை என்னும் இவற்றைப் [24]புதல்வன் ஞாதியர் பொருள்பெற்றோன் என்னும் இவர்கள் விருப்பமில்லாத நிலையில் கொடுக்கக்கடவரல்லர்.

[25]இனி உரிமையில்லாதவன் விற்றல் கூறப்படும். இழந்த பொருளைக் கவர்ந்தவனையறிந்து அப்பொருட்குரியவன் அறங்கூறவையத்தாரைக்கொண்டு அவனைப் பிடித்தல்வேண்டும். [26]காலம் இடங்கள் மாறுபடின் தானே பிடித்துக்கொணர்தல் வேண்டும்

---

[19] ஒருவனைத் துன்புறுத்தற்பொருட்டுக் கோபம் காரணமாகக் கொடுக்கப்படும் கொடை வெகுளிக்கொடையாகும்.

[20] மகிழ்ச்சிக்கொடை—ஆடல் பாடல் முதலிய கலைவல்லார்க்கு மனமுவந்து கொடுக்கப்படுவது. இதனை அரசன் கொடுப்பதைவிட மிகுதியாக ஒருவன் கொடுப்பானாயின் அங்ஙனம் கொடுப்பவனுக்கு உத்தமசாகச தண்டம் விதிக்கப்படும் என்பது கருத்து.

[21] பிணைக்கடன் — ஒருவனுக்குப் பிணையாக மற்றொருவன் கொடுக்க உடன்பட்ட கடன்.

[22] எச்சம்—செலுத்திய அளவு நீங்க எஞ்சியபகுதி.

[23] காமக்கொடை — கூத்தன் விறலி முதலியோர்க்குக் கொடுக்கப்படுவது.

[24] மேற்குறிப்பிட்ட பிணைக்கடன் முதலியவற்றைக் கொடுக்கவேண்டியவன் இறந்துவிடுவானாயின் அவனுடைய மக்கள் ஞாதியர் அவன்பொருளை அடைந்தவர் என்னும் இவர்கள் விருப்பமில்லையானால் கொடுக்கக் கடமைப்பட்டவர் ஆகார் என்பது கருத்து.

[25] இஃது இவ்வத்தியாயத்து இரண்டாம் பிரகரணத்தொடக்கம்.

[26] பொருளைக் கவர்ந்தவனைப் பிடிப்பதற்குக் குறிப்பிட்ட காலமும் இடமும் மாறுதலடைந்திருக்குமாயின் மீண்டும் அறங்கூறவையத்தார்க்குத் தெரிவியாமல் அப்பொருட்குரியவனே அறிந்து பிடித்துக்கொண்டு வரலாம் என்பது.

அறங்கூறவையத்தார் [27]உரியவனை நோக்கி 'எங்கிருந்து உனக்குக் [28]கிடைத்தது' என்று வினுதல் வேண்டும். அவன் [29]வந்த வரலாற்றைக் கூறி விற்றவனைக் கூருவிடின் அப்பொருளை [30]வாங்கிக் கொடுத்து விடுதலை செய்தல்வேண்டும். விற்றவனைக் காட்டிக் கொடுப்பானுயின் அப்பொருள் விலையையும் திருட்டுக்குரிய தண்டத்தையும் [31]செலுத்தல்வேண்டும். [32]அவனும் தனக்கு விற்றவனை அறிவிப்பானுயின் விற்றவனுக வேறொருவனைக் [33]காட்டாதவரை விடுதலைபெறக்கடவன். [34]இறுதியாகக் காட்டப்பட்டவன் பொருளின் விலையையும் திருட்டுக்குற்றத்திற்குரிய தண்டத்தையும் இறுக்கக்கடவன்.

இழக்கப்பட்ட பொருள் தன்னுடையது என்பதற்குச் சான்று முதலியன காட்டி அதனைத் திருப்பிப்பெறவேண்டும். தன்னுடையது என்பதற்குச் [35]சான்று முதலியன இல்லையாயின் ஐந்தில் ஒரு கூறு தண்டமாம். அப்பொருள் முறைப்படி அரசனைச் சார்ந்ததாகும்.

---

[27] உரியவன்—பொருளைக் கவர்ந்து வைத்திருப்பவன்.

[28] 'கிடைத்தது' என்பதற்கு முன் 'இப்பொருள்' என்பதைச் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

[29] தான் விலைக்கு வாங்கியதாய்ச்சொல்வித் தன்னிடம் விற்றவன் இன்னுன் என்று கூறவில்லையாயின் என்பது.

[30] அறங்கூறவையத்தார் அப்பொருளை வாங்கி உரியவனிடம் கொடுத்து என்பது.

[31] விற்றவன் பொருளின் விலையைப் பொருட்குரியவனுக்கும், தண்டத்தை அரசனுக்கும் செலுத்தல்வேண்டும் என்பது.

[32] அவனும்—விற்றவனுக முன்குறிக்கப்பட்டவனும்.

[33] தனக்கு விற்றவனுக மற்றொருவனைக்காட்ட அவன் பிறனொருவனைக் காட்ட இங்ஙனம் காட்டிக்கொண்டுவரும் நிலையில் இறுதியில் வேறொருவனை விற்றவனுகக் காட்டாதவனைக் குற்றவாளி எனக்கொண்டு மற்றையோரை விடுதலை செய்துவிடல் வேண்டும் என்பது கருத்து.

[34] இறுதியாகக் காட்டப்பட்டவன் — பிறனொருவனை விற்றவனுகக் காட்ட இயலாதவன்.

[35] தன்னுடையது என்று கூறி சான்று முதலியன காட்டவில்லையாயின் பொய் கூறியதாகக்கொண்டு அப்பொருளின் விலையளவில் ஐந்தில் ஒருகூறு தண்டம் விதிக்கலாம் என்பது.

[36]இழந்து கவரப்பட்ட பொருளை அறிவியாமல் தானே எடுத்துக்கொள்ளும் உரியவனுக்குப் பூர்வசாகசம் தண்டமாம்.

இழந்து கவரப்பட்ட பொருள் உல்குபொருள்நிலையத்தில் [37]வைக்கப்படல்வேண்டும். [38]மூன்று பக்கங்கள் வரை தேடிவருவார் இல்லையாயின் அரசன் எடுத்துக்கொள்ளலாம். [39]சான்று முதலியனகாட்டி உரியவனும் எடுத்துக்கொள்ளலாம்.

[40]இரண்டுகால் பிராணிகளுக்கு ஐந்துபணமும் [41]ஒற்றைக் குளம்புள்ளவற்றிற்கு நான்குபணமும் பசு எருமைகளுக்கு இரண்டு பணமும் [42]சிறுவிலங்குகளுக்குக் காற்பணமும் ஆக விடுதலைப் பொருள் கொடுத்தல்வேண்டும். இரத்தினம் [43]திண்மைப்பொருள் நொய்மைப்பொருள் குப்பியப்பொருள் என்னும் இவற்றிற்கு நூற்றிற்கு இருபது விகிதம் விடுதலைப்பொருள் ஆகும்.

பகைப்படையாலும் காட்டில் வாழ்வோராலும் கவரப்பட்ட [44]பொருளை அரசன் திருப்பிக்கொணர்ந்து உரியவர்களிடம் சேர்ப்பித்தல்வேண்டும். கள்வரால் கவரப்பட்ட பொருள் [45]அறியப்

---

[36] ஒருவன் இழந்து பிறனொருவனாற் கவரப்பட்ட பொருளைக் கவர்ந்தவனிடத்தினின்றும் அவனுக்கு அறிவியாமல் தானே எடுத்துக்கொண்ட உரியவனுக்கு இத்தண்டம் என்பது.

[37] கவர்ந்தவன் சுங்கங்கொள்ளுமிடத்தில் சேர்த்துவிடல் வேண்டும் என்பது.

[38] மூன்று பக்கங்கள்—நாற்பத்தைந்து நாள்.

[39] மூன்று பக்கங்களுக்குள்ளாளுல் உரியவன் சான்றுமுதலியன காட்டி எடுத்துக்கொள்ளலாம் என்பது.

[40] இரண்டுகால் பிராணிகள் — அடிமை ஆண் பெண் முதலியோர். அடிமையாட்களை ஒருவன் தவறவிட்டானாயின் அந்த ஆட்களை அறிந்தவர் அவரைச் சுங்கநிலையத்தில் சேர்ப்பித்தல்வேண்டும் என்பதும், அடிமை கொண்டவன் அறிந்து அவரைத் திருப்பிப்பெறுங்கால் ஐந்துபணம் சுங்கத்திற்குச் செலுத்தவேண்டும் என்பதும் கருத்து. பின்வரும் விடுதலைப் பொருள்களையும் இவ்வாறே கொள்க.

[41] ஒற்றைக்குளம்புள்ளவை—குதிரை கழுதை ஒட்டகம் முதலியன.

[42] சிறுவிலங்கு—ஆடு முதலியன.

[43] திண்மை முதலியவற்றை 32-ஆம் அத்தியாயத்திற் காண்க.

[44] பொருள்—நாற்கால் விலங்கு முதலியன.

[45] அறியப்படாமலிருத்தல்—கண்டுபிடிக்கப்படாததாதல்.

படாமல் இருந்தாலும் திருப்பிக்கொண்டு வருவதற்கு [46]இயலாமலிருந்தாலும் [47]தன் [48]பொருளிலிருந்து கொடுத்தல்வேண்டும். [49]பிடித்தற்குத் தன்னால் நியமிக்கப்பட்டவனால் கைப்பற்றப்பட்ட பொருளைத் திருப்பிக்கொணர்ந்து அதற்குரிய [50]விலையையேனும் கொடுத்துவிடல் வேண்டும்.

பகைவரது நாட்டிலிருந்து படைவீரரால் கவரப்பட்டு வந்த பொருள் நன்னெறியில் வாழ்வோர் தெய்வம் அந்தணர் தவமுடையோர் என்னும் [51]இவர்களுடைய பொருளல்லாதவிடத்து அரசன் கட்டளைப்படி நுகரத்தக்கது. உரிமையில்லாதவன் விற்றல் இவ்வாறும்.

இனி உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபு கூறப்படும். [52]சான்று முதலியன இல்லாத பொருள்கள் தொடர்ந்து அநுபவிப்பவர்களுக்கு உரியனவாம்.

ஒருவனுக்கு உரியபொருள் பிறரால் அநுபவிக்கப்பட்டுப் பத்தியாண்டுகள் வரை [53]புறக்கணிக்கப்பட்டிருந்தால் அப்பொருளை அவன் இழந்தவனாவான். [54]சிறுவன் யாண்டு முதிர்ந்தவன்

---

[46] திருடனை அறிந்து பிடிக்க ஆற்றலில்லாமலிருந்தாலும் என்பது.

[47] தன் என்பது அரசனைக்குறிக்கும்.

[48] பொருள்—ஈண்டுக் கள்வரால் கவரப்பட்ட பொருளின் இனத்தைச் சார்ந்ததாகும்.

[49] பிடித்தற்கு நியமிக்கப்பட்டவன் — கள்வனைக் கண்டுபிடித்தற்கு நியமிக்கப்பட்ட அதிகாரி.

[50] அப்பொருளையாவது அல்லது அதற்குரிய விலையையாவது உரியவனுக்குக் கொடுத்துவிடல் வேண்டும் என்பது.

[51] பொருள் நன்னெறியில் வாழ்வோர் முதலியவர்களுடையதாயின் திருப்பி அவர்களிடம் சேர்ப்பித்துவிடல் வேண்டும் என்பது கருத்து.

[52] ஒரு பொருளை ஒருவன் தொடர்ந்து அநுபவித்து வருவானானால் அப்பொருள் தனக்குரியது என்று பிறன் ஒருவன் சான்றுமுதலியன இல்லாமல் வழக்குத்தொடருவானாயின் அநுபவித்து வருபவனுக்கே உரியதாம் என்பது கருத்து.

[53] புறக்கணித்தல்—தன்னுடையது என்று வழக்குத் தொடராமலிருத்தல்.

[54] அப்பொருள் சிறுவன் முதலியோராக இங்குக் கூறப்பட்டோர்க்கு உரியதாக இருப்பினும் அப்பொருட்குரியவன் நாடுகடக்கப்பட்டிருப்பினும் அரசியற்கலக்கம் நேர்ந்தவிடத்தும் பத்துயாண்டுகள் வரை புறக்கணிக்கப்பட்டாலும் இழக்கப்பட்டதாகாது என்பது கருத்து.

நோயாளி விதனமுடையோன் அயல்நாடு சென்றவன் என்னும் இவர்களுடையதாயிருப்பினும் நாடுகடத்தல் அரசியற்கலக்கம் என்னும் இந்நிகழ்ச்சிகளிலும் இவ்விதி பொருந்தாது.

[55]தொடர்ந்து அநுபவிக்கப்பட்ட வீடு இருபது ஆண்டுகள் வரை புறக்கணிக்கப்படுமாயின் திருப்பிப் பெறுதற்குரியதன்று.

பிறர் இல்லத்திற் குடியிருக்கும் [56]ஞாதியர் வேதமோதுவோர் பாசண்டிகள் என்னும் இவர்கள் [57]அரசன் முன்னிலையிலன்றி அநுபவத்தைக்கொண்டு அவ்வில்லத்தைக் கவர்ந்துகொள்ள இயலாது. அடைக்கலப்பொருள் ஈட்டுப்பொருள் புதையற்பொருள் பணிப்பொருள் பெண் எல்லை அரசனுடையதும் வேதமோதுபவனுடையதுமாகிய பொருள்கள் என்னும் இவற்றையும் [58]கவர்ந்துகொள்ளலாகாது.

துறவிகளும் பாசண்டிகளும் அகன்ற இடத்தில் ஒருவர்க்கொருவர் இடையூறு விளைவியாமல் வாழ்தல்வேண்டும். [59]சிறிய இடையூறுகளைப் பொறுத்துக்கொள்ளல் வேண்டும். [60]முன்னர் வந்தவன் வரிசையாகத் தங்குதற்கு இடங்கொடுத்தல் வேண்டும். கொடாதவன் வெளிப்படுத்தப்படுவான். [61]காடுறைநிலை துறவுநிலை [62]ஓதுநிலை என்னும் மூன்று நிலைகளினுமுள்ளவருடைய பொருளை [63]முறையே ஆசிரியன் மாணவன் அறம்புரிநண்பன்

---

[55] ஒருவனுக்குரிய வீட்டை மற்றொருவன் இருபது யாண்டுகள் வரை அநுபவிக்க, அதுகாறும் உரியவன் புறக்கணித்துவிடுவானாயின் அதன்பின் அவ்வீட்டைப் பெறுதற்கு வழக்கிட இயலாதென்பது கருத்து.

[56] ஞாதியர்—குடியிருக்கும் இல்லமுடையாரின் உறவினர்.

[57] அரசன் முன்னிலையில் தெரிவித்து அநுமதிபெறாமல் என்பதாம்.

[58] இங்குக் குறிப்பிட்ட பொருள்களையும் அரசன் அநுமதியின்றி அநுபவித்ததை ஏதுவாகக்கொண்டு கவர்தலாகாது என்பது கருத்து.

[59] சிறிய இடையூறுகள்—தங்குமிடம் சுருக்கமாக இருப்பது முதலியவற்றால் உண்டாவது.

[60] தங்குமிடத்தில் முதலில் வந்தமர்ந்தவன் பின்னர் வருபவர்களுக்கு முறைப்படி இடங்கொடுத்து இருக்கச்செய்தல் வேண்டும் என்பது.

[61] காடுறைநிலை—வானப்பிரத்தாச்சிரமம்.

[62] ஓதுநிலை—பிரமசரியாச்சிரமம்.

[63] முறையே என்றதனால் முன்னையோன் இல்லையாயின் பின்னையோன் அடையலாம் என்பது போதரும்.

உடன்பயின்றவன் என்னும் இவர்கள் அடையக்கடவர்.

[64]அவர்களுக்கு வழக்கு ஏற்படுமாயின் எத்துணைப்பணம் [65]தண்டமாமோ அத்துணை இரவு அரசனுக்கு நலம் பயக்குமாறு [66]நோன்பியற்றல் நீராட்டல் தீயோம்பல் அரும்பெருங் கன்மஞ் செய்தல் என்னும் இவற்றை அவர்கள் செய்தல்வேண்டும். பொன் பணம் இல்லாத பாசண்டர்கள் நல்லோராவர். [67]அன்னார் தம் தகுதிக்கேற்ப நோன்பியற்றி வழிபடல்வேண்டும். [68]கொடுமை களவு வன்செயல் வலிந்துபற்றல் என்னும் இந்நிகழ்ச்சிகளில் விதிக்கப்பட்ட தண்டமே செய்யத்தக்கதாகும்

## சுலோகம்

துறவுநிலையிலுள்ள ஒழுக்கக்கேடுடையாரை அரசன் தண்டத்தால் ஒறுத்தல்வேண்டும். என்னை ? மறத்தால் கெடுக்கப்பட்ட அறம் [69]புறக்கணிக்கப்படுமாயின் அரசனைக் [70]கொன்றுவிடுமாதலின்.

மூன்றும் அதிகரணம் 12, 13, 14-ஆம் பிரகரணங்கள் 'நல்கியதைநல்காமை, உரிமையில்லாதவன்விற்றல், உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபு' என்பன அடங்கிய எழுபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

64 அவர்கள்—ஆசிரியர் முதலிய நால்வரும்.

65 தண்டம்—வழக்கில் தோல்வியடைந்தவர்களுக்கு விதிக்கப்படுவது.

66 நோன்பியற்றல் முதலிய புண்ணிய கன்மங்களை அரசனது நலங் குறித்துச் செய்துகொண்டிருக்கவேண்டும் என்பது.

67 மேற்குறிப்பிட்ட நல்லோராகிய பாசண்டர் வழக்கிட்டுத் தோல்வியடைவராயின் தகுதிக்கேற்பக் குறிப்பிட்ட காரியங்களைச் செய்யவேண்டும் என்பது.

68 நல்லோராகிய பாசண்டர் கொடுமை முதலாக இங்குக் கூறப்பட்ட தீச்செயல்களில் தலைப்பட்டிருப்பாராயின் அச்செயல்களுக்கு விதிக்கப்பட்ட தண்டமே அவர்களுக்குமாம் என்பது.

69 அரசனால் புறக்கணிக்கப்படுமாயின் என்பது.

70 " அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றுவதூஉம்" என்னும் சிலப்பதிகார அடி ஈண்டு நினைக்கத்தக்கது.

## மூன்றும் அதிகாரணம்—அறநிலையாட்சி

## பதினேந்தாம் பிரகாரணம்—[1]வன்செய்கை

## எழுபத்துநான்காம் அத்தியாயம்

[2]பொது உடைமையை [3]வலிந்துபற்றுதல் வன்செய்கையாகும். [4]சிறப்பாக உள்ள உடைமையை [5]வலிந்துபற்றுதலும் [6]பிறழக் கூறுதலும் களவாகும்.

மணி திண்மைப்பொருள் நொய்மைப்பொருள் குப்பியப் பொருள் என்னும் இவற்றை வலிந்துபற்றின் அப்பொருளின் விலையளவு தண்டம் என்பர் மநுவின் வழிப்பட்டோர். விலையள வின் [7]இருமடங்கு என்பர் வெள்ளியின் வழிப்பட்டோர். குற்றத் திற்குத்தக தண்டம் என்பர் கௌடலியர்.

சிறிய பொருள்களாகிய மலர் பழம் காய் கிழங்கு தண்டு சோறு என்னும் இவற்றிற்கும் தோல் மூங்கில் மண் என்னும் இவற்றால் செய்யப்பட்ட பாண்டம் முதலியவற்றிற்கும் பன்னிரண்டு பணத்திற்குக் கீழ்ப்படாமலும் இருபத்துநான்கு பணத் திற்கு மேற்படாமலும் [8]தண்டமாம்.

---

### 74-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] உடைமைக்கும் உடையானுக்கும் உரிய இயைபை அறிந்து அம்முறை யில் நடந்துகொள்ளாமல் ஒருவனுக்குரிய உடைமையை மற்றொருவன் வலிந்து கைப்பற்ற முயலுதல் தவறு என்பதும் அதற்குரிய தண்டவிதி களும் இப்பிரகரணத்திற் கூறப்படுதலின் இஃது அதன்பின் வைக்கப்பட் டது. இதனால் பிரகரண இயைபு தெளிவாம்.

[2] பொது உடைமை—பலர்க்கும் பொதுவாக உள்ள பொருள்.

[3] வலிந்துபற்றுதல்—அப்பலருள் ஒருவன் தனக்குரியது என்று அப கரித்தல்.

[4] சிறப்பு—ஒருவனுக்குரியது.

[5] உரியவன் அல்லாதவன் கவர்ந்துகோடல் என்பது.

[6] பிறழக்கூறுதல் — ஒருவனுடைய பொருளைப் பெற்றுக்கொண்டு பெறவில்லை என்று மாறுபடக்கூறுதல்.

[7] இருமடங்கு தண்டம் என்பது.

[8] இங்கே குறிப்பிட்ட பொருள்களை வலிந்துபற்றின் இத்துணைத்தண் டம் என்பது கருத்து.

பருப்பொருள்களாகிய எஃகு மரம் கயிறு என்னும் இவற்ருல் ஆக்கப்பட்ட பொருள்களுக்கும் சிறுவிலங்கு ஆடை என்னும் இவற்றிற்கும் இருபத்துநான்கு பணத்திற்குக் குறையாமலும் நாற்பத்தெட்டுப்பணத்திற்கு மேற்படாமலும் [9]தண்டமாம். பருப்பொருள்களாகிய செம்பு வெண்கலம் பீங்கான் யானைத்தந்தம் முதலியவற்ருல் ஆக்கப்பட்ட உண்டைவடிவமான பாத்திரங்களுக்கு நாற்பத்தெட்டுப் பணத்திற்குக் குறையாமலும் தொண்ணூற்ருறு பணத்திற்கு மேற்படாமலும் [10]தண்டமாம். பூர்வ சாகச தண்டமுமாம். பருப்பொருள்களாகிய [11]பெருவிலங்கு மனிதன் நிலம் இல்லம் தங்கம் பொன் நுண்ணிய இழைகளையுடைய ஆடை என்னும் இவைமுதலியவற்றிற்கு இருநூறு பணத்திற்குக் குறையாமலும் ஐந்நூறு பணத்திற்கு மேற்படாமலுமுள்ள மத்தியமசாகசம் [12]தண்டமாம்.

மகளிரையாதல் ஆடவரையாதல் வலிந்துபற்றிக் கட்டினவனுக்கும் கட்டுவித்தவனுக்கும் கட்டை அவிழ்த்துவிட்டவனுக்கும் ஐந்நூறு பணத்திற்குக் குறையாமலும் ஆயிரம் பணத்திற்கு மேற்படாமலுமுள்ள உத்தமசாகசம் தண்டம் என்பர் ஆசிரியர்.

வன்செய்கையை ஏற்றுக்கொள்ளுவேன் என்று [13]செய்விப்பவனுக்கு இருமடங்கும் [14]செலவாகும் பொருளைக் கொடுத்துவிடுவேன் என்பவனுக்கு நான்குமடங்கும் தண்டமாம். [15]இத்

---

9 இத்தண்டம் எஃகுப்பொருள் முதலியவற்றை வலிந்து கவர்ந்ததற்கு எனக்கொள்க.

10 இத்தண்டம் இங்கே கூறப்பட்ட செம்புப்பாத்திரம் முதலியவற்றை வலிந்து கவர்ந்ததற்கு எனக்கொள்க.

11 பெருவிலங்கு—யானை குதிரை முதலியன.

12 இத்தண்டம் இங்கே கூறப்பட்ட பெருவிலங்கு முதலியவற்றை வலிந்து கவர்ந்ததற்கு எனக்கொள்க.

13 ஒருவன் வன்செய்கைக்குரிய பொறுப்பை யான் ஏற்றுக்கொள்வேன் என்று கூறி மற்றெருவனைக்கொண்டு செய்வித்தானுனல் அவனுக்குக் குறிப்பிட்ட தண்டத்தின் இருமடங்கு தண்டம் என்பது கருத்து.

14 ஒரு வன்செய்கையைச் செய்தற்பொருட்டுச் செலவாகும் பொருளை என்பது.

15 இத்துணை—வன்செய்கை நிமித்தம் விதிக்கப்படும் தண்டத்தில் இவ்வளவுகூறு.

துணைப்பொன் கொடுப்பேன் என்று அளவை அறுதியிட்டுச் செய்விப்பவன் அறுதியிட்ட பொருளையும் தண்டத்தையும் செலுத்தல் வேண்டும் என்பர் வியாழன் வழிப்பட்டோர்.

[16]அவன் வெகுளி மதம் மோகம் என்னும் இவற்றுள் ஒன்றைக் [17]காரணமாகக் கூறுவானாயின் [18]முற்கூறியபடி அவனுக்குத் தண்டம் விதித்தல்வேண்டும் என்பர் கௌடலியர்.

### சுலோகங்கள்

(1) எல்லாவகையான தண்டவிதிகளிலும் நூற்றுக்கு எட்டுப்பணம் [19]'உருவம்' ஆகும். நூற்றுக்குக் கீழ்ப்படுமாயின் நூற்றுக்கு ஐந்து பணம் [20]'வியாசீ' ஆகும்.

(2) குடிமக்களின் குற்றமிகுதியாலும் அரசரின் [21]எண்ணக்கேட்டினாலும் [22]அறத்தின்பாற்படாமல் உருவம் வியாசீ என்னும் இவ்விரண்டும் உண்டாம். [23]இயற்கையே அறத்தின்பாற்பட்டதாக நினைக்கப்படும்.

மூன்றாம் அதிகரணம் பதினைந்தாம் பிரகரணம்
'வன்செய்கை' என்னும் எழுபத்துநான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[16] அவன்—வன்செய்கையைச் செய்வித்தவன்.

[17] காரணம்—செய்வித்ததற்கு ஏது.

[18] முற்கூறியபடி—வன்செய்கையைச் செய்தவனுக்குச் சொல்லியபடி.

[19] விதிக்கப்படும் தண்டப்பணம் நூறும் அதற்கு மேற்பட்டுமிருக்குமாயின் நூற்றுக்கு எட்டுவிகிதம் மிகுதியாக வாங்கப்படுவது 'உருவம்' என்னும் பெயருடையதாகும்.

[20] நூற்றுக்கு உட்பட்டதாக விதிக்கப்படும் தண்டப்பணத்திற்கு நூற்றுக்கு ஐந்து விகிதம் கணக்கிட்டுக் கூட்டி வாங்குவது 'வியாசீ' என்னும் பெயருடையதாகும்.

[21] எண்ணக்கேடு — குடிகளிடத்தினின்றும் முறைதவறிப் பொருளை மிகுதியாகப் பெறவேண்டும் என்னும் சித்தவிருத்தி.

[22] மேற்கண்ட காரணங்களால் அறத்திற்கு மாறுபட உருவமும் வியாசீயும் ஏற்படும் என்பது கருத்து. இதனால் அங்ஙனம் ஏற்படாவாறு அரசனும் குடிகளும் முறைதவறாமல் நடந்துகொள்ளவேண்டும் என்பது பெறப்படும்.

[23] இயற்கை—உருவம் வியாசீ இல்லாதது.

## மூன்ரும் அதிகாரணம்—அறநிலையாட்சி

### பதினுரும் பிரகாரணம்—[1]வன்சொல்

### எழுபத்தைந்தாம் அத்தியாயம்

[2]உறுப்புக்குறைபற்றிப் பழித்தல் [3]இழித்துரைத்தல் [4]அச்சுறுத்துரைத்தல் என வன்சொல் மூவகைப்படும்.

உடல் [5]இயல்பு கல்வி தொழில் நாடு என்னும் [6]இவற்றுள் உடற்குறைபற்றிக் குருடன் முடவன் [7]முதலியவாக [8]உண்மை கூறிப் பழித்துரைப்பின் மூன்றுபணம் தண்டமாம். [9]பொய்ம்மை கூறிப் பழித்துரைப்பின் ஆறுபணம் தண்டமாம்.

குருடன் முதலியோரைக்குறித்து அழகிய கண்ணுடையோன் முதலியோராகக்கூறிப் புகழ்வதுபோலப் பழித்துரைப்பின் பன்னிரண்டுபணம் தண்டமாம்.

[10]குட்டநோய் பைத்தியம் அலித்தன்மை முதலியவற்ருல்

---

75-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] முன்னைப் பிரகரணத்தில் வன்செயலைப்பற்றிக் கூறப்பட்டது. அதற்கினமாகிய வன்சொல் இப்பிரகரணத்திற் கூறப்படுதலின் அதனை அடுத்து இது வைக்கப்பட்டது. இதனுற் பிரகரண இயைபு விளக்கமாதலறிக.

[2] உறுப்புக்குறை—குருடு செவிடு முதலியன.

[3] இழித்துரைத்தல்—குட்டம் முதலிய நோய் பற்றி இழித்துக்கூறல்.

[4] கொலை முதலியன செய்வதாகக்கூறல் என்பது.

[5] இயல்பு—ஆண்மை பெண்மை முதலியன.

[6] இவற்றுள்—உடல் முதலாக இங்குக் கூறப்பட்ட ஐந்தனையும் பற்றி நிகழும் வன்சொற்களுள்.

[7] முதலிய என்றதனுல் செவிடு முதலியவற்றையும் கொள்ளல் வேண்டும்.

[8] உண்மைகூறி— பழிக்கப்பட்டவன் உண்மையாகக் குருடனுகவும் முடவனுகவும் இருப்பதை அறிந்துசொல்லி.

[9] குருடு முடம் முதலியன இல்லாதவனை அவை உள்ளனவாகக்கூறிப் பழித்துரைப்பின் என்பது.

[10] இனி இழித்துரைத்தலைப்பற்றிக் கூறத்தொடங்குகின்ருர்.

பழித்துரைப்பினு[11]மாம். [12]ஒத்தவரைக்குறித்து உண்மையாகவும் பொய்யாகவும் புகழ்வதுபோலப் பழித்தும் பழித்துரைப்பின் முறையே பன்னிரண்டு பணம் விழுக்காடு மிகுதியாகத் [13]தண்டமாம். [14]உயர்ந்தோரைக் குறித்துக்கூறின் இருமடங்காம். [15]இழிந்தோரைக் குறித்துக்கூறின் அரையளவு தண்டமாம். பிறர்மனைவியரைக் குறித்துக்கூறின் இருமடங்காம்.

[16]மறவி செருக்கு அறியாமை முதலியவை [17]காரணமாயின் அரையளவு தண்டமாம்.

[18]குட்டநோய் பைத்தியம் என்னும் இவற்றிற்கு மருத்துவரும் அணிமையிலுள்ள மக்களும் சான்றுவார். [19]அலித்தன்மைக்கு மகளிரும் மூத்திர நுரையும் நீரில் மலம் அழுந்தலுமாம்.

[20]அந்தணர் அரசர் வணிகர் சூத்திரர் சண்டாளர் என்னும்

---

11 பன்னிரண்டுபணம் தண்டமாம் என்பது.

12 ஒத்தவர்—பழித்துரைப்பவனோடு ஒத்த தகுதியுடையோர்.

13 குட்டநோய் முதலியன உண்மையாக இருப்பது குறித்துப் பழிப்பின் பன்னிரண்டுபணமும் பொய்யாகக் கற்பித்துக்கூறின் இருபத்துநான்கு பணமும் புகழ்வதுபோலப் பழித்துக்கூறின் முப்பத்தாறு பணமும் தண்டம் என்பது கருத்து.

14 பழித்துரைப்போன் தன்னின் உயர்ந்தோரை மேற்கூறியவாறு உண்மை முதலியனபற்றிப் பழித்துரைப்பின் முறையே குறிப்பிட்ட தண்டத்தின் இருமடங்கு தண்டம் இறுத்தல்வேண்டும் என்பது.

15 தன்னிற் றாழ்ந்தோரைக்குறித்து உண்மை முதலியவைபற்றிப் பழித்துரைப்பின் முறையே குறிப்பிட்ட தண்டத்தின் அரையளவு தண்டமாம் என்பது.

16 மறவி—விழிப்பின்மை.

17 காரணமாயின்—பழித்துரைத்தற்கு ஏதுவாயின்.

18 குட்டநோய் பைத்தியம் என்னும் இவற்றின் உண்மையின்மைகளுக்குச் சான்றுவார் இன்னார் என்பதைக் கூறுகின்றார்.

19 ஒருவன்பால் அலித்தன்மையுண்மைக்குப் பெண்பாலரும் மூத்திரத்தில் நுரைதோன்றாமையும் நீரில் மலம் மிதவாமல் உள்ளழுந்தலும் சான்றாம் என்பது கருத்து.

20 இயல்புகுறித்துப் பழித்தற்குரிய தண்டவிதி கூறுகின்றார்.

இவருள் [21]பின்னவர் முன்னவரை இயல்புகுறித்துப் பழித்துரைப்பின் முறையே மூன்றுபணம் விழுக்காடு மிகுதியாகத் தண்டமாம். [22]முன்னவர் பின்னவரைப் பழித்துரைப்பின் முறையே இரண்டு பண விழுக்காடு குறைவான தண்டமாம். இழிந்த பார்ப்பனன் முதலியோர் பழித்துரைப்பினு[23]மாம்.

[24]இதனால் [25]பேச்சினால் பிழைப்பவர்களின் [26]கல்விபற்றிய பழிப்புரைக்கும் [27]காருகன் பாணன் முதலியோரின் [28]தொழில் பற்றிய பழிப்புரைக்கும் [29]கீழை ஊணதேயத்தார் காந்தாரதேயத் தார் முதலியோரின் [30]நாட்டைப்பற்றிய பழிப்புரைக்கும் விதி கூறப்பட்டபடியாம்.

---

[21] சண்டாளன் ஒருவன் சூத்திரனை இயல்புகுறித்துப் பழித்துரைப்பின் மூன்று பணமும் வணிகனைப் பழித்துரைப்பின் ஆறு பணமும் அரசனைப் பழித்துரைப்பின் ஒன்பது பணமும் அந்தணனைப் பழித்துரைப்பின் பன்னிரண்டு பணமும் தண்டமாம் என்பதும் இவ்வாறே சூத்திரன் முதலிய பின்னவர் தமக்கு முன்னவரைப் பழித்துரைப்பினும் மூன்று பணம் விழுக்காடு மிகுதியாகத் தண்டமாம் என்பது கருத்து.

[22] அந்தணன் ஒருவன் இயல்புகுறித்து அரசனைப் பழித்துரைப்பின் எட்டுப்பணமும் வணிகனைப் பழித்துரைப்பின் ஆறு பணமும் சூத்திரனைப் பழித்துரைப்பின் நான்கு பணமும் சண்டாளனைப் பழித்துரைப்பின் இரண்டு பணமும் தண்டமாம் என்பது கருத்து.

[23] இரண்டு பண விழுக்காடு குறைவான தண்டமாம் என்பது. ஈண்டும் முன்னவன் பின்னவனைப் பழித்துரைத்தற்கே தண்டங் கூறப்பட்டிருப்பினும் முற்கூறியது உயர்ந்த பார்ப்பனன் முதலியோர்க்கும் இஃது இழிந்த பார்ப்பனன் முதலியோர்க்கும் எனக்கொள்ளல் வேண்டும். இழிந்த பார்ப்பனன் முதலியோர்க்குத் தண்டவேறுபாடு உண்டோ என்னும் ஐயத்தை நீக்குதற்குக் கூறப்பட்டபடியாம்.

[24] இதனால்—மேற்கூறிய விதியினால்.

[25] கதை கூறுதல் முதலியவற்றால் வாழ்க்கைநடத்துவோர் என்பது.

[26] கல்வி இழிந்தது எனக்கூறும் பழிப்புரை என்பது.

[27] காருகர்—தச்சன் கொல்லன் முதலியோர்.

[28] தொழில் இழிந்தது எனக்கூறும் பழிப்புரை என்பது.

[29] ஊணதேயம் என்பது காமகிரிக்கு வடபால் உள்ளது. அதன் கீழைப்பகுதி கீழை ஊணதேயமாகும்.

[30] நாட்டின் இழிவைப்பற்றிய பழிப்புரை என்பது.

[31]ஒருவன் மற்றொருவனை நோக்கி "உன்னை [32]இவ்வாறு செய்வேன்" என்று உடலுறுப்புக்களால் அச்சுறுத்திச் செய்யாமலிருப்பானாயின் அங்ஙனம் [33]செய்தற்குரிய தண்டத்தில் அரையளவு தண்டம் இறுத்தல்வேண்டும்.

[34]ஆற்றலில்லாதவன் வெகுளி செருக்கு அறிவின்மை என்னும் இவற்றைக் [35]காரணமாகக் கூறின் பன்னிரண்டுபணம் தண்டம் இறுத்தல்வேண்டும்.

பகை எண்ணமுடையவன் கேடுசெய்தற்கு ஆற்றலுடையவனாகவும் இருப்பானாயின் அவன் உயிருள்ளளவும் [36]பிணைகொடுத்தல் வேண்டும்.

### சுலோகம்

தன் நாட்டையும் ஊரையும் பழித்துரைப்பவன் பூர்வசாகச தண்டமும் தன் சாதியையும் குழுவையும் பழித்துரைப்பவன் மத்தியமசாகச தண்டமும் தெய்வத்தையும் தெய்வநிலையங்களையும் பழித்துரைப்பவன் உத்தமசாகச தண்டமும் இறுத்தல்வேண்டும்

மூன்றும் அதிகரணம் பதினாறும் பிரகரணம்
'வன்சொல்' என்னும் எழுபத்தைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

[31] அச்சுறுத்துரைத்தற்குரிய தண்டவிதிகூறத் தொடங்குகின்றார்.

[32] காலை ஒடித்துவிடுவேன் கையைத் துணித்துவிடுவேன் என்று சொல்லிக் கை முதலியவற்றால் காட்டி அச்சுறுத்தின் என்பது.

[33] சொல்லியபடி செய்தற்குரிய தண்டவிதியை அடுத்துவரும் 'தண்டக் கொடுமை' என்னும் பிரகரணத்தில் 'கைகால்களை ஒடித்தல் பல்லைத்தகர்த்தல்' முதலியவாகக் கூறப்படும் குற்றங்களுக்கு விதிக்கப்படும் தண்ட விளக்கத்தில் காண்க.

[34] ஆற்றலில்லாதவன்—கூறியபடி மற்றொருவனுடைய கைகால்களை ஒடித்தற்கு வன்மையில்லாதவன்.

[35] பழித்துரைத்தற்குக் காரணமாகக் கூறின் என்பது.

[36] அறங்கூறவையத்தார்க்குப் பிறர்க்குக் கேடு செய்யாமலிருத்தற்குப் பிணைகொடுத்தல் வேண்டும் என்பது.

## மூன்றும் அதிகரணம்—அறநிலையாட்சி

## பதினேழாம் பிரகரணம்—[1]தண்டக்கொடுமை

## எழுபத்தாறும் அத்தியாயம்

[2]ஊறுபடுத்தல் [3]ஓங்குதல் [4]அடித்தல் என்பன தண்டக் கொடுமைகளாம்.

[5]கை சேறு சாம்பல் புழுதி என்னும் இவற்றால் கொப்பூழ்க்குக் கீழ்ப்பட்ட உடற்பகுதியை ஊறுபடச் செய்வோனுக்கு மூன்று பணம் தண்டமாம்.

தூய்மையற்ற [6]அவற்றாலும் காலாலும் எச்சிலாலும் ஊறு படச் செய்வோனுக்கு ஆறு பணமும் [7]வாந்திநீர் மலமூத்திரம் முதலியவற்றாலாயின் பன்னிரண்டு பணமும் கொப்பூழ்க்கு மேற் பட்ட உடற்பகுதியி[8]லாயின் இருமடங்கும் தலையிலாயின் நான்கு மடங்கும் தண்டமாம். இஃது [9]ஒத்தவர்க்கென்க.

---

### 76-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] தண்டம்—தடி. உபலக்கணத்தால் கை முதலியவற்றையும் உணர்த் தும். தண்டக்கொடுமை—தடி முதலிய கருவிகளாலும் கை கால் முதலிய வற்றாலும் ஊறுபடப் புடைத்தல். கடுஞ்சொல்லைப்பற்றி முன்னைப்பிரகர ணத்திற் கூறப்பட்டது. தடி முதலியவற்றால் ஊறுபடப்புடைத்தல் அதற் கினமாதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது. இதனால் பிரகரண இயைபு விளக்கமாதல் அறிக.

[2] ஊறுபடுத்தல்—உடலில் பரிசிக்கச்செய்தல்.

[3] ஓங்குதல்—கை தடி முதலியவற்றை உயர எடுத்தல்.

[4] அடித்தல்—தடி கை முதலியவற்றால் புடைத்தல்.

[5] ஒருவன் மற்றொருவனுடைய நாபிக்குக்கீழ்ப்பட்ட உடற்பகுதியில் சாம்பல் சேறு முதலியுவற்றை இறைப்பானாயின் அவனுக்கு இத்தண்டம் என்பது.

[6] கை சேறு முதலியவற்றால் என்பது; முற்கூறியது தூயசாம்பல் புழுதி முதலியவற்றைப் பற்றியது எனவும் இங்கே கூறியது தூய்மையில்லாத சாம்பல் புழுதி முதலியவற்றைப் பற்றியது எனவுங்கொள்க.

[7] வாந்திநீர் முதலியவற்றை வாரி இறைப்பின் என்பது.

[8] ஊறுபடச்செய்யின் என்பது.

[9] ஒருவன் தனக்கு ஒத்தவனை மேற்குறிப்பிட்ட பொருள்களால் ஊறு படுத்தின் இத்தண்டமாம் என்பது.

[10]உயர்ந்தோர்பாற் செய்யின் இருமடங்கும் இழிந்தோர்பாற் செய்யின் அரையளவும் பிறர் மனைவியர்பாற் செய்யின் இருமடங்கும் மறவி செருக்கு அறிவின்மை முதலியவற்றாற் செய்யின் அரைமடங்கும் தண்டமாம்.

[11]கால் ஆடை கை தலைமயிர் என்னும் இவற்றைப்பற்றின் ஆறுபண விழுக்காடு மேன்மேலும் தண்டமாம்.

[12]பிசைதல் கட்டுதல் [13]அழுக்குமைபூசுதல் [14]இழுத்தல் [15]உடல் மேலிருத்தல் என்னும் இவற்றிற்குப் பூர்வசாகச தண்டமும் [16]கீழ் வீழ்த்திச் செல்பவனுக்கு அதனில் அரையளவும் தண்டமாம்.

சூத்திரன் எவ்வுறுப்பினால் பார்ப்பனனைப் புடைப்பானோ அவனுடைய அவ்வுறுப்பைக் களைந்துவிடல் வேண்டும். [17]உயர எடுப்பின் [18]விடுதலைப்பொருளும் தொடின் [19]அரையளவும் தண்டமாம். இதனால் தூய்மையற்ற சண்டாளர் முதலியோர்க்கும் விதி கூறப்பட்டபடியாம்.

---

10 மேற்குறிப்பிட்ட சாம்பல் முதலியவற்றை ஒருவன் தன்னின் உயர்ந்தோர்பால் எறிவானாயின் முற்கூறப்பட்ட தண்டத்தின் இருமடங்கு தண்டமாம் என்பது. பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

11 ஒருவன் மற்றொருவனுடைய காலைப்பிடித்திழுப்பின் ஆறு பணமும் ஆடையைப்பற்றின் பன்னிரண்டு பணமும் கையைப்பற்றின் பதினெட்டுப் பணமும் தலைமயிரைப்பற்றின் இருபத்துநான்கு பணமும் தண்டமாம் என்பது.

12 பிசைதல்—ஒருவன் மற்றொருவன் உடலுறுப்புக்களை நெருக்கிப் பிசைதல்.

13 கசட்டுமைக் குழம்பைக்கொண்டு பூசுதல் என்பது.

14 இழுத்தல்—நிலத்தில் ஊறுபட ஈர்த்தல்.

15 பிறன் உடலைக் கீழேவீழ்த்தி அவ்வுடல்மேலிருத்தல் என்பது.

16 ஒருவனைக் கீழே தள்ளிவிட்டு ஓடினவனுக்கென்பது.

17 உயர எடுத்தல்—கை முதலியவற்றை ஓங்குதல்.

18 விடுதலைப்பொருள்—குற்றநிமித்தம் ஒருறுப்பைக்களைதற்கு ஈடாக விதிக்கப்படும் தண்டப்பொருள். இதனைச் ‘ சிறுபகை களைதல் ’ என்னும் அதிகரணத்திற் காண்க.

19 அரையளவு—அவ்விடுதலைப்பொருளின் பாதி அளவு. இதுகாறும் கூறப்பட்டன ஊறுபடுத்தலைப்பற்றிய செய்திகளாம்.

கையை [20]ஓங்கின் மூன்று பணம் முதல் பன்னிரண்டு பணம் வரை தண்டமாம். [21]காலைத்தூக்கின் [22]இருமடங்காம். துன்பத்தையுண்டுபண்ணும் [23]கருவியை எடுப்பின் பூர்வசாகசம் தண்டமாம். உயிர்க்குக் [24]கேடுவிளைக்கும் பொருளைக்காட்டின் மத்தியம சாகசம் தண்டமாம்.

விறகுக்கட்டை ஓடு கல் இருப்புக்கோல் தடி கயிறு என்னும் இவற்றுள் ஒன்றினால் [25]புண்ணீர் வெளிப்படாமல் துன்பத்தை உண்டுபண்ணுகின்றவனுக்கு இருபத்துநான்கு பணம் தண்டமாம். [26]கெடு புண்ணீரல்லாத புண்ணீர் [27]வெளிப்படுமாயின் [28]இருமடங்காம்.

புண்ணீர் தோன்றாமல் [29]இறந்தவனைப்போற் கிடக்குமாறு அடிப்பவனுக்கும் கைகால்களின் அமைப்பை [30]வேறுபடுத்துபவனுக்கும் பூர்வசாகசம் தண்டமாம். கை கால் பல் என்னும் இவற்றை முறித்தவனுக்கும் செவி மூக்குக்களை அறுத்தவனுக்கும் கெட்டபுண் அல்லாத [31]புண்களில் ஊறுபாடு செய்பவனுக்கும் [32]ஆம்.

---

20 ஓங்குதல்—அடிப்பேன் என்று கூறி உயர எடுத்தல்.

21 காலினால் உதைப்பேன் என்று சொல்லித் தூக்கினால் என்பது.

22 இருமடங்கு—ஆறு பணம் முதல் இருபத்துநான்கு பணம் வரை தண்டமாம் என்பது.

23 கருவி — உடலில் ஊறுபாட்டை விளைவிக்கும் தாற்றுக்கோல் முதலியன.

24 கேடுவிளைக்கும் பொருள்—பாம்பு முதலியன.

25 புண்ணீர்—இரத்தம்.

26 கெடு புண்ணீர் — குட்டம் முதலிய புண்களிலிருந்து உண்டாம் இரத்தம்.

27 மேற்கூறிய விறகுக்கட்டை முதலியவற்றால் இரத்தம் ஒழுகும்படி ஊறுசெய்யின் என்பது.

28 இருமடங்கு—நாற்பத்தெட்டுப் பணம். குட்டநோய் முதலிய புண்களிலிருந்து இரத்தம் ஒழுகப் புடைப்பின் இருமடங்கு தண்டம் இன்று என்பதும் குற்றத்தின் இயல்புக்குத் தக்கவாறு அரையளவு முதலாகத் தண்டம் விதிக்கலாம் என்பதும் கருத்து.

29 செத்தவனைப்போல் மூர்ச்சித்துக் கிடக்குமாறு என்பது.

30 வேறுபடுத்தல்—உறுப்புக்களின் பூட்டுக்களை நழுவச்செய்தல்.

31 புண்களில் ஊறுபாடு செய்தல்—முன்னுள்ள சிறு புண்களை ஊறுபடுத்தி மிகுதிப்படுத்தல்.

32 பூர்வசாகசம் தண்டமாம் என்பது.

துடை கழுத்துக்களை முறித்தல் கண்ணைக்குடைதல் பேசுதல் இயங்குதல் உண்ணுதல் என்னும் இவற்றிற்குத் [33]தடை செய்த லாகிய இக்குற்றங்களுக்கு மத்தியமசாகச தண்டமும் [34]செம்மைப் படுத்தும் செலவும் செலுத்தல்வேண்டும். இறப்புநேரின் [35]சிறு பகை களைதல் என்னும் அதிகரணத்திற்கூறிய விதிக்கு உட்படுத் தல் வேண்டும்.

[36]ஒரு குழுவினர் ஒருவனையடிப்பின் தனித்தனியே [37]இரு மடங்கு தண்டமாம்.

கலகமும் [38]கவர்ந்து கைப்பற்றியதும் நெடுங்கால நிகழ்ச்சி யாயின் வழக்குத்தொடர்தல் இயலாது என்பர் ஆசிரியர். [39]குற்ற வாளிக்கு விடுதலையின்றென்பர் கௌடலியர்.

[40]பொறுதவனே [41]விரைந்து செல்லுபவனாதலின் கலக நிகழ்ச்சியில் [42]முதலில் வந்தவன் வெற்றியடைகின்றான் என்பர் ஆசிரியர்.

---

[33] தடைசெய்தலாவது முறையே நாவையும் கால்களையும் தொண்டை யையும் ஊறுபடுத்தல்.

[34] செம்மைப்படுத்தலாவது மேற்கூறிய நா முதலிய உறுப்புக்களின் ஊறுபாட்டை மருந்து முதலியவற்றால் தீர்த்து நலப்படுத்தல்.

[35] சிறுபகை களைதல் என்னும் அதிகரணம் அடுத்து வருவது.

[36] பலர் ஒன்றுகூடி ஒருவனைத் துன்புறுத்தின் அக்கூட்டத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் இருமடங்கு தண்டமாம் என்பது.

[37] இருமடங்காவது ஒருவன் ஒருவனைத் துன்புறுத்தினால் என்ன தண்டமோ அதனிருமடங்கு என்பது.

[38] மற்றொருவனுடைய பொருளைக் கவர்ந்து தனக்கு உரிமையாக்கிக் கொண்டது என்பது.

[39] குற்றவாளி—முற்கூறப்பட்ட கலகத்தையும் கவர்ந்து கைப்பற்றலை யும் செய்தவன். அவன் பலநாட்களுக்குமுன் அக்குற்றங்களைச் செய்தவ னாயினும் அவனுக்கு விடுதலையின்றென்பது கௌடலியர் கொள்கையாம்.

[40] பொறுதவன்—பிறரால் செய்யப்பட்ட துன்பத்தைத் தாங்காதவன்.

[41] விரைந்து செல்லுதல் அறங்கூறவையத்தார்க்கு அறிவித்தற் பொருட்டு.

[42] முதலில் வந்து நீதிமன்றத்தில் தெரிவித்தவன் என்பது.

[43]முதலிலோ பின்னரோ வந்தவனுக்குச் சான்றுகளே பிர மாணமாகும். சான்று இல்லையாயின் [44]அடிபட்டது அல்லது கலகத்தை யறிதற்குரிய ஏது என்னும் இவை பிரமாணமாம். ஆதலின் [45]அங்ஙனம் அன்றென்பர் கௌடலியர்.

அடித்துத் துன்புறுத்தியதுபற்றிய வழக்கில் [46]மாற்றங்கூறாத வனுக்கு அன்றே தோல்வியாகும்.

[47]கலக நிகழ்ச்சியில் பொருளைக் கவர்கின்றவனுக்குப் பத்துப் பணம் தண்டமாம்.

[48]சிறுபொருள்களுக்குக் [49]கேடு விளைவிப்பின் அவற்றையும் திருப்பிக்கொடுத்து [50]அத்துணைத்தண்டமும் இறுத்தல்வேண்டும்.

[51]பெரும்பொருள்களுக்குக் கேடு விளைவிப்பின் அப்பொருள் களும் [52]இருமடங்கு தண்டமும் இறுத்தல்வேண்டும்.

ஆடை அணிகலன் தங்கம் பொன் பாண்டம் என்னும் இவற் றிற்குக் கேடு விளைவிப்பின் அப்பொருள்களும் பூர்வசாகசமும் தண்டமாம்.

---

43 அறங்கூறவையத்தார்க்குத் தெரிவித்தற்பொருட்டு ஒருவன் முதலில் வந்தாலும் பின்னர் வந்தாலும் வருதலைப்பற்றித் துணியாமல் சான்றுகளைக் கொண்டே துணிதல்வேண்டும் என்பது கருத்து.

44 அடிபட்ட இடத்தைப் பார்த்தல் என்பது.

45 முதலில் வந்தவன் வெற்றியடைகின்றான் என்று துணிதல் பொருந் தாது என்பர் கௌடலியர்.

46 மாற்றம்—கேட்ட கேள்விக்கு விடை.

47 இருவர் கலகம்செய்துகொண்டிருக்கும்போது அவர்தம் பொருளைக் கவர்ந்தவனுக்கு இத்தண்டம் என்பது. ஈண்டுக் கவர்ந்த பொருளைத் திருப்பிக் கொடுத்துவிடுதலோடு இத்தண்டமும் இறுத்தல்வேண்டும் என் பது கருத்து. “ த்³விஶதோ த³ண்ட³: ” என்று மூலபாடத்தைக்கொண்டு இருநூறு பணம் தண்டம் என்றுங் கொள்வர்.

48 சிறுபொருள்களாவன—மலர் பழம் முதலியன.

49 கேடு—கலகம் செய்வோரால் நேரும் அழிவு.

50 அத்துணை—அப்பொருள் பெறுமதியளவு.

51 பெரும்பொருள்கள்—இரும்பு உருக்கு முதலியன.

52 இருமடங்கு—கவர்ந்தபொருளின் விலையளவின் இருமடங்கு.

[53]உராய்தலால் பிறனுடைய சுவர்க்குக் கேடு விளைவிப்பவனுக்கு மூன்று பணம் தண்டமாம். இடித்தல் தகர்த்தல் செய்யின் ஆறு பணமாம். இடித்து வீழ்த்தின் பன்னிரண்டு பணம் தண்டமும் [54]செம்மைப்படுத்தும் செலவும் செலுத்தல்வேண்டும்.

[55]துன்பம் விளைக்கும் பொருளைப் பிறனொருவன் வீட்டில் வீழ்த்துபவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம். [56]உயிர்க்குக் கேடு விளைக்கும் பொருளாயின் பூர்வசாகசம் தண்டமாம்.

[57]சிறுவிலங்குகளுக்கு மரக்கட்டை முதலியவற்றால் துன்பமுண்டாக்கின் ஒரு பணம் அல்லது இரண்டு பணம் தண்டமாம். புண்ணீர் வெளிப்படின் இருமடங்காம்.

[58]பெருவிலங்குகளுக்காயின் [59]மேற்கூறிய நிகழ்ச்சிகளில் இருமடங்கு தண்டமும் [60]செம்மைப்படுத்தும் செலவும் இறுத்தல் வேண்டும்.

[61]முற்புறத்துத் தோட்டத்திலுள்ளனவும் மலர் பழம் நிழல் தருவனவுமாகிய மரங்களின் இளந்தளிர்களைக் களையின் ஆறு பணமும் சிறு கிளைகளை வெட்டின் பன்னிரண்டு பணமும் பெருங்கிளைகளை வெட்டின் இருபத்துநான்கு பணமும் மேற்பகுதி முழுதும் வெட்டின் பூர்வசாகசமும் வேரறக்களையின் மத்தியமசாகசமும் தண்டமாம்.

---

53 உராய்தல்—அதிர்ச்சி உண்டாகத் தேய்த்தல்.

54 வீழ்ந்த சுவரை மீண்டும் எடுத்து அமைத்தற்குரிய செலவுபொருளும் கொடுத்தல்வேண்டும் என்பது.

55 துன்பம் விளைக்கும் பொருள்—முள் முதலியன.

56 பாம்பு முதலியன என்பது.

57 ஆடு முதலியன என்பது. பின்னர் இருமடங்கு என்றதனால் இங்கே கூறியதண்டம் புண்ணீர் வெளிப்படாவாறு துன்புறுத்தியதற்கென்க.

58 பசு முதலியன என்பது.

59 மரக்கட்டை முதலியவற்றால் புண்ணீர் வெளிப்படாவாறு துன்பமுண்டாக்கின் இரண்டு பணம் அல்லது நான்கு பணமும் புண்ணீர் வெளிப்படச்செய்யின் அவற்றின் இருமடங்கும் தண்டமாம் என்பது.

60 செம்மைப்படுத்தல்—ஊறுபாட்டைப்போக்கி நலப்படுத்தல்,

61 முற்புறம்—வீட்டின் முன்பக்கம்,

மலர் பழம் நிழல் என்னுமிவற்றைத்தரும் [62]செடிகொடி களாயினும் [63]அறநிலையம் தவவனம் சுடலை என்னும் இவற்றி லுள்ள மரங்களாயினும் [64]அரையளவு தண்டமாம்.

### சுலோகம்

நாற்புறத்திலிருந்தும் [65]பார்க்கத்தக்க [66]எல்லைமரங்கள் கட வுண்மரங்கள் என்னும் இவற்றிற்காயினும் அரசனது உய்யான வனங்களிலுள்ளவற்றிற்காயினும் [67]மேற்கூறிய தண்டங்களின் இருமடங்கு தண்டம் விதிக்கத்தக்கனவாம்.

மூன்றும் அதிகரணம் பதினேழாம் பிரகரணம்
"தண்டக்கொடுமை" என்னும் எழுபத்தாறும்
அத்தியாயம் முற்றிற்று

---

62 இச் செடிகொடிகள் வீட்டு முன்புறத்திலுள்ள தோட்டத்திலுள் ளவை எனக் கொள்ளல்வேண்டும்.

63 அறநிலையம்—திருக்கோயில் முதலியன.

64 இங்கே கூறிய செடி கொடி மரங்களிலுள்ள தளிர் முதலியவற்றைக் களையின் முறையே முற்கூறிய தண்டத்தின் பாதியளவு தண்டமாம் என் பது கருத்து.

65 பார்க்கத்தக்க என்றதனுல் உயர்ந்த மரங்கள் என்பது போதரும்.

66 எல்லைமரம்—சில எல்லையைக் குறிக்கும் அடையாளமரம்.

67 தளிர்க்கு ஆறு பணம் முதலியவாக மேற்கூறப்பட்ட தண்டங்களின் இருமடங்கு தண்டங்கள் முறையே விதிக்கத்தக்கன என்பது கருத்து.

# மூன்றும் அதிகரணம்—அறநிலையாட்சி

## பதினெட்டு, பத்தொன்பதாம் பிரகரணங்கள்—

## [1]சூது புள்விலங்குவிளையாட்டு, ஒழிபு

## எழுபத்தேழாம் அத்தியாயம்

சூதுத்தலைவன் [2]கரந்தொழுகுவோரை [3]அறிவித்தற்பொருட்டுக் [4]குறிப்பிட்ட ஓரிடத்தில் சூதுவிளையாடச் செய்யலாம். வேற்

---

### 77-ஆம் அத்தியாயக் குறிப்புரை

[1] சூது—கவறுடல். இஃது உயிர்ப்பிராணிகளல்லாத கருவிகளைக் கொண்டு விளையாடுதல். புள்விலங்கு விளையாட்டு—கோழி ஆட்டுக்கடா முதலியவைகளைக்கொண்டு விளையாடுதல். இவ்விருதிறத்து விளையாட்டுக் களையும் பற்றி நிகழும் வழக்குக்களையும் தண்டங்களையும் கூறுவது இவற் றுள் முதற்பிரகரணமாகும். இவ்வதிகரணத்துக் கூறப்படாத எஞ்சிய சில செய்திகளைத் திரட்டிக்கூறுவது 'ஒழிபு' என்னும் இரண்டாம் பிரகரண மாகும். இவ்விரண்டு பிரகரணங்களையும் தன்னுட்கொண்டது இவ்வத்தி யாயம். முன்னைப் பிரகரணங்களிற் கூறப்பட்ட கொடுமைகள் எல்லா வற்றிற்கும் ஏதுவாய், சிறுமை பல செய்து சீரழிப்பது சூதாகலானும் அச் சூதுவிளையாட்டிற்குப் புள்விலங்குவிளையாட்டுக்கள் இனமாகலானும் தண்டக்கொடுமை என்னும் பிரகரணத்தின்பின் இது வைக்கப்பட்டது. இவ்வதிகரணத்திற்கு ஒழிபாகவுள்ளது மற்றொரு பிரகரணம். இதனுற் பிரகரண இயைபுண்மை புலனுதலறிக.

[2] கரந்தொழுகுவோர்—களவு கொடுஞ்செயல் முதலியவற்றைச்செய்து மறைந்தொழுகி உயிர்வாழ்வோர்.

[3] அறிவித்தற்பொருட்டென்பது விலக்கத்தக்க சூது முதலியவற்றை விதித்தற்குப் பயன் கூறியபடியாம்.

[4] குறிப்பிட்ட ஓரிடம்—சூதுவிளையாடுதற்கென அரசியலாரால் ஏற் படுத்தப்பட்ட தனியிடம்.

> " வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொருள்
> ஈட்டங்கட் காமமோ டேழு "

என்பதனுல் சூதாடல் விதனங்கள் ஏழனுள் ஒன்றுகும். அறநூலில் வெளிப் படையாகவும் மறைவாகவும் மேற்கொள்ளலாகாது என்று விலக்கப்பட்ட சூதாடலை ஈண்டு அரசியலில் செய்யலாம் என்று விதிகூறியது ஒரு பயன் கருதியென்க. அப்பயனுவது:—உலகத்திற்குத் தீங்குவிளைக்கும் வஞ்சகரை யறிந்து அரசியலார்க்குச் சூதுத்தலைவன் அறிவிப்பதாகும். இது குறித்தே குறிப்பிட்ட ஒரு தனியிடம் சூதுவிளையாடற்கு அமைத்தல்வேண்டும் என்று கூறப்பட்டது. கள்ளுக்கடைக்கு இடம் அமைத்தலும் இக்கருத்துப் பற்றியே என்க.

றிடத்து விளையாடுபவனுக்குப் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

சூதுபற்றிய வழக்கில் [5]வென்றவனுக்குப் பூர்வசாகசம் தண்டமாம். [6]தோற்றவனுக்கு மத்தியமசாகசமாம். சிற்றினத்தவனாகிய [7]இவன் வெற்றி விருப்புடையனாய்த் தோல்வியைப் [8]பொறான் என்பர் ஆசிரியர். [9]தோல்வியுற்றவன் இருமடங்கு தண்டிக்கப் படுவானாயின் ஒருவனும் அரசனை [10]அணுகமாட்டான். [11]பெரும்பாலும் வஞ்சகரே சூதுவிளையாடுவோராவர். ஆதலின் அது பொருந்தாது என்பர் கௌடலியர்.

[12]அவர்தம் தலைவர் [13]தூய்மையுடையராய்ச் சூதாடுகருவிகளை அமைத்தல்வேண்டும்.

சூதாடுகருவிகளை [14]வேறாக மாற்றிவைப்பின் பன்னிரண்டு

---

5 வென்றவன்—சூதாடலில் வெற்றியடைந்தவன். அவன் வழக்குக் கொணர்ந்து குற்றவாளியானால் பூர்வசாகச தண்டம் செலுத்தல்வேண்டும் என்பது.

6 தோற்றவன்—சூதாடலில் தோல்வியடைந்தவன். அவன் வழக்குக் கொணர்ந்து குற்றவாளியானால் இருமடங்கு தண்டமாம் என்பது.

7 இவன்—தோற்றவன்.

8 பொறாமையால் அறநெறி பிறழ்ந்து வெற்றியில் விருப்பத்தைச் செலுத்துவான் என்பது கருத்து. இஃது இருமடங்கு தண்டம் விதித்தற்கு ஏதுவாம் என்பர்.

9 மேற்காட்டிய ஆசிரியர்கொள்கை பொருந்தாமைக்குக் காரணம் கூறுகின்றார்.

10 அணுகுதல், வெற்றியடைந்தவனால் தனக்கு நேர்ந்த துன்பத்தை அரசனுக்கு அறிவித்து ஆறுதல் பெறுதற்கென்க.

11 அணுகாமையால் வரும் குறை என்னையெனின் சூதுவிளையாடுவோர் பெரும்பாலும் வஞ்சகராதலின் அவர்தம் வஞ்சகச்செயலை அரசன் அறிந்து அவ்வஞ்சகத்தால் துன்பம் எய்தினோர்க்கு விடுதலைசெய்ய இயலாமை நேரும் என்பதாம்.

12 அவர்தம் தலைவர்—சூதாடுவோர்க்கு அத்தொழில் முறைகளைக் கண்காணிக்கும் தலைவர்.

13 தூயர்—வஞ்சகமற்றவர்.

14 இயல்பாக அமைக்கப்பட்ட கருவிகளையன்றி அவற்றைப்போல வேறாக ஒருவன் மாற்றி வைப்பானாயின் இத்தண்டம் என்பது.

பணம் தண்டமாம். [15]வஞ்சிப்பின் பூர்வசாகச தண்டமும் [16]வென்ற பொருளைத் திருப்பிக் கொடுத்துவிடுதலும் வேண்டும். [17]மருளச் செய்யின் திருட்டுக்குரிய [18]தண்டமுமாம்.

வென்ற பொருளினின்றும் நூற்றுக்கு [19]ஐந்தில் ஒருகூறும் [20]பலகறை [21]காய் தோல் துணி முதலிய [22]விரிப்பு [23]கவறு நீர் இடம் தொழில் என்னும் இவற்றிற்குரிய வாடகைகளையும் தலைவன் [24]வாங்கிக்கொள்ளலாம். [25]பொருள்களை ஈடாகவும் விலை கொடுத்தும் கொள்ளலாம். [26]கருவி இடம் கை என்னும் இவற்றால் நிகழும் குற்றங்களைத் தடைசெய்யவில்லையானால் இருமடங்கு தண்டமாம்.

[27]இதனால் வித்தை சிற்பம் முதலியனபற்றி நிகழும் விளையாடல்கள் அல்லாத புள்விலங்கு விளையாட்டுக்களுக்கும் விதி கூறியபடியாம்.

---

15 வஞ்சித்தல்—சூதாடுகருவிகளைக் கபடமாகப் படைத்துக்கொள்ளல்.

16 வஞ்சகமாகப் படைத்துக்கொண்ட கருவிகளால் வென்ற பொருளை என்பது.

17 மருளச்செய்தல்—கவறுகளிலுள்ள கோடு புள்ளிகளை மணி மந்திரம் முதலியவற்றால் வேறுபடக் காணும்படி மயக்குதல்.

18 தண்டமுமாம் என்ற உம்மையால் இயல்பாக முன்னர் விதிக்கப் பட்ட தண்டத்தோடு திருட்டுக் குற்றத்திற்குரிய தண்டமும் செலுத்தல் வேண்டும் என்பது போதரும்.

19 ஐந்தில் ஒருகூறு—இருபது விகிதம். இது தலைவன் தன் வாழ்க்கைப் பொருட்டுக் கொள்ளலாம் என்பது.

20 பலகறை—ஒருவகைச் சிறு நாணயம்.

21 காய்—வகுத்த தானத்தில் வைக்கப்படும் கருவி.

22 விரிப்பு—தானம் வரையறுக்கப்பட்டது.

23 கவறு—யானைத்தந்தம் முதலியவற்றால் ஆக்கப்பட்ட கருவி.

24 வென்றவனிடத்தினின்றும் வாங்கிக்கொள்ளலாம் என்பது.

25 சூதாடுவோர் ஈடாகவும் விலைக்காகவும் தரும் பொருளைத் தலைவன் கொள்ளலாம் என்பது கருத்து.

26 சூதாடுவோர் கருவிகளாலும் கையாலும் இடத்தாலும் வஞ்சித்துப் பிழைபடச் செய்வாராயின் அக்குற்றங்களைத் தலைவன் அறிந்து ஒழிக்க வில்லையானால் தனக்குக் கிடைக்கக்கூடிய வருவாயின் இருமடங்கு தண்டம் செலுத்தல்வேண்டும் என்பது கருத்து.

27 இதனால்—சூதுவிளையாட்டிற்குக் கூறிய விதியினால்.

இனி [28]ஒழிபு கூறப்படும். இரவற்பொருள் வாடகைப் பொருள் ஈட்டுப்பொருள் [29]பணிப்பொருள் என்னும் இவற்றைக் குறிப்பிட்ட காலம் இடங்களில் கொடுக்கவில்லையாறுலும் [30]இன்ன யாமத்தில் இத்துணையடிநிழல் உள்ளபொழுது எல்லோரும் ஒன்று கூடவேண்டும் என்னும் வரையறை யுடையார் அக்காலம் இடங் களைக் கடப்பினும் காடு யாறுகளைக் கடத்தற்குரிய கூலியை அந்தணனிடம் [31]வலிந்துபற்றினும் [32]எதிர்வீடு அடுத்தவீடுகளில் உள்ளாரைவிட்டு மற்றொருவரை [33]நிமந்திரணம் குறித்து அழைப் பினும் பன்னிரண்டு பணம் தண்டமாம்.

[34]உறுதி செய்துகொண்டபடி பொருள் கொடாதவனுக்கும் உடன்பிறந்தான் மனைவியைக் கையினால் வலிந்து பற்றுபவனுக் கும் மற்றொருவன் வயப்பட்ட கணிகையைச் [35]சேர்பவனுக்கும் பிறரால் [36]இழிக்கத்தக்க விலைப்பண்டத்தை வாங்குபவனுக்கும் இலச்சினையிடப்பட்ட வீட்டைச் சிதைத்துத் திறப்பவனுக்கும்

---

[28] ஒழிபாவது கூறப்பட்ட பகுதிகளில் குறையாக விடப்பட்டனவும் கூறப்படாதனவுமாம். அவற்றுட் சிற்சில மணவியலைப்பற்றினவும் வேறு சிற்சில தலைவன் செயன்முறை சிறுபகைகளைதல் இவற்றைப்பற்றினவுமாம். அச்செய்திகள் இங்கே கூறப்படும் என்பது.

[29] பணிப்பொருள்—அணிகலன் முதலியன செய்தற்பொருட்டுப் பொற் கொல்லரிடத்துக் கொடுக்கப்பட்ட தங்கம் முதலியன.

[30] இன்னயாமம் என்பது இராக்காலத்தையும் இத்துணையடி நிழல் என்பது பகற்காலத்தையும் பற்றினவாம். இவை கட்டுப்பாடு கடவாமை யின் ஒழிபாகும்.

[31] வலிந்துபற்றினும் என்பதனால் தானே கொடுத்தால் பெற்றுக் கொள்ளலாம் என்பது போதரும்.

[32] எதிர்வீட்டிலும் அடுத்தவீட்டிலும் தகுதியுள்ளார் இருக்கும் பொழுது அவரையழையாமல் என்பது.

[33] நிமந்திரணம்—தென்புலத்தாரது கடனிறுக்குங்கால் உண்டற் கழைத்தல்.

[34] உறுதி—இன்னகாலத்தில் இத்துணைப்பொருள் தருவேன் என்று துணிந்து கூறுதல்.

[35] இத்துணையும் வன்செயலின் ஒழிபாகும்.

[36] இழிக்கத்தக்க விலைப்பண்டமாவது விற்பவனுக்கு உரிமையில்லாமல் திருட்டு முதலியவற்றால் கிடைத்ததாகும். இஃது ‘உரிமையில்லாதவன் விற்றல்’ என்பதன் ஒழிபாகும்.

பக்கத்துள்ள நாற்பது குடும்பங்களுக்குக் [37]கேடு விளைவிப்பவனுக்கும் நாற்பத்தெட்டுப்பணம் தண்டமாம்.

ஒரு குடும்பத்திற்குப் பொதுவாகவுள்ள பொருளைக் கவர்ந்து மறைப்பவனுக்கும் சுதந்திரமாக வாழும் கைம்பெண்ணை வலிந்து பற்றுபவனுக்கும் உயர்குலத்துப் பெண்ணைத் தீண்டும் சண்டாளனுக்கும் நெருங்கினவனுக்குக் கேடு நேர்ந்தவிடத்து விரைந்து சென்று காவாதவனுக்கும் [38]காரணமில்லாமல் விரைந்து ஓடுகின்றவனுக்கும் பௌத்தன் சமணன் முதலியோரையும் சூத்திரன் துறவி என்னும் இவரையும் தெய்வவழிபாடு தென்புலத்தார் கடன் என்னும் இந்நிகழ்ச்சிகளில் [39]உண்ணச்செய்பவனுக்கும் நூறு பணம் தண்டமாம்.

[40]சூளுறவோடு வினைதலைக் கட்டளைபெறாமல் செய்பவனுக்கும் [41]உரிமையாளன் செயலைப் புரியும் உரிமையில்லாதவனுக்கும் சிறுவிலங்கு பொலிஎருது இவற்றின் [42]ஆண்மைக்குக் கேடு விளைவிப்பவனுக்கும் பணிப்பெண்ணின் கருவை மருந்தினால் வெளிப்படுத்துபவனுக்கும் பூர்வசாகசம் தண்டமாம்.

தந்தையும் மகனும் கணவனும் மனைவியும் உடன்பிறந்தானும் உடன்பிறந்தாளும் மாமனும் மருமகனும் ஆசிரியனும் மாணவனும் ஆகிய இவருள் ஒருவரையொருவர் [43]இழிந்தநிலை

---

[37] இவை மனைநிலத்தின் ஒழிபாகும்.

[38] விரைந்தோடுதற்குரிய காரணம் ஏதும் இல்லாதிருக்க ஆரவாரித்து ஓடுகின்றவனுக்கும் என்பது.

[39] இங்கே குறிப்பிடப்பட்டவர்கள் இந்நிகழ்ச்சிகளில் உண்ணத்தகாதவர் என்பது அறநூற்றுணிபு.

[40] அறங்கூறவையத்தாரின் கட்டளைபெறாமல் சான்றுகூறுவோர் முதலியோரைத் தெய்வத்தின்மேல் ஆணையிட்டுக் கூறும்படிச் செய்வோனுக்கென்பது.

[41] ஒரு செயலைச்செய்தற்கு உரிமைபெற்றவனிருக்க உரிமையில்லாத வேறொருவன் செய்வானாயின் அவனுக்கென்பது.

[42] ஆண்மைக்குக் கேடுவிளைத்தல் — கருவிகளால் ஆண்தன்மையைக் குறைத்தல். இதனை இக்காலத்தில் காயடித்தல் என்ப.

[43] இழிந்தநிலையெய்தின் விலக்கலாம் என்பது போதரும்.

யெய்தாதவழி விலக்குவோர்க்கும் [44]வாணிகக்குழுவுடன் சென்றவனை [45]ஊர்நடுவண் [46]விட்டுச்செல்பவனுக்கும் பூர்வசாகசம் தண்டமாம். [47]காட்டிலாயின் மத்தியமசாகசமாம். [48]அதன்நிமித்தம் உயிர்க்குக் கேடு விளைவிப்பவனுக்கு உத்தமசாகசம் தண்டமாம். [49]உடன்சென்ற பிறர்க்கு [50]அரைக்கூறு தண்டமாம்

கட்டிவைத்தற்குத் தகாத ஒருவனைக் கட்டுதல் கட்டுவித்தல் செய்பவனுக்கும் கட்டை அவிழ்த்து விடுபவனுக்கும் வழக்கியற் பருவம் அடையாத சிறுவனைக் கட்டுதல் கட்டுவித்தல் செய்பவனுக்கும் ஆயிரம் பணம் தண்டமாம். ஒருவன் குற்றத்தின் இயல்புக்கேற்பச் சிறப்பான தண்டம் விதிக்கத்தக்கதாம்.

[51]கையில் நீர்க்குண்டிகையை உடையவன் தாபதன் நோய் வாய்ப்பட்டோன் பசி நீர்வேட்கை வழிநடத்தல் என்னும் இவற்றால் சோர்ந்தவன் வேற்றுநாட்டவன் [52]தண்டத்துன்பமுடையோன் வறுமைமிக்கோன் ஆகிய இவர்கள் [53]அருள்செய்யத் தக்கவர் ஆவர்.

பாதுகாக்கும் தலைவரையில்லாத தெய்வம் அந்தணன் தாபதன் பெண் இளைஞன் முதியவன் நோய்வாய்ப்பட்டோன் என்னும் இவர்கள் [54]தம்மை அடைந்திலர் எனினும் அவர்தம் காரியங்

---

44 வாணிகக் குழுவுடன் சென்றவன்—வாணிகக்கூட்டத்தாரை வழித்துணையாகக்கொண்டு சென்றவன்.

45 ஊர்—ஈண்டு அயல்கிராமம்.

46 விட்டுச்செல்லுதல் நோய் முதலிய காரணம்பற்றி என்க.

47 காட்டில் விட்டுச்செல்லின் அத்தண்டம் என்பது.

48 அங்ஙனம் காட்டில் விட்டுச்சென்றது காரணமாக விட்டவனது உயிர்க்குக் கேடு விளைப்பவனுக்கு இத்தண்டம் என்பது.

49 அக்குழுவுடன் சென்ற மற்றையோர்க்கென்பது.

50 முறையே முற்கூறப்பட்ட தண்டங்களிற் பாதியளவு என்பது.

51 கையில் நீர்க்குண்டிகையுடையோன்—தானம் செய்தற்கு எப்பொழுதும் கையில் நீர்க்கரகத்தை வைத்திருப்பவன்.

52 தண்டத்துன்பமுடையோன்—பலமுறை தண்டிக்கப்பட்டுத் துன்பமடைந்தவன்.

53 இவர்களுக்குத் தயை காட்டவேண்டும் என்பது கருத்து.

54 தம்மை என்பது அறங்கூறவையத்தாரைக் குறிக்கும்.

களைச் [55]செய்தல்வேண்டும். காலம் இடம் அநுபவம் என்னும் இவற்றைத் [56]தலைக்கீடாகக்கொண்டு [57]மிகுதியாகக் கொள்ளலாகாது.

கல்வி அறிவு ஆண்மை நற்குடிப்பிறப்பு தொழில் என்னும் இவற்றின் சிறப்புநோக்கி [58]மக்களைப் [59]பெருமைப்படுத்தல் வேண்டும்.

### சுலோகம்

அறங்கூறவையத்தார் உண்மையை அறிந்து இங்ஙனம் எல்லாக் காரியங்களையும் செய்தல்வேண்டும். எல்லாவிதமான தன்மைகளிலும் ஒத்தவர்களாய் உலகத்தவரால் விரும்பத்தக்க பெரியோர் நம்பிக்கைக்குரியராவர்.

மூன்றும் அதிகரணம் 18, 19-ஆம் பிரகரணங்கள்
"சூது புள்விலங்கு விளையாட்டு, ஒழிபு" என்பன அடங்கிய
எழுபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

மூன்றும் அதிகரணம் முற்றிற்று.

---

[55] அறங்கூறவையத்தார் தாமே ஆராய்ந்து செய்தல்வேண்டும் என்பது கருத்து.

[56] தலைக்கீடு—வியாஜம்.

[57] பாதுகாக்கும் தலைவரையில்லாத மேற்குறிப்பிட்டவரிடத்தினின்றும் அளவின் மிகப்பொருளை அறங்கூறவையத்தார் வாங்கலாகாது என்பது கருத்து.

[58] சான்றுகூறுதல் முதலியவை காரணமாகத் தம்பால் வந்தடைந்த மக்களை என்பது.

[59] அறங்கூறவையத்தார் முதலிய அரசியல் வினைஞர் சிறப்புச்செய்தல் வேண்டும் என்பது கருத்து.

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| xviii | 9 | ஔபநிடதம் என்ற அதிகரணம் | மறைவுச்செயல் என்ற அதிகரணத்தில் |
| 2 | 2 | இப்பொருள் நூல் | [5]இப்பொருள் நூல் |
| 8 | 23 | ஏமாற்றம் | ஏமாற்றல் |
| 9 | 2 | ஐயுறலுருச் | ஐயுறலுருச் |
| ,, | 7 | நெறிகடத்தல் | நெறிகடத்தற்றண்டம் |
| 10 | 9 | மண்டலயோளி | மண்டலயோனி |
| ,, | 12 | வஞ்சிது | வஞ்சித்து |
| 30 | 2 | புதலவன் | புதல்வன் |
| 36 | 10 | கடைமை | கடமை |
| 56 | 2 | அமைச்சர்களின் | அமைச்சர் முதலியோரின் |
| 64 | 14 | [25]உடையார்க்கு | உடையார்க்கு |
| ,, | 16 | இவர்களுடைய | [25]இவர்களுடைய |
| 78 | 2 | பகைநாட்டு | பகைவர்நாட்டு |
| 112 | 13 | முனிவரரையும் | முனிவரையும் |
| 128 | 18 | தானியம் | தானீயம் |
| 129 | 8 | சங்கிரகத்தையும் | சங்கிரகணத்தையும் |
| ,, | 21 | சங்கிரகம் | சங்கிரகணம் |
| 146 | 28 | அறை | அரை |
| 147 | 32 | மதிர் | மதிற் |
| 148 | 5 | ஆல்லது | அல்லது |
| ,, | 14 | குந்தாவி | குந்தாலி |
| ,, | 18 | இவற்லை | இவற்றை |
| ,, | 29 | வாம்க்கால் | வாய்க்கால் |
| 152 | 7 | தெய்வங்கு | தெய்வங்க |
| 166 | 28 | 6 | 67 |
| 169 | 13 | முதலதி | இரண்டாமதி |
| 208 | கடைசி | பற்பர | பப்பர |
| 218 | 18 | காபரூப | காமரூப |
| 220 | 26 | பிரேயகம் | பிரையகம் |
| 222 | 23 | பட்து | பட்டது |
| ,, | 33 | பிங்கிசீ | பிங்கிசி |
| 227 | 2 | 2 | 12 |
| ,, | 13 | நீரிற் | [21]நீரிற் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 247 | 4 | கலட் | கலப் |
| 271 | 2 | பதினோராம் | பதினாரும் |
| 282 | 10 | விசிரி | விசிறி |
| 285 | 12 | படைக்கலத் | படைக்கல நிலையத் |
| 288 | 28 | பெயா | பெயர் |
| 395 | 19 | தெரியாவிட்டால் | தெரிவியாவிட்டால் |
| 397 | 25 | நேருப்பு | நெருப்பு |
| 398 | 35 | தேர்வீதியில் | தேர்வீதிகளில் |
| 400 | 29 | ஐந்து | ஐந்து |
| 404 | 10 | செய் | செய்ய |
| ,, | 37 | என்னும் பிரகரணமும் | பிரகரணமும் |
| 424 | 18 | கெளியன் | கெளியள் |
| 497 | 16 | மச்களால் | மக்களால் |
| 573 | கடைசி | வேண்மெ் | வேண்டும் |
| 588 | 2 | பேரச்சம் | பேரச்சமாற்றம் |
| 700 | 20 | விகாரமாகக் | விகாரமாகச் |
| 760 | 3 | நட்புக்கொடு | நட்புக்கொண்டு |
| 766 | 23 | ,, | ,, |
| 788 | 2 | இபகக | இயக்க |
| 850 | 6 | வனது | வனுடைய |
| 963 | 9 | இப்பிரகரண | இவ்வதிகரண |
| 998 | 14 | 9 | 1 |
| 1160 | 6 | துனைவரை | துணைவரை |
| 1170 | 18 | மற்ருெரு | மற்றொரு |
| 1215 | 26 | நாண்— | நாண் என்பது, |
| ,, | 26, 27 | உணர்த்தும் என்பது, | உணர்த்தும். |
| 1220 | 31 | கருநொச்சி | கருநொச்சிலி |